இங்கிலாந்து வரலாறு - IV

- கீத் ஃபீலிங்

# இங்கிலாந்து வரலாறு—IV

(ஆங்கிலேயர் வருகையிலிருந்து 1918 வரை—நான்கு பாகங்கள்)

# HISTORY OF ENGLAND—IV

(From the Coming of the Englishmen to 1918—In Four Parts)

ஆசிரியர் :

சர் கீத் ஃபீலிங்

தமிழாக்கம் :

எஸ். ஜே. இராஜகோபாலன், எம்.ஏ.,

வரலாற்றாசிரியர்.

அரசினர் கலைக் கல்லூரி, கோவை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்

[illegible] 6 - [illegible]

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—103

# இங்கிலாந்து வரலாறு—IV

(ஆங்கிலேயர் வருகையிலிருந்து 1918 வரை—நான்கு பாகங்கள்)

# HISTORY OF ENGLAND—IV

(From the Coming of the Englishmen to 1918—In Four Parts)

ஆசிரியர் :

சர் கீத் ஃபீலிங்

தமிழாக்கம் :

என். ஜே. இராஜகோபால், எம்.ஏ.,

வரலாற்றாசிரியர்,

அரசினர் கலைக் கல்லூரி, கோவை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April, 1966

B.T.P. No. 103



# A HISTORY OF ENGLAND—IV

Sir Keith Feiling

Translation :

N. J. Rajagopal

PRICE Rs. 8-00



Printed by

BHARANI PRESS,
55, Perambur Barracks Road,
Vepery, Madras-7.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் 'தொண்டு செய்வோர் இதற்கென்த் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'இங்கிலாந்து வரலாறு-IV' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 103ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 138 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்.

மடல் VII

# ஒரு மாபெரும் வல்லரசு

## 1852–1918

பக்கம்

## போருக்குப் பிறகு
## 1919–1938



## படங்கள்

மடல் VII

# ஒரு மாபெரும் வல்லரசு
## 1852–1918

## 1. விக்டோரியா காலத்தின் உணர்ச்சி முகடு, 1848-1880

விக்டோரியா ஆட்சியின் இடைக்காலத்தில் தோன்றிய நாகரிகத்தைப்போன்று வேறு எந்த நாகரிகத்திலும், நிலையான ஆத்மீக ஆற்றல்கள் அரசியலிலும் புற வாழ்க்கையின் முன்னேற்றத்திலும் காண்பதற்கில்லை.

1871 முதல் 1875 வரை நமது மக்களின் பிறப்பு விகிதம் உச்ச நிலையை அடைந்தது. சுமாராக, ஆயிரத்திற்கு 35 விகிதம் மதிப்பிடப்படுகிறது. ஐக்கிய அரசின் (United Kingdom) மக்கள் தொகை, 1851-ல் 27 மில்லியன்களாக இருந்தது. அடுத்த முப்பது ஆண்டுகளில் சுமார் 35 மில்லியன்களாக உயர்ந்தது. இதே காலத்தில் அவர்கள் கடல்கடந்த நாடுகளில் 1000 மில்லியன்களை முதலீடு செய்துள்ளனர். பிரிட்டிஷ் காலனிகளுக்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் 2½ மில்லியன் பிரிட்டிஷ் குடிமக்கள் குடியேறினார்கள். நமது துறைமுகங்களிலிருந்து அகற்றப்பட்ட பொருள்களின் மதிப்பு சுமார் 15 மில்லியன்களிலிருந்து 60 மில்லியன்களுக்கு உயர்ந்தது. உலகத்தில் மூன்றில் ஒரு பாகம், கடல்களில் செல்லுகின்ற கப்பல்கள் பிரிட்டனைச் சார்ந்தவையாக இருந்தன.

1850-ல் ஏற்றுமதிகளின் மதிப்பு 197 மில்லியன்கள்; 1874-ல் அவைகளின் மதிப்பு 297 மில்லியன்கள்; இறக்குமதிகள் இன்னும் அதிக அளவில் உயர்ந்தன. 100 மில்லியன்களிலிருந்து

370 மில்லியன்கள் வரையிலும் உயர்ந்தது. அக் காலத்தில் பிரிட்டன் அதனுடைய காலனிகள் செய்கின்ற வெளிநாட்டு வாணிகம் ஃபிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகிய எல்லா நாடுகளின் மொத்த வர்த்தகத்திற்கும் ஈடாக இருந்தது. கிரிமியப் போரைத் தவிர, வேறு எந்தப் பெரிய போரிலும் நாடு ஈடுபடவில்லை. பேரரசு அமைப்பில் முடிவு செய்யப்படாமல் இருந்த பிரச்சினைகள் இப்பொழுது தீர்க்கப்பட்டன. கனடாவிற்குக் கூட்டாட்சி அரசாங்கம் ஏற்பட்டது. ஆஸ்திரேலியாவிற்குச் சுய ஆட்சி கொடுப்பதென்று முடிவு செய்யப்பட்டது. இந்தியாவில் சிப்பாய்க் கலகம் ஒடுக்கப்பட்டது. இந்திய அரசியல் அதிகாரம் அரசியாருக்கு மாற்றப்பட்டது. இங்கிலாந்துக்கு எப்பொழுதுமே நீடித்திருக்கின்ற பல நல்ல காரியங்கள் செய்யப்பட்டன; பல பல்கலைக்கழகங்கள் திறக்கப்பட்டன; பல சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. நவீன சிவில் சேவை கொண்டுவரப்பட்டது. மேலும், கட்டாயக் கல்வி முறையும், வாக்காளர்கள் தொகை இரண்டு மடங்கு அதிகமாக்கப்படலும், நீதிமன்றங்களை நவீனமாக்குதலும், தொழிற் சங்கங்களைச் சட்டரீதியாக அங்கீகரித்தலும், பெண்கள் உரிமைகள் புரட்சிகரமாக மாறுதல் அடைதல் போன்றவையும் அக் காலச் சாதனைகளாகும். ஆங்கிலேயரின் சிந்தனையும் இலக்கியப்படைப்பும், 1850 முதல் 1881 வரை நன்முக வளர்ந்தது. 1850-ல் வோட்ஸ்வர்த் மரணமும், 1881-ல் கார்லைல் மரணமும் ஏற்பட்டது. இவ்விருவரின் மரணத்திற்கிடையே, பேரறிஞர்களான டென்னிஸன், பிரவுனிங், ரஸ்கின், டிக்கன்ஸ், தேக்கரே, ஜார்ஜ் எலியட், நியூமேன், மேத்யூ ஆர்னுல்ட், மெக்காலே, மில், டி. எச். கிரீன், டார்வின், ஹக்ஸ்லி, டிண்டால், பேஜ்ஹாட், ஹென்றி மெயின், ஹெர்பர்ட் ஸ்பென்சர், ஜே. ஆர். கிரீன், ஆக்டன், ஃபிரவுட், மெரிடித், தாமஸ் ஹார்டி, வில்லியம் மோரிஸ், வெஸ்ட்காட், லைட்ஃபுட், மார்ட்டினியூ, கிளர்க் மாக்ஸ்வெல், எஃப். எச். பிராட்லி ஆகியோர் வாழ்ந்தார்கள்.

எந்தக் காலமும், தன்னிறைவு பெற்றதாக இருக்கமுடியாது. ஏனெனில், பல அபாயங்களும் அல்லது அழிவுகளும் நிலையற்ற தாக்கிவிடுகின்றன. இருப்பினும், இந்த முப்பதாண்டுகள் நிறைந்த காலத்தில் ஒரு நிரந்தரத்தன்மை விளங்கியதைக் காண்கிறோம். அரசியாரின் கணவர் 1861-ல் இறந்தார்; அல்லது பால்மர்ஸ்டன் இறந்தது 1865-ல். இதைப்போன்ற சில நிகழ்ச்சிகளின் இடையே சில முடிவுகளையும் காணமுடிகின்றது. இந்த முடிவுகளிலிருந்து இக் காலத்தில் புரட்சியைக் கைவிட்டு விட்டனர் என்றும் காணமுடிகின்றது. 1830-ல் முடியாட்சி மிகவும் தாக்குதல்களுக்குள்ளாகியிருந்தது. 1840 வரை இந்தத்

தாக்குதல்கள் நீடித்தனவென்று கூறலாம். ஆனால், பீல் இந்த அரசியல் அமைப்பில் அரசியின் பங்கு என்னவென்பதை நன்றாகத் தெளிவுபடுத்தினார். 1879-ல் டிஸ்ரேலி அரசியாரை இந்தியாவின் பேரரசியாக்கினார். பிரபுக்களைத் தாக்கியும், பிஷப்புகளைத் தாக்கியும் அப்பொழுது ஏற்பட்ட எதிர்ப்புகள் மெதுவாக இறங்கி, அவை வெறும் கட்சி முணுமுணுப்புடன் நின்றுவிட்டன. மனித உரிமை இயக்கம் அதனுடைய வன் செயல்களைக் கைவிட்டுவிட்டது. கனவுலக அல்லது எதையும் தழுவுகின்ற தொழிலாளர் இயக்கம் ராபர்ட் ஓவன் காலத்தில் இருந்ததைப் போலல்லாது இப்பொழுது சிராக்கப்பட்டுச் சட்டத்தின் ஆதரவையும் முதலாளிகளின் ஆதரவையும் பெற்ற தொழிற்சங்கங்களாக நிறுவப்பட்டன. கட்டுப்பாடில்லாத வாணிகத்தையும், மற்றும் பல நடைமுறை அபிவிருத்திகளையும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஆக்ஸ்ஃபோர்ட் இயக்கத்தின் பெரும் புயலுக்குப் பிறகு இப்பொழுது அமைதி நிலவியது.

மேல்குடி மக்களின் சிறந்த காலம் இதுவே. ஆனால், மேல், இடை வகுப்பினரும் இக் காலத்திலிருந்துதான் முன்னேற்ற மடைந்தார்கள். 500,000 பேர் கொண்ட வாக்காளர் தொகையிலிருந்து 1832-க்குப் பிறகு 900,000 பேர் வரையிலும்தான் அதிகமானது. இரண்டாவது சீர்திருத்த மசோதாவின்பொழுது 1867-ல், இந்தத் தொகை 2 மில்லியன்களாக உயர்ந்தது. சிறு பரோக்கள் அடியோடு மறையவில்லை. ஏனெனில், இன்னும் சில தொகுதிகளில் பிரபுக்கள் ஆதிக்கம் இருந்தது. டேவிஸ்டாக் என்னும் சிறு பரோ பெட்ஃபோர்ட் கோமகனின் ஆதிக்கத்திலிருந்தது. இரண்டு சீர்திருத்த மசோதாக்கள் நிறைவேறும்பொழுதும் அந்தப் பகுதியிலிருந்து எந்த டோரியும் அங்கு வெற்றிபெறவில்லை. இதைப்போலவே, கேல்னி என்ற லேன்ட்ஸ்வோன் கோட்டையை யாரும் அசைக்கவில்லை. பிறகு, சிறு நகரங்கள் தோன்றின. அங்கே குடியிருப்பவர் தொகை சிறிது அதிகமாகவே இருந்தது. வுட்ஸ்டாக் என்ற இதைப்போன்ற சிறு நகரத்தில் 1874-ல் 873 பெரும்பான்மை வாக்குகளில் பிளென்ஹிம் அபேட்சகரான ரண்டால்ஃப் சர்ச்சில் வெற்றிபெற்றார். மந்திரி சபையும் பாராளுமன்றமும் சமுதாயத்தின் குரலை அப்படியே பிரதிபலித்தன. 'எழுபதுகளில்' அமைக்கப்பட்ட கிளாட்ஸ்டன், டிஸ்ரேலி ஆகியவர்களின் சிறு கேபினட்டுகள், சமமான விகிதத்தில், பிரபுக்களுக்கும் சாதாரண மக்களுக்கும் பிரதிநிதித்துவம் அளித்தன. 1880-ல் காமன்ஸ் சபையிலுள்ள 160 அங்கத்தினர்கள் பிரபுக்களுக்கு உறவினர்களாக இருந்தனர். 'எழுபதுகளின்' கடைசி பாகம் வரையிலும் கொடிய பஞ்சம் ஏற்பட்டதனாலும் அதனால் விவசாய மந்த நிலை ஏற்பட்டதாலும், நிலம்

வைத்திருப்பவர்களுடைய நலன்கள் பாதிக்கப்பட்டன. மேலும், ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் போர்கள் ஏற்பட்டதால் சாகுபடி செய்கிறவர்களிடையே பலத்த போட்டி ஏற்பட்டது. தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதால், விலைகளில் உயர்வு ஏற்பட்டது. 1851–1878 முதல் நில வாடகை 28 சதவிகிதம் அதிகமாகி விட்டது. 1874-ல் நிலங்களைப்பற்றிப் புதிய கணக்கெடுப்பு நடத்தியதில், நாட்டின் பாதி நிலம் 8000 பேர்களுக்கும் குறைவானவர்களிடமே இருந்தது. அந்த நிலப் பிரபுக்கள் வசிக்கின்ற லண்டன் மாளிகைகள், லண்டன்டெர்ரி, ஸ்பென்ஸர், டேவன் ஷயர் அல்லது டெர்பி ஆகிய இடங்களைச் சுற்றிலும் அரசியல் சூழ்ச்சிகள் தோன்றின.

பதினெட்டாவது நூற்ருண்டிலிருந்தே, இந்த மேல் குடி மக்கள் அதிகமாக மாறிவிட்டனர். அரசியல் தலைவர்கள் தீவிர வாதிகளிடமிருந்துமட்டும் தோன்றவில்லை. பிரைட் அல்லது சேம்பர்லேன் போன்றவர்களைத் தவிர, பீல், கிளாட்ஸ்டன், டிஸ்ரேலி போன்ற தலைவர்கள், பெரிய தொழிலதிபர்களின் மைந்தர்கள் தவிர, சிலர் அவர்களுடைய ஆற்றலாலே முன்னுக்கு வந்தவர்கள். அதனுல், அரசியல் அதிகாரம் நிலம் வைத்திருப்பவர்களுக்கும் தொழில் நடத்துகிறவர்களுக்குமிடையே சமமாகப் பங்கிடப்பட்டது.

தொழிற்புரட்சி, சமயப் பிரசார நம்பிக்கை, ஆக்ஸ்ஃபோர்ட் இயக்கம், பயன் கருதுவோர் சிந்தனை ஆகிய பல சக்திகள் பொது வாழ்க்கையில் நல்ல வளர்ச்சி ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தன. இதைப்போன்ற பொதுநல அக்கறை ஹொரேஸ் வால்போல் கடிதங்களிலோ, ஃபாக்ஸ் கோஷ்டியினராலோ அல்லது டேவன்ஷயர் வட்டாரத்தினரோகூட அறிந்திருக்க மாட்டார்கள். அபர்டீன், அல்லது கிளாட்ஸ்டன் மந்திரிகளின் ஒழுக்க நிலையைப் பின்பற்றி எல்லா மந்திரிகளும் நடந்துகொண்டாலுங்கூட, பொதுமக்களிடையே இவ்வளவு வளர்ச்சி ஏற்பட்டிராது. பொதுமக்களின் நல்ல அபிப்பிராயங்கள் 'எடின்பரோ', 'குவாட்டர்லி ரெவ்யூஸ்' என்ற இதழ்களில் வெளியிடப்பட்டன. ஜெஃப்ரே, 'எடின்பரோ' பத்திரிகைக்கு ஆசிரியராகவும், ஸௌதே, 'குவாட்டர்லி ரெவ்யூஸ்' என்ற இதழின் முக்கியமான எழுத்தாளராகவும் இருந்தனர். பிறகு 'திடைம்ஸ்' (The Times) என்ற செய்தித்தாள், பார்னெஸ், டிலான் ஆகிய பெரும் ஆசிரியர்களின் முயற்சிகளால் சுதந்திரமாகக் கருத்துக்களை வெளியிடும் செய்தித்தாளாக விளங்கியது. பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த பெரும்பாலானவர் இன்னும் பழைய இலக்கியங்களிலும், ஆங்கிலிகன் சமயக் கருத்து

களிலும் ஈடுபாடுடையவர்களாக இருந்தனர். சமயத்தில் இணங்காதவரான பிரைட் என்பவர் முதன்முதலில் கேபினட்டில் 1868-ல் அங்கம் வகித்தார். அரசியல்வாதிகளின் மனநிலை, அறிவியல், பொருளாதாரம், வரலாறு ஆகியவற்றின் வளர்ச்சியால் பெரிதும் விரிவடைந்தது. சமயம், அறிவியல், சீர்திருந்திய தேர்வுகள் ஆகியவை பல்கலைக்கழகங்களுக்குப் புதிய நோக்கத்தை ஏற்படுத்தின. டாக்டர் ஆர்னல்டின் மரணத்திற்குப் பிறகு இருபது ஆண்டுகளில், புதிய பொதுப் பள்ளிகள் தோன்றின. ரக்பி பள்ளியில் டாக்டர் ஆர்னல்டு ஏற்படுத்திய ஒழுக்கத்தில், பல தலைவர்கள், மார்ல்பரோவும் செல்தன்ஹாமும், வெலிங்டன், ரேட்லி, ஹேய்லிபரி, லேன்சிங் போன்றவர்களும் பயிற்சி பெற்றார்கள். மேலும், பொதுவான கல்வி அமைப்பும் ஏற்படுத்தப்பட்டது. மேல், இடைநிலை வகுப்பினர், தொழில் செய்கின்ற வகுப்பினர் ஆகியவர்களுடைய பிள்ளைகள் அவ்வித பொதுப்பள்ளிகளில் நல்ல பயிற்சி பெற்றனர். அவர்களிடமிருந்து சில நல்ல குணங்களும் தோன்றின. அவர்கள் நல்ல அதிகாரிகளாக விளங்கினார்கள். இந்தியாவுக்கு முதன்முதலாகச் சிவில் சேவை செய்யப் பல அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவ்விதமான சேவை இங்கிலாந்திலும் பிறகு அமைக்கப்பட்டது.

இக் காலப் பரம்பரையினரிடம் வளர்ச்சி அடைவதற்கான மனோநிலை யிருந்தபோதிலும், புதிய கலப்படமான மேல்குடி மக்கள் அவர்களுடைய முன்னோர்கள் சாதித்த முன்னேற்ற வளர்ச்சியே போதுமானது என்று திருப்தி அடைந்தார்கள். முன்னேற்றத்திற்கான அடிப்படைக் கொள்கைகளில் அவர்கள் ஒத்திருந்தனர். இக் காலத்தை முன்னேற்ற காலம் என்று சொன்னாலும், இதைப் பழமை கலந்த முன்னேற்ற காலம் என்று சொல்லுவதும் பொருந்தும். முப்பது ஆண்டுகளில் பத்துமுறை கன்சர்வேடிவ்கள் மந்திரிசபை அமைத்ததால் இப்படிச் சொல்லுவதன்று. ஆனால், பொதுவாக மக்களிடையே பழமை நிறைந்த கொள்கைகள் மலிந்திருப்பதைக் காணலாம். பழைய உரிமைகளைப் போக்குவதிலும், சம வாய்ப்புகளை அளிப்பதிலும் உள்ள முன்னேற்றத்தில் அவர்களுடைய ஆர்வம் குறையவே இல்லை. 1851-ல் ஏற்பட்ட பல்கலைக்கழகக் கமிஷன், மற்ற சமய இணங்காதவர்களுக்கும் ஆக்ஸ்ஃபோர்ட், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்களில் பயிற்சி பெறுவதற்கும் பட்டங்கள் பெறுவதற்கும் உரிமைகளை அளித்தது. 1871-ல் ரத்துச் செய்யப்பட்ட பரிசோதனைச் சட்டத்தால் அவர்களுக்கு ஆசிரியர்கள் பதவியும் தரப்பட்டது. 1858-ல் பாராளுமன்றத்திலே யூதர்கள் அனுமதிக்கப்

பட்டார்கள்; 1868-ல் கிளாட்ஸ்டன், சமய வரிகளை ரத்துச் செய்தார். இதுவரையிலும், இரகசிய வாக்குரிமை பாராளு மன்றத்தில் கூடாதென்று பால்மர்ஸ்டனைப்போன்ற விக்குகள் கூறிவந்தார்கள். இவையெல்லாம் ஆங்கில முறைக்கோ அல்லது மனிதத்தன்மைக்கோ உகந்ததல்லவென்று சொன்னார்கள். ஆனால், 1871-ல் இரகசிய வாக்கெடுப்புமுறை கொண்டுவரப் பட்டது. இதனால் பிரதிநிதிகளுக்கு உண்மையான சுதந்திரம் கிடைத்தது. இராணுவத்தில் பணம் கொடுத்துப் பெரிய பதவி களைப் பெறுவது ஒழிக்கப்பட்டதால், திறமையுள்ளவர்கள் முன் னுக்கு வர வாய்ப்பு ஏற்பட்டது.

மக்களின் மனத்தைப் பிரதிபலிக்கிற அக்காலப் பிரதிநிதி களின் உள்ளம், பல இயல்புகளின் இசைவினால் ஏற்பட்டதே என்று கூறலாம். திருச்சபை, அரசு ஆகிய நிறுவனங்களில் காணப்பட்ட தேக்க நிலை மாறியபோதிலும், மக்கள் மனத்தில் இன்னும் அதிக மான அளவிலேயே கிறித்துவ நம்பிக்கை இருப்பதைக் காண முடிகின்றது. ஞாயிற்றுக்கிழமைகளில் ஓய்வு எடுத்துக்கொள்ளும் பழக்கம் மிகவும் அதிகமாகப் பின்பற்றப்பட்டது. லண்டன் பூங்காக்களில் அந் நாட்களில் இன்னிசை முழங்கும் பழக்கமுங் கூட நிறுத்தப்பட்டது; கோயில்களுக்குச் செல்வதும் குடும்ப ஜெபங்களைச் சொல்வதும் அவர்களுக்கு வழக்கமாகிவிட்டது. யூனிட்டேரியன் (Unitarian) சமயப் பிரிவைச் சேர்ந்த இளைஞர் ஜோசப் சேம்பர்லேன் ஞாயிறு பள்ளிகளில் கற்பித்துக் கொடுத் தார். அதேவிதமாக டோரி அரசியல்வாதிகளும் அவர்க ளுடைய கோயில்களில் கற்பித்துக் கொடுத்தார்கள். இலத்தீன் கிறித்துவ முறையில் ஊறிப்போன கிளாட்ஸ்டன், முன்னேற்ற வாதிகளைத் தலைமை தாங்கி நடத்தினார். அவர் அரசியலைச் சமயத்தின் வாழ்க்கைத் தொழிலாகவே கருதினார். இணங்காத வர்களுடைய பிரசாரத்தாலும் சமயப் பிரசாரத்தாலும், தீவிரவாதிகளும் தொழிலாளர்களும் நல்ல பயன்பெற்றார்கள். அவர்களிடையே நல்ல தலைவர்கள் ஏற்படுவதற்கு இதுவும் ஒரு காரணமாக இருந்தது. மண்ணியலில் லையலும், உயிரியலில் டார்வின், வாலஸ், ஹக்ஸ்லி ஆகியவர்களும் புதிய கருத்துகளைக் கண்டுபிடித்ததால், சமய நம்பிக்கையின் சில கொள்கைகள் அதிர்ச்சிக்குள்ளாயின. ஆனால், சமயமும் விஞ்ஞானமும் பகைமை கொள்ளாது ஒன்றாக முன்னேறுவதற்கு ஏற்ற நம்பிக் கையும் ஏற்பட்டது. மனித இனத்தின் முன்னேற்றமே தெய் வீகத் திட்டத்தின் ஒரு பகுதி என்ற எண்ணம் வளர்ந்தது. சார்லஸ் கிங்ஸ்லியின் கருத்து இதைப்போன்றே மப்பும் மந்தா ரமும் சூழ்ந்திருந்தது. பழைய அரசாங்கக் கவிஞரான

வோர்ட்ஸ்வர்த்தின் வாரிசான டென்னிஸன் இயற்கையின் புதிய சக்திகளைக் கண்டு பிரமித்துவிட்டபோதிலும், பழைய திருவினைகளை ஒதுக்கிவிட மனமில்லாது, புதியதோர் ஆன்மீக மேன்மையை, விக்டோரியா காலத்தில் போதித்தார். அக் காலத்து நற்குணங்களை, ஆர்தர் அரசனின் அவையில் காணப்பட்ட குணங்களைப்போல இருக்கின்றனவென்று தொடர்புபடுத்திக் கூறினார். அவரைவிட, அக் காலத்துக் கலைஞர்களுடைய சிந்தனை சக்தியும் கடவுள் பற்றற்ற தன்மையும் அதிகமாகச் செல்வாக்குப் பெற்றிருந்தன. இதைப் போன்ற கடுமையான சிந்தனை ஜார்ஜ் எலியட், ஜார்ஜ் மெரிடித், அல்லது மேத்யூ ஆர்னல்ட் ஆகியவர்களின் புதினங்களிலும் கவிதைகளிலும் காணமுடிகின்றது. இவர்களுடைய படைப்புகள், பகுத்தறிவின் அடிப்படையில் கடவுள்பற்றிய கருத்தற்ற விவாதங்களை வற்புறுத்தின. 'எழுபதுகளில்' தோன்றிய இந்த இலக்கிய வளர்ச்சியை நோக்கும் பொழுது, ஷெல்லி, ரிச்சர்ட் கார்லைல் ஆகியவர்களின் இலக்கியங்கள் சிறுபிள்ளைத்தனமாகத் தோன்றுகின்றன.

பல அறிஞர்கள் இந்த முன்னேற்ற தத்துவத்தை மக்கள் மனதில் நன்கு பதியும்படி எடுத்துரைத்தார்கள். அவர்களுடைய எண்ணம் தூய்மையாக இருந்தது. ஜான் ஸ்டூவர்ட் மில் என்பவர், 'சுதந்திரம்' (Liberty), 'பிரதிநிதித்துவ அரசாங்கம்' (Representative Government) எனப்படும் அவருடைய நூல்களில் ஜனநாயகக் கருத்துகளை வலியுறுத்தும்பொழுது, அவருடைய ஜனநாயகம், மக்கள் கூட்டத்தின் அறியாமையிலிருந்தும் பெரும்பான்மையிலிருந்தும் பாதுகாக்கப்பட்டதாக இருக்கிறது.

1873-ல் ஏற்பட்ட அவருடைய மரணத்திற்கு முன்பே, இந்தச் சிந்தனையாளர்களின் செல்வாக்கு, குறிக்கோள்வாதிகளிடம் சென்றது. அந்த இயக்கத்தின் தலைசிறந்த அறிஞரான ஆக்ஸ்ஃபோர்டைச் சார்ந்த டி. எச். கிரீன் என்பவர், பிளேட்டோ, ரூசோ, கான்ட் ஆகியவர்களின் மெய்யுணர்வின் அடிப்படையில் உண்மைகளைத் துருவிக் கண்டுபிடித்துச் சில கருத்துகளைப் பின்பற்றிப் பொதுவிருப்புக் கோட்பாட்டினையும், பகுத்தறிவின் ஆதிக்கத்தையும் புது உணர்வுடன் வற்புறுத்தியதால், பயன் கருதுவோரின் சிந்தனை செல்வாக்கிழக்க ஆரம்பித்தது.

ஆனல், இக் காலத்தில் பெரும்பகுதி தனிச் சுதந்திரவாதிகளின் ஆதிக்கத்தில் இருந்தது. சில தனிப்பட்டவர்களின் பெருமையும் புகழும் இதற்குச் சான்ருக இருந்தது. லிவிங்ஸ்டன், லாரன்சுகள், ரிச்சர்ட் பர்ட்டன் என்ற புதுநிலத் தேட்ட

வாதியும், கோர்டன், ஹெர்பர்ட் ஸ்பென்சர், சிப்பாய்க் கலக வீரர்கள், அல்லது லங்காஷயர், பர்மிங்காம் ஆகிய நகரங்களின் வணிகர்கள் நாட்டிற்குச் சிறந்த சேவைகளைச் செய்துள்ளார்கள். இப் பரம்பரையினர் சுதந்திரத்தில் நம்பிக்கைவைத்திருந்தனர். ஆனால், சமநிலையிலும், போட்டியிலும், சட்டதிட்டங்களிலும் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. கிளாட்ஸ்டன், பிரைட் போன்ற வர்களுங்கூட வரிவிதிப்பைத் தீமை என்றும் அரசாங்கத் தலையீட்டை வெறுத்தும் வந்தார்கள். 'தன் கையே தனக்குதவி என்றிருப்பவருக்கு தெய்வமும் துணை நிற்கும்' என்ற கொள்கையை அவர்கள் பின்பற்றுகிறவர்கள். சமய நோக்கமும், மேல்குடி மக்களிடமிருந்து கற்றுக்கொண்ட மரபுகளைப் பின்பற்றும் வழக்கங்களும் சேர்ந்து பொதுப் பணியாற்றவேண்டுமென்ற உயரிய குறிக்கோள் மக்களிடையே ஏற்பட்டது. இதன் விளைவாக எழுபதுகளில் தருமநிலைக் கழகமும் (Charity Organization), பல்கலைக்கழகங்களில் பெண்கள் கல்லூரிகளும் நிறுவப்பட்டன.

மனித இனத்தின்பேரில் உள்ள அவர்களுடைய அன்பு உண்மையானதேயாகும். பல சட்டங்கள், பெண்கள், குழந்தைகள், வர்த்தகக் கப்பல்களை ஓட்டும் மாலுமிகள் ஆகியவர்களின் சார்பாக இயற்றப்பட்டாலும், நமது காலத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், அரசாங்கத்தின் பங்கு மிகவும் குறைவாகவே இருந்தது. 1852-ல் வரிவிதிப்பின்மூலமாக 54 மில்லியன் பவுன்கள் வசூலிக்கப்பட்டன. 1881-ல் 70 மில்லியன் பவுன்களுக்கும் குறைவாகவே இருந்தது. பல நிறுவனங்களைப் பொதுமக்களின் ஆட்சிக்குள் கொண்டுவருவது மிகவும் மெதுவாகத்தான் நடந்தது. அப்படி ஏற்படும்பொழுது, விஸ்தரிப்பின் மூலமோ அல்லது பொது அறிவு அனுபவத்தின்மூலமோதான் அவர்களுடைய கண்காணிப்புக் கொண்டுவரப்பட்டது. 1856-ல் கவுன்டி காவலர் படைகளைத் தணிக்கை செய்யும் அதிகாரங்கள் உள்துறை அலுவலகத்திற்குத் தரப்பட்டது. 1871-ல் சுகாதாரம், இரவலர் சட்டம் ஆகியவற்றை நிர்வகிக்கும் பொறுப்பைத் தல அரசாங்கக் குழுவினர் ஏற்றுக்கொண்டனர். சுகாதாரம், வீடு கட்டுதல், கல்வி, இன்ஸ்யூரன்ஸ் ஆகிய பொறுப்புகளைப் பெரும்பாலும் தனிப்பட்டவர்களே ஏற்று நடத்தினர். தொழில் இல்லங்களில் மிகவும் கடுமையான நிர்வாகம் இருந்ததால், 1877-ல் சுமார் 80,000 உடல்நலங் குன்றாத இரவலர்களை வெளியே அனுப்பவேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் பல வகைப்பட்ட சுய உதவிக் கழகங்கள் ஆங்காங்கே ஏற்பட்டன. நண்பர்கள் கழகங்கள் (Friendly Societies), சேமிப்பு பாங்குகள்,

கூட்டுறவு சங்கங்கள் ஆகியவை தோன்றின. பாங்குகளில் சேமிப்பு நிதிகள் இந்த முப்பதாண்டில் இரண்டு மடங்காகப் பெருகின. ஆட்ஃபெல்லோஸ் அண்ட் ஃபாரஸ்டர்ஸ் (Oddfellows and Foresters) என்ற கழகங்களில்மட்டும் அரை மில்லியன் அங்கத்தினர்கள் இருந்தனர்.

1845-ல் டிஸ்ரேலி எழுதிய 'ஸிபில்' (Sybil) என்ற நூலில் அவர் இங்கிலாந்திலுள்ள இரண்டு நாடுகளைக் குறிப்பிடுகிறார். அவர் விவரித்த வறுமைமிக்க ஒரு நாட்டில், இப்பொழுது வறுமை சிறுகச் சிறுக மறைந்துகொண்டு வருகிறது. இரு நாடுகளில் காணப்படும் பிளவு, நகரத்திலும் கிராமத்திலும் சிறிது அதிகமாகக் காணப்படுகிறது; அல்லது தொழில் பிரபுக்களிடையேயும் அவர்களுக்கு கீழே உள்ளவர்களிடமும் காணப்படுகின்றது என்று கூறலாம். 1850-ல் உழைக்கின்ற ஆண்டுகளில் நான்கில் ஒரு பகுதியினர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அப்பொழுது விவசாயம்தான் தனிப்பட்ட ஒரு பெரிய தொழில் நிலையம். விவசாயத்தில் ஈடுபட்டிருந்தவர்கள் பருத்தி, இரும்பு, எஃகு ஆகியவை பெருகிய உடன், படிப்படியாக விவசாயத்திலிருந்து விலகி வேறு தொழில்களைச் செய்ய முனைந்தார்கள். மற்ற எல்லாத் தொழிற்சாலைகளைவிடப் பஞ்சாலைகள் மிகவும் நல்லமுறையில் முன்னேற்றம் அடைந்திருந்தன. பத்தொன்பது பேருக்கு ஒருவன் பஞ்சாலையில் வேலை செய்தான். ஏற்றுமதியில் 60 சதவிகிதம் இந்தத் தொழிலால் ஏற்பட்டது. பருத்திமட்டும் நாற்பது சதவிகிதம் 1880 வரையிலும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இயந்திரங்களும், மற்ற இயந்திரப் பொருள்களும் அதிகமாகத் தயாரிக்கப்பட்டன. அதனால், நிலக்கரி உற்பத்தியும் மூன்று மடங்கு இக் காலத்தில் அதிகமானது. ஆண்டு ஒன்றுக்கு சுரங்கத் தொழிலாளி தோண்டியெடுத்த நிலக்கரி 264 டன்களிலிருந்து 403 டன்களுக்கு உயர்ந்தது. மலிவான நிலக்கரி உற்பத்தியின் விளைவாக, தொழிற்சாலைகள் இரும்பு உற்பத்தியை மூன்று மடங்கு அதிகமாகப் பெருக்கின. உலகிலுள்ள எல்லா நாடுகளில் உற்பத்தியாகும் இரும்பைவிட, இங்கேதான் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டது. எழுபதுகளின் இடையிலே, இந்தக் கருப்புநாட்டின் பொற்காலம் மந்தநிலை அடைந்தது. 1880-ல் இரும்பின் இடத்தை எஃகு கைப்பற்றியது, ரயில்வேக்களில் இரும்புக்குப் பதிலாக எஃகு பயன்படுத்தப்பட்டது. பெஸிமர் (Bessemer), சிமென்ஸ் (Siemens) ஆகியவர்களின் புதிய கண்டுபிடிப்புகளால் எஃகு உற்பத்தி ஐந்து மடங்காகிவிட்டது. 1850-ல் இரும்பு, எஃகு ஆகியவற்றின் ஏற்றுமதியைவிட, அந்த ஆண்டில் நான்கு மடங்கு அதிகமாகப் பெருகியது.

பல பரிசோதனைகள் நடத்தியதில் உழைப்பாளிகள் இப்பொழுது புதிய செல்வத்தில் அதிகமான பங்கை அடைகிறார்கள். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு மக்கள் எழுதிய கடிதங்களைவிட, 1880-ல் பத்து மடங்கு அதிகமாகக் கடிதங்களை எழுதினார்கள். ரயில்வேக்களை அதிகமாக அமைத்ததால், ஏழைமக்களுக்கு எளிதாக வேலைவாய்ப்புகளும், குறைவான செலவில் வாழ்க்கைத் தரத்தை அமைத்துக்கொள்ளவும் முடிந்தது. 1850-ல் 5,000 மைல்கள் வரையிலும் ரயில்வே அமைக்கப்பட்டிருந்தது. 1880-ல் 18,000 மைல் வரையிலும் அதிகமாகப் போடப்பட்டது. கூலிகள் 50 சதவிகிதம் வரை உயர்ந்தன. ஆனால், உண்மையான கூலிகள் அதிகமாகக் குறையவில்லை. ஏனெனில், 'எழுபதுகளில்' விலைகள் மிகவும் வேகமாகச் சரிந்தன. பொருளாதார மந்த காலத்திலும், விவசாயிகளின் கூலிகள் 20 சதவிகிதம் 1850-ல் இருந்ததைவிட அதிகமாகவே இருந்தன. ஐரோப்பாவிலேயே இங்குள்ள விவசாயிகள்தான் இவ்வளவு அதிகக் கூலிகளைப் பெற்றார்கள். தொழிற்சாலைச் சட்டங்கள் அமலில் உள்ள எல்லாத் தொழில்களிலும், பஞ்சாலைகள், சுரங்கங்கள் உட்பட எல்லாத் தொழில் நிலையங்களில் தொழில் புரியும் தொழிலாளர்களுக்கும் வாரத்திற்கு 56½ மணி நேரமும், சனிக்கிழமையன்று பாதி விடுமுறை நாளும் நிர்ணயம் செய்யப்பட்டது. தொழிற் சங்கத் தலையீட்டினால் இயந்திரத் தொழிலாளிகளுக்கும், உலோகத் தொழிலாளிகளுக்கும் 54 மணி வேலைநேரம் விதிக்கப்பட்டது. தொழிற்சங்க இயக்கம் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட நிறுவனமாகிவிட்டது. இந்த இயக்கத்தில் திறமை மிக்க தலைவர்கள் பணியாற்றினர். இணைக்கப்பட்ட இயந்திரத் தொழிலாளர் (Amalgamated Engineer) சங்கத் தலைவர் ஆலன் (Allan) என்பவரும், லண்டன் அச்சுக்கோப்பவரின் சங்கத் தலைவரான ஓட்கர்ஸ் (Odgers) என்பவரும், தச்சர்களின் சங்கத் தலைவரான ஆப்பிள்கார்த் (Applegarth) என்பவரும் தொழிற் சங்க இயக்கத்தைப் பலப்படுத்தினார்கள். வேலைநிறுத்தங்கள் செய்யாமலும், மத்திய தொழிற்சங்கக் குழுவினரின்மூலமாகக் கிளைக் கழகங்களைக் கண்காணித்தும், மற்றும் அவர்களுடைய நலன்களையும் சந்தா வசூல்களையும் கவனித்து வந்தார்கள். சுரங்கத் தொழிலாளர்களும் பஞ்சாலைத் தொழிலாளர்களும் முதன்முதலாக 'அறுபதுகளில்' தங்களுடைய சங்கங்களைப் பலப்படுத்தினார்கள். 1868-ல் தொழிற்சங்கக் காங்கிரஸ் கூட்டப்பட்டது. 1874-ல் சுரங்கத் தொழிலாளர்களான பர்ட் என்பவரும், மேக்டொனால்ட் என்பவரும் பாராளுமன்றத்தில் தொழிலாளர் பிரதிநிதிகளாக அங்கம் வகித்தனர்.

இந்த மாற்றங்கள் எல்லாம் படிப்படியாகத்தான் ஏற்பட்டன. நாட்டுப்புறங்களிலிருந்து பல மக்கள் நகரங்களுக்குக் குடியேறிவிட்டனர். அவர்கள் நகரங்களில் சொல்லொணுத் துன்பத்திற்கு ஆளாகி அல்லலற்பட்டனர். அவர்களுடைய துயரங்களை ஆராயப் பல குழுக்கள் அமர்த்தப்பட்டன. 1851 முதல் 1881 வரை லண்டன் நகரத்து மக்கள்தொகை 2,360,000 பேர்களிலிருந்து 3,800,000 வரை பெருகிவிட்டது. மற்ற சில நகரங்களிலும் மக்கள்தொகை 80 சதவிகிதம் அதிகமாகிவிட்டது. ஆனுல், இங்கிலாந்தின் கிராமங்களிலும் வேல்ஸ் பகுதியிலும் மக்கள்தொகை மிகவும் குறைந்துவிட்டது. 1880-ல் 68 சதவிகித மக்கள் நகரப் பகுதிகளில் வசித்தனர். கடைசி பத்தாண்டுகளில் 100,000 விவசாயத் தொழிலாளர்கள் நிலங்களை விட்டு வெளியேறிவிட்டார்கள்.

இதனுடன் புதிய தீவிரவாதமும் நமது வரலாற்றில் இடம் பெறுகின்றது. இருப்பினும், அந்தத் தீவிரவாதமும் அப்பொழுதிருந்த மனநிலையில் கட்டுப்படுத்தப்பட்டது. தொழிற்சங்கக் காங்கிரஸிலுங்கூட, வயதுவந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை வேண்டுமென்ற கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இந்த மட்டமான நிலைக்குக் காரணம் வெலிங்டனும், பால்மர்ஸ்டனும் நீண்ட காலம் உயிர் வாழ்ந்தமையாகும். ஆனுல், அவர்களுடைய கட்சிக் கொள்கையின்படி, பாராளுமன்றச் சீர்திருத்தமும் கட்டுப்பாடில்லாத வாணிகமும் நிறைவேற்றப்பட்டன. பீலின் 'கொள்கை துறத்தலால்' கன்சர்வேடிவ் கட்சி இரண்டாகப் பிரிந்தது. சமயக் கருத்து வேறுபாடுகளால் பீலின் ஆதரவாளர்களிலிருந்து விக்குகள் பிரிக்கப்பட்டார்கள். இதற்குப் பிறகு கட்சியில் ஒரே குழப்பம் ஏற்பட்டது. பலவீனமான அரசாங்கங்கள் ஏற்பட்டன. காமன்ஸ் சபை, கொள்கைகளைவிடத் தலைவர்களையே பின்பற்றுவது நல்லதெனக் கருதியது.

1868 முடிய பதினுறு ஆண்டுகளில் எட்டு மாறுபட்ட மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. 1852-ல் இரண்டு அரசாங்கங்கள் வீழ்ந்தன. ஓர் அரசாங்கம் ஒன்பது வோட்டுகள் வித்தியாசத்திலும், மற்றொன்று பத்தொன்பது ஓட்டுகள் வித்தியாசத்திலும் கவிழ்க்கப்பட்டன. அதே ஆண்டில் பாராளுமன்றத்தின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பிறகு டெர்பி, அபர்டீன், பால்மர்ஸ்டன் ஆகியவர்கள் முறையே மந்திரிசபைகளை அமைத்தனர். முதல் மந்திரிசபையில் முக்கியமாக, திறமையுள்ள பீல் கோஷ்டியினர் ஏதாவது ஒரு கட்சியுடன் கூட்டுச் சேர்ந்துகொண்டனர். ஆனுல், அபர்டீன் இந்த முறையைச்

சரிவரப் பின்பற்றுததால் ஒருமைப்பாடில்லாத கூட்டு மந்திரி சபையும் ஏற்பட்டது. 1865-ல் பால்மர்ஸ்டன் இறக்கும் வரையிலும் விக்கு அரசாங்கத்தில் முன்னேற்றக் கொள்கை அடிப்படையில் தலைமை வகிப்பதற்குச் சரியான தலைவர் கிடைக்கவில்லை. பால்மர்ஸ்டன் கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்த கேனிங்கின் ஆதாரவாளர். பொதுவாக இந்தக் கட்சியில் ஏற்பட்ட தூண்டுதலோ அல்லது தடையோ, கட்சிக்குள்ளிருந்து ஏற்படுவதைக்காட்டிலும் கட்சியின் வெளியே இருந்துதான் அதிகமாக ஏற்பட்டது. மூன்றுவது நெப்போலியன், ரஷ்யாவின் ஆதிக்கம், இத்தாலிய தேசியம், அமெரிக்க ஜனநாயகம் ஆகியவற்றின் எதிர்வினைகள் ஆங்கிலேய மக்களின் பொதுக்கருத்தினை எப்படிப் பாதிக்கின்றன என்பதைப் பொறுத்துக் கட்சியின் பலமும் அடங்கியிருந்தது.

இந்தக் காலத்தின் முடிவில் புதிய கன்சர்வேடிவ் கட்சியும், புதிய லிபரல் கட்சியும் தோன்றின. இவ்விதமாகக் கட்சிகள் தோன்றுகின்ற சாத்தியக் கூறுகள், அப்பொழுதிருந்த தலைவர்களின் அரசியல் வாழ்க்கையைக் கண்டாலே புரிந்துகொள்ள முடியும். டிஸ்ரேலி, அவருடைய அரசியல் வாழ்க்கையை ரேடிகல் கட்சியிலிருந்து ஆரம்பித்தார். கிளாட்ஸ்டன் ஆரம்பத்தில் 'டோரியாக' இருந்தார். 1852-ல் 'பாதுகாப்பு' அளிக்க வேண்டுமென்ற கொள்கை ஏற்றுக்கொண்டபொழுது, கன்சர்வேடிவ் கட்சியில் ஒற்றுமை ஏற்படும் வாய்ப்பு அதிகமாக இருந்தது. ஏனெனில், கிளாட்ஸ்டனும், பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்றுதான் இருந்தார். அவருடைய ஆதரவில், டெர்பி, கிளாட்ஸ்டன் மந்திரிசபையிலும், பின்பு பால்மர்ஸ்டன் மந்திரிசபையிலும் பதவி வகிக்க 1852-லும் மீண்டும் 1855-லும் ஒப்புக்கொண்டார். கிளாட்ஸ்டன், பால்மர்ஸ்டனை மிகவும் மோசமான மந்திரி என்று கூறினர். டெர்பியை 1858-ல் மந்திரிசபையில் சேர்த்துக்கொள்ளவேண்டிய அவசியம் பால்மர்ஸ்டனுக்கு ஏற்பட்டது. பால்மர்ஸ்டன் அரசாங்கத்தில் நுழையும் முன்னரே, டெர்பி அவருக்காகத் தான் வாக்களித்தார். பால்மர்ஸ்டன் 1855-ல் டெர்பியின் மகனுன ஸ்டான்லியை அவருடைய மந்திரிசபையில் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தார். 1866-ல் இதைப்போன்றே, டெர்பி, விக் கட்சியைச் சார்ந்த கிளாரண்டனை அவருடைய அரசாங்கத்தில் சேர்த்துக் கொள்ள விரும்பினர்.

அரசியலை அழகாகச் சமநிலைக்குக் கொண்டுவந்தால் முடிவுகள் தனிப்பட்ட தலைவர்களின் திறமையையும் ஆற்றலையும் பொறுத்தே அமைகின்றன. எந்தக் கட்சியில் சேர்ந்து பணி

யாற்றுவதென்று கிளாட்ஸ்டன் நீண்ட காலமாகவே தயங்கித் தயங்கிவந்தார். இந்தத் தயக்கம், பீலின் செல்வாக்கினுல் ஏற்பட்டது. இறுதியில் கொள்கை முக்கியத்துவத்தைவிட, வரலாற்று முக்கியம் எந்தக் கட்சியில் அதிகமாகக் காணப்படுகின்றதென்பதையொட்டி அவர் முடிவு செய்தார். தடையில்லாத வாணிகத்தைக் கொண்டுவரவேண்டுமென்பதற்காக அவர் பெரும் முயற்சியில் ஈடுபட்டார். சமய ஆர்வத்தைப் போல், இக் கொள்கையிலும் அவருக்கு அதிக ஆர்வமிருந்தது. அதைப்போலவே அவர் ஐரோப்பாவில் 'லிபரலிசம்' தோன்றுவதற்காக முயற்சி செய்தார். நேபிள்ஸ் அரசாங்கத்தின் கொடுமைகளைக் கண்டித்து வெளிப்படையாகவே 1851-ல் அவர் ஒரு கடிதம் எழுதினுர். அந்தக் கடிதத்தில் அவர் 'கடவுள் இல்லை என்பது, இப்பொழுது ஒரு முறையாகவே அமைந்துவிட்டது' என்று எழுதினுர். டிஸ்ரேலி ஒரு துணிச்சல்காரர் என்ற காரணத்தால் பீல் ஆதரவாளர்களை அவருடைய கட்சியில் இணைப்பது சரியன்று என்று கிளாட்ஸ்டன் கருதினுர். அபர்டீன், ஹெர்பர்ட், கிரஹாம் ஆகிய பீலைச் சார்ந்தவர்கள் இறந்துவிட்டதாலும், பால்மர்ஸ்டனை ஒரு பெரிய தலைவர் என்று நாடு ஒப்புக்கொண்டதாலும், கிளாட்ஸ்டன் வேறு வழியின்றி விக் கட்சியில் சேர்ந்து பணியாற்றினுர். அந்தக் கிழவன் பால்மர்ஸ்டன் இறந்த பிறகு, கிளாட்ஸ்டனும் அவருடைய ஆக்ஸ்ஃபோர்டு தொகுதியை இழந்துவிட்டார். விக்குகளும் 'லிபரலிசத்தை' ஏற்றுக் கொண்டனர்.

இந்த இடைக்கால மாறுதல்கள் இன்னும் நீடித்துக் கொண்டே இருந்தன. இதற்கு அரசியாரும் ஒரு காரணம். அவருடைய பலம் அப்பொழுது மிகவும் அதிகமாக இருந்தது. அவர் மூன்ருவது ஜார்ஜின் பேர்த்தி என்பதை அடிக்கடி நினைவுறுத்திக்கொண்டிருந்தார். அவருடைய கணவன் நாற்பத்திரண்டாவது வயதிலேயே இறந்துவிட்டதால், அவர் மனது மட்டுமன்று; வரலாறுங்கூட, 1861-ல் இரண்டாகப் பிரிந்துவிட்டது.

அவர்களுடைய திருமணம் முடிவு செய்யப்பட்ட நாளிலிருந்து, அரசியாரின் வேண்டுதலால் 'பிளாக்ஸ்டோனின் விளக்கங்களில்' அவர் ஈடுபட்டு அரசியாரின் அரசியல் செல்வாக்கை உயர்த்தவும் முயன்ருர். எனினும், அவருடைய ஆலோசனையின்பேரில் நடந்தால்கூட, அரசியின் மதிப்பிற்கு ஆபத்துக்கு ஏற்படாமல் இல்லை. அவர்கள் இருவரும் சேர்ந்து, பாராளுமன்றக் கலைத்தல் உரிமை அவர்களிடமே

இருக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். இராணுவம் அவர்களுடைய அதிகாரத்திற்குள் இருக்கவேண்டுமென்றும் விரும்பினார்கள். வெலிங்டன், ஹார்டின்ச் ஆகியோர் விலகிய பிறகு, பிரதம படைத்தலைவர் பதவியை 1856-ல் அவருடைய உறவினரான கேம்பிரிட்ஜ் கோமகன் ஜார்ஜ் என்ற இளைஞருக்கு அளித்தார். அவர் அமைதியானவராக இருந்ததால், 1895 வரையிலும் அப் பதவியிலிருந்தார். அரசியாரின் கணவர், முழுமையும் ஜெர்மானியராக இருந்தபோதிலும், அவர் ஐரோப்பிய விவகாரங்களில் ஒரு முன்னேற்றவாதியாகவே இருந்தார். ஆனால், அவருடைய ஜெர்மன் வெறி மாளவில்லை. டென்மார்க்கிற்கு எதிராக ஹால்ஸ்டீன் கிளர்ச்சியிலிருந்து இதைப் புரிந்துகொள்ளலாம். தவிர, அவருக்கு ஜனநாயகத்தின் மீது பயமும் ஏற்பட்டுவிட்டது. மாஜினியைப் 'பைத்தியக்காரன்' என்று அவர் கூறினார். இத்தாலியில் உள்ள ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தை எப்பொழுதுமே ஆதரித்தார். ஆர்லியனிஸ்டு அரசியல் பரம்பரையுடன் உறவுகொண்டிருந்ததால், முதலில் லூயி நெப்போலியன்மீது ஆத்திரம்கொண்டார். தவிர, கோஸத், கரிபால்டி ஆகிய வீரர்களுக்கு ஆங்கிலேய மக்கள் நல்ல வரவேற்பு அளித்ததை, அரசியாரும் அவருடைய கணவரும் விரும்பவில்லை. இந்த நிகழ்ச்சிகளால், பால்மர்ஸ்டன்மீது அவர்களுக்குப் பழிவாங்கும் எண்ணம் ஏற்பட்டது. இறுதியில் 1851-ல் அவரை வெளிவிவகாரத் துறையிலிருந்து அகற்றிவிட்டார்கள். அபர்டீன் அரசாங்கத்திலும், அவர் இந்தத் துறையில் நுழையாதவாறு பார்த்துக்கொண்டனர். இதைப்போன்றே பிரைட் என்பவருக்குப் 'பிரிவி கவுன்சிலர்' பதவி தருவதை அரச தம்பதிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்களுடைய அரண்மனையில் 'பூஸியட்' இயக்கத்தைச் சார்ந்த எவருக்கும் வேலையில்லை என்ற நிலை பல ஆண்டுகள் வரையிலும் நீடித்தது. இப்படி, அவர்களுக்குப் பல வெறுப்புகள் இருந்ததைக் காணலாம்.

அவருடைய 'அன்பு தேவதை' மறைந்த பிறகு, விண்ட்சர் கோட்டை உயிருள்ள கல்லறையாக மாறிவிட்டது. அரசியாரின் உடல்நிலை மிகவும் தளர்ச்சியுற்றது. அவர் சில வருடங்களாக, ஆஸ்போர்ன் அல்லது பால்மோரல் துறவி போல (Recluse of Osborne or Balmoral) வாழ்க்கை நடத்தினார். அவர் பாராளுமன்றத்துக்கு விஜயம் செய்வதோ, அல்லது லண்டன் நகரத்தில் தோற்றமளிப்பதோ இப்பொழுது நின்றுவிட்டது. அவரைப் பார்க்கவேண்டுமானால் மந்திரிகள் நெடுந்தூரம் பிரயாணம் செய்யவேண்டியிருந்தது. அவருடைய கணவரின் மரபும்

எண்ணமும் இப்பொழுது மிகவும் பக்தியுடன் அவரால் பின் பற்றப்பட்டது. ஜெர்மனி 'நமது உண்மையான உறவுநாடு' என்று 1864-ல் அவருக்குப்பட்டது. 1867-ல்கூட 'ஜெர்மனியி லிருந்து, நாம் எந்தவிதமான ஆக்கிரமிப்பையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை; அதனுல் பயப்படவேண்டியதில்லை' என்று அவர் கூறினுர். அவருடைய முடிவுகளில் சொந்தக் கருத்துகளும், பெண்மை இயல்புகளும் அதிகமாகக் காணப்பட்டன. டிஸ்ரேலி, அவரிடத்தில் அன்பாகவும் மரியாதையாகவும் இருந்தார். ஆனுல், கிளாட்ஸ்டன் அவரைப் பார்க்கும்பொழுதெல்லாம் நீண்ட மகஜரைச் சமர்ப்பித்தும், கடுகடுப்பான முகத்துடனும் தோற்ற மளித்தார். கிரென்வில் போன்ற, அவர் சொற்படி கேட்டு ஆடு கின்ற மந்திரியை, பிரதம அமைச்சருக்கு எதிராகப் பயன்படுத்து வதில் அவர் சிறிதும் தயங்குவதில்லை. திருச்சபை செல்வாக்கு, பெரும்பாலும் அவரிடம் இருக்கவேண்டுமென்ற எண்ணம் இருந்தது. டெய்ட் (Tait) என்பவரை ஆர்ச்பிஷப்பாக நியமனம் செய்தது இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். வேல்ஸ் கோமகனைப் பல அரசியல் பொறுப்புகளிலிருந்து விலக்கிவிட்ட தால், எல்லாப் பொறுப்புகளும் இவர்மீதுதான் விழுந்தன. அவருடைய கணவர் இவரைப் பொதுநலப் பணிகளில் அக்கறை எடுத்துக்கொள்ளும்படி வற்புறுத்தியிருக்கிறுர். அதற்கான அனுபவத்தையும் பயிற்சியையும் பெற்றிருந்தார். உண்மையில், அவருடைய நற்குணங்களும் குறைபாடுகளும், சுறுசுறுப்பாக உழைக்கின்ற நடுத்தர வகுப்பினரின் பண்பாடுகளைப் போல இருந்தன.

நாட்டின் முதுகெலும்பு அப்பொழுது நடுத்தர வகுப்பினர் என்றுதான் கருதப்பட்டது. அவருடைய கணவர் கலையில் ஈடுபாடுடையவராக இருந்தார். கிறிஸ்டல் அரண்மனையிலுள்ள கண்காட்சி, அவர்களுடைய கலைஆர்வத்திற்கு எடுத்துக்காட்டாக இருந்தது. அவருடைய நாட்டின்மீதிருந்த பெருமை, கிரிமியப் போர் வீரர்கள்மீது காட்டிய பரிவு, துயரடைந்தவர்களிடம் அவர் காட்டிய அன்பு ஆகிய நற்பண்புகள் அவரை ஒரு தகுதி வாய்ந்த அரசியாகப் பொன்றுப் புகழ்பெறச் செய்தது. மற்றப் பெரிய அரசியர்களுக்கும், அவருடைய முன்னேடிகளுக்கும் இவர் எந்தவிதத்திலும் குறைந்தவரல்லர். அக்காலத்திய மக் களின் நாட்டுப் பற்றை இவர் பிரதிபலித்தார். ஒரு காலத்தில் இவருக்குப் பால்மர்ஸ்டன் என்றுலே பிடிக்காது. ஆனுல், இப் பொழுது அவர் இல்லையே என்ற உணர்வை அவர் இராணு வத்தில் பெருமை கொண்டபொழுது நன்கு உணர்ந்திருந்தார். பாராளுமன்றச் சீர்திருத்தத்தை எப்படியும் கொண்டுவர

வேண்டுமென்று மந்திரிகளையும் பிரதிநிதிகளையுமே அரசி மிகவும் வற்புறுத்தினர். இதைப் போலவே மக்கள் விரும்பும் ஐரிஷ் திருச்சபையைக் கலைத்துவிடும் எண்ணத்தை இவரும் ஏற்றுக் கொண்டார்.

பெண்கள் உரிமைகளில் அவருக்குச் சிறிதும் பிடித்தம் இல்லை. ஆனால், கொடுமைகளைப் புரிவது, இராணுவத்தில் கசையடி அளிப்பது போன்ற கொள்கைகளிலும் அவர் பழமையை விரும்பினர். அந்நாட்டு மக்களின் அக் காலத்து வளர்ச்சியான ஆண்மை மிக்க இயல்புகளையும், திருப்தி அடையும் பண்புகளையும் அரசியாரும் பிரதிபலித்தார்.

# 2. கூட்டு மந்திரிசபையும், கிரிமியாவும், பால்மர்ஸ்டனின் வெற்றியும், 1852-1859

1852 பிப்ரவரி மாதத்திலிருந்து டிசம்பர் மாதம் வரையிலும் டெர்பியின் முதல் அரசாங்கம் பதவியில் இருந்தது. இந்தக் காலத்தை ஓர் இடைக்காலம் என்றே சொல்லலாம். இதைப் போன்ற பலவீனமான அரசாங்கம் 1827 கோட்ரிச்சுக்குப் பின்பு இதுவரையிலும் ஏற்பட்டதே இல்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னரும், அவர் பீல் ஆதரவாளர்களையே நம்பியிருக்க வேண்டி வந்தது. பின்பு கட்சிக் கொள்கைகளில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டன. காப்புவரிப் பாதுகாப்பு அளிக்கும் பிரச்சினையில் மந்திரியும் அவருடைய கட்சியும் மனம் மாறிவிட்டனர் என்பதை உணர்ந்த பால்மர்ஸ்டன், டிஸ்ரேலியுடன் சேர்ந்து பணியாற்ற முடியாதென்றும், அல்லது எந்தப் பீல் ஆதரவாளனும் அவரின் கீழ் வேலைசெய்ய முடியாதென்பதையும் தெளிவுபடுத்தினர். அதனால், விக்குகளும் பீல் ஆதரவாளர்களும் ஒன்றுசேரும் சமயத்தில் டிஸ்ரேலியின் மந்திரிசபை சரியும் என்று முன்கூட்டியே தெரிந்தது. அவர் வரவுசெலவுத் திட்டத்தைச் சமர்ப்பிக்கும் பொழுது அவரைக் கவிழ்ப்பதற்கு ஒரு நல்ல வாய்ப்பு ஏற்பட்டது. உண்மையில், 'காப்பு வரிகளை' அவர் ரத்துச் செய்தார். அவற்றால் எந்தப் பயனுமில்லை என்று சொன்னர். ஆனல், நிலக்கிழார்களுக்குச் சில சலுகைகளை அளித்ததும், வருமான வரியைச் சிறிது குறைந்த வருமானமுள்ளவர்கள்மீது விஸ்தரித்ததும், இவரை கிளாட்ஸ்டன் வன்மையாகக் கண்டிக்க ஒரு வாய்ப்பை நல்கியது எனலாம்.

ரஸ்ஸல், கட்சிக்கு மிகவும் அவசியமாகத் தேவைப்பட்டார். பால்மர்ஸ்டனைக் கண்டால் அரசியாருக்குப் பிடிப்பதில்லை. அதனல், அரசியார் எப்படியாவது ஒரு கூட்டு மந்திரிசபையை நிறுவவேண்டுமென்று பெரிய முயற்சி செய்தார். அதனல் அவர் மதிப்பிற்குரிய விக்கு கட்சியைச் சேர்ந்த லேண்ட்ஸோன்

என்பவரையும், பீல் ஆதரவாளர்களில் அதைப்போன்ற மதிப்பிற்குரிய அபர்டீனையும் அழைத்துக் கூட்டு அரசாங்கத்தை அமைக்கும்படி கேட்டுக்கொண்டார். ஏட்டளவில் இந்த மந்திரி சபை மிகவும் பலமுள்ளதாகக் காணப்பட்டது. ஆனால், அந்த மந்திரிசபையில் உள்ள பதின்மூன்று திறமை மிக்க மனிதர்களால், கூட்டு மந்திரிசபையில் எவ்வளவு தீமைகள் ஏற்படுத்த முடியுமோ, அவ்வளவையும் சாதித்துக் காட்டினார்கள். காமன்ஸ் சபையில், பீல் ஆதரவாளர்களின் தொகை 30; விக்குகள் 120; 'ரேடிகல்'கள் 150; பீல் ஆதரவாளர்களின் தொகை சிறியதாக இருந்தபோதிலும், எப்படியோ மந்திரிசபையில் ஆறு இடங்களை கைப்பற்றினர். ரஸ்ஸல் பிரதம அமைச்சராகச் சமீப காலத்தில் வரமுடியும் என்ற உறுதிமொழியை வாங்கிக்கொண்டார் என்று தெரிந்தவுடன் அவருடைய கட்சி வேதனைப்பட்டது. பால்மர்ஸ்டன் லேன்ஸ்ட்ஸோனின் கன்சர்வேடிவ் மந்திரிசபையில் இருக்க விரும்பியிருக்கலாம். ஆனால், வெளிவிவகாரங்கள் மிகவும் துரிதமாக மாறிக்கொண்டிருந்ததால், அவரை மீண்டும் உள்துறையிலிருந்து வெளிவிவகார இலாகாவுக்குக் கொண்டு வந்தார்கள். அபர்டீனுக்கு, இவர்களுடைய கோஷ்டியைச் சமாளிப்பது சிறிது கடினமாக இருந்தது. சில முக்கியமான பிரச்சினைகளில், கேபினட்டில் ஒருமைப்பாட்டைக் கொண்டுவர அவரால் முடியவில்லை. இரண்டு ஆண்டுகளில் இந்தக் கூட்டு மந்திரிசபை கவிழ்ந்துவிட்டது. அடுத்து நிகழ்ந்த போரில், ஒரு கட்சியினர் தங்களுடைய செல்வாக்கை அடியோடு இழந்துவிட்டனர்.

சமாதான காலத்தில் அவர்கள் சாதித்தவையெல்லாம் கிளாட்ஸ்டனுடைய சாதனைகளே என்று கூறலாம். அவருடைய அறிவும் ஆற்றலும், முன்னேற்றவாதிகளையும் சமயவாதிகளையும் ஒருங்கே கவர்ந்து வெற்றியளித்தன. மேலும், அவரை 1854-ல் பல்கலைக்கழகச் சட்டத்தை இயற்றத் தூண்டின. இந்தப் பல்கலைக்கழகச் சட்டத்தால், மாறுபட்ட இரு கருத்துகளில் போராடிக்கொண்டிருந்தவர்களிடையே ஒரு சமரசம் ஏற்பட்டது. ஆக்ஸ்ஃபோர்டிலுள்ள ஸ்டான்லி, ஜோவெட் ஆகியோரும் பல்கலைக்கழகத்தினுள் மாற்றங்கள் வேண்டுமென்று வற்புறுத்தி வந்த ஹென்றி ஸெட்ஜ்விக் என்ற கேம்பிரிட்ஜை சார்ந்தவரும் இந்தச் சட்டத்திற்கு ஆதரவு அளித்தார்கள். மேல்படிப்பைப் பொறுத்த வரையிலும், இந்தச் சட்டத்தின் பகுதிகள் மிகவும் புரட்சிகரமானவை. சில ஆசிரியர்களின் நியமனங்களும் உபகாரச் சம்பளங்களும் தகுதியற்றவை என்று தெரிந்ததால் அவைகள் நிறுத்தப்பட்டன. பல்கலைக்கழகங்கள்

இனிமேல் அங்கேயே வசிக்கின்ற ஆசிரியர்களால் நிர்வகிக்கப் படுமென்றும், ஏழை மாணவர்கள் படிப்பதற்கேற்ற இட வசதிகளும் செய்து தரப்படும் என்றும் கூறப்பட்டது. மாணவர்கள் சமயத் துறவிகளாக்கப்படுவது பெரும்பாலும் குறைந்தது. அரசாங்க நியமனங்களுக்குப் பதிலாக, தனிப்பட்ட கமிஷன் மூலமாகவே அதிகாரிகள் நியமனம் செய்யப்படுவார்களென்றும் அதற்கென்று தேர்வுகள் நடைபெறும் என்றும் கிளாட்ஸ்டன் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார். 1855-லிருந்தே இந்தத் திட்டம் அடிபட்டு வந்தது. ஆனால், ரஸ்ஸல் இந்தத் திட்டம் வெற்றி பெறுவதற்குப் பெரும் தடையாக இருந்தார். இதைவிட 1853-ல் கிளாட்ஸ்டன் கொண்டுவந்த வரவுசெலவுத் திட்டமே, அவரை மிகத் திறமைமிக்க மந்திரிகளின் வரிசையில் இடம்பெறச் செய்தது.

அக்கால மக்களின் எண்ணங்களுக்கேற்பவும், பீல் நிதி முறையின் முத்திரையுடனும் அவருடைய வரவுசெலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டது. தடைகள் நீக்கப்பட்டன; வாழ்க்கை வசதிகள் எளிதாகப் பெற வசதிகள் செய்துதரப் பட்டன; வருவாய், அதிக மக்களிடம் வசூலிக்கப்படும் வழிகளும் செய்யப்பட்டன. 140 தீர்வைகள் ரத்துச் செய்யப்பட்டன; 160 தீர்வைகளில் குறைப்பு ஏற்பட்டது. சோப்பு, காகிதம் ஆகிய வற்றின்மீதிருந்த கலால் வரிகள் எடுக்கப்பட்டன. தேயிலை, ஆயுள் இன்ஸ்யூரன்ஸ்மீதிருந்த வரிகள் குறைக்கப்பட்டன. பெரும் வருவாயுள்ளவர்களிடத்திலிருந்துமட்டும் வருமான வரி வசூல் செய்யவேண்டுமென்ற பீலின் கொள்கையை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில், அவ்வித வரிவிதிப்பினால் வசூல் செய்வதும், அரசாங்க வீண் செலவுகளும், வரி கொடுக்காமல் ஏமாற்றுதலும் அதிகமாயின. கிளாட்ஸ்டன் இந்த வரியை அவசர காலத்திற்குமட்டும் பயன்படுத்துவதென்ற நோக்கத்தி லிருந்தார். எனினும், குறைந்த அளவில் 7 பென்ஸ் வரியாக விதித்தால் வசூலிப்பதும் எளிதாகும் என்பதுமட்டுமன்றி, ஏழாண்டுகளில் இந்த வரியை எடுத்துவிடுகின்ற சாத்தியக் கூறு களையும் அறிவித்தார். ஆனால், முதன்முதலாக அயர்லாந்துக்கும் இந்த வரி விஸ்தரிக்கப்பட்டது. அடுத்த இருபது ஆண்டு களுக்கும் இதே கொள்கைகளை அவர் பின்பற்றினார். கிரிமியப் போரின் காரணமாக இந்த வரி இரட்டிப்பாகியது.

கிரிமியப் போர் தேவையற்றதும், நல்ல விளைவுகளை பிரிட் டனைப் பொறுத்தவரையிலும் ஏற்படுத்தவில்லை என்று கூறுவதில் கிளாட்ஸ்டன் நம்பவில்லை. இந்தப் போர் ஐரோப்பியப் பொது முறையையொட்டி செய்யப்பட்ட போராகும்; இதை மக்கள்

அதிகமாக விரும்பினார்கள் என்றும் அவர் கூறினார். அபர்டீன் இவ்விதச் சூழ்நிலையில், போரில் இறங்கியிருக்க மாட்டார் என்றும், அல்லது பால்மர்ஸ்டன் இந்தச் சூழ்நிலையில், ரஷ்யாவைப் பின்வாங்கச் செய்திருப்பார் என்றும் கூறுவதில் பொருளில்லை. ஆனால், ஒரு வகையில் பிரிட்டன் 'தவறான குதிரைமீது பந்தயம் கட்டிவிட்டார்கள்' என்று சொல்வதும், அல்லது அடுத்த இருபது ஆண்டுகளில் துருக்கி, தன் பேரரசில் இருக்கின்ற ஸ்லாவ் மக்களுக்கும், கிரேக்க மக்களுக்கும் உறுதி கூறியபடி அவர்களுடைய குறைகளைத் தீர்க்க முன்வரவில்லை என்று கூறுவதும், கேள்வியைக் கேட்டு அதிலேயே பலமுறை பதிலையும் சொல்லுவதுபோலாகும். இதையொட்டி நூறு கேள்விகளைக் கேட்கலாம். எடுத்துக்காட்டாக, பிரிட்டன் நடுநிலைக் கொள்கையைப் பின்பற்றியிருந்தாலும், வேறு ஏதாவது போர் அப்பொழுது ஏற்பட்டிருக்கக்கூடாதா? அல்லது, அந்தச் சமயத்தில் கான்ஸ்டான்டிநோபிளின் கதி என்னவது?—1913-ல் பால்கன் நாடுகள் சுதந்திரம் பெற்றது ஏன்? அறுபது ஆண்டுகளுக்கு முன்பே அவ்விதச் சுதந்திரத்தைப் பெற்றிருக்கலாகாதா? என்ற பல கேள்விகளைக் கேட்டனர்.

1848-51 வரை ஏற்பட்ட புரட்சி இயக்கம் கடைசியில் பிற்போக்குவாதிகளுக்கு இடமளித்துவிட்டது. இத்தாலிய இயக்கங்கள் ஒடுக்கப்பட்டன; ஜெர்மனியின் லிபரலிசம் முறிந்தது; ஜெர்மனியை அமைக்கும் வாய்ப்பை பிரஷ்யா இழந்தது; ஸ்கெலஸ்விக்-ஹோல்ஸ்டின் பிரச்சினையில் ஜெர்மன் வெற்றி பெறத் தவறியது. ஃபிரான்சின் இரண்டாவது குடியரசு, அதனுடைய கட்சிப் பிரிவுகளாலேயே அழிந்துவிட்டது. லூயி நெப்போலியன் 1851-ல் ஃபிரெஞ்சு ஜனாதிபதியாகவும், 1852-ல் பேரரசராகவும் பதவியேற்றார். இதைத்தவிர, ஹங்கேரியர்களின் கிளர்ச்சியை ஒடுக்க ஆஸ்திரியர்களுக்கு ஃஸார் நிக்கோலஸ்-I உதவி செய்தார். அதைப்போன்றே போலந்து மக்களின் கிளர்ச்சியையும் அடக்கினார். டேனிஷ் மக்கள்மீது தாக்குதல்கள் நடத்தக்கூடாதென்று ஜெர்மனிக்கு எச்சரிக்கை செய்தார். பாரசீக அரசனை அவர் ஆட்டிவைத்தார்; பாரசீகத்தின்மீதும், ஆப்கனிஸ்தானத்தின்மீதும் கட்டாயத்தை ஏற்படுத்தினார். துருக்கியில் உள்ள கிறித்துவ மக்கள்மீது பரிவு காட்ட எந்த வாய்ப்பையும் அவர் இழக்கவில்லை. ஆனால், 1841-ல் பால்மர்ஸ்டனின் வெற்றி அவருடைய செல்வாக்கை மிகவும் பாதித்தது. அரச பரம்பரைக்கே, லூயி நெப்போலியன் இழுக்கு என்றும், ஃபிரெஞ்சு நலன்களைத் துருக்கியில் மீண்டும் ஏற்படுத்திவிடுவாரோ என்றும் அவர்மீது பால்மர்ஸ்டனுக்கு பயம் இருந்தது.

யெருசலேம், பெத்தானி என்ற புனித இடங்களில் கத்தோலிக்க மதகுருமார்களும், கிரேக்கத் துறவிகளும் கோபமான கோரிக்கைகளை விடுத்தும், பல கருத்து வேறுபாடுகளை ஏற்படுத்தியும் 1853-ல் சண்டையிட்டனர். நிக்கோலஸ் ஏற்கெனவே 1844-ல் இதைப்போன்ற பிரச்சினையில் தலையிட்டு அவருடைய உறுதியான கருத்தினைத் தெரிவித்திருந்தார். அப்பொழுது பீலின் வெளிநாட்டு மந்திரியாக அபர்டீன் பதவியில் இருந்தார். அபர்டீன் இந்த விவகாரத்தில் மௌனம் சாதிக்கவே, அவர் சம்மதித்துவிட்டார் என்று ரஷ்யர்கள் நினைத்தனர். இப்பொழுது நிக்கோலஸ் 'துருக்கிக் கரடி இறந்து வருகிறது. அந்தத் தோலை எப்படிப் பங்கிடுவது?' என்ற வினாவை எழுப்பினார். ருமேனியர்களும், ஸெர்பியர்களும்,பல்கர்களும் அவருடைய ஆதரவில் சுதந்திரம் பெற்றால் என்ன? அதைப்போன்றே பிரிட்டன், கிரீட்டையும் எகிப்தையும் கைப்பற்றினால் என்ன? இவ்விதமான சிக்கலான கேள்விகளுக்கு அபர்டீன் பதிலுரைத்து அகப்பட்டுக் கொள்ள விரும்பவில்லை. இந்த முறையை எல்லா ஆங்கிலேய மந்திரிகளும் வழக்கமாகப் பின்பற்றி வருவதேயாகும். ஆனால், எல்லா வல்லரசர்களும் வழக்கமாகச் செய்வதைப்போல குறிப்பிட்ட பிரதம அமைச்சர், மேலும் அவர் அமைதியை விரும்புகிறவராக இருந்தால், கேபினட்டையும் மக்களையும், எளிதில் நம்ப வைக்கலாம் என்ற தவறான கருத்தினைக் கொண்டிருந்தார். ஃஸார் உண்மையில் போரை விரும்பவில்லை. ஆனால், பலமான பொய்யுரைகளைக் கட்டிவிட்டு, போரின் நன்மைகளைப் பெறலாம் என்ற எண்ணத்தில் இருந்தார். அதனால், அவர் போருக்கான முதல் நடவடிக்கையை எடுத்தார். பின்பு, பின்வாங்குவதென்பது கடினமாகிவிட்டது.

பிப்ரவரி 1853-ல், அவருடைய தூதுவர் மென்ஷிகோ இளவரசன், கான்ஸ்டான்டிநோபிளுக்குள் மிகவும் ஆடம்பரமாகவும் ரஷ்யாவின் ஆயுத பலத்தை உணர்த்தும் முறையிலும் சென்று, துருக்கி சுல்தான்மீது பல குற்றச்சாட்டுகளைச் சுமத்தினார். வெளிநாட்டு மந்திரியை உடனடியாக விலக்கவேண்டுமென்றும், புனித இடங்களில் வசித்துவரும் வைதீகக் கிறித்துவர்களுக்கு உரிமைகளும், துருக்கியிலுள்ள பன்னிரண்டு கிரேக்கக் கிறித்துவ இனத்தினரையும் ரஷ்யா பாதுகாக்கும் உரிமையும் வேண்டுமென்று வற்புறுத்தினார். ஃபிரான்சிற்கு விரோதமாக ஓர் இரகசிய உடன்படிக்கை ஏற்படுத்தவேண்டுமென்ற ஒரு நிலையை உருவாக்கினார். இந்த நிபந்தனைகளெல்லாம் நிராகரிக்கப்படவே, மே மாதத்தில் நிக்கோலஸ் தமது துருப்புகளை இப்பொழுது ருமேனியாவாக இருக்கின்ற பகுதிகளின்மீது தாக்க அனுப்பி

வைத்தார். ஆனால், அக்டோபர் வரையிலும் துருக்கி போரில் இறங்கவில்லை. மார்ச் 1854 வரையிலும் பிரிட்டன், ஃபிரான்ஸ் போரில் இறங்கவில்லை.

இதற்கிடையே, மக்கள் மனத்தைப் போர்மயமாக்கும் வழக்கமான வெறி ஊட்டப்பட்டது. அது சாதாரணமாக நடைபெறும் ஒரு நிகழ்ச்சியே. ஸ்டிராட்ஃபோர்ட் டி ரெட்கிளிஃப் என்ற பிரபு (Lord Stratford De Redcliffe) 1853-ல் நமது ராஜீய தூதுவராகக் கான்ஸ்டான்டிநோபிளுக்குச் சென்றார். அவர் ஏற்கெனவே உதவித் தூதுவராக 1808-லிருந்து பணியாற்றியிருக்கிறார். பின்பு 1841–52-ல் பிரதம தூதுவராகவும் இருந்திருக்கிறார். ரஷ்யாவின் ஆக்கிரமிப்பு ஏற்படாதவண்ணம், அவர் துருக்கியில் பல உள்நாட்டுச் சீர்திருத்தங்கள் செய்வதற்குக் காரணமாக இருந்தார். சீர்திருத்தங்கள் கொண்டுவரத் தவறினால் தண்டனையாக ரஷ்யாவின் ஆக்கிரமிப்பை வரவேற்கவேண்டியிருக்கும் என்பதை அவர் உணர்ந்துதான் இருந்தார். அங்கே அமைதியைக் காப்பதற்கு அவர் காலதாமதம் செய்தார். உண்மையில், நெருக்கடியான இந்த நேரத்தில் ஜலசந்தியில் உடனடியாக ஆங்கிலேயக் கடற்படையைத் தருவித்துக்கொள்ளும் அதிகாரம் அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தும், அவர் அதிகமான காலதாமதத்தைச் செய்துவிட்டார். ஆனால், அவர்மீது குற்றம் சாட்டுவதைவிட, அவ்விதப் பொறுப்பு, ஆங்கிலேயக் கேபினட், மக்கள், பத்திரிகைகளிடம்தான் இருந்ததே தவிர, அவரிடம்மட்டும் அதைக் காண்பது முறையன்று. சிலர் ஃபிரான்சின்மீது குற்றம் சாட்டினர். பேரரசைவிட, அவருடைய மந்திரிகள், ஆங்கிலேயக் கேபினட் முடிவு செய்வதற்கு முன்பு முடிவு செய்யவேண்டுமென்று கோரினர். ஆஸ்திரியாவும் தன் பொறுப்பைத் தட்டிக் கழித்துவிட்டதென்றார்கள். ரஷ்யா, துருக்கிப் பகுதியில் நுழையாதபடி, அருகிலுள்ள ஆஸ்திரியா சரியாக கவனித்திருக்க வேண்டும் என்று கூறினர். இவை விட்டுவிட்டு, பொறுப்பை மேற்கு வல்லரசுகளுக்கு மாற்றிவிட்டது, உண்மையில் ரஷ்யாவிலும் துருக்கியிலும் போர் வெறி ஏற்பட்டுவிட்டதற்குக் காரணமாகிவிட்டது.

ஜூன் 1853-ல் ரஷ்யத் துருப்புகள் துருக்கியின் எல்லையினுள் நுழைந்தவுடன், ஜலசந்திக்கு வெளியே உள்ள 'பெஸிகா பே' (Besika Bay) என்ற வளைகுடாவிற்கு ஆங்கிலேயக் கடற்படை அனுப்பப்பட்டது. ஆனால், பால்மர்ஸ்டனும், ரஸ்ஸலும், அப்படை நேராக கான்ஸ்டான்டிநோபிளுக்கே சென்றால் நல்லது என்று கருதினார்கள். இதற்கிடையே வல்லரசுகளில் 'வியன்னா

குறிப்பை' துருக்கி ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. துருக்கி செய்தது சரியே. ஏனெனில், கிறித்துவ மக்களின் பாதுகாப்பைக் கோரும் ரஷ்யத் திட்டங்கள் இன்னும் கைவிடப்படவில்லை. இதையொட்டி வெளிநாட்டு மந்திரி கிளாரண்டன் பசிபிக்கிலிருந்து அவசரமாக வந்தார். அபர்டீனும், உடனடியான முடிவு எடுக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். அக்டோபர் மாதத்தில், ஆஸ்திரியா சமரசம் செய்து வைப்பதாக முன் வந்தது. ஆனால், அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அதே மாதத்தில் 'நேரோஸ்' வழியாக பிரிட்டிஷ் கடற்படை அனுப்பப்பட்டது. அப் படை கருங்கடலுக்குள் உடனடியாக நுழையவேண்டுமென்று பால்மர்ஸ்டன் கருதினர். ஆனல், அவருடைய ஆலோசனை நிராகரிக்கபபட்டது. 22 அக்டோபரில் துருக்கியர்கள் டேன்யூப் பகுதியில் முன்னேறித் தாக்கினர். 30, நவம்பரில் ரஷ்யர்கள் ஸினேப்பில் (Sinope) துருக்கியக் கப்பற்படையை அழித்தது. இதற்குப் பிறகு, ஆங்கிலேயப் பொது மக்களின் கருத்து, போர் வெறியை அதிகமாகத் தூண்டியது. துருக்கியைப் பாதுகாக்கவேண்டுமென்ற எண்ணம் இப்பொழுது தான் வந்தது. பால்மர்ஸ்டன் இந்தக் கருத்தை ஆறு மாதத்திற்கு முன்னலேயே சொன்னர். ஆனல், இந்த நெருக்கடியான சமயத்தில், பொறுமைபிடித்த ரஸ்ஸல், மிகவும் எதிர்பாராத விதமாகப் புதிய சீர்திருத்த மசோதாதைக் கொண்டுவந்து, பால்மர்ஸ்டனை ராஜிநாமா செய்யும்படி வைத்துவிட்டார். அவர் இந்த நெருக்கடியான சூழ்நிலையில் ராஜிநாமா செய்வதற்கான காரணங்களை அறிந்த பத்திரிகையாளர்கள் மிகவும் தாக்கி எழுதினர். அவர் மீண்டும் பதவிக்கு வந்தார். பத்திரிகையாளர்களின் கட்டாயத்தாலும் ஃபிரான்சின் கட்டாயத்தாலும் பிரிட்டிஷ் கப்பற்படை கருங்கடலுக்குள் நுழைந்தது. செபாஸ்டபூலிலிருந்து செல்லும் எல்லா ரஷ்யக் கப்பல்களையும் நிறுத்தச் சொல்லி பிரிட்டிஷ் கடற்படை அதிகாரிகளுக்கு உத்திரவிடப்பட்டது. மற்றுமொரு சமாதான முயற்சி அப்பொழுது எடுக்கப்பட்டது. ஆனல், நிக்கோலஸ் அவர் ஆக்கிரமித்த பகுதிகளைக் காலிசெய்ய முடியாதென்று கூறியதால், மார்ச் 1854-ல் போர் தொடங்கியது.

நமது பொறுப்பு என்னவாக இருப்பினும். தனிப்பட்ட வீரத்தைக் காட்டுவதைத் தவிர, இந்த நிகழ்ச்சி வரலாற்றில் எந்தவிதமான முக்கியத்துவத்தையும் அளிக்கவில்லை. முதல் தடவையாகப் பத்திரிகையாளரும் படையைப் பின்பற்றிச் சென்றனர். ஆனல், படையில் போரிடுவதற்கான ஆயத்தம் செய்யவில்லை என்று கண்டு அதிர்ச்சியுற்றனர். இராணு

நிர்வாகம் போர்த் துறையைப் பார்த்துவந்த அரசாங்கச் செயலாளரிடத்திலும் மற்றும் காலனிகள் நிர்வாகத்தைப் பார்க்கும் செயலாளரிடத்திலும் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. போர்க் காரியதரிசி, நிதித்துறைக் காரியதரிசி, படைத் தலைவர், உள்துறைக் காரியதரிசி, உள்நாட்டு இராணுவத்தையும், காவலர் படையையும், ஆயுதக் கிடங்குகளையும் பார்த்துக் கொள்வதற்கு ஒரு தனி அதிகாரியான மாஸ்டர்-ஜெனரல் ஆஃப் தி ஆர்ட்னன்ஸ் (Master-General of the Ordnance) நியமிக்கப்பட்டிருந்தார். பாராளுமன்றமும் பொருளாதாரவாதிகளும் படையை அதிகமாகப் புறக்கணித்து விட்டனர். ஒரு தனிப்பட்ட சிப்பாயின் சம்பளம் அப்பொழுது நாளொன்றுக்கு ஒரு ஷில்லிங்வீதம் இருந்தது. பல கழிவுகளுக்குப் பிறகு அவனுக்கு மூன்று பென்ஸ் மட்டும்தான் கிடைத்தது. சிப்பாய்கள் தங்கும் இடங்கள் மிகவும் இழிந்ததாகவும் சுகாதார வசதிகள் இல்லாமலும் இருந்தது. அங்கே போதிய உணவு வசதியில்லை. அங்கு நோய் அதிகமாகப் பரவியிருந்தது. உண்மையில் பொதுமக்கள் இறக்கும் விகிதத்தைக் காட்டிலும் இருமடங்கு காலாட்படையில் அதிகமாகக் காணப்பட்டது. படைவீரர்கள் ஆயுட்காலம் முழுவதும் சேவை செய்ய அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திற்குச் சேவை செய்யவேண்டும் என்ற விதி இருந்தது. ஆனால், பதினைந்து ஆண்டுகள் சேவைக்குப் பிறகு இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றனர். இங்கிலாந்தில் 65,000 இராணுவ வீரர்களும், காலனிகளில் 40,000 இராணுவ வீரர்களும், இந்தியாவில் 30,000 இராணுவ வீரர்களும் சேவை செய்து வந்தனர். பதினான்கு படைகள் இந்தியாவில்மட்டும் பதினைந்து ஆண்டுகளாக நீடித்து வைக்கப்பட்டிருந்தன. போர் வீரர்களின் நலன்களைப் பாதுகாக்கச் சிறு முயற்சிகள் எடுக்கப்பட்டன. கசையடிகள் ஐம்பதிற்கு மிகாமல் இருக்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டது. போர் வீரர்களின் நலன்கள் சரியாகவே பாதுகாக்கப்படவில்லை.

1852-ல் இயற்றப்பட்ட இராணுவச் சட்டம், ஒரு சிறிய உதவிப்படையை வைத்துக்கொள்ள அனுமதியளித்தது. ஒரு ஆண்டிற்குள் மூன்றுவாரப் பயிற்சி, அப் படையில் சேர்ந்தவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. பழைய பிரவுன் பெஸ் துப்பாக்கிக்குப் பதிலாக (Brown Bess musket), சிறு அளவில் புதிய மினி துப்பாக்கி (Minie rifle) போர் வீரர்களுக்குக் கொடுக்கப்பட்டது. துப்பாக்கிகள் மிகக் குறைவாக இருந்ததால், துப்பாக்கிச் சுடும் பயிற்சி குறைக்கப்பட்டது. அதைவிட, அவர்களுக்குப் போர்க்களப் பயிற்சியே தரப்படவில்லை. வாட்டர்லூவுக்குப் பிறகு,

நீண்டகாலமாக அவர்கள் போர்க்களத்தையே பார்க்கவில்லை. தலைமைப் பதவிகளில் வயதுவந்த அதிகாரிகள் அதிகமாக இருந்தனர். அறுபத்து ஆறு வயதுடைய ராக்லான் (Raglan) என்பவர் கிரிமியாவுக்குச் செல்லும் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றார். அவர் போர்க்களத்தைப் பார்த்து நாற்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. பலர் பணம் கொடுத்து இராணுவக் கமிஷன் பதவிகளைப் பெறுவதால், குதிரைப் படை, காலாட் படையில் பணிபுரிகின்ற போர் வீரர்கள் முன்னேறவே வழியில்லாது போய்விட்டது. இராணுவத்திற்குப் பொருள்களை விநியோகம் செய்யும் பொறுப்பு கான்ட்ராக்டர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. பட்டாளத்திற்குத் தரப்படும் உடை மிகவும் பொருத்தமில்லாதிருந்தது.

இவ்விதமான குறைபாடுகள் கடற்படையிலும் இருந்தன. ஆனால், கடற்படையினர் அநேகமாக சேவை செய்துகொண்டே இருந்தனர். அதனுடைய நிர்வாகத்தையும் கிரஹாம் சிறிது சீர் திருத்தினர். பாராளுமன்றத்தின் சிக்கன நடவடிக்கைகளினால், பல அதிகாரிகளுக்குப் பதவி உயர்வு தராது அரைச் சம்பளத்திலே வைத்திருந்தனர். பால்டிக் படைக்குத் தலைமை தாங்கிச் சென்ற சார்லஸ் நேபியர், ராக்லானைப் போல வயதானவரே யாவர். மேலும், பாய்மரக் கப்பல்கள் நீராவிக் கப்பல்களாக மாறிவிட்டன. 'கிரிமியப் போரில், கடற்படையின் பங்கு மிகவும் குறைவாகவே இருந்தது. ஏனெனில், கரை ஓரம் செல்கின்ற சிறு போர்க் கப்பல்கள் அவர்களிடம் இல்லை. மேலும், கரையைச் சுற்றி அமைந்திருக்கும் கோட்டைகளிலிருந்து துப்பாக்கிகள் மூலமாகத் தாக்கும்பொழுது, கப்பல்படை பயனில்லாது போய் விடுகிறது.

ரஷ்யர்கள், ஆக்கிரமிப்புப் பகுதிகளிலிருந்து வெளியேறுவதற்கு முன்பாகவே, ஃபிரெஞ்சு, பிரிட்டிஷ் அரசாங்கங்கள் அவர்களுடைய, தயங்கிக்கொண்டிருந்த படைத்தலைவர்களைக் கிரிமியாவை உடனடியாகத் தாக்கவேண்டுமென்று கட்டாயப் படுத்தின. பத்திரிகையாளர்களும் அவர்களை ஆதரித்து எழுதினர். இவர்களுடைய முடிவு ஓர் அபாயமான முடிவாகும். கடற்படையினால் சபாஸ்டபூலை ஒன்றும் அசைக்கமுடியாத நிலை இருந்தது. எதிரிகள் பலம் தெரியாது அவசரப்பட்டு அவர்களிடம் மோதுவதுமட்டுமன்றி, ரஷ்யாவின், கொடும் பனிக்காலத்தையும் அவர்கள் எதிர்க்கவேண்டியிருந்தது. மேலும், போக்குவரத்துக்காக ஒரு படை அவசியம் வேண்டுமென்று ராக்லான் கேட்டிருந்தார். ஆனால், போர்க் காரியாலயம் அதை நிராகரித்து விட்டது. அவருடைய துருப்புகள் பல்கேரியாவில் நிறுத்தப்பட்

டிருந்தபொழுது வீரர்கள் நோய்வாய்ப்பட்டு மிகவும் பலவீன மடைந்தனர். ஆனால், அவருடைய படைகள் செப்டம்பர் மாத நடுவில் யூபடோரியா(Eupatoria) வளைகுடாவில் இறங்கின. இது செபாஸ்டபூலுக்கு வடக்கே இருக்கிறது. ஆல்மா நதியின் தெற்கு பாகத்தில் நிறுத்தப்பட்டிருந்த எதிரிப் படைகளைக் கடுமையாகத் தாக்கின. அப் படைகள் வேகத்துடன் தாக்கி, முன்னேறியிருக்க முடியும். ஆனால், ஃபிரெஞ்சுக்காரர்கள், ராக்லானின் வேகத்தைத் தடுத்துவிட்டார்கள். அடுத்த வாரம் அவர்களுக்குப் பெரிய நெருக்கடியை ஏற்படுத்திவிட்டது. இந்த நகரத்திற்குத் தெற்கேயுள்ள பகுதியைக் கைப்பற்றுவதற்காக நேசப்படைகள் அணிவகுத்துச் சென்றன. ஆங்கிலேயர்களின் தளம், பாலக்லாவா என்ற மோசமான ஒரு துறைமுகத்தில் அமைக்கப்பட்டது. இத் துறைமுகப் பகுதி, ரஷ்யர்களின் தாக்குதல்களுக்கு மிக அருகில் அமைந்திருந்தது. அப் பகுதியை ரஷ்யர்கள் கிழக்கிலிருந்து முற்றுகையிடவும், பின்பு அவர்களுடைய முற்றுகைக்குப் பாதுகாப்பான பெரும்படையைப் பின்னால் அமைத்துக்கொள்வதற்கும் வசதியாக இருந்தது.

செபாஸ்டபூலைக் காப்பதற்காக, ரஷ்யர்கள் இரண்டு முயற்சிகளைச் செய்தனர். அக்டோபர் 25ஆம் தேதியன்று ரஷ்யர்கள் பாலக்லாவாமீது திடீரென்று தாக்கினார்கள். இத் தாக்குதல்களைத் தடுத்து நிறுத்த மேட்டுப்பாங்கான இடத்தில் அமர்த்தியிருந்த காலாட்படை வரவேண்டியிருந்தது. அதுவரையிலும் நமது குதிரைப்படையினர் ரஷ்யர்களைத் தடுத்து நிறுத்த மிகவும் தீவிரமாகப் போராடினர். மேட்டு நிலத்திலிருந்து, காலாட்படை, இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து இலேசான ஆயுதம் தாங்கிய கார்டிகன் படையும், கனமான ஆயுதம் தாங்கிய ஸ்கார்லட் படையும் ரஷ்யர்களைத் தாக்கின. கனமான ஆயுதம் தாங்கிய படையின் தாக்குதல் எதிரிப்படைகளை முறியடித்து சிறப்பான வெற்றியைப் பெற்றது. ஆனால், மற்றொரு படையில், உத்திரவுகளைத் தப்பிதமாகப் புரிந்துகொண்டு, பெரிய குழப்பத்தை ஏற்படுத்திவிட்டனர். நன்றாகப் போரிட்டும், அவர்களுடைய அழியாத தைரியத்தைத்தான் நிலை நாட்ட முடிந்ததே தவிர, மற்ற எந்த வகையிலும், இந்தத் தாக்குதல் சிறப்பைத் தேடிக் கொடுக்கவில்லை. கடற்கரையிலுள்ள படைக்கு எந்த விதமான செய்தியையும் அனுப்ப முடியாமல் ரஷ்யர்கள் செய்துவிட்டார்கள். மற்றும் நவம்பர் 5ஆம் தேதியன்று இங்கர்மேன் நகரத்திற்கு வடகிழக்கில் பலமாகத் தாக்க ஆரம்பித்தனர். பனி மூடிய இந்தக் காலை நேரத்தில் தொடங்கிய தாக்குதல், மிகவும் மிருகத்தனமாகவும் மூர்க்கத்தனமாகவும் நடந்தது.

அரும்பாடுபட்டு, ஆங்கிலேய ஃபிரெஞ்சு படைகளிடையே செய்திகளை அனுப்ப வழி செய்தன. நடைமுறையில் இரு படையினரும் பல தவறுகளைச் செய்தனர். இறுதியில் பலத்த நட்டத்திற்கிடையே, ரஷ்யாவின் தாக்குதலை முறியடித்தனர். ஆனால், பனி அவர்களை எதிர்நோக்கியிருந்தது.

பாலக்லாவாவிலிருந்து போர் முனைக்குச் செல்வது அவ்வளவு கடினமாக இருந்தது. எட்டுமைல் தூரம்தானென்றாலும், அவர்கள் போக்குவரத்துச் சாதனங்களில்லாமலும் மற்றும் பல தொல்லைகளினிடையிலும் போர் முனைக்குச் சென்றனர். அவர்கள் பட்ட வேதனை அளவிட முடியாததாகும்; போதிய உணவு இல்லை. பன்றிக் கருவாடும், பிஸ்கத்தும்தான் அவர்களது உணவு. பள்ளங்களில் நாட்கணக்கில் ஒளிந்திருப்பதால் உடலெல்லாம் பனியால் உறைந்துவிட்டது. இவ்வளவு தொல்லைகளில் போர் வீரர்களுக்கு வயிற்றுக்கடுப்பு, காலரா, நிமோனியா என்ற நோய்கள் பிடித்து அவர்களை வாட்டின. அதிக அளவில் போர் வீரர்கள் உயிரிழந்தனர். அவர்களுக்குப் பதிலாக பதினாறு வயது பையன்களைப் பட்டாளத்தில் சேர்த்துக்கொண்டனர். இப்படிச் செய்தது மூன்றாவது ஜார்ஜ் காலத்தில் ஜெர்மன் கூலிப் பட்டாளத்தைச் சேகரித்தது போன்றிருந்தது. 1855 ஆரம்பத்தில் நோய்வாய்ப்பட்டவர் தொகை போர்முனையில் இருந்தவர்களை விட மிகவும் அதிகமாக இருந்தது. நோய்வாய்ப்பட்டவர்களைக் கவனிக்கச் சரியான வசதிகள் அங்கேயில்லை; வேண்டிய மருந்துகள் இல்லை; சுகாதார வசதிகளோ, அல்லது மருத்துவ உதவியாளர்களோ இல்லை. இந்த நிலையில் ஏன் நோய்வாய்ப்பட்டவர்கள் சாகமாட்டார்கள்? இதற்கெல்லாம் காரணம் பட்டாளத்தைப் பாராளுமன்றம் மிகவும் அலட்சியப்படுத்திவிட்டதுதான் என்று கூறப்பட்டது. மேலும், மேலிடத்து நிர்வாகத் தேக்கம்; போர் ஏற்படாது என்ற ஆங்கிலேயரின் மனநிலை; ஆகியவையெல்லாம் சேர்ந்து பட்டாளத்தைக் கவனிக்காது விட்டு விட்டனர்.

செப்டம்பர் 1855-ல் செபாஸ்டபூலைக் கைப்பற்றிய பிறகு, இந்த மோசமானநிலை சிறிது மாறியது. ஃபிரெஞ்சுப் பட்டாளத்தைவிட நமது பட்டாளம் எண்ணிக்கையில் குறைந்திருந்தது. எனினும், நமது படையில் உள்ள போர் வீரர்கள் எண்ணிக்கை 60,000-க்கு உயர்ந்தது. அவர்களிடையே புதிய நம்பிக்கை ஏற்பட்டது. இராணுவம் விரைவாகச் செல்வதற்கான நல்ல சாலைகள், ரெயில்வே, போக்குவரத்தைக் கவனிக்க ஒரு பட்டாளம், புதிய என்ஃபீல்ட் துப்பாக்கி, இராணுவச் சீர்திருத்தங்கள் ஆகியவையெல்லாம் கொண்டுவரப்

பட்டன. இந்தப் போரை நல்லவிதமாக நடத்த, போர்த் துறைச் செயலாளர், காலனி நிர்வாகத்திலிருந்து விடுவிக்கப் பட்டு, இப்பொழுது வெறும் போர் நடவடிக்கைகளைமட்டும் கவனிக்கின்ற வேலை கொடுக்கப்பட்டது. இந்த நடவடிக்கை சிறிது காலம் கடந்து செய்யப்பட்டதென்றாலும், இப்பொழு தாயினும் செய்யப்பட்டதே என்ற திருப்தி ஏற்பட்டது. போர்த் துறைச் செயலாளருக்கு, நிதி, இராணுவம், ஆயுதத் தளவாடங்களைக் கவனிக்கும் பொறுப்புத் தரப்பட்டது. ஃபிளா ரன்ஸ் நைட்டிங்கேல் போர்முனைக்குச் சென்று, அங்கே ஸ்கூட்டாரி (Scutari) என்ற வைத்தியசாலையில் உள்ள நோய் வாய்ப்பட்ட போர்வீரர்களுக்குப் பல இன்னல்களிடையே பணி புரிந்தார். இவளுடைய சேவை பொதுமக்கள் எடுத்துக் கொள்ளவேண்டிய பொறுப்பையும், செவிலியர் சேவையின் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்டின.

பனிக்காலத்தில் ஏற்பட்ட தோல்வியும், அதனுடைய கொடுமையும் இங்கிலாந்தில் அபர்டீன் அரசாங்கத்தைக் கவிழ்த்துவிட்டது. இதற்கு முன்பே, ரஸ்ஸலின் பொறுமையும், பால்மர்ஸ்டனின் ஏமாற்றமும் இந்த அரசாங்கத்தினுள் நுழைந்து பலவீனத்தை ஏற்படுத்திவிட்டன. இந்த நெருக்கடியான சமயத் திலும், அரசியார் அபர்டீனுக்குப் பட்டத்தை அளித்தது, விவே மற்ற செயலாகும். ஏற்கெனவே அரசியாரின் கொள்கைகளை எதிர்த்து முன்னேற்றவாதிகள் பத்திரிகைகளில் பலமாகத் தாக்கி எழுதிவந்தனர். ஆஸ்திரிய அரசனுடைய கருத்துகளும் சேர்ந்த வுடன், அபர்டீனை ஏன் 'டவருக்கு' அனுப்பக்கூடாது என்ற ஆத்திரமும் மக்களிடையே காணப்பட்டது. அவர்களுடைய செய்கைகளையும், போர் அலுவலகத்தைக் கவனித்து வந்த நியூ காஸிலின் நிர்வாகத்தையும் இனிமேலும் பாதுகாத்து வரமுடி யாத நிலை ரஸ்ஸலுக்கு ஏற்பட்டது. இதனையொட்டி ஒரு விசாரணை செய்யவேண்டுமென்ற தீர்மானத்தை தீவிரவாதியான ரோபக் என்பவர், ஜனவரி 1855-ல் கொண்டுவந்தார். 305—148 ஓட்டுகளில் இந்தத் தீர்மானம் நிறைவேறியது. இதைச் சகிக்க முடியாது ரஸ்ஸல் ராஜிநாமா செய்துவிட்டார். அடுத்த மந்திரி சபையை யாரிடம் தருவது என்று அரசியார் ஆராய்ந்து பார்த் தார். முதலில் டெர்பியையும், பின்பு ரஸ்ஸலையும் கண்டு ஆலோசனை நடத்தினர். அதற்குப் பிறகு, பால்மர்ஸ்டன் இல்லாது மந்திரிசபை அமைப்பது மிகவும் கடினமாக இருக்கு மென்று அவருக்குப் பட்டது. பால்மர்ஸ்டன் மந்திரி சபையை அமைக்க ஒப்புக்கொண்டார். பீலைட்டுகளில், கிளாட்ஸ்டன், ஹெர்பர்ட், கிரஹாம் ஆகியோர் கேபினட்டில் சேர்த்துக்

கொள்ளப்பட்டார்கள். • ஆனால், பால்மர்ஸ்டன் ரோபக் தீர்மானத்தை ஆதரித்ததால் அவர்கள் ராஜிநாமா செய்து விட்டார்கள். அதனால் பால்மர்ஸ்டன், விக்கு கட்சியிலிருந்து கிளாரண்டன், கிரென்வில், கார்ன்வால் லெவிஸ், பின்பு ரேடிகல் கட்சியிலிருந்து மொல்ஸ்வர்த் ஆகியவர்களைக் கேபினட்டில் சேர்த்துக்கொண்டார்.

இப்பொழுது நாட்டின் மிகமுக்கியமான தலைவர் பால்மர்ஸ்டன்தான். போரை இன்னும் தீவிரமாக நடத்தவேண்டிய பொறுப்பு அவரிடம் இருந்தது. அவ்ருடைய பெருந்தன்மையினால் ரஸ்ஸலுக்கும் மந்திரி பதவி அளித்தார். ஆனால், அவரே சமீபத்தில் அவர் பதவியை அழித்துக்கொண்டார். இந்தப் போரில், பிரிட்டனும், ஃபிரான்சும் தங்களுக்காக ஒன்றும் எதிர்பார்க்கவில்லை என்று அறிவித்தார்கள். ஆஸ்திரியாவுடன் வியன்னாவில் கூடி ஆலோசனை செய்ததில்,நான்கு அம்சத் திட்டம் ஒன்றை வெளியிட்டார்கள். ருமேனியா, ரஷ்யாவின் ஆதரவில் இருக்குமென்ற ஐரோப்பிய நாடுகளின் உறுதிமொழியும், டேன்யூப் நதி போக்குவரத்து, சர்வ தேசியக் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டுமென்பதும், துருக்கியக் கிறித்துவர்களுக்கு ரஷ்யா ஆதரவு அளிக்கக்கூடாதென்றும், கருங்கடலில் ரஷ்யக் கடலாதிக்கம் குறைக்கப்பட வேண்டுமென்பதும் அத் திட்டத்தின் முக்கியமான அம்சங்களாகும். கடைசியில் குறிப்பிட்ட நிபந்தனையை ஃஸார் காது கொடுத்தும் கேட்கமுடியாது என்று அறிவித்துவிட்டார். மார்ச் மாதம் அவர் சாகும்வரையில், இந்த அம்சத்தை அவர் ஏற்றுக்கொள்ளவே இல்லை. மே மாதத்தில், நமது இராச்சிய தூதுவரான ரஸ்ஸல் ஆஸ்திரியா சமாதானத் திட்டம் ஒன்றை ஏற்றுக்கொண்டார். ஆனால், ஃபிரான்சும் பிரிட்டனும் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. இவருடைய பங்கும் என்னவென்பது வெளியாகியது. அதனால் வேறு வழியின்றி அவர் ராஜிநாமா செய்தார்.

கேவூர் ஓர் இத்தாலியப் படையை அனுப்பிவைத்தார். தவிர, ஸ்வீடனுடன் உறவும், செபாஸ்டபூல் வீழ்ச்சியும், சீர் திருந்திய நமது படையும் ஆகிய பல காரணங்கள் சேர்ந்து ரஷ்யாவைக் 'கார்ஸ்' என்ற இடத்தைப் பிடிக்க முடியாமல் செய்து விட்டன. மேலும், இங்கிலாந்தில் போர்வெறி பரவிக்கொண்டிருந்தது. இதற்குள் ஃபிரெஞ்சுப் படை மாலக்காஃப் என்ற கோட்டையைத் தாக்கி வெற்றிபெற்றதால்தான், செபாஸ்டபூலை அடைய முடிந்தது என்று பேச்சுக் கிளம்பியது. அதனால், ரெடான்மீது நாம் நடத்திய தாக்குதல் அவ்வளவு முக்கியத்

துவம் பெருமல் போய்விட்டது. ஆங்கிலேயர்கள் இப் போரில் வெற்றி பெற்றுத்தான் ஆகவேண்டுமென்று போர் வெறிநிலை ஏற்பட்டிருக்கும் சமயத்தில், ஃபிரான்சில் மக்கள் இப் போரை நிறுத்திவிடவேண்டுமென்று கருதலாயினர். அவர்களுக்கு இந்தப் போரினுல் அதிகச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. தவிர, ஆஸ்திரியர்களின் சமரசத் திட்டம் வேறு. நமது விருப்பத்திற்கு மாருகப் போரை நிறுத்தவேண்டிய நிலைமையை ஏற்படுத்தியது. புதிய ஃஸார் மன்னன் இரண்டாவது அலெக்சாந்தர் ஜனவரி 1856-ல் ஆஸ்திரியாவின் நான்கு அம்சங்கள் கொண்ட திட்டத்தை ஆதரித்தார்.

ஒப்புக்கொள்ள முடியாதபடி இருந்த கடைசி நிபந்தனையும் சிறிது மாற்றி அமைக்கப்பட்டது. இனிமேல் கருங்கடலில் எந்த நாட்டின் போர்க் கப்பல்களும் செல்லக்கூடாதென்பதே அந்தப் புதிய மாற்றம். மார்ச் மாதத்தில் சமாதான உடன்படிக்கை பாரீஸ் நகரில் கையெழுத்தாயிற்று. ரஷ்யாவிடமிருந்து ருமேனியா, பெஸ்ஸரேபியாவின் பெரும் பகுதியையும், டேன்யூப் நதியைத் தொடும் முகத்துவாரம் வரையிலும் பெற்றது. இப் பகுதிக்கு வேண்டிய போக்குவரத்து, சர்வதேசிய கமிஷனுல் பாது காக்கப்படும். இதைச் சேர்ந்த இரண்டு பகுதிகளான மோல் டேவியா, வலாச்சியா சுய ஆட்சிபெற்றன. துருக்கியின் ஆதிக் கத்தில் ஸெர்பியா சுய ஆட்சிபெற்றதைப்போல இவ்விரு பகுதி களும் சுய ஆட்சி ரஷ்யாவின் ஆதிக்கத்தில் பெறுகின்றன. டார் டனல்ஸ், பாஸ்பரஸ் ஆகிய துறைமுகங்கள் போர்க்கப்பல்களுக்கு மூடப்பட்டன. ரஷ்யாவும் துருக்கியும் கருங்கடல் அருகில் கடற் படைகளை வைத்துக்கொள்வதோ அல்லது கோட்டைகளைக் கட்டிக்கொள்வதோ கூடாது. துருக்கியிலுள்ள கிறித்துவக் குடிகளுக்கு, துருக்கி சீர்திருத்தங்கள் தருவதென்று ஒப்புக் கொண்டது. இதையொட்டி துருக்கியின் அழிவு ஏற்படாத வரை வல்லரசுகள் பார்த்துக் கொள்வதென்று முடிவுசெய்யப்பட்டது. எதிரி நாட்டைச் சுற்றிலும், சரியான வேலி அமைக்கவேண்டு மென்று பால்மர்ஸ்டனின் ஆலோசனையின்பேரில், ரஷியா, ஸ்வீடனுக்கு அருகிலுள்ள ஆலண்ட் தீவுகளில் கோட்டைகளை நிர்மாணிக்காதென்றும்,கார்ஸ் பகுதியை மீண்டும் துருக்கியிடமே கொடுத்து விடுவதென்றும் ஒப்புக்கொண்டது. போர் நடை முறைகளைப்பற்றியும் இந்தச் சமாதான மாநாடு முடிவுசெய்தது. தனிப்பட்டவர்கள் போர்க் கப்பல்களை விடுவது தடைசெய்யப் பட்டது. நடுநிலைமை நாட்டின் கொடியை ஏற்று போர்த் தளவாடங்களை ஏற்றிச்சென்ருல், அக் கப்பல்களை முற்றுகையிட அதிகாரமும், அல்லது எதிரியின் கொடியை ஏற்று நடுநிலைமை

நாடுகளின் பொருள்களை ஏற்றிவந்தால், அப் பொருள்கள் பறிமுதல் செய்யப்படும் என்றும் சில விதிகள் அமைக்கப்பட்டன.

பிரிட்டனுக்கு 25,000 பேர்களுடைய உயிர்களும் 50 மில்லியன் பவுன்களும் செலவானபிறகு, சமாதானம் கிடைத்தது. இந்த அமைதியின் அடிப்படை, இனி, துருக்கியின் எதிர்காலத்தை ஐரோப்பாதான் நிர்ணயம் செய்யும்; ரஷ்யாமட்டுமன்று என்ற கொள்கையை வற்புறுத்தினர். நாம் பெரிய நேசநாட்டுடன் செய்துகொண்ட உறவு நமக்கு எந்தவிதப் பயனையும் அளித்துவிடவில்லை. இப்படிச் சில சமயங்களில் ஏற்படுவதுண்டு. போரில் பொறுப்பை, பிரிட்டனின் நலன்களுக்காக ஃபிரான்ஸ் ஏற்றுக்கொண்டது. அதனுடைய சொந்த நலன்களைக்கூட, அது அவ்வளவாகக் கவனிக்கவில்லை. ஃபிரான்ஸின் இராணுவம் பலமுடையது. அதற்கு ஆஸ்திரியாவின் ஆதிக்கத்திலுள்ள இத்தாலியின்மீது ஒரு கண் இருந்தது. பிரஷ்யாவின் வளர்ச்சியைக் கண்டு பயந்ததால், ரஷ்யாவுடன் நட்பு கொள்ளவேண்டுமென்று அது விரும்பியது. ஆனால், நாம் ரஷ்யாவுக்கு எதிராகப் பலம்பொருந்திய எல்லையை அமைக்கத் தயாராக இருந்தோம். ஏனெனில், சமாதான உடன்படிக்கை செய்துகொண்டவுடன், பாரசிகத்தின்மீது நாம் போர் தொடுத்தோம். சிப்பாய்க் கலகம் ஆரம்பித்து அப்பொழுது ஒரு வருடம்தான் ஆகியது. பால்மர்ஸ்டன் பதவி இழக்கும்பொழுது சிப்பாய்க் கலகம் ஒடுக்கப்படவில்லை.

ஆனால், பால்மர்ஸ்டனின் வெற்றியும் தோல்வியும், அவர் நாட்டை நடத்திச்சென்றார் என்ற காரணத்திற்காக ஏற்பட்டதே தவிர, கட்சியை நடத்திச்சென்றார் என்பதற்காக அன்று. அதிகச் சீர்திருத்தங்கள் வேண்டுமென்று தீவிரவாதிகள் சமயம் கிடைக்கும்பொழுதெல்லாம் அவரைக் கண்டித்தார்கள். அவருடைய கட்சி இராணுவக் கட்சி என்று காப்டென் தாக்கி எழுதினார். இந்தப் போர் கூடாதென்று ஆரம்பத்திலிருந்தே பிரைட் சொல்லிவந்தார். பதவியிழந்த ரஸ்ஸல், கிரஹாம் ஆகியவர்கள் அவருக்குக் குழி வெட்டிக்கொண்டே வந்தார்கள். போர் நீடித்து நடப்பதையும், பீலைட்டுகளின் தவறுகளையும், விக்குகளின் நிதி நிர்வாகத்தையும், கிளாட்ஸ்டன் குறை கூறினார். ஆனால், பால்மர்ஸ்டனின் பலம், பாராளுமன்றத்தில் டோரிகளின் உதவியாலோ அல்லது அவர்கள் நடுநிலைமை வகிப்பதாலோதான் ஏற்பட்டது. டெர்பி 1855-ல் ஒரு நல்ல வாய்ப்பை இழந்துவிட்டார் என்பதை டிஸ்ரேலி நன்குணர்ந்திருந்தார். அதனால் அவருடைய கட்சி பதவிக்கு வரமுடியும் என்ற நம்பிக்கை

அவருக்கு இருந்தது. ஆனால், 1857-ல் மக்கள் பால்மர்ஸ்டன் பக்கத்தில்தான் இருக்கிறார்கள் என்பதை அவர்கள் எடுத்துக் காட்டினர்.

1856-ல் இரண்டாவது சீனப் போர் துவங்கியது. முதல் சீனப் போருக்கு அடிப்படையில் என்ன காரணங்கள் கூறப் பட்டதோ, இந்தப் போருக்கும் அதே காரணங்களைக் கூறலாம். முதல் சீனப் போருக்கு 'அபினி' காரணமாக இருந்தது. இரண்டாவது சீனப் போருக்கு 'ஏரோ' என்ற கப்பல் காரணமாக இருந்தது. ஆங்கிலேயக் கொடியையேற்று, இந்தக் கப்பல் கடற் கொள்ளையில் ஈடுபட்டிருந்தது. இந்தக் கப்பல் சொந்தக்காரன் ஹாங்காங்கில் இருந்தான். அவன் ஒரு சமயம் இக் கப்பலை ஆங்கிலேய அதிகாரிகளிடம் பதிவு செய்திருக்கக்கூடும். ஆனால், இந்தப் போருக்கு இஃது உண்மையான காரணம் அன்று. உண்மை யான காரணங்கள் ஆழமான அடிப்படையில் காணப்பட்டன. சீனாவிலே உள்நாட்டுப் போர் நிகழ்ந்துவந்ததால், அதனுடைய அதிகாரிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அந்நியரை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்வது பல தடைகளை ஏற்படுத்திவிட்டது. பல குறைகளுக்கு ஐரோப்பியப் பிரதிநிதிகளுங்கூடக் காரணமாக இருந்தனர். சீனர்களும் அந்நியர்களுடன் செய்துகொண்ட பல ஒப்பந்தங்களை மதித்து நடக்கவில்லை. பீகிங்குடன் இராச்சியத் தொடர்பு வைத்துக்கொள்வதுங்கூடச் சாத்தியமில்லாமல் போய் விட்டது. இங்கிலாந்திற்குத் தெரிவிப்பதற்குச் சில வாரங் களுக்கு முன்னரே, ஹாங்காங் கவர்னரான பவ்ரிங் தன் விருப்பப் படி சட்டத்தைப் பிரயோகிக்க ஆரம்பித்தார். அவருக்கு உதவி யாக ஃபிரான்ஸ், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பிரதிநிதிகள் இருந்தார்கள். இந்தச் சீனப் பிரச்சினையின் காரணமாக, பாராளுமன்றத்திலுள்ள எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து பதினாறு ஓட்டுகள் வித்தியாசத்தில், பால்மர்ஸ்டனைப் பதவியிழக்க வைத்தார்கள். இவ்விதமான நடவடிக்கை அவசியமற்றது என்று டிஸ்ரேலி சொல்லியுங்கூட, அதை யாரும் பொருட்படுத்தவில்லை. ஆனால், பாராளுமன்றத்தின் புதிய தேர்தலில் மீண்டும் பால்மர்ஸ் டன் வெற்றியுடன் திரும்பினார். இந்தத் தேர்தலில் காப்டென், பிரைட், மற்றும் பல பீலைட் தலைவர்களும், ரேடிகல் தலைவர் களும் தோல்வியுற்றனர். இந்தியாவை ஆங்கில ஆதிக்கத்தில் வைத்திருப்பது நல்லதா, அல்லது அதை ஆதிக்கம் செலுத்து வதற்கு ஏதாவது உரிமையுண்டா என்ற காப்டெனின் சந்தேகங் களும், பிரைட்டின் சமாதானக் கொள்கைகளும், கிரிமியா, சிப்பாய்க்கலகம் வழிவந்த பரம்பரையினருக்கு அருவருக்கத் தக்கதாக இருந்தது.

ஓர் ஆண்டிற்குள் பால்மர்ஸ்டனின் வீழ்ச்சி(பிப்ரவரி 1858-ல்) ஏற்பட்டது. இந்த வீழ்ச்சியே பால்மர்ஸ்டனின் பலத்தை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. மூன்றுவது நெப்போலியன் மீது, இத்தாலியைச் சார்ந்த ஆர்ஸினி என்பவன் குண்டு வீசி அவரைக் கொல்ல முயற்சி செய்தான். இந்தச் சதித் திட்டம் இங்கிலாந்தில் நடைபெற்றது. கொலை செய்ய வீசப்பட்ட குண்டும் இங்கிலாந்தில் செய்யப்பட்டது. இதையொட்டி, ஃபிரெஞ்சு இராணுவம் பல வினுக்களை எழுப்பியது. ஒரு பெரிய கொலைகாரக் கூட்டத்திற்கே பிரிட்டன் ஆதரவு கொடுத்துவிட்டதாகக் குற்றம் சாட்டியது. அதனால், பால்மர்ஸ்டன் இதைப் போன்ற சதித் திட்டங்கள் நிகழாதவாறு, சட்டத்தை மிகவும் கண்டிப்பான முறையில் அமல் நடத்தும்படி உத்தரவிட்டார். பாராளுமன்றத்தில், இவருடைய நடவடிக்கையை எதிர்த்து வாக்களித்தனர். பத்தொன்பது ஓட்டு வித்தியாசத்தில் அவர் தோல்வியுற்றார். இவருடைய எதிர்ப்பு முன்னணியில் ரஸ்ஸல், கிரஹாம், கிளாட்ஸ்டன், கிரிமியா வரலாற்று ஆசிரியர் கிங்லேக் ஆகியோர் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டார்கள். அவர்களுக்குப் பால்மர்ஸ்டனைக் கண்டால் எப்பொழுதுமே பிடிக்காது. கிங்லேக் என்பவர், நெப்போலியனுடன் சொந்த முறையில் சண்டை போட்டவராவர். பால்மர்ஸ்டனின் எதிரிகள், இந்தச் சமயத்தைப் பயன்படுத்தி, ஃபிரான்சுக்கு வால்பிடிப்பவர் என்று தாக்கினர். அதனால் மக்களுடைய நாட்டுக் கவுரவம் பாழாகிறதென்றும், நாட்டு கவுரவத்தை நிலைநாட்டப் பாடுபட்டவரே, இப்பொழுது அதைக் கைவிட்டுவிடுவது நல்லதன்று என்றும் கூறினார்கள். டிஸ்ரேலி, தயங்கிக்கொண்டிருந்த டெர்பியை முன்னுக்குத் தள்ளினார். டோரிகள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டனர். அவர்கள் அரசாங்கத்தை அமைக்க அழைக்கப்பட்டனர்.

கட்சி ஆதரவின்றி, தனி மனிதனின் ஆற்றலால்மட்டும் நடந்துவந்த அரசாங்கம் சரிந்து, இப்பொழுது பெரும்பான்மை ஆதரவில்லாத கட்சி அரசாங்கத்தை அமைத்தது. இருவகையிலும் அரசாங்கம் நிலையற்ற தன்மையைப் பெற்றது. 1852-ல் ஏற்பட்ட அரசாங்கத்தைவிட, இது சுமாராக இருந்தாலும், டெர்பியின் இரண்டாவது முறை அமைக்கும் அரசாங்கம் பலவீனமானதுதான். டிஸ்ரேலி, இன்னும் இரண்டு ஸ்டான்லிகளைத் தவிர அந்தக் கேபினட்டில் முதல்தரமான ஆட்கள் இல்லை. ஆனால், அந்தக் கேபினட்டில் சில சாதுரியமான, விநோதமான கருத்துகளை உடையவர்களும் இருந்தனர். அவர்களில் வெளிநாட்டு மந்திரியாக இருந்த மால்ம்ஸ்பரியும் நாவலாசிரியர்

பல்வர் லிட்டன் என்பவரும் குறிப்பிடத்தக்கவர்கள். எல்லன் பரோ என்ற மற்றுமோர் ஆணவம் மிக்கவரும் இக் கேபினட்டில் இருந்தார். அவருடைய சண்டை போடுகின்ற தன்மையால், இந்திய வைசிராயாக இருந்த அவரை, திருப்பி அழைத்துக் கொண்டார்கள். மீண்டும் அப்பொழுது இந்தியாவின் வைசிரா யாக இருந்த கேனிங்கை மிகவும் தாக்கிக் கண்டித்ததால், அவர் இந்திய அலுவலகத்தைவிட்டு வெளியேறவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மூன்று முறை கிளாட்ஸ்டனை மந்திரியாக அழைத் தார்கள். ஆனால், இந்த அழைப்பை அவர் நிராகரித்து விட்டார். இவரைப் போலவே, பால்மர்ஸ்டனும், கிரஹாமும் அழைப்பை நிராகரித்துவிட்டார்கள். மற்றக் குழுவினருடன் அவர்களுடைய வேறுபாடுகளை மட்டாக்கிக்கொண்டனர். என்றால், அரசாங் கத்தின் காலம் கண்டிப்பாக மிகவும் குறுகிவிடும் என்பது வெளிப் படையாகவே தெரிந்தது. கட்சியின்மீதிருந்த பிடிப்பு டிஸ்ரே லிக்கு இப்பொழுது அதிகமாக இருந்ததெனினும், பாதுகாப் புக்கும், கல்விக்கும் தனி அமைச்சர்கள் வேண்டுமென்ற கோரிக் கையை அவருடைய கட்சியினர் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், லிபரல் கட்சியைச்சார்ந்த ஸ்டான்லியின் உதவியால் அவர் இந்திய அரசாங்கச் சட்டம் இயற்றவும் புதிய சீர்திருத்த மசோ தாவைக் கொண்டுவரவும் ஒப்புக்கொண்டார். ஏனெனில், பாராளுமன்றத்தில் இருக்கும் பலதரப்பட்ட கட்சிகளும் கொள் கையளவில், இந்த இரண்டு சட்டங்களையும் விரும்பியதால் வேறு வழியின்றி அவர் இவைகளைக் கொண்டுவந்தார். இந்த மசோ தாக்களைக் கொண்டுவரும்பொழுது அவருடைய விநோதமான விவாதங்களால் எதிர்க்கட்சியினரிடமிருந்து பலத்த தாக்குதலைப் பெற்றார். ஆனால், எதிர்க்கட்சியினரிடமிருந்த பலவீனத்தினால் மட்டுமே அவர் ஓர் ஆண்டுக் காலம் வரையிலும் நீடித்திருக்க முடிந்தது.

1859-ல் அவர் கொண்டு வந்த சீர்திருத்த மசோதா, நடுநிலை வகுப்பினரையும், பயிற்சி பெற்ற தொழிலாளர்களையும் திருப்தி படுத்தும் அளவில் இருந்தது. பரோ வாக்காளர்களுக்குப் பத்துப் பவுன் தகுதியிலேயே நின்றுவிட்டது. மற்றக் கவுன்டி களிலும் இதே தகுதிக்குக் கொண்டுவரவேண்டுமென்று அவர் கருதினார். மேலும். பட்டதாரிகளுக்கும், ஆசிரியர்களுக்கும், சேமிப்பு பாங்குகளில் பணம் வைத்திருப்பவர்களுக்கும், மற்றும் பொதுவான நிலையைவிடச் சிறிது உயர்ந்த நிலையில் இருப்பவர் களுக்கும் வாக்குரிமை அளிப்பதென்று யோசிக்கப்பட்டது. பிரைட் இதை மிகவும் 'விநோதமான வாக்குரிமை' என்று அழைத்தார். இதனுடைய பலவீனமான அம்சங்கள் வெளிப் படையாகவே தெரிந்தன. முன்னேற்ற சாயல்படிந்த இந்த

மசோதா, பல டோரிகளை அதிருப்தியுறச் செய்தது. இரண்டு டோரி மந்திரிகள் ராஜிநாமா செய்தனர். ஆனால், அவர்கள் 'ரேடிகல்'களைத் தங்கள் கட்சிக்கு ஈர்க்கும் அளவிற்கு தங்கள் பழமைக் கொள்கைகளைக் கைவிடவில்லை. டிஸ்ரேலி இந்த விவகாரத்தில் செய்ததெல்லாம், தொகுதிகளைப் புதியதாக நிர்ணயம் செய்ததில் சிறு பரோக்களிலிருந்து 15 அங்கத்தினர் வரையிலும் எடுத்துவிடுவதென்று முடிவுசெய்தார். மேலும், 4,00,000 வோட்டர்களை அதிகமாக்கினதால்மட்டும் 'ரேடிகல்' களின் சரிசமப் பிரதிநிதித்துவக் கோரிக்கையை அவர்கள் திருப்தி செய்யவில்லை. ரஸ்ஸலின் திருத்தம் ஒன்று பரோ ஓட்டர்களுக்கு இன்னும் குறைந்த தகுதிகளை நிர்ணயம் செய்வது என்ற ஆலோசனையும் அவர்களின் எதிர்ப்பிற்கெதிராக நிறைவேற்றப்பட்டது. ஜூன் மாதத்தில் நம்பிக்கையில்லாத தீர்மானம் கொண்டுவரப் பட்டதால், அவர்கள் ராஜிநாமா செய்தார்கள். 1852-லிருந்து நான்கு மந்திரிசபைகள் சரிந்தன. இந்தச் சூழ்நிலையில், மக்கள் பழைமை கலந்த முன்னேற்றத்தைத்தான் விரும்பினர் என்று தெரிகின்றது. பால்மர்ஸ்டனுக்கும் டெர்பிக்கும் இடையே பெரிய கொள்கை வேறுபாடு இருப்பதாக அவர்கள் புரிந்து கொள்ள முடியவில்லை. பாராளுமன்றச் சீர்திருத்தம், ஓர் ஆர்வம் என்று கூறுவதைவிட அதை ஒரு காரணமாகவே வைத்துக் கொண்டார்கள். கன்சர்வேடிவ்களுக்கு இன்னும் பீலைட்டுகளைக் கண்டால் பிடிப்பதில்லை. மேன்செஸ்டர் கோஷ்டியினருக்கு விக்குகளைக் கண்டால் பிடிப்பதில்லை. ஆனால், அரசியல் உணர்வு பெற்ற பொதுமக்கள் வேறுவிதமாக நினைக்கிறார்கள். இந்த இளவேனிற்காலத்தில் கேவூர், மூன்றாவது நெப்போலியனுடன் சமரச ஒப்பந்தம் செய்துகொண்டு இத்தாலிய சுதந்திர இயக்கத்தை ஆரம்பித்தார். இந்த இயக்கத்திற்கு டெர்பி மால்ம்ஸ் பெரியைவிட, பால்மர்ஸ்டன், ரஸ்ஸல், கிளாட்ஸ்டன் ஆகியவர் களிடமிருந்து உண்மையிலேயே அதிக ஆதரவு கிடைத்திருக்க லாம். அதைவிட, பீலைட்டுகள் வேறு எந்தக் கட்சியுடனும் சேராது தனித்தியங்கினால், அவர்களால் எந்தப் பயனும் சேவையும் இல்லையென்பதை கிளாட்ஸ்டன் உணர்ந்ததால், அவருடைய அரசியல் வாழ்க்கையில் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது. இருப்பினும், கடைசி வரையிலும், அவர் டெர்பியை ஆதரித்து தான் ஓட்டளித்தார். அவருடைய மறு பரிசீலனையினால், பால் மர்ஸ்டன்மீதிருந்த வெறுப்பை அவர் மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இப்படி ஏற்பட்ட அவருடைய மனமாற்றம், பால்மர்ஸ்டனின் உண்மையான மக்களின் குரலை பிரதிபலிக்கிறவர் என்றும் இந்தப் பரம்பரையின் நிரந்தரமான கொள்கையை உடையவர் என்றும் எடுத்துக் காட்டின.

மக்களின் இத்தாலிய ஆதரவும், அல்லது இந்தப் படுகிழவர்களின் கொள்கைகளும் ஆக இரண்டில் ஒன்றை அரசியார் பின்பற்றித்தான் ஆகவேண்டிய சூழ்நிலே ஏற்பட்டது. இரண்டையும் அவரால் நிராகரிக்க முடியவில்லே. அதனுல், புகழ்ச்சியைப் போற்றுகின்ற கிரென்வில்லே மந்திரிசபை அமைக்கச் சொன்னுர். ஆனுல், மக்களுடைய கருத்து வேறுவிதமாக இருந்ததால், பால்மர்ஸ்டன்தான் தகுதியானவர் என்று அரசியார் உணர்ந்தார். பால்மர்ஸ்டன் கன்சர்வேடிவ்களேத் தன் வழிக்குக் கொண்டுவரமுடியும் என்று ரஸ்ஸலுங்கூட உணர்ந்திருந்தார். ஏனெனில், முதன்மைத் தகுதியில்லே யென்ருலும், இரண்டாவது தகுதியாவது தமக்குக் கிடைக்கவேண்டுமென்ற எண்ணம் அவருக்கு இருந்தது. ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டதால், அவர்களுக்குள்ளிருந்த வேறுபாடுகள் ஒருவிதமாக மறைந்து, ஒருவரிடத்தில் மற்றவர் வேலேசெய்ய ஒப்புக்கொண்டனர். அதனுல் அவர் ரஸ்ஸலின் விருப்பப்படி வெளித்துறையையே கொடுத்தார். ஆனுல், அரசியார் அப் பதவியைக் கிளாரண்டனுக்குத் தர விரும்பினுர். பீலேட்டுகளுக்கு அவர் நல்ல பதவிகளே அளித்தார். கிளாட்ஸ்டனே நிதி மந்திரியாகவும், ஹெர்பர்ட்டைப் போர் அலுவலகத்திலும், மற்றும் நியூகாஸிலுக்கும், கார்ட்வெலுக்கும் நல்ல பதவிகளேக் கொடுத்தார். ரேடிகல்களுக்கு, குறைந்தபட்ச பரோ வாக்குரிமைத் தகுதிகளும் தருவதாக உறுதி கொடுத்தார். காப்டென் எந்தப் பதவியையும் ஏற்றுக்கொள்ளவில்லே. ஆனுல், மில்னர் கிப்ஸன் வர்த்தக போர்டில் பதவி வகிக்க ஒப்புக்கொண்டார்.

இறுதியாக, லிபரல் கட்சி உருவாகியது. இந்தக் கட்சியில் கேனிங்கின் ஆதரவாளர்களும், மற்றும் பால்மர்ஸ்டனும் வந்தனர். விக் கட்சியைச் சேர்ந்த பிரபுக்களும், பீலின் ஆதரவாளர்களும், ரேடிகல்களும் ஒன்று சேர்ந்தனர். எழுபத்தைந்து வயது நிரம்பிய கிழவன் இந்தக் கட்சிக்குத் தலேமை வகித்தார். அவர் தம்முடைய சிவப்புக் கோட்டை அணிந்துகொண்டு ஃபிரெஞ்சுப் பேரரசனுடன் சமீபத்தில் வேட்டையாடினுர். பறவைகள் இருக்குமிடத்தைத் தேடி மைல் கணக்கில் நடந்து சென்ருர். பாராளுமன்றத்திற்குத் தவருமல் குதிரைமீது ஏறிவந்தார். இன்னும் மகிழ்ச்சியுடன் வாக்குரிமைச் சீட்டில் எழுதி வாக்களித்தார். அந்தக் கிழவனுடைய டிவர்ட்டன் சொற்பொழிவுகள் வீரியம் நிறைந்த, மேன்மையான சுதந்திர மக்களே உருவாக்க வேண்டுமென்ற எண்ணத்தை எடுத்துக்காட்டின. அதேசமயத்தில் அந்நியநாட்டு மக்களுக்கு, அவர்களுடைய நாடுகளில் உள்ள அரசாங்கங்களில் குறைபாடுகள் ஏற்படின், அவர்கள் ஆற்றும்,

கடமைகளையும் மற்றும் அடிமை வியாபாரத்தை ஒழிப்பது பற்றியும் கற்பித்தார். அவருடைய ஆதரவின்கீழ் மெட்டர்னிக் மகமது அலி, லூயி பிலிப், ஃஸார் மன்னன், இந்தியக் கலகக்காரர்கள், சீனுவின் காட்டுமிராண்டிகள் ஆகியோர் ஒழிக்கப்பட்டனர். ரஸ்ஸலைவிட அவர் பலமுள்ளவராகவும், தாராள மனமுள்ளவராகவும், உலக அனுபவம் நிறைந்தவராகவும் இருந்தார். இங்கிலாந்தின் பழைமையை விரும்புகிறவர்களும் நடுத்தர மக்களும் அவர் உயிருடன் இருக்கும் வரையிலும் அவரைத்தான் பின்பற்றுவார்கள். அவருடைய அரசாங்கத்தின் தலைவிதியை நிர்ணயம் செய்கின்றவர் கிளாட்ஸ்டன் என்பவராவர். அப்பொழுதுதான் அவருக்கு ஐம்பது வயது நிரம்பியது. இளமைப் பருவத்திலிருந்தே, வெளிநாட்டு விவகாரங்களில் கேனிங்கின் கொள்கைமீது பற்றுடையவர். அந்தப் பற்றுடன் சுதந்திரம் என்ற ஆர்வத்தையும், அதன் அடிப்படையில் மக்களைத் திருத்த வேண்டுமென்ற கிறித்துவச் சமயப் பற்றையும் கொண்டவர். தீய சிந்தனையுள்ள மேதையான டிஸ்ரேலியை அவர் வெறுத்தார். அதனுடன் மால்ம்ஸ்பரியின் கொள்கைகளும் அவருக்குப் பிடிக்காதவை. பாராளுமன்றத்தின் கலைப்புக்குப் பிறகு டெர்பியுடன் கூட்டுச் சேர்வதுபற்றி அவர் சிறிதும் கவலைப்படவில்லை. பீலைட்டுகள் எப்பொழுதோ கூறியதைப் போல, உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் கொள்கையில் அவர் நம்பிக்கை வைத்திருந்தார். அவர் பால்மர்ஸ்டனையும் ரஸ்ஸலையும் நம்புவதேமேல் என்று கருதினர். அவர் அரசியலில் இஸ்மாயில் போன்றிருப்பதை சிறிதும் விரும்பவில்லை. இந்த நட்புறவினால் அவர் பிரதம அமைச்சராகவும் வரமுடிந்தது. முதலில் பெர்சிவல் என்பவருடைய மந்திரிசபையில் அவர் பணியாற்றினர்; பின்பு நிதி மந்திரியானர். அப்பொழுது பாராளுமன்றத்தில் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட இருந்தன. ஆனால், முதன்முதலாக திருந்தாத பாராளுமன்றத்தைப் பாதுகாத்து அவர் பேசினர்.

## சமகால நிகழ்ச்சிகள்

1851 பாரிஸில் திடீர் புரட்சி.
ஃபிராங்ஃபர்ட் டையட்டில் பிஸ்மார்க்.
ஹைட் பூங்காவிலுள்ள கிறிஸ்டல் அரண்மனை.
சார்லஸ் கிங்ஸ்லி எழுதிய 'ஈஸ்ட்' (Yeast).

1852 மூன்ருவது நெப்போலியன்; ஃபிரெஞ்சுப் பேரரசன்.
ஸ்கலெஸ்விக்-ஹொல்ஸ்டின் பிரச்சினையை ஒட்டி ஏற்பட்ட லண்டன் உடன்படிக்கை.
தாக்கரே எழுதிய 'எஸ்மாண்ட்' (Esmond).
மேத்யூ ஆர்னல்ட் எழுதிய கவிதைகள் (Poems).

1853 கமோடர் பெர்ரி, ஜப்பானிய அமெரிக்க வியாபாரத்தை ஆரம்பித்து வைத்தார்.
ஸ்டார்ட்ஃபோர்ட் கேனிங் கான்ஸ்டான்டிநோபிளுக்குத் திரும்புதல்.

1854 ஆல்மா, பாலக்லாவா, இங்கர்மேன்.
கான்ஸாஸில் (Kansas) உள்நாட்டுப் போர்.
எஃப். டி. மாரிஸ் (F. D. Maurice), மற்றும் பலர் தொழிலாளர் கல்லூரியை நிறுவுதல்.

1855 கிரிமியாவில் இத்தாலியத் துருப்புகள்.
டென்னிஸன் எழுதிய 'மாட்' (Maud).
சார்லோட் பிரான்டின் மரணம்.

1856 பாரிஸ் சமாதான உடன்படிக்கை.
கேன்டனை ஆங்கிலேயக் கடற்படை குண்டு வீசித் தாக்குதல்.
பாரிஸில் பேஸ்சர் (Pasteur) கற்பித்துக் கொடுத்தல்.
பெஸ்மரின் எஃகு செய்யும் முறை (Bessemer's steel process).
ஆப்பிரிக்காவில், லிவிங்ஸ்டன், பர்டன், ஸ்பீக்(Speke).

1857 இந்தியச் சிப்பாய்க் கலகம்.
அமெரிக்க ஐக்கிய நாடுகளில் டிரட் ஸ்காட் செய்த முடிவு.
ஃபிளாபெர்ட் (Flaubert) எழுதிய மேடம் பவேரி (Madame Bovary).

1858 நெப்போலியன் கேவூரைப் பிளாம்பியர்ஸில் (Plombieres) சந்தித்தல்.
ருமேனிய அரசை நிறுவுதல்.
ஃஸார் அலெக்சாந்தர்-II, பண்ணை அடிமை முறையை ஒழித்தல்.

1859 மெகன்டா, சால்ஃபெரினோ போர்கள் (Battles of Magenta and Solferino).
ஜான் பிரவுன், ஹார்ப்பர்ஸ் ஃபெர்ரிக்குப் (Harper's Ferry) பிறகு தூக்கிலிடப்படல்.
டெ லெஸ்ஸப்ஸ் (De Lesseps) சூயஸ் கால்வாயை வெட்ட ஆரம்பித்தல்.

1859 டார்வின் எழுதிய ஆரிஜின் ஆஃப் ஸ்பீஷீஸ் (Origin of Species).

மில் எழுதிய 'லிபர்டி' (Liberty).

மெரிடித் எழுதிய 'ஆர்டியல் ஆஃப் ரிச்சர்ட் ஃபெவரல்' (Ordeal of Richard Feverel).

ஜார்ஜ் எலியட் எழுதிய 'ஆடம் பீட்' (Adam Bede).

ஹாலாம், மெக்காலே, தோக்குவில் (Tocqueville), மெட்டர்னிக் ஆகியோரின் மரணம்.

# 3. இந்தியா: வெல்லெஸ்லி முதல் சிப்பாய்க் கலகம் வரையிலும்

பால்மர்ஸ்டனின் வாழ்க்கை, பிரிட்டிஷ் இந்திய ஆட்சி உருவாகும்பொழுது முடிவாகிறது. அத்துடன், வாரன்ஹேஸ்டிங்ஸ் உருவாக்கிய கம்பெனியின் ஆட்சியும் முடிவடைகிறது. பிட் இந்தியச் சட்டம் தோன்றியபொழுது, பால்மர்ஸ்டன் பிறந்தார். அவர் சிப்பாய்க் கலகத்தை அடக்கும்பொழுதும் உயிருடன் இருந்தார். பிளாசி வெற்றியின் நூறுவது ஆண்டில் பிரிட்டிஷ் ராஜ்யம் சரிந்துவிடும் என்று சோதிடம் கூறினர்கள். ஆனல், இந்தியாவின் ஆட்சி, அரசியாரின் அதிகாரத்திற்குள் மாறியது. ஆங்கிலேயர்கள் இவ்வளவு பெரிய சாதனையை எப்படிச் சாதித்தார்கள்? –அவர்களுடைய கொள்கை என்ன? அவர்களுடைய பலம் என்ன? தவறுகள் என்ன? என்பனவற்றை யெல்லாம் 1785-லிருந்தே கவனிக்கவேண்டும் இந்த ஆண்டில் தான், வாரன்ஹேஸ்டிங்ஸ்மீது குற்ற விசாரணை நடந்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, கம்பெனி மிகவும் பாடுபட்டுப் போரிடாக் கொள்கையைப் பின்பற்றுவதென்று முடிவு செய்தது. பிட் அறிக்கையும் இப்படித்தான் கூறுகிறது. வாரன்ஹேஸ்டிங்சை மிகவும் பலமாகத் தாக்கி வந்த பிலிப் ஃபிரான்சிஸ் என்பவரும், தலையிடாக் கொள்கையைப் பின்பற்றினல்தான் நல்லது என்று ஆலோசனை கூறினர். உண்மையில், சுதேச அரசர்களிடம் போரிடுவதால், கம்பெனியின் வளர்ச்சி குன்றிவிடும் என்று கருதப்பட்டது. ஆனல், அவ்விதமாக அவர்கள் அந்தக் கொள்கையைப் பின்பற்ற முடியவில்லை. வாரன்ஹேஸ்டிங்சுக்குப் பின்வந்த கார்ன்வாலிஸ், மிகவும் நெருக்கடியான சூழ்நிலையின் காரணமாகத் தலையிடாக் கொள்கையைக் கைவிடவேண்டியதாயிற்று. டெல்லி பேரரசனை ஒரு ரோகில்லா படைவீரன் குருடாக்கியதுமட்டுமல்லாமல், டெல்லியையும் கைப்பற்றிக் கொண்டது விந்தையே. அத்துடன், பூனவில் உள்ள பீஷ்வா

வைச் சார்ந்த பல மராத்தியத் தலைவர்கள் அங்குமிங்குமாகப் போரிட்டு வந்தார்கள். அவர்களில் ஒருவரான ஸ்கிந்தியா என்பவர் மத்திய இந்தியா முழுவதையும் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டுவந்தார். மைசூரில் திப்பு சாகிப், ஆர்வத்தாலும் இஸ்லாமிய வெறியாலும் ஆங்கிலேயரைப் புறக்கணித்தார். ஆனால், 1790-92-ல் நிகழ்ந்த இரண்டாவது மைசூர் போர் அவருடைய எண்ணத்தை மாற்றிவிட்டது. கம்பெனியின் நேச நாடுகளைப் பாதுகாப்பதற்காகக் கார்ன்வாலிஸ் போர் தொடுக்க வேண்டியதாயிற்று. திப்புவின் பாதி இராச்சியம் கம்பெனிக்கும், ஹைதராபாத்துக்கும், மராட்டியர்களுக்கும் சென்றுவிட்டது. ஆனால், திப்பு மிகவும் தீவிரமாகப் போரிடுவதை நிறுத்திக் கொள்ளவில்லை. சென்னை அரசாங்கத்தின் பலவீனம் மீண்டும் வெட்டவெளிச்சமாயிற்று. 1795-ல் அவர் மராத்தியர்களுடன் சேர்ந்து, நமது பழைய நேச நாடான ஹைதராபாத்தைத் தாக்கினார். தலையிடாக் கொள்கையைப் பின்பற்றியதால் வந்த விளைவு ஈதெனில் தவறாகாது. கார்ன்வாலிஸிற்குப் பிறகு வந்த சர் ஜான் ஷோர் உள்நாட்டு அரசர்களிடம் சண்டைபோட்டுக் கொள்வதிலிருந்து சிறிது விலகி நின்றார். கம்பெனியின் ஊழிய ராக இருந்த இவர், நில நிர்வாகத்தில் சிறப்பாகப் புகழைப் பெற்றிருக்கிறார். பிடிவாத குணமும், சமயப் பற்றும், தன்னைக் கூட நம்பாதவராகவும் அவர் இருந்தார். தோல்வி அடைந்த நைஜாம், கம்பெனியின்மீது கோபமாகவே இருந்தார். அவர் சில தனிப்பட்ட ஃபிரெஞ்சு வீரர்களின் உதவியால் படையைப் பலப்படுத்திக்கொண்டார். மத்திய இந்தியாவில் மராத்தியர்கள், குழப்பத்தையும் போரையும் உருவாக்கினார்கள். உள் நாட்டுப் போர்களும் நிகழ்ந்தன. நமது ஆதரவில் இருந்த அவுத், கர்னாடகம் ஆகிய பகுதிகளில் அதிக ஊழல்கள் நிரம்பி யிருந்தன.

1798-ல் ஷோர் பதவியைவிட்டு விலகியவுடன் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது. அவருக்குப் பதிலாக, பிட்டின் நண்பரான மாரிங்டன் (பின்பு வெல்லெஸ்லி பிரபுவானவர்) மிகுந்த திறமை யும் ஆற்றலும் உடையவர். அவர் இந்தியாவிலும் ஃபிரெஞ்சு செல்வாக்கிருப்பதைக் கண்டவுடன், அதையும் ஒழித்துவிட முயற்சி செய்தார். இந்தியா அலுவலகத்தின் எச்சரிக்கையான சிக்கனக் கொள்கையை அவர் சிறிதும் விரும்பவில்லை. பேரரசை நிலைநிறுத்த வேண்டுமென்ற கொள்கையை அவர் பின் பற்றினார். கல்கத்தாவில் அரண்மனை போன்ற புதிய அரசாங்க அலுவலகத்தை நிர்மாணித்தார். அவருடைய கொள்கைகளின்படி இளம் அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிக்க

ஒரு கல்லூரியை அவர் நிறுவினார். படை, வெல்திறம் ஆகிய துறைகளை அவருடைய சகோதரர்களான ஹென்றி, ஆர்தர் ஆகியவர்களிடம் ஒப்படைத்தார். மால்கோம், மன்ரோ, எல்பிஸ்டன், ஆக்டர்லோனி, மெட்காஃப் போன்ற சிறந்த அதிகாரிகளை அவர் உருவாக்கினார். வங்காளம், ஹைதராபாத், அவுத் ஆகிய இடங்களில் பலமிக்க படைகளை வைத்து, முதலில் அந்த அரசர்களுடைய வெளிநாட்டு விவகாரங்களை இவருடைய ஆதிக்கத்திற்குள் மாற்றிக்கொண்டார். அதனால், பல பகுதிகளிலுள்ள ஃபிரெஞ்சு செல்வாக்குத் தலைதூக்க முடியாமல் போய் விட்டது. பிறகு, 1799-ல் திப்புவை முறியடிக்க அவர் படையெடுத்தார். ஃபிரான்சுடன் திப்பு தொடர்புகொண்டிருப்பதை அவரால் பொறுத்துக்கொள்ளமுடியவில்லை. இவரை முறியடிப்பதற்கு வெல்லெஸ்லி பல விவரங்களைச் சேகரித்து, நன்றாக நன்கு திட்டமிட்டு, கிழக்கிலும் மேற்கிலும் தாக்கி, இரண்டே மாதங்களில் ஆங்கிலேயரின் ஆட்சிக்கிருந்த அபாயத்தைப் போக்கினார். ஸ்ரீரங்கப்பட்டணம் வீழ்ந்தது. அங்கேயே திப்புவும் கொல்லப்பட்டார். அவருடைய நாடும் மறைந்தது. ஹைதர் அலி உருவாக்கிய நாட்டின் ஒரு பகுதியை இந்து அரச பரம்பரையினருக்கு அளித்துவிட்டார். ஹைதராபாத்துக்கு ஒரு பகுதியை அளித்து விட்டு, கிழக்கிலும் மேற்கிலும் உள்ள மலைப்பகுதிகளையும், துறைமுகப் பகுதிகளையும் வெல்லெஸ்லி கம்பெனியிடம் சேர்த்து விட்டார். அதே ஆண்டில் தஞ்சாவூரையும், 1801-ல் ஊழல் மிகுந்த கர்னாடகத்தையும், அவுத்தையும் கம்பெனியின் ஆதிக்கத்திற்குள் அவர் கொண்டுவந்தார். கடற்கரையிலும் கங்கைச் சமவெளியிலும் ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது.

இவ் வெற்றிகளுக்குப் பிறகு, மராத்தியக் கூட்டமைப்பை அடக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மராத்தியப் படைகள் பல எல்லைகளில் அமைதியைச் சீர்குலைத்து வந்தன. 1802-ல் மராத்தியர்களிடையே பெரிய பிளவு ஏற்பட்டது. பல கட்சிகள் ஏற்பட்டன. அதனால், மராத்தியர்களின் அரசியலில் தலையிட ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. இந்தச் சமயத்தில் வெல்லெஸ்லியிடம், பீஷ்வா உதவி கோரினார். அவருடன், கவர்னர்-ஜெனரல், பேஸின் என்ற இடத்தில் ஒரு உடன்படிக்கையைச் செய்துகொண்டார். இதன்படி, பூனாவில் பிரிட்டனின் உதவிப் படையை அமைத்துக் கொள்வதற்கும், மற்றும் அவர்களுடைய அரசியல் விவகாரங்களைக் கட்டுப்படுத்தும் ஆதிக்கத்தையும் பெற்றார். இதனால், மற்ற மராத்தியத் தலைவர்களான ஸ்கிந்தியா, ஹோல்கார், பீரார், 1803-1805 வரை சுதந்திரம் வேண்டுமென்பதற்காகப் பெரும் போராட்டத்தை நடத்தினர். அஸ்ஸாயி போர்க்

களத்தில் ஆர்தர் வெல்லெஸ்லி ஸ்கிந்தியாவைத் தோற்கடித்தார். ஆனால், முழு வெற்றியும் அவருக்குக் கிடைக்கவில்லை. பீஹார் மீதும் வெற்றிகண்டார். லேக் என்பவர் டில்லியினுள் நுழைந்து, லாஸ்வாரி என்ற இடத்தில் ஸ்கிந்தியாவின் படைகளை வென்றார். ஆனால், ஹோல்கார் இன்னும் பணியவில்லை. அவர் போரைத் தொடர்ந்து நடத்தினார். இதனால் பெரிய அளவில் போர் ஆரம்பமாயிற்று. பந்தல்கண்டிலும் ராஜபுதனத்திலும் வெல்லெஸ்லி ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தி, டில்லி, அவுத் ஆகிய பகுதிகளுக்குச் செல்லாதவாறு பலமான எல்லையும் அமைத்தார்.

பாரத்பூர் கோட்டையை முற்றுகை செய்த லேக், ஜாட்டுகளால் முறியடிக்கப்பட்டார். மற்றும் மத்திய இந்தியாவில் பல தோல்விகள் ஏற்பட்டன. இப் போர்களினால் பலத்த பொருட் சேதம் ஏற்பட்டது. கல்கத்தாவில் அவர் நிர்மாணித்த கட்டடத்திற்கு ஏராளமான பொருள் செலவாகியது. அதனால் கம்பெனியின் இயக்குநர்கள் வெல்லெஸ்லியைத் திருப்பி அழைத்துக் கொண்டனர். அவர்கள் மீண்டும் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றவேண்டிய அவசியத்தை உணர்ந்தார்கள். மிகவும் வயதாகிய கார்ன்வாலிசை மீண்டும் கவர்னர்-ஜெனரலாக அனுப்பி வைத்து, மராட்டியர்களுக்கு அடிபணிய வைத்தார்கள். அவருக்குப் பின் பதவியேற்ற பார்லோகாலத்தில், இந்துஸ்தானத்தின் ஆங்கிலேயரின் தெற்கு எல்லை ஜமுனா என்று அறிவிக்கப்பட்டது. இதனால், ராஜபுத்திர நாடுகளும் மத்திய இந்தியாவில் உள்ள கோட்டைகளும், மராத்தியர்களின் தாக்குதல்களுக்குள்ளாயின. சில வருடங்களுக்குள், தலையிடாக் கொள்கை பயனற்றது என்று அவர்கள் அறிந்துகொண்டார்கள்.

இந்தியாவில் அதிகாரம் நீடித்திருப்பதற்கு ஆங்கிலேயர்கள் எல்லைப்புறங்களைப் பலப்படுத்தவேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். எல்லைப்புறங்களில் ஆங்கிலேயர்கள் பழைய் குடிகளிடமும், போர் வெறி பிடித்த மக்களிடமும் சண்டையிட்டுக் கொண்டே இருந்தனர். 1807-1813 மின்டோ என்பவர் கவர்னர்-ஜெனரலாகப் பதவியில் இருந்தார். வாரன் ஹேஸ்டிங்ஸ்மீது பழி சுமத்தியவர்களில் இவரும் முக்கியமானவர். இவர் வடமேற்கு எல்லையை இமயம் வரையிலும் நிர்ணயம் செய்யவேண்டுமென்றும், அதற்கும் குறைவாகச் செய்ய முடியாதென்றும் அறிவித்தார். இவருடைய காலத்தில் மெட்காஃப் என்பவர் ரஞ்சித் சிங்குடன் 1809-ல் ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டார். ரஞ்சித் சிங் பஞ்சாப்பைக் கைப்பற்றிய சீக்கிய அரசன். இந்த உடன்பாட்டினால் ஆங்கிலேயர்களின் ஆதிக்கச் செல்வாக்கு

சட்லெட்ஜ் வரையிலும் பரவியது. அவருக்குப் பின் பதவிக்கு வந்த மார்குவிஸ் ஹேஸ்டிங்ஸ் என்பவர் 1813–1823 வரை ஆட்சி செய்தார். அவர் காலத்தில் வங்காள எல்லையில் கூர்க்கர்கள் தொல்லைகள் புரிந்தனர். அதனால் அவர்களை அடக்கப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. 1816 வரையிலும் அந்த எல்லையில் தொடர்ந்து போர் நடைபெற்று வந்தது. 1816-ல் ஆக்டர் லோனி, மற்ற படைத்தலைவர்கள் அடைந்த தோல்விகளையெல்லாம் ஈடு செய்து எல்லைப்புறத்தை மலை அடிவாரம் வரை விஸ்தரித்தார். கம்பெனியின் சீன வாணிகத்தைப் பாதுகாப்பதற்காக ஹேஸ்டிங்ஸ் 1819-ல் சிங்கப்பூரைக் கைப்பற்றினார். சிங்கப்பூரைக் கைப்பற்றுவதற்கான முன் முயற்சி மலேயா பிரதிநிதியான ஸ்டாம்ஃபோர்ட் ரேஃபள்ஸ் (Stamford Raffles) என்பவரால் மேற்கொள்ளப்பட்டது. அவருக்குப் பின்பு வந்த ஆம்ஹெர்ஸ்ட் (Amherst) வடகிழக்கு எல்லையைப் பலப்படுத்தினார். பர்மியர்கள் அந்த எல்லையில் அடிக்கடி தொல்லைகளைக் கொடுத்து வந்தார்கள். அவர்கள் மணிப்பூரையும், அஸ்ஸாமையும் கைப்பற்றினர். ஆம்ஹெர்ஸ்ட் அவர்களை விரட்டி அந்தப் பகுதிகளை மீட்டனர். இந்தப்போரில், ஆங்கிலேய நிர்வாகிகளும், சிப்பாய்ப் படையும் பயனளிக்கவில்லை. ஆனால், கடற்படைதான் இப்போரில் வெற்றி அடைவதற்குப் பெரிதும் உதவியது. கடற்படையின் உதவியால் ரங்கூன் பிடிபட்டது. மேலும், ஐராவதி வரையிலும் முன்னேறினர். பிறகு, 1826-ல் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி அஸ்ஸாம், அராகன், டெனஸெரிம் (Tennasserim) கடற்கரை நமது ஆதிக்கத்திற்குள் கொண்டுவரப் பட்டன.

மத்திய இந்தியாவில்தான், தலையிடாக் கொள்கை மிகவும் அவசியமாகத் தேவைப்பட்டது ராஜபுதனத்திலும், பந்தல் கண்டிலும் மராத்தியப் படைகள், பத்தான் வீரர்களுடனும், பிண்டாரி கயவர்களுடனும் ஒன்று சேர்ந்து, எல்லா மக்களையும் கொள்ளையடிப்பதும், சூறையாடுவதும், தீவைத்தலும், கொலை செய்வதும், பயிர்களை அழிப்பதும் போன்ற பல இழிவான செயல்களைப் புரிந்தனர். பல ராஜபுத்திர அரச குடும்பத்தினருக்கு உதவி தருவதாக வாக்களித்திருந்ததால், இந்தப் பிரச்சினை மிகவும் சிக்கலாக்கப்பட்டது. பல முறைகள் எச்சரிக்கைகளை விடுத்தும், அவர்களிடமிருந்து எவ்விதமான பதிலும் வரவில்லை. இக் குழப்பமான நிலை ஒரு பக்கத்தில் இருக்கும்பொழுது மற்ற அண்டைநாடுகளில் பல சதித் திட்டங்கள் உருவாகின. 1817–18-ல் ஹேஸ்டிங்கஸ் முழு முயற்சி எடுத்து பிண்டாரி கயவர்களை ஒடுக்கியதில் மீண்டும் மராத்தியத் தலைவர்கள் கிளர்ச்சி செய்ய

ஆரம்பித்தனர். அதற்குப் பின்பு அவர்களுடனும் ஓர் உடன்பாடு செய்யப்பட்டது. கொடுங்கோன்மைக்குப் பெயர்போன பாஜிராவ் பீஷ்வா, பேஸின் உடன்படிக்கையை எதிர்த்துப் பல முறை சதித் திட்டங்களைத் தீட்டியிருக்கிறார். தவிர, பிரிட்டிஷ் அதிகாரியான எல்பின்ஸ்டனையும் தாக்கியதால், அவரைத் துரத்திப் பிடிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மராத்திய அரச பரம்பரையிடத்திலிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றிய பீஷ்வாவின் ஆட்சி பாஜிராவுடன் முற்றுப்பெற்றது. பாஜிராவுக்கு நிறைய ஓய்வுப் பணம் கொடுத்து கான்பூருக்கு வெளியே அவர் வசிப்பதற்கு வசதிசெய்து கொடுக்கப்பட்டது. மராத்தியர்களைத் திருப்தி செய்வதற்காக, சதாரா என்ற சிறிய ஒரு ராஜ்யத்தை மட்டும் ஆங்கிலேயர் விட்டு வைத்தார்கள். பாஜிராவின் சுவீகாரபுத்திரன் நானா சாகிப் என்பவர் பின்பு வரலாற்றில் இடம் பெறுகிறார். நாகபுரியைச் சேர்ந்த பான்ஸ்லே ராஜாவும் ஆங்கிலேயர்களை எதிர்த்து வந்ததால், அவருடைய வடக்கு சாகர் பகுதிகளை இழக்க நேரிட்டது. ராஜபுதனத்திலுள்ள ஆஜ்மீரை, ஸ்கிந்தியா சரணடையவேண்டி நேரிட்டது. அதைப்போலவே ஹோல்காரின் பகுதிகளும் குறைக்கப்பட்டன. ராஜபுதன இராச்சியங்களில் பல உடன்படிக்கைகளைச் செய்து, அவர்களுக்கு முன்பு கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றினார்கள். இவ் உடன்படிக்கைகளைச் செய்வதில் மால்கோல்மும், மற்றும் பலரும் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள். ராஜபுதனத்தில் நுழைந்து மராத்தியர்கள் கொடுமை செய்வது நின்றது. அப்பகுதிகளில் பந்தி, ஜயப்பூர் போன்ற இராச்சியங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. மற்றும், போபால் போன்ற புதிய இராச்சியங்களும் இதனால் ஏற்பட்டன. இந்தியா முழுவதும் ஆங்கிலேயரின் தனிப்பட்ட ஆதிக்கம் நிறுவப்பெற்றது. இந்த ஆதிக்கத்திற்கு இடையூறாக இருந்த பல தடைகள் ஒழிந்தன. இமாலயத்திற்குத் தெற்கிலும், சட்லெஜ் நதிக்குக் கிழக்கிலும், சிந்து நதிக்குக் கீழாகவும் இருந்து வந்த பல திரைகள் ஆங்கிலேய ஆதிக்கத்திற்கு வழிவிட்டு விலகின. 1835-லிருந்து ஆங்கிலேய அரசரின் சின்னமிட்ட நாணயங்கள் இந்தியாவில் வழங்கப்பெற்றன. அதற்கு முன்பு சுமார் ஐம்பது ஆண்டுகளாகக் கம்பெனி வழங்கிய நாணயங்களில் முகலாய அரசரின் கீழ்ப்பட்டவர்கள் என்று உணர்த்துகின்ற சின்னம் பொறிக்கப்பட்டிருந்தது.

கம்பெனியின் ஆட்சி நடந்துவந்தது என்றாலும், வாரன் ஹேஸ்டிங்ஸின் காலத்திலிருந்தே அந்த ஆட்சியில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. கம்பெனியின் ஆட்சி 1784–86 சட்டங்களுக்குப் பிறகு, பாராளுமன்றத்தின் பிடியில் சிக்கியது. ஆனால்,

பாராளுமன்ற ஆதிக்கம் மறைமுகமாகத்தான் செலுத்தப் பட்டதே தவிர, நேரடியாகச் செலுத்தப்படவில்லை. கட்டுப் பாட்டுக் குழுவினரின் உத்தரவுகள் பாராளுமன்றத்தின்மூல மாகத்தான் அனுப்பினார்கள். இவ்வித உத்தரவுகளை இரகசியக் குழுவினருங்கூட மாற்றியமைக்க முடியாது. கவர்னர்-ஜென ரலின் நியமனத்தில் கம்பெனிக்குப் பெயரளவில்தான் ரத்து அதிகாரம் இருந்தது. ஆனால், 1844-ல் எல்லன்பரோவைச் சட்ட மூலமாகவே கம்பெனி திருப்பி வரவழைத்துக்கொண்டது. நடைமுறையில் கேபினட்டுக்கு, கம்பெனியின் விவகாரங்களில் தலையிட மேன்மையான அதிகாரம் இருந்ததென்பதை பிட் உணர்த்தினார். மேலும், நிர்வாகத்தில் அதிகத் தலையீடு இல்லாத படி பார்த்துக்கொள்வதற்கு வர்த்தகக் குழுவின் தலைவரே வழக்கமாக முதல் தர அமைச்சர்களாப் பணியாற்றுவதும் உண்டு; எடுத்துக்காட்டாக டன்டாஸ், காஸல்ரே, கேனிங் அல்லது சர் சார்லஸ் வுட் என்பவர்கள் வர்த்தகக் குழுத் தலைவர் களாகவும், மந்திரிகளாகவும் இருந்தனர். இவர்கள்மூலமாகக் கேபினட் அதனுடைய அதிகாரத்தைச் செலுத்தியது. கம்பெனி யின் சாசனம் ஒவ்வொரு முறையும் புதுப்பிக்கப்படும்பொழுதும், ஒவ்வொரு புதிய பிடிப்பை அரசாங்கம் அதன் கையில் வைத்துக் கொண்டது. நாளடைவில் ஆங்கிலேய மக்களின் விருப்பத்திற் கிணங்க, கம்பெனியில் வேலை பார்க்கிறவர்கள் அரசாங்க ஊழி யர்கள் என்று மதிக்கப்பட்டனரே தவிர, வர்த்தகர்கள் என்று கருதப்படவில்லை. கவர்னர்கள் நியமனம், கவுன்சில் அங்கத் தினர்களுடைய நியமனங்களைத் தவிர, மற்ற கம்பெனி அதிகாரி களைக் கம்பெனியே நியமனம் செய்துகொள்ளலாம். இந்த மாறு தலில் வாரன் ஹேஸ்டிங்ஸ் மிகவும் பாதிக்கப்பட்டார். 1813ஆம் ஆண்டு புதுப்பிக்கப்பட்ட சாசனம், கம்பெனியின் இந்திய வர்த்தகத் தனி உரிமையை ரத்து செய்தது. மேலும் ஆங்கிலிகன் திருச்சபையையும் இங்கு நிறுவினார்கள். முதன்முதலாக ஆங்கிலேயரின் இறைமை இந்தச் சட்டத்தின்மூலமாக அறிவிக் கப்பட்டது. 1833-ல் இயற்றப்பெற்ற மற்றொரு சாசன சட்டத் தில் கம்பெனியின் எல்லாத் தனி வர்த்தக உரிமைகளும், சீனா வுடன் வர்த்தகம் செய்தது உட்பட ரத்து செய்யப்பட்டன. எல்லாப் பதவிகளையும் வகிக்க இந்தியர்கள் தகுதி பெற்றவர்கள் என்றும், மதமோ, பிறப்பிடமோ, நிறமோ, ஜாதியோ, எந்தக் காரணமும் அவர்களுக்குத் தடையாக இருக்கக் கூடாதென்று இச் சட்டம் அறிவித்தது.

பொதுவாக, கவர்னர்-ஜெனரல் பதவிகளுக்குப் பல சிறப் பானவர்களையும் தகுதி பெற்றவர்களையும், மந்திரிகள் அளவில்

அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். கம்பெனி அதிகாரிகள் வழக்கமாக இப் பதவிகளுக்கு நியமனம் செய்யப்படுவதில்லை. ஆனால், சில விதிவிலக்குகளும் உண்டு. மிகச் சிறப்பான புகழ் அடைந்த ஷோர், திருப்தி தராத பார்லோ அல்லது சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு மிகவும் தனிப்பட்ட சூழ்நிலையில் நியமனம் செய்யப்பட்ட ஜான் லாரன்ஸ் ஆகியோர் அவர்களுடைய தனிச் சிறப்புகளுக்காக நியமனம் செய்யப்பட்டார்கள். இதேவிதமாகப் பம்பாய், சென்னை மாகாணங்களுக்குக் கவர்னர்களும் நியமிக்கப்பட்டார்கள். எல்பின்ஸ்டனும், மன்ரோவும் விதிவிலக்குகள், புதிதாக நியமனம் செய்யப்படும் கவர்னர்-ஜெனரல்களுக்கு நிறைய அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இவர்களுக்குச் சட்டமியற்றவும், சீர்திருத்தங்களைக் கொண்டுவரவும் அதிகாரம் தரப்பட்டிருந்தது. நல்லதோ, கெட்டதோ காரன்வாலிஸின் முயற்சியால் வங்காளத்தில் நிரந்தர நிலத் தீர்வை முறை கொண்டுவரப்பட்டது. இந்த முறை ஏற்படுவதற்கு இத் துறையில் மிகுந்த அனுபவம் பெற்ற ஷோர் உதவியும், கேபினட்டின் உதவியும் காரன்வாலிசுக்கு உறுதுணையாக இருந்தன. முகலாயர் காலத்திலிருந்து வரிவசூலிக்கின்ற பணியை ஆற்றும் ஜமீன்தார்கள், எல்லா நிலத் தீர்வையைப் பொறுத்த அளவில் நிலத்தின் சொந்தக்காரர்களாகப் பாவிக்கப்பட்டார்கள். சிவில் சேவை புரியும் அதிகார வகுப்பினரை உருவாக்குவதற்குக் கால்கோள் விழா நடத்தியவர் காரன்வாலிஸ் எனலாம். மேலும், அவர் அதிகாரிகள் சம்பளங்களை உயர்த்தினர். அவர்கள் தனிப்பட்ட முறையில் செய்து வந்த வர்த்தகத்தை ஒழித்தார். இந்தத் தனிப்பட்ட முறையில் வர்த்தகம் செய்து வந்ததால், இரண்டு தலைமுறைக்குள் பலர் 'நவாப்புகளாக' உயர்ந்துவிட்டார்கள். வங்காள ஜில்லா முறையை நிர்ணயம் செய்வதற்குப் பல பரிசோதனைகள் 1830 வரையிலும் நடத்தப்பட்டன. ஒவ்வொரு ஜில்லாவும் ஓர் ஆங்கிலேயக் கலெக்டரின் ஆட்சியில் ஒப்படைக்கப்பட்டது. அவர்களுக்கு நிர்வாக அதிகாரங்களும், நீதி வழங்கும் அதிகாரங்களும் தரப்பட்டன. தவிர, ஜில்லா நீதிபதிகளும், அவர்களுடைய முகாம்களும், மேல்முறையீடு நீதிமன்றங்களும், ஒழுங்காக நீதியை வழங்கக் காரணங்களாக இருந்தன. இருப்பினும் சில குறைபாடுகள் இருந்தன. ஏனெனில், வழக்காடுவதில் இந்தியர்களுக்குள்ள ஆர்வமும், குறைந்த சம்பளங்களைப் பெறுகின்ற காவலர்களும் முஸ்லீம் சட்டத்தின் செப்பமற்ற தன்மையும் நீதி வழங்குவதில் ஏற்படுகின்ற சில குறைபாடுகளுக்குக் காரணங்களாக இருந்தன.

ஒருவகையில், நமது ஆட்சி மிதமானதாகவே இருந்தது; அல்லது இரண்டு வகை எண்ணங்களுடையவர்களிடம் அமைந்

திருந்தது. அதில் ஒரு வகையினர், நன்கு பயிற்சி பெற்ற அரசியல் நிர்வாகிகள். மெட்கால்ஃப், மன்ரோ, லாரன்சுகள் இந்த வகையினரைச் சார்ந்தவர்கள். அவர்களுடைய பரிவும் அனுபவமும் இந்திய மக்களிடம் அனுதாபத்துடன் இருக்கவேண்டுமென்பதை எடுத்துக்காட்டின. சிறுவயதில் அவர்கள் இந்தியாவில் வேலைசெய்ய வந்தார்கள். அப்படியே அவர்கள் அங்கு நிலைத்து நின்றுவிட்டார்கள். முப்பது ஆண்டுகள், அல்லது இருபது ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் அவர்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு தாய் நாட்டிற்குச் சென்றார்கள். சிலர் இந்தியப் பெண்களையும் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்களுக்குக் குழந்தைகளும் பிறந்தன. அவர்களுடைய கொள்கைகள் வெல்லெஸ்லியைச் சார்ந்தவை. போரில் வெற்றிபெற்ற ஆங்கிலேய ஆதிக்கத்தை நிலைநாட்டுவது என்பதில் அவர்கள் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஆனால், அவர்களுடைய உணர்ச்சி வாரன் ஹேஸ்டிங்கைச் சார்ந்தவை. இவர்களுடைய முயற்சியினால், பல சுதேசநாடுகளுடன் உடன்படிக்கைகள் செய்துகொண்டனர். தலைநகரான டில்லிக்கும், மற்ற மாகாணங்களுக்கும் உள்ள உறவைப் பல வகைகளிலும் நிலைநாட்டினார்கள். அவர்களுடைய சாதனையில் வங்காளத்திற்கப்பால், குறிப்பாக வெற்றிபெற்ற பகுதிகளில் மாகாணங்களை அமைப்பதும், அங்கு நிலத் தீர்வைகளை ஏற்பாடு செய்வதும், இந்திய முறைப்படி நீதிகளை வழங்குவதும் போன்ற நல்ல செயல்களைச் செய்தார்கள். இந்த நன்மைகள் எல்லாம், நிலத்தில் வேலை செய்கின்ற விவசாயிகளுக்கு ஏற்றதாயும், அவர்கள் பயன்பெறுமாறும் செய்தனர். மற்றொரு வகையினர், கிறித்துவ மதப் பிரசாரம் செய்தனர். ஆங்கிலிகன் மதம் இங்கே பரவ அவர்கள் முயற்சி செய்தனர். மற்றும் பலர் மக்களுக்கு மிக இன்றியமையாது தேவைப்பட்ட சீர்திருத்தங்களைக் கொண்டுவந்தார்கள். 1828-35 வரை கவர்னர்-ஜெனரலாகப் பணியாற்றியவர் வில்லியம் பென்டிங் பிரபு என்ற விக் கட்சியைச் சார்ந்தவர். அவர் 'சதி' எனப்படும் இந்து விதவைகள் உடன்கட்டை ஏறுதல் என்ற பழக்கத்தை அடியோடு நிறுத்தினார். மற்றும், வில்லியம் ஸ்லீமேனுடன் சேர்ந்து தக்குகள் என்ற இரகசிய கொலைகாரக் கும்பலை ஒடுக்கினார். ஒருவகையில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற நோக்கமாகவும் எல்லாப் பதவிகளிலும், தகுதிபெற்ற இந்திய அதிகாரிகளை நியமனம் செய்தார். 1833ஆம் ஆண்டின் சாசனச் சட்டப்படி, கவர்னர்-ஜெனரல் கவுன்சிலுக்கு ஒரு புதிய சட்ட ஆலோசகரும் நியமிக்கப்பட்டனர். முதன்முதலாகச் சட்ட ஆலோசகராக நியமிக்கப்பட்டவர் மெக்காலே என்பவர். அவருடனும், மெட்கால்ஃபுடனும் ஆலோசனை செய்து ஆங்கிலமொழியை ஆட்சி மொழி

யாகவும், பயிற்சி மொழியாகவும் செய்தால் முன்னேற்றம் ஏற்படும் என்று கருதினர். மற்றும் ஆங்கிலமயமாக்கும் பல சீர்திருத்தங்களையும் செய்தார். 1843-லிருந்து இந்தியாவுக்கும் சூயஸ் கால்வாய்க்கும் நீராவிக் கப்பல் போக்குவரத்தை ஆரம்பித்து வைத்தார்கள். நாடு கடத்தப்படும் தண்டனையின் காலம் குறைக்கப்பட்டது. இந்தியாவுக்கு அதிகமான ஆங்கிலேயப் பெண்களை அழைத்து வந்தார்கள். வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்திலேயே ஸ்வார்ட்ஸ் (Swartz), பாப்டிஸ்ட் கேரி (Baptist Carey) ஆகிய சமயப் பிரசாரகர்கள் இருந்தார்கள். கிறித்துவர்களின் செல்வாக்கு இப்பொழுது மிகவும் அதிகமாகப் பரவிவிட்டது. ஸ்காட்லாந்தைச் சார்ந்த லாரன்சும், வட அயர்லாந்தைச் சார்ந்த லாரன்சும் சமயப்பற்று மிக்கவர்கள். நிக்கல்சன் என்ற மிகச் சிறப்பான போர்வீரருங்கூட, கிறித்துவ மதத்தைப் பரப்ப கூட்டங்களைக் கூட்டிப் பிரசாரம் செய்தார். இவ்விதமாகப் பெரிய இராணுவ அதிகாரிகள் சமயப் பற்றுக்கொண்டு பிரசாரம் செய்தது கேள்விப்படாததாகும்.

ஆங்கிலேய இனத்தின் மிகச் சிறப்பான மக்கள் இன்னும் கத்தி பிடித்துக்கொண்டு அவர்களை அவர்களே பாதுகாத்துக் கொள்ளுகின்ற நிலைமை இருந்தது. லண்டனிலிருந்து அவர்கள் நெடுந்தொலைவிற்கு அப்பால் இருந்தார்கள். இருப்பினும், அவர்களுடைய பெருமுயற்சியால், பிரிட்டிஷ் ஆட்சியை நிறுவினார்கள். ஆனல், அப்பொழுது இந்தப் பேரரசுக்கு ஆபத்து நேரிடும் நிலைமையும் காத்திருந்தது. நெப்போலியனுடைய போர்களினல் வெல்லெஸ்லியும் மின்டோவும், ஃபிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான சிலோன், மோரீசு, ஜாவா ஆகிய பகுதிகளைக் கைப்பற்றினர். அந்த அபாயம் தீர்ந்தவுடன், நேச நாடாக இதுவரை இருந்த ரஷ்யாவினல் ஆபத்து நேரிடும் சூழ்நிலை உருவாகியது. பத்தொன்பதாவது நூற்றாண்டு முழுவதும் இந்தப் பிரச்சினையில்தான் நமது கவனம் செலுத்தப்பட்டது. துருக்கியை ஆதரித்ததும், மற்றும் இமாலயத்திலிருந்து காஸ்பியன் வரையிலுள்ள முகமதிய அரசியலில் நுழைந்து குழப்பியதும், ரஷ்யாவிடமிருந்து ஏற்படக்கூடிய அபாயத்தைத் தடுப்பது தான் இப் பிரச்சினையாகும். எந்தச் சமயத்தில் ரஷியாவின் அபாயம் ஏற்படுமோ என்பதுதான் வெளிவிவகாரத் துறையிலும், இந்திய அரசாங்கத்திலும் அப்பொழுது ஒரே பேச்சாக இருந்தது. பாரசீகத்தில் ரஷ்யாவின் செல்வாக்கு அதிகமாகக் காணப்பட்டதால், நெருக்கடியும் சமீபத்தில் வந்துவிட்டதென்று பால்மர்ஸ்டன், அப்பொழுது 1836-ல் இந்தியாவின் கவர்னர்-ஜெனரலாக இருந்த ஆக்லண்டிடம் எச்சரித்தார். விக் கேபினட் தேர்ந்

தெடுத்த இவர், பழகுவதற்கு இனியவராக இருந்தபோதிலும் பலவீனமானவர். அந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் பாரசீகத்திற்கும் இடையேயுள்ள போரிடும் மக்களைக் கட்டுப் படுத்தியது மூன்று நாடுகள். வடமேற்கு எல்லைப்புற பிரச்சினை களைச் சமாளிக்க, பஞ்சாப், காஷ்மீரம் ஆகிய பகுதிகளின் அரச ரான சீக்கியர் ரஞ்சித் சிங் என்பவருடன் ஓர் உடன்படிக்கையை ஆங்கிலேயர்கள் செய்துகொண்டனர். அவருடைய தெற்கு எல்லையில் உள்ள சிந்துவெளிப் பிரதேசத்தைச் சார்ந்த அமீர்கள் கீழ் சிந்துவெளியையும், பம்பாயிலிருந்து மலைத்தொடருக்குச் செல்லும் பகுதிகளையும் ஆட்சி செய்து வந்தனர். இந்த அமீர் களுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டனர். அடுத்தது, ஆப் கானிஸ்தானத்துடன் ஏற்பட்ட ஒப்பந்தம். ஐம்பது ஆண்டு களுக்கு முன்பு இந்தியாவை ஆட்டி வைத்த ஆப்கானிஸ்தானம் இப்பொழுது வலிவிழந்துவிட்டது. இந்த ஆப்கானிஸ்தானம், பிஷாவரைச் சீக்கியர்களிடமும், ஹீரட்டை அந்த நாட்டைச் சார்ந்த ஓர் இளவரசனிடமும் இழந்துவிட்டது. பத்து ஆண்டு களுக்கு முன்பு, டோஸ்ட் முகமது என்பவர், காபூல், கஜினி ஆகிய பகுதிகளை ஆண்டார். 1837 இறுதியில், ரஷ்யப் பிரதிநிதி யின் தூண்டுதலால் பாரசீகம், ஹீரட் நகரை முற்றுகையிட் டது. இதையொட்டி, முதல் ஆப்கானியப் போர் ஆரம்பமானது.

இந்தப் போர் ஏற்படுவதற்கு, ஆக்லண்டும் அவருடைய ஆலோசனையாளர்களுமே பொறுப்பாவார்கள். தனிப்பட்ட முறையில் டோஸ்ட் முகமதுவிடம் நமக்கு எந்தவித கோபமும் இல்லை. வடக்கிலுள்ள நமது பிரதிநிதியின் அறிக்கையிலிருந்து அவரை ஆங்கிலேயரின் நண்பனாக்க முடியும் என்று தெரிய வருகிறது. அப்பொழுது நமது பிரதிநிதியாக இருந்தவர், அலெக் சாந்தர் பர்ன்ஸ் என்பவராவார். ஆங்கிலேய அரசாங்கமும் இவரைப் போன்ற கருத்தையே கொண்டிருந்தது. ஆனால், வில்லியம் மேக்னட்டன் என்பவருடைய ஆலோசனையின்பேரில் ஆக்லண்ட் ஒரு நிரந்தரமான தடுப்பை ஏற்படுத்தவேண்டு மென்று கருதி, அவசரப்பட்டு போரில் இறங்கிவிட்டார். இதனால் பஞ்சாப்பின்வழியாகப் படைகளைச் செலுத்தவேண்டியதாயிற்று. பஞ்சாப்பின் ஒத்துழைப்பையும் பெறவேண்டியதாயிற்று. இதில் பஞ்சாப் சம்பந்தப்பட்டதால் ஆப்கானியர்களுக்குக் கோபம் மூண்டது. பாரசீகர்கள் ஹீரட்டிலிருந்து பின்வாங்கிவிட்ட போதிலும், 1809-ல் அமீர் பதவியிழந்த ஷா ஷூஜா என்பவரை, அவருடைய பிரதிநிதியாக வைக்க விரும்பினர். அவருக்குப் பலமோ, அல்லது செல்வாக்கோ கிடையாது. சமீபத்தில் டோஸ்ட் முகமதுவினால் அவர் தோற்கடிக்கப்பட்டவரேயாவர்.

அந்தச் சமயத்தில், எதிர்பார்த்துக்கொண்டிருந்தது நடந்தது. சீக்கியர்களுக்கு, அவர்களுடைய எதிர்காலத்தைப்பற்றி அவ நம்பிக்கை ஏற்பட்டது. அமீர்களுடன் செய்துகொண்ட உடன் பாட்டை மீறி, சிந்துப் பிரதேசத்தில் போரிடுமாறு ரஞ்சித் சிங் தூண்டினுர். 1839-ல் ரஞ்சித் சிங் இறந்தவுடன் அவர் களுடைய தலையிடு பகைமையை மூட்டியது. அந்த ஆண்டில் நமது முக்கியமான படை, காந்தகார் வரையிலும் முட்டிச் சென்றது; அங்கிருந்து காபூலுக்குச் சென்றது. ஷா ஷுஜாவின் உதவி நம்முடைய பலத்தைப் பொறுத்தே இருந்தது. அவருடைய பலவீனம் நன்ருகத் தெரிந்தது. டோஸ்ட் முகமது பின்பு சரணடைந்தார். 1841-ல் காந்தகார், கஜினி, காபூல், ஜலாலாபாத் ஆகிய இடங்களில்மட்டுமே ஆப்கானிய ஆட்சி நிலைத்தது. நிரந்தரமான கலகங்கள் ஏற்பட்டு வந்ததால், இந்தியாவுக்கும் அப் பகுதிகளுக்குமுள்ள தொடர்புகள் மிகவும் பாதிக்கப்பட்டன.

1841-42 பனிக்காலத்தில், காபூலிலும் எல்லாவித தவறு களையும் ஆங்கிலேயர் செய்தார்கள். பர்ன்ஸ், நவம்பர் மாதத்தில் கொல்லப்பட்டபொழுது அவர்களின் அழிவு ஆரம்பமாகியது. அந்த இடத்திலிருந்து காலி செய்வதற்காகப் பேச்சுவார்த்தை கள் நடக்கும்பொழுது, அடுத்த மாதத்தில், மேக்னுட்டனும் கொல்லப்பட்டார். 5,000 படைவீரர்களும், மற்றும் 12,000 சிப்பாய்களும் இருந்தபோதிலும், பிரிட்டிஷ் தளபதிகள் அவர் களைத் தாக்க முயற்சி செய்யவே இல்லை. ஆப்கானியர்களின் வாக்குறுதியை நம்பி, அவர்கள் ஜனவரி மாதத்தில் ஜலாலாபாத் திற்குப் பின்வாங்கினுர்கள். பனி மூடிய கணவாய்களில் அவர்கள் பின்வாங்கும்பொழுது சிலரைத் தவிர, மற்றெல்லோரும் சிறை செய்யப்பட்டார்கள். ஒரு சிலர் பிணையாக நிறுத்தப்பட்டார்கள். ஒரு இராணுவ டாக்டர்மட்டும் எப்படியோ தப்பி வந்தார். 1770-ல் சென்னையில் நடந்த இவ்விதமான நிகழ்ச்சியைத் தவிர, இதைப்போல் வேறு எப்பொழுதும் நடந்ததே இல்லை. எல்லன் பரோ பதவிக்கு வந்தவுடன் படையை உடனே திருப்பி அழைத் துக் கொண்டார். சிறைவைக்கப்பட்டிருந்தவர்களை மீட்க ஒரு முயற்சியும் செய்யவில்லை. மிகவும் காட்டமான ஷா ஷுஜா கொல்லப்பட்டார். முடிவில், அமைதியானநிலையும் செல்வாக்கும் படைத் தளபதிகளால் கொண்டுவரப்பட்டது. தளபதி நாட் என்பவர் காந்தகாரைக் கைப்பற்றினுர். பிஷாவாரிலிருந்து போலக் ஓர் உதவிப் படையைக் கொண்டு வந்தார். ஹென்றி லாரன்ஸ், சீக்கியரின் செல்வாக்கிலும் ஒரு படையைக் கொண்டு வந்திருந்தார். பின்பு காபூலுக்[illegible] [illegible]து செய்யப்

பட்டிருந்தவர்களை மீட்டனர். டோஸ்ட் முகமது மீண்டும் பதவியில் அமர்த்தப்பட்டார்.

இந்தப் போரில் நாம் கராச்சி துறைமுகத்தைக் கைப்பற்றி னோம். சிந்துவெளிப் பிரதேசத்தைப் பலப்படுத்தவேண்டு மென்றால், சிந்து அமீர்கள் நமது ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். நமது தோல்வியைக் கண்டு அவர்களுக்கு ஆறுதல் ஏற்பட்டபோதிலும், இப் பகுதியில் நுழைந்ததைக் கண்டு ஆத்திர மடைந்தனர். அதனால், எல்லன்பரோ, சார்லஸ் நேபியரைத் தேர்ந்தெடுத்து அமீர்கள் ஆட்சி செய்த பகுதிகளைத் தாக்க உத்தரவிட்டார். சார்லஸ் நேபியர் ஒரு சிறந்த போர் வீரர், ஆக்லண்ட் நியாயமாக நடந்துகொள்ளவில்லை என்பதை உணர்ந்திருந்தார். அமீர்களின் ஆட்சி அப் பகுதியில் எழுபது ஆண்டுகளாகத்தானிருக்கிறது. அவர்களுடைய ஆட்சி கொடுங் கோன்மை வாய்ந்தது. அதனால், அப் பகுதியைக் கைப்பற்றுவதே ஒரு வகையில் நியாயமாகும். 1843-ல் அவர் படையெடுத்துச் சென்று மியானி என்ற இடத்தில், பலூச்சி வாள்வீரர்களை விரட்டியடித்தார். மியானி என்ற இடம், சிந்து மாகாணத்தில் உள்ள ஹைதராபாத்தின் சமீபத்தில் இருக்கிறது. அவர், பல இடர்பாடுகளுக்கிடையே போரிடவேண்டி நேர்ந்தது. இந்தப் போர் நியாயமற்றது என்று பலர் கருதினார்கள். நேபியருக்கு முன்பு படைத்தளபதியாக இருந்த அவுட்ரேம்கூட இவ்வித மாகக் கருதினார். கம்பெனி இயக்குநர்கள்கூடப் பெயரளவில் இந்தப் போரைக் கண்டித்தார்கள். ஆனால், இது சரியில்லை என்று கூறும் பொறுப்பை பீல் கேபினட் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. அதனால் தயக்கத்துடன் இந்தப் போருக்கு அவர்கள் ஆதரவு அளித்தார்கள்.

இந்த மூன்று நாடுகளின் போட்டியில் சீக்கிய நாடும் சிக்கி யிருந்தது. அவர்கள், தங்கள் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக்கொண்டனர். ரஞ்சித் சிங்குக்குப் பிறகு பட்டத்திற்கு பலத்த போட்டியிருந்தது. தகுதியற்ற பலர் பரம்பரை வாரிசு கொண்டாடினர். அதைப் போலவே, பேராசை மிக்க பல பிரபுக்கள்கூடப் பட்டத்திற்குப் போட்டியிட்டனர். ஆனால், அவர் தன் வாழ்க்கையின் பெருமை மிக்க சாதனையான ஒரு பல மிக்க படையையும் விட்டுவைத்திருந்தார். அந்தப் படையில் 80,000 போர் வீரர்கள் பணியாற்றினர். அவர்களுக்கெல்லாம், ஐரோப்பிய அதிகாரிகளால், நவீன ஆயுதங்களைப் பிரயோகிக் கவும்கூட நல்ல பயிற்சி அளிக்கப்பட்டது. அந்தப் படையை அவர்கள் 'கால்ஸா' அல்லது 'தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்'

என்று அழைத்தனர். ரஞ்சித் சிங் இறந்தவுடன் அங்கே உள் நாட்டுப் போரும் பல கொலைகளும் நிகழ்ந்தன. பின்பு குழந்தை யான துலீப் சிங்கை; படையினர் அரசனாக ஏற்றுக்கொண்டனர். அவனுடைய அன்னை ஒழுக்கக்கேடானவள். அவளும் அவளுடைய காதலனும் சேர்ந்து நாட்டை ஆட்சி செய்ய முயன்றனர். ஆப்கானிஸ்தானமும் சிந்தும் சீக்கிய சிப்பாய் களைக் கலங்கவைத்தன. நமது தோல்வியைக் கண்டு அகமகிழ்ந் தனர் என்றாலும், அவர்கள் நமது திட்டங்களைக்கண்டு அஞ்சினர். மேலும் பலருக்கு, சீக்கியப் படை தோல்வியுறவேண்டுமென்ற எண்ணம் இருந்தது: 1845-ல் அவர்கள் சட்லெட்ஜைக் கடந்து டில்லியை நோக்கி முன்னேறினர்.

எல்லன்பரோவைக்கம்பெனி திருப்பி அழைத்துக்கொண்டது. அவருக்குப் பதிலாக, ஹார்டிஞ் என்பவர் கவர்னர்-ஜெனர லாக நியமனம் செய்யப்பட்டார். அவர் தீபகற்பப் போரில் நல்ல அனுபவம் பெற்றவர். ஆத்திரமின்றி அமைதியாகவே பிரச்சினைகளை அணுகும் ஆற்றல் பெற்றவர். அவர்மீது பீலுக்கு நிறைய நம்பிக்கை இருந்தது. அவர் நல்ல பாதுகாப்பு நடவடிக் கைகளை எடுத்தார். 1846 பிப்ரவரி மாதம் இடையில் பெரிய படைகளுடன் நான்கு களங்களில் போரிட்டனர். சோப்ரானில் (Sobraon) செய்த போர்தான், கடைசியானதும் கொடுமை யானதுமாக இருந்தது. பின்பு, லாகூரைக் கைப்பற்றினர்கள். அவருடைய பிரதம தளபதியான ஹூக் காப் (Hugh Gough) சிறிது நிதானமிழந்து ஆத்திரமாகப் போரிட்டார். இதனால், கண்ணை மூடிக்கொண்டு போரிடுகின்ற படையினருக்கு உதவி யாக ஆயுதங்களுங்கூட அனுப்பமுடியாத அபாயம் ஏற்பட்டது. குழிகளை வெட்டி அவைகளில் பதுங்கியிருக்கும் துருப்புகள், இப் படையினரைத் தாக்க ஆரம்பித்தால் அபாயம் ஏற்படும் எனக் கருதி, ஹார்டிஞ் சாதாரணத் தொண்டராகவே இப் போரில் பணியாற்றினர். சீக்கியர்கள், பல உடன்படிக்கைகளை இந்த ஆண்டில் செய்துகொண்டனர். சட்லெட்ஜுக்குக் கிழக்கேயுள்ள பகுதியையும் ஜலந்தர் ஜில்லா உட்பட ஹஸரா எல்லையையும் நமக்குக் கொடுத்துவிட்டார்கள். ஜம்முவைசார்ந்த இந்து ராஜா விடம் காஷ்மீரத்தை ஒப்படைத்தனர். மேலும் அவர்களுடைய கோட்டைகளையும் நம்மிடம் ஒப்படைத்து, சிறுவயதினனான அரசன் பெரியவனானவுடன் மீண்டும் தந்துவிடவேண்டுமென்று ஏற்பாடாயிற்று.

இப் பகுதியை இணைக்காமல் இருக்கமுடியாதா என்ற பிரச் சினையில் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. இரண்டு ஆண்டுகளில் அங்கிருந்த நமது பிரதிநிதி ஹென்றி லாரன்ஸ், அவருடைய

நம்பிக்கைக்குப் பாத்திரமான சிலருடன் சேர்ந்து பல அதிசய மான காரியங்களைச் சாதித்தார். அவருடன் இந்த நிர்வாகத்தில் ஒத்துழைத்தவர்கள், அவருடைய சகோதரன் ஜான், வழிகாட்டி களை அமைத்த லம்ஸ்டன், நிக்கல்ஸன், ஹாட்சன், ஹெர்பர்ட் எட்வர்ட்ஸ் ஆகியோராவர். ஜேம்ஸ் ஆபட், ஹஸராவில் உள்ள மற்றுமோர் எல்லையை நிர்வகித்தவர். 1848-ல் ஹென்றி லாரன்ஸ் ஓய்வில் சென்றிருந்தபொழுது சில பிரிட்டிஷ் அதிகாரி கள் கொல்லப்பட்டனர். இந்த நிகழ்ச்சியினால் இரண்டாவது சீக்கியப் போர் ஆரம்பமாகியது. இந்தப் போரைத் தவிர்த் திருக்க முடியாதா என்று லாரன்ஸ் சகோதரர்கள் கருதினர். அல்லது இப்பகுதிமுழுவதையும் இணைப்பதற்கான ஒரு வாய்ப்பை ஏற்படுத்தியிருக்க முடியாதா என்ற இந்த பிரச்சினைகள்தான் ஹார்டிஞ்சிற்குப்பிறகு பதவியேற்ற டல்ஹவுஸியை எதிர்நோக்கி யிருந்தன. 1849-ல் சிலியன்வாலாவில் நாம் அடைந்த சேதம் அளவு கடந்தது. மேலும், சீக்கியர்கள் தயாராவதற்குப் போதிய அவகாசம் கொடுக்கப்பட்டது. இக் காரணங்களினால் கேபினட் படைத்தலைவன் காப்பை (Gough) மாற்றி, நேபியரை இங்கே நியமனம் செய்தது. ஆனால், பிப்ரவரி மாதத்தில் காப் (Gough) குஜராத்தில் ஒரு பெரிய வெற்றி பெற்று, தான் இழந்த பெயரை மீட்டுக்கொண்டார். சீக்கியப் படைகள் முறியடிக்கப்பட்டன. அவர்களுடைய மகாராஜாவைப் பதவியிலிருந்து இறக்கினார்கள். 'மிகவும் அவசியமானது' என்று டல்ஹவுஸி கருதி, தன்னுடைய சொந்தப் பொறுப்பில் பஞ்சாப்பை இணைத்துக்கொண்டார். இந்தப் பெரும் பகுதியையும், மற்றும் எல்லைப்புற மாகாணத் தையும் ஆட்சிசெய்ய மூன்றுபேர் கொண்ட ஒரு குழுவை ஏற்படுத் தினர். அவர்களில், ஹென்றியும் ஜான் லாரன்ஸும் இரண்டு அங்கத்தினர்களாவர்.

1848-56-ல் ஏற்பட்ட டல்ஹவுஸி நிர்வாகத்தில் பல தவறு களும், அபாயங்களும், நற்குணங்களும் ஒருங்கே அமைந்தன. இவர் இளமைப் பருவத்தினர்; பீல் ஆதரவாளர். அதனால், அக் கட்சியில் காணப்பட்ட கடும் உழைப்பும், குறிக்கோளும் ஒழுக்க சிந்தனையும், சர்வாதிகாரச் சாயலும் அவரிடமும் காணப் பட்டன. எல்பின்ஸ்டன் அல்லது ஹென்றி லாரன்ஸ் ஆகியவர் களின் பரிவோ, அல்லது நல்லது கெட்டது என்பதைச் சரியாகப் புரிந்துகொண்டோ அவர் செயலாற்றினர். அதனால், சுய ஆட்சியைவிட நல்ல ஆட்சியை இந்திய மக்களுக்கு அளிப்பதே நல்லது என்று அவர் கருதினர். ரெயில்வேக்களை அமைத்தலிலும், டெலிகிராப்புகளை அமைத்தலிலும், மற்றும் பல பள்ளிகள் நிறுவு வதிலும், பொதுப்பணிகளைச் செய்வதிலும் அவர் மிகுந்த ஆர்வத்

தைக் காட்டினர். ஆனால், அவருடைய நல்ல நோக்கங்களை மற்ற வர்கள் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை. கம்பெனியின் பழைய ஊழியர்கள் அபாயத்தை எதிர்பார்த்தனர். 'இருபதுகளில் நமது ஆட்சி நியாயமாக இருந்தபோதிலும், பரிவின்றியும் நெகிழ்ச்சி யில்லாமலும் காணப்பட்டது' என்று மால்கோல்ம் எழுதினர். 'இந்தியாவில் உள்ள அத்தனைபேரும் நமது வீழ்ச்சியை எதிர் பார்த்து வருகிறார்கள்' என்று முப்பதுகளில் மால்கோல்ம் மீண்டும் எழுதினர். சந்தேகமில்லாமல், நமது வளர்ச்சி மிகவும் வேகமாகப் பெருகிவிட்டது. நமது ஆர்வத்திற்கும் ஓர் எல்லை இல்லை.

வெல்லெஸ்லியும் ஹேஸ்டிங்ஸும் பல பகுதிகளைப் பிடித்த பிறகு, நாட்டில் எதிர்வினை தோன்றியது. பென்டிங்கின் சீர் திருத்தக் கொள்கைகள் எப்படியிருந்தபோதிலும், குடகுப் பகுதி யையும், மைசூர் நிர்வாகத்தையும் அவர் ஏற்றுக்கொண்டார். அரசாங்கத்தின் ஆட்சி நல்ல நிலை எய்தியபோதிலும், நமது துணைப்படை உடன்படிக்கைகள் சகித்துக்கொள்ள முடியாத பலவித விளைவுகளை ஏற்படுத்தின. ஆங்கிலேய ஆதிக்கத்தி லுள்ள படைகள், துணைப்படை உடன்படிக்கைப்படி, சுதேச இராச்சியங்களைக் கட்டுப்படுத்தின. ஆனால், அந்தச் சுதேச இராச்சியங்களில் தகுதியின்மையும் ஊழல்களும் மிகுந்திருந்தன. 'நாற்பதுகளில்' கம்பெனி எந்த நியாயமான முறையிலும் புதிய பகுதிகளைத் தங்களுடைய ஆட்சியின்கீழ்க் கொண்டுவருவதற்குத் தயாராக இருந்தது. அந்த அடிப்படையில் டல்ஹவுஸி சுதந்திர நாடுகளுக்கும், கப்பம் கட்டும் நாடுகளுக்கும் உள்ள வேறுபாட் டினை உணர்ந்திருந்தபோதிலும், அவருடைய புதிய அவகாசியிலிக் கொள்கையினல், அரசர்கள் வாரிசு இல்லாது இறந்துவிட்டால் அப் பகுதி கம்பெனியின் ஆட்சிக்குள் இணைந்துவிடவேண்டு மென்று அறிவித்தார். அதனுல், சுவீகாரம் எடுப்பதை அவர் அங்கீகரிக்கவில்லை. வழக்கமாக, குழந்தையில்லாது ஓர் இந்து அரசன் இறந்துவிட்டால், சுவீகாரம் எடுத்துக்கொள்ளும் பழக்கம் இருந்து வந்தது. ஏனெனில், இறந்தவர்களுக்குச் செலுத்த வேண்டிய இறுதிச் சடங்குகளை அந்தச் சுவீகாரக் குழந்தைகள் செய்வார்கள். ஆனால், கவர்னர்-ஜெனரலின் உத்தரவின்றி இவ் விதம் சுவீகாரம் செய்துகொள்ள முடியாது என்று அறிவித்து விட்டதால் எதிர்ப்புக் கிளம்பியது. சில சமயங்களில் கவுன் சிலின் ஆலோசனையைக் கேட்டும், சில சமயங்களில் கவுன்சிலின் ஆலோசனையைக் கேட்காமலும் அவர் இந்தக் கொள்கையைப் பின்பற்றினர். மராத்திய நாடுகளான சத்தாரா, நாகபுரி, ஜான்ஸி ஆகிய நாடுகள் இந்தக் கொள்கையின்படி கம்பெனியின் ஆதிக்கத்தில் கொண்டுவரப்பட்டன. வயதான பீஷ்வா இறந்த

பிறகு, அவருடைய வாரிசான நானு சாகிப்புக்குப் பென்ஷன் பணம் கொடுக்க இயலாது என்று அவர் கூறிவிட்டார். கர்னுடக நவாப்பின் அரசபட்டத்தை ஒழித்துவிட்டார். ஹைதராபாத்தி லிருந்து பீராரின் ஆட்சியை எடுத்துக்கொண்டார். இதனுல், வருகின்ற வருவாயை வைத்துக்கொண்டு ஹைதராபாத்திலுள்ள படையைப் பாதுகாத்தார். பர்மியர்களிடமிருந்து பெகு என்ற மாகாணத்தையும் அவர் இணைத்துக்கொண்டார். அவரை யாரும் தடுக்கவில்லை என்ருல், டில்லியிலுள்ள மொகலாயர்களின் பட்டத்தையும் ஒழித்துவிட்டிருப்பார். கடைசியாக, அவர் தாய்நாடு திரும்பும்பொழுது அவுத்தையும் கைப்பற்றினுர். இரண்டு தலைமுறையாக அவுத் அரசர்களுக்குச் சரியான எச்ச ரிக்கை அளித்துங்கூட, அங்கே நிர்வாகம் சீர்திருந்தவில்லை. அவர்களால், அந்த மக்களுக்குத் துயரம்தான் ஏற்பட்டது. கம்பெனியின் மிகப் பழைய நேச நாடு அவுத். அதை இணைப்ப தற்கு எதிராக, ஹென்றி லாரன்ஸ், ஸ்லீமன் ஆகியவர்கள் ஆலோசனை கூறினுர்கள். ஆனுல், டல்ஹவுஸியுங்கூடச் சிறிது தயக்கத்திற்குப் பிறகுதான் இந்த முடிவுக்கு வந்தார்.

இப்படிப் பல நாடுகளை இணைத்ததால், பல எதிரிகளை அவர் உருவாக்கிக்கொண்டார். தாலுக்தார்கள் அல்லது நிலச் சுவான்தார்கள் அவர்களுடைய கொடுமைகளை நிறுத்திக்கொண் டார்கள். அரண்மனையில் உள்ள சில சுயநலக்காரர்களும், மற்றும் போரிடும் பரம்பரையினரும் பிழைப்பதற்கு வழியில் லாமல் போய்விட்டது. நிலத்தீர்வை ஏற்பாடுகளினுல் ஏராளமான நிலங்கள் கம்பெனிக்குச் சொந்தமாகிவிட்டன. சில நிலங்களைக் கட்டாயமாக விற்கவேண்டிய நிலையும் ஏற் பட்டது. பல ஆயிரக்கணக்கான பண்ணைகள் எவ்வித ஆதாரமு மின்றிச் சொந்தமாக்கப்பட்டிருந்தன. அவைகளை அரசாங்கம் பறிமுதல் செய்தது. டல்ஹவுஸி அதிகாரத்தைச் சரியாகப் பயன்படுத்தவில்லையென்று லாரன்ஸ் நினைத்தார். நிலம் வைத் திருப்பவர்களைத் தவிர, மற்றவர்கள் புதிதாக ஏற்பட்டிருக்கும் முன்னேற்றத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றனர்.

ரயில்வேக்களை ஏற்படுத்தியதும், மற்றும் சிறை சீர்திருத் தங்கள், பள்ளிகள், இந்து விதவைகள் மறுமணம் செய்துகொள் வதற்குச் சட்ட ஆதரவு, சிசு வதையைத் தடுப்பது, கிறிஸ்துவச் சமயத்திற்கு மதம் மாறியவர்களை ஆதரிப்பது ஆகியவையும் பழைய ஜாதிக்கட்டுப்பாடுகளைப்பேரளவில் பாதித்தன. இதனுல், வைதீகர்களுக்கு அதிருப்தி ஏற்பட்டது. அபினிக்கு வரிபோட்ட வுடன் சாதாரண மக்களுக்குக் கோபம் வந்துவிட்டது. ஆப்கா னியப் போர்களும், சீக்கியப் போர்களும், ஓரளவிற்கு ஆங்கிலேயப்

படையின் வலிவின்மையும் எடுத்துக் காட்டின. இதனால், முகமதியர்களின் வெறி மீண்டும் தூண்டப்பட்டது. இஸ்லாம் மதத்தைப் பின்பற்றுகிறவர்களிலேயே சில பிரிவுகள் இருந்தன. ஆப்கானியர்கள் சுன்னி பிரிவைச் சேர்ந்தவர்கள். பாரசீகமும் அவுத்தும் ஷியா பிரிவைச் சேர்ந்தவை.

இவ்வித மனநிலை ஏற்பட்டதால், நமது வலிமையின் அடிப்படைக் காரணமாக இருந்த படையிலேயே அதிருப்தி ஏற்பட்டுவிட்டது. நமது படையின் மிகச் சிறப்பானதும் பெரியதுமாக விளங்கியது வங்காளப் படை. அந்தப் படையிலேயே அதிருப்தி தோன்றியது. மொத்தப் படை வீரர்களில் இப் படையில் மட்டுமே அறுபது சதவீதம் வரையிலும் இருந்தனர். ஆனால், சென்னையிலும் பம்பாயிலும் இவ்விதத் தொல்லைகள் அதிகமாக இல்லை. அப் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்கள், ஜாதி மதக் கட்டுப்பாடுகளை அவ்வளவு பிரமாதப்படுத்தவில்லை. ஆனால், வங்காளப் படையில், நிறைய உயர்ந்த ஜாதியினரைப் படையில் சேர்த்துக்கொண்டதால் அவர்களுக்குப் பல சட்டபூர்வமான சலுகைகளும் நல்ல பென்ஷன்களும் கொடுக்க வேண்டியதாயிற்று. வெல்லெஸ்லி சகோதரர்களின் தலைமையில் அவர்கள் போரிட்டபொழுதும், மராத்தியப் போர்களிலும் அவர்கள் வீரத்துடன் போரிட்டுப் புகழைப் பெற்றனர். எனினும், அதற்குப் பிறகு அவர்களுடைய ஒழுக்கம் மிகவும் சீர் குலைந்துவிட்டது. சிப்பாய்க் கலகங்கள் அடிக்கடி ஏற்பட்டன. ஆப்கானிஸ்தானம் போன்ற தூரமான இடங்களில் அவர்கள் போரிடுவதற்கு அதிகப்படியான படி வேண்டுமென்று முணு முணுத்தனர். அவர்கள் கடலைக் கடந்து பர்மாவிற்குச் சென்று போரிட வேண்டுமென்றால், ஜாதி ஆசாரத்திற்கு இது ஒத்துக் கொள்ளாது என்று அறிவித்தார்கள். அனுபவம் பெற்ற சிப்பாய்கள் பதவி உயர்வு பெறும்பொழுது, வயது வந்தவர்களே அப் பதவிக்கு மேலிடத்திலிருந்து சிபாரிசு செய்யப்படுவதால், படைத் தளபதிகளின் ஆதரவுக்கு இடமில்லாமல் போகிறது. ஆங்கிலேயச் சிப்பாய்களுக்கும் இதைப்போன்ற முறையே பின் பற்றப்பட்டது.

அவுத் இணைக்கப்பட்டதே தவிர, அதன் படை இன்னும் கலைக்கப்படவில்லை. அதனால், பேரளவில் அவுத்திலிருந்து படை வீரர்கள் கம்பெனிப் படைகளில் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஓரளவிற்குச் சலுகைகள் பெற்றனர். ஆனால், இந்தச் சலுகைகளைப் பெற சீக்கியர்களும், பஞ்சாபிகளும், கூர்க்காக்களுங்கூட நிறைய பட்டாளத்தில் சேர்க்கப்பட்டனர். அவர்களையெல்லாம் அரசாங்கம் சரிவர நடத்தவில்லை என்ற பொதுவான அதிருப்தி

யும், குறிப்பாக அவர்களுடைய ஜாதிக் கட்டுப்பாடு ஒழிந்துவிடும் என்ற உணர்வும் அவர்களுக்கு ஏற்பட்டுவிட்டது. 1856-ல் டல்ஹவுஸிக்குப் பின் பதவி வகித்தவரான கேனிங், பட்டாளத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்கள் அனைவரும் இந்தியாவின் எந்தப் பாகத்திலும், கடல்கடந்து செல்லுவதற்கும் அங்கே போரிடுவதற்கும் கடமைப்பட்டவர்கள் என்று இராணுவப் பொதுவிதியை அவர் ஏற்படுத்தினர். மேலும், இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்பட்ட என்ஃபீல்ட் துப்பாக்கிகளுக்குப் போடும் தோட்டாக்கள் மாட்டுக் கொழுப்பினல் செய்யப்பட்டிருந்தன வென்றும், அத் தோட்டாக்களைப் போடுவதற்கு முன், அவைகளின் முன்பகுதியைக் கடிக்கவேண்டிய அவசியம் இருந்ததால், படைவீரர்களுக்கு மிகுந்த ஆத்திரம் ஏற்பட்டுவிட்டது 1857 ஆரம்பத்தில், படைவீரர்கள் இத் தோட்டாக்களை உபயோகிக்க மாட்டோம் என்று கிளர்ச்சி செய்தனர்.

சிப்பாய்களின் கலகம் ஆரம்பமானது. அதன் பின், படையினர் தங்கும் குடிசைகளைத் தீக்கிரையாக்கினர். மே பத்தாம் தேதியன்று மீரட் பட்டாளத்தைச் சேர்ந்த மூன்று பகுதிப் படையினர், எதிரில் கண்ட ஐரோப்பியரை எல்லாம் பிடித்துக் கொலை செய்தனர். டில்லியை நோக்கி அவர்கள் முன்னேறினர்.

வடிவத்தில் சிப்பாய்க் கலகமாகக் காணப்பட்டாலும், உண்மையில் இதை ராணுவக் கலகம் என்று சொல்லமுடியாது. ஆனல், இது பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இருந்த பிளவை மிக அதிகமாக்கிவிட்டது. இந்தக் கலகத்தில் எந்தவிதமான ஒற்றுமையும் காணப்படவில்லை. வடக்கிலும் அவுத்திலும் முகமதியர்களின் வெறியுணர்ச்சி அதிகமாக இருந்தது. அவர்களுடைய மத குருமார்களின் தலைமையில் பச்சைக் கொடி பிடித்து டில்லியை நோக்கி முன்னேறினர். எஞ்சியிருந்த முகலாயப் பேரரசை நிலைநிறுத்தவேண்டுமென்ற எண்ணம் அவர்களிடையே இருந்தது. மற்றொருபுறத்தில், நாஞ சாகிபும் ஜான்ஸி ராணியும், இந்து மராத்திய கூட்டரசாங்கத்தை நிலைநிறுத்தவேண்டுமென்று போர்க்கோலம் பூண்டனர். பிராமணர்கள், அவர்களுடைய புனித நகரமான காசியிலிருந்து வங்காளம் வரையிலும் தீவிரமாகப் பிரசாரம் செய்தனர். ஏதாவது ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்கவோ, அல்லது ஓர் இடத்தைத் தேர்ந்தெடுக்கவோ அவர்களால் முடியவில்லை; பல இடங்களிலும் சிதறியிருந்ததால் பல சிறு படைகளை அனுப்பி, இந்த இயக்கத்தை ஒடுக்கவேண்டியதாயிற்று. உண்மையில், ஆங்கிலேய ஆட்சிக்கு இது ஒரு பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. இக் கலகத்தையொட்டிய பல நிகழ்ச்சிகள் இந்தியர்களின் மனதில் பதிந்திருந்தன. 18ஆவது

நூற்றுண்டில் பதவியிலிருந்து விரட்டப்பட்ட ஒரு ரோஹிலாத் தலைவன் அவுத்தில் உள்ள பேரில்லியில் தன் கொடியை நாட்டினான். ஸ்கிந்தியா விசுவாசமாக இருந்தபோதிலும் அவருடைய குவாலியர் படைகள் நம்மை எதிர்த்து மிகவும் கொடுமையாய்ப் போரிட்டன. இதைப் போலவே, பாரத் பூரைச் சார்ந்த ஜாட்டுகளும், ஹைதராபாத் படையினரும் நம்மை எதிர்த்துப் போரிட்டனர். பம்பாய் மாகாணத்திலுங்கூட இலேசான முணுமுணுப்புகள் இருந்தன. ஆனால், உடனடியாகச் சுதேச படைகளைக் கலைத்து விட்டதால்தான் வடக்கில் லாகூரை யும் பிஷாவரையும் காப்பாற்ற முடிந்தது.

கடைசியாக, கலகம் நீடித்திருப்பதைக் கண்டு பிரிட்டிஷ் மக்கள் மகிழவேண்டும். ஏனெனில், ஐரோப்பியத் துருப்புகள் மிகவும் குறைந்த எண்ணிக்கையில் இருந்ததால்தான் இந்த நிலை ஏற்பட்டது என்பதை உணர்ந்தார்கள். ஏற்கெனவே, டல்ஹவுஸி இதை உணர்ந்திருந்தார். அதற்கேற்ப ஐரோப்பிய அதிகாரி களுக்கும், படை வீரர்களுக்கும் நிறைய சம்பளம் கொடுத்தால் இந்த நிலை மாறும் என்று அவர் கூறியும் இருந்தார். இந்தக் கிளர்ச்சி ஏற்படும்பொழுது 230,000 இந்தியப் போர் வீரர்களும், அதற்கு மாறாக, 40,000 ஐரோப்பியர்களுமே இந்தியாவில் இருந் தனர். இவர்களில் சிலர் பாரசீகத்திலும், சிலர் பர்மாவிலும், மற்றும் 13,000 பேர் பஞ்சாபிலும் சட்லெஜ் பகுதியிலும் இருந்த னர். பஞ்சாபிலிருந்து வங்காளம் வரையில் நீடித்திருந்த ஆயிரம் மைல் நீளத்திற்கு, மிகவும் பலவீனமான ஐரோப்பியப் படைகளே பாதுகாக்கவேண்டியிருந்தன. சில கேந்திர இடங்களான அலகா பாத்திலும், டில்லி ஆயுதக் கிடங்கிலும் அவர்களுடைய படை வைக்கப்படவே இல்லை. கல்கத்தாவிலிருந்து நூறு மைல் தூரத் திற்குத்தான் ரயில்வே போடப்பட்டிருந்தது. உதவிகளைத் துரிதமாக அனுப்புவதற்கு வேறு வழிகளைப் பின்பற்றவேண்டி யிருந்தது. நடந்து சென்றும், ஆற்று நீராவிப் படகுகளில் அனுப்பியும், அல்லது மாட்டு வண்டிகளில் அனுப்பியும் உதவி கள் எக்காலத்தில் போரிடுவர்களுக்குப் போய்ச் சேருவது? 'இது மிகவும் ஆபத்தானது' என்று ஜான் லாரன்ஸ் எழுதினார்.

ஆனால், சரியான தலைமைமட்டும் இருந்தால் எவ்வளவு தடைகள் ஏற்படினும், எதிர்ப்புகள் தோன்றினும், இறுதியில் வென்றுவிடலாம் என்ற அனுபவம் பொய்யாகவில்லை. பத்து ஆண்டுகளாகப் பஞ்சாப் சரியாகப் பணியவில்லை. எனினும், ஜான் லாரன்ஸ், எட்வர்ட்ஸ், மற்றும் அவர்களைச் சேர்ந்தவர்கள் அவர்களை ஒன்று திரட்டி டில்லியை நோக்கி முன்னேறியிருக்க

முடியும். இந்தக் குழப்பத்திலும், அங்கே நீதிமன்றங்களும் பள்ளிகளும் அமைதியாகவே நடைபெற்றன. நிக்கல்ஸன் மற்றும் அவருடைய ஆங்கிலேய வீரர்களின் துணிச்சலைக் கண்ட பிறகு, எல்லைப்புறங்களிலும் அவர்கள் கம்பெனியின் பக்கமாகவே இருந் தார்கள். சிந்துவெளியில்கூட பார்ட்ல் ஃபிரேரி (Bartle Frere) நல்ல முறையில் ஆட்சி செய்ததால், அவர்களுடைய நம்பிக்கை யைப் பெற்றிருந்தார். ஐரோப்பியத் துருப்புகள் இல்லாமல் அவர் அங்கே அமைதியை நிலைநிறுத்த முடியும். பாடியாலா போன்ற சீக்கியப் பகுதிகள் மிகவும் விசுவாசமாக இருந்தன. ராஜபுதனத்தில் உள்ள நிலைமையும் அமைதியாகவே ஜார்ஜ் லாரன்ஸ் தலைமையில் இருந்தது. வங்காளமும் பீகாரும் அழிந் திருக்கும்; ஆனால், ஒரு சில வீரர்களின் துணிச்சலினாலும் சில அதிகாரிகளின் உதவியாலும் கிளர்ச்சி ஒடுக்கப்பெற்றது. நேபாளத்திலிருந்து ஹென்றி லாரன்ஸ் கூர்க்கா படையை அனுப்பி வைத்தார். லட்சுமணபுரிக்கு, கோலின் கேம்ப்பெல் 4500 படை வீரர்களுடன் சென்று, அந்த நகரத்தை ஆட்டி வைத்த 10,000 துணிச்சலான கலகக்காரர்களை விரட்டினார். மற்ற சில நகரங்களில், சரியான முடிவைச் செய்யாததால் விளைவுகளும் மோசமாக இருந்தன. மீரட் போன்ற நகரங்களில் வயது முதிர்ந் தவர்கள் படைத் தலைவர்களாக இருந்தனர். அவர்களுடைய முடிவுகள் சரியானவையாக இல்லாதிருக்கலாம்; அல்லது இந்தி யர்கள் இன்னும் விசுவாசத்துடன் இருப்பார்கள் என்ற நம்பிக் கையை வைத்திருக்கலாம். வைசிராயாக இருந்த கேனிங் தைரியத்துடனும் நம்பிக்கையுடனும்தான் இருந்தார். ஆனால், அவரும், சில தவறுகளை இழைத்துவிட்டார். கூர்க்காக்களின் உதவியை ஏற்றுக்கொள்வதில் அவர் சிறிது காலதாமதம் செய்துவிட்டார்.

1857 இலையுதிர் காலத்தில், டில்லியையும் லட்சுமணபுரி யையும் கைப்பற்றியதால், அவசரமான நெருக்கடி நிலைமை மாறியது. டில்லியைப் பிடிப்பதற்கு ஆங்கிலேயத் துருப்பு களும், பஞ்சாப் மக்களும் பெரிதும் உதவி செய்தனர். ஜூன் மாதத்தில் முன்னேறிய படை, நகரத்திற்கு மேற்கேயுள்ள ரிட்ஜ் பகுதியைக் கைப்பற்றியது. ஆனால், மேற்கொண்டு தாக்குவதற்கு, அவர்கள் உதவிகளையும் துப்பாக்கிகளையும் எதிர்பார்த்திருந் தனர். அங்கே செப்டம்பர் மாதத்தில், நிக்கல்ஸன் கொல்லப் பட்டார். முகலாய அரசர் கைது செய்யப்பட்டார். அவரு டைய மைந்தர்களை ஹாட்சன் சுட்டுக் கொன்றார். முகமதியர் களின் முதுகெலும்பை முறித்துவிட்டதால் வடக்கிலே அவர் களுடைய எதிர்ப்புத் தணிந்தது. ராணுவ முக்கியத்துவமில்லாத

சில இடங்களுங்கூட, சாதாரணமக்கள் பட்ட துயரத்தாலும், சில வீரர்களின் துணிச்சலான செயல்களாலும் பின்பு முக்கியத் துவம் பெற்றுவிட்டன. கான்பூரில் அதிகாரிகள் நிறைய தவறு களைச் செய்துவிட்டார்கள். ஜூன் மாதத்தில் 400 ஐரோப்பிய வீரர்கள் எதிரிகளின் குண்டு வீச்சுகளை மூன்றுவார காலம், எந்த விதப் பாதுகாப்புமின்றிச் சகித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் சரண் அடைந்தவுடன் ஆற்றின் வழியாக அவர்களைப் பாதுகாப் புடன் அலகாபாத்துக்கு அனுப்பிவைப்பதாக நானு சாகிப் சொல்லி, அவர்கள் ஆற்றங்கரைக்குச் சென்றவுடன் அத்தனை பேரையும் படுகொலை செய்துவிட்டார். ஜூலை மாதம் ஹேவ் லாக்கின் படை நெருங்குகிறதென்று அறிந்தவுடன் நானு சாகிப் 200 பெண்களையும் சித்திரவதை செய்து, அவர்களை உயிருடனும், மற்றும் இறந்தவர்களையும் அருகிலிருந்த கிணற்றில் வீசியெறிந்து விட்டார்.

1857 ஆரம்பத்தில்தான், ஹென்றி லாரன்ஸ் அவுத் பகுதியின் பிரதம கமிஷனராக லட்சுமணபுரிக்குச் சென்றார். ஆனால், அங்கே ஏற்பட்ட கிளர்ச்சியை அவரால் தடுக்க முடிய வில்லை. அவரிடம் அப்பொழுது 1,000 ஐரோப்பியர் கொண்ட ஒரு படை இருந்தது. இருந்தாலும் கிளர்ச்சியாளர்கள் நகரத் தின்மீது முற்றுகையிட்டு, அவரையும் படையுடன் தொடர் பில்லாது பிரித்துவிட்டார்கள். ரெஸிடன்ஸி காரியாலயத்திற்கு அப் படையினர் விரட்டி அடிக்கப்பட்டனர். ஜூலை மாதம் அவர் கொல்லப்பட்டார். அவருக்குப் பின் வந்தவர்கள், அந்த நகரத்தை ஹேவ்லாக்கும் அவுட் ராமும் படைகளுடன் வரும் வரையில் எப்படியோ பாதுகாத்தனர். செப்டம்பர், நவம்பர் மாதங்களில், புதிய படைத் தலைவர் காலின் கேம்ப்பெல் அப் படை நிலையத்திலிருந்து காலி செய்ய உத்தரவிட்டார். 1858 இளவேனில் பருவம் வரும் வரையில் அவரால் லட்சுமணபுரி யைக் கைப்பற்ற முடியவில்லை. அவருடைய படைகள் மிகவும் சிறியவை. கான்பூரிலிருந்த கிளர்ச்சிக்காரர்கள் அவருடைய போக்குவரத்துகளுக்கு அதிகத் தொல்லைகளை அளித்தனர். மத்திய இந்தியாவில் நானுவின் தளபதி தாந்தி தோபியும் வீராங் கனை ஜான்ஸி ராணியும் பெரும் தொல்லைகளை அளித்தனர்.

1858-ல் அதிகப் படைகள் வந்து குவிந்தன. சீனப் போரில் ஈடுபட்டிருந்த சில வீரர்களை இங்கே திருப்பிவிட்டனர். பீலின் கடற்படையும் வந்து சேர்ந்தது. அந்த ஆண்டின் இறுதியில் மட்டும் 68 பிரிட்டிஷ் காலாட் படைகள் இந்தியாவில் இருந்தன. படிப்படியாக இந்தியத் துருப்புகளைக் கலைப்பதில் இந்தப் போரின் கவனம் திருப்பப்பட்டது. கிளர்ச்சிக்காரத் தலைவர்

களைத் தேடிப்பிடிப்பதில் அவர்கள் முனைந்தனர். பல இடங்களில் கிளர்ச்சி தோன்றியிருந்ததால் ஆங்காங்கே துருப்புகளை அனுப்ப வேண்டியதாயிற்று. இது தொல்லையான வேலையாகவே இருந்தது. மேலும், கடும் வெயில், காடுகள், மலைகள் போன்ற பல இயற்கை எதிர்ப்புகளும் அவர்களைத் தொல்லைகளுக்குள்ளாக்கின. இந்தக் கட்டத்தில் சர் ஹ்யூஜ் ரோஸ் (Sir Hugh Rose) என்பவர் சிறந்த தலைவராக விளங்கினார். அவருடைய சிறிய மத்திய இந்தியப் படையின் உதவியால், கேந்திர இடங்களான ஜான்ஸி, கல்பி, குவாலியர் ஆகியவற்றைக் கைப்பற்றினார். ஆறு மாதங்களில் பதினாறு போர்களை நடத்தினார். பின்பு, எதிர்ப்பு ஒருவாறு முறியடிக்கப்பட்டது.

இஃது ஓர் அக்கிரமமான போராகக் கருதப்படவேண்டும். ஏனெனில், ஆங்கிலேயப் பெண்களையும், சிறைக் கைதிகளையும், குழந்தைகளையும் கொடுமையாகக் கொன்று குவித்தனர். இதற்குச் சரியான பரிகாரம் தூக்கிலிடுதலும், உயிருடன் தோலை உரித்தலும்தான். கிளர்ச்சி முடிந்த பிறகு, அவர்களை மன்னித்து விடுவதா அல்லது தண்டிப்பதா என்ற சிக்கல் ஏற்பட்டது. பல கம்பெனி அதிகாரிகள் பலவிதமான கருத்துகளைக் கொண்டிருந்தனர். ஆரம்ப கட்டங்களில் கேனிங் மிகவும் அமைதியாக இருந்ததால், அவரை 'பாவம்' என்றுகூட வேடிக்கையாக அழைத்தனர். ஆனால், அவருங்கூட மனம் மாறி, பின்பு அவுத்துக்கு விடுத்த அறிக்கை, அவுட்ரேம் போன்றவர்களையுங்கூட அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தாய்நாட்டில் இருந்தவர்கள்கூட இவருடைய அறிக்கையைக் கண்டு ஆச்சரியமடைந்தனர். ஆனால், 'கலகத்தை'ப் பற்றி ஆங்கிலேயர்கள் கொண்டுள்ள கருத்தைப் போல, எல்லா இந்திய மக்களும் கருதவில்லை. இந்தியாவில் உள்ள பல நிலக்கிழார்களும், கிராமவாசிகளும், நமது துயர மிக்க அகதிகளுக்குப் புகலிடம் அளித்தார்கள். லட்சுமணபுரி முற்றுகையின்பொழுது பல நூற்றுக்கணக்கான இந்தியச் சிப்பாய்கள் விசுவாசமாக நடந்துகொண்டனர். மேலும், பல கலகக்காரர்கள் பிரிட்டிஷ் மெடல்களை அணிந்துள்ளதையும் காண முடிந்தது. பல கசாப்புக் கடைக்காரர்களையும், அரண்மனை வேலைக்காரர்களையும்தான் நானா சாகிப் தன் படையில் சேர்த்துக்கொள்ள முடிந்தது.

கம்பெனியின் மரபு என்னவாக இருந்தாலும் சரி, இனிமேல் கம்பெனியார் இந்தியாவை ஆட்சி செய்ய முடியாதென்ற உண்மை புரிந்துவிட்டது. அதனால், அதிர்ச்சியையும் நெருக்கடியையும் நல்லவிதமாக சமாளித்த பிரிட்டன், இதனுடைய ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டிய கட்டாயம்

ஏற்பட்டது. இதையொட்டி, 1858-ல் ஒரு சட்டம் இயற்றினர்கள். அதன்படி கம்பெனியின் அதிகாரம் ஆங்கில அரசியாருக்கு மாற்றப்பட்டது. இதுவரையிலும் கம்பெனியின் ஆட்சியை நிர்வகித்து வந்த கட்டுப்பாட்டுக் குழுவினர் கலேக்கப்பட்டு, அதற்குப் பதிலாக அரசாங்கக் காரியதரிசி ஒருவர் நியமிக்கப்பட்டார். அவருக்கு உதவியாக ஒரு கவுன்சில் நிறுவப்பட்டது. அந்தக் கவுன்சில் அங்கத்தினர்கள் பெரும்பாலும் இந்தியாவில் அனுபவம் பெற்றவர்களாக இருந்தனர். அரசியார் விடுத்த அறிக்கையை டெர்பி தயாரித்தார். அந்த அறிக்கையில், இந்திய மன்னர்களின் இராச்சியங்களை அங்கீகரிப்பதென்று அறிவிக்கப்பட்டது. இந்திய சமய உணர்ச்சிகளில் தலையிடுவதில்லையென்றும், அரசாங்க சேவைகளுக்கு சாதிமதக் கட்டுப்பாடின்றி எல்லாருக்கும் தகுதிகளுக்கேற்ப பதவிகள் அளிக்கப்படும் என்றும் உறுதிமொழி தரப்பட்டது. இந்த நெருக்கடியான நிலையிலிருந்து காப்பாற்றியவர் ஜான் லாரன்ஸ் என்பவர். 1864-ல் அவர் எல்ஜினுக்குப் பின் வைசிராயாகப் பதவியேற்றார். பஞ்சாபும் இந்தியாவைக் காப்பாற்றியது. கலகம் அவர்களுக்கு நல்ல பாடத்தைக் கற்பித்தது. ஐரோப்பியத் துருப்புகள் அதிகமாக்கப்பட்டன ; இந்தியர்கள் தொகை மிகவும் குறைக்கப்பட்டது. ஐந்து மடங்கு ஐரோப்பியர்களுக்கு இரண்டு மடங்கு இந்தியர்களே படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். சீக்கியர்களும் கூர்க்காக்களும் தங்கு தடையின்றிப் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். மற்றும் கீழ்ச்சாதியினரும் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். மத்திய அரசாங்கத்தைப் பலப்படுத்துவதும், நல்ல காவலர் முறையும், தண்டனை சட்ட தொகுப்புகளும், வர்த்தக விதிகளும், புதிய பொதுப் பணிகளைப் பார்க்கும் ஒரு தனித் துறையும், அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டன. 1861-ல் இயற்றிய சட்டப்படி பல இந்திய அங்கத்தினர்களும், சட்ட சபையில் நியமனம் செய்யப்பட்டனர். அதிகப்படியான செலவினத்தைக் கல்வியைப் பரப்புவதற்காகவும் அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. இவைகளெல்லாம், ஆங்கிலேயரின் மற்றொரு வளர்ச்சியை எடுத்துக் காட்டியது.

சிலரின் தனிப்பட்ட இயல்புகளால் 'ஆங்கிலேய இந்தியா காப்பாற்றப்பட்டது'. ஆனால், அதுபோலவே சிலரால் ஆங்கிலேய ஆட்சிக்கு ஆபத்தும் நேரிட்டது. மற்றொரு தலைமுறைக்கு அரசாங்க அதிகாரிகள் மிகவும் பலம் மிக்கவர்களாக இருந்தனர். கம்பெனி உண்மையில் பெருமை அடித்துக்கொண்டதைப்போல, 'உலகத்திலே எங்கும் கண்டிராத வகையில், இங்கே சிவில், இராணுவ அதிகாரிகள் பணியாற்றினர்கள்'.

# 4. தாய்நாட்டிலும் வெளியிலும் லிபரலிசம்
## (Liberalism)

1365 வரை ஆட்சி செய்த முதல் லிபரல் அரசாங்கம், பால் மர்ஸ்டனின் தலைமையில் அமைக்கப்பட்டதாகும். அவருக்குப் பிறகு ரஸ்ஸல் பதவியேற்ருர். இந்த லிபரல் அரசாங்கத்தில் மிக்க திறமையுள்ளவர்கள் பணியாற்றினர். சிறப்புமிக்க விக் கட்சியைச் சேர்ந்தவர்களான, ஆர்கில் (Argyll), கார்ன்வால் லெவிஸ். (Cornewall Lewis), கிளாட்ஸ்டன், மற்றும் பீல் ஆதரவாளர்களிலிருந்து, கோஷன் (Goschen), ஹேரிங்டன் (Harington) ஆகியோரும் அம் மந்திரி சபைகளில் இடம் பெற்றனர். அவர்கள் நடுத்தர வகுப்பினரையும் பிரபுக்களையும் பிரதிபலித்தனர். ஆனல், பால்மர்ஸ்டன் மந்திரிசபையில் காணப்பட்ட ஒருமைப்பாடு, அவருக்கு நடுத்தர மக்கள் அளித்த ஆதரவு என்றே கூற லாம். இதனல், அவருக்கு மூன்றுவித நன்மைகள் ஏற்பட்டன. தேசிய அபிவிருத்தி மிகவும் விரைவாக வளர்ச்சி அடைந்திருந்தது டெர்பி பதவி ஏற்க விரும்பவில்லையெனினும், பிரதம அமைச்சருக்கு கிளாட்ஸ்டனுடைய பொருளாதாரக் கொள்கைகளையும் சமாதானக் கொள்கைகளையும் எதிர்த்து உதவ எப்பொழுதுமே காத்திருந்தனர். பால்மர்ஸ்டனின் வெளிநாட்டுக் கொள்கை, பொதுமக்களின் கவனத்தை நன்கு கவர்ந்திருந்தது. அரசியாரிடம் வெளிநாட்டு விவகாரங்களில் மாறுபட்ட கருத்துகளை எப்போதும்போல இவர் கொண்டிருந்தாலும், பொதுப்படையாக நாட்டிற்குப் தேசியப் பாதுகாப்புத் திட்டம் மிகவும் இன்றியமையாதது என்பதை இருவரும் ஒப்புக்கொண்டனர்.

அவருடைய கட்சியில் உள்நாட்டுச் சீர்திருத்தங்களைப் பொறுத்த அளவில் ஒன்றுமே ஏற்படவில்லை. 'எப்பொழுதுமே' சீர்திருத்தச் சட்டங்களை இப்பற்றிக்கொண்டிருக்க முடியாது. என்று பால்மர்ஸ்டன் கருதினர். ரஸ்ஸல் கொண்டுவந்த ஒரு மிதமான சீர்திருத்த மசோதாவும் 1860-ல் காலாவதியாகிவிட்டது.

வெளிநாட்டு விவகாரங்கள், தேசியப் பாதுகாப்பு முதலியவை களுக்கான செலவினங்கள் ஆகிய இவைமட்டுமே கேபினட்டின் கவனத்தைக் கவர்ந்திருந்தன.

இவருடைய ஆட்சிக்காலத்தில் சீனப் போர் நடந்துவந்தது. 'ஏரோ' என்ற ஐரோப்பிய-சீன முறைக் கப்பலினால் ஏற்பட்ட விளைவே இந்தப் போருக்குக் காரணம். இந்தப் போர் முனை யிலிருந்து பல வீரர்களை, இந்தியச் சிப்பாய்க் கலகத்தை அடக்கத் திருப்பிவிட்டனர். எல்ஜின், கான்டன் நகரை முற்றுகையிட்டும் அதன் அருகிலிருந்த கோட்டைகளைக் குண்டு வீச்சுக்குள்ளாக்கிய தாலும், சீன அரசாங்கத்துடன் எளிதில் ஒரு சமரச ஏற்பாட் டைச் செய்துகொள்ள முடிந்தது. நாம் கேட்டதையெல்லாம் சீனர்கள் கொடுத்தார்கள். ஆனால், அவை வெறும் ஏட்டளவில் மட்டுமே நின்றது. அடுத்த ஆண்டில் ஒரு தூதுவரை அங்கே அனுப்பி, நிபந்தனைகளை நிறைவேற்றும்படி சொன்னதற்கு அவ ரைச் சுட்டார்கள். அதனால், 1860-ல் எல்ஜின் மீண்டும் ஆங்கி லேய-ஃபிரெஞ்சுப் படையுடன் சென்று உடன்படிக்கையை நிறை வேற்றியதுமட்டுமன்றி, அதிகப்படியாக நஷ்ட ஈட்டுத் தொகை யையும் வசூல் செய்தார். இந்தத் தடவை சீனர்களின் தட்டிக் கழிக்கும் வழிகளோ, அல்லது கடும் முறையில் நேச நாடுகளின் தூது கோஷ்டியைச் சித்திரவதை செய்ததற்கோ பழிவாங்கும் பொருட்டு, அவர்களுடைய பெரும்பகுதியைப் பீகியோவிலிருந்து டியன்டிஸின் வரையிலும் கைப்பற்றினர். பின்பு, அப் படைவீரர் பீகிங்கில் நுழைந்து பேரரசின் அரண்மனையையும் தீக்கிரையாக் கினார்கள். இதனால், சீனர்கள் புதிய வர்த்தக நலன்களைப் பெற் றார்கள். இராச்சிய நட்புறவை ஏற்படுத்திக்கொள்வதாகவும் கூறினார்கள். ஆங்கிலேயக் காலனிகளில் சீனக் கூலிகளை அனுப்பு வதற்கும் ஒப்புக்கொண்டார்கள். எல்ஜினுடைய இரண்டு முறை விஜயத்தின்பொழுது ஜப்பானுக்கும் அவர் சென்று, அந்த நாட்டு டனும் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அந்த உடன்படிக்கைபடி, வர்த்தகம் செய்வதற்கும் இராச்சிய உறவு ஏற்படுத்திக்கொள்வதற்கும் வழிவகை செய்து கொடுத்தார்.

1859-ல் ஐரோப்பாவில் போர் தொடங்கியது. மூன்றாவது நெப்போலியன் கொடுத்த வாக்கைக் காப்பாற்றினார். அதன் படி கேவூருக்கு உதவி செய்வதற்காக ஒரு பெரும்படையை அனுப்பி உதவி செய்தார். இத்தாலியில் ஆதிக்கம் செலுத்தி வந்த ஆஸ்திரியர்களை வெளி அனுப்புவதே இந்தப் போரின் நோக்கம். இந்த தூரப் பகுதியில் ஏற்பட்ட போர், ஆங்கி லேய மக்களிடமும், ஒரு புதிய உணர்ச்சியை உருவாக்கியது. இந்தப் போரில், பிரஷ்யர்கள் வேறு கலந்து, ஆஸ்திரியர்களுக்கு,

அதாவது மற்றுமொரு ஜெர்மானிய நாட்டிற்கு உதவி செய்ய முனைந்தால், பெரிய போராக மாறிவிடும் என்று கருதப்பட்டது. இதையெல்லாம் ஆலோசித்தே, ஜூலை மாதத்தில் அவர் போரிட்டு இரண்டு பெரிய வெற்றிகளை அதிகப் பொருட்செலவில் அடைந்தார். அவர் செய்துகொண்ட வில்லாஃபிராங்கா உடன்பாட்டின்படி, லம்பார்டியை ஸார்டினியர்களுக்கு (Sardinians) அளித்துவிட்டு, வெனிஸ் பகுதியை ஆஸ்திரியர்கள் கையிலேயே விட்டுவிடுவதென்று அவர் நினைத்தார். அரசியாரும் அவருடைய கணவரும், ஆஸ்திரியர் பக்கம் நின்றாலும், ஆங்கிலேய மக்கள் இத்தாலிய இயக்கத்தின்மீது அனுதாபம் காட்டினார்கள். ஆங்கிலேய கேபினட்டிலேயே மிகவும் செல்வாக்கு மிக்க அமைச்சர்களான, பால்மர்ஸ்டன், ரஸ்ஸல், கிளாட்ஸ்டன் ஆகியோர்கள் இத்தாலிய இயக்கத்தினிடம் அனுதாபம் உடையவர்களாக இருந்தனர்.

அடுத்த இரண்டு ஆண்டுகளில், டஸ்கனியும் மத்திய இத்தபலியும், ஸார்டினியாவுடன் இணைந்துகொள்ள விரும்பின. கரிபால்டி அவருடைய ஆயிரம் வீரர்களுடன் சிசிலியில் கிளர்ச்சியை ஆரம்பிப்பதற்காக நுழைந்தார். வழியில் நியோபாலிட்டன் பகுதியிலும் அவர்கள் பிரவேசித்தனர். இவருடன் தொடர்பு வைத்துக்கொள்வதற்காக ஸார்டினியன் படை ஒன்றும் இவரைப் பின்பற்றிச் சென்றது. ஆனல், அந்தப் படை விரைந்ததின் நோக்கம், போப்பின் ஆதிக்கத்திலுள்ள ரோம் நகரைத் தாக்க வேண்டா என்று தடுத்து நிறுத்தவேயாகும். இந்த முயற்சிகளிலெல்லாம் ஆங்கிலேயரும் ஏற்ற நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டனர். ரஸ்ஸல் அனுப்பிய குறிப்புகள், 1688-ல் பின்பற்றப்பட்ட கோட்பாட்டினை வலியுறுத்தின. அதாவது, கொடுங்கோன்மை ஆட்சி செய்கின்ற அரசனை வீழ்த்த, அந்த நாட்டு மக்களுக்கு உரிமை இருக்கிறதென்பதை அவை மீண்டும் நினைவுறுத்தின.

கரிபால்டியை ஆக்கிரமிப்பாளர் என்று கூறினல், ஆரஞ்சு அரசன் வில்லியமையும் அப்படித்தான் அழைக்கவேண்டும். டூரின் நகரில் உள்ள நமது தூதுவர் ஜேம்ஸ் ஹட்ஸன், கேவூருக்கு வேண்டிய உதவி செய்தால், மத்திய இத்தாலியில் உள்ள சிறிய நாடுகள் தங்கள் விருப்பப்படி புதிய நாட்டில் இணைந்து கொள்ள உரிமை இருக்கிறதென்றும், நேபிள்ஸ் நகருக்கு கரிபால்டி செல்லும்பொழுது அவருக்கு உதவியாக நமது கப்பற் படை பின் சென்றதும், ரோம் நகரைத் தவிர, போப்புக்கு மற்ற அரசியல் அதிகாரம் வேண்டியதில்லை என்ற கொள்கையையும் நாம் ஆதரித்தோம். இத்தாலியர்கள் வெனிஷியாவைக் கைப்

பற்றுவதில் அக்கறை காட்டினுல் பொதுவான போர் ஏற்படும் என்று எச்சரிக்கையையும் நாம் விடுத்தோம்.

மேலும், நெப்போலியனின் போரார்வத்தைத் தடுப்பதற்கு எவ்வித வெல்திறன் பயன்படுமோ அதையும் பின்பற்றினேம். அவரைப் பொறுத்தவரையிலும் ஆங்கிலேயரின் செல்வாக்குச் சாதகமாக இல்லை. தாராள மனப்பான்மையுள்ள மெக்காலே, மில், மற்றும் தீவிரவாதிகளுங்கூட, அவருடைய திடீர் புரட்சியை இன்னும் மன்னிக்கவில்லை.

அரண்மனையிலும் பலத்த ஜெர்மானிய உணர்வு இருந்தது. எப்பொழுது நெப்போலியன் 1815ஆவது ஏற்பாட்டை உதறி விட்டாரோ, அப்பொழுதே, அவருடைய மாமாவின் எண்ணங்களை மீண்டும் புதுப்பிக்க முயற்சி எடுக்கிருர் என்று பால் மர்ஸ்டன் கருதினுர். நெப்போலியன் இத்தாலியக் கூட்டாட்சித் திட்டம், இத்தாலியை ஃபிரான்சின் கட்டுப்பாட்டில் கொண்டுவரச் செய்யும் முயற்சியே என்று கருதினர். கேவூருடன் செய்துகொண்ட உடன்பாட்டின்படி ஸேவாய் (Savoy), நைஸ் (Nice) ஆகிய பகுதிகளை ஃபிரான்சுக்கு அளிப்பதாக ஏற்பாடு செய்திருந்தது மேலும் இச் சந்தேகத்தை உறுதிப்படுத்தியது. போர் அலுவலகத்தில் பணியாற்றும் ஹெர்பர்ட், ஃபிரான்ஸ் திட்டமிட்டு படையெடுக்கப்போகிறதென்று அறிவித்தார். அவர் புதிய கப்பல்களைக் கட்டிக் கடற்படை பலத்தைப் பெருக்குவது ஆங்கிலேயக் கடற்படைக்கு அதிர்ச்சி ஏற்படுத்தியது. சூயஸ் கால்வாயை வெட்ட ஃபிரெஞ்சுப் பொறியியல் வல்லுநரான டி லெஸப்ஸ் ஆரம்பித்ததால், எகிப்தும் இந்தியாவும் ஆபத்துக்குள்ளாகப் போகிறதென்று மக்கள் கருதினுர்கள்.

1859-60-ல் மக்கள் இவ்விதமாக நினைக்க ஆரம்பித்துவிட்டதால், பீதி ஏற்பட்டுவிட்டதென்ருலும், ஆனுல், நீராவி கண்டுபிடிப்புக்குப் பிறகு கடற்போரில் பெரிய மாற்றம் ஏற்பட்டுவிட்டதால் கவலைப்படவேண்டியதில்லை என்று காப்டென் கூறினுர். கிரிமியப் போரில் பயிற்சிபெற்ற போர் வீரர்கள் மிகக் குறைவாக இருந்தனர் என்பது பெரிய குறைபாடாகும். செர்பர்க் என்ற இடத்தில் ஒரு கடற்படைத் தளத்தை நிர்மாணிக்க வேண்டுமென்று அப் போரில் பங்குகொண்ட கடற்படைத் தளபதி நேபியர் ஆலோசனை கூறினுர். போர்ட்ஸ்மவுத் துறைமுகம் பாதுகாப்பில்லாது இருக்கிறது என்றும், அதனுல் அதைச் சுற்றிச் சரியாகப் பாதுகாப்பு அரண்கள் அமைக்கவேண்டுமென்றும் ராயல் கமிஷன் அறிக்கை ஒன்று சிபாரிசு செய்தது. இவ்விதப் பிரச்சினையில் ஈடுபட்டிருந்தபொழுது, மக்களாகவே

பட்டாளத்தில் சேர முன்வந்தனர். 1861-ல் சுமார், 150,000 தொண்டர்கள் பட்டாளத்தில் சேர முன்வந்தனர். கேபினட்டிற்குள்ளே, போரை ஆதரிக்கும் கோஷ்டியும் சமாதானத்தை விரும்பும் கோஷ்டியும் ஆக இரண்டு கட்சிகள் தோன்றின.

ஃபிரான்சுடன், வர்த்தக உடன்படிக்கை செய்துகொண்டால், கட்டுப்பாடில்லாத வாணிகத்திற்கும் சமாதானத்திற்குங் கூட வழிவகுக்க முடியும் என்று காப்டெனும் பிரைட்டும் நம்பினார்கள். அவர்களுடைய ஆலோசனையை கிளாட்ஸ்டனுக்கு அறிவித்தார்கள். இந்த உடன்படிக்கையைத் தனிப்பட்ட முறையில் செய்வதற்குக் காப்டென் முயற்சி செய்வதாக முன் வந்தார். இவருடைய திட்டத்திற்கு ஃபிரான்சில் உள்ள பொருளாதார நிபுணர் சிவாலியர் (Chevalier) ஆதரவளித்தார். ஃபிரான்சின் பேரரசன் இந்த ஆலோசனையை ஏற்றுக்கொண்டால், பாதுகாப்பு வரிகளையும் சிறிது தளர்த்தலாம். கேபினட்டில் கிளாட்ஸ்டனைத் தவிர மற்ற யாருக்கும் இந்தத் திட்டத்தில் நம்பிக்கை கிடையாது. 1860-ல் கிளாட்ஸ்டன் இத் திட்டத்தின் அடிப்படையில் வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்தார். அவர் இரண்டு சாத்தியக் கூறுகளை, அதாவது, வர்த்தக ஒப்பந்தம் அல்லது போர் ஏற்படும்படியான நிலை, அங்கத்தினர் முன்பு தமது நாவன்மையை நன்கு பயன்படுத்தித் தெளிவாகவும் மிகவும் வற்புறுத்தியும் எடுத்துக் கூறினார். அவர் இந்த வரவு செலவுத் திட்டத்தை, 'ஐரோப்பியச் செயல்முறை' என்று கூறி, இதைவிட, அறிவுள்ளவர்கள் வேறு எதையும் செய்ய முடியாது என்று வலியுறுத்தினார். இந்த ஒப்பந்தத்தின் நிபந்தனைகளின்படி பிரிட்டனிலிருந்து வருகின்ற எல்லா முக்கியமான பொருள்களுக்கும் இரும்புக்கும் 30 சதவிகிதம் தீர்வைகளை ஃபிரான்ஸ் குறைக்கவேண்டுமென்றும், அதற்குப் பதிலாக ஃபிரான்சிலிருந்து வருகின்ற திராட்சை மதுவிற்கும் பிராந்திக்கும் தீர்வை குறைப்பும், மற்ற ஃபிரெஞ்சு உற்பத்திப் பொருள்களுக்குத்தீர்வை ரத்தும் செய்தார். இதனால், ஆங்கிலேயர் கலால் வருவாயில் ஒரு மில்லியன் பவுன் குறைந்தது. இதைத் தவிர, மற்ற யுத்தச் செலவினங்களை மீட்கப் பத்து மில்லியன் பவுன் பற்றுக்குறை வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிக்கவேண்டியதாயிற்று. வரி விதிப்பிலிருந்து வருகின்ற வருவாய் கடந்த ஏழு ஆண்டுகளில் 16 சதவிகிதம் பெருகிவிட்டதென்பதைக் காட்டி, அவர் பீல் அனுசரித்த முறையைத் தைரியமாகப் பின்பற்றினார். பழைய வரிகளைக் குறைத்து, புதிய வரிகளை விதித்தார். இவை போன்று அவர் 1853-ல் செய்திருக்கிறார். ஃபிரெஞ்சு வர்த்தக ஒப்பந்தத்தை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு, அவர் கட்டுப்பாடில்லாத

வாணிகத்தைக் கொண்டுவர முயன்று பார்த்தார். ஃபிரெஞ்சுப் பொருள்களுக்குத் தீர்வைகளிலிருந்து விதிவிலக்களிப்பதைப் போன்று மற்ற நாடுகளுக்கும் இந்தச் சலுகைகள் தரப்பட்டன. மரம், முந்திரிப்பழம் ஆகிய பொருள்களுக்குத் தீர்வை குறைக் கப்பட்டது. வெண்ணெய், முட்டை, பழ வகைகள், காகிதத்தின் பேரில் உள்ள ஆயத் தீர்வை உட்பட எல்லாவற்றையும் எடுத்து விட்டார். தீர்வைப் பட்டியலில் இருந்த 419 பொருள்களி லிருந்து 48 பொருள்கள்வரை தீர்வை குறைக்கப்பட்டது. அதற்குப் பதிலாகத் தேயிலை, சர்க்கரை ஆகிய பொருள்களின் மீது அதிகத் தீர்வை விதிக்கப்பட்டது. வருமான வரியும் 10 பென்சுக்கு உயர்ந்துவிட்டது.

பாராளுமன்றத்திலே அவருக்கு ஏற்பட்ட இந்த வெற்றியும், உற்பத்திப் பொருள்களைத் தாராளமாக வெளிநாடுகளில் விற்பனை செய்வதற்கான வசதிகளைச் செய்து தந்ததற்கும், லிபரல் கட்சியின் உண்மையான தலைவர் இவரே என்ற பாராட்டுதலைப் பெற்றார். இதனால், ஒரு வகையில், பால்மர்ஸ் டன், பிரபுக்கள் ஆகியவர்களுடன் மோதவேண்டியதாயிற்று. 1853-லிருந்து தேசிய செலவினம் இப்பொழுது 70 மில்லியன் பவுன்களுக்கு அதிகமாகிவிட்டது. 1853-ல் இருந்ததைவிட 20 சதவிகிதம் உயர்ந்துவிட்டது. எனினும், இந்தச் செலவினம் மிகவும் குறைந்ததுதான். அதுவும் இந்தச் செலவினம் ஏற்பட முக்கியக் காரணமாக இருந்தது படைச் செலவும், கடற்படைச் செலவும் அதிகரித்ததனால்தான். கிறித்துவக் கொள்கைப்படி போர் செய்வது அவ்வளவு விரும்பத் தக்கதன்று; மேலும், வரி கொடுப்போனின் கையில் பணம் இருந்தால், அவனுக்கேற்ற முறையில் அப் பணத்தைச் செலவு செய்ய முடியும் என்று சாதாரண மனிதர்கள் கருதினார்கள். அரண்களை அமைப்பதில் பால்மர்ஸ்டன் மிகவும் தீவிரமாக இருந்தார். ஆனால், அத் திட்டங்களை கிளாட்ஸ்டன் எதிர்த்தார். ஆனால், வயதான பால்மர்ஸ்டன் கேபினட்டைத் தன் பக்கம் ஈர்த்துக்கொண் டார். பலமுறைகள் அவர் ராஜிநாமா செய்வதாகப் பயமுறுத் தினார். அவர் அரசியாருக்கு எழுதிய கடிதத்தில் மிகவும் வேடிக் கையாகப் போர்ட்ஸ்மவுத்தை இழப்பதைக் காட்டிலும், கிளாட்ஸ்டனையே நாம் இழந்துவிடலாம் என்று எழுதினார். கிளாட்ஸ்டனைத் தனிப்பட்ட முறையில் ஒதுக்கிவிட்டு, வெளிப் படையாகவே காப்டென், பிரைட் ஆகியவர்களிடம் சிறிது அதிக மாக நெருங்கினார். காகிதத்தின்மேல் விதித்திருந்த தீர்வையை ரத்து செய்யவேண்டும் என்று அவர்கள் கோரியமையால் அவர்கள் பால்மர்ஸ்டனை நெருங்கவேண்டியவர்களானார்கள்.

ஆனல், அம் மசோதாவைப் பிரபுக்கள் சபை நிராகரித்து விட்டது. இதனல், பால்மர்ஸ்டனுக்குங்கூட ஒரு வகையில் மகிழ்ச்சியே. ஆனல், கிளாட்ஸ்டன் மிகவும் சாதுரியமாக அந்த ஆண்டின் எல்லா நிதி சம்பந்தப்பட்ட மசோதாக்களையும் ஒன்ருக இணைத்து, மீண்டும் பிரபுக்கள் சபையில் சமர்ப்பித்தார். அதனல், ஒன்று இந்த மசோதாவை முழுவதும் ஆதரிக்க வேண்டும்; அல்லது முழுவதும் நிராகரிக்கவேண்டும் என்ற நிலையை உண்டுபண்ணிவிட்டார்.

அடுத்து வரும் ஆண்டுகளில் வரி குறைப்பு ஏற்பட்டது. 1863-ல் வருமானவரி 9 பென்னியாக இருந்தது, 1865-ல் 4 பென்னியாகக் குறைக்கப்பட்டது. தேயிலையின்மீது விதிக்கப்பட்டிருந்த வரியுங்கூடப் பாதியாகக் குறைக்கப்பட்டது. 1860-ல் செலவினம் 72 மில்லியன்களாக இருந்தது 1865-ல் 66 மில்லியன்களாகக் குறைந்துவிட்டது. அஞ்சல் நிலையச் சேமிப்பு பாங்குகளையும், 1866-ன் நிதி, தணிக்கை சட்டத்தையும்,காமன்ஸ் சபையின் ஒரு கமிட்டி பொது வரவு செலவுகளைப் பரிசீலனை செய்வதையும், 200 பவுன்களுக்கும் கீழாக உள்ள வருமானத்திற்கு வருமான வரியை ஓரளவிற்குக் குறைத்தும், இவருடைய நிதி நிர்வாகத்தின் தரத்தை உயர்த்தினர். இதனல், மக்களின் மனத்திலும் இவருடைய சாதனைகள் பதிந்தன.

அவருடைய காலத்தில் செழுமையும், நல்ல நிர்வாகமும், பரந்த ஜனநாயகக் கொள்கைகளைப் போற்றுதலும் ஆகிய தன்மைகள் பாராட்டப்பெற்ருலும், அமெரிக்க உள்நாட்டுப் போரில் அவர் பெரிய தவற்றைச் செய்துவிட்டார். நமது சரியான கொள்கை, நடுநிலைமை வகிப்பதே. தெற்கு நாடுகளின் ஆக்கிரமிப்பு உரிமைகளை மறுக்க முடியாதெனினும், அவர்களுடைய சுதந்திரத்தை அங்கீகரிக்காமலும், நடுநிலைமை நாடுகள் பெற வேண்டிய வர்த்தகச் சலுகைகளைப் பெற்ருலும் முற்றுகையை முறியடிக்க முடியாமலும், பிரிட்டிஷ் குடிகளை இரண்டு பக்கங்களிலும் சேராமல் செய்திருக்கவேண்டும். அடிமை முறையில் அடிப்படையில்மட்டும் இந்த உள்நாட்டுப் போர் நிகழ்ந்திருந்தால், பிரிட்டன் முழுவதுமே வடக்கு நாடுகளை ஆதரித்திருக்கும். ஆனல், 1862-க்கு பிறகுதான், லிங்கன் அடிமை விடுதலை அறிக்கையை விடுத்தார். தெற்குப் பகுதியில் உள்ள மக்கள் சுதந்திரமாக வாழ விரும்பும் நோக்கத்தை, ரஸ்ஸலும் கிளாட்ஸ்டனும் புரிந்துகொண்டார்கள். பால்மர்ஸ்டனுக்கு அமெரிக்கா வளர்ச்சி அடைந்து வருவது பிடிக்கவில்லை. அதனல், இந்த வல்லரசு பலவீனமடைவதைக் கண்டு அகமகிழ்ந்தார். மேல் வகுப்பினர் தெற்கேயுள்ள நிலப் பிரபுக்களையும் லீயையும் ஆதரித்

தனர். ஆனால், பிரைட் மற்றும் பல தீவிரவாதிகளும் வடக்கையும், அதன் ஜனநாயகத்தையும் ஆதரித்தார்கள். அங்கே எல்லாருக்கும் வாக்குரிமையும், ஆயிரக்கணக்கான மக்களுக்கு வீடுகளும் தரப்பட்டிருந்தன. முன்னேற்ற மனப்பான்மையுள்ள இங்கிலாந்து மக்கள், அரசியல் அமைப்பு அடிப்படையில் எழுந்துள்ள ஒரே பிரச்சினையை அதாவது அடிமை முறையா அல்லது சுதந்திரமா என்ற கேள்விக்கு விடையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். 1862-வரையில் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை நீடித்திருந்தது. ஆனால், தெற்குப் பகுதியிலிருந்து பருத்தி வருவது நின்றுவிட்டதால்,லங்காஷயரில் உள்ள தொழிலாளர்கள் வேலையிழந்து தவித்தனர். அரை மில்லியன் பேர்களுக்குமேல் இரவலர் வரியாலும் தனிப்பட்டவர்களின் தரும சிந்தனையாலும் பிழைக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

வெல்திறப் பணிகள் அப்பொழுது நன்றாக நடைபெற்று வந்தன. அமெரிக்காவின் சார்பாக, சார்லஸ் ஃபிரான்சிஸ் ஆடம்ஸ் என்ற தூதுவரும், பிரிட்டனின் இராச்சிய தூதுவரான லையன்ஸ் பிரபுவும் நன்றாகப் பணியாற்றினர். ஆனால், சில அமெரிக்க அரசியல்வாதிகள், அரசாங்கச் செயலாளரான சூவேர்ட் (Seward) உட்பட, போரிடும் எண்ணத்தைக் கொண்டிருந்தனர். போரிடுவதற்கான சூழ்நிலை மிகவும் நெருங்கிக்கொண்டிருந்தது. 1861 கடைசியில் மேஸன், ஸ்லிடெல் என்ற தெற்கின் பிரதிநிதிகள் டிரென்ட் என்ற ஆங்கிலேயக் கப்பலிலிருந்து கட்டாயமாக வெளியேற்றப்பட்டார்கள். இவர்களை வெளியேற்றக் காரணமாக இருந்தது வடக்குப் போர்க் கப்பல். இதையறிந்த அரசியாரின் கணவர் ஆட்சேபித்தார். பின்பு, லிங்கனும் மரியாதையாகப் பின்வாங்கினர். வடக்கு, தெற்குப் பகுதிகளிலே ஏற்பட்ட இரத்தக் களறியை நிறுத்துவதற்கு, ஆங்கிலேய மந்திரிசபை மத்தியஸ்தம் செய்யத் தயாராக இருந்தது. அதைப்போலவே மூன்றாவது நெப்போலியனும் அவருடைய சொந்த நலன்களுக்காகச் சமரசம் செய்துவைக்க முன்வந்தார். 1862-ல் பிரிட்டனுடைய உதவியால், அவர் மெக்ஸிகோவில் ஆதிக்கம் செலுத்த முயன்றார். முதலில் அவருக்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்வதில் ஆரம்பித்து, பின்பு பிரிட்டன் பின்வாங்கியவுடன் ஹாப்ஸ்பர்க் ஆர்ச்டியூக்கை அங்கே அரசனாக்க அவர் முயன்றார். கிளாட்ஸ்டன் வெளிப்படையாகவே தெற்குப் பகுதி மக்கள் ஒரு நாட்டை உருவாக்கிவிட்டார்கள் என்று அறிவித்தார். ஆனால், தெற்குப் பகுதியினர் அடைந்த வெற்றிகளால் அந்த மக்களுக்கு அதிக ஆட்சேதம் பொருட்சேதம் ஏற்பட்டதால், அவர்களால் தாங்க முடியவில்லை. பால்மர்ஸ்டன் இன்னும் சமரசத்தை ஏற்

படுத்தத் தயாராக இருந்தார். ஆனால், அரசியாரும் எதிர்கட்சியினரும், இந்தப் பிரச்சினையில் தலையிடுவதை விரும்பவில்லை. நமது துறைமுகங்களில் வர்த்தக நாசகாரிகளைத் தெற்குப் பகுதியினர் வைத்திருந்தனர். இவற்றின்மூலமாக முற்றுகையை முறியடிக்க அவர்கள் முயற்சி செய்தனர். இந்த அபாயமும் தவிர்க்கப்பட்டது. மெர்ஸி துறைமுகத்தில் பல கப்பல்கள் நிறுத்தப்பட்டுச் சோதனையிடப்பட்டன. சில கப்பல்களை நமது அரசாங்கமே வாங்கியது. சில தப்பிச் சென்றன. அலபாமா என்ற கப்பலும் இவ்விதமாகத் தப்பிவிட்டது. மிகவும் எதிர்பாராதவிதமாகவே அது தப்பித்துக்கொண்டது. 60,000 மைல் போகவேண்டியிருந்த மற்றொரு கப்பலும் எப்படியோ தப்பித்துக்கொண்டது. 1864-ல் வடக்கின் வெற்றி உறுதியானது. லிங்கனின் மதிப்பு உயர்ந்தது. அடிமை முறை அகன்றது. போர் ஏற்படுகின்ற சூழ்நிலை மறைந்தது.

பிரைட், மற்றும் பொதுமக்களின் கருத்து இந்த விவகாரத்தில் அரசாங்கத்தைப் பல தவறுகள் புரியாது பாதுகாத்தன. ஆனால், மற்றப் பிரச்சினைகளில், அரசாங்கத்தின் குறைபாடுகள் வெட்ட வெளிச்சமாயின. அறியாமையும், உறுதியற்ற தன்மையும், பண்பற்ற கொள்கைகளுமே இதற்குக் காரணமாகும். பிஸ்மார்க்கின் காலம் அப்பொழுது ஆரம்பமாகியது. 1862-ல் பிஸ்மார்க் பிரஷ்யாவின் பிரதம அமைச்சரானார். பிரஷ்யாவின் சக்தியை யாருமே சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. இளைஞரான ராபர்ட் மோரியர்மட்டுமே ஓரளவிற்கு, இப் புதிய சூழ்நிலையைப் புரிந்துகொண்டிருந்தார். அரசியாரின் மனத்தில் அவருடைய கணவரின் கனவு ரீங்காரம் செய்துகொண்டிருந்தது. ஜெர்மன் நாட்டு மக்கள் அமைதியை விரும்புகிறவர்களென்றும், நெப்போலியனின் ஆக்கிரமிப்பைத்தான் அவர்கள் வெறுக்கிறார்கள் என்றும் அரசியார் நினைத்தார். பால்மர்ஸ்டனும், இதே வித கருத்தைத்தான் கொண்டிருந்தார். பிரஷ்யப் படையை, ஃபிரான்ஸ் நினைத்த மாத்திரத்தில் முறியடித்துவிடும் என்ற அபிப்பிராயம் அவருக்கு இருந்தது. ஆனால், பால்மர்ஸ்டனும் ரஸ்ஸலும் அந்த நாட்டை ஒதுக்கிவிட்டனர். பிரைட் போன்றவர்களின் ஆலோசனையையும் அவர்கள் புறக்கணித்துவிட்டார்கள். பிரஷ்யாவின் இத்தாலியக் கொள்கை, ஆஸ்திரியாவையும் ரஷ்யாவையும் பகைத்துக்கொண்டது. ரஷ்யா அவர்கள் பரம வைரியாக இருந்தது. 1861-ல் போலந்து மக்கள் புரட்சி செய்தபொழுது, 'இது கடவுளாகத் தந்த தண்டனை' என்று அவர்களுடைய பிரதம அமைச்சர், செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கைப் பார்த்துக் கூறினார். கிழக்கு வல்லரசர்களை எதிர்த்து பிரிட்டன்

நிற்கவேண்டுமென்ருல் ஃபிரான்சுடன், சமாதானம் செய்து கொள்வதைவிட வேறு வழியில்லை என்ற நெருக்கடி நிலை உண்டாயிற்று. அப்படிச் செய்வதால், லக்ஸம்பர்க்கிலும் ரைனிலும் ஃபிரான்ஸ் பலமான எல்லையை அமைப்பதற்கு, ஓரளவு பிரிட்டன் உதவி செய்யவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனல், நெப்போலியன் ஒரு மகா சபையைக் கூட்டி, இவ்வித மான பயத்திற்குக் காரணமே இல்லை என்று பெரிய சொற்பொழி வாற்றினர். ஆனல், ரஸ்ஸல், அவருடைய வழக்கமான முறையில் சூடாகப் பதில் அளித்தார். ஐரோப்பிய விவகாரங்களில் தலையிடாமல் இருப்பது நல்லது. ஆனல், பெரிய பிரசங்கம் செய்து விட்டும் பயமுறுத்தியும் பின்பு தலையிடாமல் இருப்பது அறிவுடைய செயல் அன்று என்று அவர் கூறினர்.

நீண்ட காலம் இழுத்துக்கொண்டிருந்த சிக்கலான ஸ்கிளெஸ்விக்-ஹோல்ஸ்டின் பிரச்சினையில் இதைக் காண முடிகின்றது. இந்த இரண்டு சிறு நாடுகளும் டென்மார்க் அரச பரம்பரையினரிடம் நெடுங்கால உறவும் வரலாற்றுத் தொடர்பும் வைத்துக்கொண்டிருந்தன. மேலும், இந்த நாடுகள் பாதி டேனிய இனமும், பாதி ஜெர்மானிய இனமும் கலந்த பரம்பரையைச் சார்ந்தவையாகும். ஹோல்ஸ்டின், சட்டப்படி ஜெர்மன் கூட்டாட்சியில் இணைந்திருந்தது. 1852-ல் ஒப்புக் கொண்ட லண்டன் உடன்படிக்கைப்படி டென்மார்க்குக்கும், இந்த இரண்டு சிறிய கோமகன் ஆட்சியிலிருக்கும் நாடுகளுக்கும் கிளக்ஸ்பர்க்கைச்சேர்ந்த கிறிஸ்டியன் பட்டத்திற்கு வர உரிமை பெற்றவர் என்று வல்லரசுகள் ஒப்புக்கொண்டன. இவருடைய மகள் அலெக்சாந்தராவை, வேல்ஸ் இளவரசன் சில மாதங்களுக்குப் பிறகு திருமணம் செய்துகொண்டார். அவர் 1863-ல் பட்டத்திற்கு வந்தார். ஆனல், டேனியர்கள் இந்தக் கோமகன் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளுக்குத் தனிப்பட்ட நிறுவனங்களை ஏற்படுத்தத் தவறிவிட்டனர். இந்த உறுதிமொழியை அவர் ஏற்கெனவே அளித்திருந்தார். அவர் ஸ்கிளெஸ்விக்கை டேனிஷ் முடியாட்சியுடன் இணைத்துக்கொண்டார். இதற்கு ஆதரவாக, 1864-ல் ஏமாந்த மற்றும் விருப்பமில்லாத ஆஸ்திரியாவை அவர் பக்கம் இழுத்துக்கொண்டார். இதனல், பிஸ்மார்க் போர் தொடுத்தார். பிரிட்டனில், பத்திரிகைகளும் பால்மர்ஸ்டனும், போர் வெறியைத் தூண்டிவிடும் பிரசாரத்தைச் செய்து டேனியரை ஆதரித்தனர். ஆனல், அரசியாரும், கேபினட்டும், எதிர்கட்சியும் பிரதம அமைச்சரின் கொள்கையை எதிர்த்தனர். வெளிநாட்டுக் காரியதரிசியான டெர்பி அவர்களுடைய குழப்பமான விவாதங்களை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. வெறும்

வார்த்தை அளவில் நமது இரைச்சல் நின்றுவிட்டது. நாம் பின் வாங்கினோம். ஆனால், பிரஷ்யத் துருப்புகள் ஸ்கிளெஸ்விக்கையும் கீலையும் ஆக்கிரமித்துக் கைப்பற்றின. நமது வெறும் வார்த்தைகள், அவர்களுடைய ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்திவிடவில்லை.

எதிர்கட்சியினர் இந்தக் சோக சம்பவத்தை மிகப் பெரிதாக்கினர். பால்மர்ஸ்டன் ஓர் அதிகப்பிரசங்கி என்று அரசியார் குற்றம் சாட்டினார். 1865-ல் பாராளுமன்றம் குறிப்பிட்ட காலத்திற்குள்ளாகவே கலைக்கப்பட்டது. பொதுத் தேர்தலில் இந்தக் கிழவனே மீண்டும் பெரும்பான்மையான ஆதரவுடன் வெற்றி பெற்றார். அவருக்கு இப்பொழுது எண்பது வயதுக்குமேலாகிவிட்டது. நாளடைவில் கிளாட்ஸ்டன், அவருடைய விருப்பப்படியே ஆட்சி செய்யும் காலம் நெருங்கிவிட்டது என்று பால்மர்ஸ்டன் கூறினார். உண்மையில், கிளாட்ஸ்டன் அதை அண்மையில் நிரூபித்துக் காட்டினார். அவர் பிரைட்டுடன் ஓர் ஒப்பந்தம் வெளிப்படையாகவே செய்துகொண்டார். பின்பு, அவர் ஆற்றிய மிகச் சிறப்பான சொற்பொழிவில் ஒவ்வொரு மனிதனும் வாக்குரிமை பெற உரிமை உடையவனாக இருக்கிறான். ஏதாவது தகுதியற்ற தன்மை ஏற்படாவிடின் எல்லோருக்குமே இந்த வாக்குரிமையைத் தரவேண்டும் என்று அவர் பேசியது மக்கள் மனத்தில் நன்றாகப் பதிந்தது. மேலும், அதன்மூலம் மக்களின் நல்ல அபிப்பிராயத்தையும் நல்ல ஆதரவையும் அவர் பெற்றார். ஏற்கெனவே அவருடைய தலைவரான பீலே, ஆக்ஸ்ஃபோர்ட் பல்கலைக்கழகத் தொகுதியினர் தோற்கடித்தனர். இப்பொழுது அதே தொகுதியில் கிளாட்ஸ்டனுக்கும் அந்த நிலை ஏற்பட்டுவிட்டது. பின்பு, லங்காஷயரில் உள்ள தொழிலாளர் பகுதியில், பழைய கொள்கைகளைத் துறந்துவிட்டுத் தேர்தலில் போட்டியிட்டார். அக்டோபர் 18-ல் பால்மர்ஸ்டன் இறந்தார். அதற்குப் பிறகு, கிளாட்ஸ்டன் ரஸ்ஸலுக்கு எழுதிய கடிதத்தில் 'புதிய தொடக்கம்' ஏற்படவேண்டுமென்று குறிப்பிடுகிறார்.

ஆனால், அப் புதிய தொடக்கம் உடனடியாக ஏற்படுகின்ற நிலை அச் சமயம் இல்லை. ரஸ்ஸல் இப்பொழுது பிரபுக்கள் சபையில் அங்கம் வகித்துவந்தார். அவருக்கு எழுபத்துநான்கு வயதாகிறது. பால்மர்ஸ்டனைப் போல, ரஸ்ஸலால் பல தரப்பட்ட கருத்துகளை உடைய அங்கத்தினர்களைச் சமாளிக்க முடியவில்லை. கேபினட்டில் இருந்த கார்ன்வால் லெவிஸ், ஹெர்பர்ட் ஆகியவர்களும் இறந்துவிட்டதால், கேபினட் இன்னும் பலவீனமாகிவிட்டது. அல்லது ரஸ்ஸலின் சில மாற்றங்கள், ரேடிகல்களையும் விக்குகளையும் ஒன்றாக இணைக்க முடியவில்லை. ஆனால், அவருடைய

முன்னேடியைவிட, இவர், கிளாட்ஸ்டனிடமும் பிரைட்டுடனும் நெருங்கிய தொடர்பை வைத்திருந்தார். நீண்ட காலமாகவே இரண்டாவது பாராளுமன்றச் சீர்திருத்த மசோதாவைக் கொண்டு வரவேண்டுமென்ற பேரார்வம் அவருக்கிருந்தது. இதனால், முன்னேற்றமே தடைபட்டிருந்ததை அவர் உணர்ந்தார். பொதுப்படையாகப் பார்த்தால் இரண்டு கட்சிகளும், இவ்விதமான ஒரு சீர்திருத்த மசோதாவைக் கொண்டுவரவேண்டுமென்று வாக்களித்திருந்தனர். மக்களிடையேயும் இந்த மசோதாவுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. ஆனுல், 1851-லிருந்து ஒவ்வொரு முறையும் இந்த மசோதா கொண்டுவரும்பொழுது நிராகரிக்கப் பட்டது. தொழில் வளம் பெருக ஆரம்பித்தவுடன், தொகுதிகளைச் சீரமைக்கவேண்டியிருந்தது. ரேட்ஞரைவிட, கிளாமோர்கன் ஓர் அங்கத்தினரைத்தான் அதிகமாக அனுப்பியது. லண்டன், தேம்ஸ் நதிக்கு வடக்கேயுள்ள மிடில்செக்ஸ் ஆகிய தொகுதிகள் தேந்தெடுத்த அங்கத்தினர்களைப் போலவே, கார்ன்வாலும் அனுப்பியது. வயதுவந்த ஆறுபேர்களில் ஐந்துபேருக்கு வாக்குரிமை இல்லை. 1866-ல் சமர்ப்பிக்கப்பட்ட மசோதா ஒரு மிதமானதாகவே இருந்தது. ஆனுல், இந்த மசோதாவில் பல குறைபாடுகள் காணப்பட்டன. சமரசத்தில் காணுகின்ற பல தீமைகளும் இந்த மசோதாவில் இடம் பெற்றன. பரோ வாக்குரிமையை £7-க்குக் குறைத்துவிட்டாலும் ரேடிகல்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. பல விக் கட்சி அங்கத்தினர்களும் விடுதிகளில் தங்குகிறவர்களுக்கு அளிக்கக்கூடிய வாக்குரிமையை ஏற்றுக் கொள்ளவில்லை. நாற்பது லிபரல் அங்கத்தினர்கள் சிறப்பான நாவன்மை பெற்ற ராபர்ட் லோ என்பவருடைய தலைமையில் ஒன்று சேர்ந்து கிளாட்ஸ்டனுடைய தலைமையைப் பலமாகத் தாக்கினர். அவர்களுடன், எதிர்கட்சியும் சேர்ந்துகொண்டது. பிரைட் இந்த கோஷ்டியினரை, 'ஆடுலம் குகை' (The cave of Adullam) என்று வருணித்தார். ஜூன் மாதத்தில் அவர்கள் ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்தனர். வரி கொடுப்பவர்களுக்கெல்லாம் வாக்குரிமை வேண்டுமென்றும், வாக்குரிமை வாடகை மதிப்பீட்டின்பேரில் நிர்ணயம் செய்யக்கூடாதென்றும் அவர்கள் கொண்டுவந்த திருத்தம் வற்புறுத்தியதன்பேரில், இத் திருத்தம் நிறைவேறியது. அதன்பேரில் அரசாங்கம் ராஜிநாமா செய்தது. ஆனுல், பாராளுமன்றம் கலைக்கப்படவில்லை. பாராளுமன்றத்தை அப்பொழுது கலைப்பதும் சரியாகப்படவில்லை. ஏனெனில், அப்பொழுதுதான் ஆஸ்திரியா–பிரஷ்யாப் போர் ஆரம்பமாகியிருந்தது. சீர்திருத்த மசோதாவினுல், பாராளுமன்றம் கலைக்கப்பட்டால், 'லிபரல்' கட்சியில் பிளவு ஏற்பட்டுவிடலாம் என்று மக்கள் கருதினுர்கள்.

அதற்குப் பிறகு, டெர்பி, தன்னுடைய மூன்றுவது மந்திரி சபையை அமைத்தார். அவரும் 1868 பிப்ரவரி மாதத்தில் ராஜி நாமாவைச் சமர்ப்பித்தார். அதன் பின்பு டிஸ்ரேலி தமது முதல் மந்திரிசபையை அமைத்தார். உண்மையில், வரலாற்றிலும் அது முதன்மையான இடத்தைப் பெற்றது. பீலின் வீழ்ச்சிக்குப் பிறகு, முதல் முறையாக பலமிக்க கன்சர்வேடிவ் கேபினட்டை இப்பொழுதுதான் பார்க்க முடிந்தது. இந்தக் கேபினட்டில், கிரேன்போர்ன் (Cranborne) (பின்பு ஸாலிஸ் பிரபுவானுர்), கேத்தார்ன் ஹார்டி (Gathorne Hardy) (இவர் கிளாட்ஸ்டனை ஆக்ஸ்ஃபோர்ட் தொகுதியில் தோற்கடித்தவர்), கார்னர்வான் (Carnarvon), ஸ்டாஃபோர்ட் நார்த்கோட் (Stafford Northcot) ஆகியோர் பதவி வகித்தனர். ஆனுல், எல்லா எதிர்கட்சி யினரும் ஒன்றுக இணையும் சமயத்தில் இவர்கள் சிறுபான்மை யினராகிவிடுகின்றனர். அதனுல் இரு தரப்பினரும் ஒப்புக்கொண்ட பிரச்சினைகளைமட்டும் முதலில் கவனித்தனர். எடுத்துக்காட்டாக, கனடாவில், கூட்டாட்சியை ஏற்படுத்து வதற்கான சட்டம், கட்டாயத் திருச்சபை வரிகளை ரத்து செய்தல், தேர்தல் வழக்குகளை நீதிபதிகளுக்கு மாற்றிவிடுதல் போன்ற நடவடிக்கைகளை இதற்கு எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம். இதற்கு முன்பு தேர்தல் வழக்கு மனுக்களைக் கட்சிக் குழுவினரே விசாரணை செய்தனர்.

பாராளுமன்றச் சீர்திருத்த மசோதா தோல்வி அடைந்த தால்தான் ரஸ்ஸல் வெளியேற்றப்பட்டார். ஆனுல், இக் கட்சி யினரும், அம் மசோதாவைக் கொண்டு வராது காலம் கடத்த முடியாதநிலை ஏற்பட்டுவிட்டது. அப்படிக் காலம் கடத்துவதும் அவர்களுடைய கட்சி நலன்களுக்கு உகந்ததன்று. எங்கும் கிளாட் ஸ்டன், சுதந்திரம் என்ற முழக்கங்களே கேட்டன. ஆத்திர மடைந்த சிலர், ஹைட் பூங்காவில் உள்ள வேலிகளைக் களைந்து எறிந்தனர். அவசியமற்ற குற்றச்சாட்டுகளை எதிர்த்துத் தொழிற் சங்கங்கள் குமுறின. அமெரிக்க ஆட்சி முறையை உதாரணமாக எடுத்துக்காட்டினர். பிரைட், மில் போன்றவர்கள் இப் பிரச் சினையில் இன்னும் காலம் கடத்துவது அபாயத்தைத் தேடித் தரும் என்று அரசியாருக்கும், மற்ற அரசியல்வாதிகளுக்கும் விளங்கவைத்தனர். இதற்குப் பிறகுதான் உண்டான தகராறே, இந்தச் சீர்திருத்த மசோதா மீண்டும் கொண்டுவரப் பட்டது. டிஸ்ரேலிக்கும் கிளாட்ஸ்டனுக்கும் இடையே இப்படிக் கன்சர்வேடிவ் அரசாங்கம் இந்த முன்னேற்றமான சீர்திருத்த மசோதாவைக் கொண்டுவருவதற்குக் காரணமாக இருந்தது.

இந்தச் சீர்திருத்த மசோதாவைத் தயாரிப்பதற்கு டிஸ்ரேலி எத்தகைய சூழ்ச்சியையும் செய்யவில்லை. இந்தப் பிரச்சினையைக் காலம் கடத்துவதற்குங்கூட அவர் தயாராகத்தான் இருந்தார். பாராளுமன்றத்தில் இந்த மசோதா நிறைவேறவில்லையெனில், பாராளுமன்றம் கலைக்கப்படுவதையுங்கூட அவர் எதிர்பார்த்தார். அதுவரையிலும் அவர் பொறுமையாகவும் இருக்க விரும்பினர். ஆனல், இந்த மசோதாவை விரைவில் நிறைவேற்ற வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. ஏற்கெனவே, கிளாட்ஸ்டன் இந்தவிதமான மசோதாவைக் கொண்டு வந்து, அதை நிறைவேற்றத் தவறிவிட்டார். அவருடைய தோல்விக்கான காரணங்களை டிஸ்ரேலி நன்ருகக் கவனித்து, விக்குகளுக்கும் ரேடிகல்களுக்கும் உள்ள வேறுபாடுகளை இணைத்து, முதலில் சமரசத்தை ஏற்படுத்த முனைந்தார். மேலும், அவருடைய செயல்முறைகளில் ஏற்பட்ட குறைகளையும் சரி செய்தார். 1867-ல் கொண்டு வந்த சீர்திருத்த மசோதாவின் முக்கியமான அம்சம், நேரடியாக வரிகள் தரும் ஒவ்வொரு வீடுடையவருக்கும் வாக்குரிமை அளிப்பதே நிரந்தரமாகச் செய்யும் சீர்திருத்தமாகும் எனக் கருதினர். இதைத் தவிர,பத்துப் பவுன்களுக்குள் இடையே உள்ள எந்தத் தகுதியைப் பெற்றும், தரப்படுகின்ற வாக்குரிமை நிரந்தரமாக இருக்க முடியாதென்ற கருத்தையும் அவர் உணர்ந்தே இருந்தார். ஆனல், நேரடியாக வரிகளைத் தருகின்றவர்களுக்கு வாக்குரிமை அளிக்கவேண்டுமென்ற பிரச்சினையில் சில குறைகளும் காணப்பட்டன. வீட்டுவரிகளை அந்த வீடுகளின் சொந்தக்காரர்கள் கட்டும்பொழுது காணப்படுகின்ற குறையே இது. பர்மிங்காம் போன்ற நகரங்களில் இவர்களைப் போன்றவர் பல ஆயிரக்கணக்கில் இருந்தனர். ஜனநாயகத்திற்கு மற்றப் பல தடுப்புகளையும் கவனிக்கவேண்டியிருந்தது. நிறைய வரி கொடுப்பவர்களுக்கு அதிகப்படியான வாக்குரிமைகளும் சேமிப்பு பாங்குகளில் பணம் சேர்த்து வைத்திருப்பவர்களுக்கும் அல்லது பல்கலைக்கழக பட்டதாரிகளுக்கும், மேலும் இரண்டு ஆண்டுகள் குடியிருப்புத் தகுதியும் பெற்றிருப்பவர்களுக்கு வாக்குரிமை அளிப்பதென்று முடிவு செய்யப்பட்டது. பாராளுமன்றத்திலுள்ள பல குழுக்கள் பலவிதமான கருத்துகளைத் தெரிவித்தன. அரசாங்கம் சிறுபான்மையினரை நம்பியே இருக்கிறது. மேலும், பல கன்சர்வேடிவ் அங்கத்தினர்கள் பெரிய நகரங்களைப் பிரதிபலித்தனர். இந்தச் சூழ்நிலையில் மசோதாவில் மாற்றம் ஏற்பட்டது. இந்தச் சிக்கலைத் தீர்க்க வேண்டுமென்ருல், ஏதாவது ஓர் எளிய முறையைத்தான் பின்பற்றவேண்டியிருந்தது. கிளாட்ஸ்டன், நேரடியாக வரிகளைச் செலுத்தாதவர்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு இந்த மசோதாவைக் கண்டித்து

வந்தார். அதனால் டிஸ்ரேலி, டெர்பியைத் தூண்டி வீட்டுவரி கொடுப்பவர்களுக்கு எந்தவிதமாகவும் பணத்தகுதியை வரையறை செய்யாமல் வாக்குரிமை அளிக்கும் அம்சத்தில் முக்கியத்துவம் அளிக்கச்சொல்லிக் கூறினார். இந்தப் பிரச்சினையில், கிரான்போர்ன், கார்னர்வான், தளபதி பீல் ஆகியோர் ராஜிநாமா செய்தனர். இந்த அதிர்ச்சியை டிஸ்ரேலி தாங்கிக்கொண்டார். ஏனெனில், கட்சியின் பெரும்பான்மையினர் முடிவாக இதைத்தான் ஆதரித்தனர். அதனால், ஆலோசிக்கப்பட்ட சில ஜனநாயகத் தடுப்புகள், விருப்பப்படி கொடுத்த வாக்குரிமை அல்லது பன்மை வாக்குரிமை ஆகியவையெல்லாம் கைவிடப்பட்டன. இரண்டு ஆண்டுகள் குடியிருப்பு வேண்டுமென்றிருந்ததும் ஓர் ஆண்டாகக் குறைக்கப்பட்டது. இதற்கு அடுத்தபடியாகக் கொண்டுவரப்பட்ட திருத்தத்தில் வரிகளை மற்றவர்கள் செலுத்தினாலும், அவர்களுக்கும் வாக்குரிமை அளிக்கவேண்டுமென்று கொண்டுவரப்பட்டது, இதனால், தொழிலாளர்களுக்கு நிறைய வோட்டுகள் கிடைத்தன.

இரண்டாவது சீர்திருத்தச் சட்டம், பரோக்களில் வரி கொடுத்து வீடுகளில் குடியிருப்போருக்கும், அல்லது £ 10 மதிப்புள்ள விடுதிகளில் தங்கியிருப்போருக்கும் வாக்குரிமை தந்தது. கவுன்டிகளில் £ 12 மதிப்புள்ள வீடுகளில் குடியிருப்போருக்கும் வாக்குரிமை தந்தது. இதனால் 938,000 புதிய வாக்காளர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டனர். முன்பிருந்ததைவிட இந்த எண்ணிக்கை இரண்டு மடங்காயிற்று. பின்பு 45 தொகுதிகள் சீரமைக்கப்பட்டன. 10,000 மக்கள் தொகைக்குக் குறைந்திருந்தால் ஒவ்வொரு பரோவிலிருந்தும் ஒவ்வோர் அங்கத்தினரை எடுத்துவிட்டார்கள். இதைப்பற்றி டெர்பி இருட்டில் தேடுவதைப் போன்றே அல்லது நயகராவைக் குறிவைப்பது போன்றே இம் முறை இருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளார். இந்தச் சீர்திருத்த மசோதாவில் அதிருப்தி அடைந்த கார்லைல், பேஜ்ஹாட் தமது ராஜிநாமாக்களைச் சமர்ப்பித்தனர். அவர்களுக்கு இந்த மசோதாவில் சந்தேகம் இருப்பதாகவும் தெரிவித்தனர்.

ஒரு சீர்திருத்த மசோதா நிறைவேறும்பொழுது அதைப் பின்பற்றிப் பாராளுமன்றக் கலைப்பும் ஏற்படுவதுவழக்கமாகிவிட்டது. ஆனால், இந்தச் சீர்திருத்த மசோதா கொண்டுவருவதற்கு முன்பே டெர்பியும் ரஸ்ஸலும் தங்களுடைய கட்சித் தலைமையை விட்டுவிட்டனர். கிளாட்ஸ்டன், எப்பொழுது பொழுதுவிடியும் என்று காத்திருந்தார். அவருடைய சாதுரியத்தால், மிகவும் குழப்பம் மிகுந்த பிரச்சினையான ஐரிஷ் திருச்சபை விவகாரத்தை

இப்பொழுது வற்புறுத்தினர். அதனுல் ஒரு சமயம் அவருக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடைக்கலாம் என்று நம்பினர். 1868-ல் கூட, ஐரிஷ் அரசையும் திருச்சபையையும் ஒன்ருக இணைக்கும் திட்டத்தை முறியடிக்கும்வண்ணம் பல தீர்மானங்களைக் கொண்டு வந்தார். கன்சர்வேடிவ் கட்சியில் இதையொட்டி பிளவு ஏற்படலாம் என்பதுதான் மீண்டும் இதை இவர் வற்புறுத்தியதற்குக் காரணமாகும். டிஸ்ரேலியுங்கூட, பிட்டின் 'சமமாக்குவது' என்ற பழைய திட்டத்தையே ஆதரித்தார். அதாவது, கத்தோலிக்கர்களுடைய நிறுவனத்தை நிலைநிறுத்தியும் அதே சமயத்தில் ஆங்கிலிகன்களுடைய நிறுவனங்களைக் கலைக்காமலும் இருப்பதைத்தான் 'சமமாக்குவது' என்று கூறினர்கள். ஆனுல், பிராடஸ்டன்டுகள் இத் திட்டத்தில் திருப்தி அடையவில்லை. புதிய தேர்தலில் கன்சர்வேடிவ்கள் 'போப் கூடாது', 'திருச்சபையும் அரசும் இணையவேண்டும்' என்ற முழக்கங்களை எழுப்பியும் கிளாட்ஸ்டனைத் தோற்கடிக்க முடியவில்லை. அவர் 112 அங்கத்தினர்களைக்கொண்ட பெரும்பான்மையுடன் வெற்றிபெற்ருர்.

1874-வரை நீடித்த அவருடைய முதல் அரசாங்கம் மிகச் சிறப்புடையது. ஐம்பத்தொன்பது வயதில் அவருடைய அறிவுக் கூர்மை மிகவும் உச்சத்தில் இருந்தது. அவருடைய கேபினட்டில் பிரைட், ஹார்டிங்டன், லோவ் ஆகியோரைச் சேர்த்துக்கொண்டதால், லிபரலிசத்தின் எல்லாப் பிரிவினரையும் சேர்த்துக் கொண்டதுபோலாயிற்று. கார்ட்வெல், சில்டர்ஸ், கோஷன் ஆகியோர் மிகச் சிறந்த நிர்வாக அனுபவம் பெற்ற அதிகாரிகள். அதனுடன், மிகச் சிறந்த இராச்சியவாதியான ஸெல்போர்ன் பிரபுவை 1872-ல் அவர் நிதி மந்திரியாக்கினர். இந்தப் புதிய பாராளுமன்றத்தில் மூன்றில் ஒரு அங்கத்தினர் முதன்முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருந்தனர். லிபரல் கட்சிக்கே புதியவர்களான ஹார்கோர்ட், டில்க், கேம்ப்பெல்-பேனர்மேன் ஆகியோர் பிற்காலத்தில் நல்ல புகழை அடைந்தனர்.

அவருடைய உழைப்பு மிகவும் கடுமையானது; அவர், தொடர்புடைய பல பெரியத் திட்டங்களைச் சாதிக்கவேண்டுமென்றிருந்தார். அவருடைய திட்டங்களில் சில குறைகளும் இருந்தன. அவருடைய வெளிநாட்டுக் கொள்கை தெளிவில்லாமல் இருந்தது. சமுதாயக் கொள்கையும், மக்களிடம் ஜனநாயகத்தைப் பதிய வைக்கவேண்டும் என்ற அடிப்படையில் இருந்தது. ஆனுல், அவருடைய உணர்வும் சாதனையும் பத்தொன்பதாம் நூற்ருண்டின் லிபரலிசம் இருந்த சூழ்நிலையைக் காட்டியது. நாட்டின் மக்கள் மேன்மையான நம்பிக்கையும், எதிர்ப்பில்லாத

சக்தியையும் உணர்ந்திருந்தார்கள். கிளாட்ஸ்டனைப் பற்றி அதிக மான அளவில் குறைவாகவும் சொல்லலாம். அவர் ஆங்கிலேய உணர்வை அதிகமாகப் பெற்றிருந்ததால், சில சமயங்களில் நியாயத்தையும் மறந்து, எதிர்கால நன்மைகளையும் கவனியாமல், நாட்டின் உடனடியான தேவைகளில் ஈடுபட்டிருந்தார். அவர் பழைய ஆக்ஸ்ஃபோர்ட் முறையில் தமது சிந்தனையைச் செலுத்தினர். அவருடைய சிந்தனையில் தெய்வீகத் தத்துவம் கலந்திருந்தது. ஒவ்வொரு முடிவும் சுற்றி வளைத்துத்தான் வந்தது. சில சமயங்களில் காக்கமுடியாத அளவில் அவர் குறுக்கு வழிகளிலும் தம் முடிவுகளைச் செய்தார். ஒழுக்கப் பிரசாரம் செய்கின்றவர்களைப் போல, அவருடைய பெரிய குரலுடன், ஒரு சிறிய தெய்வீகக் கட்டளையையும் வைத்துக் குழப்பிவிடுவது அவருடைய வழக்கம். ஆனல், அவர் சிறந்த அறிவுத் திறனையும் பண்பையும் பெற்றிருந்தார். 'என்னைப் போன்று தகுதியற்றவனையுங்கூட, ஏதோ இறைவனுடைய நோக்கத்திற்காக, இன்னும் உயிருடன் வாழ வைத்திருக்கிறுர்' என்று அவர் பதவியேற்கும்பொழுது அவருடைய நாட்குறிப்பில் எழுதி வைத்திருந்தார்.

ஒரே ஆண்டில், அவர் அயர்லாந்திற்கு இரண்டு பெரிய சட்டங்களை இயற்றினர். இந்தச் சட்டங்கள் இனிமேலும் கால தாமதம் செய்யக்கூடாதென்று எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொண்டன. அயர்லாந்திலே இன வெறி மிகவும் வேகமாக வளர்ந்து வந்தது. அதற்கேற்ப அமெரிக்க உள்நாட்டுப் போரும், அதில் விளைந்த அனுபவங்களையும் அடிப்படையாகக்கொண்டு புது உணர்வுடன் மிகவும் புரட்சிகரமான ஃபெனியன் (Fenian) சகோதரத்துவ இயக்கம் ஒன்று ஆரம்பமாகியது. ஃபெனியன்கள் கனடாவை 1867-ல் தாக்கினர்கள். மான்செஸ்டரில் சிறை வைக்கப்பட்டிருந்த ஃபெனியன் கைதிகளை விடுவிக்க அவர்கள் முயற்சி செய்தார்கள். அதனுல் மூன்று பேர் தூக்கிலிடப்பட்டனர். லண்டனில் குண்டுவீச்சுகள் நிகழ்ந்தன. ஆஸ்திரேலியாவில், அரசியாரின் இரண்டாவது மகனைக் கொல்ல முயற்சி செய்தனர். திருச்சபை இனிமேல் அதனைக் காப்பாற்றிக்கொள்ள முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது என கன்சர்வேடிவ்கள் கருதினர்கள். அதனுல் ஐரிஷ் திருச்சபைச் சட்டத்தை எளிதாக நிறைவேற்ற முடிந்தது. அரசியாரின் ஆலோசனையுடன் ஆர்ச்பிஷப் டெய்ட் என்பவர் திருச்சபை நிறுவனத்தைக் கலைத்துவிடுவது தவிர்க்க முடியாத காரியமாகும் என்று கருதினர். அப்படிக் கலைத்துவிடுவதனுல் எவ்வளவு அதிகமாகத் திருச்சபைச் சொத்துகளைக் காப்பாற்ற முடியுமோ அத்தனையையும் பாதுகாக்க முயன்முர்.

டெர்பி இறப்பதற்கு முன்பு அவர் இந்தச் சட்டம் நிறைவேருது எதிர்ப்பைத் தெரிவித்தார். 1869-ல் அவர் இறந்துவிட்டார். டிஸ்ரேலியின் நண்பரும் வழக்கறிஞருமான கேர்ன்ஸ் கொண்டு வந்த தீர்மானத்தைப் பிரபுக்கள் சபை இறுதியாக ஏற்றது. இதற்கு முன்பு இயற்றப்பட்ட ஐரிஷ் இணைப்புச் சட்டப்படி, ஆங்கிலிகன் திருச்சபையைக் கலைக்காது நிரந்தாமாக்கிவிட வேண்டுமென்ற நிபந்தனை இப்பொழுது ரத்து செய்யப்பட்டது. அயர்லாந்திலுள்ள ஆங்கிலிகன் திருச்சபை கலைக்கப்பட்டதால் ஆங்கிலேயத் திருச்சபையிடமிருந்த தொடர்பும் குறைந்து விட்டது. அதற்குப் பிறகு ஐரிஷ் திருச்சபை ஒரு தொண்டர்கள் கழகம் போலப் பணியாற்றியது. அதனுடைய வருவாய் பாதிக்குமேல் குறைந்துவிட்டது. சில மில்லியன் பவுன்கள், அடுத்த பத்தாண்டில், கல்வியைப் பரப்புவதற்கும், வறுமையைப் போக்குவதற்கும், வாடகை பாக்கிகளைத் தருவதற்கும் பயன் படுத்தப்பட்டன. இருப்பினும் இந்தச் சட்டத்திஞல் வருகின்ற விளைவு உள்நாட்டுப் போரை உருவாக்குவது என்று டிஸ்ரேலி கூறியது கவனிக்கத் தக்கதாகும்.

ஆனுல், ஐரிஷ் திருச்சபையின் பிரச்சினையைவிட நில உடைமைப் பிரச்சினைதான் அதிக ஆர்வத்துடன் கவனிக்கப் பட்டது. 1845-ல் ஏற்கெனவே டிவான் கமிஷன் இந்த நிலப் பிரச்சினையை நன்கு பரிசீலனை செய்தது. இப்பொழுது கிளாட்ஸ் டனுங்கூட, அந்தக் கமிஷன் சிபாரிசுகளையே ஏற்றுக்கொண்டார். டிஸ்ரேலியின் கூட்டாளிகள் 1852-ல் அவரை இதே திட்டங்களை ஏற்றுக்கொள்ளாதபடி தடுத்தனர். அல்ஸ்டரில் பின்பற்றுகின்ற சில வழக்காறுகளை மற்றப் பகுதிகளிலும் ஒரேவிதமாகப் பரப்பி விடவேண்டுமென்பதே அக் கமிஷனின் நோக்கம். நிலத்தில் உழு கின்றவன், நிலத்திற்காகச் செப்பமிடும் செலவினங்களுக்காக நஷ்ட ஈடு கொடுக்கப்படவேண்டும். தவிர, அவனுக்கு ஏற்படு கின்ற தொல்லைகளுக்காகவும் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும். இந்த முறையை இவர் கொண்டு வரமுடியும் என்று நினைத்தார். இந்தப் பிரச்சினையில், அவருக்கும் அயர்லாந்து காரியதரிசியான ஃபார்டஸ்குயூவுக்கும் (Fortescue) கருத்து வேறுபாடு இருந்தது. இதைவிட, வேறு நலன்களும் வேண்டுமென்று ஐரிஷ் காரியதரிசி விரும்பினர். பிரைட் போன்றவர்கள் நிலப் பிரபுக்களிட மிருந்தே நிலங்களை வாங்கி, உழைக்கின்றவர்களுக்கே அந் நிலங் களை விற்றுவிடவேண்டுமென்ற கருத்துடையவர்களாக இருந் தனர். ஆனுல், ஆர்கில், லோவ், மற்றும் ஆங்கிலேய கோஷ்டி யினர், சொத்துடைமைபற்றி ஆங்கிலேயர்கள் கொண்டுள்ள எண்ணத்தை மாற்றிக்கொள்ள முடியாதென்று கருதினர்கள்,

அதனுல், 1870ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நிலச் சட்டம் பெரிய சாதனையென்றாலும், அச் சட்டம் அடிப்படையான விவகாரங் களை அணுகவில்லை. குத்தகைக்காரர்கள் செய்கின்ற எல்லா அபிவிருத்திகளுக்கும் நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும்; வாடகை தராதிருந்தால்மட்டுமே அவர்களைக் காலி செய்யக்கூடுமே தவிர, மற்றப்படி வேறு காரணங்களுக்காக அவர்களைக் காலி செய்தால் அதற்கும் அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும். ஆனுல், நியாயமான வாடகையை வசூலிக்கத்தான், நிலக்கிழார்கள் கடமைப்பட்டிருக்கிருர்களே தவிர, அதிகமாக வாடகை வசூல் செய்தால், குத்தகைகாரர்களுக்கு உண்மையில் தொல்லையே ஏற்படும். ஏனெனில், நியாயமான வாடகையோ, அல்லது குறிப்பிட்ட காலவரையோ நிர்ணயம் செய்யப்படவில்லை.

கிளாட்ஸ்டனின் மற்ற இரண்டு முயற்சிகள் நிறைவேற வில்லை. வேல்ஸ் இளவரசன் வசிக்கும் இடமாக அயர்லாந்தைக் கருதவேண்டும் என்ற அவருடைய ஆலோசனையை அரசியார் ஏற்றுக்கொள்ளவில்லை. மற்றொன்று, பிராடஸ்டன்டுகளும் கத்தோலிக்கர்களும் கலந்து படிக்கும் ஒரு பல்கலைக் கழகத்தை நிறுவுவது என்ற திட்டத்தைக் கத்தோலிக்க பிஷப்புகள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனுல், இரண்டுமே அதிருப்தியைப் போக்க வல்ல செயல்கள் அல்ல. ஏனெனில், எப்போதுமே நிலத் தகராறுகளும், கட்டாய நடவடிக்கைகளும் போன்ற சில தீய சக்திகள் வேலை செய்துகொண்டே இருந்தன. தவிர, 1870-ல் சுய ஆட்சி வேண்டுமென்ற இயக்கம் பணியாற்றத் துவங்கிவிட்டது. அதனுல், பேரரசின் பாராளுமன்ற ஆதிக்கத்தில் அயர்லாந்தைக் கட்டுப்படுத்தி வைத்திருக்க முடியுமா என்ற சந்தேகம் கிளாட்ஸ் டனுக்கு வந்துவிட்டது.

அவர் 1870-ல் இயற்றிய கல்விச் சட்டம் அவருடைய ஆதர வாளர்களிடையே கருத்து வேற்றுமையை ஏற்படுத்திவிட்டது. இருப்பினும் இந்தச் சட்டம் மிகவும் முக்கியமானதாகும். இது இவருடைய முயற்சியால் ஏற்பட்டதே. அயர்லாந்து விவகாரங் களிலேயே தன் கவனத்தைச் செலுத்தியிருந்தபோதிலும் இந்தச் சட்டத்தை இயற்றுவதில் அவர் அதிக ஆர்வத்தைக் காட்டினுர். சமயத்தைப் பாதிக்கின்ற வரையிலும் அவர் இச் சட்டத்தில் அக்கறையைக் காட்டினுர். தேசியக் கல்வி சேவையை ஏற்படுத்தி யிருந்தால், பழைய தலைமுறையினர் இதை ஏற்றிருக்கமாட்டார் கள். பழைய முறைப்படி பிரிவி கவுன்சிலின் குழுவினர் கல்வி நிர்வாகத்தை ஏற்றிருந்தனர். மானியங்களை அளிப்பதில்தான் அவர்கள் அதிக அக்கறையைக் காட்டினுர்கள். பிரிவி கவுன் சிலின் குழுவின் காரியதரிசியான கே ஷட்டில்வர்த் (Kay

Shuttleworth) என்பவர் ஆய்வாளர்களை அனுப்பிப் பள்ளிகளின் நிர்வாகத்தைக் கவனித்துவந்தார். அவர்கள் பொது மானியங்களைச் செலவிடுவதற்கான திட்டங்களையும், உள்ளூர் நிதி வசூல்களைத் திரட்டுவதிலும் கவனத்தைச் செலுத்தினர். 1833-ல் கல்விக்காக ஒதுக்கப்பட்ட மானியத்தொகை £20,000-த்திலிருந்து 1860-ல் ஒரு மில்லியன் பவுன் வரையிலும் அதிகமாகிவிட்டது. இந்தக் குழுவினரின் உபதலைவர், பாராளுமன்றத்தில் அக்குழுவின் சார்பாக அங்கம் வகித்தார். நியூகாஸில் கமிஷன் 1858-ல் பெரிய பகுதிகளுக்குத் தனிப்பட தேர்ந்தெடுத்த சங்கமே அமைக்க வேண்டுமென்று சிபாரிசு செய்தது. அந்தச் சங்கத்திற்குக் கல்வி வரியை விதிக்கும் அதிகாரமும் தரப்படவேண்டுமென்று கூறியது. ஆனால், அந்தக் கமிஷன் கட்டாயக் கல்வியைச் சிபாரிசு செய்யவில்லை. பல குழந்தைகள் பள்ளிகளிலிருந்து பதினொன்றுவது வயதிலேயே நின்றுவிட்டனர். இரண்டு மில்லியன் குழந்தைகளுக்குமேல் பள்ளிகளுக்குச் செல்லவில்லை. கல்வியைப் பரப்பும் அவசியம் அப்பொழுது அதிகமாக உணரப்பட்டது. டிஸ்ரேலியின் சீர்திருத்த மசோதாவை மிகவும் கடுமையாக எதிர்த்த ராபர்ட் லோவ் என்பவர் அப்பொழுது இந்தக் கல்விக் குழுவின் உபதலைவராகப் பணியாற்றினார். உங்கள் 'ஆசிரியர்களுக்கு முதலில் கற்பித்துக் கொடுங்கள்' என்று அவர் கூறினார். அமெரிக்காவில் வடக்கு நாடுகள் வெற்றிபெற்றதையொட்டி, இவ்விதமான குரல்கள் கிளம்பின. பிஸ்மார்க்கின் பிரஷ்யா, இக் கட்டாயக் கல்வியினால் எவ்வளவு முன்னேற்றமடைந்து இருக்கிறது என்பதை அப்பொழுது பள்ளி ஆய்வாளனாக இருந்த மேத்யூ ஆர்னல்ட் உணர்ந்தார். எல்லாருக்கும் கட்டாய ஆரம்பக் கல்வி கொடுக்கவேண்டுமென்று தீவிரவாதிகள் கோரினர். 1869-ல் ஜோசப் சேம்பர்லேன் பர்மிங்காம் உற்பத்தியாளர் தேசியக் கல்விச் சங்கம் என்ற ஒரு நிறுவனத்தை ஆரம்பித்தார்.

கிளாட்ஸ்டனின் கல்வி மந்திரியான வில்லியம் ஃபார்ஸ்டர் (William Forster) என்பவர், குவேக்கர் சமயப் பிரிவைச் சார்ந்த மிகுந்த தைரியசாலி. அவர் எதிர்காலத்தை மனத்தில் வைத்து, ஒரு முன்னேற்றமான சட்டத்தை இயற்றினார். ஆனால், ரேடிகல் கட்சியினருக்கு இந்தச் சட்டம் மிகப் பழமையானதாகவே பட்டது. அது தேசிய அளவில் கல்வி பரப்பும் திட்டமாக இல்லை; இருக்கின்ற முறையைச் சிறிது மாற்றம் செய்திருக்கிறார். திருச்சபையினர் நடத்தும் பள்ளிகள் நீடித்திருக்கும். ஆனால், அவைகளை நடத்தப் போதுமான நிதி வசதிகள் அந்தப் பள்ளிகளுக்கு இருக்கவேண்டும். அவைகள் வகுப்புத் தரத்தையும் பாதுகாத்துக் கொள்ளவேண்டும். வேறு பள்ளிகள் அமைக்கப்பட

வேண்டுமென்றால் தேர்ந்தெடுக்கப்பட்ட சங்கங்கள் புதிய பள்ளி களை நிறுவவும், மற்றும் கல்வி வரியை அப் பகுதிகளில் வசூலிக் கவும் அதிகாரம் தரப்பட்டிருந்தது. கட்டாயக் கல்விமுறையை அவர்கள் கொண்டு வரவில்லை; ஆனால், சங்கம் கட்டாயப் பள்ளி வருகையை வற்புறுத்தியது. பள்ளிக் கட்டணங்கள் வசூலிக்கப் பட்டன. கட்டணங்களைக் கொடுக்க முடிந்தவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டது. கொடுக்கமுடியாதவர்களுக்குச் சங்கம் அளித்தது. சமயப் பற்றற்ற பள்ளிகள் என்று சொல்லுவதற் கில்லை. ஏனெனில், சமயத்தைப்பற்றிய பாடங்கள் கற்பிக்கப் பட்டன. சுருக்கமாகச் சொன்னால், புதிய பள்ளிகளை நிறுவு வதும், அவைகளைப் பராமரிப்பதும், அவைகளில் மாணவர்களைச் சேர்ப்பதும், மிக எளிதான வழிகளில் நடைபெறவேண்டும். பாராளுமன்றத்தில் உதவியும் மிகவும் எளிதாகவே இருக்க வேண்டுமென்ற கொள்கையை அவர்கள் பின்பற்றினார்கள்.

இச் சட்டத்தைக் கொண்டுவந்ததால் பெரிய எதிர்ப்பு ஏற்பட்டது. கன்சர்வேடிவ் ஓட்டுகளால்தான் இந்தச் சட்டமும் நிறைவேறியது. திருச்சபையில் இணங்காத தீவிரவாதிகளுடைய தாக்குதல்களிலிருந்து, கன்சர்வேடிவ்கள்தான் கிளாட்ஸ்டனைக் காப்பாற்றினார்கள். ஓர் ஆசிரியர் பள்ளிகளில் சமயபோதனை இருப்பதாலும் அதை இணங்காதவர்கள் ஏற்றுக்கொள்ள முடியாதென்பதாலும், அப் பள்ளிகளுக்கு எப்படி வரியைக் கொடுக்கமுடியும் என்று அவர்கள் கண்டித்தனர். இறுதியில் கூப்பர்-டெம்பிள் என்பவர் ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்தார். வரிவசூல் செய்யும் பள்ளிகளில் சமயபோதனை கூடாதென்றும், அல்லது எந்தச் சமயக் கோட்பாட்டையும் கற்பித்துத் தரக்கூடா தென்றும் அத் திருத்தம் கூறியது. ஆனால், திருச்சபை நடத்தும் பள்ளிகளுக்கு இரட்டிப்பு மானியத் தொகை அரசாங்கத்தால் கொடுக்கப்பட்டது. தீவிரவாதிகளின் கோபம் வெகுகாலம் வரையிலும் நீடித்தது. அவர்கள் இதை மன்னிக்கவே இல்லை. அவர்கள், இடைத் தேர்தல்களில் அரசாங்கக் கொள்கைகளையும் வேட்பாளர்களையும் பலமாகக் கண்டித்தனர். கடைசியில் இந்தச் சட்டத்தை அவர்கள் ரத்து செய்வதில் வெற்றி பெற் றார்கள். உண்மையில், பள்ளிகளில் மாணவர்கள் இலவசமாகப் படிப்பதற்கும் கட்டாயக் கல்வியை எதிர்காலத்தில் கொண்டு வருவதற்கும் ஆன வசதிகளை இந்தச் சட்டம் அளித்தது. ஒரு வகையில் திருச்சபையினருக்கும் அச் சபையோடு இணங்காதார் களுக்கும் இணக்கத்தைத் தேடித்தந்தது இச் சட்டம்.

படித்த மக்களுக்கும் நல்ல அபிவிருத்தி செய்துகொள்ளும் வாய்ப்புகளை இந்த மந்திரிசபை அளித்தது. 1869-ல் இயற்றிய

மானியப் பள்ளிச் சட்டம் உயர்நிலைப் பள்ளியிலுள்ள சில குறை பாடுகளை நீக்கியது. இச் சட்டத்தின்படி பல கமிஷனர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் பொதுப் பள்ளிகளைப் புதுப் பித்தனர். பழைய மானியத் தொகைகளையும் புதுப்பித்தனர். 1871-ல் பல்கலைக் கழகங்களில் பின்பற்றப்பட்ட சோதனைச் சட்டங்கள் ரத்து செய்யப்பட்டன. ஒரு சில மதபோதனை அல்லது மதத் தத்துவங்களைப் படிக்கின்றவர்களுக்கும், பேராசிரியர் களுக்கும் மட்டுமே இந்தச் சோதனைச் சட்டம் நீடிக்கப்பெற்றது. இப் பல்கலைக் கழகங்களின் நிதி நிலைமையைப்பரிசிலனை செய்ய ஒரு கமிஷன் நிறுவப்பட்டது. 1855-லிருந்தே சிவில் சர்விஸ் கமிஷன் (Civil Service Commission) ஒன்று பணியாற்றி வந்தது. இதன் மூலமாக ஓரளவுக்குத்தான் அதிகாரிகளை நியமித்து வந்தார்கள். அஃது இன்னும் முழுவதுமாகச் செயலாற்றவில்லை. ஆனல், இந்த நிறுவனத்தை ரஸ்ஸலும், அரசியாரும் விரும்பவில்லை. ஆனல், 1870-ல் போட்டித் தேர்வுகளில் வெற்றிபெறும் மாணவர்களி லிருந்துதான் அதிகாரிகளை நியமனம் செய்ய வேண்டுமென்ற சீர்திருத்தத்தை அவர் கொண்டுவந்தார். அந்தத் துறைத் தலைவர்கள் இந் நியமனங்களை அங்கீகரிக்கவேண்டும். வெளித் துறை அலுவலகத்திற்குமட்டும் விதிவிலக்குத் தரப்பட்டது. தவிர, எல்லா வேலைகளுக்கும் போட்டித்தேர்வில் தேர்ந்தவர்கள் மட்டுமே நியமனம் செய்யப்படுவர் என்ற நிலைஉண்டாயிற்று.

அவர் இயற்றிய மற்ற இரண்டு சட்டங்களும் வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளன. நமது நீதிமன்றங்கள் பழைய வழக் காறுகளின் பிடியில் சிக்கியிருந்தன. அவர்களுடைய அதிகார வரம்புகள் ஒன்றோடொன்று மோதின. வேறுபட்ட சட்ட முறை களை அவர்கள் பின்பற்றினர்கள். நியாயமும் பொதுச்சட்டமும், பழைய முறைக்கு மாறானவை. பென்தாமின் செல்வாக்கினல், சட்ட மன்றங்களிலும் தொகுப்புகளிலும் நிறையச் சீர்திருத்தங் கள் கொண்டுவரவேண்டும் என்ற எண்ணத்தில் பல கமிஷன்கள் நியமனம் செய்யப்பட்டுப் பரிசீலனை செய்தார்கள். புதிய நீதிமன் றங்களை நிர்மாணிக்கும்பொழுது, 1873-ல் நீதிச் சட்டம் ஒன் றையும் இயற்றினர்கள். இந்தச் சட்டத்தை கொண்டுவர ஸெல் போர்ன் அதிக முயற்சி எடுத்துக்கொண்டார். இதனல், நீதித் துறையிலேயே ஒரு புரட்சி ஏற்பட்டதெனக் கூறலாம். 1876-ல் இந்தச் சட்டத்திலே மேலும் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. சான்சரி நீதிமன்றங்கள் (Courts of Chancery), அரசனுடைய நீதி மன்றம் (King's Bench), பொதுமக்கள் முறையீட்டு நீதிமன்றங் கள் (Common Pleas), நிதித்துறை நீதிமன்றம் (Exchequer), கடற்படை நீதிமன்றம் (Admiralty), வாரிசு, விவாகரத்து நீதி மன்றம் (Court of probate and divorce) ஆகிய எல்லா நீதி

மன்றங்களையும் இணைத்துத் தலைமை நீதிமன்றம்,அதற்கு மேலாக மேல் நீதிமன்றம், மேல் முறையீட்டு நீதிமன்றம் என்று அமைத்தார்கள். பொதுச்சட்டம், பொது நியாயத்தின் அடிப்படையில் தோன்றிய சட்டம், சட்ட முறைகள் ஆகியவைகளில் காணப் பெற்ற வேறுபாடுகளை அகற்றினர். பார்டெல்—பிக்விக் (Bardell v. Pickwick) அல்லது ஜார்ன்டிஸ்—ஜார்ன்டிஸ் (Jarndyce v. Jarndyce) ஆகியோரின் காலம் முடிவடைந்தது. ஸெல்போர்ன் விருப்பத்திற்கு மாருக. பிரபுக்கள் சபை இன்னும் பிரிட்டனின் இறுதி மேன்முறையீடு நீதிமன்றமாகவே கருதப்பெற்றது.

நீதித் துறையில் ஏற்பட்ட மாறுதல்களெல்லாம் எல்லாக் கட்சியினரின் ஒப்புதலின்மேல் கொண்டுவரப்பட்டவையே. ஆனல், இராணுவத்தில் சீர்திருத்தங்களைக் கொண்டுவந்த பொழுது எதிர்ப்பு இருந்தது. இராணுவத் துறை கார்ட்வெல் நிர்வாகத்தில் இருந்தது. அவர் பீலின் திறமைமிக்க சீடர்களில் ஒருவர். அவருடைய காலம் வரையிலும், இராணுவத்தில் ஒழுங்கான முறையில் எந்தச் சீர்திருத்தத்தையும் கொண்டுவர வில்லை. கிரிமியாவில் ஏற்பட்ட அனுபவங்களுங்கூட அவர்களை உடனடியாக நடவடிக்கைகளை எடுக்கத் தூண்டவில்லை. ஆனல், சடோவாவும் (Sadowa) ஃபிராங்கோ-பிரஷ்யன் போரும் பாராளு மன்றத்தை விழிப்புறச் செய்தன. இராணுவப் பதவிகளைப் பணம்கொடுத்து வாங்கும் பழக்கம் முறையற்றதென்ற பிரச்சினை யில்தான் அரசியல்வாதிகள் அதிக அக்கறை எடுத்துக்கொண்டனரே தவிர, மற்ற இராணுவ அபிவிருத்தியைப்பற்றி ஒன்றும் கவலைப்படவில்லை. 1871-ல் இராணுவக் கமிஷன்களைப் பணம் கொடுத்து வாங்கும் வழக்கத்தை ரத்துசெய்தார்கள். இந்தப் பழைய முறையை இன்னும் வெல்லிங்டன், மற்ற விக் பிரபுக்கள் ரஸ்ஸல், கிரே ஆகியோர் ஆதரித்தனர். இராணுவப் பயிற்சி யில்லாத சில அதிகாரிகளும் இருந்தால்தான், சுதந்திரம் பாதுகாப்பாக இருக்கும் என்று கருதினர். ஆனல், அதே முறையினுல் பதவி உயர்வு மற்றவர்களுக்கு ஏற்படுவது மிகவும் பாதிக்கப்பட்டது. எந்தவிதச் சீர்திருத்தத்தைக் கொண்டு வருவதும் முடியாமல் இருந்தது. கேர்டிகான் பிரபு இரண்டு குதிரைப் படைகளின் தலைமைப் பதவியை வாங்கவில்லையா? இவர் இலேசான ஆயுதம் தாங்கிய படையைச் சார்ந்தவர். இந்தப் பழைய முறையை நீடிக்கவேண்டுமென்ற பல வயதான அதிகாரிகளும், ஒருசில இளைஞர்களான உல்ஸ்லி, கிராமெர் போன்றவர்களே விரும்பினர். மற்றவர்கள் இதைப் பலமாக எதிர்த்தார்கள். கார்ட்வெல், காமன்ஸ் சபையில், இந்த முறையை ஒழிக்க ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார்.

பிரபுக்கள் சபையில், இந்தத் தீர்மானத்திற்கு எதிர்ப்பு ஏற்பட்ட வுடன், கிளாட்ஸ்டன் அரசியாரிடம் மூன்ருவது ஜார்ஜ் மன்னன் அளித்த இந்த அதிகாரத்தை ரத்து செய்யும்படி வேண்டினர். இதற்குப் பிறகுதான் பிரபுக்கள் இந்த முறையை ஒழிக்கக் சம்மதித்தனர்.

இதைவிட மிகவும் முக்கியமான சாதனையை 1868–73-ல் கார்ட்வெல் சாதித்தார். கிரிமியாப் போரிலும், பிரஷ்யாவின் வெற்றியிலும், ஆங்கிலேயர்கள் ஒரு படிப்பினையை உணர்ந்தார் கள். பயிற்சி பெற்ற உதவி இராணுவம். குறுகிய கால இராணுவ சேவை புரியும் படை ஆகியவற்றை நிறுவவேண்டுமென்று அவர் உணர்ந்தார். அதனுல், இராணுவத்தில் ஆறு ஆண்டுகள் பட்டாள விருதுகளுடன் ,சேவைசெய்யும் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார். அதைப்போன்றே உதவிப் படைகளிலும் ஆறு ஆண்டுகள் சேவை செய்ய ஆட்களைத் தேர்தெடுத்தார். மேலும், படை வீரர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கும் பொருட்டுக் காலனிகளிலிருந்து 20,000 பேரைக் கொண்டு வந்தார். அமைதிக் காலத்தில் படையில் இருப்பவர்களுக்குக் கசையடி கொடுக்கும் பழக்கத்தையும் நிறுத்தினுர். இதனுல், அதிகமான ஆட்கள் படையில் சேர விரும்பினர். அவருடைய மற்ருெரு முக்கியமான சீர்திருத்தம், பட்டாளங்களில் ஆட்களைத் தேர்ந்தெடுப்பதில் அபிவிருத்தியை ஏற்படுத்தியும், ஒழுங்கான படையுடன் தேசியப் பாதுகாப்புப் படையையும் தொடர்பு படுத்தி, ஒவ்வொரு மாநிலப் படைக்கும் ஒவ்வோர் அலுவ லகத்தை நியமித்துக் கொடுத்தார். ஒவ்வொரு படைக்கும், அந்தந்தக் கவுன்டியின் பெயரைச் சூட்டினுர். ஒவ்வொரு படை யிலும் இரண்டு தொடர்புடைய இராணுவப் பகுதிகள் இருக்கும். ஒரு படையினர் வெளிநாட்டுச் சேவைக்காகவும் மற்ருெரு படை யினர் கவுன்டியிலும் வைக்கப்பட்டிருப்பர். அவர்கள் புதிய தொண்டர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொள்வர். அவரு டைய மற்ருெரு சீர்திருத்தம் இராணுவத் தலைமை அதிகாரியைப் பற்றியது. கவுன்சில் உத்தரவைப் பெற்று, பிரதம படைத் தலைவர் உள்துறை காரியதரிக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டு மென்று கொண்டுவந்ததால், போர் அலுவலத்தின் நடைமுறை விதிகளுக்குள் அவர் பணியாற்றும் நிலைமை ஏற்பட்டது. இதற்குமேல் அவரால் சீர்திருத்தங்களைக் கொண்டுவர முடிய வில்லை. ஏனெனில், 1895 வரை பிரதம தளபதியாக இருந்த கேம்பிரிட்ஜ் கோமகன், பிடிவாத குணமுடையவராகவும் அரச பரம்பரையைச் சார்ந்தவராகவும் இருந்ததால், மற்றச் சீர்திருத் தங்களை அவர் அனுமதிக்கவில்லை. இவைகளைத் தவிர, காலாட்

படையினருக்கு மார்டினி-ஹென்றி துப்பாக்கிகளை அளித்தார். பீரங்கிப் படையிலும் அதிகமான ஆட்களைச் சேர்த்தார். மேலும், 'இருபத்தைந்து புதிய படைகளையும் அமைத்தார். ஏற்கெனவே மதிப்பீடு செய்யப்பட்ட செலவினத்திலேயே இப் புதிய படைகள் தாய்நாட்டுப் பாதுகாப்புக்கு நிறுவப்பட்டன.

இந்தச் சீர்திருத்தங்களையெல்லாம், அரண்மனையில் உள்ளவர்களும் உயர்குடி மக்களும் ஆதரிக்கவில்லை. 1872-ல் அனுமதி வழங்கும் சட்டம் (Licensing Act) இயற்றப்பட்டதால் சில உரிமைகள் பறிபோய்விட்டனவென்று அவர்கள் கூக்குரலிட்டனர். இந்தச் சட்டத்தால் அரசாங்கத்துக்குக் கெட்ட பெயர் தான் கிடைத்தது. குறிப்பாக, மதுபானங்களைத் தயாரிப்பவர்களும் குடிப் பழக்கமுடையவர்களும் இந்தச் சட்டத்தை வெறுத்தனர். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மதுபானங்கள் விற்கும் கடைகள் மூடப்படவேண்டுமென்றும், காவலர்கள் அந்தக் கடைகளில் நுழைந்து பரிசோதனை செய்யும் உரிமையும் ஆகிய இவை போன்ற கட்டுப்பாடுகள் ஜனநாயகக் கொள்கைகளுக்கே முரண்பட்டதாகும் என்றும், ஆங்கிலேயர்களின் சுதந்திர உரிமைகளுக்கு ஏற்றதல்லவென்றும் அவர்கள் குறை கூறினார்கள். மக்களிடையே முணுமுணுப்பு ஏற்படுவதற்கு மற்றக் காரணங்களும் உண்டு. அயர்லாந்து சட்டத்தால் திருச்சபையின் சமய உணர்ச்சிகளை ஏற்கெனவே புண்படுத்திவிட்டார்கள். கல்விச் சட்டத்தால், ரேடிகல்களின் முன்னேற்றக் கொள்கைகளைப் புறக்கணித்துவிட்டார்கள். 1871-ல் இயற்றிய சட்டத்தால், தொழிற் சங்க நடவடிக்கைகளைச் சதிச் செயல்கள் என்றுகூட, நீதிபதிகள் கருதமுடிந்தது. ஏனெனில், அச் சங்கங்களின் வேலை நிறுத்த நடவடிக்கைகளும், வேலைக்குப் போகின்றவர்களைத் தடை செய்யும் நடவடிக்கைகளும் பழைய 1825 சட்டப்படி சதிச் செயல்களே என்று கருதப்பட்டன. அவையும் இத்தகைய சமுதாயக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு தோன்றியவையேயாகும். தல அரசாங்க போர்டு 1871-ல் நிறுவப்பட்டாலும், அதை இரவலர்-சட்டத்துறை ஆதிக்கம் செலுத்தியது. வழக்கமான சிக்கன முறையே பின்பற்றப்பட்டது. வீடுகள் கட்டுவதற்கோ, அல்லது சுகாதார முறைகளைப் பாதுகாப்பதற்கோ ஒன்றும் செய்யவில்லை. கவுன்டி அதிகாரிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களையே காவலர்களாக நியமிப்பதென்று கோஷன் கொண்டுவந்த திட்டத்தைக் கைவிட்டனர். பர்மிங்ஹாம் நகருக்கு, சேம்பர்லேன் மேயராக இருக்கும்பொழுது தண்ணீர், விளக்கு, திறந்தவெளி ஆகியவற்றைக் கட்டுப்படுத்தும் பல சட்டங்களை இயற்றினர். வார்விக்ஷயர் பகுதியைச்

சார்ந்த ஜோசப் ஆர்க் என்பவர், பண்ணையாட்களின் கூலிகளை உயர்த்தத் தொழிற் சங்கங்களின் உதவியை நாடினர். இந்த ரேடிகல் கட்சியினரின் நடவடிக்கைகளை கிளாட்ஸ்டன் விரும்ப வில்லை. பிரைட்டின் உடல்நிலை கெட்டவுடன் கேபினட்டிற்கு இடது சாராரின் தொடர்பு முழுவதுமே அற்றுவிட்டது. சமுதாய நலன்களைச் செய்ய வேண்டுமென்றால், அதிகச் செல வினத்தை ஏற்கவேண்டியிருந்தது. ஆனால், கிளாட்ஸ்டனுக்குச் செலவு செய்வது பிடிக்கவில்லை. 1868 வரவு செலவுத் திட்டத்தில் இருந்ததைவிட, மிகவும் அதிகமாக அவருடைய கடைசி வரவு செலவுத் திட்டத்திலும் செலவினங்களைக் காட்டவில்லை. 77 மில்லியன்மட்டும்தான் அவருடைய கடைசி ஆண்டுச் செலவின் மதிப்பீடு. வருமான வரியும் 3 பென்னிக்குக் குறைந்துவிட்டது. தனிப்பட்டவனுடைய கருத்துக்கு மதிப்புக் கொடுக்கும் பொருட்டு, 1872-ல் அவர் வாக்குரிமைச் சீட்டுகளின்மூலம் தான் இனி ஓட்டளிக்கவேண்டும் என்று ஒரு சீர்திருத்தத்தைக் கொண்டு வந்தார். இதுவே அவருடைய முதல் லிபரல் கொள்கையாகும்.

இந்தச் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதற்குப் பல தொல்லைகளையும் எதிர்ப்புகளையும் சமாளிக்கவேண்டியிருந்தது. வெளிவிவகாரங்களிலும் அரசாங்கத்தின் சாதனை, மக்களின் உணர்வை மிகவும் புண்படுத்திவிட்டது. ஃபிராங்கோ-பிரஷ்யப் போரில் தலையிட்டு நட்புறவை ஏற்படுத்தவேண்டுமென்ற கொள்கை, மற்ற வல்லரசுகள் உதவி செய்வதாகக் கூறினாலுங் கூட, அவ்வளவு சிறந்ததாகப்படவில்லை. ஏனெனில், வெளி நாட்டிற்கு அனுப்புகின்ற அளவுக்கு நம்மிடம் படையில்லை. அதனால் இரண்டு எதிரிகளையும் சரிசெய்து பெல்ஜியம் நாட்டின் நடுநிலைமையை ஏற்றுக்கொள்ளச் செய்வதோடு பிரிட்டனின் நடவடிக்கை நின்றிருக்கவேண்டும். ஆனால், நமது தியாகத்தில், வல்லரசுகள் சமநிலையை ஏற்படுத்திவிட்டார்களே என்று சாதாரண மக்கள் குறைபட்டுக்கொண்டார்கள். தவிர, நமது அமைதியான கொள்கையைப் பயன்படுத்தி, ரஷ்யா 1856-ல் செய்துகொண்ட உடன்படிக்கையிலுள்ள கருங்கடலில் ரஷ்யக் கப்பற்படை செல்லக் கூடாதென்ற நிபந்தனையை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது. அமெரிக்க உள்நாட்டுப் போர் நிகழும்போது 'அலபாமா' கப்பலால் ஏற்பட்ட நஷ்டத்திற்கும், மற்றும் உள்நாட்டுப் போர் நிகழ்ந்த முழு காலத்திற்கும் நஷ்ட ஈடு தரவேண்டுமென்றும் அமெரிக்கர் கோரினர். 1872-ல் சர்வ தேசிய அளவில் மத்தியஸ்தம் செய்ததில் பிரிட்டனைக் கண்டித்து, 5 மில்லியன் பவுன் கொடுக்கும்படி தீர்ப்புச் செய்யப்பட்டது.

கட்சியிலேயே பிளவும், மற்றும் பல தோல்விகளும் ஏற்பட்டு விட்டதால், கிளாட்ஸ்டன் மிகவும் மனச்சோர்வு அடைந்து விட்டார். அரசியாரும், எதைப்பற்றியும் கவலைப்படாது பால் மோரல், அல்லது ஆஸ்போர்ன் அரண்மனைகளில் நிம்மதியாகக் காலங்கழித்து வந்தார். ஏனெனில், கணவர் இறந்த துயரத்தினால் அவர் மனக்கலக்கங் கொண்டிருந்தார். கிளாட்ஸ்டனின், வேல்ஸ் இளவரசனையாவது ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் செய்யும் முயற்சியையும் அரசியார் அங்கீகரிக்கவில்லை. இந்தச் சமயத்தில் ரேடிகல் கட்சியைச் சார்ந்த சேம்பர்லேன் அல்லது டில்க் போன்றவர்கள் ஒரு குடியரசை அமைக்கும் எண்ணத்தைக் கொண்டிருந்தனர். 1873-ல் இவ்விதமான பிரச்சினையில் தலையிடுவதிலிருந்து தப்பிக்கும்பொருட்டு, தம் பதவியை ராஜிநாமாச் செய்தார். ஆனால், அவருக்குப் பின் டிஸ்ரேலி, இந்த சிறுபான்மை ஆதரவை வைத்துக்கொண்டு அரசாங்கத்தை அமைக்க முன்வரவில்லை. இந்தப் பாராளுமன்றம் கலைக்கப்பட்டுப்புதிய தேர்தல் நடைபெற்றால்தான் அவர் நிலையான அரசாங்கத்தை அமைக்க முடியுமென்று நம்பினார். அதனால், வேறு வழியின்றி கிளாட்ஸ்டனே மீண்டும் பதவிக்கு வந்தார். ரேடிகல்களிடையேயும், தனிப்பட்ட ஹார்கோர்ட் டைப் போன்ற விக்குகளிடையேயும், பல வேறுபாடுகள் தோன்றின. அயர்லாந்து, தல அரசாங்கம், நிலப்பிரச்சினை, கல்விக் கொள்கை, அரசாங்க அலுவலகங்களில் காணப்பட்ட ஊழல்கள், இடைத் தேர்தல்களில் ஏற்பட்ட பல தோல்விகள் ஆகிய பல பிரச்சினைகளில் அவருடைய கட்சியிலேயே வேறுபட்ட கருத்துகள் தோன்றின. இந்தத் தொல்லைகளினால் அவர் மீண்டும் நிதித் துறையை எடுத்துக்கொண்டு, அதன் வழியாக லிபரல் கட்சியிலுள்ள பல பிரிவுகளை ஒன்றாக இணைக்க முயற்சி செய்தார். நிதி மந்திரி பொறுப்பை ஏற்றுக்கொண்டவுடன், வருமான வரியை முழுவதும் ரத்து செய்தார் ; சர்க்கரையின் மீது விதித்திருந்த தீர்வைகளைக் குறைத்தார். அவருடைய திட்டங்களை நிறைவேற்றுவதற்கேற்பப் பொருளாதாரக் கொள்கைகளை கோஷன், கார்ட்வெல் போன்ற மந்திரிகள் ஏற்றுக் கொள்ளவில்லை. 1874ஆவது ஆண்டின் தொடக்கத்திலேயே பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டார்.

பொதுத் தேர்தலில், டிஸ்ரேலியின் கன்சர்வேடிவ் கட்சி பெரும்பான்மை அங்கத்தினர்களுடன் வெற்றிபெற்றது. அவருடைய தலைமையை எதிர்த்த பல கோஷ்டியினரையும் அவர் தோற்கடித்தார். அவருடைய கட்சியைப் பலப்படுத்துவதற்காக, ஒரு மத்திய அலுவலகத்தையும், மற்றும் பல கிளை

நிறுவனங்களையும் அமைத்தார். ஜனநாயகத்தைப் பழமைக் கொள்கைகளுக்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்வதில் அவர் நம்பிக்கை வைத்திருந்தார். முடியாட்சியில் ஒவ்வொருவனுடைய உரிமைகளும் பாதுகாக்கப்படுகின்றன. மற்றும், பழைய வழக்காறுகளைப் பின்பற்றிச் சமயக் கொள்கையைத் தேசிய அடிப்படையில் பின்பற்றுவதும், நாட்டின் பழைய மரபுகளில் தான் வாழ்க்கையின் ஒரு பகுதி அடங்கியுள்ளதென்பதும் அவருடைய கொள்கையாகும்.

சமூகச் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவது எல்லா அரசியல் கட்சிகளின் பொறுப்பாகும் என்று அவர் பலமுறை வற்புறுத்தினார். ஓர் அமைச்சரின் முதல் அக்கறை, அந் நாட்டு மக்களுடைய சுகாதாரத்தைப்பற்றியதாகத்தான் இருக்கவேண்டும். சர்வ தேசியப் புரட்சி யுகத்தில், அவர் பேரரசின் வலிமையைக் கண்டார். காலனிகளுக்குச் சுய ஆட்சி கொடுக்கும்பொழுதே, அந்தப் பேரரசுக்குத் தேவையான காப்பு வரிகளும், பாதுகாப்பும், கவுன்சில்களும் அமைக்கவேண்டுமென்று அவர் கருதலானார்.

காரணங்கள் என்னவாக இருந்தாலும், வாக்காளர்கள் 1874-ல் 350 கன்சர்வேடிவ்களையும், 245 லிபரல்களையும் தேர்ந்தெடுத்தனர். அயர்லாந்தில், கன்சர்வேடிவ்களும் லிபரல்களும் சேர்ந்து 46 அங்கத்தினர்களும், சுய ஆட்சியைக் கோருகின்ற (Home Rulers) 57 அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சில மாதங்களிலேயே, கிளாட்ஸ்டன் தமது கட்சியின் தலைமைப் பதவியை ஹார்டிங்டன் என்பவருக்கு அளித்துவிட்டு, அவர் விலகிக்கொண்டார். கட்சியிலுள்ள பல்வேறு பிரிவினரை அவரால் ஒன்றுபடுத்த முடியவில்லை என்று அவர் அறிவித்தார். இறப்பதற்கு முன்பு, அவர் பாராளுமன்றத்திலிருந்து விலகிச் சிறிது ஓய்வு பெறவேண்டும் என்று விரும்பினார்.

### சமகால நிகழ்ச்சிகள்

1860 மத்திய இத்தாலியில் கேவூர்; சிஸிலியிலும் நேபிள்ஸிலும் கரிபால்டி.

அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு லிங்கன் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பீகிங் கோடைக்கால அரண்மனையைக் கொளுத்தினர்கள்.

டால்ஸ்டாய் எழுதிய 'போரும் அமைதியும்' (War and Peace).

ரஸ்கின் எழுதிய 'கடைசி மனிதன் வரை' (Unto this Last).

1861 அமெரிக்க உள்நாட்டுப் போர் தொடக்கம்.
கேவூரின் மரணம்.
—1888 பிரஷ்யாவில் முதலாவது வில்லியமின் ஆட்சி.

1862 ஆஸ்ப்ரோமோன்டி போர் (Battle of Aspromonte).
லிங்கன் அடிமைகளை விடுதலை செய்தல்.
பிரஷ்யாவில், பிஸ்மார்க் பிரதமராதல்.

1863 விக்ஸ்பர்க் போர்; கெட்டிஸ்பர்க் போர்.
சீனாவில் தளபதி கோர்டன்.
ஜெர்மனியில் லஸ்ஸால் (Lassalle) தொழிலாளர் சங்கத்தை நிறுவுதல்.

1864 ஸ்கிளெஸ்விக்-ஹோல்ஸ்டின் (Schleswig-Holstein) பிரச்சினையில் ஏற்பட்ட போர்.
ஜார்ஜியாவில் ஷெர்மான் படையெடுப்பு.
காயமடைந்தவர்களுக்கு உதவ ஜெனீவா சபை.
நியூமேன் எழுதிய 'அப்பாலஜியா' (Apologia).

1865 லிங்கன் கொலை செய்யப்பட்டார்; தளபதி லீ (Lee) சரணடைதல்.
கிளார்க் மேக்ஸ்வெல் எழுதிய 'மின்சார ஆராய்ச்சி' (Treatise on Electricity).
வெஸ்ட்மினிஸ்டருக்கு மேனிங் (Manning) ஆர்ச் பிஷப்பாதல்.
சீர்திருத்தப் படையை பூத் அமைத்தார்.

1866 ஸடோவாவில் (Sadowa) ஆஸ்திரியர்மீது பிரஷ்யா அடைந்த வெற்றி.
இத்தாலியுடன் வெனிஷியாவை இணைத்தல்.
டாஸ்டாவிஸ்கி (Dostoievsky) எழுதிய 'குற்றமும் தண்டனையும்' (Crime and Punishment).
ஸ்வின்பர்ன் (Swinburne) எழுதிய கவிதைகள் (Poems and Ballads, I).

1867 ஆஸ்திரியா-ஹங்கேரிக்கு இரட்டை அரசியல் அமைப்பு ஏற்படுதல்.
மெக்ஸிகோவில், மேக்ஸிமிலான் பேரரசரைத் தூக்கிலிடல்.
சீமென்ஸ் (Siemens) கண்டுபிடித்த எஃகு உற்பத்தி.
காரல் மார்க்ஸ் எழுதிய 'கேபிடல்' (Capital).
பேஜ்ஹாட் எழுதிய 'ஆங்கில அரசியல் அமைப்பு'.

1868 அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு கிராண்ட் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.
ஜப்பானில் 'ஷோகுநேட்' (Shogunate) சபையை ஒழித்தார்கள்.
வேக்னர் எழுதிய 'மெய்ஸ்டர்சிங்கர்' (Meistersinger).
பிரவுனிங் எழுதிய 'தி ரிங் அண்ட் தி புக்' (The Ring and the Book).

1869 சூயஸ் கால்வாயைத் திறந்துவிடல்.
கேம்பிரிட்ஜ், கிர்டன் கல்லூரியை நிறுவுதல்.

1870 ஃபிராங்கோ-பிரஷ்யன் போர்.
வாடிகன் கவுன்சில் 'தவறு செய்யாமையை' விளக்கிக் கூறுதல்.
டிக்கன்ஸ், டூமாஸ் ஆகியோரின் மரணம்.

1871 பாரிஸில் கம்யூன் (Commune).
ஜெர்மனியில் குல்ட்டர்காம்ஃப் (Kulturkamf).
ஜார்ஜ் எலியட் எழுதிய 'மிடில்மார்ச்' (Middlemarch).
மேனட், மற்றும் பல ஓவியர்களும் தங்களுடைய ஓவியங்களைப் பாரிசு கண்காட்சியில் காட்டுதல்.

1872 ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் எழுதிய 'சமூகவியல்' (Sociology).
காட்டியர் (Gautier), மாஜினி (Mazzini) ஆகியோரின் மரணம்.

1873 ஃபிரான்சில், மக்மோகன் ஜனாதிபதியாதல்.
ஸ்பெயினில், கேஸ்டிலர் தலைமையில் குடியரசு வாதிகளின் கிளர்ச்சி.
பிராம்ஸ் (Brahms) எழுதிய 'ரெக்யூம்' (Requiem).
மில், லிவிங்ஸ்டன், மூன்றாவது நெப்போலியன் ஆகியோரின் மரணம்.

1874 ரஷ்யா கட்டாய இராணுவ சேவையைக் கொண்டு வருதல்.
கிரீன் (Green) எழுதிய 'இங்கிலாந்தின் வரலாறு' (Short History of England).

# 5. டிஸ்ரேலி, 1874-1880

டிஸ்ரேலி அமைத்த மந்திரி சபை ஆரம்பத்திலேயே பலவீனம் அடைந்தது. அவரையும் மீறிய இரண்டு காரணங்கள் தான் இந்த பலவீனத்தை ஏற்படுத்தின. அவர் பதவி ஏற்கும் பொழுது, அவருக்கு வயது எழுபதாகிவிட்டது. பதவியேற்ற தற்குப் பின் இன்னும் உடல்நிலை மோசமாகிவிட்டது. அதனால் 1876-ல் அவர் பதவியிலிருந்து விலகி, பிரபுக்கள் சபைக்கு ஏர்ல் பீக்கன்ஸ்ஃபீல்ட் (Earl of Beaconsfield) என்ற பட்டத்துடன் சென்றுவிட்டார். மேலும், அவர் பதவி ஏற்றபொழுது நாட்டில் பொருளாதார மந்தநிலை ஏற்பட்டது. முதலில் வர்த்தகம் பாதிக்கப்பட்டது. விலைவாசிகள் மிகவும் குறைந்து விட்டன. வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிவிட்டது. நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, ஆங்கிலேய விவசாயமும், அதைப்போன்றே பெரிய மந்தநிலையை அடைந்தது. இந்த நிலை ஏற்பட்டவுடன், மக்களிடையே நிரந்தரமான சீரழிவு காணப்பட்டது. விவசாயிகள் தங்களுடைய சொத்து சுகங்களை இழந்துவிட்டனர். அவர்களுடைய கூலிகள் மிகவும் குறைந்து விட்டன. 1881-ல் எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணிப்புப்படி, கடந்த பத்து ஆண்டுகளில் 100,000 விவசாயிகள் நிலத்தை விட்டு வெளியேறியதாகத் தெரிகிறது. ஆனால், இவ்வளவு தொல்லைகளையும் சமாளிக்க, அவருக்கு அரசியாரின் பக்க பலமும் அதிகமாக இருந்தது. கிளாட்ஸ்டனுக்கு இந்த நன்மை இல்லை. அவருடைய மனைவி இறந்தவுடன் அவர் தனிமையை மிகவும் உணர்ந்தார். ஆனால், இதே தனிமை நிலையில் இருந்த அரசியாருக்குச் சேவை புரிவதில் அவருடைய ஆர்வம் சென்றது. அவரை அதிகமாகப் புகழ்வதிலோ, அல்லது அவருடைய உடைகளை அணிவித்து விடுவதிலோ இருக்கும் இன்பத்தில் அவருடைய தொல்லைகளை மறந்திருந்தார். உண்மையில், அவர் உயிரோடு வாழ்வதே, பதவிக்காகவும் அன்புக்காகவும் என்று சொல்லலாம். இருவரும் பெரிய திட்டங்களான போர், பேரரசு ஆகியவற்றில் ஒரேவிதமாகச் சிந்தித்தனர். உண்மையில்

அரசியாரின் துயரத்தை உணர்ந்து, அவருக்குப் பரிவு காட்டி யவர் இவரே. அவருடைய செல்வாக்கை நன்கு பயன்படுத்திக் கொண்டு, கேபினட்டை அவர் எப்படி இயங்கச் செய்ய வேண்டுமோ, அப்படியே இயங்க வைத்தார்.

பல்வேறு கருத்துகளை உடைய அவருடைய கட்சி அங்கத்தி னர்களை இருபத்து ஐந்து ஆண்டுகளாக முயற்சி எடுத்து, அவர் பக்கம் கொண்டுவரப் பயிற்சி அளித்திருந்தார். அவருடைய துணிச்சலும், வெல்திறன் முறையும், பெருந்தன்மையும் அவருக்கு வேண்டிய பரிசை அளித்தன. அந்தப் பரிசு, நல்ல அரசியல் வாதிகளையும், நிர்வாகிகளையும் ஒருங்கே கொண்ட பலமிக்க கேபினட்தான். காமன்ஸ் சபையிலிருந்து, நார்த்கோர்ட், கேத்தார்ன் ஹார்டி, கிராஸ், டபிள்யூ. எச். ஸ்மித், ஹிக்ஸ் பீச் ஆகியோரையும், பிரபுக்கள் சபையிலிருந்து, கேர்ன்ஸ், டெர்பி, ஸாலிஸ்பரி, கார்னர்வான் ஆகியோரையும், அவருடைய கேபினட்டில் பதவி வகிக்கத் தேர்ந்தெடுத்தார். இவர்களில், கேர்ன்ஸ், டெர்பி ஆகியோர் 1867-ல் இவரை விட்டு விலகினர். ஸாலிஸ்பரி ஒரு காலத்தில் டிஸ்ரேலியின் எதிரியாக இருந்தார். ஆனால், அவருடைய எதிர்காலம் சிறப்புற்று விளங்கும் என்ப தைக் கண்டுபிடித்து அவரைத் தம் பக்கம் ஈர்த்துக்கொண்டார். அவருடைய முக்கியமான மந்திரிகளில் இவர் பெரிய தூண் போன்று விளங்கினர். அவரை நம்பிப் பதவியைக் கொடுத்தது, டிஸ்ரேலியின் பெருந்தன்மையைக் காட்டும். இந்த மந்திரி சபையை மேய்ப்பதென்பது மிகவும் கடினமான காரியமாகும். அதற்கு எடுத்துக் காட்டாக, 1874-ல் இயற்றிய வழிபாட்டுச் சட்டத்தைக் கூறலாம். பிஷப்புகள் பல பழக்கவழக்கங்களைப் பின்பற்ற வேண்டியதில்லை; அவைகளையெல்லாம் நீக்கிவிடலாம் என்று அவர் கருதினர். ஆனல், ஸாலிஸ்பரியும், மற்ற மேல் திருச்சபையினரும் இந்தக் கொள்கையை எதிர்த்தனர். கிளாட்ஸ்டன்கூட இதை எதிர்த்தார். ஆனல், அரசியார் மட்டும், பிடிவாதமாக இருந்தார். தன்னுடைய கோயில்களில் வழிபாடு செய்கின்ற குருமார்கள் கறுப்பு அங்கியை அணிந்து வருவதைத் தான் விரும்புவதாகக் கூறினர். பிராடஸ்டன்டு உணர்வு அரசியாருக்கு அதிகம் இருந்தது.

உள்நாட்டு வரலாற்றில், அரசாங்கத்தின் முக்கியமான சாதனை, சமுதாயத்திற்கு வேண்டிய நல்ல சட்டங்களை இயற்று வதாக இருந்தது. கட்சியின் வேலையும் கடமையும் இந்தச் சட்டங்களைப் பொறுத்தே மதிப்பிடப்பட்டன. ஓரளவிற்கு, கட்சி நிலைத்திருப்பதுங்கூட இதனல்தான். இதற்கு உறுதுணை யாக இருந்தவர் லங்காஷயர் பாங்கராக இருந்த ரிச்சர்ட்

கிராஸ் என்பவர், இப்பொழுது உள்துறை செயலாளராக இருந்தார்; அவர் காலத்தில் இரண்டு முக்கியமான தொழிலாளர் சட்டங்கள் 1875-ல் நிறைவேற்றப்பட்டன. அரசியாருக்கும், டிஸ்ரேலி இச் சட்டங்களின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறினர். அவருடைய ஆதரவின்பேரில், இச் சட்டங்களை இயற்ற, கிராஸ், கேபினட்டின் சம்மதத்தைப் பெற்றார். இச் சட்டங்களின்படி, தொழிலாளரும் முதலாளிகளும் ஒரே நிலையில் வைத்துக் கருதப்பட்டனர். ஒப்பந்தங்களை இருதரப்பினரும் சரியாகப் பின்பற்றவேண்டும். எத் தரப்பினர் ஒப்பந்தத்தை மீறினாலும், அவர் சட்டப்படி குற்றத்திற்குள்ளாக்கப்படுவர். மேலும், தொழிற்சங்கங்களின்பேரில் சந்தேகப்படும்படியான சட்டப் பகுதிகளை எடுத்துவிட்டு, அமைதியான வழிகளில் அவர்களுடைய கோரிக்கைகளுக்காகப் போரிடலாம் என்ற நிலையையும் ஏற்படுத்திக் கொடுத்தனர். இதனால் அமைதியாக வேலைக்குப் போகின்றவர்களைத் தடை செய்வதோ அல்லது வேறு எந்த வழியைப் பின்பற்றுவதோ சதித் திட்டமாகாது என்று அறிவிக்கப்பட்டது. பல தொழிலாளர் சட்டங்களை இணைத்து ஒரே சட்டத் தொகுப்பாகக் கொண்டு வந்தார்கள். இந்தச் சட்டத்தில் வாரத்திற்கு 56 மணி நேர வேலை நிர்ணயம் செய்யப்பட்டது. இதைப் போன்றே 1875-ல் பொதுச் சுகாதாரச் சட்டம் ஒன்று கொண்டு வரப்பட்டது. நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சுகாதார வசதியை இந்தச் சட்டம்மூலமாகக் கொண்டுவந்தார்கள். இதன் அடிப்படையில்தான், மற்றச் சுகாதாரச் சட்டங்கள் வளர்ச்சி அடைந்தன. தொழிலாளர் குடியிருப்புக்காகவும் சில சட்டங்களை இயற்றினார்கள். பல சேரிகளில் கட்டியிருந்த அசுத்தமான வீடுகளையெல்லாம் இடித்துவிட்டு, அத் தொழிலாளர் சேரிகளில் நல்ல சுகாதார முறையில் வீடுகளை அமைத்துக்கொடுக்க வழிவகைகளைச் செய்தனர். பர்மிங்காமில், இப் பணியைச் சேம்பர்லேன் ஆரம்பித்து வைத்தார். வர்த்தகக் கப்பல்களில் பண்டங்களை ஏற்றிச் செல்வதுபற்றிய கட்டுப்பாடுகள் கொண்ட, வர்த்தகக் கப்பற் சட்டம் ஒன்றை 1876-ல் இயற்றினார்கள். கப்பல்களில் அதிகப்படியான பண்டங்களை ஏற்றியும், அதிகப்படியான தொகைக்கு இன்சூர் செய்தும் வந்ததால், மாலுமிகளின் உயிர்களுக்கே ஆபத்து ஏற்பட்டன. அதனால், அந்தக் கப்பல்களை 'மரணப் பெட்டிக் கப்பல்கள்' என்றுங்கூட அழைத்தார்கள். குத்தகைக்காரர்கள் நிலங்களைச் செம்மைப்படுத்தியதற்காக, அவர்களுக்கு நஷ்ட ஈடு அளிக்கவேண்டுமென்ற பண்ணையாட்கள் சட்டம் இயற்றப்பட்டது. மற்றும், உதவி செய்கின்ற கழகங்களுக்காகச் சட்டமும் (Friendly Societies Act), உணவுப்

பொருள்களிலும், மருந்துகளிலும் கலப்படம் செய்யாதிருக்க உணவு,மருந்துச் சட்டமும் (Food and Drugs Act) முதன்முதலாக இயற்றப்பட்டன. 1876-ல் கல்விச் சட்டம் ஒன்றை நிறை வேற்றினார்கள். இதனால், இலவசக் கல்வியும் கட்டாயக் கல்வியும் அதிகமாக வளர்ச்சியடைந்தன. ஆறு புதிய பிஷப் ஆட்சிப் பகுதிகள் (செயின்ட் ஆல்பன்ஸ், டிருரோ, லிவர்பூல், நியூகாஸில், வேக்ஃபீல்ட், சவுத்வெல்) ஏற்படுத்தப்பட்டன. பொதுக் கடன்களை அடைப்பதற்குச் சேமிப்பு நிதியைத் திரட்டி, இந்த நூற்றாண்டு முடிவதற்குள் £150 மில்லியன் கடனை அடைத்து விட்டார்கள். இதை நார்த்கோட்டின் கடன் அடைப்பு நிதி என்று அழைத்தனர். இவைகளையெல்லாம் பார்க்கும்பொழுது, இந்த மந்திரிசபை சுறுசுறுப்பாகவும், சீர்திருத்த மனப்பான்மை கொண்டதாகவும் இருந்ததைக் காணலாம்.

டிஸ்ரேலியின் கருத்துப்படி, மகுடம் மக்களை ஒன்று படுத்தும் சின்னமாகும். மக்களின் இன்பத்திற்காகப் பாடு படுவதே அரசாங்கத்தின் கடமையாகும். இந்தியாவில் ஏற் பட்ட கிளர்ச்சி மிகவும் முக்கியமானதொரு நிகழ்ச்சி என்று அவர் உணர்ந்திருந்தார். இந்தியா நமது கையில் இருப்பதால், மற்ற வல்லரசுகளிடம் நமது மதிப்பை உயர்த்த முடியும் என்று அவர் நம்பினார். வேல்ஸ் இளவரசன் இந்தியாவுக்கு விஜயம் செய்துவிட்டுத் திரும்பியவுடன், அரச விருது மசோதாவைத் தயாரித்து, அதன்படி அரசியாரை இந்தியாவின் பேரரசி என்று பட்டம் சூட்டினார். இந்த மசோதாவை கிளாட்ஸ்டனும், மற்ற 'ரேடிகல்'களும் கண்டித்தார்கள். சூயல் கால்வாய் நிர்மாணிப் பதில், எகிப்து மன்னன் கீடிவ்வின் (Khedive) பங்கு பத்திரங்களை டிஸ்ரேலி வாங்கினார். அப் பங்கு பத்திரங்களின் மதிப்பு £ 4 மில்லியன்களாகும். கிளாட்ஸ்டன் இருக்கும்பொழுது, இப் பங்கு பத்திரங்களை வாங்கச் சொல்லி, கீடிவ் கோரினார். அவர் அதை நிராகரித்துவிட்டார். அதனால், டிஸ்ரேலி இப் பங்கு பத்திரங்களை வாங்கியதால், அவரிடமிருந்து எதிர்ப்புக் கிளம் பியது. ஆனால், இப் பங்கு பத்திரங்களை வாங்கியதால், ஆங்கி லேயக் கப்பல்கள் செல்லும்பொழுது சுங்க வரிகள் குறைவதுமல் லாமல், கிழக்கு நாடுகளுக்குச் செல்லும் குறுக்கு வழிக்கு இவை வசதியாக இருக்கும் என்பதை டிஸ்ரேலி உணர்ந்தார். பாராளு மன்றத்தின் சம்மதத்தை எதிர்பார்த்து ரோத்ஸ்சைல்ட்ஸ் (Rothschilds) முன் பணமாக அளித்தார்.

இந்த வகையில், ஃபிரான்ஸின் உதவி இவருக்குக் கிடைத்த தால், இவருடைய வெற்றியும் எளிதாகிவிட்டது. ஃபிரான்ஸ்,

இங்கிலாந்துடன் அப்பொழுது நல்ல உறவு கொண்டிருந்தது. ஏனெனில், டிஸ்ரேலியின் அரசாங்கம் பிஸ்மார்க்கை ஆதரிக்காத தால்தான், ஃபிரான்ஸ் அவருடைய அரசாங்கத்துடன் நட்பாக இருந்தது. இரும்பு உள்ளம் படைத்த பிஸ்மார்க், ஐரோப்பாவை இரண்டு தலைமுறைகளுக்கு ஆட்டிவைத்தார். அவர் பிரஷ்யாவின் பிரதம அமைச்சராவர். அவருடைய வெல்திறன் திறமையால் ஃபிரான்ஸ் மீண்டும் ஐரோப்பாவில் தலை தூக்காதபடி ஐரோப்பிய முடியரசுகளான ஜெர்மனி, ஆஸ்திரியா, ரஷ்யா ஆகிய நாடுகளின் உடன்பாட்டை உருவாக்கினூர். 1875-ல் மற்றொரு போர் ஏற்பட்டாலும்சரி, ஃபிரான்ஸ் மீண்டும் ஆக்கிர மிப்புச் செய்ய வழி தரக்கூடாதென்பது அவருடைய கொள்கை யாகும். ஆனுல், ரஷ்யா இவருடைய திட்டத்தை ஏற்கத் தயங் கியது. இவருடைய எதேச்சதிகாரத்தைத் தடுக்க, பிரிட்டனும் பல முறை அவரைக் கண்டித்தது. ஆனுல், கீழைச் சிக்கலில், இந்த மூன்று முடியரசுகளையும் பிரிக்க டிஸ்ரேலிக்கு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. இதைப்போன்றே முன்பு கேனிங்கும் செய்தார்.

பால்கன் நாடுகளில் ரஷ்யாவின் ஆக்கிரமிப்பு ஏற்படாது கிரிமியப் போர் தடுத்தது. ஆனுல், பாரிஸ் உடன்படிக்கைப்படி எதுவுமே நடக்கவில்லை. துருக்கி திருந்தவே இல்லை. துருக்கி யிலுள்ள கிறித்துவ மக்களுக்கு, சுல்தான் அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை. 1875-ல் போஸ்னியாவிலும், ஹெர்ஸி கோவினுவிலும் கிளர்ச்சி ஆரம்பமானது. 1876 ஏப்ரலில் பல்கர்களும் புரட்சி செய்தனர். சுமார் 12,000 பேர் வரையிலும் அவர்கள் படுகொலை செய்யப்பட்டனர். துருக்கியக் கூலிப் படை கள் பல அக்கிரமங்களை அங்கே புரிந்தன. இந்த நிகழ்ச்சிகளெல் லாம் இன்னும் இங்கிலாந்து மக்களுக்கு எட்டவில்லை. ஆனுல், கிழக்கத்திய வல்லரசுகளின் திட்டத்தை பிரிட்டன் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது. அத் திட்டத்தை பெர்லின் அறிக்கை என்று கூறினுர்கள். பெர்லின் அறிக்கையின் முழு நோக்கமும் ஜூலை மாதத்தில் வெளியிடப்பட்டது. அதற்குள் ஸெர்பியா, மான்டிநிக்ரோ ஆகிய பகுதிகளிலும் ஆயுதம் தாங்கிய புரட்சி ஆரம்பமாகியது. ஓய்வு எடுத்துக்கொண்டிருந்த கிளாட்ஸ்டனுங் கூட வெளியில்வந்து துருக்கியின் அக்கிரமங்களைக் கண்டித்து ஒரு சிறு நூலை வெளியிட்டார். அதில், துருக்கியை மூட்டை முடிச்சு களுடன் அப் பகுதிகளிலிருந்து வெளியேற்றவேண்டுமென்று அவர் மிகவும் வன்மையாகக் கண்டித்தார். இதற்கடுத்த இரண்டு ஆண்டுகளில் பிரிட்டிஷ் கட்சிகளிடையே பல பிளவுகள் ஏற்பட்டன. கேபினட் ஆட்டங் கண்டது. ஐரோப்பா போர் முனையில் நின்றது.

பெயரளவில் வெளிவிவகாரத்துறை டெர்பியின் அதிகாரத்தில் தான் இருந்தது. அவர் தந்தையைவிட, இவர் பெரிதும் ஜன நாயக நாட்டங்கொண்ட டோரியாவார். இதற்கு முன்பு இவர் விக் அரசாங்கத்தில் பதவிவகிக்க ஒரு வாய்ப்பு அளிக்கப்பட்டது. ஆனால், 1880-க்குப் பிறகுதான், கிளாட்ஸ்டன் கேபினட்டில் அவர் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. இவர் அமைதியை விரும்பு கிறவர். இவருடைய வளர்ப்பு மகன் ஸாலிஸ்பரி இவரைப்பற்றி எழுதும்பொழுது, இவர் எதையும் முடிவுசெய்ய முடியாது தயங்குகிறவர் என்றும் மெல்ல நகருகின்றவர் என்றும் கூறுகிறார். அதனால், அவர் வகிக்கும் அதிகாரம் மற்றவர் கைகளுக்கு மாறி விட்டது. பெர்லின் அறிக்கையைக் கேபினட் மறுக்கும்படி டிஸ்ரேலி தூண்டினார். அதற்குக் காரணம் பிரிட்டனைக் கலந்து ஆலோசியாமலேயே, மற்ற வல்லரசுகள் சேர்ந்து தயாரித்த அறிக்கையையும் திட்டத்தையும் பிரிட்டன் ஏற்றுக்கொள்ள முடியாதென்று கூறியதேயாகும். ஆனால், துருக்கியைப் பங்கு போடுவதைப்பற்றியே, ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் தீவிரமாக இருந்தன. பிரிட்டன்மட்டும், இனியும் துருக்கியை அப்படியே வைத்திருக்கவேண்டுமென்று விரும்பியது. ரஷ்யாவை அங்கே ஆதிக்கம்செய்ய அனுமதித்தால், அது கான்ஸ்டான்டிநோபிளில் வந்து உட்கார்ந்துவிடும் என்ற பயம் பிரிட்டனுக்கு எப்பொழு துமே இருந்தது. உறுதியாகக் கொள்கையைப் பின்பற்றியிருந் தால், கிரிமியாப் போர் ஏற்படவே வாய்ப்பில்லை. அமைதியான கொள்கையைப் பின்பற்றியதன் விளைவே, பெரிய வெற்றி வீரர் களின் ஆர்வத்தைவிட, அதிகப் போர்களுக்குக் காரணமாக இருந்திருக்கின்றதென்று அவர் விவாதித்தார். அவருடைய அமைதிக் கொள்கைக்கும், அநாகரிகமான ரஷ்யாவின்மீது படை யெடுத்துத்தான் ஆகவேண்டுமென்ற அரசியாரின் பிடிவாதக் கொள்கைக்கும் நிறைய மோதுதல் இருந்தது. இதைக் குறித்து அவருடைய கடிதம் ஒன்று கேபினட்டில் படித்துக் காட்டப்பட்டது. நம் நாடு மூன்றாந்தர நாடாகிவிட்டது என்று அரசியார் குற்றம் சாட்டினார். அதனால் அவர் முடிதுறப்பதைப் பற்றியும் வதந்தி கிளம்பியது.

ஆனால், இந்தப் பரபரப்பான கண்டனங்களால்மட்டும் ஆங்கிலேய மக்களின் மனப்போக்கு மாறிவிடவில்லை. கேபினட் டிலுள்ள நடுநிலைக் கருத்துடைய ஸாலிஸ்பரி, மற்றும் எதிர்கட்சித் தலைவர்களான ஹார்டிங்டன், கிரென்வில் ஆகியோரின் கருத்து களே மக்கள் மனத்தில் நன்றாகப் பதிந்திருந்தன. அவர்களுங் கூட, கிளாட்ஸ்டனின் போர்க்குரலைப்பற்றிச் சிறிதும் கவலைப்பட வில்லை. கிளாட்ஸ்டனுக்குத் துருக்கியிலுள்ள கிறித்துவர்களைப்

பாதுகாப்பதில் எத்துணை ஆர்வம் இருக்கிறதோ, அத்துணை ஆர்வம் ஸாலிஸ்பரிக்கும் இருந்தது. ஆனால், கிளாட்ஸ்டனைப் போல இவர்களைப் பாதுகாப்பதற்கு ரஷ்யாவுடன் சேர்ந்து கொண்டு துருக்கியைப் பகைத்துக்கொள்வதால் பயனில்லை என்று அவர் உணர்ந்திருந்தார். 1877 ஜனவரி மாதத்தில் கான்ஸ் டான்டிநோபிளில் நடந்த மாநாட்டில் நமது பிரதிநிதியாக இவர் சென்றிருந்தார். அதனால் இந்தப் பிரச்சினையை ஐரோப்பிய வல்லரசுகள் ஆலோசனை செய்கின்ற அளவிற்கு எடுத்துக்கொண்டு போய்விட்டதால், துருக்கியிடம் சில சலுகை களைக் கேட்பது எளிதாக இருந்தது. துருக்கியிலுள்ள கிறித்துவர் களுக்குச் சுய ஆட்சியும், நிலப் பகுதியும் வேண்டுமென்று இவர் வற்புறுத்தினர். துருக்கியர்கள் இந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளாது நழுவிக்கொண்டே இருந்ததால், ரஷ்யா ஏப்ரல் மாதத்தில் போர் தொடுக்கப்போவதாக அறிவித்தது. நாம் நடுநிலையை வகித்தோம். ஆனால், கான்ஸ்டான்டிநோபிளும், ஸ்டிரெய்ட்ஸ் (Straits) பகுதியும், அல்லது எகிப்தும், சூயஸ் கால் வாயும் ஆபத்துக்குள்ளானால், நாம் நடுநிலைமைக் கொள்கையை உதறிவிட்டுப் போரில் ஈடுபட நேரிடும் என்ற எச்சரிக்கை செய்தோம்.

இங்கிலாந்தின் வடக்கிலுள்ள திருச்சபையில் இணங்காதார் களும், திருச்சபையினரும், பெரிய எழுத்தாளர்களும் கிறித்துவப் பொது உணர்வுகொண்டு கிளாட்ஸ்டனை ஆதரித்தனர். இந்த உணர்வு 1877-ல் ரஷ்யப் படைகள் பால்கன் பகுதியில் உள்ள பிளவ்னவைக் (Plevna) கைப்பற்றிக் கான்ஸ்டான்டிநோபிளின் வாசலில் நெருங்கியவுடன் மாறிவிட்டது. பாஸ்பரஸ் வரை யிலும் ஒரு பிரிட்டிஷ் கடற்படை சென்றது. மார்ச் மாதத்தில் துருக்கிமீது, ரஷ்யா ஸான் ஸ்டிஃபனோ (San Stefano) என்ற உடன்படிக்கையைத் திணித்தது. இந்த உடன்படிக்கையின்படி ரஷ்யா அதிகமான நஷ்ட ஈடு வேண்டுமென்று துருக்கியிடம் கேட்டது. மேலும், ஆர்மீனியாவிலும் பெஸரேபியாவிலும் ரஷ்ய ஆதிக்கத்தை நிலை நிறுத்தவும், கருங்கடலிலிருந்து சலோ னிக்கா வரையிலும் பெரிய பல்கேரியா நாட்டை நிறுவவேண்டும் என்ற சலுகைகளையும் ரஷ்யா பெற்றது. இப் புதிய நாட்டைப் பாதுகாக்க ரஷ்யா ஒரு படையைச் சில ஆண்டுகள் வரையிலும் அங்கே வைத்திருக்கும்.

ரஷ்யப் படைகள் பல்கேரியாவில் நிறுத்தப்பட்டால், கான்ஸ்டான்டிநோபிளுக்கு ஆபத்து மிக நெருங்கியே இருக்கும். மேலும், கிரீஸ் நாட்டைத் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டுவரவும்

முடியும். இந்த உடன்படிக்கை ஒருபட்சமானதாகும். ரஷ்யாவின் கொடுங்கோன்மையை எதிர்த்துப் போராட ஆஸ்திரியாவின் உதவியையும் நாடினர். தவிர, கேபினட், உதவிப் படைகளை உடனடியாக அழைத்து, சைப்ரஸ் பகுதியை ஆக்கிரமிக்க உத்தர விட்டது. இதைப் போன்றே, அது இந்தியத் துருப்புகளையும் மால்டாவுக்கு அனுப்பிவைத்தது. சைப்ரஸ் பகுதியைப் பிடிப்பது ரஷ்யாவின் ஆசிய ஆதிக்கத்தை உடனடியாகத் தடுத்து நிறுத்தும் நடவடிக்கையேயாகும். இந்த நடவடிக்கைகளை எடுத்ததால், டெர்பியும் கார்னர்வானும் ராஜிநாமா செய்ய வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று.

ஸாலிஸ்பரி வெளித்துறை நிர்வாகத்தை ஏற்றுக்கொண்ட பிறகு, கொள்கையில் மாற்றம் தேவைப்படுகின்றதென்பதை ஒப்புக் கொண்டதுமட்டுமன்றி, ஐரோப்பிய வல்லரசுகள் ஒன்று கூடி, இந்த ஸான் ஸ்டிஃபனோ உடன்படிக்கையில் சிறிது மாற்றங் களைச் செய்யவேண்டுமென்று மிகத் தெளிவாக அறிவித்தார். கொள்கை மாறியவர்களிடம் அவர் பேசவேண்டியிருந்தது. இந்தச் சமயத்தில் ரஷ்யா போர் செய்து அலுத்துப்போய் விட்டது. போஸ்னியாவின்மீது ரஷ்யா ஆதிக்கம் செலுத்து வதைத் தடுக்க முடியாது என்று ஆஸ்திரியாவும் பிரிட்டனும் கருதின. உண்மையில், ரஷ்யாவின் வெற்றியைக் கண்டு ஆஸ்தி ரியா மிரண்டுவிட்டது. பிஸ்மார்க்கின் இரண்டு நண்பர்களும் போரிட்டுக்கொள்வது அவருக்கு மிகவும் வேதனை அளித்தது. அதனால் எப்படியும் இவ்விரண்டு நாடுகளும் போரிடாது பார்த்துக் கொள்ளவும், அதே சமயத்தில் நடுவராக இருந்து மத்தியஸ்தம் செய்து வைக்கவும் அவர் தயாராக இருந்தார். அவர் துருக்கியைத் துண்டாடி, அமைதியை நிறுவமுடியும் என்று நம்பினர். அதே சமயத்தில், நம்மையும் எகிப்தைக் கைப் பற்றத் தூண்டினர். இதற்கிடையே, சைப்ரஸ் பகுதியைப் பிடித்துக் கொண்டதைத் துருக்கி ஏற்று, ஓர் இரகசிய உடன் படிக்கையும் செய்துகொண்டது. தவிர, நமது பொதுவான கொள்கைகளையும் ரஷ்யா இரகசியமாக ஒப்புக்கொண்டது. 1878 ஜூனில் பீக்கன்ஸ்ஃபீல்டும் ஸாலிஸ்பரியும், தங்களுடைய சமாதானப் பணியை நிறைவேற்ற, பெர்லினில் கூட்டப்பட்ட மகாசபைக்குச் சென்றூர்கள்.

பெர்லினில் கையெழுத்தான உடன்படிக்கை ரஷ்யாவின் வெல்திறனுக்குப் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியது. ஸெர்பியாவும் மான்டிநிக்ரோவும் சுதந்திர நாடுகளாக அறிவிக்கப்பட்டன. ஆனால், ஸான் ஸ்டிஃபனோ உடன்படிக்கையில் கூறப்பட்ட அள விற்கு நிலப்பகுதி அந்த நாடுகளுக்குக் கொடுக்கப்படவில்லை. அந்த

நாடுகளின் நிலப்பரப்புக் குறைந்தது. ஆனால், இந்த நாடுகளை எப்பொழுதும் மிரட்டிக்கொண்டிருக்கும் வாய்ப்பு ஆஸ்திரியாவிற்குக் கிடைத்தது. போஸ்னியா, ஹெர்ஸிகோவினு ஆகிய பகுதிகள் ஆஸ்திரியாவின் ஆதிக்கத்திற்குச் சென்றதால்தான், மேற்கூறிய பகுதிகளுக்கு ஆபத்து ஏற்பட்டது. மேலும், நோவி பஸாரில் உள்ள ஸன்ஜாக்கில் ஆஸ்திரியப் படைகளை வைத்துக் கொள்ளும் உரிமையும் தரப்பட்டது. பல்கேரியா தன்னுடைய பெரும் நிலப்பரப்பிலிருந்த மாஸிடோனியா பகுதியைத் துருக்கியிடம் கொடுத்துவிட்டது. மேலும், பல்கேரியாவின் தெற்குப் பகுதியிலுள்ள பாகத்தைக் கிழக்கு ருமேனியா என்றழைத்து, துருக்கியின் ஆதிக்கத்தில் சுய ஆட்சி பெற்ற நாடாகத் திகழச் செய்தனர். ருமேனியர்களிடமிருந்து ரஷ்யா பெஸரேபியாவைப் பெற்றாலும், அல்லது ஆசியாவில் கார்ஸ் பகுதியைப் பெற்றாலும் பேடம் துறைமுகத்தைப் பலப்படுத்துவதில்லை என்று ரஷ்யா உறுதிமொழி அளித்தது. சைப்ரஸ் பகுதியை பிரிட்டனிடம் கொடுத்தார்கள். தவிர, துருக்கிக்குச் சொந்தமான ஆசியப் பகுதிகளைப் பாதுகாப்பதென்றும், அதற்குப் பதிலாக, துருக்கியர்கள் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதென்றும் ஒப்புக் கொண்டனர்.

பீக்கன்ஸ்ஃபீல்டின் இந்த ஏற்பாடு, அமைதியையும், அதே சமயத்தில் பிரிட்டனின் மானத்தையும் காப்பாற்றியது. பெரிய வல்லரசுகளிடையே ஏற்பட்ட இந்த உடன்படிக்கை இன்னும் முப்பத்தாறு ஆண்டுகள் வரைக்கும் சமாதானத்தை ஐரோப்பாவில் ஏற்படுத்தியது. துருக்கியும் ஓரளவிற்குத் தான் கொடுத்த வாக்குறுதிப்படி, சில சீர்திருத்தங்களைச் செய்தது. அதனால், கிளாட்ஸ்டன் அரசாங்கம், அங்கு நியமிக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் இராணுவ அதிகாரிகளைத் திரும்பவும் அழைத்துக் கொண்டது. ஸாலிஸ்பரி இந்த இராணுவ அதிகாரிகளை நம்பியே பொறுப்பை அவர்களிடம் விட்டுவைத்திருந்தார். ஆனால், ஆஸ்திரியர்கள், ஸெர்பியர்களைக் கொடுமைப்படுத்தினர்கள். மாஸிடோனியாவில் இனவெறி வளர்ச்சியடைந்து, அதனால் மோதல் ஏற்பட்டது. கிரேக்கர்கள் பெரிய ஏமாற்றமடைந்தனர். கான்ஸ்டான்டிநோபிளும், ஸ்டிரெய்ட்ஸ் பகுதியும் சுதந்திரத்தை இழக்காது பாதுகாக்கப்பட்டன. மேலும், பல இனத்தவர்களும் வளர்ச்சி அடைவதற்கு வாய்ப்பளிக்கப்பட்டது. பீக்கன்ஸ்ஃபீல்ட், பிரிட்டனின் அக்கறைகளைமட்டும் பாதுகாத்துக்கொண்டாரே தவிர, பொதுப்படையான நியாயத்தைப்பற்றி அவர் கவலைப்படவே இல்லை என்று கிளாட்ஸ்டன் குற்றம் சாட்டினர். பால்கனிலுள்ள எல்லா நாடுகளுக்கும் சுதந்

திரம் தரப்பட்டால், கிறித்துவ நாகரிகம் மேன்மை அடையும் என்ற உணர்வு அப்பொழுது மக்களிடையே இருந்தது. உண்மை யில் அவருடைய கொள்கை சரிதானா என்பதை வருங்கால வரலாறு முடிவு செய்யும்.

கீழைச் சிக்கலிலேயே முழுக் கவனத்தையும் செலுத்தி வரும் காலத்தில், நாட்டில் விவசாய மந்த நிலையும், மற்றும், இரண்டு பெரிய பிரச்சினைகளும் அரசாங்கத்திற்குப் பெரிய தொல்லைகளை அளித்தன. அவற்றின் முழு விளைவுகளையும் இனிமேல்தான் காணமுடியும். எகிப்திய நாட்டு மன்னன், கீடிவ் இஸ்மாயில் சரியாக ஆட்சி செய்யவில்லை. அதிகமான ஊழல்கள் அவரது ஆட்சியில் காணப்பட்டன. அந்தக் காரணத்தை வைத்துக் கொண்டு, பிரிட்டனும் ஃபிரான்சும் 1878-ல் கீடிவ் இஸ்மாயிலை அரச பதவியிலிருந்து இறக்கிவிட்டன. அதன் பிறகு, இந்த இரு நாடுகளும், எகிப்தின் நிதி நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டன. அதே ஆண்டில் ஐரிஷ் பாராளுமன்றத்தின் கட்சித் தலைமை பார்னல்லிடம் (Parnell) சென்றது. ஐரிஷ் நிலச் சங்கத்தினர் புரட்சி இயக்கம் ஒன்றை ஆரம்பித்தனர். இதனால், உள்நாட்டுப் போர் ஏற்படும் நிலை இருந்தது. இதற்கிடையே, ஆயிரம் மைல்களுக்கப்பால், பேரரசின் பழைய வரலாற்றில், ஒரு புதிய பக்கத்தைத் திருப்பினார்கள். 1839-40 ஆண்டுகளில் நமக்கு ஏற்பட்ட அபாயங்களுக்குப் பிறகு, டோஸ்ட் முகமது மீண்டும் பதவியேற்றார். சிப்பாய்க் கலகத்தின்பொழுது, அவர் பொறுமையை இழக்காது, சம நிலையில் இருந்ததால், ஆப்கானிஸ் தானத்துடன் நமது உறவு அமைதியாகவே இருந்தது. அவர் இறந்தபிறகு, அவருடைய பன்னிரண்டு மகன்களிடையே பெரிய குழப்பம் ஏற்பட்டது. அவர்களில் ஷெர் அலி (Sher Ali) என்ப வரை நாம் அரசராக அங்கீகரித்தோம். 1869-ல் அவர் ஆப் கானிஸ்தானத்தின் அமீரானார். இந்திய எல்லையை நிர்ணயம் செய்யும் அவசியம் ஏற்பட்டது. ஆப்கானிஸ்தானத்தில் நிரந்தர மான அரசாங்கத்தை எதிர்பார்ப்பது கடினமே. ஏனெனில், அங்கே கத்திமுனையில் ஆட்சி நடந்தது. எல்லைப்புறங்களில் அரச பரம்பரையின் நாடு கடத்தப்பட்ட பல சிற்றரசர்களால் போர்நிலை ஏற்பட்டிருந்தது. மற்றும் பல மலைவாசிகளும் கெலாட் பகுதியின் கானைப் போல அரைகுறைச் சுதந்திரம் அடைந்துள்ள பிரபுக்களும் அரசாங்க ஆணைகளை மறுத்து வந்தனர். இவற்றைத் தவிர, பாரசீகத்திற்கும் ஆப்கானிஸ் தானத்திற்கும் இருந்த பழைய சண்டை இன்னும் ஓய்ந்த பாடில்லை; இவர்களிடையே ஏற்படுகின்ற சண்டையில், எந்தப் பக்கம் சேர்ந்தாலும் சிக்கலான நிலைமை ஏற்படுகிறது.

எடுத்துக்காட்டாக, ஹீரட் கோட்டை யாருக்குச் சொந்தம் என்ற பிரச்சினையில் தலையிட்டால், யாருக்காவது மனவருத்தம் ஏற்படத்தான் செய்யும். ரஷ்யாவின் படைகள் காஸ்பியன் கடலிலிருந்து இந்திய எல்லை வரையிலும் உள்ள சுமார் ஆயிரம் மைல் தூரத்திற்கு முன்னேறிச் சென்றுவிட்டதால், மத்திய ஆசியாவின் பிரச்சினை மிகவும் முக்கியத்துவம் அடைந்து விட்டது. 1868-லிருந்து 1875-க்குள் துருக்கிஸ்தான், பின்பு சாமர்கண்டு, பொக்காரா, கிவா, கோகண்டு ஆகிய பகுதிகளை ஒன்றன்பின் ஒன்றாக ரஷ்யா ஆக்கிரமித்தது. ரஷ்யாவின் ஆக்கிரமிப்பு எல்லைக்கப்பால் ஆப்கானிஸ்தான் இருக்கிறதென் பதை ரஷ்யாவே ஒப்புக்கொண்டபோதிலும், ரஷ்யாவின் வேக மான முன்னேற்றம், ஆப்கன்-இந்திய உறவில் உடனடியான மாறுதலை ஏற்படுத்தியது. அதன்விளைவாக இரண்டுவிதமான கருத்துகள் தோன்றின. ஜான் லாரென்ஸ், மற்றும் அவரைப் பின்பற்றுகின்றவர்கள் ஆப்கானிஸ்தானத்தில் தலையிடவேண் டிய அவசியமே இல்லை என்று கூறினர். ஆனால், மற்றும் சிலர், ஆப்கானிஸ்தானத்தின் எல்லைப்புறத்தையும் ஆப்கானிஸ்தானத் தையும் இன்னும் அதிகக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர வேண்டுமென்று கருதலாயினர்.

ஷெர் அலி பாதுகாப்பு வேண்டுமென்றும், அதையொட்டி ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும் அடிக்கடி கூறி வந்ததை, இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளத் தயங்கியது. கிளாட்ஸ்டனின் கேபினட்டும் ஷெர் அலியின் கோரிக்கையை நிராகரித்தது. ஆனால், அமீர் நடுநிலைமை வகிக்கவேண்டு மென்பதுமட்டும் ஆங்கிலேயரின் விருப்பமாகும். அதே சமயத் தில் அவருக்கு ஏதாவது நஷ்ட ஈடு கொடுக்கும் பிரச்சினையும் அவர்கள் கவனத்திற்கு வரவில்லை. 1876-ல் டிஸ்ரேலி லிட்டனை இந்திய வைசிராயாக நியமித்தார். அப்பொழுது ரஷ்ய-துருக் கியத் தகராறு மிகவும் தீவிரமாக இருந்தது. எல்லைப்புறத்தை எச்சரிக்கையாகப் பாதுகாக்கவேண்டுமென்று, லிட்டனுக்கு உத்தரவிடப்பட்டிருந்தது. மேலும், ஆசியாவுக்குள் என்னதான் நடக்கின்றதென்பதைக் கவனிப்பதற்கு, ஆப்கானிஸ்தானத்தில் ஒரு பிரிட்டிஷ் பிரதிநிதியை நியமனம் செய்யவேண்டுமென்று விரும்பினார். இந்தியாவிலுள்ள போர் ஆர்வமிக்கவர்கள், போர் ஏற்படத்தான் வேண்டுமென்றும், அந்தப் போர் விரைவில் வந்தால் நல்லதென்றும் எண்ணினர். ஆனால், கேபினட் இந்தக் கருத்திற்கு ஆதரவு அளிக்கவில்லை. ஆசியாவில் இவ்விதமாகப் போர் ஏற்படுவதைவிட, பெர்லின் உடன்படிக்கை ஏற்படுவ தற்கு முன்போ, அல்லது பின்போ, அந்த உடன்படிக்கை முறிந்த

தென்றால், அதனால் விளையும் தீமைகள் அதிகமாக இருக்கும். முதலில் இந்தியாவின் காரியதரிசியாக இருந்தவரும், பின்பு வெளி விவகாரத்துறை காரியதரிசியாக இருப்பவருமான ஸாலிஸ்பரி ரஷ்ய அபாயம் ஏற்படுமென்பதில் அதிக அவநம்பிக்கையுடையவராகவே இருந்தார். அவர்கள் கண் களுக்குத் தெரிகின்றபடி, பெரிய வரைபடங்களை வைத்துப் பார்க்கும்படி ஸாலிஸ்பரி கூறினார். லிட்டன், கெலாட் அமீருடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார்.

பலுசிஸ்தானமும் நமது பாதுகாப்பின்கீழ்க் கொண்டுவரப் பட்டது. ஆங்கிலேயத் துருப்புகள், காந்தகார் சாலைகளை நோக்கியுள்ள கேந்திர தளமான குவெட்டாவைக் கைப்பற்றின இந்த அளவில் லிட்டன் மிகவும் வேகமாகவே இந்தக் காரியத் தைச் சாதித்தார். ஆனால், ஆங்கிலேயப் பிரதிநிதியை அங்கே நியமனம் செய்வதற்கான பேச்சுவார்த்தைகளில், கடுமை யாகவே நடந்துகொண்டதால் காரியம் மிஞ்சிவிட்டது. உண்மையில் சாலிஸ்பரி இந்த நிலையைத்தான் தவிர்க்கவேண்டு மென்று நினைத்தார். 1878-ல் காபூல் அரசாங்கம் ரஷ்யத் தூதர் குழுவிற்கு வரவேற்பளித்தது. அதனால், பிரிட்டிஷ் தூதர் குழு வினையும் காபூல் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேபினட் கோரியது. லிட்டன் அனுப்பிய தூதர் குழு கைபர் கணவாயைக் கடக்கக்கூட அனுமதிக்கப்படவில்லை. இதனால் மானக்கேடு உண்டாயிற்று. லிட்டன் போருக்கு வேண்டிய சூழ் நிலையை உருவாக்கிவிட்டார். கேபினட்டில் உள்ள மந்திரிகளில், கேத்தார்ன் ஹார்டியைத் தவிர—இப்பொழுது கிரான்புருக் பிரபு (Lord Cranbrook)—மற்றவர்களெல்லாரும் லிட்டன், போரைக் கிளறிவிட்டார் என்று கருதினர். அதனால், இதை மானத்தைக் காக்கும் போரெனக் கருதலாம்.

1879-ல் நிகழ்ந்த முதல் படையெடுப்புச் சிறப்பான வெற்றியை அளித்தது. மூன்று படைகள் கைபர், குர்ரம், குவெட்டா ஆகிய பகுதிகளில் ஊடுருவிச் சென்று ஆப்கானிஸ் தானத்தைத் தாக்கின. ஷெர் அலி துருக்கிஸ்தானுக்கு ஓடி விட்டார். பின்பு, அங்கேயே அவர் இறந்துவிட்டார். அவர் இறப்பதற்கு முன்பு, வீணே ரஷ்யாவின் உதவியைக் கோரினார். அவருக்குப் பின் பட்டத்திற்கு வந்தவருடன் ஆங்கிலேயர்கள் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். அந்த உடன் படிக்கைப்படி ஆப்கானியரின் வெளி விவகாரங்களில் பிரிட்டன் ஆதிக்கம் செலுத்துமென்றும் கைபரில் ஆங்கிலேய அதிகாரம் இருக்குமென்றும் இருதரப்பினரும் ஒப்புக்கொண்டனர். தவிர, குர்ரம், ஸிபி, பிஷின் ஆகிய பகுதிகளையும் ஆங்கிலேயர்

களுக்குக் கொடுத்துவிட்டதால், இரண்டு மாற்றுத் தளங்களை அந்த எல்லையில் அமைக்கமுடிந்தது. ஆனால், செப்டம்பர் மாதத்திலேயே, காபூலிலுள்ள ஆங்கிலேயப் பிரதிநிதியையும், அவருடைய அதிகாரிகளையும் அவர்கள் படுகொலை செய்தனர். அதனால் மீண்டும் அங்கே குழப்பநிலை ஏற்பட்டுவிட்டது. தளபதி ராபர்ட்ஸ் காபூலின்மீது படையெடுத்துச் சென்றார்; தளபதி டொனல்ட் ஸ்டுவார்ட் காந்தகார்மீது படையெடுத்துச் சென்றார். ஆனால், ஆப்கானிஸ்தானத்தை ஆட்சி செய்கின்ற எந்த அமீரும் இல்லை. இதனால், லிட்டன் இந்தப் பகுதியைப் பல சிறிய நாடுகளாகப் பிரித்துவிடவேண்டுமென்று விநோத மான எண்ணத்தைக் கொண்டிருந்தார். 1880-ல் ஒரு பிரிட்டிஷ் படையை மைவாண்ட் (Maiwand) என்ற இடத்தில் முழுவதுமே அவர்கள் அழித்துவிட்டார்கள். ஆனால், மிகவும் அதிசயிக்கத்தக்க முன்னேற்றத்துடன் ராபர்ட்டின் படை சென்று காந்தகாரைக் காப்பாற்றியது. அதே சமயத்தில் நடந்த இரண்டு நிகழ்ச்சிகள் பழைய நிலையை மீட்டன. ஒன்று, கிளாட்ஸ்டன் அரசாங்கம் மீண்டும் ஏற்பட்டது. மற்றொன்று, இதுவரையிலும் நாடு கடத்தப்பட்டிருந்த மிகத்திறமை வாய்ந்த ஆப்கன் இளவரசனான அப்துர் ரஹ்மான் பதவியேற்றது. ஆகவே, இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் ஆங்கிலேயர்களுக்குச் சாதகமாக அமைந்தன. 1880-ல் ஆப்கானிய அரசனிடத்தில் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். கிளாட்ஸ்டன் இதுவரையிலும் அங்கே போர் உண்டாவதைக் கடுமையாகக் கண்டித்து வந்திருந்தார். அதனால், போர் அங்கே மீண்டும் உண்டாகாவண்ணம், இந்த உடன்படிக்கையைத் தயார் செய்தனர். வெளிவிவகாரங்களில் அமீர் ஆங்கிலேயரின் ஆலோசனையைக் கேட்டு அதன்படி நடக்கவேண்டுமென்றும், அதற்குப் பதிலாக அவருக்கு நம்முடைய பாதுகாப்பும், பெரும் தொகையை மானியமாகவும் கொடுப்பதென்றும் முடிவு செய்தனர்.

பீக்கன்ஸ்ஃபீல்ட் அரசாங்கத்திற்கு, ஆப்கானியப் போர்களில் தோல்விகளும், நிறைய பொருட்சேதமும் ஏற்பட்டன. ஆனால், தென் ஆஃப்ரிக்காவிலுங்கூட, பெரிய நெருக்கடியான நிலை ஏற்பட்டது. இப்படி நேர்ந்தது அவருடைய துர்அதிர்ஷ்டமே யாகும். தென் ஆஃப்ரிக்காவில் நிகழ்ந்த நெருக்கடியைச் சரியான கட்டத்தில் எடுத்துக் கூறினாலும் இப்பொழுது இரண்டு அம்சங்கள், 'முப்பதுகளில்' இருந்ததைப்போலவே இருந்தன. அதாவது, முழு அதிகாரத்தையும் பிரிட்டன் அங்கே ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது. மற்றொன்று, சுதேச சமுதாயம் பல பிரிவுகளாகப் பிரிந்துவிட்டது. ஆப்கானிஸ்தானத்தில்

ஏற்பட்டதைப்போலவே, இங்கேயும் பேரரசின் விவகாரங்களை இரண்டு தன்மைகள் மிகவும் பாதித்துவிட்டன. கேபினட்டில் பெரிய பிளவு ஏற்பட்டது. தவிர, அந்தப் பகுதியில் நேராகப் பணியாற்றுகின்ற அதிகாரிகள் பேரரசைக் கட்டுப்படுத்தி விட்டனர்.

1850-ல் ஏற்பட்ட தீர்மானங்களின்படி, போயர் குடியரசு களில் பிரிட்டன் தலையிடுவதில்லை என்று முடிவு செய்திருந்தது. ஆனால், இப்போதைய நிலையில், கேப் காலனியும், நேட் டாலும் பாதுகாப்பாக இருக்கமுடியாதென்று உணர்ந்தன. பரந்த நிலப் பரப்பினால் மட்டுமல்லாது, காஃபிர் போர்களுக்குப் பிறகு ஆங்கிலேயர் ஆட்சிக்குள்ளும், சில பகுதிகள் சுதேச இனங்களின் ஆட்சியிலும் இருந்ததால், அப் பகுதிகள் இன்னும் அதிகமாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அங்குள்ள ஆதி குடிமக்களை ஆட்சி செய்வதில் பல சிக்கல்கள் இருந்தன. அக் குடிகளைத் தனியாக ஒதுக்கிவிடுவதா, அல்லது அவர்களுடன் கலந்து கொள்வதா, அல்லது வெள்ளையர், கருப்பர் என்று பாகு படுத்துவதா என்ற பிரச்சினையே தீர்ந்தபாடில்லை. போயர் களின் பெரிய பயணமும் ஒருவித நலனையும் ஏற்படுத்தவில்லை. ஆனால், அந்த நிகழ்ச்சி ஒரு மாறாத வடுவை ஏற்படுத்திவிட்டது. அல்லது தொத்து வியாதியை ஏற்படுத்திவிட்டதென்றும் கூறலாம். கேப் காலனியிலும், நேட்டாலிலும் போயர் குடும்பங்கள் வசித்துவந்தன. டச்சுக்காரர்களின் திருந்திய திருச்சபையால், அவர்களிடையே சமய ஒருமைப்பாடு இருந்தது. உட் பகுதிகளில் வசிக்கின்றவர் எப்பொழுதுமே துறைமுகங் களில் உள்ள காலனிகள் செய்யும் வர்த்தகத்தாலே பிழைப்பை நடத்திவந்தனர். இக் குறைகளெல்லாம் எல்லைகளைக் கடந்தும் காணமுடிகின்றது. இவற்றைத் தவிர, சுதேச மக்களிடம் வெள்ளையர்கள் நல்ல உறவை ஏற்படுத்திக்கொள்ளவில்லை என்பது தெரிந்ததே. நேட்டால் நிலப்பரப்பை இன்னும் அதிகமாக்கி, அவர்களைக் கட்டுப்படுத்த முடியும் என்று நேட்டால் நிர்வாகி ஷெப்ஸ்டோன், ஓர் ஆர்வமுள்ள திட்டத்தை வைத்திருந்தார். இவருடைய திட்டத்திற்கு மாறாக, போயர்கள் சுதேசிகளை விறகு வெட்டத்தான் தகுதி யானவர்கள் என்று கருதினர். அவர்களுடைய குழந்தை களையுங்கூட இந்தத் தொழிலுக்கே பயிற்றுவித்தனர். ஆனால், இவ்விருவரும் பயம் காரணமாக ஒற்றுமையாகவே இருந்தனர்.

ஏற்கெனவே நியூஸிலந்து நாட்டைக் கூட்டாட்சி நாடாக்கிச் சிறப்படைந்த ஜார்ஜ் கிரே என்பவர் கேப் காலனிக்கு கவர்னராக

இருந்தார். அவர்,இந்தக் காலனியை ஆரஞ்சு சுதந்திர நாட்டுடன் இணைத்துவிட வேண்டுமென்று முயற்சி செய்ததற்காக, அவரைத் திரும்பவும் அழைத்துக்கொண்டார்கள். அப்பொழுதிருந்து ஒவ்வோர் ஆண்டிலும் இணைப்பு ஏற்படும் என்று அதிகமாக நம்பிக்கையை வைத்திருந்தனர். ஆனால், அந்த இணைப்பு, ஆங்கிலேயர்களால் ஏற்படுமா அல்லது போயர்களால் ஏற்படுமா என்பதை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தனர். டிரான்ஸ்வால் பகுதியிலுள்ள ஒரு சாரார், மற்ருெரு போயர் நாட்டுடன் இணைந்து கொள்ளவும், கிழக்கு நோக்கியுள்ள டெலகோவா பே (DelagoaBay)கரையோரத்திற்கு வழியை அமைத்துக்கொள்ளவும் முயன்றனர்; டிரான்ஸ்வால் சமுதாயத்தினர், சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பாடாதவர்களாய் சுதேச மக்களுக்குப் பல கொடுமைகளையும் இழைத்துக்கொண்டிருந்தனர். 1860 முதல் 1870 வரையிலும் தங்கம், வைரம் ஆகியவற்றைக் கண்டுபிடித்ததால் அவர்களை இன்னும் கொடுமையாக நடத்தினுர்கள். போயர்களுடைய ஆதிக்கம் மேற்குப் பகுதியிலுள்ள கிரிக்கா சமூகத்தினரிடம் அதிகமாக இருந்தது. இந்த கிரிக்காக்களுடன் ஆங்கிலேயர்கள் ஏற்கெனவே சில ஒப்பந்தங்களைச் செய்துகொண்டிருந்தனர். இந்தப் பகுதியிலுள்ள போயர்கள் வடக்கே செல்லும் பாதையை அடைத்துவிடப் போவதாகப் பயமுறுத்தினுர்கள். இதனுல், சமயப் பிரசாரகர்களும் லிவிங்ஸ்டனும் சுதேச மக்களைப் பாதுகாக்க ஆங்கிலேய அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டனர். இதற்கிடையே போயர்களுடைய பசுடோலண்ட் உறவு பாதிக்கப்பட்டிருந்ததால், பெரும்பாலும் எல்லாத் தென்-ஆஃப்ரிக்க நாடுகளும் இதனுல் பாதிக்கப்பட்டன. இதன் விளைவாகப் பல போர்கள் நிகழ்ந்தன. 1869-ல் கேப் காலனி கவர்னரான வுட்ஹவுஸ் எல்லைகளை நிர்ணயம்செய்து, பசுடோலண்டை ஆங்கில மகுடத்தின் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். வைரச் சுரங்கங்களில் இருந்த குழப்பமான நிலையை, இவர் சரி செய்து, போயர் ஆதிக்கத்தைக் குறைத்தார். 1871-ல் மேற்கு கிரிக்காலண்டைக் கைப்பற்றினுர். உண்மையில், கேப் காலனியில் உள்ள பல ஆஃப்ரிக்க இனத்தலைவர்கள் ஏதாவது ஓர் இணைப்பு ஏற்பட்டால் நல்லதென்று கருதினர். டி வில்லியர்ஸ், அல்லது ஹோஃப்மிர் (De Villiers or Hofmeyr) என்பவர், அப்பொழுது இந்தக் கருத்தைக்கொண்டிருந்த பல ஆஃப்ரிக்கத் தலைவர்களில் சிறிது முக்கியமானவர். காலனி அலுவலகங்கூட, இணைப்பை ஏற்படுத்திவிடலாம் என்ற எண்ணத்தில்தான் இருந்தது. அவர்கள் தங்கள் பொறுப்பைக் குறைத்துக்கொள்ளவேண்டுமென்பதற்காகத்தான் இத்தகைய முடிவிற்கு வந்தனர் எனலாம். அதனுல், அங்கே நிறுத்திவைக்கப்பட்டிருந்த ஆங்கிலேயப்

படையை மிகவும் குறைத்துவிட்டனர். மேலும், பிரதிநிதித்துவ அரசாங்கத்தையும் ஏற்படுத்த வசதிகளைச் செய்துகொடுத்தனர். கேப் பாராளுமன்றத்தில் பல கட்சிப் பிரிவினைகள் இருந்தன.

மற்றொருபுறத்தில், ஜுலுக்கள் (Zulus) பெரிய அபாயத்தை ஏற்படுத்திவிட்டனர். அவர்கள் துகிலா ஆற்றோரம் இருந்த கிழக்கு நேட்டால் பகுதியையும் வடக்குப் பகுதியையும் அடிக்கடி பயமுறுத்தினர். டிரான்ஸ்வால் மக்களுடன் அடிக்கடி அவர்கள் போரிட்டனர். ஜுலுக்களின் தலைவராக இருந்த பண்டாவுக்குப் பிறகு கேடிவாயோ தலைவரானார். அவர் மற்ற சுதேச இனத்தினரைக் கொன்று, அந்த இரத்த வெள்ளத்தில், அவர்களுடைய ஈட்டிகளைக் கழுவினார். ஒவ்வொரு சமயமும், புதிய நிலப் பகுதியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றும்பொழுதும், அவர் பொறுமினார். போயர்களுடன் புதிய எல்லைகளை வரையறுத்ததையும் அவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

இந்தச் சூழ்நிலை இருக்கும்பொழுதுதான், டிஸ்ரேலி காலனி நிர்வாகத்தை கார்னர்வானிடம் ஒப்படைத்தார். கார்னர்வான், இதற்கு முன்பிருந்த கன்சர்வேடிவ் அரசாங்கத்தில் கனடாவுக்குக் கூட்டாட்சியை அமைத்துக் கொடுத்தவராவர். அவர் அக் கால மக்களுடைய கருத்திற்கிணங்க நடந்துகொள்ளாது, ஒருபடி அதிகமாகச் சென்று வருங்காலத்தில் ஏற்படுகின்ற நன்மைகளையும் கவனித்துச் செய்ததாலும், மற்றும், நேரடியான சூழ்நிலையில் ஆஃப்ரிக்காவில் வேலைசெய்யும் அதிகாரிகளுடைய சில கொள்கைகளுக்கும் ஆளானது அவருடைய துரதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். கூட்டாட்சியை ஏற்படுத்துவதற்கு வேண்டிய சூழ்நிலையைப்பற்றிக் கூறலாமே தவிர, அதாவது, சுதேச மக்களின் பிரச்சினைகளைத் தீர்த்துவைத்தல், ரயில்வேக்களைக் கட்டுப்படுத்தல், தென் ஆஃப்பிரிக்க மக்களின் பொருளாதார வாழ்க்கையை அபிவிருத்தி செய்தல் என்ற பணிகளைச்செய்யலாம். ஆனால், இவைகளையெல்லாம், கார்னர்வான் நினைத்தபடி கொண்டுவர முடியவில்லை. அவருடைய பிரதிநிதியான ஃப்ரூடின் (Froude) சொற்பொழிவுகளும், கேப்டவுனில் நடக்க இருந்த மாநாட்டை ஒத்திப்போடலும், அதை மீண்டும் லண்டனில் நடத்துதலும் போன்ற நடவடிக்கைகளைத் துரிதப்படுத்தினாரே தவிர, 1877-ல் அவர் இறுதியாக எடுத்த முடிவுகள் அவசரப் பட்டுச் செய்த முடிவுகளைப் போன்றும், ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாததைப் போன்றும் தோன்றின. ஏனெனில், பார்ட்டில் ஃபிரெரி (Bartle Frere) என்ற அனுபவம்மிக்க இந்திய நிர்வாகியை அங்கே ஹை கமிஷனராக (High Commissioner) அனுப்பி, தென்-ஆஃப்பிரிக்கா-டொமினியனை ஏற்படுத்தும் வழி வகைகளை அவர் ஆராயச்சொன்னார். ஃபிரெரிக்குத் தெரியாம

லேயே, ஷெப்ஸ்டோன் என்ற மற்ருெருவருக்கும் இதைப் போன்ற ஆணையைப் அனுப்பியிருந்தார். அவருக்குத் தரப்பட்ட உத்தரவில், டிரான்ஸ்வாலைக் கூட்டாட்சியுடன் இணைப்பதற்கான சாத்தியக் கூறுகளை ஆராயும்படி சொல்லி, முடியுமென்ருல் அதைக் கைப்பற்றுமாறும் கட்டளையிட்டு இருந்தார். இதைப் பற்றிய பிரச்சினையில் போயர்கள் கருத்துவேற்றுமை உடையவர்களாக இருந்தனர். பால் குருகெர் (Paul Kruger) என்பவர் இந்தக் கொள்கையை எதிர்த்து ஆங்கிலேய அரசாங்கத்திடம் முறையிட்டார். இவருடைய எதிர்ப்பை உண்மையில் சமாளிக்க வேண்டுமென்ருல், சுய ஆட்சி பெறுவதற்கான சரியான உறுதிமொழிகள் வேண்டுமென்று கருதினுர்கள். ஆனுல், எந்த உறுதிமொழியும் வருவதாகக் தெரியவில்லை. மேலும், டிரான்ஸ்வாலைக் கைப்பற்றுவதான எண்ணம், கூட்டாட்சி ஏற்படுகின்ற நம்பிக்கையை அழித்துவிட்டது. இதற்குப் பிறகு சுதேச மக்களிடம் போராடவேண்டிய அபாயம் இருந்தது. இதைத் தவிர்க்கவேண்டும். 1877-1878 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும், எல்லைப்புறத்தில் ஏற்படுகின்ற கிளர்ச்சிகளை ஒடுக்குவதிலேயே தன் முழுக்கவனத்தையும் செலுத்தவேண்டியிருந்தது. இவ்வளவு தொல்லைகளுக்கும் காரணம், ஜுலுத் தலைவஞன கெட்டவேயோ (Cete wayo) என்பவரேயாவர். பீக்கன்ஸ்ஃபீல்ட், கார்னர்வான் ஆகியவர்களுக்குப் பிறகு, காலனி நிர்வாகத்தை ஹிக்ஸ் பீச் (Hicks Beach) என்பவர் ஏற்ருர். அவர் ஃபிரெரியின் கொள்கையில் நம்பிக்கை வைக்கவில்லை. கெட்டவேயோவை அடக்குவதற்கு, அவர் துருப்புகளை அனுப்பிவைத்தாலும், பாதுகாப்புக்குமட்டும் பயன்படுத்தும்படி அவர் உத்தரவிட்டார். ஆனுல், அவர் இந்த உத்தரவை மதித்ததாகவே தெரியவில்லை. 1878 டிசம்பரில், அவருடைய சொந்தப் பொறுப்பிலேயே, ஓர் இறுதி எச்சரிக்கை விடுத்தார். அது போர் தோடுக்கும் அறிவிப்பாகும். அதன்படி, ஜுலுக்களின் படையைக் கலைத்துவிட வேண்டுமென்றும், அவர்களுடைய பகுதியில் ஆங்கிலேயப் பிரதிநிதியை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் அவர் கேட்டிருந்தார். 1879 ஜனவரி 22-ல் செல்ம்ஸ்ஃபோர்ட் என்ற திறமையற்ற ஆங்கிலேயப் படை தளபதியின் தலைமையின் இஸந்தல்வாஞ (Isandhlwana) என்ற இடத்தில் நடந்த போரில் ஆங்கிலேயரின் படை தோல்வியுற்றது. இந்தத் தளபதியால், அப் படையும் அழிய இருந்தது. தெற்கு வேல்ஸ் படை கம்பெனியை நடத்திச் சென்ற ராா்க்ஸ் டிரிஃப்ட் (Rorke's Drift) என்பவரின் உதவி தக்க சமயத்தில் கிடைத்திராவிடில் அப் படை முழுவதுமே அழிந்திருக்கும். ஆனுல், செல்ம்ஸ்ஃபோர்ட் ஜுலை மாதத்தில் உலுந்தி என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் வெற்றி பெற்ருர். பின்பு

உல்ஸ்லியின் விஜயமும், கெட்டவேயோவைச் சிறைப்படுத்தவும் ஜுலு பிரச்சினையைத் தீர்ப்பதற்குக் காரணங்களாக அமைந்தன. ஆனால், பீக்கன்ஸ்ஃபீல்ட் அரசாங்கத்திற்கு இது காலங்கடந்து வந்த வெற்றியாகும். ஏனெனில், இஸந்தல்வானாவில் ஏற்பட்ட படுகொலையைப்போலவே காபூலில் மற்றொரு நிகழ்ச்சி ஏற்பட்டது. வெற்றியில்லாத இந்த இரண்டு போர்களின் பின்னணியில் 1880 ஆவது ஆண்டு தொடங்கியது.

பல்கேரியன், சைப்ரஸ் ஆகிய பகுதிகளில் ஏற்பட்ட பல கொடுமைகளைப் பின்னணியில் வைத்துக்கொண்டு, கிளாட்ஸ்டன் தமது பிரசாரத்தை மிட்லோதியனில் ஆரம்பித்தார். இந்தக் கொடிய நிகழ்ச்சிகள் மட்டுமல்லாது, பல்கர்கள், ஆப்கானியர், போயர், ஜுலுக்கள் ஆகியோர் அனைவரும் டோரி பிற்போக்கு வாதிகளால் மிகவும் தொல்லைகளுக்குள்ளானார்கள் என்று மிகவும் மனம் உருகும்படியான சொற்பொழிவை கிளாட்ஸ்டன் ஆற்றினார். பல ஆயிரக்கணக்கான மக்களின் மனத்தில், இந்தத் தேர்தலின் மனித இனத்தில் முழு நலன்களும் பின்னப்பட்டிருக்கின்றதெனக் கருதினர். இந்தப் பொதுநல அக்கறை, நிலைமையை மாற்றி அமைத்தது. இத்துடன் பொருளாதார மந்தநிலை, அயர்லாந்தில் நிகழ்ந்த பல குற்றங்கள், காமன்ஸ் சபையில் பார்னெல் கோஷ்டியினரின் முட்டுக்கட்டை ஆகிய நிகழ்ச்சிகளும் சேர்ந்தன. இந்தப் பார்னெல் கோஷ்டியின் இயக்கத்தைப் போலவே, பர்மிங்ஹாமில் பெரியதோர் இயக்கத்தைச் சேம்பர்லேன் ஆரம்பித்து வைத்தார். இந்த இயக்கத்திற்கு 'நேஷனல் லிபரல் பெடரேஷன்' (National Liberal Federation) என்பது பெயராகும். இந்தச் சுய ஆட்சி இயக்கம் அழிவைத் தேடித்தரும் என்று பீக்கன்ஸ்ஃபீல்ட் மக்களிடம் எடுத்துக்கூறி, பாராளுமன்றத்தை 1880 மார்ச்சில் கலைத்தார். இந்தப் பொதுத் தேர்தலில் லிபரல் கட்சியினர், கன்சர்வேடிவ் கட்சியினரை விட 100 இடங்களை அதிகமாகப் பிடித்தனர். அயர்லாந்திலிருந்து 60 'ஹோம்ரூல்' (Home Rule) கட்சியினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். விக்குகள், ரேடிகல்கள், ஐரிஷ் அங்கத்தினர் ஆகிய பல வேறுபட்ட பிரிவினர் சேர்ந்த 'இந்த மானங்கெட்ட கலப்பட ஒற்றுமை' நீண்ட காலம் நிற்காது என்று அரசியார் கருதினார். அதனால் அரசியார், ஹார்டிங்டனையும், கிரென்வில்லையும் அழைத்து அரசாங்கத்தை அமைக்கச் சொன்னார். ஆனால், அவர்களே, அரசியாரிடம், கிளாட்ஸ்டனை அரசாங்கம் அமைக்குமாறு கேட்டுக் கொள்ளும்படி ஆலோசனை கூறினார்கள். அதற்குப் பிறகு, மக்கள் தங்களுடைய வாக்களிப்பின்போது அறிவித்த விருப்பத்தின்படி கிளாட்ஸ்டனையே அழைத்து அரசியார் அரசாங்கத்தை அமைக்கச் சொன்னார்.

1881 ஏப்ரலில் டிஸ்ரேலி இறந்தார். ஆனால், அவர் புகழ் நீடித்து நின்றது. அவருடைய கடைசி அரசாங்கம் அமைந்த பொழுது, அவருடைய உடல்நிலை மிகவும் சீர்குலைந்திருந்தது. அவர் புரிந்த சாதனைகள், அல்லது அவர் நினைத்த கருத்துகள் அவர் இறந்தபிறகு ஏறக்குறைய கால் நூற்றாண்டுக் காலம் வரையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுடன் ஒப்பட்டுப் பார்த்தால், சரியாகப் புரிந்துகொள்ளமுடியும். எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் இங்கிலாந்தைப் பலம் மிக்க, ஒற்றுமை மிக்க, பெரிய நாடாக்க முயன்றதுதான் அவருடைய பெரிய சாதனை என்று ஸாலிஸ்பரி (Salisbury) கூறுகிறார். இந்த முடிவை நோக்கியே அவர் மக்களின் உணர்ச்சிகளையும் உண்மைச் சக்திகளையும் கொழுந்து விட்டெறியச்செய்து, ஜனநாயக நாட்டில் பழமைக் கும் இடமுண்டு என்பதை எடுத்துக் காட்டினார்.

## சமகால நிகழ்ச்சிகள்

1875 ஃபிரான்சில் அரசியல் அமைப்பைச் செம்மைப்படுத்தல்.
டிஸ்ஸா (Tisza) ஹங்கேரியின் பிரதமராதல்.
போஸ்னியாவின் கிளர்ச்சி.

1876 1908 வரையில், அப்துல் ஹமீது-II துருக்கியில் ஆட்சி செய்தல்.
கிரஹாம் பெல் தொலைபேசியைக் கண்டுபிடித்தல்.

1877 ரஷ்யர்கள், பிளவ்னு, கார்ஸ் ஆகிய பகுதிகளைக் கைப் பற்றல்.
மெக்ஸிக்கோவில், டையாஸ் ஜனாதிபதியாதல்.

1878 பெர்லின் மகா சபை.
லியோ XIII போப்பாதல் (—1903).
இர்விங்குடன் எல்லன் டெர்ரி நடித்தல்.

1879 இளவரசன் இம்பீரியலின் மரணம்.
ஆஸ்திரியா-ஜெர்மனி உடன்பாடு.
ஹென்றி ஜார்ஜ் எழுதிய 'முன்னேற்றமும் வறுமையும்' (Progress and Poverty).
டிரெயிட்ஸ்கி (Treitschke) எழுதிய 'ஜெர்மன் வரலாறு'.
இப்ஸென் எழுதிய 'பொம்மை வீடு' (A Doll's House).

1880 அப்துர் ரஹ்மான் ஆப்கானிஸ்தானத்தின் அமீராதல்.
ஃபிளாபர்ட் (Flaubert), ஜார்ஜ் எலியட் ஆகியோரின் மரணம்,

# 6. பேரரசு, 1850-1880

பிரைட் (Bright), கிளாட்ஸ்டன் ஆகியோர் இறப்பதற்குச் சற்று முன்பே, பேரரசின் அளவும் தன்மையும் மிகவும் மாறி விட்டன. அதற்குப் பிறகு பேரரசில் ஏற்பட்ட மாறுதல்கள், அவர்களுடைய திட்டங்களுக்கெல்லாம் அப்பால் சென்று விட்டன. இதனால், இனிமேல் லிபரலிசமும் ஜனநாயகமும் எவ்வாறு பேரரசில் உள்ள மக்களின் தேவைகளை நியாயமாக அளிக்கமுடியும் என்ற ஐயம் ஆங்கிலேய மக்களுக்கு ஏற் பட்டது.

பேரரசு விரிவடைவதை அப்பொழுது ஆட்சி செய்தவர்கள் விரும்பவே இல்லை. தென் ஆப்பிரிக்காவில், அவர்கள் மிகவும் தயங்கியே நிலப்பகுதிகளை ஆக்கிரமித்தனர். இந்திய எல்லை களுக்கு அப்பால், அவர்களுடைய நிலப்பரப்பு விரிவடைவதை, அரசாங்கம் மிகவும் கண்டித்தது. இவ்வாறே, கிரீஸ் நாட்டிற்கு 1864-ல் ஐயோனியன் தீவுகளைத் தந்துவிட்டார்கள். நியூ கினி யாவைக் கைப்பற்றவேண்டுமென்ற ஆஸ்திரேலியாவின் ஆர்வத் தைத் தடுத்து நிறுத்தினார்கள். ஜான்ஸிபார் அவர்கள் கையில் கிடைப்பதற்கரிய நல்ல வாய்ப்பையும் வேண்டாமென்று இழந்து விட்டார்கள்.

பேரரசு விரிவடையக் கூடாதென்ற கொள்கையைப் பின் பற்றியுங்கூட, இந்த முப்பது ஆண்டுகளில் ஆங்கிலேயரின் பேரரசு விரிவடையத்தான் செய்தது.

பேரரசிற்கு இப்பொழுது கிழக்கத்தியத் தன்மையும், கிழக்கு நாடுகளான எகிப்து, கேப்டவுன், இலங்கை ஆகிய இடங்களில் முக்கியத்துவம் அளிப்பதையும் காணலாம். எகிப்து நமது பேரரசின் நடுமையமாக இருக்கிறது என்று ஆங்கிலேய அர சாங்கம் கருதிய பின்பு, சைப்ரஸ் பகுதியை அவர்கள் கைப் பற்றினர். சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டதால்தான் எகிப்தில்

அவர்களுடைய அக்கறை வளர்ந்தது எனலாம். சூயஸ் கால்வாய் பெரும்பாலும் ஃபிரான்ஸின் ஆதிக்கத்திற்குட்பட்டு இருப்பது, அவர்களுக்கு வேறு அச்சத்தைக் கொடுத்தது. இதனால், எகிப்திலேயே பிரிட்டனின் ஆதிக்கம் உருவாகும் சூழ்நிலையை உருவாக்கிக்கொண்டார்கள். 1857-ல் அவர்கள் பெரிம் (Perim) பகுதியைக் கைப்பற்றினர். ஏடனுக்குப் பக்கத்திலுள்ள கடலாதிக்கத்திற்கு வசதியாக இருந்தது. 1840 முதல் செய்த இந்தியப் போர்களில் பிரிட்டிஷ் இந்திய ஆட்சி முழுவளர்ச்சி அடைந்து விட்டது. சீக்கியர்களும் சிந்து அரசர்களும் அவர்களுடைய ஆட்சியை ஏற்றுக்கொண்டனர். ரஷ்யாவின்மீதிருந்த பயமும், கம்பெனியின் வியாபார உரிமை ரத்தானதும், அவர்களுக்குப் பேரரசு விரிவடையச் செய்தால்தான் இப் பகுதிகளில் பாதுகாப்புடன் வர்த்தகம் செய்யமுடியும் என்ற எண்ணம் எழுந்தது. எடுத்துக்காட்டாக, 1852-ல் டல்ஹவுஸி பர்மியர்களின் கொட்டத்தை அடக்கிப் பெகு (Pegu) மாகாணத்தை இணைத்துக் கொண்டார். பாரசீகம், ஆப்கானிஸ்தானத்தைத் தாக்க முயன்றபொழுது, 1856-ல் அவுட்ராம் (Outram) என்பவர் வளைகுடா வரையிலும் படைகளை அழைத்துச்சென்றார். பம்பாயிலிருந்த அரசனாகிலும் சரி, அல்லது பஞ்சாப்பில் இருந்த அரசனாகிலும் சரி, முஸ்லிம் ஆதிக்கம் ஏற்படுவதைக் கண்டு பயந்தனர். வளைகுடாவில் உள்ள மஸ்காட்டில் ஆட்சி செய்கின்ற அரச பரம்பரையின் உறவினரே ஜான்ஸிபாரையும் ஆட்சி செய்தார்கள். கிழக்கு ஆஃப்பிரிக்காவில் பல அரேபியர் குடியேறினர். அதனால், பாரசீகத்திலிருந்தும் அரேபியாவிலிருந்தும் அப் பகுதிகளில் வர்த்தகம் பெருகியது.

ஆஸ்திரேலியாவில் குடியேறுவதற்கு முன்னரே, கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனி நம்மைப் பஸிஃபிக்கின் வல்லரசாக்கிவிட்டது. சீனர்களுடனும் வர்த்தகம் செய்யத்தொடங்கியதால் சீனாவிற்குச் செல்லும் வழியிலும் சீனாவிலும் அவர்களுக்கு நல்ல வசதிகளைச் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சீனாவிற்குச் செல்லும் வழி முழுவதும் கடற்கொள்ளை மிகவும் அதிகமாக இருந்தது. அதனால், கடற்கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பிப் பாதுகாப்பாக வர்த்தகம் செய்வதற்கும், மற்றும் நல்ல துறைமுகங்களைத் தேடிக்கொள்வதிலும் அக்கறை பிறந்தது. இந்த வர்த்தகத்தில், டச்சுக்காரர்களின் போட்டியும் மிக அதிகமாக இருந்தது. ஏனெனில், புரட்சி சமயத்தில், ஹாலந்து ஃபிரான்ஸின் பிடியில் இருந்தது. இந்தப் பகையினால், அவர்கள் 1786-ல் பினாங்கு (Penang), 1824-ல் மலாக்கா (Malacca) ஆகிய பகுதிகளைக் கைப்பற்றினர். மலாக்கா, மலேய் தீபகற்பத்தில் இருக்

கிறது. சமாதானம் ஏற்படும் வரையில், ஸ்டாம்ஃபோர்ட் ரேஃபிள்ஸ் (Stamford Raffles) என்பவர் அங்கே ஆட்சி செய்து வந்தார். சமாதானம் ஏற்பட்ட பிறகு, அப் பகுதியை ஹாலந்திற்குத் திருப்பி அளித்துவிட்டார். இந்தச் சமயத்தில் அவர் அப்பொழுது குடியேருதிருந்த சிங்கப்பூர் தீவைக் கைப்பற்றுமாறு கம்பெனியைத் தூண்டினர். நாற்பது வயது கடந்தபிறகு, அவர் இறந்துவிட்டார். ஆனால், சிங்கப்பூர் ஒரு காலத்தில் கிழக்கு மால்ட்டாவாக மாறப்போகிறது என்று அவர் சொன்னது பலித்துவிட்டது. கிழக்குத் தீவுகளிலும் மலாக்கா ஜலசந்தியிலும், கட்டுப்பாடற்ற வாணிகம் நடத்தவும் போக்குவரத்து வசதியும் இருந்ததால், சிங்கப்பூர் மீன் பிடிக்கின்ற ஒரு சிறிய துறைமுகமாகவும் இருந்தது. கம்பெனி ஆட்சி முடியும் பொழுது இலட்சக்கணக்கான மக்கள் குடியிருக்கும் பெரிய துறைமுக நகரமாக அது மாறிவிட்டது. 1867-ல் அது கிரவுன் காலனியாக மாறுகின்ற அறிகுறி தென்பட்டது. ஜலசந்தியிலும் மக்கள் குடியேறினர். 1870-ல் மலேயா நாடுகள் சுதந்திரமாக இயங்கியபோதிலும், ஆங்கிலேயரின் பாதுகாப்பை அவை நாடின.

பஸிஃபிக் கடலில், மற்ருெரு தீவிலும் ஆங்கிலேயரின் ஆதிக்கம் பரவியது. ஜேம்ஸ் புரூக் என்ற ஆங்கிலேயர் இதற்குக் காரணமாக இருந்தார். அவர் ஏற்கெனவே கம்பெனியின் ஓர் அதிகாரியாக இருந்தவர். அவர் 140 டன் எடையுள்ள ஒரு சிறிய கப்பலில் போர்னியோவுக்குச் சென்ருர். அவரிடம், படை பலம் ஒன்றுமில்லை; அவருடைய நல்லகுணம்மட்டுமே இருந்தது. அங்குள்ள சுல்தானின் தயவினுல், அவர் ஸாரவாக் பகுதியின் அரசனுகிவிட்டார். இந்தப் பகுதி போர்னியோவின் வடமேற்கு மூலையில் இருந்தது. அங்கேயுள்ள கடற் கொள்ளைக்காரர்களையும் மனிதர்களை வேட்டையாடுகின்றவர்களையும், நீண்ட காலப் போராட்டத்திற்குப் பிறகு அடக்கி, அங்கே சுதந்திரமான நாட்டை நிலைநிறுத்தினர். சிங்கப்பூர், ஆஸ்திரேலியாவுக்கு இடையேயுள்ள கடல் பகுதியில், ஆங்கிலேயர்கள் இதற்குமேல் செல்ல விரும்பவில்லை. ஃபிரான்ஸுக்காரர், தாஹிதி (Tahiti), நியூ கேலிடோனியா (New Caledonia) ஆகிய பகுதிகளைக் கைப்பற்றுமாறு விட்டுவிட்டனர். குவீன்ஸ்லாந்து (Queensland) தோட்டப் பண்ணைகளுக்கு இத் தீவுகளிலிருந்து சுதேச மக்களை அழைத்துப் போய்க் கொடுமை செய்வதை நிறுத்துவதற்காக, ஃபிஜி (Fiji) தீவைக் கைப்பற்றினர்.

இந்தியாவுக்கும் சீனுவுக்கும் நடைபெற்ற வர்த்தகம் காரணமாகப் பஸிஃபிக் கடலிலுள்ள பல தீவுகளைக் கைப்பற்றி அங்கே

குடியேறினார்கள். இந்தியாவுக்கு வரும் வழியில், ஒரு தங்குமிடம் தேவைப்பட்டதால், கேப் பகுதியில் குடியேறவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதுமட்டுமன்றி, ஆப்பிரிக்காவில் ஒரு வல்லரசாகவும் ஆகிவிட்டது. முதலில் கேப் பகுதியில் குடியேறிய தற்குப் பிறகு, சிறிதும் தொடர்பின்றியே பல காரணங்களால், அங்கே ஆங்கிலேய ஆதிக்கம் நிலைபெற்றது. இதற்கு முன்பு, இந்தியாவில் அவர்களுக்குப் பல அனுபவங்கள் ஏற்பட்டிருக் கின்றன. நிலையற்ற பேரரசுகளும், சந்தேகப்படுகின்ற நாடுகளும் அநாகரிக முறையில் நிகழ்ந்த போர்களும் நிறைந்த சூழ்நிலையில் அவர்கள் வர்த்தகம் செய்யவேண்டியிருந்தது. இரு கரைகளிலும் நிலைபெற்றிருந்த போர்ச்சுகீசிய ஆதிக்கம் சீரழிந்துவிட்டது. ஐரோப்பிய இனத்திடையே பல பிரிவுகள் இருந்தன. அஸந்தி (Ashanti) போன்ற சுதேச நாடுகளில் காட்டுமிராண்டித்தனம் மட்டுமே காணப்பட்டது. சஹாராவிலிருந்து, சோமாலி லாந்து வரையிலும், அராபியர், நீக்ரோக்கள் ஆகியோரின் கொடுங்கோன்மை ஆட்சி நீடித்திருந்தது. இப் பகுதிகளில் காணப்படும் நிலையைப்பற்றி ஆங்கிலேயர்கள் ஒன்றுமே அறிய மாட்டார்கள். அங்கே, மனிதவேட்டை, நோய், போர் ஆகிய கொடிய நிகழ்ச்சிகள் பரவியிருந்தன என்பதைத்தான் அவர்கள் அறிவார்கள்.

இந்தக் குழப்பமிக்க சூழ்நிலையிலும், ஆங்கிலேய வர்த்தகக் கிடங்குகள் காம்பியா (Gambia) நதிக்கு மேற்கிலும் கோல்ட் கோஸ்டுக்கு இடையிலும் அமைக்கப்பட்டன. இந்தக் கிடங்குகள் ஸ்டூவர்டுகள் காலத்திலிருந்தும், ஆப்பிரிக்க வர்த்தகக் கம்பெனி களின் காலத்திலிருந்துமே நீடித்து வருகின்றன. ஆனால், அந்த வர்த்தகக் கம்பெனிகளின் உரிமைகள் பறிபோய்விட்டன. 1821-ல், பாராளுமன்றம், அங்கே நீடித்திருந்த கடைசி வர்த்தகக் கம்பெனியையும் மூடிவிட உத்தரவிட்டது. பல முறை அப் பகுதிகளிலிருந்து வெளியேற முயற்சிகள் நடந்தன. ஆனால், அங்கேயே நீடித்திருப்பதற்கு இரண்டு முக்கியமான காரணங்கள் இருந்தன. அங்கேயுள்ள ஆங்கிலேய வர்த்தகர்கள் அவ்விடங் களிலிருந்து வெளியேற விரும்பவில்லை. மேலும், அடிமை முறையை ஒழிக்கவேண்டுமென்ற நல்ல எண்ணமுமிருந்தது. இதை நிறைவேற்றுவதற்காக 'செயின்டுகள்' (Saints) ஒரு கம்பெனியை நிறுவினார்கள். 1787-ல் அவர்கள் ஸியெரா லியோன் (Sierra Leone) என்ற பகுதியில் குடியேறினர். 1808-ல் அப் பகுதி 'கிரவுன் காலனி'யாக்கப்பட்டது. இன்னும் ஒரு தலைமுறைக்கு அரசாங்கத்தினால் அங்கே எதையும் செய்யமுடியாத நிலை ஏற்பட் டது. அங்கே அரசாங்கம் எவ்விதப் பொறுப்பையும் ஏற்றுக்

கொள்ளவோ, அல்லது செலவு செய்யவோ முடியாமல் இருந்தது. சமயப் பிரசாரகர்கள், அடிமை முறையை ஒழிக்க முயன்றனர். ஆனால் ஆஃப்பிரிக்காவில், இந்தப் பிரசாரத்திற்கு நல்ல வரவேற்பு இல்லை. அடிமைகளை ஏற்காமல் அங்கிருந்து கப்பல்கள் சென்றால், ஆயிரக்கணக்கான மைல்களுக்குப் பிரயாணம் செய்யும் இக் கப்பல்களின் செலவிற்கும் கட்டாமல் போய்விடுகின்றது. உண்மையில் அடிமை ஒழிப்புமுறைப் பிரசாரம் இருந்துங்கூட, 1837-ல் அட்லான்டிக் கடலில் செல்லும் கப்பல்களில் அனுப்பப்பட்ட அடிமைகளின் தொகை, முப்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைவிட மூன்று மடங்கு அதிகமாகவே இருந்தது என்று வில்பர் ஃபோர்சுக்குப் பின் பணியாற்றிய ஃபவுல் பக்ஸ்டன் (Fowell Buxton) எடுத்துரைத்துள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும். நமது கப்பல்கள் செல்வதற்கும் துறைமுகங்களில் நிற்பதற்கும் நிறைய பாதுகாப்புத் தேவைப்பட்டது. கொள்ளைக்காரர்களைப் பிடிப்பதற்கும் மற்றும் பல காரியங்களுக்காகவும், சுதேச மன்னர்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளவேண்டியிருந்தது. அதனால், இந்தக் கொடிய அனுபவங்களைத் தவிர்ப்பதற்கும், அவர்கள் ஒழுங்காக வியாபாரம் செய்ய வேண்டுமென்று சமயப் பிரசாரகர்கள் கருதினர். இத்துடன் அவர்களுக்கு மான உணர்ச்சியும் ஏற்பட்டது. அஸந்தி இனத்தைச் சார்ந்தவர்கள் கோல்ட் கோஸ்ட் கவர்னரைக் கொன்றுவிட்டார்கள். அவருடைய மண்டை ஓட்டை எடுத்துக் கிண்ணமாக அவர்களுடைய அரசர் பயன்படுத்தினர். பனை எண்ணெய், பருத்தி ஆகிய பொருள்களில் வர்த்தகத்தை வளர்ச்சி அடையச் செய்யத் தூது கோஷ்டியினர் பணியாற்றினர். இவர்களுக்குப் போட்டியாக ஃபிரெஞ்சுக்காரர்களும் அங்கே தோன்றினர். இப்படிப் பல தொல்லைகளையும் தடைகளையும் கடந்து, அந்தப் பகுதிகளிலுள்ள பழக்கவழக்கங்களையும் தெரியமுடியாது, நமது ஆட்சி மெதுவாக விரிவடைந்தது. 1850-ல் டேனியக் குடியேற்றப் பகுதிகளும், 1872-ல் டச்சுப் பகுதிகளும் வாங்கப்பட்டன. 1861-ல் நாம் லாகோஸ் பகுதியை இணைத்துக்கொண்டோம். இதனால், தஹோமி (Dahomey), நைஜீரியா (Nigeria) ஆகிய பகுதிகளில் நடைபெறும் அடிமை வர்த்தகத்தைத் தடுக்கமுடிந்தது. பத்து ஆண்டுகள் அவமானப்பட்டதற்குப் பிறகு, ஆங்கிலேய அரசாங்கம் 1874-ல் கார்னட் வுல்ஸிலி (Garnet Wolseley) என்பவரின் தலைமையில் ஒரு படையை அனுப்பிவைத்துக் கொலைகார அஸந்திகளைக் குமாஸிக்கு (Kumasi) விரட்டிவிட்டது.

இவ் விவகாரங்களையெல்லாம், அப்பொழுதுள்ள விக்டோரியா காலத்து மக்கள் புரிந்துகொள்ளவில்லை. ஆஃப்பிரிக்காவை

ஓர் இருண்ட கண்டம் என்றும், லிவிஸ்டனின் சாதனையைப் பற்றியும்தான் அவர்கள் அறிந்திருந்தனர். புது நிலங்களைக் கண்டு பிடிக்கும் நமது ஆராய்ச்சி சிறிது காலத்திற்கு முன்பே ஆரம்பிக்கப்பட்டது. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. கேப்டன் குக் என்பவரிடம் சிலர் சேர்ந்து ஸெல்கிர்க்கில் உள்ள மங்கோ பார்க்கிற்குப் பிரயாணம் செய்தனர். 1805-ல் அவர் கடைசியாக எழுதிய கடிதத்தில் நைகர் நதியின் கடைசி முடிவைக் கண்டுபிடிக்கவேண்டும்; இல்லையெனில் அழிய வேண்டும் என்று எழுதினர். உண்மையில், அவர் நைகர் நதி வெள்ளத்தில் மூழ்கி அழிந்தேபோனுர். மற்றவர்கள் பாலைவனத்தில் அழிந்தார்கள். இதைப்போலவே அவர் நைல் நதியின் உற்பத்தி இடத்தைக் கண்டுபிடிக்க, பல நாடுகளிலிருந்தும் ஆராய்சியாளர் வடக்கிலிருந்து கிளம்பினர். ஆங்கிலேய ஆராய்ச்சியாளர் மற்ருெருபுறத்திலிருந்து இந்த நைல் நதியின் உற்பத்தியைக் கண்டுபிடிக்க முயன்றனர். 1857–58-ல், ரிச்சர்ட் பர்ட்டனும், இந்தியப் படையைச் சேர்ந்த ஸ்பீக் என்பவரும் தங்கனீகா ஏரியைக் கண்டு பிடித்தனர். ஸ்பீக் விக்டோரியா நையான்ஸாவை அடைந்தார். 1862–63-ல் அவரும், கிரான்டும் யுகாண்டாவுக்குள் நுழைந்தனர். விக்டோரியா நையான்ஸாவிலிருந்து நைல் செல்லும் வழியை ஆராய்ந்தனர். ரிப்பன் அருவியிலிருந்து, ஆல்பர்ட் நையான்ஸா வழியாகச் சென்ருர். பின்பு சூடானிலிருந்து வந்த ஸாமுவெல் பேக்கருடன் சேர்ந்து கொண்டார். ஆனுல், ஸ்பீக்கைவிட, லிவிங்ஸ்டனே இந்த முயற்சியை முதலில் ஆரம்பித்தார். ஆனுல், ஸ்பீக்கைவிட இவருடைய புகழ் நீடித்திருந்தது. ஆங்கிலேயரின் பெரிய அரசியல் வெற்றிக்கு லிவிங்ஸ்டன் காரணமாக இருந்தார்.

இந்த லங்காஷயர் நெசவாளர், வீரத்தில் டிரேக்கைப் போலவும், நிக்கல்ஸனைப் போலவும் சிறந்தவர். அக் காலத்தில் சிறந்த பண்பாட்டிற்கு அவர் ஓர் எடுத்துக்காட்டாக இருந்தார். அவர் தொழிற்சாலையில் வேலை செய்த நேரத்தைத் தவிர, ஒழிந்த நேரத்தில் படித்து மருத்துவப் பட்டத்தையும் பெற்ருர். அவர், பின்பு லண்டன் பிரசாரக் கழகத்தில் சேர்ந்து பெச்சுவானுலாந்துக்குச் சென்ருர். அங்கே, மிகச் சிறந்த தலைவரான ராபர்ட் மொஃபட் (Robert Moffat) என்பவரிடம் பணியாற்றினுர். அங்கேயிருந்து கால்நடையாகவே பல இடங்களுக்குச் சென்று, அங்குள்ள நாட்டு மக்களுடன் பழகினுர். அவர்களுடைய மொழிகளைக் கற்றுக்கொண்டார். மேலும், அவர் தன்னந்தனியாக வேலை செய்வதற்குத் தேவையான சில தொழில்களையும், தச்சு வேலை, வான நூல் ஆராய்ச்சி, நில நூல் ஆராய்ச்சி ஆகியவற்றையெல்லாம் படித்துக்கொண்டார்.

இந்தப் புதிய இடத்தில், அவர் தனியாகவே நின்று பணி யாற்றினர். 1852–56-ல் அவருடைய முதல் ஆராய்ச்சிப் பிரயாணத்தைத் தொடங்கினர். ஸாம்பேஸி மலையைக்கடந்து காங்கோ பாயும் பகுதியில் இறங்கினர். அங்கிருந்து போர்ச்சுக் கீசிய அங்கோலாவின் மேற்குக் கரையோரம் வந்தார். மீண்டும் ஸாம்பேஸியில் இறங்கி, வழியில் விக்டோரியா நீர் வீழ்ச்சியைக் கண்டு பிடித்தார். சிப்பாய்க் கலகம் நடந்த இந்த ஆண்டில், இவரை, நாடு மிகவும் பாராட்டியது. 1858-ல் அரசாங்க உதவி யைப் பெற்றே ஐந்து ஆண்டுகள் நீடிக்கின்ற பிரயாணத்தைத் தொடர்ந்தார். அப்பொழுதுதான், அவர் ஷையர் மலைப்பகுதி, முர்ச்சிஸன் நீர்வீழ்ச்சி, நையாஸா ஏரி ஆகியவற்றைக் கண்டு பிடித்தார்.

1866–73-ல் மேற்கொண்ட பிரயாணத்தின்போது, நைல், காங்கோ நதிகளை நோக்கிப் பாய்கின்ற சில அருவிகளின் மறை வான இயல்புகளைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யும்பொழுது அவர் இறந்துவிட்டார்.

மற்ற எந்த ஐரோப்பிய மனிதனுடைய உதவியுமின்றித் தன்னந்தனியனுகப் பணியாற்றிய இவர், பயமென்பதையே அறியாதவர்; எல்லாத் தொல்லைகளையும் பொறுமையாகப் பொறுத்துக்கொண்டவர். பல சடங்குகளைப் பின்பற்றும் கிறித்துவனுக இல்லாது, மக்களுடைய வாழ்க்கையை உயர்த்து வதிலேயே கண்ணுங் கருத்துமுடையவராக இருந்தார். இதுவே விக்டோரியா காலத்தின் சிறந்த பண்பாடாகும். அவருடைய ஒவ்வொரு நூலிலும், அந்த நூல்களிலுள்ள ஒவ்வொரு பக்கத் திலும், மற்றும் அவருடைய எல்லாச் சொற்பொழிவுகளிலும் அடிமை முறையை மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கிறர். அராபியரும், போர்ச்சுக்கீசியருக்குப் பிறந்த அறைகுறை ஜாதி யினரும், மத்திய ஆஃப்பிரிக்காவிற்குள் சென்று, அங்குள்ள சுதேச மக்களைச் சங்கிலியிட்டு வரிசைவரிசையாக அழைத்துச் செல்வதும், அங்கே அவர்கள் புரிந்த கொடுமைகளும், கொலைகளும், வழி நெடுகக் காணப்படும் மனித எலும்புக் கூடுகளும் அப் பகுதியை நரகமாக்கிவிட்டன. அந்தப் பகுதியில் எங்கு நோக்கினுலும், அழிவும், சாவும், காமமும் தலைவிரித்தாடின. விஷ ஈக்கள், காய்ச்சல் குஷ்டம் ஆகிய நோய்கள் மலிந்திருந்தன. இந்தக் கொடிய சூழ்நிலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றி, அவர்களுக்கு அமைதியைத் தருவதே வெள்ளை மனிதரின் உண்மையான கடமை என்று உணர்ந்து அவர் பணியாற்றினர். அவ்விதத் தூய்மையான பணியைத் தொடங்கிய பிறகு அதை நிறுத்துவதென்பது முடியாத காரியமாகும்.

இவர் அங்கே பல்கலைக்கழக நல்லெண்ண இயக்கத்தை ஆரம்பித்து வைத்தார். அவரிடம் பயிற்சி பெற்றவர்களில் ஜான் கிர்க் (John Kirk) என்பவர் மிகவும் திறமையானவர். ஜான்ஸிபாரில், அவர் கான்சல்-ஜெனரலாகப் பணியாற்றினர். அவர் அங்கே மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தார். அவரால், ஆங்கிலேயரின் வர்த்தகம் அங்கே வளர்ச்சி அடைந்தது. அவர் செய்த நல்ல காரியங்களை, விரிவடைகின்ற பேரரசு ஒருபோதும் மறக்க முடியாது. உண்மையில் அவர் செய்த காரியங்கள் பேரரசு அங்கே விரிவடைவதற்குக் காரணமாக அமைந்தன.

அரைகுறையாகவும், மிகவும் கண்டனத்துக்குட்பட்டும், எதிர்பாராதவிதத்தில் பேரரசு அங்கே அமைவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. இந்தத் துவக்கத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு சீர்திருத்த மனப்பான்மைகொண்ட பிரிட்டன், அங்கே குடியேறிய ஆங்கிலேய மக்களுக்குப் பல வசதிகளைச் செய்து தரலானுர்கள். அங்கே குடியேறிய மக்கள் மிகவும் முக்கியமான, செல்வாக்குப் பெற்ற சமுதாயத்தினராகிவிட்டனர். சுமார் $3\frac{1}{2}$ அல்லது 4 மில்லியன் கனடியர்கள், 30 மில்லியன் பவுன்கள் மதிப்பிடக்கூடிய பொருள்களை 1880-ல் இங்கே ஏற்றுமதி செய்தனர். ஆஸ்திரலேஷியா சுமார் 8 மில்லியன் டன் எடையுள்ள பொருள்களை ஏற்றுமதி இறக்குமதி செய்தது. மில்லியன் கணக்கில் ஆங்கிலேயரின் பணம் அவர்களுக்குச் சென்றது. சிறிய நாடுகளுக்கும் பெரிய நாடுகளுக்கும், ஆங்கிலேய அரசாங்கம் பொறுப்பான ஆட்சியைத் தாராளமாக அளித்தது. தென் ஆஸ்திரேலியா, நியூஸீலாந்து, டாஸ்மேனியா, நியூ ஃபவுண்ட்லாந்து ஆகிய நாடுகளுக்குப் பொறுப்பான ஆட்சி 1850-ல் கொடுக்கப்பட்டது. அவர்களுடைய அரசியல் அமைப்புகளில் அவர்களே திருத்தங்களைக் கொண்டுவரும் அதிகாரத்தை அளித்தது. கனடாவின் சட்டசபையைத் தேர்ந்தெடுக்கும் முறைக்குள்ளாக்கியது. ஒவ்வோர் ஆஸ்திரேலியக் காலனிக்கும், வயது வந்த எல்லாருக்கும் வாக்குரிமை அளித்தது. மேலும், மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல்களையும் வைத்துக் கொள்ள முடிவு செய்தது.

1859-ல் கனடா மற்ற ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலுள்ள் காலனிகளுக்கு ஒரு முன்மாதிரியாக, சுய-ஆட்சி என்பது இங்கிலாந்துக்கும் எதிராக, காப்புத் தீர்வைகளை நிர்ணயம் செய்யும் உரிமை இருக்கிறதென்பதை உணர்த்தியது. ஆஸ்திரேலியா கலால் சட்டம் ஒன்று 1873-ல் நிறைவேறியது. அந்தச் சட்டத்தின்படி, கிளாட்ஸ்டன் மிகவும் தயக்கத்துடன் ஆஸ்திரேலியாவிலிருந்து வரும் பொருள்களுக்குத் தனிச் சலுகைகள்

தரவேண்டுமென்பதை ஆங்கிலேய அரசாங்கம் ஒப்புக் கொண்டது. சமய வழிபாடுகளிலுங்கூட, அவர்களுக்கு முழுச் சுதந்திரம் காணப்பட்டது. ஆங்கிலிகன் சமயப் பிரிவுக்குத் தரப்பட்டிருந்த தனிச் சலுகைகளெல்லாம் ரத்துச் செய்யப் பட்டன. அவர்களுடைய நிதிபற்றிய விவகாரங்களும் ஒழுங்கு செய்யப்பட்டன. மேற்கு இந்தியத் தீவுகளில் ஆங்கிலிகன் திருச்சபை கலைக்கப்பட்டது. பிட் காலத்துத் தலைமுறையினர் எது தேவை என்று கருதியிருந்தனரோ, அல்லது டர்ஹாம் மற்றும் அவரைச் சார்ந்தவர்கள் என்ன தடைகள் விதிக்க வேண்டுமென்று விரும்பினரோ, அவைகளெல்லாம் ரத்துச் செய்யப்பட்டன.

அதனால் காலனிகளில் அரசியாரின் அதிகாரங்கள், அவருடைய பிரதிநிதிகளான கவர்னர்கள், ஆங்கிலேயச் சட்டம், அதனால் ஏற்படுகின்ற கட்டுப்பாடான நிலை, மற்றும் அக் காலனிகளைப் பாதுகாக்கும் பேரரசின் பொறுப்பு ஆகியவையே எஞ்சியிருந்தன. அரசியார் இங்கிலாந்தில் எப்படி எல்லாக் கட்சிகளிடத்திலும் பாரபட்சம் காட்டாது நடுநிலையை வகிக்கிறாரோ, அதைப்போன்று காலனிகளில், கவர்னர்கள் நடந்து கொள்ளவேண்டும் என்ற கருத்து நடைமுறையில் பின்பற்றப் பட்டது. மேலும், ஏதாவது ஒரு கட்சியால் அரசியல் அமைப்புக்கு எதிரான நடவடிக்கைகள் எடுக்கும் சமயத்தில், கவர்னர் அவைகளைத் தடுக்கவேண்டும். இவ்விதமான அதிகாரம் அவர்களிடம் இருந்ததால், காலனியில் உள்ளவர்கள் இந்த உரிமையைக் கண்டித்தனர். காலனி மக்களுடைய கண்டனக் குரலால், இறைமையாளரின் பிரதிநிதி கவர்னர் என்ற தகுதியில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன. 1876-ல் கவர்னரின் சில தனி உரிமைகள், மன்னிப்பு அளிக்கும் உரிமை, அரசியாரின் பார்வைக்கும் சம்மதத்திற்கும் சமர்ப்பிக்கப்படும் சில மசோதாக்களை நிர்ணயம் செய்யும் கவர்னரின் உரிமை ஆகியவற்றையெல்லாம் நீக்கிவிடும்படி கனடா வேண்டியது. 1865-ல் காலனிகள் சட்டங்கள் செல்லத்தக்கவை என்று உறுதியளிக்கும் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இந்தச் சட்டம், காலனிகளிலுள்ள பெரும்பான்மைச் சமுதாயத்தினர் எவ்வாறு வளர்ச்சி அடைந்துள்ளனர் என்பதை வரையறுத்தது. தேர்ந்தெடுக்கப்படும் சட்ட சபைகளைக் கொண்ட காலனிகள், அவைகளின் அரசியல் அமைப்பின் மீது முழு அதிகாரமுடையவை என்றும், அதைப்போன்றே அவற்றின் நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும் அதிகாரமுள்ளவை என்றும் அறிவித்தது. ஆனால், அதே சமயத்தில் காலனிகளுடைய சட்டங்கள் பேரரசின் சட்டங்களுக்கு முரண்

பட்டதாக இருக்கக்கூடாதென்றும் அறிவித்தது. சட்டப்படி, கவர்னர் ஒரு குறிப்பிட்ட காலனியின் சட்ட சபையில் இயற்றப் படுகின்ற எந்தச் சட்டத்தையும் ரத்துச் செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருந்தார். ஆனால், நடைமுறையில் அவ்வித அதிகாரத் தைக் கவர்னர் பயன்படுத்துவதில்லை. ஆனால், தவருக நீதி வழங்கிவிட்டால், அரசரிடத்தில் முறையிடலாம் என்று அது அறிவித்தது. 1833 முதல் பிரிவி கவுன்சிலின் நீதி வழங்கும் குழுவே, மேல்முறையீட்டு நீதிமன்றமாக விளங்கியது.

பேரரசின் அரசாங்கமே, அந்தக் காலனிகளின் அமைதி யையும், போரையும் நிர்ணயம் செய்யவேண்டியிருந்ததால், மற்ற நாடுகளுடன் செய்துகொள்ளும் உடன்படிக்கைகளுக்கும் பேரரசே பொறுப்பேற்றுக்கொள்ளுகிறது. எடுத்துகாட்டாக, காலனிகளுடைய காப்புத் தீர்வைகளைப் பாதிக்கும்போதும், பேரரசு அரசாங்கமே அதை முடிவு செய்கிறது. அல்லது ஆஸ்தி ரேலியாவில் நிறைய சீனர்கள் குடியேறுவதை, அந்த அரசாங்கம் ஆட்சேபித்தது. இதை முடிவு செய்வதும் ஆங்கிலேய அரசாங் கமேயாகும். இவ்விதமான விவகாரங்களை எப்படிப் பேரரசின் அரசாங்கம் முடிவு செய்கிறதென்பதற்கு எடுத்துக்காட்டாக, 1871-ல் வாஷிங்டன் உடன்படிக்கை ஏற்பட்டபொழுது, ஆங்கி லேய கோஷ்டியில், கனடாவின் பிரதம மந்திரியும் அங்கத்தின ராக இருந்து, அந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டதைக் குறிப்பிடலாம். சுதேச இனங்களைத் தருமகர்த்தா முறையின்படி, சமயப் பிரசாரகர்கள் கவனித்துக்கொண்டார்கள். நல்ல அதிகாரிகளும் இந்த எண்ணத்தை மறந்துவிடவில்லை. இந்த நல்ல நோக்கத்தால், மோரிகள் (Maoris), பசுட்டோக்கள் (Basutos), பெச்சுவானக்கள் (Bechuanas) பாதுகாக்கப்பட்டனர்.

பேரரசின் பாதுகாப்பில், ஒன்றுக்கொன்று தொடர்புடைய இந்த விவகாரங்களையெல்லாம் சரியாகக் கவனித்தனர். 1870 வரையிலும் இவ்வளவு அக்கறை ஆங்கிலேயே அரசாங்கத்திற்கு ஏற்படவில்லை. இந்தப் பேரரசு நீடிக்குமா என்ற ஐயம் வேறு ஆங்கிலேயே மக்களுக்கிருந்தது. ஆனால், நமது கடமையைப் பயன் கருதாது செய்கின்றோம் என்ற மன நிறைவும் பெருமிதமும் நம்முடைய அரசாங்கத்தைச் சிறப்புறச் செய்தது. அமெரிக்க உள் நாட்டுப் போர் நடைபெறும்பொழுது, பலமிக்க இராணுவப் படைகளை ஆங்கிலேய அரசாங்கம் அனுப்பியது. ஆனால், தீவிர வாதிகளான பிரைட், அல்லது வரலாற்று ஆசிரியரான கோல்டு வின் ஸ்மித் போன்றவர்கள், எப்படியும் பேரரசிற்கும் காலனி களுக்கும் பிரிவினை ஏற்படத்தான் போகின்றது என்றும், அந்த நிகழ்ச்சி விரும்பத்தக்கதென்றும் கூறினர்கள். காலனி அலுவ

லகத்திலுள்ள பொறுப்பான அதிகாரிகளுங்கூட இவ்விதமான கருத்தைத்தான் கொண்டிருந்தனர். எப்படியும், பொருளாதார உதவியை அளிப்பதிலோ, அல்லது இராணுவ உதவியை அளிப்பதிலோ, அல்லது அரசியல் அமைப்பு நோக்கத்திலோ, ஆங்கிலேய அரசாங்கம் தலையிடுவதைக் குறைத்துக்கொண்டு வந்தது. ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் சிறிய காலனிகளில், சுதேச மக்கள்பால் ஏற்படும் போர்களுக்காக 40,000 போர் வீரர்கள் கொண்ட ஒரு படையை 3 மில்லியன் பவுன்களைச் செல வழித்து அனுப்பி வைப்பதா? என்று பாராளுமன்றம் முணு முணுத்தது. அங்கே நிகழ்கின்ற நிகழ்ச்சிகளின்பேரில் பாராளு மன்றத்திற்கு அதிகாரம் இல்லாதபோது, ஏன் இப்படிச் செலவு செய்யவேண்டுமென்று வினவுகின்ற மனப்பான்மை ஏற்பட்டு விட்டது. இறுதியில் காலனிகளுடைய பாதுகாப்பை ஆங்கிலேயக் கப்பற்படை கவனித்துக்கொள்ள வேண்டுமென்றும், அதற்கு உதவியாக ஒரு சிறிய படை நியமிக்கவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. தவிர, சுய ஆட்சி பெற்றுவிட்டதால், காலனிகளே, தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுகின்ற அளவிற்குப் படையைப் பலப்படுத்திக் கொள்ளவேண்டுமென்றும் முடிவு செய்தார்கள். 1871-ல் கனடாவிலிருந்து, சில கடற்படை தளங்களைத் தவிர, மற்ற எல்லாப் படைகளையும் ஆங்கிலேய அரசாங்கம் திருப்பி அழைத்துக்கொண்டது. ஹாலிஃபாக்ஸ் (Halifax), எஸ்கிமால்ட் (Esquimault) என்ற கடற்படைத் தளங்களில் சிறு படைகள் வைக்கப்பட்டிருந்தன. ஆஸ்திரலேசியாவிலிருந்தும், எல்லாப் படைகளும் திரும்பிப் பெறப் பெற்றன. மேற்கு இந்தியத் தீவுகளில்மட்டும் சில படைகள் நிறுத்தப்பட்டிருந்தன. இந்த விவகாரத்தினால் கேப் காலனிக்கும் பொறுப்பாட்சி அளிப்பதற்குக் காலதாமதம் ஆகிவிட்டது. ஏனெனில், அங்கிருந்து ஆங்கிலேயப் படைகளையெல்லாம் திரும்பப் பெற்றுவிட்டால், போயர்கள், ஜுலுக்கள், காஃபிர்கள், கிரிக்காவினர் ஆகியோரின் எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல் போய்விடும் என்ற அச்சம் உண்டாயிற்று.

ஐரோப்பிய நாடுகளும், அமெரிக்காவும் வேறு விவகாரங்களில் 'எழுபதுகளில்' ஈடுபட்டிருந்ததால், இந்தச் சமுதாயத்தினர் தங்களுடைய பாதுகாப்பைப் பலப்படுத்திக்கொள்ள போதிய வாய்ப்புக் கிடைத்தது அவர்களுடைய நல்ல காலமென்றே சொல்லலாம். சர்க்கரை உற்பத்தி செய்கின்ற மேற்கு இந்தியத் தீவுகளின் நிலைமைதான் மிகவும் கவலைக்கிடமளித்தது. ஆனால், பேரரசின் மிகப் பழைய காலனியான அதனுடைய வளர்ச்சி இப்பொழுது சீர்குலைந்து வந்தது. அதனுடைய பொருள்

களுக்குச் சிறிது அதிகமாகத் தீர்வை போடப்பட்டதென்பது உண்மையே எனினும், நாளடைவில் அதனுடைய நஷ்டத்தைச் சமாளித்துக் கொள்ளமுடியும். இந்தக் காரணத்தால் மட்டுமன்று. அதனுடைய வீழ்ச்சிக்குக் காரணம்; அடிமை முறையும், அடிமை வியாபாரமும் ஒழிந்தபிறகு, அவர்களுடைய தோட்டங்களில் சரியானபடி வேலை நடப்பதில்லை. அவர்களும் சோம்பேறிகளாகவே இருந்து பழக்கப்பட்டுவிட்டனர். தவிர, விடுதலை அடைந்த அடிமைகளும், கடினமாக உழைத்து நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முன் வரவில்லை. ஆனால், மேற்கு இந்தியத் தீவுகளுக்கும் நெடுந்தொலைவில் இருந்த டிரினிடாட், மாரீஷியஸ், பிரிட்டிஸ் கயானா ஆகிய பகுதிகளில், இந்திய விவசாயிகளை வரவழைத்து மிகவும் வேகமாகச் சர்க்கரை உற்பத்தி செய்வதில் அவர்கள் முன்னேற்றம் அடைந்துவிட்டனர். அபிவிருத்தியில் இந்தத் தீவுகளில், அரசாங்கமும் அங்குள்ள மக்களும் மிகவும் பாதிக்கப்பட்டனர். அடிமைகளின் விடுதலை, வறுமை, நிலத்தில் அக்கறை கொள்ளாது வேறு இடங்களில் வசித்து வருகின்ற நிலக்கிழார்களுக்குப் பதிலாக, நிலத்தில் உழைத்து நலன் பெறுகின்றவர்களிடம் நிலத்தைக் கொடுப்பதற்கு ஏற்பட்ட காலதாமதமும், கருப்பு நிற மக்களைவிடத் தொகையில் வெள்ளை நிறத்தவர் குறைந்துகொண்டே போதலும் ஆகிய பிரச்சினைகளை அந்த அரசாங்கங்கள் சரிவர கவனிக்க முடியவில்லை. அவர்களுடைய சட்டசபைகளிலே நிறைய பிளவுகள் இருந்தன. 1865-ல் ஜமெய்க்காவில் நீக்ரோக்கள் கலகம் விளைவித்தனர். கவர்னர் அயர் (Eyre) என்பவர், அக் கலகத்தைக் கடுமையான முறையில் ஒடுக்கினார். அங்குச் சுமார் அறுநூறுக்கு மேற்பட்டவர்களை இராணுவத்தினர் தூக்கிலிட்டனர். இதற்குப் பிறகு சட்டசபையில் முன்பிருந்த கூக்குரல், சிறப்புக் குழுக்கள், ஆர்பாட்டம் ஆகியவையெல்லாம் நின்று, சட்டசபையும் அதனுடைய அதிகாரங்களிடத்துச் சரணடைந்தது. சில வருடங்களில், சட்டசபைகளில் நியமனம் செய்யப்பட்ட பெரும்பான்மை அங்கத்தினர்கள் பதவி ஏற்றதால், அங்கேயிருந்த பல பிளவுகள் மறைந்தன. இந்த முறை மற்றத் தீவுகளிலும் பின்பற்றப்பட்டது. பார்படோஸ் தீவும், பெர்முடாவும்மட்டும் சுய ஆட்சியை நிலைநிறுத்திக்கொண்டன. இந்தச் சுய ஆட்சி அவர்களுக்குப் பதினேழாவது நூற்றாண்டிலிருந்தே கிடைக்கப் பெற்றதாகும்.

ஆஸ்திரேலியாவிலும், சுய ஆட்சி இந்தக் காலத்தில் எதிர் பார்த்த முன்னேற்றத்தையும் நம்பிக்கையையும் தரவில்லை. 'எழுபதின்' தொடக்கத்தில்கூட நாட்டின் உட்பகுதிகளைக் கண்டு

பிடிக்கும் முயற்சிகளில் ஈடுபட்டிருந்தனர். அடிலேய்டுக்கும் நெடுந்தூரம் உள்ள உப்பு ஏரிப் பகுதியை ஆராயச் சென்ற வர்களான பர்க்கும் (Burke) வில்சும் (Wills) 1861-ல் மிகவும் பரிதாபமாக இறந்தனர். இதைப்போன்ற சில பரிதாபமான முடிவுகளைத் தவிர பெரும்பாலும், அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் நற்பயனையே அளித்தன. ஜான் ஃபாரஸ்ட் (John Forrest) என்பவருடைய, அடிலேய்டையும் பெர்த்தையும் இணைக்கும் முயற்சி உண்மையில் வெற்றிபெற்றது. படிப்படியாக இவ்வித முயற்சிகளை எடுத்துக்கொண்டதன்பேரில் நாட்டின் குறைபாடுகள் நன்ருகத் தெரியவந்தன. 40 சத விகிதத்திற்கு மேலுள்ள பகுதி வெப்பமாகவும் அந்தப் பகுதியில் உள்ள பாதி பகுதியில் பதினைந்து அங்குலத்திற்குமேல் மழை பெய்யாமலும் இருந்தது. வெள்ளை இனத்தவர் இந்த வடபகுதியில் உழைத்து லாபமடைய வசதியில்லை. உப்பு ஏரிப் பக்கம் உள்ள சில புல்வெளிகளில், ஆடு மாடுகளை வளர்க்க முடியுமே தவிர, மற்றப் பெரும் பகுதியில் வரட்சி காணப்பட்டது. இந்த நாட்டில் மக்கள்தொகை மிகவும் வேகமாகப் பெருகியது. ஆனால், மூன்று மில்லியன் சதுரமைல் உள்ள ஒரு நாட்டில், அதாவது கிரேட் பிரிட்டனைவிட நாற்பது மடங்கு அதிகமாகச் காணப்பட்ட போதிலும், 1871-ல் அங்கு வசித்துவந்த மக்கள்தொகை $1\frac{1}{2}$ மில்லியனுக்குச் சற்று அதிகமாக இருந்தது. ஆனால், மக்கள் கூட்டம் முழுவதும், தென்கிழக்குப் பகுதியில் உள்ள நியூ சவுத் வேல்ஸ், விக்டோரியா ஆகிய பகுதிகளில்தான் வசித்தனர்.

அந்நியர்களுக்குச் சிறிதும் பயப்படாது, இந்தச் சிறு கூட்டத்தினர் பொருளாதாரத் துறையில், பல பரிசோதனைகளைச் செய்து முன்னேற்றமடைய முயற்சி செய்தனர். ஆங்கிலேயப் பேரரசில் உள்ள எல்லாப் பகுதிகளையும்விட, இங்கேதான், தூய்மையான ஆங்கிலேய இனத்தினர் வசித்து வந்தனர். 1861 முதல் 1881 வரையிலும், அவர்களுடைய ஆடுவளர்ப்பு ஆறு மடங்கு அதிகமாகிவிட்டது. தங்கம், நிலக்கரி, செம்பு ஏராளமாக அங்கே கிடைத்தன. தெற்கு ஆஸ்திரேலியாவில், நிறைய கோதுமை விளைந்தது. வெப்பம் மிகுந்த குவீன்ஸ்லாந்தில் கணிசமான சர்க்கரை வியாபாரம் நடந்தது. கம்பியில்லாத் தந்தி செய்திப் போக்குவரத்து, அடிலேய்டையும் வடக்கியுள்ள போர்ட் டார்வினையும் தொடர்புபடுத்தியது. அங்கேயே சில விவசாய இயந்திரங்களைக் கண்டுபிடித்ததால், சாகுபடி வளர்ச்சி அடைவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. ஆனால், அரசியலில் அந்த நாடு இன்னும் வளர்ச்சி அடையவில்லை. பல தடைகள் இருந்தன. தொடக்கத்தில் சூழ்நிலையிலும் ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாது

பிரிக்கப்பட்டுத் தூரமாக இருப்பதும் பெரிய தடைகளாகவே விளங்கின. தவிர, இந்தச் சிறிய நாடுகள் அவைகளுக்குள்ளே தனிப்பட்ட காப்பு வரிகளையும், குறுகிய அளவில் ரயில்வே பாதைகளையும் அமைத்துக்கொண்டு பிரிந்தவண்ணம் வாழ்ந்தன.

1849-ல் ஒரு கூட்டாட்சி அரசியல் திட்டத்தை ஏற்படுத்த ஆங்கிலேயர் ஆலோசனை கூறினர். நியூ சவுத் வேல்ஸ், விக்டோரியா ஆகிய பகுதிகளில் உள்ள செல்வாக்கு மிகுந்த தலைவர்களான ஹென்றி பார்க்ஸ் (Henry Parkes), கேவான் டுஃபி (Gavan Duffy) ஆகியோர் இந்தத் திட்டத்திற்கு ஆதரவளித்தனர். ஆனால், நாடுகளுக்கிடையே இருந்த அதிகப்படியான பொறுமை இதற்குக் குறுக்கேநின்றது. அல்லது பொறுப்பு வாய்ந்த அரசாங்கங்களுங்கூட, அதிகாரத்துடன் இதைப்பற்றி தெளிவாகக் கூற முன்வரவில்லை. 1876 வரை முடிவடைகின்ற காலத்தில், விக்டோரியாவில் 18 மந்திரிசபைகள் ; நியூ சவுத் வேல்ஸ் நாட்டில் 17 மந்திரிசபைகள்; தெற்கு ஆஸ்திரேலியாவில் 29 மந்திரிசபைகளாக அடிக்கடி அரசாங்கங்கள் மாறி வந்தன. முதலில் சொன்ன இரண்டு நாடுகளில், ஆடுகளை வளர்த்துப் பெரும் பணக்காரர்களானவர்கள் மிகவும் செல்வாக்கு மிக்கவர்களாக இருந்தனர். அவர்களுக்குப் பாதகமாகச் சட்டங்களை இயற்றினாலும், அவர்களுடைய செல்வாக்கினால் அதிகாரத்தைத் தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்திருந்தனர். மேல்சபை, கீழ்ச்சபை ஆகிய சபைகளில் காணப்படுகின்ற எதிர்ப்புகளைப்போலவே, மக்களுடைய வேறுபட்ட கருத்துகளும் முரண்பட்டிருந்தன.

ஆனால், பேரரசில் கனடாமட்டும் கூட்டாட்சியை ஏற்று மிகவும் துரிதமாக முன்னேறியது. அதனுடன் மேற்குநாடுகளின் நாகரிகத்தையும் பின்பற்றியது. இரு கரைகள் வரையில் அதன் நிலப்பரப்பு விரிந்துகிடந்தது. டர்ஹாம் திட்டமிட்ட கூட்டாட்சியோ, அல்லது எல்ஜின் என்பவரால் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்ட இந்தத் திட்டமோ, அவர்களுடைய பழைய பிளவுகளை மாற்றிவிடவில்லை. 1840-ல் இயற்றிய சட்டத்தில் ஐக்கிய மாகாணம் அமைக்கப்பட்டது. அதிலுங்கூட, ஏற்கெனவே மேல் கனடா, கீழ்க் கனடா என்ற பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுப் பழைய பகைமை இருந்ததைப்போலவே இதிலும் காணப்பட்டது. இரு மாகாணங்களிலும் உள்ள பிரிட்டிஷ், ஃபிரெஞ்சு மக்களின் எண்ணிக்கையைப்பொறுத்து, அவர்களுக்குச் சரிவிகிதமாகப் பிரதிநிதித்துவம் தரப்பட்டிருந்தது.

ஆனல், நாளடைவில் குடியேற்றம் காரணமாக இந்த மாகாணங்களில் நிறைய மாறுதல் ஏற்பட்டன. பிரிட்டிஷ் ஒன்டாரியோவில் நிறைய ஆங்கிலேய மக்கள் வந்து குடியேறிவிட்டதால், ஃபிரெஞ்சு கியூபெக் மாகாணத்திலுள்ள ஃபிரெஞ்சுக்காரர்களை விட, எண்ணிக்கையில் மிகவும் அதிகமாகிவிட்டனர். இந்தப் புதிய மாற்றத்திற்கேற்ப, ஒன்டாரியோவில் உள்ள தீவிரவாதிகள், ஜார்ஜ் பிரவுன் தலைமையில், மக்கள் எண்ணிக்கைக்கேற்ப பிரதிப் நிதித்துவம் தரவேண்டுமென்று கோரினர்.

இந்த ஏற்பாடு உண்மையில், அவ்விரண்டு இனங்களிடையே ஏற்படும் உடன்படிக்கை போன்றது. இதன்படி, ஒவ்வொரு மந்திரிசபையும் இரட்டிப்புப் பெரும்பான்மையை அடைய வேண்டிய தேவை ஏற்பட்டது. அதாவது ஒவ்வொரு மாகாணத்திலும் அதனுடைய பெரும்பான்மை இருக்கவேண்டுமென்ற நெருக்கடி ஏற்பட்டது. 1854-ல் எல்ஜின் அந்த நாட்டைவிட்டுச் சென்ற பிறகு, ஆங்கிலேய மந்திரிசபைகள் அமைக்கப் படுவதைப்போல, அங்கே மந்திரிசபைகள் அமைக்கப்படவில்லை. பெரும்பான்மையான சமுதாயக் கொள்கைகளில் அவர்கள் ஒருமித்த கருத்தைக் கொண்டிருந்தார்கள். காப்புத் தீர்வைகளை விதிப்பதிலோ, அல்லது சமய குருமார்களின் நிதியைப் பயன்படுத்துவதிலோ, அவர்களுக்குள் அதிகக் கருத்து வேறுபாடுகள் இல்லை. அதற்கு மாருக, இனப் பிரச்சினை, சமயப் பிரச்சினை நாடுகளிடையே உள்ளதூரம் ஆகியவற்ருல் மக்கள் பிரிந்திருந்ததால், அவைகளின் அடிப்படையிலேயேதான், அவர்களுடைய அரசியல் கொள்கைகளும் உருவாயின. ஒன்டாரியோவிலுள்ள 'ரேடிகல்'களுக்கும், கியூபெக்கிலுள்ள 'லிபரல்'களுக்கும் ஒரு நீடித்த உடன்பாடு ஏற்பட வழியில்லை. ஒன்டாரியோவில் உள்ள 'ரேடிகல்'களுக்கு, ஸ்காட்லாந்து, அல்ஸ்டர் ஆகிய பகுதிகளிலுள்ள மக்களின் உணர்ச்சி இருந்தது. கியூபெக்கிலுள்ள 'லிபரல்'களுக்கு, அமெரிக்கக் குடியரசின் செல்வாக்கும், கத்தோலிக்கத் திருச்சபையின் செல்வாக்கும் அதிகமாக இருந்தன. இருப்பினும், ஃபிரெஞ்சுக்காரர்களின் நல்லெண்ணமில்லாது எந்த அரசாங்கமும், அங்கே வெற்றிகரமாக நடைபெற முடியாது.

இந்த விதமாகச் சூழ்நிலை அங்கே இருந்ததால், ஜான் ஏ. மேக்டொனல்ட் (John A Macdonald) என்பவர் 'லிபரல்-கன்சர்வேடிவ்' என்ற அரசியல் கட்சியை, ஃபிரெஞ்சு மிதவாதிகளுடன் சேர்ந்து நிறுவினர். இவர் நன்ருகப் பழகக்கூடியவரும், அதே சமயத்தில் சமயத்தைப் பயன்படுத்திக் கொள்ளுபவராகவும் இருந்தார். கூட்டாட்சி அரசாங்கத்திலும், மற்றும் மாகாணங்

களிலும், ஏற்படுகின்ற அரசாங்கங்கள் பெரும்பாலும் கூட்டு மந்திரிசபை அரசாங்கங்களாகவே இருந்தன. மேக்டொனல்டும், மோரின் (Morin), டேச் (Tache), கார்ட்டியர் (Cartier) போன்ற கியூபெக் தலைவர்களும் சேர்ந்து கூட்டு மந்திரிசபையை நிறுவினர். இவர்களுக்கிடையே உடன்பாடு ஏற்படும் என்று நினைத்தார்கள். ஆனல், அவர்களுடைய கருத்துகள் மாறுபட்ட அளவிலேயே இருந்தன. 1857-ல் அவர்கள் ஒட்டாவாவைத் (Ottawa) தலை நகரமாக்கவேண்டுமென்று கருதினர். ஏனெனில் இது, ஃபிரெஞ்சு மான்டிரியலுக்கும், ஆங்கிலேயர் கோருகின்ற டோரன்டோ, அல்லது கிங்ஸ்டன் நகரத்திற்கும் மத்தியில் இருப்பதால் தலை நகரம் இங்கே அமைவது நல்லதென்று நினைத்தனர். தவிர கத்தோலிக்கர், தங்களுக்குத் தனிப்பட்ட பள்ளிகள் வேண்டுமென்று எப்பொழுதுமே கோரிவந்தனர். இங்கே பல இனத்தவர் ஒன்று சேர்வதென்பது வெறும் கனவே என்று டர்ஹாம் முன்பே கூறியிருக்கிருர்.

அவருடைய காலத்தில் பாதிக்கப்பட்ட சில பிரச்சினைகள் இப்பொழுது வளர்ச்சி அடைந்திருக்கின்றன. கலகங்களுக்குப் பிறகு, மக்கள்தொகை இரண்டு மடங்காக அதிகரித்துவிட்டது. கூட்டரசாங்கத்தில் உள்ள பகுதியில், மூன்றரை மில்லியன் மக்கள் வசித்தார்கள். அவர்களில் ஒன்டாரியோவில்மட்டும் ஒன்றரை மில்லியன் மக்கள் வசித்தனர். இவர்களுடைய எண்ணிக்கை ஃபிரெஞ்சுக்காரர்களைவிட அதிகமாக இருந்தது. 24 மில்லியன் பவுன்கள், ஏற்றுமதி, இறக்குமதி வர்த்தகத்தில் மட்டும் கிடைத்திருக்கின்றன. சுமார் 2000 மைல்களுக்குமேல் ரயில்வே பாதை போடப்பட்டது. கனடியன்-ஆலன் நீராவிக் கப்பல் போக்குவரத்து நேரடியாகவே மான்டிரியலையும், லிவர் பூலையும் தொடர்புபடுத்தியது. உலகத்திலேயே மிகப் பெரிதாக உள்ள உள்நாட்டுக் கால்வாய்கள் செயின்ட் லாரன்ஸ் பகுதி லிருந்து லேக்ஸ் பகுதி வரையிலும் இணைத்தன. நிறைய மூலதனமிடப்பட்ட பாங்குகளும் தொழிற்சாலைகளும் நிறுவப் பட்டன. சிறு தொழிற்சாலைகளையும், கைத்தறிகளையும், மரம் அறுக்கும் தொழிற்சாலைகளையும் அகற்றிவிட்டு, ஆங்காங்கே, இயந்திரங்களின் உதவியால் பெரிய தொழிற்சாலைகளை நிறுவினர். எத்தனைதான் புதிய முன்னேற்றம் காணப்படினும் 'அறுபது களில்' உள்ள ஒவ்வோர் அரசியல்வாதியும், மேக்டொனல்டு, பிரவுன், கார்ட்டியர், ஏ. டி. கால்ட் என்ற பாங்கர், டேர்ஸி மேக்கி (Darcy McGee) என்ற மாஜி ஐரிஷ் கலகத் தலைவரும் போன்றவர்கள் இந்த ஆட்சி இப்படியே அதிக காலம் நீடிக்க முடியாது என்று கருதினர். இரண்டு கனடாக்களையும் ஒரு கூட்டாட்சித் திட்டத்திற்குள் கொண்டுவரவேண்டுமென்று


AUSTRALASIA
1914
English Miles
0 100 200 400 600 800
(1643) Dates of early discoveries
1778 Dates of first permanent settlement
1829 Dates of organization of separate colonies
T. 1643 Tasman
C. 1770 Cook
DUTCH EAST INDIES
DUTCH NEW GUINEA
KAISER WILHELM'S LAND
BR. NEW GUINEA (PAPUA) 1884
Bismarck Archipelago
New Britain (New Pomerania)
New Ireland (New Mecklenburg)
Solomon Is.
Santa Cruz Is.
New Hebrides (1765)
New Caledonia (1774)
Fiji Is. (1643) 1835 1874
Samoa
Tonga
Kermadec Is.
Norfolk I. (1774)
Lord Howe I.
CORAL SEA
PACIFIC OCEAN
INDIAN OCEAN
SOUTHERN OCEAN
TASMAN SEA
Tropic of Capricorn
COMMONWEALTH OF AUSTRALIA
Proclaimed 1901
NORTHERN TERRITORY
to South Australia 1863
to Commonwealth 1907
QUEENSLAND 1859
NEW SOUTH WALES
WESTERN AUSTRALIA 1829
SOUTH AUSTRALIA 1836 1834
VICTORIA
TASMANIA 1803 1825
VAN DIEMAN'S LAND (1642)
NEW HOLLAND
SWAN R. COLONY 1829
DOMINION OF NEW ZEALAND
North I.
South I.
Stewart I.
Chatham Is.
Port Darwin 1869
Derby
Fitzroy
Alice Springs
Cloncurry
Flinders
Gilbert
Mitchell
Cooktown (1770)
Townsville
Charters Towers
Rockhampton
Maryborough
Brisbane 1824
Newcastle
Sydney
Botany B. (1770)
Bathurst
Blue Mts.
Darling
Barcoo
Murrumbidgee
Murray
Bendigo
Geelong
Melbourne
P. Phillip
Adelaide 1836
Port Augusta
L. Torrens
L. Eyre
Kalgoorlie
Coolgardie
Perth
Fremantle 1828
Albany 1826
Geraldton
Ashburton
Gascoyne
Murchison
Dirk Hartog I. (1616)
Hobart
C. Maria Van Diemen (1643)
Auckland
New Plymouth
Wellington
Napier
Nelson
Christchurch
Dunedin
Timor
Flores
Java
Ceram
Port Moresby
East from 140 Greenwich
Copyright 1948, Edward Stanford, Ltd.

அவர்கள் முனைந்தனர். இந்த வகையில், இங்கிலாந்திலிருந்து அவர்கள் எந்தவித ஆதரவையும், நிதி உதவியையும் பெறவில்லை.

இதைத் தவிர, மற்ற மூன்று பிரச்சினைகளுக்கும் முடிவு காண வேண்டியிருந்தது. வரைபடத்தைப் பார்ப்போமெனில், வடக்கு, தெற்குப் பகுதிகளில் வாழும் மக்களிடையே இருக்கும் தொடர்பைப்போல, கிழக்கு, மேற்குப் பகுதிகளில் வாழும் மக்களிடையே அதிகத் தொடர்பு ஏற்படுவதற்கு வசதியில்லை. இதற்குக் காரணம், கிழக்கு, மேற்குப் பகுதிகளிலுள்ள நாடுகளின் இடையே பெரும் இடைவெளி இருந்தமையேயாகும். செயின்ட் லாரன்ஸிலிருந்து கியூபெக்குக்கு 400 மைல் தூரமிருக்கிறது. அங்கிருந்து ஒன்டாரியோ ஏரிக்கு 500 மைல் உள்ளது. மனிதர்களைத் தவிர, இயற்கையுங்கூட, அவர்கள் நெருங்கிய தொடர்புவைத்து வாழ்வதற்கு இடையூறாக இருந்தது. ஆனால், விரைவான போக்குவரத்து இருந்தால், இந்தத் தூரம் ஒரு பொருட்டாகாது. ஆனால், அப்பொழுது அவ்வளவு முன்னேற்றம் போக்குவரத்தில் ஏற்படவில்லை. எரி ஏரியிலிருந்து (Lake Erie) அமெரிக்கர் போட்ட கால்வாய்கள்மூலமாக நியூயார்க்குடன்கூட நல்ல வர்த்தகத் தொடர்பு வைத்துக்கொள்ள முடிந்தது. செயின்ட் லாரன்ஸ் பகுதியில் உற்பத்தியாகும் பொருள்களையெல்லாம், நியூயார்க் வழியாகவே பெற்றுவந்தனர். 1852-ல் கிரேண்ட் டிரங்க் ரயில்வே (The Grand Trunk Railway), ஹூரன் ஏரியிலிருந்து (Lake Huron) கியூபெக்கின் கிழக்கு வரையிலும் சென்றது. கியூபெக்கின் கிழக்கிலிருந்து நோவா ஸ்கோஷியா வரையிலும் நூறு மைல் தூரத்திற்கு ரயில்பாதை போடப்படவில்லை. அதனால், ஒரு காலனியிலிருந்து மற்றொரு காலனிக்கு ரயில்வே பாதை போடவேண்டிய அவசியமும் உணரப்பட்டது. அப்படி ரயில்வே பாதையினால் இணைத்தால்தான், மேரிடைம் மாகாணங்கள் செழிப்படைய முடியும். மேரிடைம் மாகாணத்திற்கு ரயில்வே இணைப்பு ஏற்படுத்தும் திட்டத்தை ஜோசப் ஹோவஸ் என்பவர் தயாரித்து, ஆங்கிலேய அரசாங்கத்திடம் நிதி உதவி கோரியிருந்தார். ஆனால், இந்த நிதி உதவியை ஆங்கிலேய அரசாங்கம் அளிக்கவில்லை. இதனால், மேரிடைம் மாகாணங்களில் பிடிக்கப்படுகின்ற மீன்களுக்குக் கிராக்கியில்லாது போய்விட்டது. 1854-ல் அமெரிக்கர்களைத் திருப்தி செய்வதற்காகச் செய்துகொண்ட உடன்படிக்கையில், மேரிடைம் மாகாணங்கள் நிறைய நஷ்டமடைந்தன. ஆனால், அமெரிக்கரின் வர்த்தகம் இந்தப் பரஸ்பர உடன்படிக்கையினால் இரட்டிப்பு மடங்கு பெருகியது. அப் பகுதிகளில் வாழும் மக்கள், கனடாவுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொள்வதைவிட, அதனுடன்

இணைவதையே பெரிதும் விரும்பினர். இந்தக் கொள்கையை, 1864-ல் நோவா ஸ்கோஷியா, நியூ பிரன்ஸ்விக், பிரின்ஸ் எட்வர்ட் தீவு ஆகிய பகுதிகள் ஒப்புக்கொண்டன.

இன்னும் கனடா கூட்டாட்சி நாடாக அமைக்கப்படாமல் இருந்தால், மேற்கு நாடுகளின் எதிர்காலம் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கும். 1670-ல் சாஸனம் அளிக்கப்பட்ட ஹட்ஸன் பே கம்பெனி, இங்கிலாந்து முடியாட்சிக்கு மீட்கப்படும்பொழுதிருந்து அதிகாரிகளின் பெயர்களையெல்லாம் அழித்துவிட்டது. ருப்பர்ட்ஸ் லாண்ட், யார்க் தொழிற்சாலை, அல்லது சர்ச்சில் கோட்டை என்ற பெயர்களெல்லாம் மறைந்துவிட்டன. இப்பகுதிகள் ஃபிரெஞ்சுக்காரர்களுடன் பலமுறை போரிட்டும், அவர்களுடன் இணையாது தனித்து நின்றன. 1821-ல் ஏற்பட்ட போருக்குப் பிறகு, மான்டிரியலில் உள்ள ஆங்கிலேய மென்மயிர் வர்த்தகர்கள், வடமேற்குக் கம்பெனி என்று ஒரு போட்டிக் கம்பெனியை ஆரம்பித்தார்கள். அந்த இரண்டு கம்பெனிகளிலும் வேலை செய்த சில ஊழியர்கள் புதிய நிலங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். 1812ஆம் ஆண்டுக்கு முன்பிருந்தே, டேவிட் தாம்ஸன் என்பவர், மேனிடோபா (Manitoba), சஸ்காட்சிவான் (Saskatchewan) என்று இப்பொழுது அழைக்கப்படும் பகுதிகளை நிலப்பரப்பெடுத்து, வரைபடங்களைத் தயாரித்தார். பின்பு, ராக்கி மலைத்தொடரைக் கடந்து, கொலம்பியா, கூட்டனே (Kootenay) நதிகளை அடைந்தார். அலெக்சாந்தர் மக்கன்ஸி, ஆர்க்டிக் பகுதிக்குச் செல்லும் ஒரு பெரிய ஊற்றைப் பின்பற்றிச் சென்றார். அந்த ஊற்றுக்கு அவருடைய பெயரே வைக்கப்பட்டிருக்கிறது. பின்பு, பீஸ், பிரேஸர் நதிகளின் வழியாகச்சென்று ஆர்க்டிக்கை அடைந்தார் மிகவும் கடினமாக உழைக்கின்றவர்கள் பெரும்பாலும் ஸ்காட்டுகள்; யூகோன் வரையிலும் சென்று மென்மயிர் சேகரித்தனர். அவர்கள் பெரும்பாலும் காடுகளிடையே குடியிருந்தார்கள். அங்கிருந்த இந்தியர்களின் பெரிய சாதனை எருமைகளை வேட்டையாடிக் கொல்வதே. அவர்கள் சிறு வீடுகள் அமைத்துக்கொண்டு அங்கே குடியிருந்தனர். அவர்களில் பெரும்பாலோர், ஃபிரெஞ்சு இரத்தம் கலந்த அரைகுறை சாதியினரே. ஆங்கிலேயக் கலப்படத்தைவிட ஃபிரெஞ்சுக் கலப்படமே அதிகமாகக் காணப்பட்டது. அவர்கள் சிறு படகுகள்மூலமாக, ஹட்ஸன் பேயிலிருந்தும், வின்னிபெக் ஏரியிலிருந்தும் சென்றனர்.

கம்பெனியில் கொடுக்கப்பட்ட மானியம் அளவுகடந்தது. அவர்கள் பெற்ற தனி உரிமை, அன்டோரியா தலைவர்களுக்கு

அருவருப்பை அளித்தது. மேற்குப் பகுதி விரிவடைவதில், அவர்கள் செழுமையடையும் நம்பிக்கையை வைத்திருந்தனர். காட்டுமிருகங்களிலிருந்து எடுக்கும் மென்மயிர் வர்த்தகத்தால், மட்டும் அங்கு இருக்கும் மக்களிடம் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள முடியாதென்றும் அவர்கள் அறிந் திருந்தனர். ஆனுல், கம்பெனியில், அப்பொழுது ஏற்படும் விவகாரங்களைச் சமாளிக்க முடியவில்லை. 1846-ல் ஏற்பட்ட ஒரிகான் ஒப்பந்தம், வேன்கூவர் தீவில் ஆதிக்கம் பெறுவதற்கு உதவியாக இருந்தது. அங்கே, தங்கமும் நிலக்கரியும் கண்டு பிடிக்கப்பட்டதால், நிறைய குடியேறுகிறவர்கள் வந்து குவிந் தனர். நாளடைவில் அவர்கள் பிரதிந்தித்துவ அரசாங்கம் வேண்டுமென்று கோரினர். 1858-ல் அரசனுடைய ஆதிக்கத்தி லுள்ள காலனி அங்கே அமைக்கப்பட்டது. அதை பிரிட்டிஷ் கொலம்பியா என்று அழைத்தனர். 1866-ல் பிரிட்டிஷ் கொலம் பியா, வேன்கூவர் தீவுடன் இணைக்கப்பட்டது. இத்துடன் கனடா விரிவடையவேண்டுமென்ற நோக்கம் நின்றுவிடவில்லை. ராக்கி மலையின் கிழக்கேயுள்ள காலி இடத்தையும் உடனடியாக இணைத்துக்கொள்ளும் திட்டத்தையும் ஆராய்ந்தனர். ஏனெனில், அதன் எல்லைப்புறத்திலுள்ள, மின்னசோட்டா மற்றும் பல அமெரிக்க நாடுகளில் ஏராளமாகக் குடியிருக்க மக்கள் குவிந்தவண்ணமிருந்தனர். தவிர, 'சுப்பீரியர்' ஏரியின் அருகிலும் 'ரெட்' நதியின் அருகிலும் அவர்கள் அதிகமாகக் குடியேறிவந்ததால், மேற்கின் வியாபாரத்தை அமெரிக்கர் பறித்துக்கொள்ளும் வாய்ப்பு இருந்தது. சில லண்டன் பாங்கர்கள் கிரேண்ட் டிரங்க் ரயில்வேயை அபிவிருத்தி செய்ய முன் வந்தனர். அவர்களுடைய பிரதிநிதி எட்வர்ட் வாட்கின் என்பவர். அவர் பஸிஃபிக் வரையிலும் இந்த ரயில்வே பாதையை அமைக்கவேண்டுமென்று திட்டமிட்டார். ஆனுல், 'ஐம்பதுகளின்' கடைசியில், கனடா அரசாங்கம் ஃபிரெஞ்சு உரிமைகளைத் தாங்கள் ஏற்கெனவே அடைந்துவிட்டதால், ஹட்ஸன் பே சாஸனத்தை ஏற்க மறுத்தனர்.

அமெரிக்க உள்நாட்டுப் போர் நிகழும்பொழுது, இந்தத் தொல்லைகள் அதிகமாகக் காணப்பட்டன. அமெரிக்காவின் வடபகுதி நாடுகள் பிரிட்டனை அளவுகடந்து வெறுத்தன. அவர் களுடைய உள்துறை காரியதரிசியான ஸீவேர்ட் (Seaward) போரிடத் தயாராக இருந்தார். ஐரிஷ் ஃபெனியன்கள் (Fenians) கனடாவை ஆக்கிரமிக்கப்போவதாக பயமுறுத்தினர். 1864-ல் பரஸ்பர ஒப்பந்தம் காலாவதியானவுடன், அமெரிக்கர் அதைப் புதுப்பிக்க விரும்பவில்லை. அப்படியாவதும், கனடா, அமெரிக்கக்

குடியரசுடன் இணைந்துகொள்ளுமா என்று அவர்கள் எதிர் பார்த்தனர். அமைதியான முறையில், கனடாவை இணைத்துக் கொள்வதென்று அமெரிக்கக் காங்கிரஸில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தனர். இதற்கென்றே எல்லைப்புறத்தில் ஒரு குழுவினர் தீவிரமாக வேலைசெய்து வந்தனர். தவிர, 1867-ல் அமெரிக்கர் ரஷ்யாவிடமிருந்து அலாஸ்காவின் உரிமைகளை விலை கொடுத்து வாங்கிவிட்டதால், பஸிஃபிக்கை நோக்கியிருந்த மற்றொரு 'சன்னலையும்' அவர்கள் அடைத்துவிட்டனர். ஆனால், கடைசியில், பாதுகாப்புத் தேவைகள், மற்றும் இவ்வளவு பெரிய காலனிக்குச் செலவழிக்கவேண்டிய பணம் ஆகிய சிந்தனைகளை விட்டுவிட்டுக் கனடியக் கூட்டாட்சியை நிறுவ முன்வந்தனர். உண்மையில் கனடியக் கூட்டாட்சி ஏற்பட்டது கனடியர்களது முயற்சியினால்தான் என்று சொல்லவேண்டும்.

1864-ல் அடிப்படைக் கருத்துக்களில் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. ஜார்ஜ் பிரவுன், மற்றும் ஒன்டாரியோ லிபரல்கள் இந்தக் கூட்டாட்சியை அமைக்கும் ஒரே நோக்கத்திற்காக மட்டும் மக்டொனல்டுடன் ஒன்றுசேர இசைந்தனர். மேக்கீயின் முயற்சியாலும், ஸேண்ட்ஃபோர்ட் என்ற ரயில்வே பொறியியல் வல்லுநரின் முயற்சியாலும், மேரிடைம் மாகாணங்களிலுள்ள பிரதிநிதிகளையும் கலந்து ஆலோசனை செய்யுமாறு கோரினார்கள். கியூபெக்கில் அக்டோபர் மாதத்தில் நடந்த மாநாட்டில், எல்லா விவகாரங்களிலும் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. டில்லி, சார்லஸ் டப்பர் என்ற நியூ பிரன்ஸ்விக், நோவா ஸ்கோஷியா ஆகிய பகுதிகளின் பிரதிநிதிகள், மக்டொனல்ட், பிரவுன், கால்ட், டேச், கார்ட்டியர் ஆகியவர்களுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர். இன்னும், இந்தத் திட்டம் முழுமையடைய இரண்டு ஆண்டுகள் ஆகின. லண்டனில் நிகழ்ந்த மாநாட்டில் கனடியன் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். ஆனால், இந்த மாநாட்டில் நியூஃபவுண்ட்லாந்தும் பிரின்ஸ் எட்வர்ட் தீவும் பிரதிநிதிகளை அனுப்பவில்லை. ஆனால், இந்தப் பகுதிகளுக்கு ஆங்கிலேய அரசாங்கத்தின் செல்வாக்கு அதிகமாக இருந்தது. உண்மையில், நியூ பிரன்ஸ்விக்கும், இந்த மாநாட்டில் கலந்துகொள்வதில் தயக்கம் காட்டியது. ஜோசப் ஹோவ் என்பவரும் இந்த முயற்சியை மிகவும் வன்மையாகக் கண்டித்தார். உண்மையில் இவர்களுடைய எதிர்ப்புகளை வெல்லுவதற்காகவே, மிகவும் சாதுரியமாக டப்பர் (Tupper) நியூஃபவுண்ட்லாந்து, பிரின்ஸ் எட்வர்ட் தீவுகளின் பிரதிநிதிகளை உடனடியாகக் கலந்து கொள்ளச் செய்யவில்லை. ஆனால், இறுதிக் கட்டத்தில் ஆங்கிலேய

மந்திரிகளும், கியூபெக் திருச்சபையும் இந்த முயற்சியில் தலையிட வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. அதனால் இரண்டு விளைவுகள் ஏற்பட்டன. ஹட்சன் பே கம்பெனியின் உரிமைகளை 1869-ல் கனடாவுக்கு மாற்றிவிட்டனர். மேலும், 1871-ல் பிரிட்டிஷ் கொலம்பியா ஒரு மாகாணமாக அனுமதிக்கப்பட்டது. 1873-ல் பிரின்ஸ் எட்வர்ட் தீவும் இணைக்கப்பட்டது. ஒரே பிரிட்டிஷ் சமுதாயத்தைக் கொண்ட பகுதியான :.நியூஃபவுண்ட்லாந்து மட்டும் டொமினியனுக்குள் இணைக்கப்படவில்லை.

ஆங்கிலேயர் 1867-ல் வட அமெரிக்கச் சட்டம் ஒன்றை இயற்றினர். அதன்படி கனடா டொமினியன் நாடாக்கப் பட்டது. அத்துடன், கூட்டாட்சி அரசாங்கமும் அங்கு அமைந் தது. பேரரசு நாடுகளில், இது புதிய அரசாங்க முறையாகும். மக்டொனல்ட் இந்த அரசாங்கத்தை, மற்ற மாகாணங்க ளுடன் நெருங்கிய தொடர்புடையதாக்க விரும்பினர். ஆனல், கூட்டாட்சி அரசாங்க முறையில்தான் பல்வேறு வேறுபாடு களுக்கு இடையே ஓர் உடன்பாட்டிற்குள் வரமுடியுமென்பதால், ஒருவகைக் கூட்டாட்சிமுறை அரசாங்கத்தையே அமைத்துக் கொள்வதென்று முடிவுசெய்தனர். கியூபெக், அல்லது மேரி டைம்ஸ் ஆகிய மாகாணங்களைப் பொறுத்தவரையிலும், அவை களுக்கு உள்துறை விவகாரங்களை நிர்வகிக்க, சுய ஆட்சி வேண்டு மென்று கோரினர். ஆனல், அமெரிக்காவிடமிருந்து அபாயம் நேரிடுகின்ற வாய்ப்புகள் இருந்தமையால், யூனியனைவிட மிக்க பலமுள்ள டொமினியன் அரசாங்கமாக்குவதென்றும் அவர்கள் முடிவுசெய்தனர். மேலும், அமெரிக்க இராச்சியங்களைவிட, கனடாவின் மாகாணங்களைச் சிறிது பலவீனமாகவே ஆக்கிவிட்ட னர். நேரடியாக வரி விதிப்பு, பொதுப் பணிகள் இவற்றைப் போலச் சில அதிகாரங்களை மாகாண அதிகாரத்திற்குள் விட்டு வைத்தனர். ஆனல், மற்ற எஞ்சியுள்ள அத்தனை அதிகாரங் களையும் டொமினியன் அரசாங்கமே நிர்வகிக்கும். மேலும், மாகாண லெப்டினன்ட் கவர்னர்களையும், நீதிபதிகளையும் டொமி னியன் அரசாங்கமே நியமனம் செய்யும். மாகாணச் சட்டங் களில் திருப்தி ஏற்படவில்லையெனின், பேரரசின் பிரிவி கவுன் சிலுக்கு மேல்முறையீடு செய்துகொள்ளலாம். டொமினியன் செனட் சபை அல்லது மேல் சபையில், மாகாணங்களைப் பாது காப்பதற்காகச் சமத்துவமாகப் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டது. அதனல் மேல்சபையில், ஒன்டாரியோ, கியூபெக், இணைந்த மேரிடைம்ஸ் ஆக, மூன்று வகை முக்கியமான பிரதிநிதி களின் கூட்டமே அங்கு இருந்தது. ஆனல், கீழ்ச்சபையில், பிரதி நிதித்துவம் மக்கள்தொகையின் அடிப்படையிலேயே கோடுக்கப்

பட்டது. அதனால் கீழ்ச்சபையில், ஆங்கிலேய இனத்தவரே அதிக ஆதிக்கம் பெறமுடிந்தது. 1875-ல் உயர்ந்த மேல் முறையீடு நீதிமன்றம்மட்டுமே நியமனம் செய்யப்பட்டதே தவிர, ஓர் உயர்ந்த பெடரல் நீதிமன்றம் நியமிக்கப்படவில்லை.

இந்த அரசியல் அமைப்பு, உண்மையில் கூட்டரசாங்க முறையில் அமைந்ததன்று. ஆனால், இதன் தன்மை, எல்லா மாகாணங்களுக்குள் ஏற்பட்ட ஓர் உடன்படிக்கையைப்போல இருந்தது. இந்த அரசியல் அமைப்பின் வளர்ச்சி, அதனுடைய அரசியல் சட்டத்தில் வளர்வதைக்காட்டிலும், சரியான வழக்காறுகளை அமைத்துக்கொள்வதிலும், காலத்திற்கேற்பப் பொருள் கொடுப்பதிலுமே இருக்கிறது என்று கூறலாம். எடுத்துக்காட்டாகக் கியூபெக் மாகாணத்திற்கு 65 பிரதிநிதிகள்தான் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டுமென்றிருந்தால், இந்த 1867ஆவது சட்டத்தில் திருத்தங்களைக் கொண்டுவரப் பேரரசின் பாராளுமன்றத்தில் சம்மதம் பெறவேண்டும். டொமினியன் அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்களுக்கும் ஏதாவது தகராறு ஏற்படின், பிரிவி கவுன்சிலின் உதவியால் அது தீர்க்கப்படும்.

பல நெருக்கடியான நிலைமைகளைச் சமாளித்தும், நதிகளை இணைத்துப் பாலம் அமைத்தலும், உணவு உற்பத்தி செய்தலும், குடியேற்றவாதிகளைத் திருப்தி செய்வதும், மலைகளைக் குடைவதும் போன்ற பணிகளைச் செய்யும்பொழுது, அரசியல் பொதுப் படையான ஒரு வியாபாரமாகவே மாறுகிறது. தனி மனிதனுடைய செல்வத்தை ஆக்குவது அரசாங்கத்தின் கைகளில்தானே இருக்கிறது. டொமினியனின் துவக்கத்தில், பல நிகழ்ச்சிகள் திருப்தி அளிக்கவில்லை. அல்லது மக்டொனால்ட், அந் நிகழ்ச்சிகளையெல்லாம் மாற்றி அமைக்கவும் முடியாது. 1873 முதல் ஐந்து ஆண்டுகளைத் தவிர, அவர் கனடாவின் பிரதம அமைச்சராக 1891 வரையிலும் இருந்திருக்கிறார் என்ற தகுதியே அவருக்கு இருக்கிறது. அவர் பதவியிலிருந்ததற்கு, அரசியல் கலையைத் தவிர வேறு வகைகளில்கூட, அவர் வெற்றியை அடைந்தார். மற்ற மனிதர்களை மேய்க்கின்ற பெரிய பிறவி அதிர்ஷ்டம் வருக்கு இருந்தது. அரசியல்வாதியின் வெற்றிக்கு இது முதல் காரணம். ஹோவ்கூட, இவருடைய கேபினட்டில் கடைசியாக இடம்பெற்றார். அவருக்கு இயற்கையிலேயே நல்ல தாராள மனப்பான்மையும் வருங்காலம் அறியும் தூர நோக்கும் பெற்றிருந்தார். இந்தக் குணங்கள் அவருடைய எதிர்க் கட்சியினரான லிபரல்களுக்குக் கிடையாது. 1873–78 வரை பிரதம அமைச்சராக இருந்த நியாயமான, ஆனால், உணர்ச்சியற்ற அலெக்சாண்டர் மெக்கன்ஸியும், நாவன்மை படைத்த் மிகவும் கண்டிப்பான

குணத்தை உடையவரான எட்வர்ட் பிளேக் என்பவரும், மெக்கன்ஸியைப் போன்றவர்கள் அல்லர். மெக்கன்ஸிமீது 1873-ல் பஸிஃபிக் ரயில்வே அமைக்கும்பொழுது லஞ்சம் வாங்கி விட்டார் என்ற ஒரு வதந்தியிருந்ததையும் மக்கள் பொருட் படுத்தவில்லை. மக்களுக்கு இவர்மீது நல்ல நம்பிக்கை இருந்தது.

ஏதாவது சிறு ஆபத்து நேரிடும்பொழுதுங்கூட, இளம் பருவத்திலுள்ள இந்த டொமினியன் மிகவும் அதிர்ச்சிக் குள்ளாகியது. எடுத்துக்காட்டாக, 1869–70-ல் நிகழ்ந்த சிவப்பு நதிக் கலகத்தைக் கூறலாம். இந்தக் கலகம், லூயி ரய்யெல் தலைமையில் நிகழ்ந்தது. வின்னிபெக்கைச் சுற்றியிலும் உள்ள ஃபிரெஞ்சுக்காரரும், பாதி ஃபிரெஞ்சு 'மேட்டி'களும் டொமினிய னுடன், தங்களுடைய நிலப்பகுதிகள் இணைந்துவிட்டனவே என்று பயந்தனர். அதனால், அவர்களுடைய நிலங்களும் கத்தோலிக்கச் சமயமும் பறிபோய் விடுமோ என்று அஞ்சினர். புதிய ஜனநாயக வாதி யாராவது அங்கே வந்து குடியேறினால், அவனை வெறுத் தனர். இந்த அதிருப்தி சரியானபடி முடிவு செய்யப்படவில்லை யெனின், அங்கே இந்தியர்களின் கிளர்ச்சியாவது, அல்லது அமெரிக்கர் அங்கே நுழைந்து ஆதிக்கம் செலுத்ததாவது முயற்சி செய்வர். ஆனால், இந்த விவகாரத்தை, சில தனிப்பட்டவர்களின் முயற்சியால் முடிவு செய்தனர். இவ்வளவு விரைவாக முடிவு செய்ததும் ஒருவிதத்தில் நல்லது. ஹட்ஸன் பே கம்பெனியின் பிரதிநிதியான டொனல்ட் ஸ்மித் என்பவரும் (பின்பு ஸ்டிராத் கோனு பிரபு ஆனவர்), பின்பு, மக்டொனல்டும் இந்தத் தகராறைத் தீர்ப்பதற்குப் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டனர். மக்டொனல்ட் உறுதியான முடிவுடன் ஓர் இராணுவப்படையை வுல்ஸிலியின் தலைமையில் அனுப்பினர். ஆனால், அவர் மிகவும் நட்பு மனப்பான்மையுடன் நடந்துகொண்டு, 1870-ல் மனிடோபா என்ற புதிய மாகாணத்தை அமைத்துக் கொடுத்தார். இந்த மாகாணத்தில், தனிப்பட்ட கத்தோலிக்கப் பள்ளிகளை நிறுவினர். அடுத்த தலைமுறை வரையிலும், ராக்கி வரையிலும் அடர்ந் துள்ள புல்வெளிப் பிரதேசம், வடமேற்குப் பகுதி என்ற பெயரி லேயே நீடித்து வந்தது. அந்தப் பகுதியினருக்கு அரசாங்கம் செய்த நல்ல காரியம், வடமேற்குக் குதிரைக் காவலர்ப் படையை ஏற்படுத்தியதுதான்.

கூட்டாட்சி அரசியல் அமைப்பின்படி, கிழக்கு, மேற்கு மாகாணங்களுக்கு இடையே நெருங்கிய தொடர்பு ஏற்படுத்து வதற்காகப் போக்குவரத்து வசதிகள் செய்து தரப்படும் என்று உறுதிமொழி அளித்திருந்தார்கள். அதன்படி, 1876-ல் பேரரசு

அரசாங்கத்தின் உறுதிமொழியின்மேல் காலனிகளை இணைக்கும் ரயில்வே பாதையை அமைத்தார்கள். அது ஹாலிபாக்ஸையும், செயின்ட் லாரன்ஸையும் இணைத்தது. பஸிஃபிக் கரை வரையிலும் ரயில்வே பாதை போடுவதென்று திட்டமிட்டிருந்தனர். 1867-ல் கொலம்பியா கூட்டாட்சியில் இணைந்ததற்குப் பிறகு, இந்தத் திட்டத்தை அவசியம் நிறைவேற்றுவதாக உறுதிமொழி அளித்தனர். இங்கே ரயில்வே பாதையை அமைப்பதற்குப் பல தொல்லைகளும் இடையூறுகளும் இருந்தன. ஊழல்கள், ரயில்வே பாதை அமைப்பதற்கான தொல்லைகள், நிலம் பெறுவது, கான்ட்ராக்டர்களுக்கு மானியமளித்தல், இதை நிறைவேற்ற ஆகும் ஏராளமான செலவு இவை போன்ற பல ஆரம்ப இடையூறுகள் இருந்தன. 1873-ல் மக்டொனல்ட் பதவியில் இல்லாதபொழுது, மெக்கன்ஸி அரசாங்கம் இவ் வேலையைத் தொடர்ந்து செய்தது. ஆனல், அவருக்கு இந்தத் திட்டம் வெற்றி அளிக்குமா என்ற சந்தேகம் இருந்து வந்தது. 1880-ல் தான், மக்டொனல்ட் புதிய கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு வேலையை விரைவுபடுத்தினர். அவருக்கு அதிக உதவி செய்தவர்கள், டொனல்ட் ஸ்மித், ஜே. ஜே ஹில் என்பவர்களும், பொறியியல் வல்லுநர்களான வான் ஹார்ன், ஸேண்ட் ஃபோர்ட் ஃபிளெமிங் முதலியோராவர். 1885-ல் முதல் பஸிஃபிக் ரயில்வே கனடா முழுவதும் சென்றது.

அதற்குள் கனடாவின் தலைவிதியும் நிர்ணயம் செய்யப்பட்டது. இன்னும், கிழக்கிலும் மேற்கிலும் இணைத்துக்கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மை மறையவில்லை. பலமுறை கனடிய அரசாங்கங்கள், வாஷிங்டனுடன் பரஸ்பர ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்று தெரிவித்தன. ஆனல், அமெரிக்கர் இவர்களுடைய கோரிக்கையை அலட்சியப்படுத்தினர். ஆனல், கிளாட்ஸ்டனுடைய தலையீட்டின்பேரில், 1871-ல் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. கனடாவின் வளர்ச்சிக்காக, ஆங்கிலேய அரசாங்கம் எதையும் தியாகம் செய்யும் என்று கனடா அப்பொழுது உணர்ந்தது. அமெரிக்கர்களுடைய நல்லெண்ணத்தைப் பெறுவதற்காக செயின்ட் லாரன்ஸில் அவர்களுக்கிருந்த நிரந்தரக் கடல் போக்குவரத்து உரிமைகளை அமெரிக்கர்களிடம் அளித்துவிட்டனர், இதற்குப் பதிலாக, அமெரிக்கர் 'அலபாமா' நஷ்ட ஈட்டுக் கோரிக்கைகளை விட்டுக்கொடுத்தனர். மோசமான அறுவடைகளும், பொருளாதார மந்தநிலையும் 'எழுபது'களில் ஏற்பட்டதால், கனடா அத் தொல்லைகளிலிருந்து மீள்வதற்கு, முதலில் அதனுடைய வளர்ச்சியில் அக்கறை காட்டியது. 'முதலில் கனடா' என்ற தேசிய இயக்கம் ஒன்று

ஆரம்பிக்கப்பட்டது. கனடியத் தொழில்களைப் பாதுகாக்க வெளிநாட்டுப் பொருள்கள்மீது அதிகத் தீர்வைஅளிக்கவேண்டு மென்று அந்த இயக்கம் கோரியது. இதன் அடிப்படையில் மக்டொனால்ட் 1878-ல் நடந்த தேர்தலில் பிரசாரம் செய்து வெற்றி பெற்ருர்.

காலனிகளில் அவர்கள் சாதித்த சாதனைகள், ஓரளவிற்கு முற்றுப்பெருவிடினும், 1880 ஆவது ஆண்டில் ஐரோப்பாவின் மீது அவர்களுக்கு நல்லெண்ணம் ஏற்பட்டது. இந்தப் பேரரசின் மக்கள்மீது டிஸ்ரேலி அதிக நம்பிக்கை வைத்திருந்தார். அவர்களுக்கும் இந்த உணர்ச்சி ஏற்படுவதற்கு அவர் நல்ல காரியங்களைச் செய்தார். இதனுடைய முக்கியத்துவத்தை அரசியார் மனத்திலும் பதிய வைத்தார். காலனிமக்கள் பேரரசியிடம் காட்டிய அன்பு தனிப்பட்ட அரசியல்வாதிகளினுல்மட்டும் ஏற்பட்டதன்று. பல நடைமுறைகளுக்குத் தேவையான அக்கறைகளும், தங்களையும் அறியாத அன்பு உணர்ச்சியும் தாளுகவே உருவாகியது என்று சொல்லலாம். சுய ஆட்சி அளித்துவிட்டதால், காலனிகள் பிரிந்துபோக வேண்டுமென்ற மனப்பான்மையை விட்டுவிட்டன. காலனி ஆதிக்கத்திற்கும் வர்த்தகத்திற்கும் மற்ற அந்நிய நாடுகள் போட்டியிட்டன. பிரிட்டனில் நடுத்தர மக்கள், அவர்களுடைய தொழில்களைப் பாதுகாக்க வேண்டுமென்றும், வர்த்தகத்தை அபிவிருத்தி செய்யவேண்டு மென்றும் விரும்பினர். அதனுல், அவர்கள் அடைந்த காலனிகளைப் பாதுகாப்பதும், அங்கே அமைதியை நிறுவுவதும் அவர்களுடைய பொறுப்பாகிவிட்டது. காலனி நிர்வாகத்தில் ஒரு குறிப்பிட்ட முறையைப் பின்பற்றவில்லை; அதற்கென்று கோட்பாடுகளை நிர்ணயம் செய்துகொள்ளவில்லை; அது பல வகைகளில் உருவாகியது. அதன் வளர்ச்சியை, டென்னிஸனின் கவிதைகளிலும், ஃபுரூடின் (Froude) வரலாற்றிலும் காணமுடிந்தது. இப் புதிய சமுதாயத்தினரை டில்க் (Dilke), மற்றும் அவருடைய 'ரேடிகல்' கட்சியினர் வரவேற்றனர். அந்த வரவேற்பில், இவ் உணர்ச்சி உருவாகியதைக் காணமுடிந்தது. ஜான் லாரன்ஸின் புகழ்ச்சிலும், சிறந்த இந்திய நிர்வாகிகளின் திறமையிலும், அவர்களுடைய எதேச்சதிகாரத்திலும் காணமுடிந்தது. மற்ருெரு வகையில் லிவிங்ஸ்டன், மற்றும் புதிய நிலக் கண்டுபிடிப்பாளர் மீதும் அளவு கடந்த ஈடுபாடு ஏற்பட்டது. இதனுல் எந்த ஆங்கிலேய அரசாங்கமும் இக் காலனிகளுக்கு அபாயத்தை ஏற்படவிட்டாலும், அல்லது புறக்கணித்துவிட்டாலும், அந்த அரசாங்கத்தின்மீது மக்கள் ஆத்திரமடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

## சமகால நிகழ்ச்சிகள்

1850 ஆஸ்திரேலிய அரசாங்கச் சட்டம்.

1853 நியூ கேலிடோனியாவை ஃபிரான்ஸ் கைப்பற்றல்.

1854 சோமாலிலாந்தில் பர்ட்டனும் ஸ்பீக்கும்.

1856 விக்டோரியா நையான்ஸாவில் ஸ்பீக்.
சம்பேஸியில் லிவிங்ஸ்டன்.

1857 சிப்பாய்க் கலகம்.
அல்ஜீரியாவை ஃபிரான்ஸ் கைப்பற்றல்.

1858 கிழக்கிந்தியக் கம்பெனி முடிவுறல்.

1860 லெபனானில் போர்.
பீகினுக்குள் ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக்காரரும் பிரவேசித்தல்.

1861 அமெரிக்க உள்நாட்டுப் போர் தொடங்குதல்.

1863 சீனாவில் தளபதி கோர்டன்.

1865 ஜமெய்க்காவில் புரட்சி.

1867 கனடா கூட்டாட்சி.
அமெரிக்க ஐக்கிய நாடுகள் அலாஸ்காவை வாங்குதல்.

1868 அபிசீனியாவில் ஆங்கிலேயப் படை.

1869 சூயஸ் கால்வாய் வெட்டப்பெறுதல்.

1871 காங்கோவில் லிவிங்ஸ்டன்.

1873 ஜான்ஸிபாரில் அடிமை வியாபாரம் நிறுத்தப்படல்.
கீவாவை ரஷ்யா கைப்பற்றல்.

1874 ஃபிஜியை பிரிட்டன் அடைதல்.

1875 டி பிராஸா (De Brazza) ஃபிரெஞ்சுக் காங்கோவை விஸ்தரித்தல்.

1877 ராணி, இந்தியாவின் பேரரசி என்று பிரகடனம் செய்தல்.

1879 உரிமைமிக்க காங்கோ நாடு (Congo Free State) உருவாதல்.

1880 காந்தகாரில் ராபர்ட்ஸ்.
டிரான்ஸ்வால் போயர்கள் சுதந்திரம் அடைதல்.

# 7. இடரும் வீழ்ச்சியும், 1881-1914

இந்தக் குறுகிய கால்நூற்றுண்டில் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. இவ்விதமான மாற்றங்கள் முழுநிறைவு பெற்றன என்று கூறமுடியாது. 1914-ல், இந்த மாற்றங்களால் எதிர்காலத்தையும் பாதிக்கக்கூடிய இடர்கள் ஏற்படக்கூடிய சூழ்நிலை உருவாகியது. இவ்விதமான சூழ்நிலை சமயச்சீர்திருத்தக் காலத்திலிருந்து இங்கிலாந்திற்கு ஏற்பட்டதே இல்லை. அக் காலத்தில் நிரந்தரமான திருப்தியும், நிலைபெற்ற தன்மையும் நிலவி இருந்ததாகக் கண்டோம். இப்பொழுது அதிகாரங்களின் தன்மைகளும் முறைகளும் முற்றிலும் மாறிவிட்டன. உணர்ச்சியும் நோக்கமும் மாறிவிட்டன. ஆங்கிலேயரின், கிறித்துவ நாகரிகமும் காவியப் பண்பாடும் சிறப்புற்றெழுந்தன. அவர்கள் தங்களுடைய சிறப்புகளை இழந்துவிட்டனர். கிராமங்களை நகரங்கள் வென்றன. ஷேக்ஸ்பியர் காலம் முதற்கொண்டு, வோர்ட்ஸ்வர்த் தலைமுறை வரை ஜனநாயகத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், ஜனநாயகம் வெற்றிபெற்றது. எலிஸபெத் காலத்தில் பேரரசு, இப்பொழுது இருக்கும் பேரரசைக் காட்டிலும் சிறியது. ரோம் மன்னர்கள் ஆண்ட பேரரசைவிட ஆங்கிலேயரின் பேரரசு பரப்பில் மிகப் பெரியது. மற்ற ஐரோப்பிய நாடுகளுங்கூடப் பேரரசை வெளிநாடுகளில் நிறுவியதால், நமது அரசியல் கொள்கைகளும் மற்ற நிறுவனங்களும் மாறுதல்களுக்குள்ளாகவேண்டிய நெருக்கடி ஏற்பட்டன. அதற்கேற்பக் கொள்கைகளையும் மாற்றி அமைக்கவேண்டியதாயிற்று.

இந்த நூற்றுண்டு முடியும்பொழுது, இன்னும் விரைவாகச் செல்வாக்கு மிக்க சக்திகள் அம் மக்களுடைய சாதனைகளில் பதிந்திருந்தன. ஏதோ மறைமுகமாக, இங்கிலாந்தின் சிறப்பு மிக்க சான்றோர்கள், அம் மக்களுடைய தன்மைகளை மாற்றி அமைத்தனர். எடுத்துக்காட்டாக, 1892 வரை டென்னிஸனும், 1895 வரையில் ஹக்ஸ்லியும், 1898 வரையில் கிளாட்ஸ்டனும் 1901 வரையில் அரசியாரும் அக் கால மக்களின் வாழ்வில் இடம்

பெற்றனர். மூலதனமிட்ட பொருளாதார வளர்ச்சியில்மட்டும் அவர்கள் வாழ்க்கை செப்பமுறவில்லை. சிறந்த அரசியல்வாதிகளான பிரைட்டையும் கிளாட்ஸ்டனையும், ஆஸ்குயித்தும் லாயிட் ஜார்ஜும் மீற முடியவில்லை. அல்லது டிஸ்ரேலி, ஸாலிஸ்பரி ஆகியோரை பால்ஃபோர் (Balfour) மீறிவிடவில்லை. ஜார்ஜ் எலியட்டை ஸ்டீவன்சனே, அல்லது மில்லின் இடத்தை ஃபேபியன் சோஷியலிஸ்டுகளோ (Fabian Socialists) கைப்பற்ற முடியவில்லை. ஏதோ நாம் அறியாத சக்தி ஒன்று, நம்மை விட்டுப் பிரிந்துபோய்விட்டதை நாம் உணர்கின்றோம்.

நூறு ஆண்டுகளாக வளர்ச்சி அடைந்துவருகின்ற பொருளாதார அபிவிருத்தி, இப்பொழுது இன்னும் விரைவாக முன்னேறி வருகின்றது. 1871-ல் இங்கிலாந்தின் மக்கள்தொகை 31 மில்லியன்கள் என மதிப்பிடப்பட்டது. ஆனால், 1911-ல் மக்கள்தொகை 45 மில்லியன்களாக உயர்ந்துவிட்டது. இந்த மக்கள்தொகையின் 80 சதவிகிதம், இங்கிலாந்திலும், வேல்ஸிலும் மட்டுமே அடைந்துவிட்டது. ஒரு சதுர மைலுக்கு 600 பேர் வசித்துவந்தனர். அந்த இரண்டு பகுதிகளில்மட்டும், நகர்ப்புறங்களில் 80 சதவிகிதம் மக்கள் குடியிருந்தனர். லண்டனில் மட்டும் $4\frac{1}{2}$ மில்லியன் மக்கள் வாழ்ந்துவந்தனர். கிளாஸ்கோவிலும், பர்மிங்ஹாமிலும் ஒவ்வொரு மில்லியன் மக்கள் வசித்துவந்தனர். உண்மையில், மிகப் பெரிய தொழிற் புரட்சி, பிரிட்டனை அடியோடு மாற்றியமைத்துவிட்டது. கிராமியச் சூழ் நிலை அடியோடு மாறிவிட்டது. அந்தச் சூழ்நிலையில் உருவாகின்ற கலையும், கவிதைகளும், அரசியல் உணர்வுங்கூடச் சிதறிவிட்டன. கிராமிய அழகும்,கிராமியக் கைத்தொழில்களான இரும்புவேலை, லேஸ் தைத்தல், தோல் பதனிடுதல், நூற்றல் ஆகிய எல்லாம் மறைந்து கடல் வழியிலும், நில வழியிலும் ஏற்பட்ட விரைவான போக்குவரத்து வசதிகளால், பல தூரமான பிரதேசங்களிலிருந்தும் விரைவில் பொருள்களைப் பெற முடிந்தது. அமெரிக்காவிலிருந்தும், அர்ஜன்டைனாவிலிருந்தும், ஆஸ்திரேலியாவிலிருந்தும் கனி வகைகள் கெடாமல் குளிர்ச்சிச் சாதனங்களில் வைத்துக் கொண்டுவரப்படுகின்றன. நான்கு மில்லியன் ஏக்கர் சாகுபடி நிலங்கள், நிலக் குத்தகையிலிருந்து வருகின்ற 17 மில்லியன் பவுன்கள் மறைந்தேவிட்டன. அத்துடன் 150,000 விவசாயிகளும் தங்கள் நிலங்களை விட்டு வெளியேறிவிட்டனர். 1878-ல் கோதுமை குவார்ட்டர் ஒன்றுக்கு 45 ஷில்லிங் வீதம் விற்றுக்கொண்டிருந்தது, 1894-ல் மிகக் குறைந்த விலைக்கு, அதாவது 23 ஷில்லிங்குக்குக் குறைந்து விட்டது. ஐந்தில் நான்கு பாகம் கோதுமை, இப்பொழுது

வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. 60 சதவிகிதம் வெண்ணெயும், 80 சதவிகிதம் பால்கட்டியுங்கூட இறக்குமதி செய்யப்படுகின்றன. 1870-ல் இருந்த கூலிகளைவிட இப்பொழுது கிராமங்களில் அதிகமாக வாங்குகிறார்களென்றாலும், தெற்குக் கவுன்டிகளில், அவர்களுடைய நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது. அங்குள்ள மக்கள்தொகை, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைவிடக் குறைவாகவே இருந்தது.

உள்நாட்டின் விவசாய நிலை மந்தமாகிவிட்டாலும், பொருளாதாரப் புரட்சி நாட்டைப் பலமிக்கதாகவும், செல்வமிக்கதாகவும் ஆக்கிவிட்டது. நமது ஏற்றுமதிகள் 1880-ல் 698 மில்லியன் பவுன்களாகும். 1913-ல் விலை மாற்றத்தால் இதே ஏற்றுமதிகள் 1100 மில்லியன் பவுன்களுக்கு உயர்ந்தது. கிளாஸ்டனுடைய இளமைப் பருவத்தில் 60 மில்லியன் டன் நிலக்கரி உற்பத்தியாகியது. ஆனால் இந்த ஆண்டில் 287 மில்லியன் டன் நிலக்கரி உற்பத்தியாகியது. 1880-ல் எல்லாக் கப்பல்களும் நீராவியால் ஓட்டப்பெற்றன. 1914-ல் உலகத்தின் 47 சதவிகிதம் கொண்ட இரும்பு, எஃகு உற்பத்தி இங்கேதான் உற்பத்தி செய்யப்பட்டது. சூயஸ் கால்வாயில் போக்குவரத்துச் செய்கின்ற கப்பல்களில் 60 சதவிகிதம் நம்முடையதே. இந்தியா இறக்குமதி செய்கிற பொருள்களில் 65 சதவிகிதம் ஆங்கிலேயருடையதே. 1885-ல் வெளிநாடுகளில் மூலதனமிட்ட பொருள் 1300 மில்லியன் பவுன்களாகும். 1912-ல் மட்டும் 226 மில்லியன்கள் செலவு செய்யப்பட்டது.

பொருளாதார வளர்ச்சியால் அடைந்த செல்வம் மக்களிடையே நன்கு பயன்படுத்தப்பட்டது. தனிப்பட்ட மனிதனின் சராசரி வருமானம் இந்தக் கால்நூற்றாண்டில் ஏறக்குறைய மூன்று மடங்கு அதிகரித்துவிட்டது. இந்தச் செல்வம் மக்களிடையே பகிர்ந்தளிக்கப்பட்டிருப்பதற்கு எடுத்துக்காட்டாக, மரண விகிதம் மிகவும் குறைந்திருப்பதைக் குறிப்பிடலாம். குழந்தைகள் மரணமடைவது குறைந்திருப்பதையும் பார்க்கும் பொழுதே தெரிந்துகொள்ளலாம். நல்ல சுகாதார வசதிகளும் வீடுகளும் ஏற்பட்டது பொருளாதார வளர்ச்சியினால்தான். 1840-80-ல் தொழிலாளர்மீது விதிக்கப்பட்ட வரி விகிதம் பாதியாகக் குறைக்கப்பட்டது. 1880-ல் அவர்கள் பெற்ற கூலிகளைவிட, 1914-ல் அவர்கள் 30 சதவிகிதம் அதிகமாகவே பெற்றனர். 1850-ல் அஞ்சல் சேமிப்பு நிலையங்களில் வைக்கப்பட்டிருந்த பணம் £ 30 மில்லியன்; அது இப்பொழுது £ 200 மில்லியன்களுக்கு உயர்ந்துவிட்டது. இந்த நூற்றாண்டு முழுவதிலும் இரவலர் சட்டப்படி ஏறக்குறைய

மூன்று சதவிகித மக்களுக்குமட்டுமே இரவலர் படி அளந்திருக்கிறார்கள். இரவலர் நிலை இப்பொழுது மாறியுள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும். மேற்போக்காகப் பார்த்தால், இன்னும் மக்கள் பழைய பழக்க வழக்கங்களிலிருந்து மாறவில்லை என்பது போலத்தான் காண்கின்றது. சமுதாயத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் அவர்களை ஒன்றும் பாதித்ததாகவே தெரியவில்லை. பெரிய விக்கு மாளிகைகளும், டெவன்ஷயர் அல்லது லேன்ட்ஸ்ஸோன் இல்லங்களும் இன்னும் நாட்டின் மக்களையும் அரசியலையும் ஆட்டிப்படைத்து வந்தன. ஃபாக்ஸ் காலத்திலும், ரீஜன்ட் அரசன் தலைமையிலும் இந்தப் பிரபுக்களின் இல்லங்களில் அரசியல் முடிவுகள் பல செய்யப்பட்டதைப்போல, இன்னும் நடைபெற்றுதான் வந்தன. வாட்டர்லூ போர்க்களத்தில் பின்பற்றப்பட்ட அதே இராணுவப் பயிற்சியைத்தான் இன்னும் வீரர்களுக்குரிய பயிற்சியாக அளித்துவந்தனர். போர்க்களத்தில் பின்பற்றப்பட்ட அதே பழக்கவழக்கங்களையும் திருச்சபையில் கடைப்பிடிக்கின்ற அதே பழக்கவழக்கங்களையும் ஜேன் ஆஸ்டின் நாவலில் எழுதியிருப்பதைபோலவே பின்பற்றினர். விக்டோரியா அரசியாரின் பிற்கால ஆட்சிக் காலத்திலுங்கூட அதே பழக்கவழக்கங்கள்-ஒழுங்காகக் கோவில்களுக்குச் செல்லுதல், பழைய நடைஉடை பாவனைகள், கிராமங்களிலுள்ள குடும்பத் தலைவர்களின் பொறுப்பு, அவர்களுடைய பெண்களுக்கு அவர்கள் செய்கின்ற சேவை, பழைய பல்கலைக் கழகங்களிலிருந்து பட்டம் பெறுகின்றவர்கள், இங்கிலாந்திலும் இந்தியாவிலும் சிவில் சேவைகளுக்கு அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் ஆகியவற்றில் சிறிய மாற்றங்கள்கூட ஏற்படவில்லை. பிரதம அமைச்சரின் குதிரைகள் டெர்பி குதிரைப் பந்தயத்தில் வெற்றி பெற்றாலே, அவருடைய மதிப்பு உயர்கின்ற காலம் அது. கவுன்டி கிரிக்கட் விளையாட்டுக்களிலும் அவர்களுடைய வட்டாரப் பற்றையும், டபிள்யூ. ஜி. கிரேஸ் என்பவரின் பொற்காலத்தையும் காணமுடிகின்றது. விவசாய மந்த நிலைக்குப் பிறகு, நிலப்பிரபுக்களின் செல்வ நிலைமை அழிந்துவிட்டது. தவிர, சொத்துடைமையுள்ளவர்களிடம் ஒற்றுமை காணப்படவில்லை. அவர்களின் பெருமை குறைந்துவந்தது.

1896 வரையிலும் விலைவாசிகள் குறைந்து வந்தன. கட்டுப்பாடில்லா வாணிகம் முறையாக வளர்ந்துவந்தது. ஆனால், மேல் அதிகாரத்தின் தலையீடும் சந்தேகமான சூழ்நிலையும் இந்த முறையைச் சுற்றியிருந்தன. அந்நிய நாடுகளின் போட்டியால், நமது ஆதிக்கம் பாதிக்கப்பட்டது. 1880-ல், அப்பொழுது தொழில் வளம் அடைந்திருந்த வல்லரசுகளான பிரிட்டன், ஜெர்மனி,

அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவற்றின் மக்கள்தொகை முறையே, 35, 45, 50 மில்லியன்களாகும். ஆனால், 1911-ல், அந்த நாடுகளிலிருந்த மக்கள்தொகை முறையே, 45, 64, 91 மில்லியன்களாகும். 1890-ல் ஜெர்மனியின் எஃகு உற்பத்தி, நமது உற்பத்தியைவிட இரண்டு மடங்கு அதிகமாகிவிட்டது. அமெரிக்காவின் ஏற்றுமதிகள் நம் ஏற்றுமதிகளைவிட, ஐந்து மடங்கு அதிகமாகிவிட்டன. தனிப்பட்ட ஆங்கிலேயச் சுரங்கத்திலிருந்து ஆண்டு ஒன்றுக்கு 100 டன்னுக்குச் சிறிது குறைவாகவே உற்பத்தி செய்யப்படுகினறது. ஆனல், அமெரிக்காவில் மரம் வெட்டுகின்றவன் இதைவிட அதிகமாகவே மரக்கரியை உற்பத்தி செய்கிறான். பிரிட்டனுடைய விவசாயம் மட்டும் குறைந்துவிடவில்லை. 1860-ல் நமது ஏற்றுமதிகளில் 60 சத விகிதம் ஜவுளி வர்த்தகத்தால் கிடைத்தது. 1914-ல் இதன் ஏற்றுமதி சரி பாதியாகக் குறைந்துவிட்டது. ஒரு காலத்தில் அதிக இரும்பு உற்பத்தி செய்துகொண்டிருந்த இந்தநாடு இப்பொழுது மிகவும் குறைவாகவே உற்பத்தி செய்கின்றது. கடற்கரையோரம் உள்ள புதிய பகுதிகளில், 1914-ல்கூட அடிப்படை எஃகு உற்பத்தி மிகவும் குறைந்திருந்தது. இந்த வகையில், காப்டெனின் அனுமானம் தவறிவிட்டது. முதலில் ஃபிரான்ஸ், பிறகு ஜெர்மனியும், அமெரிக்காவும் நமது பொருள்களுக்கு அதிகமான தீர்வைகளை விதித்தன. குறிப்பாக அமெரிக்கா, 1890ஆவது ஆண்டுதான் மக்கின்லே காப்புத் தீர்வையின்படி, நமது பொருள்களுக்கு அதிகமான தீர்வைகளை விதித்தது. ஆங்கிலேயரின் பழைய மார்க்கட்டுகளைக் கைவிடவேண்டிய நிலை ஏற்பட்டது. அதற்குப் பதிலாக, ஆங்கிலேய உற்பத்தியாளர்கள், ஆசியா, ஆஃப்பிரிக்கா மார்க்கட்டுகளைக் கைப்பற்ற முயன்றனர். ஆனால், அங்கும் ஜப்பானின் போட்டி தொடங்கியது. இந்தியாவும், அதனுடைய நாட்டு ஜவுளிகளுக்குப் பாதுகாப்புத் தேடிக்கொண்டது. இது வரையிலும் ஆங்கிலேயரின் செல்வம் அந்த நாட்டினுடைய ஏற்றுமதிகளைப் பொறுத்திருந்தது. ஏற்றுமதிகள் குறைந்தவுடனே, நல்ல தரமான பொருள்களை உற்பத்தி செய்து வர்த்தகம் செய்ய முயன்றது. அத்துடன், வெளிநாடுகளில் மூலதனமிடவும் கப்பல் போக்குவரத்து நடத்தவும் முற்பட்டது. ஆனால், இந்தப் புதிய வளர்ச்சி, மற்ற உலக நாடுகளின் சூழ்நிலையைப் பொறுத்திருக்கிறது. தூரத்திலுள்ள இத் தீவுகளில், நகர மக்களின் மூலதனத்தைப் போட்டு லாபம் சம்பாதிப்பது, பல சுற்றுச் சார்புகளைப் பொறுத்திருந்தது. தென் ஆஃப்பிரிக்காவின் தங்க உற்பத்தியோ அல்லது அமெரிக்காவில் ஏற்படுகின்ற மந்த நிலையோ, அல்லது இந்தியாவில் ஏற்படுகின்ற பஞ்சமோ, ஆங்கிலேய மக்களின் வாழ்க்கையில் பெரும் மாறுதல்களைச் செய்துவிடுகின்றன. தவிர,

ஆங்கிலேயர் அவர்களுடைய விவசாயத்தையும் வளர்ச்சி யடையச் செய்யாது விட்டுவிட்டனர்.

நமது நாட்டில் முன்னேற்றம் இருந்தாலும், அதனுடைய வேகம் இப்பொழுது குறைந்துவிட்டது. இதனைக் காரண மாகவோ அல்லது விளைவாகவோ எடுத்துக்கொண்டாலும், மக்கள் பிறப்பு வீதம் கணிசமாகக் குறைந்துவிட்டது. 1876-ல் ஆயிரத்துக்கு 36 பேர் வீதம் பிறப்புத்தொகை இருந்தது. 1913-ல் 23 பேர் வீதத்திற்குக் குறைந்துவிட்டமை குறிப்பிடத்தக்க தாகும். மேல் நிலை வகுப்பினரிடையேயும், மேல் இடைநிலை வகுப்பினரிடையேயும், குடும்பக் கட்டுப்பாடு முறை பின்பற்றப் பட்டுவந்தது. குழந்தைகளை அதிகமாகப் பெறுகின்ற கூட்டத் தினரும், தொழிலாளர்களும் வெளிநாடுகளுக்குச் சென்று குடி யேறினர். 1890-ல் 50,000 பேர்களும், 1907-ல் 235,000 பேர் களும், 1911–13-ல் இன்னும் அதிகமாகவும் வெளிநாடுகளுக்குச் சென்றனர். 1900 முதல் தேசிய வருமானத்தில் தேக்கநிலை ஏற்பட்டது. கூலி நிர்ணயத்தில்கூட தேக்கநிலை ஏற்பட்டது. 1912-ல்கூட, 1900-ல் கொடுத்துவந்த கூலியே கொடுக்கப் பட்டது. சுரங்கத் தொழிலாளர் கூலி இன்னும் குறைந்தே விட்டது. வீடு கட்டும் திட்டங்களும் தடைபட்டன. இதனால் சமுதாயத்தில் சில தீமைகளும் ஏற்பட்டன. உதாரணமாக, ஸ்காட்லாந்திலுள்ள பாதிப் பேர், ஒன்று அல்லது இரண்டு அறை களுள்ள சிறிய வீடுகளிலேயே குடியிருந்தனர். தொழிலாளர்கள் போராடி, வாரத்திற்கு 52 மணி நேரம், சில இடங்களில் 48 மணி நேரம் பெற்றபோதிலும், கடைகளில் வேலைசெய்கின்ற உதவி யாளர்கள் வாரத்திற்கு 70 மணி நேரம் சட்டபூர்வமாக வேலை செய்யக் கடமைப்பட்டிருந்தார்கள். நாட்டின், மூன்றில் ஒரு பகுதி மக்கள் போதிய வசதிகளின்றி வாழ்ந்தனர். இராணுவத் திற்கு ஆட்கள் சேர்க்கும்பொழுது, மூன்றில் ஒரு பகுதியினர் நல்ல உடல் நலம் இல்லாத காரணத்தால் சேர்த்துக்கொள்ளப் படவில்லை.

உற்பத்திக் குறைவும் விநியோகக் குறைபாடும் பெருத்த நெருக்கடியை ஏற்படுத்திவிட்டன. தவிர, இந்த நெருக்கடிக்கு, ஆங்கிலேயரின் பழைய வியாபார முறையும், தொழிற் சங்கங் களால் உற்பத்திக்கு ஏற்படும் இடர்ப்பாடுகளும், முதலாளித் துவத்திற்கு ஏற்பட்ட அரசியல் எதிர்ப்புகளும், பாதகமான காப்புத் தீர்வைகளும் மேலும் அபாயத்தை உருவாக்கின. அரசாங்கத்தின் கொள்கைகளுக்கும் சமுதாயத்தின் குறிக்கோள் களுக்கும் இருந்த இடைவெளி விரிந்துகொண்டே போனது.

1884-ல் இயற்றிய மூன்றுவது சீர்திருத்தச் சட்டமும் 1888-ல் இயற்றிய கவுன்டிக் கவுன்சில் சட்டமும், வாக்காளர் எண்ணிக்கையை அதிகமாக்கியபோதிலும் அதனுல் தல அரசாங்கத்தில் காணப்பட்ட நிலப் பிரபுக்களின் ஆதிக்கம் குறைந்தாலும், சமுதாயத் தேவைகளைச் சரியானபடி புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. 1870 முதல் கட்டாய ஆரம்பக் கல்வித் திட்டம் அமலில் இருந்தது. ஆனுல், 1891-ல்தான் ஆரம்பப் பள்ளிகளில் கட்டணங்கள் வசூலிக்கப்படுவது ரத்தானது. இதனுடன் மான்செஸ்டரில் புதிய பல்கலைக்கழகம் 'எண்பதுகளில்' நிறுவப்பட்டது. இதைப் பின்பற்றி, 1909ஆவது ஆண்டுக்கு முன்பே, வேல்ஸ்,பர்மிங்ஹாம், லிவர்பூல், லீட்ஸ், ஷெஃப்பீல்ட்,பிரிஸ்டல் ஆகிய பல்கலைக்கழகங்களும் நிறுவப்பட்டன. ஆரம்பப்பள்ளிகளில் கல்வியும், பல்கலைக்கழகக் கல்வியும், உயர்நிலைப்பள்ளிக் கல்வியும், தொழில் கல்வியும், ஒரே சமநிலையில் வளர்ச்சி அடையவில்லை. இவைகளைப்பற்றிக் கவனம் செலுத்தப்படவே இல்லை. ஆனுல், இக் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்துவதற்குப் பல வகையில் நிதி திரட்டப்பட்டது. 1902-ல் இயற்றிய சட்டத்திற்குப் பிறகு, கல்வி வளர்ச்சியில் நல்ல முன்னேற்றம் காணப்பட்டது. கல்வி வளர்ச்சி ஏற்பட்ட பிறகு, புதிய நகர வாழ்க்கையும் தொடங்கியது. இதற்கு, விலை மலிவான பத்திரிகைகளும் உதவி செய்தன. இதன் விளைவாகப் புதிய ஜனநாயகக் கருத்துகள் உருவாகின. இக் கருத்துகளைக்கொண்ட புதிய ஜனநாயகவாதிகள், பழைய பயன் கருதுவோர் கொள்கைகளையும், கட்டுப்பாடற்ற வாணிபக் கொள்கைகளையும் ஏற்றுக்கொள்ளவில்லை. புதிய முன்னேற்றம், புதிய சமுதாயத்தை உருவாக்குகின்றது என்று முன்னேற்றவாதிகள் கூறுகிருர்கள். தனிப்பட்டவர்கள் செய்கின்ற வேலையை அரசாங்கம் ஏற்று நடத்தவேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர் என்று கிளாட்ஸ்டன் இதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும். இதனுல் பொதுப்பொருளாதாரத் துறையில் வீழ்ச்சி ஏற்படும் என்று அவர் கருதினுர். நமது கொள்கைகள் அவ்வளவாக ஜெர்மனியிலிருந்து நாடுகடத்தப்பட்ட கார்ல்மார்க்ஸிடமிருந்து எடுக்கப்பட்டவை அல்ல. கார்ல் மார்க்ஸ் 1883-ல் இங்கிலாந்தில் இறந்தார். ஆனுல், பர்மிங்ஹாமில் சேம்பர்லேன் நிகழ்த்திய ஜனநாயகப் போராட்டத்திலிருந்தும், திருச்சபையில் இணங்காதவர்கள் கோயில்களில் நிகழ்த்திய பிரசாரங்களிலிருந்தும், ரஸ்கின், வில்லியம் மோரிஸ் ஆகியோரின் அறிவுரைகளிலிருந்தும் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்டவையாகும். ரஸ்கினும், வில்லியம் மோரிஸ் ஆகியோரும் நல்ல கலையைப் போல நல்ல வாழ்வும் பணத்தின் அடிப்படையில் வைத்து

அளவிடக் கூடாதென்றும், அல்லது அந்த நல்ல வாழ்வை அதிர்ச்சியுறும் போட்டியால் பெறக்கூடாதென்றும் கூறினார்கள்.

டிஸ்ரேலியின் சமுதாயக் கொள்கைகளுக்காகவும் பொதுக் கல்வித் திட்டத்திற்காகவும், அவர் நிறையச் செலவினங்களைக் காட்டினார். அவர் காலத்தில் அதாவது, எழுபதுகளின் தொடக்க காலத்தில் சாதாரண வரவு செலவுத் திட்டத்தில் 65 மில்லியன் பவுன்கள் செலவினத்திற்காக ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால், பத்து ஆண்டுகளுக்குப் பிறகுங்கூட, செலவினம் 87 மில்லியன் பவுன்களுக்குத்தான் அதிகரித்தது. ஆனால், பொதுத்திட்டங் களுக்காகச் செலவிடும் வேகம் பின்புதான் துரிதப்படுத்தப் பெற்றது. 1901-ல் 132 மில்லியன் பவுன்களும் 1914-ல் 209 மில்லியன் பவுன்களும் செலவிடப்பட்டன. அந்தச் செலவினத்தில், பாதுகாப்புக்காகமட்டும், 20 மில்லியன் பவுன்கள் அதிகமாக ஒதுக்கப்பட்டது. மற்றும் சாதாரண நிர்வாகச் செலவினங்களும் அதிகமாயின. இதனுடன் மத்திய அரசாங்கத்தின் அதிகாரக் குவிப்பும் அதிகரித்தது. இந்தப் புதிய நூற்றாண்டு தொடங்கியபோது, மத்திய அரசாங்கத்தின் அதிகாரக் குவிப்பே, முக்கியமான வளர்ச்சியாகக் காணப்பட்டது. 1889-ல் விவசாய போர்டு நிறுவப்பட்டது. 1899-ல் கல்வி போர்டு ஒன்றை நிறுவினர். 1911ஆவது ஆண்டில் எடுத்த கணக்கெடுப்பில், இருபது ஆண்டுகளில், அரசாங்க ஊழியர்கள் மொத்தத் தொகை இரட்டிப்பு மடங்கு அதிகரித்துவிட்டது என்பது தெரியவந்தது. இவர்களுக்குச் சம்பளங்கள் தருவதற் கென்று, வருமான வரி, 1888-ல் 6 பென்னியாக இருந்தது, 1909-ல் 1 ஷில்லிங் 2 பென்னியாக அதிகரித்துவிட்டது. மேலும், மரண வரி, உபரி வரி ஆகிய வரிகளும் விதிக்கப்பட்டன. மறைமுகமாக விதிக்கப்படும் வரிச்சுமை நேர்முக வரி விதிப்பிற்கு மாற்றப்பட்டது. பணமுடைய சிறுபான்மையினர்மீது வரி விதித்து, மற்றப் பெரும்பான்மை மக்களுடைய தேவைகளைக் கவனித்தனர்.

கன்சர்வேடிவ், லிபரல் அரசாங்கங்கள் மக்களுடைய தேவைகளைப் படிப்படியாகக் கவனித்தன. ஆனால், அதே சமயத்தில் சோசலிசக் கோட்பாடு மக்களிடமிருந்து வளர்ந்தது. இந்தச் சோசலிஸ்டுக் கோட்பாடுகளை வளர்த்த இயக்கங்கள், ஹைண்ட் மேனுடைய (Hyndman) சோசலிச டெமாகிராடிக் ஃபெடரேஷன் (Social Democratic Federation), மோரிஸ் என்பவருடைய 'சோசலிஸ்டு லீக்' (Socialist League), மற்றும் ஃபேபியன் சொசைட்டி (Fabian Society) என்ற இயக்கமும்

முக்கியமானவை. இந்த ஃபேபியன் சொசைட்டியில் மிக முக்கிய மான பங்கெடுத்துக்கொண்டவர்கள், ஸிட்னி (Sidney), பீட்ரிஸ் வெப் (Beatrice Webb), பெர்னுட் ஷா ஆகியோராவர். அமெரிக் காவைச் சார்ந்த ஹென்றி ஜார்ஜ் என்பவர், 'முன்னேற்றமும் வறுமையும்' என்ற நூல் எழுதினூர். அந்த நூலில், உழைப்பின் றிப் பெரும் ஊதியத்தின்மீது அதிக வரிவிதிக்க வேண்டுமென்றும், அரசாங்கம் அத்தகைய நிலங்கள்மீது கட்டுப்பாடு கொண்டு வரவேண்டுமென்றும் அவர் எழுதியிருந்தமை சில மக்களைக் கவர்ந்தது. லண்டனிலுள்ள கிழக்குப் பகுதியில் வாழ்கின்றவர்க ளுடைய துயரங்களும், 1889-ல் ஏற்பட்ட துறைமுகத் தொழிளாலர்களின் வேலைநிறுத்தமும், துயரம் போக்கும் படையை அமைக்கத் தூண்டின. டாயின்பீ ஹால், இன்னும் பல தருமசிந்தனைக் கழகங்கள் மக்களிடையே சமத்துவத்தைப் பற்றிப் பிரசாரம் செய்தன. தொழிலாளர்களிடையே, இக் கருத்தைப் பிரசாரம் செய்வதில் தொழிற்சங்கமும், தொழிலா ளர் கட்சியும் ஈடுபட்டன.

1892-ல் தொழிற்சங்க அங்கத்தினர் தொகை 1½ மில்லியன் பேர்களைக் கொண்டிருந்தது. ஆனுல், அந்த எண்ணிக்கை 1914-ல் 4 மில்லியன்களாகப் பெருகிவிட்டது. ஸ்காட்லாந்தைச் சேர்ந்த கீர் ஹார்டி (Keir Hardie) என்பவருடைய தொடக்க முயற்சி யால் 1900-ல் தொழிலாளர் கட்சி (Labour party) உருவாகியது. 1906-ல் நடந்த பொதுத்தேர்தலில், 53 தொழிலாளர் கட்சி யைச் சார்ந்த அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பது அவர்களுடைய கட்சியின் வளர்ச்சியைக் குறிப்பதாகும்.

ஜனநாயகத்துடன் பேரரசும் போட்டிபோட்டுக்கொண்டு வளர்ந்தது. இவ்விரண்டு கொள்கைகளும், டில்க் (Dilke), சேம்பர்லேன்(Chamberlain) ஆகியோரின் பிடியில் இருக்கும் வரை அவை ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையனவாகவே இருந்தன. இரண்டு இயக்கங்களும் அரசைப்பற்றி ஓர் உன்னதமான மதிப்பை வைத்திருந்தன. இவ்விரண்டும் கட்டுப்பாடற்ற வாணிகத்துடன் மோதவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. டிஸ் ரேலியின் தீர்க்கதரிசனத்தாலும், ஸீலீ (Seeley), ஃப்ரூட் (Froude) போன்ற வரலாற்று ஆசிரியர்களின் எழுத்துகளாலும், ஆங்கிலோ இந்திய எழுத்தாளரான கிப்ளிங்கின் ஆர்வமிக்க கருத்துகளும், தென் ஆஃப்பிரிக்கத் துணிச்சல்காரரும் குறிக்கோள்வாதியுமான செசில் ரோட்ஸ் (Cecil Rhodes) ஆகியோரும் பேரரசு வளர்ச்சி அடைவதற்கு ஒருவகையில் உதவிபுரிந்துள்ளனர். தவிர, அரசியாரின் விழாக்கள், தூரத்தில் வாழ்கின்ற ஆங்கிலேய மக்களின் உணர்ச்சியையும் அன்பையும் பலப்படுத்தி ஒன்றுக

இணைத்தன. தாய் நாட்டில் உள்ள அந்த மக்களின் உறவினர் களுடனும் தொடர்புபடுத்தியது. தவிர, ஆஃப்பிரிக்காவில் நிகழ்ந்த பல மோதல்களும், ஜெர்மனியின் ராணுவ வளர்ச்சியும் ஒன்று சேரவைத்தன. அவர்களுடைய பாதுகாப்பும் நலன்களும், அவர்களுடைய மதிப்பையும் பெருமையையும்விட மிக முக்கிய மானது. அவர்களுடைய பழைய உடைமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்குப் பலமிக்க சுவர்கள் எழுப்பிக்கொண்டதில் விந்தையில்லை. மூன்றில் ஒரு பங்கு பிரிட்டிஷ் ஏற்றுமதிகள் 1913-ல் பேரரசு காலனிகளுக்குத்தான் அனுப்பப்பட்டன. அதைப்போன்றே, 70 சதவிகிதம் ஆங்கிலேயக் குடியேற்ற வாதிகள் காலனிகளுக்கு அனுப்பப்பட்டனர்.

பீல் ஆட்சி செய்த காலத்திலும், அந்த ஆட்சியைக் காப்டென் (Cobden) எதிர்த்த காலத்திலும் இருந்த மக்க ளுடைய மனநிலை இப்பொழுது புறவாழ்க்கையைப் பொறுத்த மட்டிலும் மாறி இருக்கிறது. நியூமேன், மில் ஆகியோரின் மாறுபட்ட சிந்தனைகளால் மக்கள் மனம் ஒரு காலத்தில் ஈர்க்கப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அந்த மனநிலை மக்களிடம் காணமுடியாது. இந்தக் கால்நூற்றாண்டில், வாழ்க்கை மிக வேகமாகவும் சுறுசுறுப்பாகவுந்தான் சென்று கொண்டிருந்தது. ஆனால், அந்த வாழ்க்கையில் ஒருமைப்பாடு என்ற உணர்ச்சி காணப்படவில்லை. அவர்களிடம் ஏதோ தொடர்பில்லாத வாழ்க்கை நடத்துவதுபோல ஓர் உணர்வு இருந்தது. அந்த வாழ்க்கையில் அவர்களுடைய பெற்றோர்கள் விட்டுவைத்த சிறு வர்த்தக அலுவலகங்கள், இப்பொழுது பொதுக் கம்பெனிகளாக மாறிவிட்டன. அக் கம்பெனிகளைத் தொழில் துறை நிபுணர்களும் முன்பின் தெரியாத பங்குதாரர்களும் நிர்வ கிக்கின்றனர். தவிர, பல கம்பெனிகள் ஒன்றாக இணைக்கப்பட்டு, மிகப்பெரிய அளவில் மூலதனமும் போடப்படுகிறது. இவற் றிற்கு எதிராகப் பெரிய தொழிற்சங்கங்களும் நிறுவப்பட்டன. அந்தத் தொழிற்சங்கம் நாடு முழுவதிலுமுள்ள தொழிலா ளர் நலன்களைப் பிரதிபலிக்கின்றது. நீராவியாலும் மின்சாரத் தாலும் இயங்குகின்ற போக்குவரத்துகளும், பின்பு கடைசியாக வந்த மோட்டார் கார்களும், ஆங்காங்கே கூட்டம் கூட்டமாக வசித்து வந்த மக்களைச் சிதறுதலாக வாழவைத்துவிட்டன. ஆயிரக்கணக்கான மக்கள் வேலைசெய்ய வருவதும், தூங்குவதற் குச் செல்வதும் போன்ற ஒரு சுறுசுறுப்பான நிலையை ஏற்படுத்திவிட்டது. ஓர் இடத்தில் உட்காருவதற்கும் மனமில் லாத இந்த மக்கள் தங்களுடைய சமயக் கருத்துகளையும் மாற்றிக்கொண்டனர். சமயச் சீர்திருத்த காலத்தில் இருந்த

கருத்துகளும் இப்பொழுது அவர்கள் கொண்டுள்ள கருத்துகளும் முற்றிலும் வேறுபட்டவை. டார்வினிசமும் இயற்கை விஞ்ஞானமும், கிறித்துவ நம்பிக்கையைக்கூட அசைத்து விட்டன. திருவிழாக்களில் ஏற்படுகின்ற உற்சாகத்தை அவை கெடுத்துவிட்டன. பல சிறப்பான ஆங்கிலேய ஆசிரியர்களான மேத்யூ ஆர்னல்ட், ஹக்ஸ்லி, 'ஃபார்ட்நைட்லி ரெவ்யூ' (Fortnightly Review) என்ற இதழின் ஆசிரியரான ஜான் மார்லி, ஃப்ருட், லெஸ்லி ஸ்டீஃபன், டி. எச். கிரீன் ஆகியோர் செய்த பிரசாரத்தில், கிறித்துவ நம்பிக்கையைப்பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், கிறித்துவ ஒழுக்கம்மட்டுமே மக்களிடம் ஆழமாகப் பதிந்திருந்தது. அதன் காரணமாக, டில்க் என்பவரையும் பார்னெல் என்பவரையும் வெளியேற்றினர். அதேசமயத்தில் கோயில்களுக்கு வழக்கமாகப் போவதும், ஞாயிற்றுக்கிழமைகளை ஓய்வு நாட்களாகக் கருதுவதும் மக்களிடமிருந்து சிறிது மறைந்துவிட்டன. இவர்களுடைய மனநிலையை மாற்றுவதற்காக, ஆக்ஸ்ஃபோர்ட் இயக்கத்தவரும், மற்றும் பல மேல் திருச்சபைப் பிரமுகர்களும் பலவாறு பிரசாரம் செய்து அவர்கள் மனத்தைத் திருப்ப முயன்றனர். 'லக்ஸ் முண்டி' (Lux Mundi) கட்டுரைகள் பிரசுரமாயின. பகுத்தறிவையும் தெய்வீகச் சக்தியையும் இணைத்துக் கூறினர். ஆனால், சாதாரண மக்கள் இழந்துவிட்ட நம்பிக்கையை மீண்டும் அவர்களைப் பெறுமாறு செய்ய முடியவில்லை.

இலக்கியச் சாதனையில், ஸ்காட் அல்லது மெக்காலே ஆகியோர் பெற்ற உன்னத இடத்தை அப்பொழுதும் யாரும் பெறவில்லை. முன்னேற்றத்தின் வெற்றி என்று இந்த வரலாற்று ஆசிரியர் அனுமானித்ததை யாரும் ஆட்சேபிக்க முடியவில்லை. அக் காலத்திய மக்கள் கொண்டிருந்த முன்னேற்றக் கருத்துகளும், மற்றும் சமயப் பொறையும் அவர்களுக்குப் பின்பு தோன்றிய தலைமுறையினர் காலத்தில் ஆட்டம் கண்டுவிட்டன. இந்தக் காலத்தின் இறுதியில், டார்வினுடைய பொதுப்படையான கொள்கைகளும், கருத்துநிலைவாதிகளின் மெய்யுணர்வுக் கோட்பாடுகளும், புரட்சிக் கருத்துகளின் முன்பு தலைகுனிய வேண்டியதாயிற்று. பொருள், அணுச்சிதைவு, பௌதிகம், உளவியல் போன்ற துறைகளில் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகளும் பல புரியாத இரகசியங்களை வெளிப்படுத்தின. காலமும் பரப்பும் என்ற புதிய கண்டுபிடிப்பில் மனித இனத்தின் வரலாறு அடங்கியுள்ளது. இவற்றையெல்லாம் பார்க்கும்பொழுது மனித இனம் புரியாததாகவும், குறுகியும், பாதுகாப்பின்றியும் இருப்பது புலனாயிற்று. இந்தப் புதிய வளர்ச்சியில், ஏதாவது ஒரு சிறப்புத்

துறையில் கல்வி பெறுகின்ற ஆர்வம் மக்களிடையே எழுந்தது. பொதுநோக்குடன் பெறுகின்ற கல்விமுறை சிறிது சிறிதாக மறைந்தது. இலக்கியமும் கலையும் ஒரு காலத்தில் தேசியத் தலைவர்களாலும் ஓவியக் கலைஞர்களாலும் ஒன்றுபடுத்தப் பட்டன. மிகச் சிறந்த ஆசிரியர்களான ஸ்காட், டிக்கன்ஸ், டென்னிஸன், மெக்காலே போன்றவர்களெல்லாம் இருந்திருக் கிறார்கள். ஆனால், இப்பொழுது இக் கலைகளெல்லாம் பல பிரிவு களாகவும் வகைகளாகவும் சிறப்புற்று விளங்கத் தொடங்கின.

1890 முதல் ஏழாவது எட்வர்டு 1911-ல் இறக்கும்வரை யிலும் நமது பண்பாட்டின்மீதே சந்தேகம் ஏற்படுகிறது. நமது பண்பாடு இந்தக் காலத்தில் சிறிது சரிந்தது என்று கூறினால் அது மிகையாகாது. ரஸ்கின் கூறிய ஒழுக்கக் கட்டுப்பாடுகளை யாரும் ஏற்கும் நிலையில் இல்லை. சில இலக்கியப் படைப்புகள் மிகவும் சிறப்புடையதாக இருந்தபோதிலும், அவைகள் ஒழுக்கச் சார் புடையவைகளாக இல்லை. மார்லி, தாமஸ் ஹார்டி, ஸாமுவெல் பட்லர் ஆகியோர் படைத்த இலக்கியப் படைப்புகளில் ஒருவகை யான துயரத்தைக் காணுகின்றோம். வெல்ஸ், ஷா ஆகியோரின் படைப்புகளில், உண்மையைப் படம்பிடித்துக் காட்டினாலும் சிறந்த நாடகங்களாக விளங்கினாலும், ஆக்கச் சக்தியின்றியும் குறைபாடுகளைக் காண்பதிலேயே நாட்டமுடையதாகவும் இருப் பதைக் காண்கின்றோம். எட்வர்டின் அரசவையிலும், அரசியாரின் இடைக்கால ஆட்சியில் இருந்த பண்பாடு குறைந் திருந்தது. இதற்கு முக்கியக் காரணமாக இருந்தது வணிகச் சூதாட்டத்தில் நிறையப் பொருள் சேர்த்துக் குவித்ததுதான் என்று சொல்லலாம். ரோட்ஸின் ஏகாதிபத்யக் கொள்கைகளைப் பின்பற்றுகிறவர்களும் நிறைய இருந்தனர். ஆட்சிசெய்கின்ற வகுப்பினரிடம் ஏதோ செயலற்ற தன்மை இருந்ததையும் காண முடிகின்றது. இக் காலத்தில்தான் பால்ஃபோர் (Balfour), ஆஸ்குயித் (Asquith) முதலியோர் வாழ்ந்தனர். ஆண், பெண் உறவிலும் பெரியதொரு மாற்றம் தோன்றலாயிற்று. பெண்கள் ஆண்களின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை கோரினர். ஆண்கள் செய்கின்ற தொழில்களில் எல்லாம் அவர்கள் போட்டியிட்டனர். திருமணமான பெண்களுக்கு இருந்துவந்த சில கட்டுப்பாடு களிலிருந்து அவர்கள் விடுதலை கோரினர். மேலும், அவர்கள் விவாக ரத்துரிமையும் சொத்துரிமையும் வேண்டுமென்றனர். விவாக ரத்து வழக்குகள் பெருகின. இதனுடன் அவர்கள் ஆண்க ளுடன் அரசியலிலும் சமத்துவமாக இருக்கும் உரிமையையும் கோரினர். இதனால், விக்டோரியா காலத்தில் பின்பற்றப்பட்ட குடும்ப லட்சியங்கள் பாதிக்கப்பட்டன.

ஜனநாயகக் கருத்துகள் நீண்ட காலத்திற்கு வலிமையுடைய கருத்துகளாக நிலைபெறும் தன்மையைப் பெற்றிருந்தாலும், அப்பொழுதிருந்த சூழ்நிலையில் சிறிது அழிவு வேலையையும் செய்தன. ஜனநாயகத்திற்குப் புதிய மனித உரிமைகள் நிர்ணயம் செய்வதற்கும், விஞ்ஞான அடிப்படையில் செயலாற்றும் அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தாலும், மக்கள் கல்வி அறிவுபெறும் வாய்ப்புகள் சிறிது காலங்கடந்தே ஏற்பட்டன. மனித இனத்தின்மீது அவர்களுக்குப் பரிவு இருந்தது. அவர்களுடைய செயல்கள் உணர்ச்சி வசப்பட்டவை. திடுக்கிடும் செயல்களால் மக்கள் மனத்தைக் கவர்ந்தனர். ஆல்ஃபிரட் ஹார்ம்ஸ்வர்த் என்பவருடைய ஆதரவால் மலிவான விலையில் செய்தித்தாள்கள் விற்கப்பட்டன. இந்தச் செய்தித்தாள்கள் உண்மையல்லாதனவற்றையும் செய்திகளாகப் பரப்பின. அவை தரமில்லாது, எளிதான செல்வாக்கைப் பெற முயன்றன. பொதுமக்களின் கருத்துகள் பிரதிபலித்தன என்று கூறப்பட்டது. ஆனால், அந்தக் கருத்துகள் பொறுப்பற்ற தன்மையில் பயன்படுத்தினால், அதனால் அதிக தீமைகளே ஏற்படும்.

1914-ல் ஜனநாயகத்தின் சில முரண்பட்ட கருத்துகள் பிரிட்டனில் இன்னும் செல்வாக்குப் பெறவில்லை. அரசாங்கத்தின் முறைகள் இன்னும் ஜனநாயக அடிப்படையில் வளர்ச்சி அடையவில்லை. சமத்துவம் கோருகின்றவர்கள் சுதந்திரத்தை அழித்துவிடுகின்ற முரண்பட்ட கருத்துக் காணப்படுகிறது. ஜனநாயகத்தின் ஆட்சி, பெரும்பான்மை மக்களை எப்படியோ சரிசெய்து, பின்பு அவர்கள் பெயரிலேயே சர்வாதிகாரத்தை நிலை நிறுத்துகின்றது. ஆனால், நாட்டின் பழைய வரலாறும், தொன்று தொட்டு ஆங்கிலேய மக்களிடத்து இருந்துவந்த இயற்கைப் பண்புகளும், பழக்கவழக்கங்களும் சமுதாயத்தில் சமநிலை எய்தலும், அல்லது பேரரசின் தீமைகளும் அங்கே சர்வாதிகாரம் தோன்றமுடியாமல் செய்துவிட்டன. 1914-ல், ஒழுக்கத்திலும் பொருள் சேர்ப்பதிலும் புரட்சி ஏற்பட்டது. சென்ற நூற்றாண்டிலுள்ள குறிக்கோள்களும், சமுதாய நலன்களும், கலை விருப்பமும் ஜனநாயகத்தால் அழிந்துவிடும் தன்மையைப் பெற்றன.

# 8. கிளாட்ஸ்டனும் ஐரிஷ் பிரச்சினையும், 1880-1886

உலகத் தொல்லைகளிலிருந்து விடுபட்டுச் சிறிதுகாலம் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்றிருந்த கிளாட்ஸ்டனை அவருடைய எழுபத்தொன்றாவது வயதில் மீண்டும் அரசாங் கத்தை அமைக்குமாறு அரசி வேண்டுகோள் விடுத்தார். கடவு ளாகப் பார்த்து விடுத்த இந்த அழைப்பை ஏற்று, மீண்டும் பதின்மூன்று ஆண்டுகள் வரையிலும் அவர் முதலமைச்சராகப் பெருந்தொண்டாற்றினார்.

அவர் அமைத்த இரண்டாவது மந்திரிசபையில் சிறப் பெய்திய அரசியல்வாதிகள் பதவி வகித்தபோதிலும் அவர் களிடம் ஒற்றுமையில்லை. ஆக்கவேலைகளில் ஈடுபடுவதற்கும் அவர்களுக்கு அக்கறையில்லை. அந்த மந்திரிசபையிலுள்ள பதினான்கு அங்கத்தினர்களில், ஆறுபேர் அவருடைய கட்சியைச் சேர்ந்த நெருங்கிய தொடர்புடையவர்களாவர். அவர்க ளெல்லாம் விக் பிரபுக்கள். அவர்களுடைய நலன்களை ஹேரிங் டன் என்பவர் காமன்ஸ் சபையில் பிரதிநிதித்துவம் செய்தார். 'ரேடிகல்' கட்சியைச் சார்ந்தவர்கள் பயமுறுத்தலின் பேரிலேயே மந்திரிசபையினுள் நுழைந்தனர். அந்தச் சமயத்தில் சேம்பர்லேனுக்கு உதவியாக இன்னும் டில்க் முன்னணிக்கு வரவில்லை. 1882ஆவது ஆண்டிற்குப் பிறகே, அவர் சேம்பர் லேனுடன் சேர்ந்தார். பிரைட் (Bright), ரேடிகல் கட்சியின் பழைய அங்கத்தினர் ஆவார். அவர் இப்பொழுது மிகவும் பலவீனமாக இருந்தார். எகிப்தில் வன்முறையைப் பயன் படுத்தியதால், அவர் அந்தச் செயலைக் கண்டித்து ராஜிநாமா செய்தார். அந்த நிகழ்ச்சி நடந்து இரண்டு ஆண்டுகளுக்குள், ஐரிஷ் பிரச்சினை அரசாங்கத்திற்கு வந்தது. இந்தப் பிரச்சினை, ஆர்கில் (Argyll), ஃபார்ஸ்டர் (Forster), லேன்ட்ஸோன் (Lans-downe) ஆகியோரைப் பதவியைவிட்டு விரட்டியது. லேன்ட்

ஸோன் மந்திரிசபையை விட்டே போய்விட்டார். ஹார்கோர்ட் ஒரு முக்கியமான அரசியல்வாதி; நன்றாகப் பேசும் திறமை பெற்றவர்; ஆனால், தொல்லைகளை அளிப்பவர். கிளாட்ஸ்டன் மட்டுமே, இந்த மந்திரிசபையில் பிளவு ஏற்படாது அரும்பாடு பட்டுக் காத்துவந்தார்.

இரண்டு நிகழ்ச்சிகள் அவரைத் துவக்கத்திலிருந்த தொல்லை களுக்குள்ளாக்கின. அவர்மீதிருந்த பகைமையை அரசியார் மாற்றிக்கொள்ளவில்லை. சில சமயங்களில் மிகவும் கீழ்த்தர மாகவும் அவரிடம் நடந்துகொண்டார். அவரைப் பதவிக்கு வரவிடாது பலவிதங்களில் தடை செய்திருக்கிறார். 'இந்தப் பைத்தியம் பிடித்த கோபக்காரன், ஐரோப்பாவிலுள்ள நமது இடங்களை ஆக்கிரமிக்க, ரஷ்யாவுக்கு இடமளித்துவிட்டு, ராணியாரின் பேரரசை நிர்வகிக்க வந்துவிட்டாரே; அவருக்கு என்ன தகுதி இருக்கின்றது?' என்று மிகவும் ஆத்திரமாக ராணியார் அவர்களுடைய காரியதரிசிகளிடம் ஒருமுறை கூறினார். டிஸ்ரேலி, இன்னும் அவருடைய நம்பிக்கையைப் பெற்றிருந்தார். கேபினட்டிற்குள் நடக்கும் எல்லாக் காரியங் களிலும் அவர் மறைமுகமாகத் தொடர்புவைத்திருந்தார். அவர் ராணியாரிடம் விசுவாசத்துடன் நடந்துகொண்டாலும், அவருடைய விசுவாசத்தை அவர் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாது அவரைக் கண்டித்தே வந்திருக்கிறார். அவருடைய நீண்ட குற்றச்சாட்டுகளுக்கும் விவாதங்களுக்கும் கிளாட்ஸ்டன் பதில் அளிக்கவேண்டி நேர்ந்தாலும், பெரும்பாலும் கேபினட் டில் நிகழும் முக்கியமான காரியங்களை ராணியாருக்குத் தெரிவிக் கின்ற பழக்கத்தைக் குறைத்துக்கொண்டார். அரசியாருக்கு வயதாகிவிட்டது. இருப்பினும் அடுத்துப் பட்டத்துக்கு வரும் வாரிசிடங்கூட பொறுப்பைத் தர அவருக்கு மனமில்லை. எல்லாக் காரியங்களையும் அவரே செய்ய விரும்பினார். உதாரணமாகப் படையைப் பொறுத்தவரையிலும், அவரே ஆதிக்கம் செலுத்த விரும்பினார். பிரதம அமைச்சருக்குப் பல நீண்ட கடிதங்கள் எழுதி அதிகாரம் செலுத்தவும் முயன்றார். பிரதம அமைச் சருக்கு எழுதிய ஒரு கடிதத்தில், சேம்பர்லேன் மிகவும் அபாய கரமான மனிதனென்றும், பிரபுக்களுக்காகப் பரிந்து பேசுகின்றவ ரென்றும் கண்டித்திருந்தார். ஆனால், அவருடைய நாட்டின் மீதும் பேரரசின்மீதும், அளவு கடந்த பற்றுதலையும் அக்கறையும் கொண்டிருந்ததால், சில சமயங்களில், கேபினட்டில் காலந் தாமதமாக எடுக்கும் நடவடிக்கைகளையும் வன்மையாகக் கண்டித்தார்.

கிளாட்ஸ்டன் அவருடைய தலைமுறையில் நீண்டகாலம் வாழ்ந்துவிட்டார். வெளிநாட்டு விவகாரங்களைக் கவனித்து

வந்த கிரென்வில் அளவுக்கு மீறிய அடக்கத்தையும், சபல புத்தியையும் உடையவராக இருந்தார். ஆனால், இவரைவிட, பிஸ்மார்க் மிகவும் திறமைவாய்ந்தவர். விக்டோரியா ஆட்சியின் இடைக்காலத்தில் பின்பற்றிய கொள்கைகளை, ஹார்கோர்ட் பின்பற்றினார். பேரரசுக் கொள்கைகளெல்லாம் அவருக்குச் சிறிதும் பிடிக்காதவையாக இருந்தன. தீவிரவாதிகளின் பெரிய சமுதாயப் படையை கிளாட்ஸ்டனுடைய லிபரலிசம் தடுத்து நிறுத்த வேண்டியிருந்தது. அல்லது சில சமயங்களில் கவலை எடுக்காமலும் இருந்தது. ஹார்கோர்ட்டும், மற்ற விக் அங்கத்தினர்களும் சொத்துடைமைகளைப் பாதுகாக்கும் பிரதிநிதிகளே என்றும் அவர்களால்தான் முன்னேற்றம் தடை பெறுகின்றதென்றும் தீவிரவாதிகள் கருதினர். சமுதாயத்தில் உள்ள இந்த இரண்டு குழுவினரால் ஏற்பட்ட மோதல், எதிர் கட்சியினரையும் பாதித்தது. ரண்டால்ஃப் சர்ச்சில், மற்றும் அவரைச் சார்ந்தவர்கள் நான்காவது கட்சியை ஆரம்பித்து, காமன்ஸ் சபையில் உள்ள கட்சித் தலைமையை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். கட்சியின் தலைமை அப்பொழுது மிகவும் திறமைமிக்க, ஆனால், உணர்ச்சியற்ற ஸ்டாஃபோர்ட் நார்த்கோட்டிடம் (Stafford Northcote) இருந்தது. சேம்பர்லேனுக்கும் அவர்கள் புதிய டோரி ஜனநாயகத்தைக் கற்பித்துக் கொடுத்தனர்.

இரண்டு தலைமுறைகளில் வளர்ந்து வந்த பல நெருக்கடியான நிகழ்ச்சிகளைத் தீர்க்கும் பொறுப்பு, இந்த அரசாங்கத்தின்மீது விழுந்தது. முதலில், டிஸ்ரேலியின் அயல்நாட்டுக் கொள்கையைக் கைவிடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. தென் ஆஃப்ரிக்காவில் ஒருமுடிவு செய்யவேண்டிய கட்டம் நெருங்கிவிட்டது. எகிப்தில் பல புதிய பொறுப்புகளைச் சுமக்க நேரிட்டது. பிஸ்மார்க்கின் அருவருக்கத்தக்க பகைமையும், ரஷ்யாவின் ஆக்கிரமிப்பும், அயர்லாந்தில் உள்நாட்டுப் போர் ஏற்படும்படியான சூழ்நிலையும் ஆகிய இத்தனை பிரச்சினைகளையும் இந்த அரசாங்கம் சமாளிக்க வேண்டியிருந்தது. இந்த நெருக்கடியில், அவர்களிடையே ஒருமைப்பாடு ஏற்பட்டது. அயல்நாட்டு விவகாரங்களைக் கவனிக்க வேண்டியிருந்ததால், உள்நாட்டில்வேண்டிய சீர்திருத்தச் சட்டங்களை இயற்ற அவர்களுக்கு அவகாசம் கிடைக்கவில்லை. லண்டன், கவுன்டிகள், பரோக்கள் ஆகிய தல அரசாங்கங்களைச் சீரமைக்கும் திட்டங்களையும் சேம்பர்லேனின் வர்த்தகச் சீர்த்திருத்தங்களையும் உடனடியாகக் கவனிக்கவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. பாராளுமன்ற அங்கத்தினரான சார்லஸ் பிராட்லா (Charles Bradlaugh) என்ற நாத்திகர் பிரமாணம் எடுத்துக் கொள்ளும் விவகாரத்தில் பல மாதங்கள் விவாதம் நடந்தது.

பின்பு, அவருக்கு எதிராகப் பாராளுமன்றம் தீர்ப்புக் கூறியது. காமன்ஸ் சபையில் நிகழ்கின்ற விவாதங்களைத் தடுத்து ஐரிஷ் அங்கத்தினர்கள் ஆர்ப்பாட்டம் செய்ததையொட்டி, 1881-ல் அரசாங்கம் பழைய காமன்ஸ் சபையின் முறையை மாற்றி, விவாதங்கள் முற்றுப்பெறுமலேயே முடிவு செய்கின்ற உரிமைகளை அளித்தது. அதனுல், அவர்கள் தயாரித்த மூன்ருவது சீர்திருத்தச் சட்டம் நிறைவேறுவதற்கு வசதியாக இருந்தது. அந்தச் சட்டத்தின் முக்கிய அம்சம், வாக்காளரின் எண்ணிக்கையை அதிகரிப்பதும், 1884-ல் சில தொகுதிகளைச் சீரமைப்பதுமாகும். இச் சீர்திருத்தத்தைக் கொண்டுவர விபரல்கள் உறுதியாக இருந்தனர். சர்ச்சில்போன்ற கன்சர்வேடிவ் கட்சியினரும் இந்த மசோதாவை எதிர்க்க முன் வரவில்லை. ஆனுல், இந்த மசோதா அயர்லாந்துக்கும் பொருந்துமா என்று விவாதிக்கத் தொடங்கினர். ஏனெனில், இந்த மசோதா அயர்லாந்துக்கும் பொருந்துமானுல், அங்கே 'நேஷனலிஸ்டுக் கட்சி' முன்னணிக்கு வர வாய்ப்பு ஏற்படும். ஹார்டிங்டனுக்கு இந்தப் பயம் இருந்தது. மற்ருெரு விவகாரமும் இந்த மசோதாவில் முக்கியத்துவம் பெற்றது. இந்த மசோதா நிறைவேறவில்லையென்ருல், சேம்பர்லேன் இந்த அரசாங்கத்தில் பதவி வகிக்க முடியாதென்று கூறிவிட்டார். பரம்பரை பணக்காரர்கள் உழைப்பதுமில்லை, அல்லது நூற்பதுமில்லை என்று சேம்பர்லேன் அவர்களை வன்மையாகக் கண்டித்தார். அதனுல், நிலங்களையெல்லாம் அரசாங்கம் கட்டுப்படுத்தவேண்டும் என்ற திட்டத்தைக் கொண்டுவர அவர் முயற்சி செய்தார். விக்குகளுங்கூட இந்த மசோதா நிறைவேற வழி விட்டனர். ஆனுல், விக் கட்சியிலுள்ள பெரும் நிலப் பிரபுக்கள் இந்த மசோதாவை வன்மையாகக் கண்டித்தனர். பிரபுக்கள் சபையில், அவர்களுடைய நலன்களை ஸாலிஸ்பரி விடாப்பிடியாகப் பாதுகாத்தார். அவர்கள் சேம்பர்லேனை 'ஜேக் கேட்' (Jack Cade) என்று நையாண்டி செய்தனர். பிரபுக்கள் சபையில் இந்த மசோதாவுக்கு எதிர்ப்பு ஏற்பட்டதால், 'ரேடிகல்' கட்சியினர் பிரபுக்களை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்தனர். ஒன்று பிரபுக்கள் ரத்ததிகாரம் திருந்தவேண்டும் அல்லது அது முடிய வேண்டுமென்று அவர்கள் கூக்குரலிட்டனர். நீண்ட காலமாகவே நீடித்துக்கொண்டிருந்த இந்தப் போராட்டம், அரசியார், மற்றும் கிளாட்ஸ்டன் ஆகியோரின் தலையீட்டினுல், இரு தரப்பினரிடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி, இந்த மசோதா அயர்லாந்துக்கும் பொருந்தும் என்று முடிவு செய்தனர். ஆனுல், கன்சர்வேடிவ்கள் அதேசமயத்தில், தன் அங்கத்தினர் தொகுதிகளை இயற்றுவதில் வெற்றிபெற்றனர். 1867-ல் நகரங்களில் வாழ்கின்ற வீடுடையவர்களுக்கு அளிக்கப்பட்ட வாக்

குரிமை கவுன்டிகளுக்கும் விஸ்தரிக்கப்பட்டது. இதனால், வாக்காளர் தொகை இரண்டு மில்லியன் பேருக்குமேல் அதிகரித்து விட்டது. எழுபத்தொன்பது சிறிய தொகுதிகள் பிரதிநிதித்துவத்தை இழந்துவிட்டன. மற்ற முப்பத்தாறு நகரங்களில் இருந்த இரட்டை அங்கத்தினர் தொகுதிகள், ஓர் அங்கத்தினர் தொகுதிகளாகச் சீரமைக்கப்பட்டன. இந்த மசோதா ஒரு சாதாரண முன்னேற்றத்தைத்தான் அளித்தது. 'ரேடிகல்' களுக்கு இந்த மசோதா அவ்வளவு திருப்தி அளிக்கவில்லை. ஆனால், இந்த அரசாங்கத்தின் மதிப்பீட்டை, உள்நாட்டுக் கொள்கையால்மட்டும் நிர்ணயம் செய்துவிட முடியாது.

'மேற்கிலிருந்து வருகின்ற அந்தப் புகை மண்டலம், வரப் போகும் பெரிய புயலை உணர்த்துகின்றது' என்று நாற்பது ஆண்டுகளுக்கு முன்பாகவே கிளாட்ஸ்டன் அயர்லாந்தைப்பற்றி எழுதும்போது குறிப்பிட்டார். ஆனால், நாற்பது ஆண்டுகளாகப் பயமுறுத்திவருகின்ற புயல் இன்னும் மறையவில்லை. அயர்லாந்தைப் பொறுத்தவரையில் வார்த்தைகளை அவர் அளந்தே பேசினார். தல அரசாங்கத்தைப்பற்றித் தவறி அவர் பேசிய சில சொற்கள்கூட விக்குகளுக்குப் பயத்தை ஏற்படுத்திவிட்டது. உண்மையில், அவர் அயல்நாட்டு விவகாரங்களை, நிதி, போப்பின் தவறாமைக் கொள்கை ஆகியவற்றில் கவனம் செலுத்தி வந்ததால் அயர்லாந்துப் பிரச்சினையிலும், உள்நாட்டுச் சீர்திருத்தங்களிலும் அதிக அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. அவர் ஒரு சமயத்தில் ஒரு செயலைமட்டும் செய்யும் பழக்கத்தை மேற்கொண்டவர். ஆனால், 1877-ல் அயர்லாந்தில் ஏற்பட்ட விவசாய மந்தநிலைக்குப் பிறகு, அயர்லாந்தை இன்னும் புறக்கணிக்க முடியவில்லை. அயர்லாந்தில் மோசமான அறுவடைகளும், குறைந்த விலைகளும், உருளைக்கிழங்குச் சாகுபடி அழிந்துவிட்டதும் ஆகிய இவைபோன்ற நிகழ்ச்சிகள் நெருக்கடியை உண்டாக்கி விட்டன. கடன் கொடுத்தவர்கள் எல்லாம் திருப்பிக் கேட்டனர். இதனால், மீண்டும் குத்தகைக்காரர்களைக் காலி செய்யும் பிரச்சினை கிளம்பியது. 1880-ல் மட்டும், 10,000 பேர்களுக்குமேல் நிலங்களிலிருந்து அகற்றப்பட்டார்கள். இவர்களை வெளியேற்றியவுடன், பழையபடி குற்றங்களை மிகுதியாகப் புரிய ஆரம்பித்தனர். பழைய நிகழ்ச்சிகளே என்றாலும், இப்பொழுது முற்றிலும் மாறிய அயர்லாந்திலே இவை நிகழ்ந்தன.

அயர்லாந்தில் நிறுவப்பட்ட 'ஹோம் ரூல்' அல்லது சுய ஆட்சிக் கட்சியின் தலைமை முன்பு, கன்சர்வேடிவான ஐஸாக் பட் (Isaac Butt) என்பவரிடம் இருந்தது. அவர் சுய ஆட்சி என்பது

ஆங்கிலேயப் பாராளுமன்றத்தில் அயர்லாந்தின்மீது சிறிது தாராள மனப்பான்மையைக் காட்டுவது என்பதையே குறிப்பதாகக் கருதினர். ஐரிஷ் விவகாரங்களை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளும்பொழுது அம் மக்களின் விருப்பத்தை ஒட்டியே முடிவுகள் செய்யவேண்டுமென்பதையே அவர்கள் பெரிதும் விரும்பினர். ஆனல், 1879-ல் பட்டின் மரணத்திற்குப் பிறகு அந்தக் கட்சியின் தலைமை வேறு கைகளுக்கு மாறியது. அந்தக் கட்சியின் தலைமைப் பதவியை, ஸ்டீவர்ட் பார்னெல் (Stewart Parnell) என்பவர் வகித்தார். விக்லோவில் உள்ள ஆங்கிலேயப் பிராட்டஸ்டென்ட் நிலக்கிழார்கள் குடும்பத்தில் அவர் பிறந்தார் அவருடைய அன்னை அமெரிக்க மாது. அவருடைய குடும்பத்திற்கே, ஐரிஷ் யூனியன் சட்டத்திற்கு எதிர்ப்பைத் தெரிவித்தவர்களென்ற பெயர் உண்டு. அதனல் அவருக்குங்கூட, ஆங்கிலேயரின் ஆதிக்கம் அயர்லாந்தில் ஏற்படுவதில் உடன்பாடில்லை. எனவே, அவர் அதை வன்மையாக எதிர்த்துப் பிரசாரம் செய்தார். அறிவு வளர்ச்சியைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாதவரும் மனித அன்பைப்பற்றி அக்கறையில்லாதவருமான இவர், தனி ஒருவனுடைய விருப்பு வெறுப்பிற்குப் பயன்படுத்தும் அரசியலை ஒரு கருவியாகவே கருதினர். உண்மையில், ஆங்கிலேயர்களுக்கு உறுதி இருக்குமானல், அயர்லாந்தைக் கட்டாய முறைகளில் பணியவைக்க முடியும். ஆனல், அதேசமயத்தில் இதே உறுதியை ஐரிஷ்காரர்களும் பின்பற்றி, ஆங்கிலேயரையும் பணியவைக்க முடியும் என்ற கொள்கையினை உடையவராக இவர் இருந்தார். இந்தச் சாதனையைச் சாதிக்க அவர் இரண்டு முனைகளில் போராட்டத்தை ஆரம்பித்தார். வெஸ்ட்மினிஸ்டரில் உள்ள பாராளுமன்றத்தில், ஐரிஷ் கோரிக்கைகள் நிறைவேறும் வரையிலும் போராடப் போவதாக அறிவித்து, அப் பாராளுமன்றத்தில் நிகழ்கின்ற எல்லா நிகழ்ச்சிகளையும் ஆர்பாட்டம் செய்து தடை செய்தார். இவர்களுடைய கோரிக்கைகளைக் கேட்கும் வரையிலும் எந்தக் கட்சி இவருக்குச் சாதகமாக இருக்கிறதோ அந்தக் கட்சிகளோடு எல்லாம் தொடர்புவைத்துக்கொண்டார்.

டப்ளினில், இவர் அரசாங்கத்திற்குத் தொல்லைகள் தருவதற்காகவே நிலப் பிரபுக்களைத் தாக்கினர். இதற்காகவே இவர் நிலச் சங்கத்துடன் (Land League) தொடர்பு வைத்துக்கொண்டார். இந்த நிலச் சங்கம் 1879-ல் விடுதலை அடைந்த ஃபெனியன் (Fenian) கைதியான மைக்கேல் டேவிட் என்பவரால் நிறுவப்பட்டது. குத்தகைக்காரர்களை வெளியேற்றுவதையும் அதிக வாடகையை வசூலிப்பதையும் வன்செயலைப் பயன்படுத்தியாவது நிறுத்துவதென்ற முடிவைக்கொண்டிருந்தார். இந்தக் கொள்கைகளை

மீறிய நிலச்சொந்தக்காரனாவது அல்லது புதிய குத்தகைக்காரனாவது குற்றம் புரிந்தான் என்று தெரிந்தால், அவனைத் தொழுநோய் பிடித்தவனைச் சமூகத்திலிருந்து ஒதுக்குவதைப்போல ஒதுக்கிவிடுவோம் என்று பார்னெல் அறிவித்தார். நிலச் சங்கத்தைத் தவிர, அவர், ஐரிஷ்-அமெரிக்கர்களுடன் அதிகத் தொடர்பு வைத்துக்கொண்டு பல சதித் திட்டங்களைத் தீட்டினார். இவர்களுடைய தொடர்பினால், மிகவும் இரகசியமாகச் சங்கங்கள் தோன்றின. இவற்றுள் 'கிளான்-நா-கால்' (Clan-na-Gael) என்ற கழகமும், 'இன்வின்சிபிள்ஸ்' (Invincibles) என்ற கழகமும் முக்கியமானவையாகும்.

அந்தக் கழகங்களின் முக்கியமான கொள்கைகள், கொலை செய்தல், வெடிமருந்து வைத்துச் சாகடித்தல் போன்றவையாகும். இந்தச் சூழ்நிலையில்தான் கிளாட்ஸ்டன் தமது அரசாங்கத்தை அமைத்தார். நாட்டிலேபோர், நீதியின் சீர்குலைவு, அரசாங்க நிர்வாகத்தின் முடிவு போன்ற நிகழ்ச்சிகளை அந்த அரசாங்கம் சமாளிக்கவேண்டியிருந்தது. வெளிநாடுகளிலுள்ள பெரிய அரசனைப்போன்று பார்னெல் கருதப்பட்டார். அமெரிக்காவிற்கு அவர் விஜயம் செய்தபொழுது ஐரிஷ் படைகள் அவருக்குப் பாதுகாப்பாக அணிவகுத்துச்சென்றன. காங்கிரஸ் சபையிலுங்கூட அவர் பேசுவதற்கு அழைப்பு விடுக்கப்பட்டது.

இந்த நிலையில், அயர்லாந்தில் சீர்திருத்தங்களைச் செய்வதிலும், சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாப்பதிலும் அரசாங்கம் முனைந்தது. இந்த விவகாரத்தில் ஒரு சிக்கலான நிலைமை ஏற்பட்டது. கேபினட்டிலேயே இந்தப் பிரச்சினையில் கருத்து வேற்றுமை இருந்துவந்தது. ஸ்பென்ஸர், ஹார்டிங்டன், ஹார்கோர்ட் என்ற விக்குகள் ஒரு சார்பிலும், 'ரேடிகல்' கட்சியினரான சேம்பர்லேன், டில்க் ஆகியோர் ஒரு சார்பிலும் இருந்தனர். சேம்பர்லேன், டில்க் ஆகியோர், ஐரிஷ் மக்கள்மீது விதிக்கப்பட்டுள்ள பல கட்டாயச் சட்டங்கள் ரத்தானால்தான், அந்த மக்களுடன் உடன்பாடு செய்துகொள்ள முடியுமென்ற கருத்தைக் கொண்டிருந்தனர். கிளாட்ஸ்டனுங்கூட இப்படிச் செய்வதே நல்லதென்று கருதினாலும், அவருடைய பயிற்சியும், கேபினட்டில் அவர் செலுத்திவந்த ஆதிக்கமும், அவரை 'ரேடிகல்'களுடைய கருத்துகளை ஆதரிக்கவிடவில்லை. உள்நாட்டிலே போராட்டமும், எகிப்தில் அக்கறையும், வாக்காளர் மசோதாவும் ஆகிய நிகழ்ச்சிகள் அவரை உடனடியாக எந்த முடிவுக்கும் வரமுடியாதபடி செய்துவிட்டன. ஆதலால், காலதாமதம், சமரசம், முடிவில் வலிமை என்ற குறைபாடுகள் அவரிடம் காணப்பட்டன.

நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்ட குத்தகைதாரர்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதற்கு இயற்றிய மசோதாவைப் பிரபுக்கள் ஒத்துக்கொள்ளவில்லை. 1881-ல் கிளாட்ஸ்டன் மீண்டும், நில மசோதாவைக் கொண்டுவந்தார். அந்த நில மசோதாவின் முக்கிய அம்சங்கள். நியாயமான வாடகை, விருப்பப்படி விற்றல், கால வரையறுத்தல் ஆகியவையாகும். இந்த மசோதாவை இயற்றியது, அவருடைய மிகச் சாதுர்யமான பாராளுமன்றத் திறமையைக் காட்டுகின்றது. அவர் பாராளுமன்றத்தில் கடைசியாக அடைந்த வெற்றி இதுவேயாகும். அரசாங்கத்திலிருந்து நியமிக்கப்படுகின்ற நடுவர்களால், வாடகைகள் பதினைந்து ஆண்டுகளுக்கு நிர்ணயம் செய்யப்படும். குத்தகைதாரர்களை வெளியேற்ருமல் அவர்களைப் பாதுகாத்துக்கொள்வர். இவ்விதமான மாறுதல்களைச் செய்தது, ஆங்கிலேய விவகாரத்திலேயே பெரிய புரட்சிகரமான மாற்றத்தை ஏற்படுத்துவதற்கொப்பாகும். ஆனல், இந்த நிலச் சட்டத்தில், நிறைய அம்சங்கள் விடப்பட்டிருக்கின்றன. சுமார் 130,000 குத்தகைதாரர்களுடைய வாடகை பாக்கி வசூல் ஆகாமலிருந்தது. அதனுல், அங்கிருந்து லார்டு-லெப்டினன்ட்டுக்கு அப்பணத்தைக் கட்டாயமாக வசூல் செய்ய அதிகாரம் தரப்பட்டிருந்தது. இதனுல், மீண்டும் அயர்லாந்து மக்கள்மீது கட்டாயச் சட்டங்கள் அமலாகும் நிலை இருந்தது. இந்த நிலச் சட்டத்தை எதிர்த்து, நிலச் சங்கம் போராடும் என்று பார்னெல் கூறினுர். அதனுல், இன்னும் அதிகப் பயன் ஏற்படும் என்று எதிர்பார்த்தார். ஆனுல், பார்னெலை அக்டோபர் மாதத்தில் கைதுசெய்து, கில்மெயின் ஹாம் (Kilmainham) சிறையில் வைத்தனர்.

பின்பு 1882-ல் இவர்களிடையே சமரசம் ஏற்படுவதற்குப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. பின்பு, சேம்பர்லேனின் தலையீட்டால், பார்னெல்லுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அதன்படி, பார்னெல் விடுதலை செய்யப்பட்டார். பின்பு வாடகை பாக்கியை ரத்து செய்துவிடுவதென்றும், அதற்குப் பதிலாகப் பார்னெல், அயர்லாந்தில், குற்றங்களும் ஆர்ப்பாட்டங்களும் ஏற்படாதவாறு பார்த்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். இவ்வித நிபந்தனைகளை ஏற்று, அந்த நிலச் சட்டத்தை அமல் செய்வதைவிட, ராஜிநாமா செய்வதே மேல் என்று கருதி அயர்லாந்தின் லார்டு-லெப்டினன்டான (Lord-Lieutenant) கூப்பரும், ஐரிஷ் காரியதரிசியான பார்ஸ்டரும் தங்களுடைய பதவிகளை விட்டு விலகினர். அவர்களுக்குப் பதிலாக, ஸ்பென்ஸர், லார்டு-லெப்டினன்டாகவும், ஹேரிங்டனுடைய சகோதரன் ஃபிரடெரிக் கேவன்டிஷ்

காரியதரிசியாகவும் பதவியில் அமர்த்தப்பட்டனர். ஆனால், பார்னெல் விடுதலையாகி ஒரு வாரத்திற்குள், கேவன்டிஷ் மற்றும் அவருடைய உதவி காரியதரிசியான பர்க் என்பவரும், 'இன்வின்சிபிள்' என்ற இரகசியக் கழகத்தாரால் போனிக்ஸ் பூங்காவில் கொல்லப்பட்டனர். இதனால் மற்றொரு கட்டாயச் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்தனர். இதைப் பின் தொடர்ந்து படுகொலைகளும், கால்நடைகளை வதைத்தல், உளவு சொல்லுகின்றவர்களைக் கொல்லுதல் போன்ற வழக்கமான குற்றங்கள் அயர்லாந்தில் பேரளவில் நிகழ்ந்தன. இவர்களுக்காக இன்னும் அதிகமான சலுகைகளைத் தரமுடியாதென்று ஆங்கிலேய அரசாங்கம் அறிவித்தது. ஆனால், ஸ்பென்ஸரின் உறுதியான ஆட்சியால், இந்த நிலச் சட்டம் அமல் நடத்தப்பட்டது அதனால் சில நன்மைகளும் விளைந்தன. பார்னெல்லும் திருமதி ஓ'ஷியா (Mrs. O'Shea) என்ற மாதின்மீது காதல் கொண்டிருந்தார். அவருடைய கவனம் வேறுபக்கத்தில் இழுக்கப்பட்டது. மேலும், சில ஆங்கிலேயக் கட்சிகளின் உதவியால் அயர்லாந்துக்குத் தனிப் பாராளுமன்றம் நிறுவுகின்ற நோக்கத்தை இந்தத் தீவிரவாதிகளுடன் சேர்ந்து கெடுத்துக்கொள்ள விரும்பவில்லை. இரகசிய வாக்களிப்புமுறை வந்துவிட்டதால், நீண்டகாலமாகவே நினைத்திருந்த அவருடைய எண்ணம் இப்பொழுது நிறைவேறியது. 1884-ல் இயற்றிய வாக்காளர் சட்டம், அயர்லாந்துத் தொகுதிகளுக்குப் பாதுகாப்பு அளித்தது. ஆங்கிலேயச் சட்டங்கள் அமல் நடத்தப்படுவதற்கு, அவர் குற்றவாளிகளுடன் சேர்ந்து கத்தோலிக்கப் பாதிரிகளைத் துன்புறுத்தினர். இப்பொழுது, ஆங்கிலேயக் கட்சிகளுடன் சேர்ந்துகொண்டு குற்றவாளிகளின் செயல்களைக் கண்டித்தார்.

கட்சித் தலைவர்களின் நோக்கத்தைச் சந்தேகிப்பது உண்மையில் நியாயமானது. இந்த நெருக்கடி ஏற்படுவதற்கு நெடுங்காலத்திற்குக் கன்சர்வேடிவ் கட்சியில் சிறப்பெய்திய டபிள்யூ.எச். ஸ்மித்போன்றவர்கள் விவசாயிகளுக்குப் புதுவாழ்வு அளிப்பதற்காக, அரசாங்கமே நிலம் வாங்கவேண்டுமென்று ஆலோசனை கூறியிருக்கின்றனர். ஹிக்ஸ்-பீச் என்பவர், அயர்லாந்தில் பின்பற்றப் படுகின்ற கட்டாயச் சட்டங்களை இடைவிடாது கண்டித்து வந்திருக்கிறார். சேம்பர்லேன் எவ்வளவு தூரம் அயர்லாந்து மக்களின் நல்வாழ்வுக்காக முயற்சி செய்தாரோ, அதைப் போலவே சர்ச்சிலுங்கூட, அவர்களுக்குத் தல அரசாங்கம் அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று போராடியிருக்கிறார். ஆனால், இரு திறமைமிக்க அரசியல்வாதிகளும் ஐரிஷ் போட்டியின்மூலமாகக் கட்சியின் பலத்தைப் பெருக்கவேண்டுமென்ற

எண்ணம்கொண்டிருந்தனர். இப்பொழுதுள்ள அரசாங்கத்தில் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை. 1880, மீண்டும் 1885-ல் கொண்டுவந்த மசோதாக்களை, விக் கட்சியினர் முறியடித்திருக்கின்றனர். கிளாட்ஸ்டனுக்கு எதிராக, கேபினட்டிலுள்ள எல்லாக் காமன்ஸ் சபை அங்கத்தினர்களும் அவருடைய மசோதாவை எதிர்த்தனர். ஹார்டிங்டன்மட்டும்தான் அவர்பக்கம் நின்றார். கேபினட்டிலுள்ள அத்தனைபேரும் சேம்பர்லேன், பார்னெல்லுடன் சமரச முயற்சி செய்வதையும், ஐரிஷ் தேசியக் கவுன்சிலை நிறுவுவதையும், அந்தக் கவுன்சில் அங்கத்தினர்களைப் பிரதிநிதித்துவம் செய்கின்ற குழுவினரால் தேர்ந்தெடுக்கப்படுவதையும், அந்தக் கவுன்சிலுக்கு நிலம், கல்வி, பொதுப்பணிகள் ஆகிய துறைகளை ஒப்படைப்பதென்ற திட்டத்தையும் ஆதரிக்கவே இல்லை. சேம்பர்லேன் கோஷ்டியினர் அதனால் ராஜிநாமா செய்யத் தயாராக இருந்தனர். ஆனால், ஜூன் மாதத்தில் வரவு செலவுத் திட்டத்தின்மீது நடந்த விவாதத்தில், உண்மையில் ஐரிஷ் வோட்டுகள் அரசாங்கத்திற்குச் சாதகமாக இல்லாததால், அரசாங்கமே தோற்கடிக்கப்பட்டு, பின்பு ராஜிநாமா செய்தது. இந்த வாக்கெடுப்பில் எழுபத்தாறு லிபரல்கள் கலந்துகொள்ளவில்லை.

அடுத்த ஆறு மாதங்களுக்கும் இதே சூழ்நிலை இருந்தது. ஸாலிஸ்பரி பிரதம அமைச்சரானார். தேர்தல் முடிவுகள் முழுவதும் வருகின்ற வரையிலும், அவர் சிறுபான்மை ஆதரவுடன் காலம் தள்ளினார். கிளாட்ஸ்டனுடைய மந்திரிசபையில் காணப்பட்ட அதே பிளவுகளும் இவருடைய மந்திரிசபையிலும் தோன்றின. ஆனால், கிளாட்ஸ்டன் பின்பற்றிய அந்த அதிகார தோரணை இவரிடம் இல்லாததால், இவருக்குப் பல சிக்கல்கள் ஏற்பட்டன. ஏனெனில், கட்சித் தலைமை இவருக்கு இப்பொழுது தான் கிடைத்திருக்கிறது. அவருடைய முழுக் கவனமும், அயல் நாட்டு விவகாரங்களில்தான் இருந்தது. மேலும், டோரி ஜனநாயகவாதிகளின் ஆதரவைப் பெற, அவர்களிடம் தொடர்பே இவர் ஏற்படுத்திக்கொள்ளவில்லை. ஆனால், அவருடைய மந்திரி சபை அமைப்பில், டோரி ஜனநாயகத்தினருக்குச் சிறிது திருப்தி ஏற்பட்டிருந்தது. ஹிக்ஸ்-பீச் என்பவர் சர்ச்சிலின் நண்பர். அவரிடம் காமன்ஸ் சபையின் தலைமைப் பகுதி இருந்தது. நார்த்கோட், பிரபுக்கள் சபைக்கு அனுப்பப்பட்டார். அயர்லாந்தில் சீர்திருத்தங்களும், கல்வி அபிவிருத்தியும், ஏழை விவசாயிகள் நிலம் வாங்குவதற்கு அரசாங்கக் கடன் உதவி அளித்தலும் போன்ற திட்டங்களால் ஐரிஷ் மக்களைச் சமாதானப்படுத்த முயன்றார். அவர் ஸ்பென்ஸரின் கொடிய ஆட்சி

முறையைக் கண்டித்தார். சர்ச்சிலின் முயற்சியால் எடுக்கப் பட்ட முதல் நடவடிக்கை ஆஷ்போர்ன் சட்டம் ஆகும். இந்தச் சட்டத்தின்படி, விவசாயிகள் நிலம் வாங்குவதற்கு முழுக் கடன் உதவியையும் தல அரசாங்கம் அளிக்கவேண்டும் என்பதாகும்.

நடந்த நிகழ்ச்சிகளிலிருந்து பார்த்தால், ஸாலிஸ்பரி, அயர் லாந்துக்குச் சுய ஆட்சி அளிக்க விரும்பவில்லை என்பது நன்ருகத் தெரிந்தது. 1846-ல் பீல் எடுத்துக்கொண்ட முயற்சியையும், 1867-ல் டிஸ்ரேலி எடுத்துக்கொண்ட முயற்சியையும் அவர் மீண்டும் செய்யத் தயாராக இல்லை என்று கண்டிப்பாகக் கூறினர் ஆனல், அவருடைய சொந்தப் பொறுப்பும் இந்தப் பிரச்சினையில். கலந்துதான் இருந்தது. அயர்லாந்துக்கு அவர் நியமித்த லார்ட்-லெப்டினன்டு, கார்னர்வான் என்பவராவார். அவர் ஏற்கெனவே கனடியக் கூட்டரசாங்கச் சட்டத்தையும், அதைப்போன்ற ஒரு திட்டத்தைத் தென் ஆப்பிரிக்காவுக்கும் கொண்டுவர முயற்சி செய்தார். இவர் அயர்லாந்து மக்களுடைய ஆதரவைப் பெற வும் அதற்காகப் பிரசாரம் செய்யவும், மந்திரிசபைக்குத் தெரியாமலேயே பார்னெல்லுடன் இரகசியமாகப் பேச்சு வார்த்தை நடத்தியது ஓரளவிற்குப் பயனளித்தது. ஐரிஷ் காரர்கள், இதனுல் ஒரு புதிய மாற்றத்தைக் கண்டனர். சர்ச் சிலின் திட்டமான 'மத்திய கோட்டை' அமைப்பதைவிட, இவரது திட்டம் இன்னும் அம் மக்களுக்கு அதிக நன்மைகளைத் தருவதாக இருந்தது. இதன் பிறகு கார்னர்வான் சுதந்திரமான பாராளுமன்றத்தை நிறுவப்போவதாகப் பேசினுர்.

நிகழ்ந்த பொதுத் தேர்தல்களில், பார்னெல்லுக்கு நிறைய ஆதரவாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆகஸ்டு 1885-ல் கிளாட்ஸ்டன்கூட, இந்தப் பிரச்சினையை இன்னும் தள்ளிப் போட முடியாதென்று அறிவித்தார். கார்னர்வானும், பார் னெல்லும் இரகசியமாகச் சந்தித்துப் பேசினர் என்பது கிளாட்ஸ் டனுக்குத் தெரியும். ஸ்பென்ஸர்மீது கன்சர்வேடிவ்கள் அளவு கடந்து கண்டனத்தைத் தெரிவித்ததையும் அவர் ஒப்புக்கொள்ள வில்லை. கிளாட்ஸ்டனுடைய புதிய மனமாற்றத்தைக் கண்டு அவ ருடைய விக் கட்சித் தோழர்கள் வியப்படைந்தனர். கிளாட்ஸ் டன், திருமதி ஓ'ஷியாவின்மூலமாகப் பார்னெல்லை அழைத்து, அவருடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டார். இவர் ஏன் இந்தப் பிரச்சினையில் அதிக அக்கறை எடுத்துக்கொண்டார் என்பதற்கு ஒரு காரணமும் இருந்தது. 'ரேடிகல்' கட்சியின் எதிர்ப்புகளைச் சமாளிக்கவும், அதேசமயத்தில், விக்குகள் ரேடிகல் கட்சிகளிடையே ஏற்பட்ட வெளிப்படையான மாறு பட்ட கருத்துகளும், அவருடைய கட்சியின் எதிர்கால நலன்

களைப் பாதிப்பதாக இருந்தது. பேரரசின் உடனடியான தேவை என்று இதே பிரச்சினைக்கு முக்கியத்துவம் கொடுத்து, இந்த அடிப்படையில் தேர்தலில் வெற்றி காண்பதென்று அவர் முடிவு செய்தார்.

சேம்பர்லேன் இந்த இரண்டு பிரச்சினைகளிலும் அக்கறை கொண்டிருந்தார். இவர் இடதுசாரிகளின் தனிச் சிறப்பு பெற்ற தலைவர் என்பதில் ஒன்றும் சந்தேகம் இல்லை. ஏனெனில், டில்கின் அரசியல் வாழ்வு, அவர் புரிந்த கள்ளக்காதல் நாடகத்தில் சிதைந்துவிட்டது. கிளாட்ஸ்டனுக்கு இப்பொழுது எழுபத்தாறு வயதாகியிருந்தது. ஆனால், சேம்பர்லேனுக்கு நாற்பத்தொன்பது வயதுதான் ஆகியிருந்தது. அவருடைய தேர்தல் பிரசாரம், நவீன லிபரலிசக் கொள்கைகளின் அடிப்படையில் நடந்தது. சமூக முன்னேற்றத்திற்கு வரிப்பணத்தைச் செலவிடுதல், வயதுவந்த ஆண்களுக்கு வாக்குரிமை அளித்தல், சிறு பண்ணைகளை விஸ்தரிக்கும் திட்டம், சீர்திருந்திய தல அரசாங்கம், நியமிக்கப்பட்ட திருச்சபையைக் கலைத்தல், இலவசக் கல்வி ஆகிய திட்டங்களின் அடிப்படையில் இவருடைய தேர்தல் பிரசாரம் நடந்தது. இக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள வில்லையெனில், அவர் பதவி வகிக்கமாட்டார். அயர்லாந்தைப் பொறுத்தமட்டில், பார்னெல்லுடன் நடந்த பேச்சுவார்த்தைகள் முறிவடைந்தன. மேலும், அயர்லாந்துக்குத் தனிச் சட்டசபையை அமைக்கும் திட்டத்தை அவர் ஆதரிக்கவில்லை. அவருடைய திட்டமென்னவெனில், சில கூட்டரசாங்கத் தன்மைகளை அளித்து, ஆங்கிலேயப் பாராளுமன்றத்தின்கீழ் இயற்றப்படுகின்ற சில சிறப்புக் கவுன்சில்களை நியமனம் செய்வதுதான், அவர் ஐரிஷ் மக்களுக்கு அளிக்கும் அதிகபட்ச சலுகையாகும். லிபரலிசத்தில் வந்து சேர்ந்த இளைஞர்களும் அக் கட்சிக்குப் புதிதாக வந்து சேர்ந்த லாயிட் ஜார்ஜும் கிளாட்ஸ்டனின் தலைமையை அழித்துவிடுவார்கள் என்ற நிலைமை ஏற்படலாயிற்று.

டிசம்பர் மாத நடுவில் தேர்தல்கள் நடந்தன. விவசாயிகள் ரேடிகல் கட்சிக்குப் பெருவாரியாக வாக்களித்தனர். கன்சர்வேடிவ்களைவிட, லிபரல்கள் 86 இடங்களை அதிகமாகக் கைப்பற்றினர். ஆனால், இப்படித் தனிப்பட்ட அளவில் அக் கட்சிக்குப் பெரும்பான்மை இடங்கள் வேண்டுமென்று அவர் கோரவில்லை. பார்னெல் உதவியால் பல ஐரிஷ் இடங்களை டோரி கட்சியினர் கைப்பற்றினர். பார்னெல்லின் 'ஹோம் ரூல்' கட்சிக்கு 86 இடங்கள் கிடைத்தன. கட்சித் தலைமை எங்குச் சேம்பர்லேனுக்குப் போய்விடப்போகின்றதோ என்றஞ்சி, அந்த சமயத்தில்

கிளாட்ஸ்டனின் மகனுன ஹெர்பர்ட், பத்திரிகையில் 'ஹவார்டன் பட்டத்தை'ப் பறக்கவிட்டார். அந்த அறிக்கையில், அவருடைய தந்தையும் ஸ்பென்ஸரும் அயர்லாந்துக்குச் சுய ஆட்சி வாங்கித் தருவதாக அறிவித்தார். இந்த அறிக்கை கட்சியிலேயே பெரிய அதிர்ச்சியை ஏற்படுத்திவிட்டது. சேம்பர்லேனுக்கு இவ்விதமான சந்தேகம் ஏற்கெனவே இருந்தது. ஆனுல், இவ்வளவு வெளிப்படையாக கிளாட்ஸ்டன் சூழ்ச்சியைக் கையாள்வார் என்று சேம்பர்லேன் எதிர்பார்க்கவே இல்லை. இந்த அறிக்கையின்படி, கிளாட்ஸ்டனின் ஆதரவைக்கொண்டு ஸாலிஸ்பரி, சுய ஆட்சி மசோதாவைக் கொண்டுவருவார் என்று தெரிந்தது. ஆனுல், உண்மையில், பார்னெல்லுடன் எவ்விதப் பேச்சு வார்த்தையும் வைத்துக்கொள்வதில்லை என்று கேபினட் முடிவு செய்ததுமட்டுமன்றி, கார்னர்வானின் ராஜிநாமாவையும் ஏற்றுக்கொண்டது. கிளாட்ஸ்டன், சேம்பர்லேனைத் தொலைவிலேயே வைத்துக்கொண்டார். அவருடைய புதிய மனமாற்றத்தையும் அவர் மறைத்து வைத்துக்கொண்டார். சுய ஆட்சி மசோதாவை இயற்ற ஸாலிஸ்பரியைத் தூண்டியதால், மறைமுகமாகப் பார்னெல்லின் பலத்தை அதிகரிப்பதுபோலாகின்றது. அவருக்குச் சேம்பர்லேனுடைய சமூக அபிவிருத்தித் திட்டங்கள் சிறிதும் பிடிக்கவில்லை. அவர் அதை வெறுத்தார் என்றுகூடச் சொல்லலாம். அவருடைய கவனம் முழுவதும் அயர்லாந்திலேயே பதிந்திருந்தது. சேம்பர்லேன் இவருடைய கொள்கையைச் 'சாவும் அழிவும்' என்று நையாண்டி செய்யும் வகையில் தனிப்பட்ட முறையில் கண்டித்தார்.

கிளாட்ஸ்டனின் இரகசியமான தன்மை கட்சியின் ஒழுக்கத்தைச் சீர்குலைத்துவிட்டது. 1886 ஜனவரியில் அவருடைய உண்மையான கொள்கைகளும் வெளிப்பட்டன. கார்னர்வான் ராஜிநாமாவும், கட்டாயச் சட்டத்தை அறிவித்தல் போன்ற நிகழ்ச்சிகளில் ஸாலிஸ்பரியும் அவருடைய கட்சியும், 'இணைப்பை' ஆதரிக்கின்றனர் என்ற நிலை காணப்பட்டது. 26ஆம் தேதியன்று, சேம்பர்லேனின் ஆதரவாளர் ஜெஸி கோலிங்ஸ் என்பவர் ஒரு சிறிய திருத்தத்தைக் கொண்டுவந்தார். அந்தத் திருத்தத்தின்படி, ஒவ்வொரு விவசாயிக்கும் 'மூன்று ஏக்கர் நிலமும் ஒரு மாடும்' கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. இந்தத் திருத்தத்தை எதிர்க்கட்சியினர் தோற்கடித்து அரசாங்கத்தையும் கவிழ்த்துவிட்டனர். எதிர்க்கட்சியினர்க்குச் சாதகமாக 79 வோட்டுகள் அதிகமாகக் கிடைத்தன. 18 லிபரல்கள் ஸாலிஸ்பரிக்கு ஓட் செய்தனர்; மற்ற 76 பேர் வாக்கெடுப்பில் கலந்துகொள்ளவில்லை.

கிளாட்ஸ்டன் மீண்டும் அவரது மூன்றாவது அரசாங்கத்தை அமைத்தார். ஏழுமாதத்திற்கு முன்பு, அவர் என்ன கொள்கைகளைப் பின்பற்றினாரோ, அவற்றையே இந்த அரசாங்கத்திலும் வற்புறுத்தினார். திடீரென்று ஏற்பட்ட அவருடைய கொள்கை மாற்றத்தால் மற்ற மந்திரிகள் இவருடைய கேபினட்டில் பதவி வகிக்கத் தயங்கினர். ஹார்டிங்டன், கோஷன், பிரைட், ஹென்றி ஜேம்ஸ் ஆகியோர் இந்தக் கேபினட்டில் பதவி வகிக்க மறுத்தனர். ஐரிஷ் மசோதா தயாராகும் வரையிலும் பொறுத்திருந்து, பின்பு பதவியேற்பதைப்பற்றி முடிவு கூறுவதாகச் சேம்பர்லேனும் டிரெவெலியனும் கூறினர். ஆனால், சுய ஆட்சிக் கட்சியின் பிரமுகரான ஜான் மார்லியை ஐரிஷ் காரியதரிசியாக நியமித்த உடனேயே, இந்த மசோதா இப்படித்தான் தயாராகும் என்று தெரிந்துகொண்டனர். கிளாட்ஸ்டன், பார்னெல்லுடனும் ஜான் மார்லியுடனும் கலந்து ஆலோசித்த பிறகே இந்த மசோதாவைத் தயாரித்திருக்கிறார் என்ற உண்மையை மறைக்கமுடியவில்லை. சேம்பர்லேன், கலோனிய அலுவலகத்தில் பதவி வகிக்க விரும்புவதாக கிளாட்ஸ்டனிடம் கூறியதற்கு, அவர் அந்தப் பதவியைச் சேம்பர்லேனுக்குத் தரவில்லை. அதைவிட அவர்மீது கிளாட்ஸ்டனுக்கு அளவு கடந்த சந்தேகம் ஏற்பட்டது. இந்த மசோதாவில், கூட்டரசாங்கத் தன்மைகள் எல்லாம் கைவிடப்பட்டன. வெஸ்ட்மினிஸ்டர் பாராளுமன்றத்திலுள்ள ஐரிஷ் அங்கத்தினர்களையெல்லாம் அயர்லாந்துக்கே அனுப்பிவிடுவதென்றும் அந்த மசோதாவில் கூறப்பட்டிருந்தது. அயர்லாந்தில் தனிப்பட்ட ஒரே சட்டசபையைக்கொண்ட பாராளுமன்றத்தை அமைப்பதென்றும், அந்தச் சட்டசபைக்கு, ஒருசில அதிகாரங்களைத் தவிர, மற்றெல்லா அதிகாரங்களையும் அளிப்பது என்றும் அந்தச் சட்டம் வலியுறுத்தியது. காவலர் துறை, நீதிபதிகளை நியமனம் செய்தல் போன்ற அதிகாரங்கள் ஐரிஷ் சட்டசபைக்கே விட்டுவிடுவதென்றும், ஆனால், அயல்நாட்டுக் கொள்கை, பாதுகாப்பு, வர்த்தகம், சுங்க வரிகள் ஆகியவை ஆங்கிலேயப் பாராளுமன்றத்தின் அதிகாரத்திலேயே இருக்கும் என்றும் கூறப்பட்டது. மார்ச் மாதத்தில் சேம்பர்லேனும் டிரெவெலியனும், ஐரிஷ் பிரதிநிதிகள் வெஸ்ட்மினிஸ்டரில்தான் இருக்கவேண்டுமென்ற கொள்கை அடிப்படையில் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்தனர். இதைத் தவிர, அவருடைய கண்டனம் இன்னும் சிறிது அதிகமாகவே சென்றது. காவலர் துறை அதிகாரமும் சட்டத்துறையும் அயர்லாந்துப் பாராளுமன்றத்துக்கு அளித்துவிட்டால், மிகவும் கட்டாயப்படுத்தி அல்ஸ்டரை இணங்க வைப்பார்கள் என்று அவர் கூறினார். இதைத் தவிர,

கிளாட்ஸ்டன் கொண்டுவந்த இரண்டாவது மசோதாவிலும், அயர்லாந்திலுள்ள நிலங்களை வாங்க ஆங்கிலேய அரசாங்கம் கடனுதவி செய்வது என்ற கொள்கையை அவர் கண்டித்தார்.

மக்களிடம், இந்த ஐரிஷ் மசோதாவுக்கு இவர் ஆதரவு கோரினர். இவருடைய எண்ணம் எவ்வளவு நல்லதாக இருந்த போதிலும், நீண்டகாலமாக இவர் மனத்திலிருந்த இந்தக் கொள்கைகளை மக்களிடமும், அல்லது அவருடைய கட்சியின ரிடத்தும் எடுத்துரைக்கவே இல்லை. இவற்றையெல்லாம் தமக்குள்ளேயே மறைத்துவைத்திருந்து திடீரென்று இந்த மசோதாவிற்கு ஆதரவு கோருவது விந்தையேயாகும். மக்களிடம் இவர் இந்த மசோதாவுக்கு ஆதரவு கோருவது, பார்னெல் இதுகாறும் செய்துவந்த கொடுமைகளையும் குற்றங்களையும் மறந்துவிடுங்கள் என்று சொல்லுவதுபோலிருந்தது. இவரால் ஏற்கெனவே பல இடங்களை இழந்திருக்கின்றனர். உண்மையில், இந்த மசோதாவில் காணப்படும் சில குறைகளை ஒப்புக் கொள்வதற்கில்லை. ஆங்கிலேய இராச்சியத்திலேயே உள்ள பல பகுதிகளில் சமத்துவமாக நடத்தப்படவில்லையெனில், மனக் குமுறல் ஏற்படுவது இயற்கையே. கிளாட்ஸ்டனின் திட்டம் நீண்டகாலத்திற்கு நீடிக்காது என்பது புலனாயிற்று.

பேரரசின் செலவினத்தில் $\frac{1}{15}$ பாகத்தை அயர்லாந்து அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கூறியதைப் பார்னெல் பலமாகக் கண்டித்தார். அதனால், விவசாயிகளுக்கு நிலம் வாங்க அளித்த கடனுக்கு 4 சதவிகிதம் வட்டியைக் கொடுப்பதும் சந்தேகப்படவேண்டியதாயிற்று. அதைப் போன்றே, ஆங்கிலேயப் பாராளுமன்றத்தில் ஐரிஷ் பிரதி நிதித்துவம் இல்லாதபோது, அவர்கள்மீது வரி விதிப்பதை ஏற்றுக்கொள்வார்களா என்பதும் சந்தேகத்திற்குரியதாகவே தோன்றியது. அல்ஸ்டர் பகுதியைக் கட்டாயப்படுத்தி அயர் லாந்துப் பாராளுமன்றத்திற்கு இணங்க வைப்பதை, அல்ஸ்டர் மக்கள் எதிர்த்துப் போராடுவர். அவர்கள் அப்படிப் போராடு வதும் நியாயமே என்று சர்ச்சில் பிரசாரம் செய்தார். கிளாட்ஸ்டனின் மனமாற்றத்தால், ஆங்கிலேய மக்களும் அவருடைய கட்சியும் ஏற்றுக்கொள்ளாத ஒன்றை அவர் வேண்டுகிறார். நிலச் சங்கத்தின் எதிர்ப்பும், அங்கு நிகழ்ந்த படுகொலைகளும், சட்ட மறுப்பும், பிராடஸ்டன்டுகளின்மீது காட்டிய சமய வெறியும் ஆகிய கொடுஞ் செயல்களை அவ்வளவு எளிதில் மறக்க முடியவில்லை. பார்னெல்லின் ஆதரவில், சுய ஆட்சி கோருகின்றவர்களும், பகைமை எண்ணம் கொண்டுள்ள

அவர்களுடைய படைகளும் எப்படிப் பேரரசைப் பாதுகாக்க முடியும் என்ற சந்தேகம் ஏற்பட்டது.

இந்தச் சிக்கல் ஆங்கிலேயக் கட்சிகளிடையே பெரும் மோதலை உண்டாக்கியது. 1885-86-ல் இரண்டு அரசியல் கட்சிகளுமே செல்வாக்கை இழந்துவிட்டன. கிளாட்ஸ்டனுடைய திட்டமே அவருடைய கட்சிக்கு அழிவைத் தேடிக் கொடுத்தது எனில் தவறுகாது. விக்குகளுங்கூட அவரைவிட்டு விலகினர். பிரைட்டின் நல்ல செல்வாக்குச் சேம்பர்லேனுக்கு உதவியாக இருந்தது. ஜூன் மாதத்தில், இந்த மசோதா காமன்ஸ் சபையில் 30 ஓட்டுகள் குறைவாகப் பெற்றுத் தோற்கடிக்கப்பட்டது. 93 லிபரல்கள் இந்த மசோதாவை எதிர்த்து வாக்களித்தனர். அடுத்த தேர்தலில் 316 கன்சர்வேடிவ்களும் 78 லிபரல் யூனியனிஸ்டுகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 191 லிபரல்களும் 85 ஐரிஷ் தேசியவாதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஓராண்டு அதிர்ச்சிக்குப் பின்பு கட்சிகளின் அமைப்பு முழுவதும் சிதறிவிட்டது. ஸாலிஸ்பரி பிரதம அமைச்சராகப் பதவி ஏற்றூர். கூட்டு மந்திரிசபை அமைத்து, ஆறு ஆண்டுகள் தள்ளிவிட்டார். விக் கட்சியின் செல்வாக்கு மங்கிவிட்டது. அதைப்போலவே, 'ரேடிகல்' கட்சியின் சமூகத் திட்டமும் நின்றுவிட்டது. கிளாட்ஸ்டனின் சுய ஆட்சி மசோதாவை எதிர்த்ததால் சேம்பர்லேன் லிபரல் கட்சியின் சார்பாகப் பிரதம அமைச்சராக வரும் வாய்ப்பையும் இழந்துவிட்டார். இப்பொழுது அவர் பர்மிங்ஹாம் பகுதியில் லிபரல் கட்சியின் செல்வாக்கை மெதுவாக அகற்றிவந்தார். அவர் இரண்டு கட்சிகளிலும் சேராது தன்னந்தனியாக நின்றூர்.

அதே சமயத்தில், அயர்லாந்துப் பிரச்சினையைத் தவிர, மற்றக் காரணங்களும் கிளாட்ஸ்டனின் புகழையும், அதிர்ஷ்டத்தையும் பாதித்தன.

## சமகால நிகழ்ச்சிகள்

1881 ஜார் அலெக்சாந்தர்-II கொலை செய்யப்படல்.

ஃபிரான்சில் கேம்பட்டா அமைச்சரவையை அமைத்தல்.

டூனிசை ஃபிரான்ஸ் கைப்பற்றல்.

பீக்கன்ஸ்ஃபீல்ட் மரணம்; கார்லைல் மரணம்.

1882 முக்கூட்டு உடன்படிக்கையில் இத்தாலி சேரல்.

கேம்பட்டா, கரிபால்டி, டி. எச். கிரீன் ஆகியோரின் மரணம்.

1883 மடகாஸ்கரிலும் டோன்கிலும் ஃபிரெஞ்சு தன் அதிகாரத்தைப் பரப்புதல்.

மாக்ஸிம் (Maxim) புதிய ரகத் துப்பாக்கியைக் கண்டுபிடித்தல்.

மார்க்ஸ், துர்கினேவ், வேக்னர் ஆகியோரின் மரணம்.

1884 பெர்லினில் காங்கோ மாநாடு.

மெர்வ் பகுதியை ரஷ்யா கைப்பற்றல்.

ஃபேபியன் கழகத்தை நிறுவுதல்.

1885 பென்ஜ்டேயில் (Penjdeh) ரஷ்யா.

கோர்டனின் மரணம்.

டிரான்ஸ்வாலில் தங்கம் கண்டுபிடித்தல்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கிளீவ்லேண்ட் (Cleveland) ஜனாதிபதியாதல்.

# 9. தென் ஆஃப்பிரிக்கா, எகிப்து, சூடான்

கிளாட்ஸ்டன் தம்முடைய அயர்லாந்துக் கொள்கையால், ஆங்கிலேய ஜனநாயகக் கட்சிகளிடையே பிரிவை ஏற்படுத்தி விட்டார். அவருடைய அயல்நாட்டுக் கொள்கையாலும் பேரரசுக் கொள்கையாலும், அவருடைய கட்சி, பதவிக்கு வர முடியாமல் போய்விட்டது. 1905 முடியும்வரை நிகழ்ந்த இருபது ஆண்டுகளில் மூன்று ஆண்டுகளே அவருடைய கட்சி பதவியில் இருந்திருக்கிறது.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் இறுதியில் வல்லரசுகள் ஆஃப்பிரிக்காவைப் பங்கு போட்டுக்கொண்டன. இந்த நிகழ்ச்சி சர்வதேசிய அரசியலில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஆஃப்பிரிக்காவை 1880-க்கு முன்பே வல்லரசுகள் பங்குபோட ஆரம்பித்துவிட்டன. பெர்லினில் உள்ள சிறந்த ராஜதந்திரியான பிஸ்மார்க் காலனிகளைப் பிடிப்பதில் அதிக ஆர்வங்காட்டவில்லை. எனினும், எதிரிகளைப் பிரிப்பதற்கு இந்த நிகழ்ச்சியை நல்ல வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டார். மேலும், அவர் இங்கிலாந்திலுள்ள காலனி மந்திரிகளான கிரென்வில், டெர்பி ஆகியோரின் பலவீனத்தையும் நன்ருகத் தெரிந்துவைத்திருந்தார். பிரிட்டனைத் துன்புறுத்துவதற்கும், ஜெர்மனியின் வர்த்தகத்தைப் பெருக்குவதற்கும் இதுதான் சரியான வழி என்று அவர் கருதினுர். ஆஃப்பிரிக்காவில் ஜெர்மனிக்கு 1884-85-ல் தென்மேற்கு ஆஃப்பிரிக்கப் பகுதி கிடைத்தது. அதனுடன் டோகோலாந்து, மேற்குக் கரையிலுள்ள கேமருன்ஸ் பகுதிகளும் கிடைத்தன. ஜான்ஸிபாருக்கு இடையேயுள்ள பகுதியிலும் ஜெர்மன் கம்பெனி ஒன்று ஆதிக்கம் செலுத்திவந்தது. அப்பொழுதுதான் ஆங்கிலேயப் பேரரசுக்கே மிகவும் கொடிய பெயரை வாங்கிக்கொடுத்த இரண்டு நிகழ்ச்சிகள் நடந்தன. அந்த நிகழ்ச்சிகளின் பெயர்கள், அரசாங்கத்தின் வரலாற்றில் பொறிக்கப்பட்டன. அந்தப் பெயர்கள் மஜுபா, கார்டூம் என்பவை.

1877–78-ல் இங்கிலாந்தில் பெரிய விவசாய மந்தநிலை ஏற்பட்டிருக்கும்பொழுது கார்னர்வான் ஆப்பிரிக்கத் திட்டத்தை வரையறுத்தார். அப்பொழுது சூழ்நிலை சரியாக இல்லை. அதைத் தவிர, ரஷ்யாவுடன் போர் தொடுக்கின்ற ஒரு நெருக்கடியும் இருந்தது. ஆப்கனிஸ்தானத்துடன் கண்டிப்பாகப் போர் செய்தாகவேண்டிய சூழ்நிலையும் இருந்துவந்தது. மேலும் மேலும் பேரரசைப் பரப்பிக்கொண்டு போவதும், பின்பு அவசியமற்ற போர்களில் ஈடுபட்டு அதிகச் செலவினங்களைச் செய்வதும், அப்பொழுது கலோனியக் காரியதரிசியாக இருந்த ஹிக்ஸ்-பீச் என்பவருக்குப் பிடிக்கவில்லை. ஹிக்ஸ்-பீச் என்பவர் கார்னர்வானுக்குப் பின்பு பதவி வகித்தவர். தென் ஆப்பிரிக்கா முழுவதற்கும் ஒரே அரசாங்கத்தைக் கொண்டு வருவது என்பது உண்மையிலேயே நல்ல எண்ணம் கொண்ட கொள்கையாகும். நீண்டகாலத்திற்கு அது பயன் அளிக்கக்கூடியதாகவும் இருக்கும். ஆனால், அங்குள்ள சுதேசமக்களுக்கு எந்தக் கொள்கையைப் பின்பற்றுவதென்பது மிகவும் சிக்கலாக இருந்தது. இந்த விவகாரத்தில் நமது செயல்கள், நமது வழிகள், நமது முடிவுகள் எல்லாம் தவறானவையாகவே இருந்தன. மோசமான கொள்கைக்கு, மோசமான முன்மாதிரியை நாம் அமைத்துக் காட்டிவிட்டோம். பின்பு, உறுதியளித்த வாக்குறுதிகளிலிருந்து பின்வாங்குவதென்பது, தோல்வியை ஒப்புக்கொண்டதாகும்.

நேட்டால், டிரான்ஸ்வால் வழியாக ஒரு கூட்டரசாங்கத்தை அமைக்கவேண்டுமென்ற திட்டம், கார்னர்வானின் முயற்சியாலேயே முடியாமல் போய்விட்டது. கேப்பும், ஆரஞ்சு குடியரசும் இந்தக் கூட்டரசாங்கத்தில் இணைவதற்கு விரும்பவில்லை. இந்தத் திட்டத்தைச் சில பகுதிகள் ஏற்காததால், ஷெப்ஸ்டோன், 1877-ல் வலுக்கட்டாயமாக டிரான்ஸ்வாலைக் கைப்பற்றினர். இந்த ஆக்கிரமிப்பைக் கேப்பில் உள்ள ஆப்பிரிக்கண்டர்களின் தலைவர்களான ஹோஃப்மெர் (Hofmeyr), டி வில்லியர்ஸ் (de Villiers), பிளோம்ஃபோன்டின் (Bloemfontein) என்ற பகுதியில் உள்ள ஜனாதிபதி பிராண்ட் ஆகியோரும் மற்ற 'யூனியன்' அரசாங்கத்தை ஆதரிக்கின்ற மிதவாதிகளும் மிகவும் வெறுத்தனர். ஆனால், இந்த ஆக்கிரமிப்புக்குப் பலமான காரணங்கள் காட்டப்படுகின்றன. அந்தப் பகுதியிலுள்ள நிர்வாகம் மோசம்; நிதிநிலைமை சீர்கேடுற்றிருந்தது; மக்களுடைய உயிர்களுக்குப் பாதுகாப்பில்லை என்பன போன்ற பல காரணங்களைக் காட்டினர். அதே சமயத்தில் அவர்கள் புரிந்த ஆக்கிரமிப்பைக் கைவிடும் பொழுதும் பலமான காரணங்களைக் காட்டினர். ஆனால், கிளாட்ஸ்டன் 1880-ல் இந்த ஆக்கிரமிப்பை ஆதரித்து, அதை

நிலைநிறுத்தினர். பல போயர்கள் இந்த ஆக்கிரமிப்பை வெறுக்க மனமில்லாதவர்களாக இருந்தனர். குருகர் (Kruger), ஜோபர்ட் போன்றவர்களுங்கூட இந்த ஆக்கிரமிப்பை எதிர்க்கத் தயங்கினர். அதனால், ஆக்கிரமிப்பை நிலைநிறுத்துவதற்குப் பல உறுதிமொழிகள் தரப்பட்டன. அவர்களுக்கு விருப்பமான முறையிலேயே, அவர்களுடைய மொழியிலேயே ஆட்சி செய்துகொள்ள அனுமதிப்பதாக உறுதிமொழி அளிக்கப்பட்டது. ஆனால், இதைப்போல ஒன்றும் நடக்கவில்லை. ஷெப்ஸ்டோனுக்கு வெள்ளை மனிதர்களை ஆட்சிசெய்யத் தெரியவில்லை. அவர் ஒரு கண்டிப்பான அதிகாரி. அவரைப் பின்பற்றிய இராணுவ கவர்னர்கள் சுய ஆட்சி அளிக்கக்கூடாது என்று அறிவுரை கூறிவந்தனர். இன உணர்ச்சிக் கொள்கைக்கு இருப்பதைப்போலவே இந்தத் திட்டத்தையும் அமல் நடத்துவதற்கு நிறைய இடையூறுகள் இருந்தன. தாராள நிதி உதவியும் ரயில்வே அமைத்தலும் அங்கு இல்லாததால், அவர்களால் அதிகமாக அங்கு ஒன்றையும் சாதிக்க முடியவில்லை. ஆங்கிலேயத் துருப்புகளின் எண்ணிக்கை ஆஃப்பிரிக்காவில் 4000 பேர்தான். அவர்கள் முதலில் கேஃப்பிர் போரில் ஈடுபட்டிருந்தவர்கள். பின்பு ஜூலுலாந்தில் தோல்வியைக் கண்டவர்கள்; இவர்களை வைத்துக்கொண்டு பாதுகாப்பளிப்பது முடியாத காரியமாகும்.

1879-ல் நடந்த ஜூலு போருக்குக் காரணமாக இருந்தவர் அங்கிருந்த ஆங்கிலேய ஹை கமிஷனரான பார்டில் ஃபிரெரி (Bartle Frere) என்பவராவர். போர்ச்சுகீசிய எல்லைவரையிலும், இரு கரைகளின் இடையே உள்ள ஜூலுக்களை எல்லாம் உடனடியாக அடக்கிவிட வேண்டுமென்றும், அதனால் அப் பகுதிகளைக் கைப்பற்ற வேண்டுமென்றும் கேபினட்டின் உத்திரவைக் கேட்டார். கேபினட் இந்தப் பிரச்சினையில் உடனடியான முடிவிற்கு வராது தயங்கியது. ஆனால், எந்தவிதமான உத்திரவும் அளிக்காததற்கு முன்பே, அவர் ஜூலுக்களுக்கு இறுதி எச்சரிக்கை அளித்தார். பின்பு இஸந்தல்வானா (Isandlwana) என்ற போரில் ஆங்கிலேயப் படை தோற்கடிக்கப்பட்டது. அரசியாரும் பிரதம அமைச்சரும் தான், இவரை அப்பொழுதே திருப்பி அழைத்துக் கொள்ளவேண்டாமென்று கூறினார்கள். ஆனால், டிஸ்ரேலி இவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டார். அவருடைய அதிகாரத்தில் ஒரு பகுதியைப் பறிமுதல்செய்து உல்ஸ்லி என்பவருக்கு அளித்தார். இவைகள், ஓரளவிற்குப் பின்வாங்குவதைப்போல் காட்டின. இதனால் 1879-ல் உலுந்தியில் கேட்டவாயோவைத் தோற்கடித்ததும்கூட சரியான பயன் அளிக்காமல் போய்விட்டது. இந்தச் சமயத்தில்,

கிளாட்ஸ்டன் மிட்லோதியனில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் குருகருக்கு ஆதரவளிப்பதாக இருந்தன. அதனால், குருகர்களும் அவருடைய ஆதரவாளர்களும் அவர்களுடைய நாட்டின்மீது ஆங்கிலேயர் செய்த ஆக்கிரமிப்பையும் விட்டுவிடுவார்கள் என்று நம்பினர்.

ஒரு வருடம் கழிந்தது. அவர்கள் உறுதியளித்த சீர்திருத் தங்கள் ஒன்றையும் செய்யவில்லை. இராணுவ கவர்னர்களும் ஆக்கிரமிப்பில் நம்பிக்கை இழந்துவிட்டனர். அதனால், அவர் களுடைய படைகளையுங்கூடக் குறைத்துவிட்டனர். 1880 கடைசியில் கேப் அரசாங்கம், பசுட்டோ போரில் சிக்கியிருந்த பொழுது போயர்கள் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கிளர்ச்சி செய்தனர். போயர்கள், லேயிங்ஸ் நெக் (Laing's Nek) என்ற இடத்தில், தளபதி கோலியைத் (General Colley) தோற்கடித் தனர். மீண்டும் பிப்ரவரி 1881-ல் ஜோபர்ட்டின் படையினர் அவரையும், அவரது படையையும் மஜுபா (Mujuba) என்ற இடத்தில் சின்னாபின்னப் படுத்தினர். ஜூலை மாதத்தில் நடந்த பிரடோரியா சபையில், வெற்றி பெற்றவர்களுக்கே அவர்களது நாட்டைக்கொடுத்துவிட வேண்டியதென்று முடிவாகியது. சமா தானப் பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருக்கும்பொழுதே இந்தப் போர் நிகழ்ந்தது. அதனால்தான் கேபினட் அவர்களுக்கு ஏற்கெனவே வாக்களித்த சில சலுகைகளை ரத்து செய்யாமல் இருந்தது. ஒருவகையில் கேபினட்டின் முடிவும் சரியானதே. 1879-80-ல் தூங்கிக்கொண்டிருந்துவிட்டதால்தான் இந்த நிலைமை ஏற்பட்டது என்று உணர்ந்தார்கள். ஆக்கிரமித்த பகுதியைத் தோல்வி அடைவதற்கு முன்பே கொடுத்திருந் தாலும் நன்றாக இருந்திருக்கும். ஆனால், தோல்வி அடைந்த பின்பு சரண் அடைந்ததின் விளைவு மிகவும் தீமை பயப்பதாக இருந்தது. சரண் அடைந்தபொழுது சில நிபந்தனைகளும் விதிக்கப்பட்டன. அவர்கள் நாட்டை அவர்களே ஆட்சி செய்து கொண்டாலும் போயர்களின் அயல்நாட்டு விவகாரங்களில், ஆங்கிலேய அரசாங்கம் ஆதிக்கம் செலுத்தும் என்ற நிபந்தனை வற்புறுத்தப்பட்டது. அதனுடன், அந்த நாட் டிலுள்ள சுதேச மக்களைப் பாதுகாப்பது ஆங்கிலேயரின் பொறுப் பாகும் என்றும் நிபந்தனையிடப்பட்டது. ஆனால், 1884-ல் லண்டனில் நடந்த மாநாட்டில், ஆங்கிலேய ஆதிக்கம் என்ற வார்த்தைமட்டும் எடுக்கப்பட்டு ஒரு தீர்மானம் நிறைவேறியது. மற்ற நிபந்தனைகள் எல்லாம் ஒப்புக்கொள்ளப்பட்டன. ஆனால், ஆஃப்பிரிக்கச் சுதேச மக்களின் பிரச்சினையில் தலையிடாமல் இருக்கமுடியாது என்ற பிரெரியின் கொள்கை உண்மையாகத்

தோன்றியது. அதே ஆண்டில், ஆங்கிலேய அரசாங்கம் பசுட்டோ லாந்து (Basutoland), தெற்குப் பெச்சுவானுலாந்து (South Bechuanaland) ஆகிய பகுதிகளை அவர்களுடைய பாதுகாப்பில் கொண்டுவந்தது. அதே சமயத்தில் போயர்கள், ஜெர்மானியர் ஆகியோரின் பேராசையைத் தடுப்பதற்காக செயின்ட் லூசியா பேவைக் (St. Lucia Bay) கைப்பற்றினர். ஆனால், தென் ஆஃப்பிரிக்க ஒற்றுமையும், அதனால் சுதேச மக்கள் பிரச்சினை யைச் சமாளிப்பதில் உள்ள ஒற்றுமையும் மறைந்துவிட்டது. குருகர் ஏற்படுத்திய குடியரசைச் சுற்றிலும் பலத்த பாதுகாப்பு ஏற்பட்டது. ஆஃப்ரிக்கண்டரின் பாண்ட் கட்சியினர், ஆங்கிலேய ரின் ஆதிக்கத்தை ஒழித்துவிடவேண்டுமென்று திட்டமிட்டனர்.

தென் ஆஃப்பிரிக்கப் பிரச்சினை முடிவில்லாத பெரும் பிரச்சினை யாக மாறிவிட்டது. எந்த முடிவும் செய்யக் கேபினட் தயங்கியது. இந்த நிலையில் ஆங்கிலேய அரசாங்கம் மற்றொரு பொறுப்பையும் ஏற்றுக்கொண்டது. பேரரசின் ஆதிக்கத்திற்குள் இப்பொழுது எகிப்தும் கொண்டுவரப்பட்டது. சூயஸ் கால்வாய் வழியாக இந்தியாவுக்குச் செல்லும் முக்கியமான பகுதியாக இருப்பது மட்டுமன்றிச் சூயஸ் கால்வாயின் ஆதிக்கத்தில் பெரும் பங்கு ஆங்கிலேய அரசாங்கத்தின் கையில் இருந்தது. ஏற்கெனவே, அந்தக் கம்பெனியின் பெரும் பங்குகளை அரசாங்கத்திற்கு வாங்கி யிருந்தார். அத்துடன், கீடிவ் இஸ்மாயில் எகிப்து நாட்டை ஒழுங்காக ஆட்சி செய்யாததால், அங்கே ஊழல்கள் பெருகியும் நிதி நிலைமை வரட்சி அடைந்தும் விட்டது. இதன் காரணமாக 1878-ல் அவர் பட்டத்தைத் துறக்கவேண்டி நேரிட்டது. இந்தச் சமயத்திலிருந்து ஃபிரான்சுடன் சேர்ந்து எகிப்தை ஆதிக்கம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. நம்மைவிட, ஃபிரெஞ்சு அரசாங்கம், எகிப்துக்கு நிறைய கடன் அளித்திருந்தது. மேலும், லெவான்டுடன் தொடர்பு வைத்துக்கொள்வதில் ஃபிரான்சுக்கு அதிக அக்கறை இருந்தது. இந்தச் சிக்கலான கூட்டு ஆதிக்கத்தை ஒழிக்க இரண்டே வழிகள்தான் இருக் கின்றன என்றும், ஒன்று எகிப்தின்மீது ஆதிக்கம் செலுத்தாது விலகியிருக்கவேண்டும், அல்லது தனிப்பட்ட முறையில் ஆட்சி செய்யவேண்டும் என்றும் ஸாலிஸ்பரி கூறினர். எகிப்தின்மீது கூட்டு ஆதிக்கத்தைப் பெறும் முன்பே, அம் மக்களுக்குச் சீர்திருத் தங்கள் செய்து தருவதாக ஆங்கிலேய அரசாங்கம் வாக்குறுதி அளித்திருந்தது. அதனால், அதே சமயத்தில் ஐரோப்பிய நாடுகளின் கடன் வசூலையும் பாதுகாக்கவேண்டியிருந்ததால், எகிப்தில், இஸ்லாமிய தேசியக் கொந்தளிப்பு ஆரம்பமாகியது. அவர்களுக்கு ஐரோப்பிய நாடுகள்மீது ஆத்திரம் ஏற்பட்டது.

அதனுடன் கீடிவ் அப்பாஸைச் சுற்றியிருந்த துருக்கியர், ஆர்மீனியர் மீதும் ஆத்திரம் ஏற்பட்டது. கூட்டு ஆட்சி செய்வதற்கு இரண்டு நாடுகளிடையே சரியான உடன்பாடும் ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கைகளும் தேவைப்பட்டன. ஆனல், இக் கூட்டு ஆட்சிக்கே காரணமாக இருந்த கேம்பட்டா 1882-ல் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். ஃபிரெஞ்சு அரசியலில் நிறைய பிரிவுகள் ஏற்பட்டுவிட்டன. அவருக்குப் பின்பு வந்த ஃபிராசினட் (Freycinet) என்பவர் ஜெர்மனிக்குப் பயந்து எகிப்தில் தலையிட விரும்பவில்லை. இந்தச் சமயத்தில் எகிப்திய இராணுவ தளபதி அராபி பாஷா என்பவர் எகிப்தில் ஒரு தேசிய இயக்கத்தைத் தொடங்கினர். எகிப்து மக்களுக்கு அரசியல் அமைப்பு வேண்டுமென்று அவர் கோரினர். இதையொட்டி நிறைய ஐரோப்பியர்கள் கொலை செய்யப்பட்டனர். ஐரோப்பிய மக்களின் சொத்துகளுக்கும் உயிர்களுக்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டிய பொறுப்பு பிரிட்டனைச் சார்ந்துவிட்டது. இந்தத் தேசியவாதிகள் ஐரோப்பியக் கப்பல்களின்மீது சுட்டுப் பழகிக்கொண்டனர். ஃபிரெஞ்சு அரசாங்கம் எகிப்து பிரச்சினையில் தலையிட மறுத்துவிட்டது. அதனல், ஜுலை மாதத்தில் ஆங்கிலேயர் அலெக்சாண்டிரியாமீது குண்டுகள் வீசினர். ஐரோப்பிய மக்களின் உடைமைகளையும் உயிர்களையும் பாதுகாக்க முற்பட்டு பின்பு அந்த நாட்டையே ஆங்கிலேய ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்துவிட்டனர்.

லிபரல் மந்திரிசபைக்கு இது பெரிய சிக்கலாகத் தோன்றியது. ஏனெனில், அரபி பாஷாவின் போராட்டத்தில் உண்மையிருந்ததை அவர்கள் உணர்ந்தனர். உண்மையில், சூயஸ் கால்வாயின் பாதுகாப்புக்கு எகிப்து மிகவும் முக்கியமானது. அப் பகுதியில் நிறைய சர்வ தேசிய மூலதனம் போடப்பட்டிருக்கின்றது. அதனுடன் கிறித்துவ இனத்தவரான கிரேக்கர்கள், காப்டுகள், சிரியன்கள் ஆகியோரும் நிறைய இருந்தனர். ஆங்கிலேய அரசாங்கம் கீடிவ் இடத்திலேயே மீண்டும் அதிகாரத்தை ஒப்படைத்துவிட வேண்டுமென்று உண்மையிலேயே நினைத்தது. ‘எகிப்து எகிப்தியர்களுக்கே’ என்ற முழக்கத்தை அவர்கள் உணர்ந்தனர். இந்தச் சாதனையைப் புரிந்துவிட்ட பிறகு, பின்பு வந்த கேபினட்டுகள் கண்டித்ததைப் போல, நாம் அங்கிருந்து பின்னடையவேண்டியதுதான். இந்தச் சாதனையைப்புரிகின்ற முதற் கட்டத்தில், உல்ஸ்லி ஒரு படையுடன் சென்று செப்டம்பர் மாதத்தில் டெல்-எல்-கெபீர் (Tel-el-Kebir) என்ற இடத்தில் அரபி பாஷாவைத் தோற்கடித்தார். மீண்டும் 1883-ல் அவர் தோற்கடிக்கப்பட்டார். அதன்

பின்பு, சர் எவ்லின் பேரிங் என்பவர் ஆங்கிலேயப் பிரதிநிதியாக அங்கு நியமனம் செய்யப்பட்டார். ஃபிரான்ஸ், இத்தாலி ஆகிய நாடுகள் ஒத்துழைக்க மறுத்துவிட்டதால், நாம் தனியாகப் போரிட வேண்டியதாயிற்று. எகிப்தில் இன்னும் துருக்கிய மேலான ஆதிக்கத்தை ஆங்கிலேய அரசாங்கம் அனுமதித்தது.

சட்டமோ, நிதியோ, நாணயமோ, அல்லது ஒழுங்கான படையோ இல்லாத ஒரு நாட்டில் அரசாங்கத்தைச் சீரமைத்து மீட்டுக் கொடுப்பதற்குச் சிறிது காலதாமதம் ஏற்படத்தான் செய்யும். ஆனால், அதே சமயத்தில் நாம் மற்றோர் உண்மையையும் கவனிக்கவேண்டியிருக்கிறது. எகிப்து மக்களுடைய வாழ்க்கை நைல் நதியைப் பொறுத்தே இருக்கிறது. இந்த நைல் நதியின் பாதுகாப்பு சூடானின் அமைதியைப் பொறுத்திருக்கிறது. சூடான், கிழக்கில் செங்கடல் வரையிலும் தெற்கில் 'லேக்ஸ்' வரையிலும் பரவி இருந்தது. 1819-ல் எகிப்து மேல்வாரியாகத்தான் சூடான வென்றிருந்தது. இந்த நாட்டின் அரசாங்கம், துயரத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது. அடிமை வியாபாரிகளுக்குப் பெரிய சந்தையாக விளங்கியது. அராபிய நாடு, சிறிய அரசர்களும் போர் வீரர்களும் நிறைந்த நாடாக இருந்தது. அங்கே 1881-ல் வெள்ளை நைல் தீவில் குடியிருந்த முகமது ஆமத் என்ற முகமதியர், மஹ்தி (Mahdi) இயக்கம் ஒன்றைத் தொடங்கினார். எதிர்பார்த்த தீர்க்கதரிசியாக இவர் காட்சி அளித்தார். இவர் தீர்க்கதரிசியாலே இவ்வுலகத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறார் என்றும், அவரை நம்பாதவர்கள்மீது புனிதப் போரைத் தொடுக்கப்போவதாகச் சொல்லியும், கார்டூமில் அறிவித்தார். அதன்படி எகிப்தியர்கள், துருக்கியர்கள் ஆகியோரின்மீதும் போரிட்டு, மெக்காவைப் பழைய உன்னத நிலைக்குக் கொண்டுவரவேண்டுமென்று விரும்பினார். 1882-ல் அவருடைய படைகள் கோர்டோஃபன் நதிக்கு மேற்கேயுள்ள மாகாணத்தின்மீது படையெடுத்து வெற்றி கண்டன. நவம்பர் 1883-ல் ஆங்கிலேயத் தளபதி ஹிக்ஸின் தலைமையில் போரிட்ட எகிப்தியப் படையை மறைந்து நின்று அவருடைய படைகள் தாக்கி, அவர்களை முழுவதும் ஒழித்தனர்.

இந்தத் தோல்விக்குப் பின்பு ஆங்கிலேய அரசாங்கத்தின் பொறுப்பு எகிப்தில் அதிகமாகிவிட்டது. சூடானில் உள்ள எகிப்தியப்படைகளை எப்படியும் காக்கவேண்டுமென்று ஆங்கிலேய மக்கள் கூடக்குரலிட்டனர். உண்மையில் ஆங்கிலேய அரசாங்கம் சூடான் விவகாரத்தில் தலையிடாது தனித்தே நின்றது. ஆனால், மக்களின் விருப்பம் இப்படி இருப்பதால், உடனடியாகச் சார்லஸ் கோர்டனை (Charles Gordon) ஒரு படையுடன் அனுப்பி

வைத்தனர். பாராளுமன்ற ஆட்சியின் குறைபாடுகள், இந்த நிகழ்ச்சியில் வெளிப்பட்டதைப்போல, வேறெந்த நிகழ்ச்சியிலும் வெளிப்படவில்லை.

பொறியியல் வல்லுநரான இந்தத் தளபதி முதலில் சீனவில் படையெடுத்துச் சீன அரசாங்கத்திற்கு எதிராக விளைந்த கலகத்தை அடக்கினர். அதற்குப் பிறகு எகிப்து, சூடான் ஆகிய நாடுகளில் 1874-80 வரை சேவை செய்திருக்கிறர். கார்டூம் வரைக்கும் அவருடைய அதிகாரம் நீடித்திருந்தது. அப்பொழுது, அரசாங்கம் ஏற்படுத்துவதற்கான துவக்க வேலையைச் செய்தார். மேலும், அவர் அடிமை முறையை ஒழிக்க முற்பட்டார். அஞ்சாநெஞ்சம் படைத்த அவர், உலகத்தின் புகழுக்கும் பட்டங்களுக்கும் சிறிதும் கவலைப்படாது கடவுள் பணித்த வேலையைச் செய்யவே பிறந்திருக்கிறர் என்ற நினைப்பில், தன்னலமற்ற சேவையில் ஈடுபட்டிருந்தார். அவரைக் காவிய காலத்து வீரனுகவே புகழ்ந்தனர். தெய்வபக்தி குறைந்து வந்த காலத்தில் தெய்வபக்தியும், ‘கடவுளின் கருவி’ என்று அவரை நினைத்துக்கொண்டு கிராம்வெல்லின் வாழ்க்கையைப் போல சமய உணர்வும் பெற்றிருந்தார். அவருடைய உணர்வினல் உந்தப்பட்டு, ஆனல், முரண்பட்ட மனநிலையையுடைய இவரை பேரிங்குடன் (Baring) ஒப்பிட்டுப் பார்த்தால் இரு துருவங்களுக்கும் உள்ள வேறுபாட்டினைக் காணலாம். அரசாங்கத்தின் கட்டாயத்தாலும், மக்களின் விருப்பத்தாலும் இந்தப் பதவியை ஏற்று அவர் கெய்ரோவுக்கு வந்தார்.

ஆங்கிலேய மக்களின் விருப்பத்திற்கேற்பவும் எகிப்திய அரசாங்கத்தின் பலவீனத்தாலும், சூடானிலிருந்து வெளியேற வேண்டிய திட்டத்தை ஆங்கிலேய அரசாங்கம் பின்பற்றியது. பேரிங்குடன் கலந்து ஆலோசனைசெய்து, சூடானிலிருந்து ஆங்கிலேயப் படைகளைத் திருப்பிப்பெறுமாறு கோர்டனுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதனுடன் பேரிங்கை, அங்கே கவர்னர்-ஜெனரலாக நியமிக்கவும் திட்டமிட்டனர். ஆனல், கோர்டன், அரசாங்கத்தின் உத்தரவிலிருந்து விலகிவிட்டார் என்று குற்றம் சாட்டப்பட்டது. அவரும் பேரிங்கும், ஸெபார் பாஷாவை (Zebehr Pasha) நியமனம் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். ஆனல், ஸெபார் பாஷாவை நியமனம் செய்வதில் பாராளுமன்றத்திற்குச் சிறிதும் விருப்பமில்லை. ஏனெனில், ஸெபார், அடிமைகளை வைத்து வர்த்தகம் செய்கிறவர். சூடானைக் கைவிட்டுவிடுவதென்பது அடிமை முறை ஒழிப்பையும் கைவிடுவதற்கொப்பாகும் என்று கூறப்பட்டது. நைல் நதியிலிருந்து

கார்டூமுக்குத் (Khartoum) தமது படைகளை அணிவகுத்துச் செல்லும்போது, கோர்டனை, மஹ்தியின் படைகள் சூழ்ந்து கொண்டன. நைலிலிருந்து கிழக்குப்பாதை வழியாக ஊடுருவிச் சென்று பெர்பரை அடையவேண்டுமென்றும், அதனால் சுவாகினில் நிறுத்தப்பட்டிருந்த படைகளைப் பயன்படுத்தவேண்டுமென்றும் கோர்டன் கூறிய ஆலோசனையை அவர்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. அப் பகுதியைவிட்டு வெளியேறிவிட்டால் உண்மையில் அங்கே போர் நடக்கும் சூழ்நிலை உருவாகிவிடும் என்று கோர்டன் எதிர்பார்த்தார். அதனால், மார்ச்சு மாதத்தில் அங்கே உதவிப் படைகளை உடனடியாக அனுப்பிவைக்கும்படி பேரிங்குகூட எச்சரிக்கை செய்தார். கிளாட்ஸ்டனும் ஹார்கோர்ட்டும் மந்திராலோசனை நடத்தியதில், கோர்டனுடைய திட்டத்தை ஏற்கவேண்டியதில்லை என்று ஆகஸ்ட் மாதத்தில் கூறினர். பின்பு, ஹார்டிங்டனின் இறுதி எச்சரிக்கையின்பேரில் மந்திரிகள் இப் பிரச்சினையை எடுத்துக்கொண்டனர். இந்தக் காலதாமதத் திற்கு அவர்கள் காரணம் கூறாமல் இல்லை. கோர்டனுடைய சில வார்த்தைகளையே எடுத்துக்காட்டி, உதாரணமாக, 'மஹ்தியை ஒழித்தல்' அல்லது 'அங்கிருந்து வெளியேறல் மறக்கமுடியாத அவமானமாகும்' என்று கூறியதை ஆட் சேபித்துக் காலதாமதம் செய்துவிட்டதற்குக் காரணம் காட்டினர்.

கோர்டனுடைய திட்டத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ள வில்லையெனினும், அவரைத் திருப்பி அழைத்துக்கொள்ளவில்லை. 'கோர்டனுக்கு அங்கே ஓர் ஆபத்தும் இல்லை' என்றும், அல்லது 'சூடானில் போரிடுவதென்பது, சூடான் மக்கள்மீது போரிடுவ தாகும்' என்றும், 'அவர்கள் நியாயமாகவே தங்களை விடுவித்துக் கொள்ளப் போராடுகின்றனர்' என்றும் கிளாட்ஸ்டன் நிலைமையை அறியாது பேசிக்கொண்டிருந்தார். ஆனால், அடுத்த இருபது ஆண்டுகளில், அங்கே பல கொடுமைகளும், சாவுகளும், நோய்களும், காமவெறிச் செயல்களும், மக்கள்தொகையில் முக்கால் பகுதியை அழித்துவிட்டன. அரசாங்கம், இவர் களுடைய பரிதாபமான நிலையைச் சிறிதும் கவனிக்காது இருந்து விட்டதே என்று பேரிங் வருத்தப்பட்டார். இதனால், அவர் களுடைய மானத்திற்கும் களங்கம் ஏற்பட்டுவிட்டது. கோர் டனும் மற்ற இரண்டு ஆங்கிலேயர்களும்மட்டுமே, அவர்களு டைய முற்றுகையை 317 நாட்கள் வரையிலும் சமாளிக்கவேண்டி நேரிட்டது. ஆனால், ஆங்கிலேய மக்கள் நைல் நதி தீரத்தில் என்ன நிகழ்கின்றதென்பதைப்பற்றிக் கவலைப்படாது, வாக் காளர் மசோதாவைப்பற்றித்தான் அதிக அக்கறை எடுத்துக் கொண்டனர்.

இறுதியில், அக்டோபர் மாதத்தில் வாடி ஹால்ஃபாவிலிருந்து உல்ஸ்லியின் தலைமையில் ஒரு படை உதவிக்கு அனுப்பப்பட்டது. 1885, ஜனவரி 17-ல் இந்தப் படை அபு கிளா .(Abu Klea) என்ற இடத்தில், பலத்த போராட்டத்திற்குப் பின்பு வெற்றி அடைந்தது. 26ஆம் தேதியன்று, நைல் நதியின் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகின்ற பக்கமாகச் சென்று, கார்டூமை, மஹ்தியின் படைகள் வந்தடைந்தன. இப்படி வெள்ளம் இருக்கும் பக்கத்தில் படைகள் நுழைந்ததால், ஆங்கிலேயர் தங்களுடைய படைகளைப் பலப்படுத்திக்கொள்ள முடியவில்லை அவர்கள் கார்டூமிற்குள் நுழைந்து கோர்டனையும் மற்றும் அவர்கள் கைக்குள் கிடைத்த அத்தனை பேரையும் கொலைசெய்தனர். ஆங்கிலேயரின் நீராவிப் படகுகள் இரண்டு நாட்கள் கழித்து வந்து சேர்ந்தன.

இந்த நிகழ்ச்சியைக் கேட்ட ஆங்கிலேய மக்கள் கொதித்தெழுந்தனர். இதைப்பற்றிய ஒரு கண்டனத் தீர்மானம் பாராளுமன்றத்தில் விவாதிக்கப்பட்டது. பதினான்கு ஓட்டுகள் அரசாங்கம் குறைவாகப் பெற்றது. எல்லாரையும்விட அரசியாரின் கோபம் அளவுமீறியிருந்தது. பல தந்திகள் அடித்து, அரசாங்கத்தின் காலதாமதத்தைப் பலமாகக் கண்டித்திருந்தார். இதனால், இங்கிலாந்திற்கே களங்கம் ஏற்பட்டது என்று வருந்தினார். ஒரு மாத காலம் வரையிலும், மந்திரி சபையினர் கோர்டனுடைய கருத்திற்கிணங்க, மஹ்தி இயக்கத்தை ஒழித்துவிட வேண்டுமென்றும் ஒழுங்கான அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்றும் கூறினர். ஆனால், அதற்குப் பிறகு, அவர்கள் அந்த முடிவை மாற்றிக்கொண்டனர். பேரிங்கினுடைய கொள்கைப்படி, பாதுகாப்பு நடவடிக்கை எடுத்துக்கொண்டாலே போதும் என்று அவர்கள் கருதலாயினர். 'ரேடிகல்'கள் இதனால் அதிருப்தியுற்றனர். இந்தச் சமயத்தில் மீண்டும் போர் பீதி ஏற்பட்டது. சில ஆண்டுகளாகவே, ரஷ்யா, துருக்கோமன் (Turcoman) பிரதேசத்தில் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளில் இறங்கியிருந்தது; 1884-ல் மெர்வ் பகுதியைக் கைப்பற்றியது. 1885 மார்ச்சில் எல்லைத் தகராறு தீர்க்கப்படும் சமயத்தில் ஆப்கானியர்மீது பென்ஜ்டே என்ற இடத்தில் போரிட்டனர். இந்த இடம், ஹீரட்டுக்கு வடக்கேயுள்ளது. கிளாட்ஸ்டன் இந்தச் சமயத்தில் இராணுவத்தைப் பலப்படுத்துவதற்காக நிறைய கடனுதவி கேட்டார். இந்த விவகாரத்தை நடுவர் மூலமாகத் தீர்த்துக்கொள்ளலாம் என்று ஜார் விரும்பினார். இப்படி ரஷ்யாவிடம் ஏற்பட்ட மோதலால், மெதுவாக, சூடானை அவர் கை நழுவவிட்டார். சுவாகினில் ஒரு சிறிய ஆங்கிலேயப் படைமட்டும் நிறுத்தப்பட்டது. எகிப்திய

எல்லையை வாடி ஹால்ஃபா வரையிலும் நிர்ணயம் செய்தனர். அதே ஆண்டில் மஹ்தியும் இறந்துவிட்டார். ஆனால், கலிஃபா அப்துல்லா என்பவரும், அவருடைய அடிமை வர்த்தகர்களும் மத்திய சூடானை ஆட்சி செய்தார்கள். மற்றப் பகுதி வேறு பல வாரிசுகளுக்குச் சென்றுவிட்டது. மேற்குப் பாலைவனத்தைச் சார்ந்த மிகக்கொடிய சென்யூஸி (Senussi), அபிசீனியாவை வென்ற மெனிலிக் ஆகியோரும் ஆட்சி செய்தனர். மெனிலிக், பெல்ஜியம் காங்கோவில் ஒரு பகுதியையும் இத்தாலிக்குச் சேர்ந்த மசோவா (Massowah) என்ற துறைமுகத்தைத் தவிர மேற்குப் பாலைவனப் பகுதியையும் ஆட்சி செய்தார். பல போராட்டங்களுக்குப் பிறகுதான், 1891-ல்தான் எகிப்திய எல்லைகள் பாதுகாப்பாக இருந்தன என்று கூறலாம்.

பேரிங் இரண்டுவிதமான பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. ஊழல், கட்டாய இராணுவ சேவை, அடிமை வர்த்தகம், நீர்ப்பாசனம், நிதி நிர்வாகம் ஆகியவற்றையும் கவனித்துக்கொள்ள வேண்டியிருந்தது. அதே சமயத்தில், எகிப்துக்குக் கடன் கொடுத்தவர்கள், அந்நியர்களின் காலனிகள், அவைகளைப் பாதுகாக்கும் பலவகைப்பட்ட அரச சபைகள் ஆகியவற்றையும் கவனிக்கவேண்டியிருந்தது. ஒவ்வோர் ஆண்டிலும் அவர் சீர்திருத்தங்களைச் செய்துவந்தபோது, அங்கிருந்து வெளியேறுவது என்ற விருப்பம் சிறிது குறைந்துவந்தது. 1884-ல் எகிப்தின் நிலைமையைப் பரிசீலனை செய்ய கிளாட்ஸ்டன், நார்த்ப்ருக் என்பவரை அனுப்பிவைத்தார். ஆனால், அவர் கூறிய ஆலோசனையை கிளாட்ஸ்டன் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஸாலிஸ்பரியின் தூதுவரான டிரம்மண்ட் உல்ஃப் (Drummond Wolff) என்பவர் 1887-ல் துருக்கியுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டார். அதன்படி மூன்று ஆண்டுகளில் எகிப்தைவிட்டுக் காலி செய்துவிடுவதென்று அறிவிக்கப்பட்டது. ஆனால், ஃபிரான்ஸ், ரஷ்யா ஆகிய நாடுகளின் ஆக்கிரமிப்பினால் நெருக்கடியான நிலைமை ஏற்படும் சமயத்தில், மீண்டும் எகிப்தில் ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பு வேண்டுமென்று கோரியதை சுல்தான் ஏற்றுக்கொள்ளவில்லை.

எகிப்தில் நீடித்திருப்பதென்பது, ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் உள்ள நமது நிலையைப் பொறுத்திருக்கிறது. எகிப்தில் ஆதிக்கம் நிலைபெற்றிருப்பது நமது பாதுகாப்புக்கு மிகவும் இன்றியமையாததாக இருந்தது.

# 10. ஸாலிஸ்பரி அரசாங்கமும் அயல்நாட்டுக் கொள்கையும், 1886-1892

கிளாட்ஸ்டன், தன்னுடைய ஐரிஷ் கொள்கையைப் பின் பற்றும் வரையிலும் புதிய மந்திரிசபை லிபரல் யூனியனிஸ்டு களை, (விக்குகளும் ரேடிகல்களும் உட்பட அனைவரையும்) நம்பி யிருக்க முடிந்தது. அவர்களுடைய ஆதரவு எந்தப் பக்கம் சாரு கிறதோ அப் பக்கம்தான் அரசாங்கமும் அமையமுடியும் என்ற நிலை இருந்துவந்தது. அதனால், ஸாலிஸ்பரி, ஹார்டிங்டன் தலைமையில் பதவி ஏற்க விரும்பினர். ஆனால், ஹார்டிங்டன் தலைமைப் பதவியை ஏற்கவோ, அல்லது மந்திரிசபையில் பதவி வகிக்கவோ விரும்பவில்லை. சேம்பர்லேனை அழைத்தாலும், நிலைமையில் புதிய மாறுதல் ஏற்பட்டுவிடும் என்று எண்ணி ஸாலிஸ்பரி கட்சியின் பலத்தைக்கொண்டே அரசாங்கத்தை அமைத்தார்.

அவர் தன்னுடைய மந்திரிசபையில், இன்னும் சில திறமை மிக்க, டிஸ்ரேலி காலத்திலேயே பேரும் புகழும் பெற்று விளங்கிய சில மந்திரிகளை நியமனம் செய்தார். கேதார்ன் (Gathorne) ஹார்டி, கிராஸ் ஆகியோர் அவருடைய மந்திரிசபையில் இடம் பெற்றனர். காலப்போக்கில் அந்த மந்திரிசபை பலம் பெற்றது. ஆனால், சற்றும் எதிர்பாராதவகையில், டிசம்பர் மாதத்தில் ரண் டால்ஃப் சர்ச்சில் (Randolph Churchill) ராஜிநாமா செய்தது ஒரு வகையில் அந்த மந்திரிசபைக்குப் பெரிய அதிர்ச்சியை அளித் தது. அவர் தம்முடைய முப்பத்தேழாவது வயதிலேயே நிதி மந்திரியாகவும், காமன்ஸ் சபைத் தலைவராகவும் பணிபுரிந்திருக் கிறார். அவருடைய விவேகமிக்க நண்பரான ஹிக்ஸ்-பீச் மிகவும் முக்கியமான ஐரிஷ் காரியதரிசி பதவியை ஏற்று, அவருக்கு உதவி செய்திருக்கிறார். ஸ்டாஃபோர்ட் நார்த்கோட் [அப்பொழுது இட்டஸ்லே பிரபு (Lord Iddesleigh]] ஸாலிஸ்பரியின் கண்காணிப்பில் அயல்நாட்டுத் துறையைக் கவனித்துவந்தார்.

அவர் தன்னைப்பற்றியே முக்கியமாக நினைத்துக்கொண்டிருப்பவர்; அதுமட்டுமன்றிக் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு அவர் அடங்கி நடக்கவில்லை. அவர் தவறே செய்யவில்லையென்றாலும், அல்லது அவர் உடல்நிலையே சீர்கெட்டுவிட்டதென்றாலுங்கூட நாம் கவலைப்படவேண்டியதில்லை. ஆனால், கட்சிக்குள் அடங்கி அவர் நடக்காதது பெரும் குறையாகும். அவர் ஸாலிஸ்பரியை எதிர்த்துப் பேசுவதும், அவருடைய கொள்கைகளை எதிர்த்துப்பேசுவதும், அவரைச் சேம்பர்லேனுடைய ஆள் என்று சொல்லுமாறும் குறைகூறுமாறும் செய்தது. ஸாலிஸ்பரி எவ்வளவோ முறை அவரைக் கண்டித்தும் அல்லது அவரது வேகத்தைக் குறைக்கச் சொல்லிக் கூறியதும் பயன்தராமல் போயிற்று. அவருடைய கட்சிக்கு மாறான கொள்கைகள் பெரிய நெருக்கடியை ஏற்படுத்திவிடும் என்பதைக் காலம்தான் உணர்த்தும். சர்ச்சிலின் வரவு செலவுத் திட்டத்தில் மரண வரியும் வீட்டு வரியும் அதிகரிக்கப்பட்டது. போர்க்கருவிகள் உற்பத்தியிலும் அவர் சிக்கனத்தைப் பின்பற்றினார். இதனால் இவர் வருமான வரியைக் குறைக்கவும், புகையிலை, தேயிலைமீது விதிக்கப்பட்ட வரிகளைக் குறைக்கவும் முயன்றார். மேலும், தல அரசாங்கங்களுக்கு அதிக மானியங்களையும் அவர் வழங்க விரும்பினார். ஆனால், இராணுவ மந்திரிகளான டபிள்யூ. எச். ஸ்மித் (W. H. Smith), ஜார்ஜ் ஹாமில்டன் (George Hamilton) ஆகியோர் இவரது சிக்கனத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. ஐரோப்பிய அரசியல் நிலைமை மிகவும் மோசமாக இருந்ததால், ஸாலிஸ்பரியும் இந்தச் சிக்கனத்தை விரும்பாது, இராணுவ மந்திரிகளையே ஆதரித்தார். கட்சியின் செல்வாக்கை மிகுதியாகப் பெறுவதற்குரிய முறையில் அவர் ராஜிநாமா செய்தார். அந்த ராஜிநாமாவை கேபினட் ஏற்றுக்கொண்டது.

ஒரு கூட்டு மந்திரிசபையை அமைத்து, அதற்கு ஹார்டிங்டன் தலைமைவகிக்க வேண்டுமென்று அவருடைய நண்பர்கள் கேட்டுக்கொண்டதையும் அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்கிடையே கோஷன் (Goschen) என்ற திறமைமிக்க நிதி மந்திரியைப் பதவியில் அமர்த்தினார்கள். அவர் ஒரு லிபரல் யூனியனிஸ்டு. அவருடைய ஆலோசனையின்பேரில் இட்டஸ்லேயை, அயல்நாட்டுத் துறையிலிருந்து நீக்கிவிட்டனர். அப் பதவியை ஸாலிஸ்பரியே தம் பொறுப்பில் வைத்துக்கொண்டார். டபிள்யூ. எச். ஸ்மித் என்ற நல்ல திறமைமிக்க வியாபாரி காமன்ஸ் சபையின் தலைமையை ஏற்றார். ஹிக்ஸ்-பீச் என்பவரின் உடல் நிலை தாற்காலிகமாகக் கெட்டுவிட்டதால், அவருக்குப் பதிலாக ஸாலிஸ்பரியின் உறவினரான ஏ. ஜே. பல்ஃபோர் (A. J. Balfour) என்பவர் ஐரிஷ் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார்.

அவர் மிகுந்த துணிச்சல் மிக்கவரும் நல்ல விவாதத் திறமை படைத்தவருமாவார். 1891-ல் ஸ்மித் இறந்தவுடன், காமன்ஸ் சபைத் தலைமை இவர் பொறுப்பில் விடப்பட்டது. சர்ச்சிலின் வீழ்ச்சி, சேம்பர்லேனுடைய கட்சியுடன் கொண்டிருந்த தொடர்பினை அறுத்தெறிந்துவிட்டது. அதனுல், லிபரல் கட்சியை ஐக்கியப்படுத்த எடுத்துக்கொண்ட முயற்சி வீணுகியது. பல்ஃபோரின் (Balfour) பதவி உயர்வினுல், சர்ச்சிலின் டோரி ஜனநாயகவாதிகளிடமிருந்த செல்வாக்குங்கூடச் சிறிது மறைந்தது. உண்மையில், அப்படியில்லை என்று எடுத்துக் கொண்டாலும், அவர் மிகவும் மனம் நொந்து ஐம்பது வயது முடிவதற்குள்ளேயே 1893-ல் இறந்துவிட்டார்.

அயர்லாந்துப் பிரச்சினையைத் தவிர, மற்றக் கொள்கைகளில் அரசியல் கட்சிகளிடையே அதிக வேறுபாடில்லை. சீர்திருத்தங்களைக் கொண்டுவர இந்த அரசாங்கத்திற்கு விருப்பமில்லையெனினும், அரசாங்கத்தின் சில கொள்கைகளில் முக்கியத்துவம் இருக்கத்தான் செய்தது. அரசாங்கம் கமிஷனை நியமித்துப் பரிசீலனை செய்த பின்னர் அதனுல் பல நல்ல பயன்கள் உண்டாயின. 1890-ல் நியமிக்கப்பட்ட ஹார்டிங்டன் கமிஷன் இராணுவத்தில் பல மாற்றங்களைச் செய்து புதுப்பிக்குமாறு சில சிபாரிசுகளைச் செய்தது. ஓர் இராணுவக் கவுன்சிலையும், ஓர் இராணுவக் காரியாலயத்தையும் நிறுவவேண்டுமென்று அக் குழு சிபாரிசு செய்தது. ஆனுல், ஒரு தலைமுறைக் காலம் வரையிலும் அக் கருத்து ஒத்திப்போடப்பட்டது. எனினும், பிற்காலத்தில் அந்த ஆலோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டது. கப்பற்படைச் சீரமைப்பும், புதுவகையான துப்பாக்கிகளைக் கண்டுபிடித்தலும், மற்றச் சீர்திருத்தங்களும், 1889-ல் இயற்றப்பட்ட கடற்படைப் பாதுகாப்புச் சட்டத்தினுல் கொண்டுவரப்பட்டன. இந்தச் சட்டத்தின்படி, ஐந்து ஆண்டுகளில் பத்துப் போர்க் கப்பல்களும் அறுபது நாசகாரிக் கப்பல்களும் நிர்மாணிப்பது என்று முடிவு செய்யப்பட்டது. கோஷனின் நிதி நிர்வாகம் ஏறக்குறைய சர்ச்சிலின் கொள்கைகளைப் பின்பற்றியதாகவே இருந்தது. அவர் கடன் அடைத்தல், வருமான வரி, தேயிலை வரி ஆகியவற்றைக் குறைத்தல் போன்ற சீர்திருத்தங்களைச் செய்தார். 1888-ல் அவர் 500 மில்லியன் பவுன்கள் மதிப்புள்ள அரசாங்கக் கடன் பத்திரங்களை 3 சதவிகித வட்டியிலிருந்து $2\frac{1}{2}$ சதவிகித வட்டியாகக் குறைத்தார். இந்தக் கன்சர்வேடிவ் அரசாங்கம், சேம்பர்லேனின் தீவிரமான சில முன்னேற்றச் சீர்திருத்தங்களையும் மேற்கொண்டது. டைத் வரியை நிலக்கிழார்கள்தான் கொடுக்கவேண்டுமே தவிர, குத்தகைக்காரர்

தரவேண்டியதில்லை என்று அறிவித்தது. 1890-ல் இயற்றப்பட்ட வீடுகட்டும் சட்டத்தின்படி சேரிகளை ஒழிப்பதற்காகவாவது, அல்லது அந்தச் சேரிகளை விலைகொடுத்து வாங்கவாவது நிறைய வசதிகள் தரப்பட்டன. தொழிற் கல்வி பரப்புவதற்காகவும் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதன்படி தல அரசாங்கங்களுக்கு நிறைய மானியம் அளிக்கப்பட்டது. 1888-ல் இயற்றிய தல அரசாங்கச் சட்டப்படி, நிலப் பிரபுக்களின் ஆட்சி கவுன்டிகளிலும், கவுன்டி பரோக்களிலும் மாற்றப்பட்டது. இவர்களுடைய அதிகாரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் கொண்ட கவுன்சில்களுக்கு அளிக்கப்பட்டது. ஆனால், சில நீதி வழங்கும் அதிகாரங்கள் அவர்கள் கையில் இன்னும் விட்டு வைக்கப்பட்டன. இதைப்போல மற்றும் ஒரு சட்டம் லண்டனுக்கும் இயற்றப்பட்டது. அதன்படி லண்டன் கவுன்டி கவுன்சில் நிறுவப்பட்டது. ஆனால், இந்தக் கவுன்சிலின் அதிகாரங்கள் அளவில் குறைந்திருந்தன. ஏனெனில், லண்டன் நகரக் கார்ப்பரேஷன், மற்றும் பல குழுக்களும் அங்கே நிறுவப்பட்டிருப்பதால், அவைகளுக்கும் சில அதிகாரங்கள் தரப்பட்டிருக்கின்றன. இப் பகுதியில்தான், நடைமுறையில் சோஷியலிசக் கொள்கைகளைக் கொண்டுவருவதற்காக முதன்முதல் போராட்டம் நடத்தப்பட்டமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

பீல், கிளாட்ஸ்டன் ஆகியோரின் கொள்கையான 'பணம் வரி கொடுப்போனிடம் இருக்கும்போது பல நல்ல பயன்களைத் தருவதுபோல, அரசாங்கக் கருவூலத்தில் இருக்கும்போது நல்ல பயன் அளிப்பதில்லை' என்ற கொள்கையை அவர்களும் பின்பற்றினர். சர்ச்சில் காலத்தில் 94 மில்லியன் பவுன்களுக்குத்தான் வரவுசெலவுத் திட்டம் இருந்தது. கோஷன் காலத்தில் £ 100 மில்லியன்களுக்கு மேற்படவில்லை. ஆனால், இந்த அரசாங்கத்தின் துவக்கம் பெரிய வர்த்தக மந்தநிலையில் ஆரம்பித்தது. அதனால், ஏற்பட்ட வேலையில்லாத் திண்டாட்டத்தால் நிறைய கலகங்கள் உண்டாயின. 1891-ல் வர்த்தக நிலைமை வளர்ச்சி அடைந்த போதிலும், மக்களிடம் அதிருப்தியும் பொறுத்துக்கொள்ளும் சக்தி இன்மையும் காணப்பட்டது. 1889-ல் துறைமுகத் தொழிலாளிகள் மணிக்கு ஆறு பென்ஸ் வீதம் கூலி வேண்டுமென்று கோரி வேலைநிறுத்தம் செய்தனர். சார்லஸ் பூத் என்பவர் இச் சமயத்தில் லண்டனிலுள்ள வறுமையைப்பற்றிப் புள்ளி விவரங்களைச் சேகரித்து வெளியிட்டார். கடைகளில் வேலை செய்கின்றவர்களுக்கு அதிகபட்சம் வாரத்திற்கு 74 மணிநேரம் வேலைசெய்ய வேண்டுமென்று, ஒரு கடைகளுக்கான சட்டம்

அப்பொழுது இயற்றப்பட்டது. இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் பார்க்கும்பொழுது, அக் காலத்திய மக்கள் அன்றாட வயிற்றுப் பிழைப்பிற்காக எவ்வாறு அல்லற்பட்டனர் என்பது புலனு கின்றது. இதனால், புதிய ஜனநாயக அடிப்படையில் தொழிற் சங்கங்கள் வளர்ச்சி அடைய வாய்ப்பு ஏற்பட்டது. அந்தத் தொழிற் சங்கங்களில் சோஷியலிஸ்டு சிந்தனையாளர்கள் சேர்ந்தனர். இந்தச் சங்கங்கள் முதன்முதலாகத் தல அரசாங்கப் பகுதிகளில் பிரசாரம் செய்ய நல்ல சூழ்நிலையை அமைத்துக்கொண்டன.

அயர்லாந்துடன் ஐக்கியமாக இருக்கவேண்டுமென்ற கொள்கையினால்தான் இந்த அரசாங்கம் பதவிக்கு வர முடிந்தது. கேபினட், அதனுடைய திட்டங்களை நிறைவேற்றும்பொழுது பல தவறுகளைப் புரிந்தாலும், ஏதோ நல்ல காலத்தால் அது நீடித்து இருக்க முடிந்தது. தவறுகளுங்கூட, ஒரு தீர்மானமாகவும் கட்சியின் ஆதரவிலும்தான் செய்யப்பட்டன என்பது குறிப்பிடத் தக்கதாகும். 1887-ல் அயர்லாந்தில் வாடகைகளை நிலக்கிழார் களுக்குத் தருவதில்லை என்று, நிலக்கிழார்களின் வெளியேற்றக் கொள்கைக்கு எதிராகத் திட்டமிட்டுப் போராட்டத்தைக் குத்தகைக்காரர்கள் ஆரம்பித்தனர். இந்தத் திட்டத்தை ஆரம் பித்ததில் அயர்லாந்திலுள்ள சில தீவிரவாதிகள் பார்னெல் ஆட்சி யிடமிருந்து பிரிந்தனர். அவர்களுள் முக்கியமானவர் ஜான் டில்லன் என்பவராவர். டைம்ஸ் பத்திரிகையில், பார்னெல், கொலைகளையும் மற்றக் குற்றங்களையும் செய்யத் தூண்டியதாக எழுதிய கடிதங்களைப் பிரசுரம் செய்து, அங்கே நிரந்தரமான குற்றங்களைத் தடுக்கும் சட்டம் ஒன்றை இயற்றவேண்டுமென்று வற்புறுத்தியது. மேலும், அந்தப் பத்திரிகை, ஐரிஷ் காரிய தரிசிக்கு ஜூரி மூலமாக வழக்குகளை விசாரணை செய்வதை நிறுத்தும் அதிகாரத்தை அளிக்கவேண்டுமென்றும், அப் பகுதி களைக் குற்றப் பகுதிகள் என்று அறிவிக்கவும் அதிகாரம் தரப்பட வேண்டுமென்று கேட்டுக்கொண்டது. இப் பத்திரிகையின்மீது, பார்னெல் சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொண்டார். வழக்கத்திற்கு மாறாக ஆங்கிலேய அரசாங்கம், அரசியல் அமைப் பையும் நீதியையும் புறக்கணித்து, தனிச் சிறப்புமிக்க நீதிபதி களைக் கொண்ட ஒரு கமிஷனை நியமித்தது. மற்றச் சாதாரண நீதிமன்றங்களின் வழக்காறுகளையும் மீறி, இதில் தொடர்புள்ள அரசியல் காரணங்களையும் பரிசீலனை செய்யுமாறு அரசு உத்தர விட்டது. ஆனால், அவர் எழுதியதாகக் கூறப்பட்ட கடிதங்க ளெல்லாம், அவரால் எழுதப்பட்டவை அல்லவென்று தெரிந்து கொண்ட பின்பு, பார்னெல் விடுதலை செய்யப்பட்டார். அதனால்

அரசாங்கத்திற்குச் சிறிது ஏமாற்றம் ஏற்பட்டது. ஆனால், 1890-ல் ஓ'ஷியா விவாக ரத்து வழக்கில் பார்னெல் குற்றம் சாட்டப் பட்டுத் தண்டிக்கப்பட்டதில், அரசாங்கத்தின் நோக்கம் ஈடேறியது. இதனால், ஆங்கிலேய இணங்காத சமயத்தினரின் உள்ளம் புண்பட்டது. ஆனால், கிளாட்ஸ்டன் லிபரல் கட்சி அங்கத்தினர்களுக்கு வேண்டுகோள் விடுக்கும்பொழுது, ஒன்று கிளாட்ஸ்டனை தேர்ந்தெடுக்கவேண்டும் அல்லது பார்னெலைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று கூறினார். ஐரிஷ் கட்சியிலே இன்னும் அதிக பிளவு ஏற்பட்டுவிட்டது. 1891-ல் பார்னெல் இறந்த பிறகுங்கூட, இந்தப் பிளவு நீடித்தது. இதற்கிடையே அயர்லாந்தில் அமல் நடத்திய கட்டாயச் சட்டங்களுடன், பல்ஃபோர், சில நல்ல சீர்திருத்தங்களையும் செய்தார். வாடகைகள் குறைக்கப்பட்டன. விவசாயிகள் நிலம் வாங்கும் வசதிகளை அதிகமாக்கினார். ஜில்லா போர்டுகளை நிறுவினார். அவற்றிற்கு மீன் பிடிக்கும் தொழில், மற்றும் பல கிராமத் தொழில்களில் அபிவிருத்தி செய்ய அவர் மானியம் அளித்தார். வறுமை நிறைந்த மேற்குக்கரையில் உள்ள மக்கள் இதனால் நன்மை அடைந்தனர். ஆனால், ஸாலிஸ்பரியின் அளவுகடந்த ஆர்வம், உள்நாட்டுக் கொள்கையில் மட்டும் ஈடுபாடு கொள்ளவில்லை. இதைப்போலவே அவர் பெற்ற பேரும் புகழும் அவருடைய உள்நாட்டுக் கொள்கையால் உண்டானவை அல்ல.

பதினாறு ஆண்டுகள் பதவி வகித்ததில், அவர் பதின்மூன்று ஆண்டுகள் கேபினட்டின் தலைமைப் பதவியை விடாது வகித்திருக்கிறார். மேலும், கேபினட்டில் தலைமை வகித்த கடைசி பிரபுவும் இவரேயாவர். சாதாரணக் கட்சித் தலைவருக்கும் இவருக்கும் அதிக வேறுபாடு உண்டு. அவருடைய ஆர்வம், ஜனநாயகத்தில் முன்னேற்றத்தை ஏற்படுத்தவேண்டுமென்பதிலோ, அல்லது பேரரசைப் பரப்பவேண்டுமென்பதிலோ அடங்கிக் கிடக்கவில்லை. எனினும், அவர் மக்களுடைய வாழ்க்கையில் நிரந்தரமான முன்னேற்றமும் வளர்ச்சியும் ஏற்படவேண்டுமென்பதை நன்றாக உணர்ந்திருந்தார். சமீபத்தில், மக்களுடைய பொது வாழ்க்கையில் பல மாற்றங்கள் ஏற்பட்டு அவர்களைத் தொல்லைகளுக்குள்ளாக்கியதை அவர் ஒழுங்குபடுத்த முயன்றார். சமீபத்தில் மேற்கொண்ட நிலையான கொள்கையிலுங்கூட, மக்களிடத்திலே பணம் சம்பாதிக்கும் குறிக்கோளும் நிலம் வாங்கும் ஆர்வமும் அதிகமாகிவிட்டதை அவர் கண்டித்தார். அவருடைய முன்னோரான பர்க்லே (Burghley) போன்று, இவருக்கும் இங்கிலாந்தின்மீது அளவுகடந்த பற்று இருந்து வந்தமை குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், அதேசமயத்தில்

ஐரோப்பாவிலுள்ள அண்டை நாடுகளுடன் நட்புக்கொண்டு வாழ்தலும் அவர்களுடைய துயரங்களைத் தீர்த்தலும் ஆகிய மற்ற நாடுகளின் நலன்களைப் போற்றுவதிலும் அவர் மிகுந்த ஆர்வமுடையவராக இருந்தார். அவருடைய வாழ்க்கையின் லட்சியம் ஒரு நல்ல கிறித்துவனைப்போல வாழவேண்டுமென்பதேயாகும். இருப்பினும், கிறித்துவக் கொள்கைகளை நிலைநிறுத்த இன்னும் போர் நீடித்து நிகழ்ந்து வருவதால், அப் போரில் ஈடுபட்டுள்ள கிறித்துவரல்லாதார்களிடம், மக்கள் என்ற ஆயுதங்களைக் கொண்டே போரிட வேண்டியிருக்கிறது. அவருக்குக் கட்சிகள் கூக்குரலிட்டுக்கொண்டு பிரசாரம் செய்வது சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால், புதிய கண்டுபிடிப்புகள், விஞ்ஞான வளர்ச்சியில் அக்கறை ஆகியவற்றை ஏற்றுக்கொள்வதில் அவர் தீவிரவாதியைப் போலத்தான் இருந்தார். குழப்பமான சமரசத்தை ஏற்றுக்கொள்வதிலோ, அல்லது அவர் பகைத்துக்கொண்டவர்களிடம் மனநெகிழ்ச்சியுடன் பழக முயலுவதிலோ விடாப்பிடியாகக் கட்சியின் கொள்கைகளைத்தான் அவர் பின்பற்றினார். அவருக்கு அரசியாரின்மீது தளராத விசுவாசமும், நாட்டின் மீதும், அதன் நிறுவனங்களிடம் பற்றும், அவருடைய நண்பர்கள், குடும்பத்தினர் ஆகியோர்மீது அன்பும், ஐரோப்பாவிடம் நட்பும் ஆகிய சில குறிப்பிட்ட கொள்கைகள்தான் இருந்தன என்று கூறலாம். அவருடைய அறிவைப் பொதுமக்கள் பாராட்டிய போதிலும், அவர்களுடைய பாராட்டுதல்களிலிருந்து ஒதுங்கியே அவர் நின்றார். அவர் ஒரு சமநிலையை ஏற்படுத்துகின்ற பலவிதமான தன்மைகளை உடையவர். மனிதனின் பொதுநலப் பண்பில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. தீமையான சக்திகளை அப்படியே விட்டுவிட்டால், ஒன்றோடு ஒன்று மோதித் தானாகவே ஒழுங்காகிவிடும் என்று அவர் கருதினார். கொள்கைகளை அடிக்கடி மாற்றாது, விடாப்பிடியாகப் பின்பற்றுவதை அவர் விரும்பினார். பெரிய சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென்ற நம்பிக்கை அவரிடம் இல்லாததால், அவர் அரசாங்கத்தின் தோல்விகளைக் கண்டு மனமுடையவில்லை.

பால்மர்ஸ்டன் மரணத்திற்குப் பின்பு, அயல்நாட்டுக் கொள்கையில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டன. ஃபிரான்சின் ஆதிக்கத்தை பிஸ்மார்க்கின் ஜெர்மனி அடக்கியது. ஜெர்மனியின் பக்கம், ஆஸ்டிரியா-ஹங்கேரி பலமிக்க நேச நாடுகளாக இருந்தன. புதிய இத்தாலிய நாடு தோற்றுவிக்கப்பட்டது. ரஷ்யா பல வெற்றிகளை அடைந்தது. இவற்றைவிட ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொரு வல்லரசும், ஆசியாவிலும் ஆஃப்பிரிக்காவிலும் தங்களுடைய உற்பத்திப் பொருள்களை

விற்பனை செய்யச் 'சந்தைகளை'ப் பிடித்துக்கொண்டிருந்தன. இங்கிலாந்தைப் பொறுத்தமட்டில் இந்தப் போட்டி அவர்களை அதிகமாகப் பாதித்தது. இவற்றால், 1878-ல் ஏற்பட்ட பெர்லின் உடன்படிக்கையிலிருந்து ஸாலிஸ்பரி 1886-ல் பதவியேற்கும்வரை, ஐரோப்பாவில் சமநிலையற்ற தன்மை இருந்துவந்தது.

இன்னும் நீண்ட காலத்திற்குத் தனித்து நிற்றல் என்ற கொள்கையை ஐரோப்பிய அரசியலில் பின்பற்ற முடியாத நிலை ஏற்பட்டுவிட்டதை ஸாலிஸ்பரி அவருடைய வாழ்க்கையின் இறுதியிலுணர்ந்தார். அப்படித் தனித்து நிற்பதற்கு, வரலாற்று வழியாக எந்தக் காரணத்தையும் கூறமுடியாது. ஏற்கெனவே, இக் கொள்கையைப் பின்பற்றிய பாராளுமன்றத்தில், இக் கொள்கையை மாற்றிக்கொள்ள முயன்றமை பெரும் சாதனையாகும். கவனத்துடன் தனித்து நிற்றல் கொள்கையை அவரே ஒரு முறை ஒரு சந்தர்ப்பத்தில் கூறியிருக்கிறார். அதனால், அவருடைய கொள்கையை, இப்பொழுது தப்பிதமாகப் புரிந்துகொள்வதற்கில்லை. கிளாட்ஸ்டன்—கிரென்வில் ஆட்சிக்காலத்தில், நமக்கு ஒரு நன்மையும் கிடையாது. ஆனால், அவர்கள் இரண்டு பெரிய பகைவர்களை ஏற்படுத்திவிட்டனர். ஒரு பகைமை நாடு ஃபிரான்ஸாகும். அதனுடைய மனத்தை எளிதில் ஒன்றும் மாற்ற முடியாது. உலகம் முழுவதும் அது பல துன்பங்களை உற்பத்தி செய்துவந்தது; நியூஃபவுண்ட்லாந்திலுள்ள மீன்பிடிக்கும் தொழில்கள், இந்தோ-சீனா, அல்லது காங்கோ ஆகிய நாடுகளில் பல இடையூறுகளை விளைவித்தது. சமீபத்தில், டூனிஸ், மடகாஸ்கர் ஆகிய நாடுகளைக் கைப்பற்றியது; மொராக்கோமீது படையெடுக்கத் திட்டம் தீட்டிக்கொண்டிருந்தது; எகிப்தில் நாம் ஆட்சிசெய்ய இருந்த வாய்ப்பைத் தடுத்தது. உள்நாட்டில் அரசாங்கம் நிலையற்ற தன்மையை அடைந்திருந்ததால், அங்கே எப்பொழுதும் போரை ஆதரிக்கின்ற கட்சி வளர்ந்துகொண்டே வந்தது. ஃபிரான்சில் ஆங்கிலேய இராச்சியத் தூதராக இருந்த லையான்ஸ் பிரபுவை ஒருசமயம் ஸாலிஸ்பரி அழைத்து அயல்நாட்டுத் துறையின் நிர்வாகத்தை ஏற்கச் சொன்னார். அந்த லையான்ஸ் பிரபு, பாரிசில் இருபது ஆண்டுகள் வேலை பார்த்தபோது, அங்கே இருபத்திரண்டு வெளிநாட்டு மந்திரிகளைப் பார்த்துவிட்டார். 1886-87-ல் யுத்த மந்திரியாக இருந்த ஜெனரல் பௌலங்கர் எதிரி நாடுகளின்மீது பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் நாட்டுமக்களைத் தயார் செய்துகொண்டிருந்தார். நமது பலமிக்க மற்றொரு பகைமை நாடு ரஷ்யாவாகும். 1878-ல் அதற்கு ஏற்பட்ட அவமானத்தை இன்னும் ரஷ்யா மறக்கவில்லை. பெண்ட்ஜேவில் அது நம்மை

அச்சுறுத்தியது; பல்கேரியாமீது ஆக்கிரமிப்பு நடத்தியதைக் கவனித்தோமெனில், அதற்குக் கான்ஸ்டான்டிநோபிளின் மீது உள்ள ஆசை இன்னும் தணியவில்லை என்றே தெரிகிறது. இந்தச் சூழ்நிலையில், 'தனித்து நிற்றல்' கொள்கை நமக்குப் பாதுகாப்பை அளிக்காது. மேலும், நமது பெரிய பேரரசையும், ஐரோப்பிய நாடுகள் ஒன்று சேர்ந்து, கொள்ளைப் பொருளைப் பங்கு போட்டுக் கொள்வதைப்போன்று பிரித்துக் கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை என்று ஸாலிஸ்பரி எழுதினார்.

பேரரசில் ஒவ்வொரு நாட்டைச் சேர்க்கும்பொழுதும் ஆபத்தும் அதிகரித்துக்கொண்டே வருகிறது. எகிப்தில் நாம் ஆதிக்கம் செலுத்துவது பேராபத்தை ஏற்படுத்துகின்ற சூழ்நிலையை ஏற்படுத்திவிட்டது. இதனால், துருக்கி பகைத்துக் கொண்டது. ஃபிரான்ஸ் நம்மைவிட்டுப் பிரிந்துவிட்டது. ஆக்கிரமிப்பில் ஈடுபட பிஸ்மார்க் ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டார். 1893 வரையிலும் ஜெர்மன் சான்சலரான பிஸ்மார்க் ஐரோப்பாவிலேயே ஒரு பெரிய தலைவராகக் கருதப்பட்டார். ஜெர்மனி மனநிறைவு கொண்ட ஒரு நாடாகும் என்றும், அது அமைதியை விரும்புகிறதென்றும் அவர் கூறினார். ஆனால், போர் வெறியையும், அதற்கேற்ற பிரசாரத்தையும், பீதியையும் ஏற்படுத்தி, மற்ற நாடுகளை ஆதிக்கம் செலுத்துவதுமூலமாக அவர் அமைதியை ஏற்படுத்த முயன்றார். அவர் எளிதாக அடைந்த வெற்றிகளுக்குப் பிறகு ஒரே ஒரு பயம்தான் அவரை ஆட்டிப் படைத்துக்கொண்டிருந்தது. ஒரே சமயத்தில் இரண்டு முனைகளில் போர் ஏற்பட்டால் என்ன செய்வது என்ற பயம் அவருக்கு இருந்தது. 1870-க்குப் பிறகு ஃபிரான்ஸ் பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் இருந்தது. ஸ்லாவிய மக்களின் மீது ஆதிக்கம் செலுத்தும் ரஷ்யாவின் நோக்கம் ஈடேறாததால், ஜெர்மனிமீது தாக்குதல் நடத்த சமயம் பார்த்துக்கொண்டிருந்தது. அதனால், ரஷ்யாவை எப்படியும் திருப்தி செய்து ஃபிரான்ஸைப் பிரித்துவிட வேண்டுமென்று அவர் எண்ணினார். அதன்படி விரித்த வலையில், முதலில் ஆஸ்திரியாவுடன் 1879-ல் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். எப்படியும் ஆஸ்திரியாவின் நட்பைப் பாதுகாக்கவேண்டும். பின்பு, மூன்று பேரரசர்களின் சங்கத்தை ஏற்படுத்தி, ரஷ்யாவுடன் தொடர்புவைத்துக் கொள்ள முயற்சிசெய்தார். 1881-ல் முக்கூட்டு உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது. இந்த உடன்படிக்கையின் முக்கிய நோக்கமாவது, இத்தாலிக்கும் ஆஸ்திரியாவுக்கும் ஏற்பட்டிருந்த பல மனக்கசப்புகளைப் போக்கவேண்டுமென்பதேயாகும். பிரிட்ட

னுடன் அவருக்கு நேரடியான பூசல் ஒன்றுமில்லை. எனினும், பிரிட்டனின் வழியில் அவர் குறுக்கிட்டுக்கொண்டு வந்தார். பால்கன் நாடுகளின் எதிர்காலத்தைப்பற்றியே அவர் சிறிதும் கவலைப்படாது, அந்த நாடுகளை ஆஸ்திரியப் பகுதியென்றும், ரஷ்யப் பகுதியென்றும் பிரித்துவிட வேண்டுமென்று திட்டமிட்டார். டூனிஸ் பகுதியை ஃபிரான்ஸ் பிடித்துக்கொண்டதனால் இத்தாலியர்களுக்கு ஆத்திரமேற்பட்டது. இத்தாலியர்களின் கோபம், பிஸ்மார்க்கின் சூழ்ச்சிக்கு நன்கு பயன்பட்டது. இதைவிட, பிரிட்டன் எகிப்தை ஆதிக்கம்செய்தது அவருக்கு மிகவும் சாதகமாகிவிட்டது. இதை வைத்துக்கொண்டு ஃபிரான்சையும் மிரட்டலாம்; பிரிட்டனையும், பஸிஃபிக்கிலும் ஆஃப்பிரிக்காவிலும் மிரட்டலாம் என்று அவர் எண்ணினார்.

கிளாட்ஸ்டனுடைய கொள்கைகளையும், ஸ்லாவ் இனத்தவர் மீது அவர் வைத்திருந்த பரிவையும், பிஸ்மார்க் சிறிதும் நம்பவில்லை. அதனால் பிஸ்மார்க், மற்றக் கிழக்குப் பேரரசுகளுடன் இரகசியமாக ஒப்பந்தம் செய்துகொண்டு, ஸ்டிரெயிட்ஸில் இனிமேல் ஆங்கிலேயப் போர்க் கப்பல்கள் வர முடியாதபடி தடுத்து நிறுத்த ஏற்பாடு செய்தார். மேலும், பிஸ்மார்க்கின் அறிக்கைகளையும் கோரிக்கைகளையும் பிரிட்டிஷ் கேபினட் பரிசீலனை செய்து ஒரு முடிவிற்கு வருவதற்குள், பிஸ்மார்க் அவர்களுடைய காலதாமதத்தை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டார். அப்பொழுதுதான், கிரென்வில்லும் டெர்பியும் இவருடைய கொள்கைகளைப்பற்றித் தீவிரமாக ஆலோசனை செய்து வரும் பொழுது, ஆஃப்பிரிக்காவிற்கு அவர்கள் அமைத்துக்கொண்ட மன்ரோ கோட்பாட்டினை அவர் பலமாக ஆட்சேபித்தார். 1884-ல் தென்மேற்கு ஆஃப்பிரிக்காவை ஜெர்மன் பாதுகாப்பில் அவர் கொண்டுவந்தார். மேலும், டோகோலாந்து, கேமரூன்ஸ் ஆகிய பகுதிகளையும் அவர் கைப்பற்றினார். ஃபிரான்சின் உதவியைக் கொண்டு, காங்கோவில் ஆதிக்கம் செலுத்தத் திட்டமிட்டிருக்கும் ஆங்கிலோ-போர்ச்சுகீசியத் திட்டங்களை அவர் ஆட்சேபித்தார். கார்ல் பீட்டர்ஸ் என்பவரும் ஒரு ஜெர்மன் கம்பெனியும், ஜான்ஸிபாரின் உட்பகுதியில் நிலப் பரிசீலனை செய்து, அப் பகுதியை இணைக்கமுயன்றனர். அதேசமயத்தில், நியூ கினியாவிலும் சமோவாவிலும், ஜெர்மானியர் தங்களது ஆதிக்கத்தைச் செலுத்தியது, ஆஸ்திரேலியாவிற்கு மிகவும் ஆத்திரத்தை உண்டாக்கியது.

ஆஃப்பிரிக்கப் பகுதிகள் பங்கு போடப்படுவதும், பின்பு அங்குள்ள குறைகளைப் போக்குவதிலும் அங்கே அமைதியை நிலை நிறுத்துவதிலும் ஸாலிஸ்பரி தீவிரமாக ஈடுபட்டு, பின்பு அந்தக்

காரியங்களையும் சாதித்தார். 1886-88 வரை இருந்த அரசியல் சூழ்நிலை மிகவும் கொந்தளிப்பாக இருந்தது. பல்கேரியாவில் ஏற்பட்ட ரஷ்ய எதிர்ப்பு இயக்கம் ஜாரை மிகவும் கோபத்திற்குள்ளாக்கியது. பல்கேரியா நன்றிகெட்ட தனமாக நடந்து கொண்டது என்று ஜார் நினைத்தார். துருக்கியின் சூழ்ச்சியும், பௌலங்கரின் பகட்டான கொள்கையும், ரஷ்யாவின் ஆத்திரமும் ஐரோப்பிய அரசியல் நிலையை மிகவும் நெருக்கடியில் ஆழ்த்தி விட்டன. கான்ஸ்டான்டிநோபிளை விட்டுவிடுவதா, அல்லது ஜெர்மனியின் நட்பை விட்டுவிடுவதா என்று சர்ச்சில் சிந்தனை செய்தார். ஆனால், குறைந்தபட்ச நன்மைகளாவது கிடைக்கும் பக்கத்தில்தான் சேரவேண்டுமென்பது ஸாலிஸ்பரியின் கொள்கை. பால்மர்ஸ்டன் அல்லது டிஸ்ரேலி ஆகியோரின் துருக்கியக் கொள்கையை, அவர் அப்படியே பின்பற்றவில்லை. பால்கன் நாடுகள் சுதந்திரம் அடையுமானால், ரஷ்யாவுக்குச் சிறிது வேதனையாக இருக்கும். ஆனால், அவர் சர்ச்சிலிடத்தில், 'நான் கான்ஸ்டான்டிநோபிளையே தேர்ந்தெடுக்கிறேன்' என்று கூறினார். எகிப்தில் நிலையான ஆட்சி ஏற்பட்டவுடன், அங்கிருந்து வெளியேறிவிடுவதாக அவர் அறிவித்தார். ஏனெனில், எகிப்தில் பிரிட்டன் அக்கறை கொண்டிருக்கும்வரையில், ஃபிரான்சுடன் எந்த நட்புறவையும் கொள்ளமுடியாதென்று அவர் உணர்ந்திருந்தார். ஆனால், ஃபிரெஞ்சுக்காரர்களின் குடியேற்ற நாடுகளைப் பிடிக்கும் ஆசையும் பரபரப்பும் அவரை ஆத்திரமடையச் செய்தன. 1887-ல் இரண்டு சமரச உடன்படிக்கைகளை மத்தியக் கூட்டு நாடுகளுடன் அவர் செய்துகொண்டார். ஏனெனில், நடுகிழக்குப் பகுதியில் அவருக்கு ஆஸ்திரியாவின் உதவி தேவைப்பட்டது. இதைத் தவிர, அவருக்கு இந்த உடன்படிக்கைகளைச் செய்துகொண்டது அவ்வளவு விருப்பத்தைத் தரவில்லை. இதனால், சில காலத்திற்கு அந்த நிபந்தனைகளை மதிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சுருக்கமாகக் கூறினால், ஆஸ்திரியா, இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளுடன் சேர்ந்து இருக்கின்ற நிலைமையை அப்படியே மத்தியதரைக்கடலிலும், கருங்கடலிலும், ஸ்டிரெயிட்ஸிலும், பால்கன் பகுதியிலும் நிலைநிறுத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

இருப்பினும், ஃபிரான்சுக்கு விரோதமாக ஓர் உடன்படிக்கையை இத்தாலியுடன் செய்துகொள்வதையோ, அல்லது 1889-ல் ஒரு வெளிப்படையான உடன்படிக்கையை பிஸ்மார்க்குடன் செய்துகொள்வதையோ அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. ரஷ்யாவுக்கு எதிராக பிஸ்மார்க் எந்தவித ஒப்பந்தத்தையும் செய்துகொள்ள முன்வரவில்லை. ஆனால், அவருக்குச் சாதகமாக

மற்ற நாடுகளை எந்தவிதத்தில் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நினைக்கிறாரோ அப்படியே மற்ற நாடுகளும் நடக்கவேண்டுமென்று அவர் விரும்புவதை ஸாலிஸ்பரி நன்றாக உணர்ந்திருந்தார். ஆனால், ஆங்கிலேய அரசியல் பண்பாடு இவரை இவ்விதமான நடவடிக்கைகளில் ஈடுபட இடம் தரவில்லை. மேலும், அந்தச் சமயத்தில் பிஸ்மார்க்குக்கும் பேரரசன் ஃபிரெடரிக்குக்கும், அவர் இறக்கும்பொழுது ஒரு மோதல் ஏற்பட்டது. அரசனுடைய ஆங்கிலேய மனைவிக்கும் சிறிது மனத்தாங்கல் ஏற்பட்டது. அதனால், ஆங்கிலேய மக்களுக்கு அவர்மீது கோபம் ஏற்பட்டது. இதைத் தவிர, ஃபிரெடரிக்கின் மகனான கைசர் இரண்டாவது வில்லியத்திற்கும், பிஸ்மார்க்குக்கும்கூடத் தகராறு ஏற்பட்டது. அதனால், மார்ச் 1890-ல் பிஸ்மார்க் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். அப்பொழுதிலிருந்து அரசியலில் புதிய மாற்றம் ஏற்பட்டது. ஃபிரான்ஸ் ரஷ்யாவுக்கிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்படக்கூடாது என்று இதுகாறும் தடுத்துவைத்திருந்தது இப்பொழுது நடந்துவிட்டது. ஆனால், ஜூன்மாதத்தில் பழைய ஆங்கிலோ-ஜெர்மனி நட்புறவுப் பேச்சுவார்த்தைகளை நடத்தியது இன்னும் முடியவில்லை.

ஆஃப்பிரிக்காவின் உட்பகுதிகளிலே, பலர் புதிய நிலப்பகுதிகளைக் கண்டுபிடிக்க எடுத்துக்கொண்ட பிரயாணம் அப்பொழுது முடிவடைந்தது. இப் பிரயாணங்களில், ஆங்கிலேயர்களும் பெரும்பங்கு கொண்டதோடு பல அரிய வெற்றிகளும் பெற்றனர். மங்கோ பார்க்கிலிருந்து லிவிங்ஸ்டன் வரையிலும் ஆங்கிலேயர்கள் வெற்றியுடன் சென்றனர். தவிர, அவர்களுடைய கடைசி பிரயாணம் 1883 மார்ச் மாதத்தில், ஜோசப் தாம்ஸன் தலைமையில், மொம்பாசாவில் தொடங்கி கென்யா மலைப்பகுதி வரையிலும் வெற்றியுடன் முடிவடைந்தது. ஐந்து முக்கியமான காரணங்களால், பிரிட்டன் ஆஃப்பிரிக்காவின் நடுப்பகுதியில் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மேற்குக் கரையிலுள்ள குடியிருப்புப் பகுதிகள், கேப் காலனியில் உள்ள நமது தளம் தவிர, அங்கிருந்து வடக்கே விரிந்துள்ள சில பகுதிகள், பெரும் ஏரிகளைச் சுற்றி லிவிங்ஸ்டன் ஏற்படுத்தியுள்ள சில முக்கியமான இடங்கள், நமது நலன்களைப் பாரசீகத்துடனும் இந்தியாவுடனும் தொடர்புபடுத்துகின்ற ஜான்ஸிபார் சுல்தான் எகிப்தில் ஆதிக்கம் செலுத்துவது, நைல் நதியின் முடிவிலிருந்து இறுதி வரையிலும் செல்லும் பகுதியைக் கோருதல் முதலிய காரணங்களால், ஆஃப்பிரிக்காவின் நடுப்பகுதியில் செல்லவேண்டிய அவசியம் நமக்கு ஏற்பட்டது. சமீபத்தில் சாமுவெல் பேக்கர், கோர்டன் ஆகியவர்களின் முயற்சியால் எகிப்தின்மீது உரிமை

கொண்டாடுவது இன்னும் பலப்படுத்தப்பட்டது. இது வரையிலும் நமது பொருளாதார வளர்ச்சி தானுகவே வளர்ந் திருக்கிறது. நமது முக்கியமான நோக்கம் அடிமை வர்த்தகத்தை ஒழிப்பதேதான். அதனுல் லாகோஸ்பகுதியைக் கைப்பற்றினேம்; பாரசீக வளைகுடாவில் உள்ள மன்னர்களுடன் நட்புறவு வைத்துக்கொண்டோம்; ஜான்ஸிபாரில் உள்ள 'அடிமை வியாபாரத்தை ஒழித்தோம். இதே கொள்கையை நிலை நாட்டவும், கிறித்துவப் பிரசாரகர்களைப் பாதுகாப்பதும், பின்பு, நமது இடங்களை மேலும் பரப்பாமலும் இருப்பதே நமது அயல்நாட்டுத் துறையின் முக்கியமான கோட்பாடாகும்.

ஆனுல், இந்தக் கொள்கைகளை எப்பொழுதும் பின்பற்றுவது சாத்தியமாகவில்லை. நிலங்களைக் கண்டுபிடித்தவுடன், பிரசார கர்கள் செல்லுகின்றனர். பின்பு, வர்த்தகக் கம்பெனிகள் யுத்தத் தளவாடங்களை விற்றல், தங்கம், வைரம் ஆகியவற்றை எடுக்க முனைதல், பின்பு போர்கள் இவையெல்லாம் ஆஃப்பிரிக்காவில் இயல்பான செயல்களாக மாறிவிட்டன. ஸ்டான்லியின் முரட்டுத் தனமான படையெடுப்பு, ஒரு கரையிலிருந்து அடுத்த கரை வரையிலும் ஏற்பட்டதால், அப் பகுதிகளிலுள்ள பல சுதேச மக்கள் பயந்தோடினர். ஜான்ஸிபாரிலுள்ள இந்தியப் பகுதி யினர் நமது பாதுகாப்பைக் கோரினர். ஐரோப்பியர்கள் வாணி பத்தையே ஆயுதமாக வைத்து முன்னேறினர். பெல்ஜியத்தின் அரசனுன லியோபால்ட்-II, 1878-ல் காங்கோ கழகம் ஒன்றை அமைத்தார். ஃபிரெஞ்சுக்காரர்கள் வடமேற்கிலுள்ள பகுதிகளை ஒன்ருக இணைக்க முயன்றனர். மேற்கிலிருந்த அல்ஜீரியாவை அவர்கள் கைப்பற்றினர். ஜெர்மனியும் அதனுடைய காலனிகள் அமைக்க முயன்றதைப் பார்த்தோம். செங்கடலிலிருந்து தெற்கு நோக்கி இத்தாலியும் முன்னேறியது. போர்ச்சுகீசிய ஆஃப்பிரிக்காவும் திடீரென்று விழித்துக்கொண்டு, கிழக்கில் மொஸாம்பிக்கிலிருந்து, மேற்கே அங்கோலா வரையிலும் உள்ள பகுதிகளைக் கேட்டது, ஸாலிஸ்பரிக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அவர், இவர்களுடைய கோரிக்கை களைப் 'புதைபொருள் ஆராய்ச்சி உரிமைகள்' என்று கூறினர். ஐரோப்பிய நாடுகளிடையே பொருமை அதிகமாகிவிட்டதை 1885-ல் தனிப்பட்ட ஆங்கிலேயப் போர்ச்சுகீசிய உடன்படிக்கை ஏற்பட்டவுடன் வெளிப்படையாகக் காண முடிந்தது. அவர் களுக்குள்ள தகராறுகளைத் தீர்த்துக்கொள்வதற்காக, பெர்லின் மாநாடு ஒன்று கூட்டப்பட்டு, அதில் காங்கோ நாட்டின் பரப்பைக் குறைத்தும் நீர்ப்பாசனத்திற்கும், வியாபாரம் செய் வதற்கும் ஏற்பாடுகளைச் செய்தனர். ஒரு சில பகுதிகளைத்

தவிர, அந்தப் பெரிய கண்டத்தில், பல நாடுகள் அவற்றின் கொடிகளை நாட்டியும், அங்குள்ள பல சுதேச மக்களின் தலைவர்களுடன் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டும், பல நிலப்பகுதிகளுக்கு உரிமை கொண்டாடினர். பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்த அதிகாரியோ, அல்லது ஃபிரெஞ்சு அதிகாரியோ மேற்கிலிருந்து ஒரு தடையுமின்றி நைல் வரையிலும் செல்ல முடிந்தது.

குமுறிக் கொண்டிருக்கும் இந்த ஆஃப்பிரிக்கப் பிரச்சினையைத் தீர்க்கும் பொறுப்பு ஸாலிஸ்பரியிடம் சேர்ந்தது. ஆஃப்பிரிக்காவில் பிஸ்மார்க் காலனிகளைப் பெருக்கிக்கொண்டே சென்று ஃபிரான்சை நமக்கு விரோதமாக்கப் பல முயற்சிகளைச் செய்தார். உண்மையில், ஜெர்மனி, ஆஃப்பிரிக்காவில் ஒரு பேரரசை நிறுவட்டும் என்றுதான் கிளாட்ஸ்டன் விரும்பினர். 1884-ல் மேற்கில் ஜெர்மானியர் நிலப்பகுதியைக் கைப்பற்றிய நைல் போலவே, அடுத்த ஆண்டிலும் கிழக்குப் பகுதியில் செய்தனர். ஜான்ஸிபாரின் அருகே உள்ள பகுதியைப் பீட்டர்ஸ் என்பவர் ஏற்கெனவே பிடித்திருந்தார். இப்பொழுது அது ஜெர்மனியின் ஆதிக்கத்திற்குள் சென்றுவிட்டது. அதனுல் அவர்களுக்கு தார்-எஸ்-சலாம் என்ற நல்ல துறைமுகப் பட்டினம் கிடைத்தது. அங்கே அவர்கள் சுதேச அரசனுடன் ஓர் ஒப்பந்தத்தையும், பின்பு ஒரு கடற்படையும் வைத்துக்கொண்டதால், ஜான் கிர்க் என்ற நமது பிரதிநிதியின் நோக்கமான தனிப்பட்ட ஜான்ஸிபாரை, ஆங்கிலேயரின் பாதுகாப்பில் கொண்டுவரும், வண்ணம் ஈடேறுமல் போய்விட்டது. பின்பு மஜுபாவிலும் கார்டூமிலும், பெண்ட்ஜேவிலும், அயர்லாந்திலும் பல விளைவுகள் ஏற்பட்டன.

தவிர்க்க முடியாத சில நிகழ்ச்சிகள் ஏற்பட்ட பின்பு அவற்றை ஏற்றுத் தானுகவே பேராற்றல்பெற்று விளங்க வேண்டுமென்ற கருத்தை உடையவர் ஸாலிஸ்பரி. மற்ற நாடுகள் எங்கே மிகுந்த பலம் பொருந்தியவைகளாக இருக்கின்றனவோ, அந்தப் பகுதிகளை விட்டுவிட்டு, வேறு எங்கேயாவதும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்த முற்படவேண்டுமென்று அவர் விரும்பினர். நைல் பகுதியில் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு எச்சரிக்கை விடுக்கப்பட்டதென்றுல், அவர்கள் வேறு பக்கம் நிலத்தைப் பிடித்துக்கொள்ள அனுமதிக்கப்படவேண்டும். ஜெர்மனியிடமிருந்து காப்பாற்றிக்கொள்ள முடியாவிட்டாலும், ஜெர்மனி ஆக்கிரமித்த பகுதிகளைப் பங்காவது போட்டுக் கொள்ளவேண்டும் என்ற கருத்தை அவர் கொண்டிருந்தார். தனிப்பட்ட ஆங்கிலேயக் கம்பெனிகளுக்கு வர்த்தக உரிமைகள்

தரப்பட்டால், அவைகள் மீண்டும் நிலப்பகுதிகளை அடைய முடியும் என்று நினைத்துப் பல புதிய கம்பெனிகளுக்குச் சாசனங்களை அளித்தார். அப்படி, 1886-ல் நைகர் கம்பெனியும், 1888-ல் கிழக்கு ஆஃப்பிரிக்கக் கம்பெனியும், 1889-ல் ரோட்ஸ் சாசனக் கம்பெனியும் நிறுவப்பட்டன. ஃபிரான்சுடனும், போர்ச்சுகலுடனும் நிலப் பகுதிகளைப்பொறுத்தவரையிலும் சில ஒப்பந்தங்கள் இக் காலத்தில் செய்துகொள்ளப்பட்டன. இவற்றைப் பின்தொடர்ந்து ஜெர்மனியுடன் ஓர் ஒப்பந்தமும், பின்பு ரொடீஷியாவில் காலனி அமைக்கும் முயற்சியும் தொடங்கப்பெற்றது.

1890-ல் நம்முடைய பேரம் பேசும் மதிப்புச் சிறிது உயர்ந்தது. எகிப்து முன்பைவிட இப்பொழுது பாதுகாப்பாக இருந்தது. பாரிசிலிருந்து ரஷ்யா கடனுதவியும் துப்பாக்கிகளும் பெற்றன. திரிபோலியைப் பிடிப்பதற்கு இத்தாலி ஆங்கிலேயரின் சம்மதத்தைப் பெற்றது. ஆஃப்பிரிக்காவின் கிழக்குக் கரை முழுவதிலும் மொஸாம்பிக்கிலிருந்து சோமாலிலாந்து வரையிலும் ஜெர்மானியரும் இத்தாலியரும் குடியேற்ற நாடுகளை அமைப்பதற்காகப் போரிட்டுக்கொண்டனர். பீட்டர்ஸ், உகாண்டாவைக் கைப்பற்றினர். இதன் விளைவாக 1890 ஜூலையில் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. ஹெலிகோலாந்தைத்தான் அந்த உடன்படிக்கையில் யாருக்கு அளிப்பது என்று விவாதிக்கப்பட்டது. 1807 முதல் ஆங்கிலேயர் வசம் இப் பகுதி இருந்திருக்கிறது. நவீன போர் முறைக்கு இந்த இடம் நல்ல தளமாக அமையமுடியும் என்று கடற்படைக் காரியாலயம் அறிவித்தது. கெய்சருக்கும் கடற்படை மோகம் ஏற்பட்டிருந்ததனால், அவருக்கும் இந்த இடம் வேண்டுமென்று விரும்பினர். ஏனெனில், கீல் கால்வாய் அங்கே வெட்டப்படுவதாலும் இந்தத் தீவு அக் கால்வாய்க்கு நல்ல பாதுகாப்புத் தளமாக அமையும் என்றும் அவர் கருதினர். அதனால், ஹெலிகோலாந்தை ஜெர்மனி பெற்றுக்கொண்டு, அதற்குப் பதிலாக ஜான்ஸிபாரை அளித்துவிடுவதாகவும், மேலும், சோமாலிலாந்திற்குச் செல்லும் கரையோரத்தையும், மோம்பஸாவிலிருந்து விக்டோரியா நையான்ஸா வரை உள்ள மேல் நைல் பகுதியையும் தந்துவிடுவதாக ஜெர்மனி கூறிற்று. இந்த நிபந்தனைகளை ஏற்ற பிறகு, பிரிட்டிஷ் கிழக்கு ஆஃப்பிரிக்கப் பகுதி அமைக்கப்பட்டது. இந்தப் பகுதியில்தான், கனடாவும் உகாண்டாவும் இருக்கின்றன. மேற்கில், ஜெர்மன் கிழக்கு ஆஃப்பிரிக்காவில், நையாஸா, தங்கனிக்கா ஏரிகளைத் தொடர்புபடுத்தும் பிரசாரகரின் பாதையோடு அவர்களுடைய எல்லை நிர்ணயம் செய்யப்பட்டது. வடக்கில் அவர்களுடைய எல்லை காங்கோ பகுதியைத் தொட்டது. அதனூடே, கேப்பில்

இருந்து கெய்ரோ வரையிலும் நேரான சாலை அமைக்கப்பட்டது. ஜெர்மன் தென்மேற்குப் பகுதியுடன் கேப்ரிவி என்ற குறுகலான இடம் இணைக்கப்பட்டதால் ஸம்பேஸி வரையிலும் அவர்கள் செல்லமுடியும்.

ரொடீஷியா பகுதி வடக்கிலிருந்து கிழக்கு நோக்கிச் செல்லுகின்றது. இப்பொழுது அவர்கள் செய்திருக்கும் ஏற்பாடுகள் அப் பகுதியை மிகவும் பாதிக்கின்றன. டிரான்ஸ்வாலை, மேற்கிலும் வடக்கிலும் விஸ்தரிக்க முடியாமல் போய்விடுகின்றது. ஸம்பேஸியின் முக்கியமான ஓட்டம் இப் பகுதியில்தான் செல்லுகின்றது. காங்கோவின் கிளை நதிகளும் இங்கேதான் செல்லுகின்றன. இருபக்கங்களிலும் ஜெர்மன், போர்ச்சுகல் எல்லைகள் அமைந்துள்ளன. மெட்டாபலே அரசன் (Matabele) லாபெங்குலாவுடன் (Lobengula) நமது அரசாங்கம் 1884-ல் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டதால் இப் பகுதியை அடைய முடிந்தது. அந்தச் சமயத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தில் பெச்சுவானு பகுதி அடங்கியிருந்தது. அதனால், இப் பகுதியையும் அடைவது எளிதாகிவிட்டது. 1888-ல் அந்த அரசன் நம்முடைய அனுமதியின்றி மற்ற எவருக்கும் அங்கே நிலத்தைக் கொடுக்க முடியாதென்று அறிவித்தார். தவிர, ரோட்ஸ் ஸிண்டிகேட் என்ற கம்பெனிக்கு அங்குள்ள உலோகங்களை எடுக்கவும் சிறப்புரிமை அளித்தார். பின்பு, இந்த ஸிண்டிகேட் ஆங்கிலேய வர்த்தகக் கம்பெனியிடம் சென்றது. அந்தக் கம்பெனியில் உள்ள முதல் முயற்சியாளர்கள் 1890-ல் மாஷோனுலாந்தில் நுழைந்தனர். இது மெட்டாபலே நாட்டின் வடக்கேயுள்ள ஒரு பகுதியாகும். இந்தப் பகுதியை ஆங்கிலேய வர்த்தகக் கம்பெனி அடைந்த உடன், போர்ச்சுகீசியர்கள் அவர்களை எதிர்த்துப் போரிட்டனர். போர்ச்சுகீசியர்கள், டெலகோவா விரிகுடாவிலும் பெய்ராவிலும் நல்ல துறைமுகங்களை அமைத்திருந்தனர். அந்தத் துறைமுகங்கள் டிரான்ஸ்வால், ரொடீஷியா பகுதிகளைச் சார்ந்தவை. ரோட்ஸ் என்பவர், போர்ச்சுகீசியர்களை அப் பகுதிகளிலிருந்து முழுவதுமாக விரட்டிவிடவேண்டுமென்று திட்டமிட்டார். இப்படிப்பட்ட சூழ்நிலையில் போர்ச்சுகீசியர்களுடன் போரிடவேண்டிய அவசியம் ஏற்பட்டபொழுது, 1890–91-ல் ஸாலிஸ்பரி இரு தரப்பினரும் பின்பற்றவேண்டிய சில நிபந்தனைகளை அமலாக்கத் திட்டமிட்டார். கீழ் ஸம்பேஸியில் போர்ச்சுகீசிய ஆதிக்கத்தை அனுமதித்துவிட்டு, நையாஸாலாந்து, மஷோனுலாந்து ஆகிய பகுதிகளை ஆங்கிலேய ஆதிக்கத்திற்குள் கொண்டுவந்தார். அதேசமயத்தில், மடகாஸ்கரிலும், சஹாராவில் உள்ள அல்ஜியர்சுக்கும், சேட்-ஏரிக்கும் இடையேயுள்ள

பகுதியில் ஃபிரெஞ்சு ஆதிக்கம் ஏற்படுவதையும் அவர் அங்கீகரித்தார். அதற்குப் பதிலாக, ஜான்ஸிபாரில் உள்ள ஆங்கிலேய ஆதிக்கத்தையும் நைஜிரியாவில் கம்பெனியின் வர்த்தகம் செய்யும் உரிமையையும் ஃபிரான்சு அங்கீகரித்தது. இந்த ஏற்பாடுகளால், குறைந்தது சில காலத்திற்காவது ஆஃப்பிரிக்காவைப் பங்குபோடுவதுபற்றிய குமுறல் ஐரோப்பாவில் குறைந்திருந்தது.

1892-ல் அவர் பதவியை விட்டு விலகும்வரையிலும் ஆஃப்பிரிக்காவின் கொள்கையில் முக்கியமான மாற்றம் ஒன்றும் ஏற்படவில்லை. ரோஸ்பரி 1895 வரையிலும் அயல்நாட்டு மந்திரியாக இருந்தார். அதுவரையிலுங்கூட இதே கொள்கைதான் பின்பற்றப்பட்டது என்று கூறலாம். ஆஸ்திரியாவும் இத்தாலியும் பயனுள்ள நட்புறவு நாடுகள் என்று கருதினர். அதனல் முக்கூட்டு உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டது. எகிப்து, நியூஃபவுண்ட்லாந்தில் மீன் பிடிக்கும் உரிமைகள், சையாமுக்குப் பாதகமாக இந்தோ-சீனவில் ஃபிரான்ஸ் ஆக்கிரமிப்புச் செய்து வருதல் போன்ற நிகழ்ச்சிகளில் ஃபிரான்சுடன் ஆங்கிலேய அரசாங்கம் மோதிக்கொண்டே இருந்தது. வருடத்திற்கு ஒருமுறை கெய்சர் இங்கிலாந்திற்கு விஜயம் செய்து, நமது பழைய முறையைப் பின்பற்றத் தூண்டியது, ஒருவகையில் அவருடைய பாட்டியாரையும், அவரது மாமாவான வேல்ஸ் இளவரசனையும், இங்கிலாந்தின் பிரதம மந்திரியையும் சினத்திற்குள்ளாக்கியது. ஆஃப்பிரிக்காவில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகள் ஒருசமயம் கெய்சரை இப்படிச் செய்யத் தூண்டியிருக்கலாம். உகாண்டாவில் ரயில் பாதையை அமைக்கவேண்டுமென்றும், அதனல் நைல் நதியைத் தங்கள் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருவதல்லாமல், சூடானை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்கிற ஸாலிஸ்பிரியின் கொள்கைகளை, அவருடைய அடுத்த வாரிசுக்கு விட்டுச் சென்றர்.

பார்னெல்லின் வீழ்ச்சிக்குப் பிறகு, இங்கிலாந்தில் நடந்த இடைத்தேர்தல்களில் லிபரல் கட்சியினரின் வெற்றிகள் பெரிதும் தடைபட்டன. மேலும் கிளாட்ஸ்டன், மோர்லி ஆகியோரைத் தவிர, அயர்லாந்தின் சுய ஆட்சிக் கொள்கைக்கும் ஆதரவு மிகவும் குறைந்துவிட்டது. லிபரல்களிடையேகூட இக் கொள்கைக்கு அதிக ஆதரவில்லை. வாணிபம் மீண்டும் மந்தநிலையை அடைந்தது. தொழிலாளர் தகராறுகள் பெருகிவிட்டன. நியூகாஸிலின் லிபரல் கட்சியினர் திட்டம், 1891-ல் 'ரேடிகல்'களின் ஆதரவைப் பெரிதும் நாடியது. அத் திட்டத்தின்படி வேல்ஸில் நியமனம் செய்யப்பட்ட திருச்சபையைக் கலைத்துவிடுதல், மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை பாராளுமன்றத் தேர்தல் நடத்துதல்,

பன்மை வாக்களிப்பு முறையை ஒழித்தல், மது விற்பனை செய்தலில் அங்குள்ள மக்களின் விருப்பத்தை அறிய விரும்புதல், தொழிலாளர் ஜில்லா; பேரிஷ் பகுதிகளுக்கு மது விற்பனை செய்யும் அளவை நிர்ணயம் செய்தல் ஆகியவை அடங்கியிருந்தன. இவ்விதமான ஒரு திட்டத்தை ஸாலிஸ்பரியாக இருந்திருந்தால் அறிவித்திருக்கமாட்டார். லிபரல் யூனியனிஸ்டுகளுடன் அவர் நட்புடன் இருந்தபோதிலும் இவ்விதத் திட்டத் திருத்தத்திற்கு ஆதரவளித்திருக்கமாட்டார். சேம்பர்லேனின் தீவிரமான கொள்கைகளை வரவேற்பதற்குக் கன்சர்வேடிவ்கள் சிறிது தயங்கினர்.

1892-ல் நடைபெற்ற தேர்தல் முடிவுகளில், கட்சியின் பலமோ, நிரந்தரத் தன்மையோ ஏற்படவில்லை. 315 கன்சர்வேடிவ்களும் லிபரல் யூனியனிஸ்ட்டுகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களுக்குப் பெரும்பான்மை பலம் கிடைத்தது. கிளாட்ஸ்டனுடைய லிபரல்கள், ஸ்காட்லாந்து, வேல்ஸ் ஆகிய பகுதிகளில் நல்ல வெற்றிபெற்று 273 தொகுதிகளைக் கைப்பற்றினர். ஆனால், அவர்களுடைய பலம், 81 ஐரிஷ் ஹோம்-ரூல் அல்லது சுய ஆட்சிக் கட்சியினரின் ஆதரவை அடிப்படையாகக் கொண்டிருந்தது.

### சமகால நிகழ்ச்சிகள்

1886 ஃபிரான்சில் யுத்த மந்திரியாக பௌலங்கர் (Boulanger) பதவி ஏற்றல்.

ரஷ்யாவின் கட்டாயத்தால், பல்கேரியா அரசன் அலெக்சாந்தர் முடி துறத்தல்.

1887 ஃபிரான்சில் கிரெவி (Grevy) ஊழல்கள்.

கில் (Kiel) கால்வாய் துவக்கம்.

இத்தாலியின் பிரதம அமைச்சராகக் கிரிஸ்பி (Crispi) பதவியேற்றல்.

1888 கெய்சர் வில் ஹெல்ம்-II பட்டத்திற்கு வருதல்.

கிப்ளிங் எழுதிய 'பிளெய்ன் டேல்ஸ் ஃபிரம் தி ஹில்ஸ்' (Plain Tales from the Hills).

1889 எத்தியோப்பியாவுக்கு மெனிலக் அரசனாதல்.

பிரிட்டிஷ் தென்ஆஃப்பிரிக்கக் கம்பெனிக்குச் சாஸனம் அளித்தல்.

லண்டன் துறைமுகத் தொழிலாளர் வேலைநிறுத்தம்.

1889 பெர்னார்ட்ஷா எழுதிய 'ஃபேபியன் (Fabian) கட்டுரைகள்'.

பிரௌனிங், ஜான் பிரைட் ஆகியோரின் மரணம்.

1890 பிஸ்மார்க்கின் வீழ்ச்சி.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மெக்கின்லி (McKinley) காப்புத் தீர்வைத்திட்டம்.

டிம்பக்டூவை (Timbuctoo) ஃபிரெஞ்சுத் துருப்புகள் ஆக்கிரமித்தன.

இப்ஸென் எழுதிய 'ஹெட்டா கேப்ளர்' (Hedda Gabler).

1891 பௌலங்கர் தற்கொலை செய்தல்.

ஃபிராங்கோ-ரஷ்யன் உடன்பாடு.

ஹார்டி எழுதிய 'டெஸ் ஆஃப் தி டி'அர்பர்வில்ஸ்.' (Tess of The d'Urbervilles).

பார்னெல்லின் மரணம்.

1892 ரஷ்யாவின் நிதி மந்திரி விட் (Witte).

ஸோலா எழுதிய 'லா டிபக்கள்' (La Debacle).

ரேனன் (Renan), டென்னிசன் ஆகியோரின் மரணம்.

# 11. உள்நாட்டு அரசியலும் கட்சிகளும், 1892-1905

விக்டோரியா ஆட்சியின் இறுதிக் காலத்தில் நான்கு மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. அந்தப் பதின்மூன்று ஆண்டுக் காலத்தில், லிபரல்களின் ஆட்சி குறுகிய காலத்திற்கும் கன்சர் வேடிவ் கட்சியினரின் ஆட்சி நீண்ட காலத்திற்கும் பரவியிருந்தது. கிளாட்ஸ்டனுக்குப் பிறகு ரோஸ்பரி பதவியேற்ருர். பல்ஃபோர் மந்திரிசபையில் ஸாலிஸ்பரி நீடித்துப் பதவி வகித்தார். வெளி நாட்டு நிகழ்ச்சிகளான தென் ஆஃப்பிரிக்கப் போர் பதினேழாவது நூற்ருண்டிற்குப் பிறகு இப்பொழுதுதான் மீண்டும் ஜெர்மனி யிடம் மோதவேண்டிய அவசியம் உண்டாயிற்று. அதனுல் ஏற்பட்ட சர்வதேச நெருக்கடி, பின்பு ஃபிரான்ஸ் பக்கம் நட்புறவு கொள்ளுதல் ஆகியவற்ருல் உள்நாட்டு அரசியலில் அவ்வளவு கவனம் ஆளுங்கட்சியினரால் செலுத்தமுடியவில்லை. மேலும், இவ்வாட்சிக் காலத்தில் பல மாற்றங்களை உள்நாட்டில் கொண்டு வந்ததும் நீடித்த முக்கியத்துவம் பெறுகிறது.

1901 ஜனவரியில் பேரரசியார் இறந்துவிட்டதுங்கூட அரசி யலில் பல மாற்றங்கள் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்தன. அவருடைய ஆட்சி அறுபத்துநான்கு ஆண்டுகள் வரையிலும் நீடித்தது. வெலிங்டன், மெல்போர்ன் மந்திரிகளிலிருந்து ஆஸ்குவித் பல்ஃபோர் வரையிலும் அவ்வரசியாரின் ஆட்சிக் காலத்தில் பதவியிலிருந்துவிட்டனர். அரசியாரின் ஆட்சிக் காலத்தில் அரசத் தன்மைக்கே புதிய மதிப்பு ஏற்பட்டது. நீண்டகால ஆட்சி மட்டுமல்லாது, அவருடைய நற்பண்பும் நல்லறிவுமே அதற்குக் காரணங்களாக இருந்தன. பலதரப்பட்ட நாடுகளை ஒருங்கே கொண்ட பேரரசிற்கு அவர் ஒரு தொடர்பை அளிக்கும் சின்னமாகச் சிறப்புற்று விளங்கினுர். தனக்கு விருப்ப மில்லாவிடினும் அவர் ஜனநாயகக் கருத்துகளை ஏற்று, அக் காலத்தில் அவர் நன்ருகவே ஆட்சி புரிந்திருக்கிருர்.

அரசியார் என்ற காரணத்திற்காகவும், அவர் தனிமையை நாடிய தாலும், அவர் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட வெற்றிகளாலும் அவருடைய மதிப்பு ஒரு காவியகாலத்துப் புகழை அடைந்த தைப்போன்று சீரும் சிறப்புமுற்று விளங்கியது. 1897-ல் அவருக்கு வைர விழா நடந்தது. அந்த விழாவில், ஐரோப்பாவின் மாபெரும் அரசர்களும், டொமினியன் பிரதம அமைச்சர்களும், காலனிகளிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் வந்த பல போர் வீரர் களும் மூன்ருவது ஜார்ஜின் பேர்த்தியான இந்த அரசியாருக்குத் தக்க மரியாதை செய்து போற்றினர். அவருடைய அரசியல் இயல்புகளில் மாறுபாடே ஏற்படவில்லே. கடைசிவரையிலும் அவர் கிளாட்ஸ்டனே வெறுத்தார். ரோஸ்பரியை அவர் முன் னணிக்குக் கொண்டுவந்தார். கொடூரமான 'ரேடிகல்' லேபாச் சர் (Labouchere) என்பவரைப் பதவியில் வைக்கக்கூடாதென்று அவருடைய ஏத்ததிகாரத்தைப் பயன்படுத்தினர். அரசியல் அமைப்பைப் பாதுகாப்பது அவருடைய பொறுப்பு என்று கூறிப் பிரபுக்கள் சபையை எந்தவிதத்திலும் சீர்திருத்த முடியாத படி செய்துவிட்டார். மேலும், 1895-ல் பாராளுமன்றத்தைக் கலேப்பதற்கு அவருக்கு அதிகாரம் இருக்கிறதா என்பதை அறிந்து செயல்படுத்த முயற்சிசெய்தார். அவருடைய கடைசி மகனை கன்னுட் கோமகன் ஆர்தர் என்பவருக்கு உயர்தர ராணுவத் தளபதி பதவியை வழங்கினர். திருச்சபையில் நிய மனம் செய்யப்படும் மதகுருமார்களின் நியமனத்திலும், அவர், வின்ட்ஸர் டீனை ரண்டால் டேவிட்ஸன் என்பவரின் ஆலோ சனேயைக் கேட்டுத் தலேயிட்டு வந்தார். இந்த நியமனங்களில் ஸாலிஸ்பரியின் கருத்திற்கு மாருக அவர் எதிர்த்துச் செயலாற்றி இருக்கிருர். தென் ஆஃப்பிரிக்காவில் பெரிய நெருக்கடி ஏற்படும் பொழுதுங்கூட, அவருடைய முதுமைப் பருவத்திலும் நிதானத் தையோ, அல்லது கடமையையோ அவர் மறக்கவில்லே. அவ ருடைய இறுதிக் காலத்தில்தான், 1900-ல் அவர் அயர்லாந் துக்கு விஜயம் செய்தார். 1861-க்கு பிறகு முதல் தடவையாக அவர் அங்கே விஜயம் செய்தார்.

கிளாட்ஸ்டனின் நீண்ட ஆயுளும் அவருடைய பலவீன மான கொள்கைகளும், ஐரிஷ் பிரச்சினேயும், வளர்ச்சியுறுகின்ற ஜனநாயகமும் ஐக்கியத்தை விரும்பும் லிபரல்களிடையே ஒற்று மையை வளர்த்து வரலாயின. சேம்பர்லேனுடைய தீவிரவாதி களும், பேரரசை விஸ்தரிக்கும் நோக்கமுடையவர்களும், விக்குகளிலேயே பெரும்பாலோரும், சொத்துடைமை வைத்திருப்பவர்களும் கன்சர்வேடிவ்களே ஆதரித்தனர். இப்படி அமைந்த கட்சிகளால் ஏற்படும் உடனடியான விளேவுகளும்

நாளடைவில் உண்டாகும் விளைவுகளும் ஆபத்தானவை. பிரபுக்களெல்லாரும் கன்சர்வேடிவ் கட்சியைத் தழுவியதால், லிபரல்கள் கொண்டுவருகின்ற மசோதாக்களுக்கு எதிர்ப்பு இருப்பது இயற்கையே. இப்பொழுது ஏற்பட்ட கட்சிகளின் புதிய அம்சம் என்னவெனின், இனவாரியான அடிப்படையில் மக்கள் கூட்டம் சேர்ந்து கட்சி அமைக்கின்ற வாய்ப்பு இருந்தமையால், நாளடைவில் கிளாட்ஸ்டனின் லிபரலிசம் ஒழிந்துவிடுகின்ற சூழ்நிலை ஏற்பட்டது. பேரரசு, மற்ருெரு வளர்ச்சி அடைகின்ற நிறுவனமாக இருந்தது. அதற்கு நல்ல எதிர்காலம் இருந்தது. இந்தக் கொள்கையில் லிபரல்களிடையே இரண்டு மாறுபட்ட குழுவினர் உருவாகினர். அவர்களிடையே தீவிரமான மாறுபட்ட கருத்துகள் அமைந்திருந்தன. இந்தப் பிரச்சினையில், சேம்பர் லேனுக்கு நல்ல ஆதரவும் எதிர்காலமும் இருந்தது. அவர் பேரரசு வளர்ச்சி அடைவதற்கான புதிய சூழ்நிலையை உருவாக்கினுர்.

1892–94-ல் அமைந்த கிளாட்ஸ்டனின் கடைசி அரசாங்கம் மிகவும் பரிதாபகரமான செயல்புரிந்தது. அவருக்கு எண்பத்து மூன்று வயதாகிவிட்டது; காதும் கேட்பதில்லை; ஒரு கண்ணில் (cataract) பூ விழுந்துவிட்டது. தள்ளாத முதுமைப் பருவத்தி ஞலும் புகழிஞலும் மட்டுமே அவர் அரசாங்கத்தை நடத்த வேண்டியிருந்தது. உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டிருந்த காரணத்தால், கேபினட்டில் உள்ள பல குழுக்களை அவரால் பொறுத்துக் கொள்ளமுடியவில்லை. அவருடைய முயற்சியால், இரண்டு திறமைமிக்க நிர்வாகிகளான ஆஸ்குவித் என்பவர் உள் நாட்டுத் துறையிலும், ஆக்லேண்ட் என்பவர் கல்வித்துறையிலும் கொண்டுவரப்பட்டனர். லிபரல் யூனியனிஸ்டுகளிடையே பிளவு ஏற்பட்டுவிட்டதாலும், கிளாட்ஸ்டன் ஓய்வு எடுத்துகொள்ளப் போகிருர் என்று தெரிந்துவிட்டதாலும், அக் கட்சியில் திறமை மிக்கவர்களைக் காண்பது அரிதாகிவிட்டது. இதுமட்டுமல்லால், நிறைய பிளவுகளும் ஏற்பட்டுவிட்டன. ஒரு கொள்கையில் நீடித்த கருத்து வேறுபாடு இருந்துகொண்டே வந்தது. பேரரசு விஸ்தரிப்பதை ஆதரிக்கின்ற ரோஸ்பரி, கிம்பர்லி போன்ற வர்கள் உகாண்டாவை வைத்துக்கொள்ளவேண்டுமென்றும், எகிப்திலிருந்து அவ்வளவு விரைவில் வெளியேறக்கூடாதென்றும் கருதிவந்தனர். கிளாட்ஸ்டன், ஹார்கோர்ட், மார்லி ஆகியோர் அவர்களுடைய கருத்திற்கு நேர்மாருன எண்ணம் உடையவர் களாக இருந்துவந்தனர்.

விக்டோரியா ஆட்சிக் காலத்தின் இடைக்காலத்தில் அத் தகைய தீவிரவாதிகள் நிறைந்திருந்தனர். இவற்றைப்போன்ற நாடுபிடிக்கும் கொள்கைகளெல்லாம் பணச்செலவு, கொடுமை,

போர் ஆகிய நிகழ்ச்சிகளில்தான் முடிகின்றன என்று அவர்கள் கருதினர். ஆனால், இவர்களுடைய அரசியலில் தனிப்பட்டவர்களுடைய தன்னலங்களும் தன்மைகளும் சேர்ந்திருந்தன. ஏனெனில், காமன்ஸ் சபைக்கு அடுத்து வரும் கட்சித் தலைவரான ஹார்கோர்ட் எப்பொழுதுமே சிடுசிடுவென்றும், சகிப்புத் தன்மையில்லாதவராகவும் இருந்துவந்தார். ரோஸ்பரி, காமன்ஸ் சபையில் வீற்றிருந்ததே இல்லை. அரண்மனைப் பிரபுவான அவர் எதையும் தன் மனப்போக்கின்படிதான் செய்வார். தவிர, பிறர் எதிர்ப்புகளைத் தாங்கமாட்டார். மோர்லி, பொறுமைக்குணம் கொண்டவராவர். மேலும், எதைச் சொன்னாலும் அவருக்குச் சுருக்கென்று உள்ளத்தில் தைக்கும் இயல்புடையவராக இருந்தார்.

தவிர, இரண்டு நெருக்கடியான பிரச்சினைகள் ஆபத்தை விளைவிக்கும்போல இருந்தன. ஹோம்ரூலில் அதிகப் பற்றுக் கொண்ட கிளாட்ஸ்டன், அப்பொழுது அயர்லாந்தைத் தவிர வேறொன்றையும்பற்றி நினைக்கவில்லை. ஆனால், அயர்லாந்துக்குச் சுய ஆட்சி தருவதைப் பாதிக்கு மேற்பட்ட அவருடைய மற்ற மந்திரிகள் ஆதரிக்கவே இல்லை. இக் கொள்கையை ஆழமாகப் புதைத்துவிட்டால் நல்லதென்று ஹார்கோர்ட் கருதலானார். அப்பொழுது நாட்டில் மலிந்திருந்த சமூக அதிருப்திகளைப்பற்றித் தேர்தலில் ஒன்றுமே சொல்லவில்லை. எட்டுமணிநேர வேலைக்கு அவர் எதிர்ப்புத் தெரிவித்தது. தொழிலாளர்களின் அக்கறையை அவர் புறக்கணித்துவிட்டதாகத் தொழிலாளிகள் கருதினர். அதனால், அவர்களிடையே அதிகமான குமுறல் ஏற்பட்டது. 1893–94-ல் வர்த்தகம் மந்தநிலை அடைந்தது. கூலிகளும் குறைந்துவிட்டன. 1893-ல் மட்டும் முப்பது மில்லியன் வேலை நாட்களை வேலை நிறுத்தம் செய்ததால் வீணாக்கிவிட்டனர். ஆறுமாதம் வரையிலும் துணி வாணிபம் நின்றுவிட்டது. இதற்குப் பிறகு நிலைமையை மோசமாக்கவிடாது புரூக்லேண்ட்ஸில் சமரச ஏற்பாட்டைச் செய்துகொண்டு, அதன்படி தொழிலாளர் கூலிகளை நிலையாகச் செம்மைப்படுத்தினர். அந்த ஆண்டில் நிலக்கரித் தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்தனர். யார்க்ஷயரில், ஃபெதர்ஸ்டோன் கலகங்கள் என்று பின்பு அழைக்கப்பெற்ற கலகங்கள் உண்டாயின. இக் கலகங்களை அடக்குவதற்குப் படைகள் அழைக்கப்பெற்றன. அப்பொழுது, சுரங்கத்தை நாசம் செய்துகொண்டிருந்த இரண்டு தொழிலாளரை, இராணுவத்தினர் சுட்டுக் கொன்றனர். ஆஸ்குவித்தின் வாழ்க்கையில் இது மிகவும் முக்கியமான நிகழ்ச்சியாகும். ஆங்கிலேய மக்களை அடக்குவதற்கும், அமைதியை நிலைநாட்டுவதற்கும் இராணுவச்

சட்டத்தையே அமலாக்குவதும், படையினரைக் குடிமக்களாகக் கருதுவதும் புதிதானவை. தொழிலாளர்களின் கூலித் தகராறில் முதன்முதலாக அரசாங்கம் இப்பொழுதுதான் தலையிடத் தொடங்கியது. இந்தத் தகராறு பல தலைமுறைகளுக்கு நீடித்தது. அப்பொழுது ஸ்காட்லாந்தைச்சார்ந்த சுரங்கத் தொழிலாளியான கீர் ஹார்டி (Keir Hardi) என்பவர் சுதந்தரத் தொழிலாளர் கட்சி ஒன்றைத் தொடங்கினார். அக் கட்சி, தொழிலாளர்களை அங்கத்தினர்களாகக்கொண்ட சோஷிய லிஸ்டுக் கட்சியாக விளங்கும் என்று உறுதிமொழி கூறினார். தீவிரவாதிகளான திறமைமிக்க தொழிலாளர்களின் ஆதரவில் தொழிற்சங்க இயக்கம் வளர்ச்சி அடைந்தது. அப்பொழுது சுரங்கத் தொழிலாளர்களே அதற்கு அதிக ஆதரவு அளித்தனர். மீண்டும் அவர்களுடைய தலைமையிலேயே மற்றத் தொழில் களிலும் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களை அங்கத்தினர்களாகச் சேர்த்தனர். இந்த இயக்கங்களைப்பற்றியெல்லாம் கேபினட் திட்டத்தில் மந்திரிகள் கொண்டுவரவும் நினைக்கவில்லை; அல்லது தொழிலாளர்களுடன் எப்படித் தொடர்பு வைத்துக்கொள்வ தென்பதைப்பற்றி அவர்கள் நினைக்கவும் இல்லை.

கிளாட்ஸ்டன் மீண்டும் இரண்டாவது முறையாக 1893-ல் அயர்லாந்து சுய ஆட்சி மசோவைக் கொண்டுவந்தார். அவருடைய கட்சியினர் இந்த மசோதாவைப்பற்றி உற்சாகம் காட்டவில்லை. இந்தமுறை, அயர்லாந்துக்கு இரண்டு சபைகள் நிறுவுவதென்று ஆலோசித்தனர். அல்ஸ்டரின் ஆட்சேபனையை, இந்த முறையும் அவர்கள் புறக்கணித்தனர். அதனால், ஐக்கியத் திற்கும் பிரிவினைக்கும் இடையே ஏதாவது ஒரு திட்டத்தைக் கொண்டுவர முயன்றனர். பல ஆலோசனைகளை விவாதித்தனர். 1886-ல் வெஸ்ட்மினிஸ்டரிலேயே ஐரிஷ் அங்கத்தினர்களை வைத்துக்கொள்வதென்றும், ஆனால், அந்த அங்கத்தினர்கள் பேரரசு சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில்மட்டும் பங்கு கொள்ள வேண்டுமென்றும், மற்றப் பிரச்சினைகளில் அவர்கள் தலையிட வேண்டியதில்லை என்றும் அவர்கள் கருதினர். ஆனால், நடை முறையில், இது முடிகின்ற காரியமாகத் தோன்றவில்லை. பின்பு, அவர்களை வெஸ்ட்மினிஸ்டரிலேயே வைத்துக்கொள்வ தென்றும், அவர்கள் ஆங்கிலேய, ஸ்காட்டியப் பிரச்சினைகளில் பங்கெடுத்துக்கொண்டு வாக்களிக்கலாம் என்றும், ஆனால், அயர் லாந்துப் பிரச்சினைகளில்மட்டும் இங்கிலாந்தும், ஸ்காட்லாந்தும் வாக்குரிமைகளை அளிக்கவேண்டிய தேவையில்லை என்றும் அவர்கள் முடிவுசெய்தனர். இந்த மசோதா, காமன்ஸ் சபையில் 34 ஓட்டுகள் மட்டுமே அதிகமாகப்பெற்று நிறைவேறியது. ஐரிஷ்

ஓட்டுகள் கிடைத்திராவிட்டால், இந்த மசோதாவும் நிறை வேறியிருக்காது. ஆனால், இந்த மசோதா பிரபுக்கள் சபையில் 419 : 41 ஓட்டுகள் பெற்றதால் நிறைவேறாமல் போயிற்று.

கிளாட்ஸ்டனின் அரசியல் வாழ்வு இதனுடன் முடிவடைந்தது. ஆனால், இப் போராட்டத்தைத் தொடங்கிவைத்த இவர், நினைத்ததைப்போன்று நடக்கவில்லை. அவருடைய அரசாங்கம் தல அரசாங்கச் சட்டம் ஒன்றை நிறைவேற்ற முயற்சி செய்தது. அதன்படி ஜில்லா, பேரிஷ் கவுன்சில்களை நியமனம் செய்வதென்று முடிவுசெய்தனர். இவற்றின் நிதிகளைப் பிரபுக்கள் சபை மிகவும் குறைத்துவிட்டது. பிரபுக்கள் சபை ஏற்கெனவே அவர்களுடைய மற்ற நடவடிக்கைகளையும் நிறுத்தியிருந்தனர். இவற்றையெல்லாம் இவர் சகித்துக்கொண்டிருந்தார். மீண்டும் ஒரு முறை ஐரிஷ் சுய ஆட்சி மசோதாவைக் கொண்டு வருவதா அல்லது பாராளுமன்றத்தைக் கலைத்து விடுவதா என்று இவர் ஆலோசனை செய்தார். ஆனால், பாராளுமன்றத்தைக் கலைக்க, மற்ற மந்திரிகள் சம்மதிக்கவில்லை. 1893-94-ல் அவர் தனிமையாக நின்று போராடவேண்டியிருந்தது. பால்மர்ஸ்டனை எதிர்த்து ஒரு முறை அவர் இந்த விதமாகப் போராடியிருக்கிறார். ஸ்பென்ஸரும், கடற்படைக் காரியாலயமும், கடற்படைக்கு அதிகச் செலவினங்கள் தேவைப் படுகின்றன என்று கோரியதைத்தான் அவர் அப்பொழுது தனிமையாக நின்று எதிர்த்திருக்கிறார். அவர் மார்ச் மாதம் ராஜிநாமா செய்தார். அதற்கு முன்பு, கடைசியாகக் காமன்ஸ் சபையில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவில், காமன்ஸ் சபையினருக்கும் பிரபுக்கள் சபையினருக்கும் அடிப்படையிலேயே கருத்து வேற்றுமைகள் இருப்பதை எடுத்துக் கூறினார். இந்தப் பிரச்சினைக்கு எவ்வாறாகிலும் ஒரு முடிவு காணவேண்டும் என்று கூறிப் பிரபுக்கள் சபையின்மீது மக்களின் போர்க்குரலை அவர் எழுப்பினார். 1832-ல் நியூகாஸில் கோமகனுடைய சிறிய பரோ தொகுதியில் இவர் தேர்ந்தெடுக்கப்பட்டு, அறுபது ஆண்டுகள் அங்கத்தினராக இருந்திருக்கிறார். அவருடைய அரசியல் வாழ்வு முடியும்போது, பிரபுக்கள் சபைக்கு எதிராகப் போராட்டத்தைத் தொடங்கிவைத்துச் சென்றார்.

இவருக்குப் பின்பு யார் பதவியேற்பது என்பதை அவரிடம், அரசியார் ஆலோசனை கேட்கவில்லை. அரசியார் ஒரு பிரபுவைத் தான் தேர்ந்தெடுப்பார் என்று தெரியும். அதன்படியே ரோஸ் பரியைத் தேர்ந்தெடுத்தார். கிளாட்ஸ்டனிடம் ஆலோசனை கேட்டிருந்தால் ஸ்பென்ஸரை நியமிக்கச் சொல்லியிருப்பார்,

ஹார்கோர்ட்டின் எதிர்கால வாழ்க்கை சிறப்புற இருக்கும் என்ற அழுக்காற்றினால், கேபினட்டில் உள்ள பெரும்பான்மை யினர் அவரைத் தேர்ந்தெடுக்கச் சிபாரிசு செய்யவில்லை. கேபி னட்டின் பெரும்பான்மையினரின் விருப்பத்திற்கிணங்கவே கடைசியில், அரசியார் ரோஸ்பரியைத் தேர்ந்தெடுத்தார். அதனால், அரசியார் ஒரு பெரிய தவற்றைச் செய்துவிட்டார். ரோஸ்பரியின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் அவருக்கு நல்ல புகழைத் தேடித்தந்தன. மேலும், அவருடைய சமுதாயக் கொள்கைகளும் செல்வமும் அவருடைய கட்சியிலேயே பலர் அவரை வெறுக்கக் காரணமாக இருந்தன. டிஸ்ரேலியைப் போலவும், கிரென்வில்லைப் போலவும் அவரும் ஓர் அரண்மனை வாசி. அவர், ரண்டால்ஃப் சர்ச்சில், சிசில் ரோட்ஸ் ஆகியோரின் நண்பர்; ரோட்ஸ் சைல்டின் மகளை மணம் செய்துகொண்ட வராவர்; இவர்களிடமெல்லாம் தொடர்புள்ள அவர் அப்பொழு திருந்த தீவிரவாதிகளின் கொள்கைகளுக்குச் சிறிதும் இணங்காத வராக இருந்துவந்தார். அதைப்போன்றே, நியமிக்கப்பட்ட திருச்சபையில்லாதவர்களுடைய கொள்கைகளுக்கும் முரண்பட்ட வராக இவர் விளங்கினார். அவர் பிரதம அமைச்சராக இருந்த போது இரண்டுமுறை டெர்பி குதிரைப் பந்தயத்தில் வெற்றி பெற்றது பலருக்குப் பிடிக்கவில்லை. ஒரு சிலருக்கு அவருடைய ஐரிஷ் கொள்கையும், மற்றும் சிலருக்குக் கிழக்கு ஆஃப்பிரிக் காவை (Protectorate in East Africa) ஆங்கிலேயர் பாதுகாப்பில் கொண்டுவந்ததும் பிடிக்கவில்லை. ஆங்கிலேய மக்கள், ஐரிஷ் சுய ஆட்சியை ஆதரிக்கும் வரையிலும் அவர்கள் பேசாமல் இருக்க வேண்டுமென்று அவர் கருதினார். பிரபுக்கள் சபையில் சீர்திருத் தங்கள் வேண்டுமென்று அவர் விரும்பியபோதிலும், மேல்சபை ஒன்று இருக்கவேண்டுமென்பதை அவர் வலியுறுத்தினார்.

அவருடைய அரசாங்கம், பதினைந்து மாதங்களே நீடித்தது. பிரபுக்கள் சபையிலிருந்து வருகின்ற ஒருவர், பிரதம அமைச்ச ராகும்பொழுது, காமன்ஸ் சபையிலிருக்கும் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பை வைத்துக்கொள்ளவேண்டும். ஆனால், காமன்ஸ் சபையிலுள்ள சில தலைவர்கள் அவரிடம் பற்றுறுதி யுடன் நடந்துகொள்ளவில்லை. ஹார்கோர்ட்டுக்குப் பதவி கிடைக்கவில்லை என்பதற்காக, அவருக்கு ஆத்திரம் வந்தது. வெளிநாட்டு மந்திரி பதவி கிடைக்கவில்லை என்பதற்காக, மார் லிக்குக் கோபம்; லேபாச்சர் (Labouchere) என்பவருக்குவாஷிங் டனில் இராச்சிய தூதுவர் பதவி கிடைக்கவில்லை என்பதற் காகக் கோபம்; இப்படி இவர் பல தலைவர்களுடைய கோபத் திற்காளானார். அவர் பதவிக்காலத்தில் நிகழ்ந்த ஒரு நல்ல

சாதனே, 1894-ல் ஹார்கோர்ட் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டமாகும். கடற்படையை வலிமை மிக்கதாக்க 3 மில்லியன் பவுன்களைச் செலவு செய்யவேண்டும் என்று அவர் திட்டமிட்டிருந்தார். மற்றொன்று, புதுப்பிக்கப்பட்ட மரண வரியாகும். நிலமுடையவர்கள்மீதும் மூலதனத்தின்மீதும் அவர் வரி விதித்தது ரோஸ்பரிக்குப் பிடிக்கவில்லை. மற்றவைகளில் 1891-ல் நியூகாஸில் திட்டப்படி, ஒவ்வொரு சீர்திருத்தமாக ஹார்கோர்ட் கொண்டு வந்தார். அதாவது, வேல்ஸ் பகுதியில் நியமிக்கப்பட்ட திருச்சபையைக் கலைத்தல், நஷ்ட ஈடு தராமலேயே மது விற்பனை அனுமதிகளை ரத்து செய்தல், பன்மைமுறை வாக்களிப்பை ரத்து செய்தல் ஆகியவற்றைச் சட்டமாகக் கொண்டுவந்து செயலாற்றினார். இந்தச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதில், வாக்காளர்களுக்கு நன்மை பயக்கவேண்டுமென்ற நோக்கத்தைவிட, எப்படியும் இந்தச் சீர்திருத்தங்களைப் பிரபுக்கள் சபை நிராகரிக்கும் என்று உறுதியாகத் தெரிந்ததால், அவர்களுடைய மனப்பான்மையை மக்களுக்கு உணர்த்தவேண்டுமென்பதுதான் அவருடைய நோக்கமாக இருந்தது. எந்த நிலையிலும் பாராளுமன்றம் கலைக்கப்படுவது விரும்பப்பட்டது. அப்படிக் கலைப்பது, பிரபுக்களை அறைகூவி அழைப்பதைப் போலாகும். ஏனெனில், அந்தச் சிறிய மசோதாக்களுக்கு அப்பொழுது தேவையே இல்லை.

இந்தத் தகராறு காரணமாக, அரசாங்கம் நீடித்திருக்க முடியவில்லை. 1895 ஜூனில், எதிர்பாராதவிதமாகவும் எதிர்பாராத வாக்குரிமை எடுக்கப்பட்டதாலும் அரசாங்கம் கவிழ்ந்தது. அந்த அரசாங்கத்தின் திறமைமிக்க நிர்வாகியான கேம்ப்பெல்-பேனர்மேன் என்பவர், இராணுவத்தினருக்கு கார்டைட் அல்லது புகையில்லாத வெடி மருந்தை விநியோகம் செய்தத் தவறிவிட்டதற்காக அரசாங்கத்தின்மீது குற்றம் சாட்டப்பட்டுத் தீர்மானம் கொண்டுவந்தார். இந்தத் தீர்மானம் நிறைவேறிவிட்டதால் அவர் ராஜிநாமா செய்தார். ஓர் ஐக்கியமோ, அல்லது திட்டமோ இல்லாது அவர்கள் ராஜிநாமா செய்தனர். உடனே பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. பின்பு நடந்த பொதுத் தேர்தல்களில், 340 கன்சர்வேடிவ்களும், 71 லிபரல் யூனியனிஸ்டுகளும், 177 லிபரல்களும், 82 ஐரிஷ் தேசியவாதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஹார்கோர்ட்டும் மோர்லியும் இந்தத் தேர்தலில் தோற்கடிக்கப்பட்டனர். ரோஸ்பரியும் மற்றொருமுறை ஹார்கோர்ட்டுடன் வேலைசெய்ய விரும்பவில்லை. இந்த யூனியனிஸ்டு கட்சியினர் ஐரிஷ் சுய ஆட்சிக்கு ஆதரவு அளிக்கவில்லை. அவர்களுடைய நிலையும் இப்பொழுது பலமிக்கதாகிவிட்டது. பர்மிங்ஹாம் போன்ற

பகுதிகளில், இந்தக் கட்சிக்குத் தனிப்பட்ட நிறுவனம் இருந்த போதிலும், 1886 ஆவது ஆண்டில் செய்துகொண்ட ஒப்பந்தப்படி லிபரல் கட்சியுடன் சேர்ந்தே 1919-வரை அவர்கள் பணியாற்றினர். இரண்டு தரப்பிலும் உள்ள தலைவர்களான ஸாலிஸ்பரி, பல்ஃபோர், டிவன்ஷயர் (முன்பு ஹார்டிங்டனாக இருந்தவர்), சேம்பர்லேன் ஆகியோர் மிகவும் நட்புறவுடன் இருந்தனர். அதனால், சேம்பர்லேனைப் பின்பற்றுகின்றவர்கள் திருச்சபைப் பள்ளிகளின்மீது தொடுத்த போராட்டத்தை நிறுத்திவிட்டனர். அதைப்போன்றே ஸாலிஸ்பரி, சேம்பர்லேனுடைய சமுதாயக் கொள்கைகளையும் அவர் மக்களுக்கு அளித்த வாக்குறுதிகளையும் மதித்து நடந்தார். லிபரல் யூனியனிஸ்டுக் கட்சியில் திறமை மிகுந்தவர்கள் இருந்ததனால், மொத்தம் பத்தொன்பது மந்திரி பதவிகளுள் அவர்களுக்கு ஆறு பதவிகள் அளிக்கப்பட்டன. அவர்களுடைய மொத்த எண்ணிக்கை விகிதப்படி பார்த்தால், இவ்வளவு பதவிகள் அதிகமாகத்தான் தோன்றுகின்றன. இரண்டு சபைகளில் ஸாலிஸ்பரியும் பல்ஃபோரும் கட்சித்தலைவர்களாக இருப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது. பதவியில் நியமனம் செய்யப்பட்டவர்களும், அவர்களுடைய விருப்பப்படியே பொறுப்புகளையும் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். சேம்பர்லேன், காலனி நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டார். டிவின்ஷயர், அயல் நாட்டுப் பொறுப்பை ஏற்கமறுத்து விட்டதனால், ஸாலிஸ்பரியே பிரதமராகவும் வெளிநாட்டு மந்திரியாகவும் பொறுப்பேற்றுக் கொண்டார். மற்றும் பல திறமைமிக்க மந்திரிகளான கோஷன், ஹெர்ஃபோர்டைச் சார்ந்த ஜேம்ஸ், ஹிக்ஸ் பீச், கிராஸ், லேண்ட்ஸோன் ஆகியோரும் பதவி வகித்தனர். பதவி வகித்தவர்கள் பெரும்பாலும் வயதானவர்களே. அடுத்த ஐந்தாண்டுக் காலம் வரையிலும் இந்த மந்திரிசபை மாறுதலின்றி அப்படியே நீடித்தது.

1900 வரையிலும் வர்த்தகம் நல்ல வளர்ச்சி அடைந்திருந்தது. புதியதொரு சாதனையை ஏற்படுத்தியது என்றும் கூறலாம். வேலையில்லாத் திண்டாட்டத்தை மிகவும் குறைத்தனர். ஆனால், சில வெளிநாட்டு நெருக்கடிகளாலும், தென்ஆஃப்பிரிக்கப் போர்களாலும் அவர்களுடைய ஆட்சிக்குச் சில இடையூறுகள் ஏற்பட்டன. ஆனால், இந்த நெருக்கடிகளால், அவர்களுடைய ஒற்றுமை சீர்குலையவில்லை. அவர்களுடைய நிதிவளமும் பேரரசின் விஸ்தரிப்பும் உச்சநிலையை அடைந்திருந்தன. சேம்பர்லேனும் பேரரசு நிர்வாகத்தில் தன் விருப்பப்படி கொள்கைகளை அமைத்துக்கொண்டார். பேரரசில் ஏற்பட்ட வளர்ச்சியைப்போல, சேம்பர்லேனின் சமுதாயச் சீர்திருத்தங்களைக்

கொண்டுவருவதில் முன்னேற்றம் ஏற்படவில்லை. அதில், கால தாமதம் ஏற்பட்டது. 1897-ல் கொண்டுவரப்பட்ட தொழிலாளர் நஷ்ட ஈட்டுச் சட்டமும், 1901-ல் கொண்டுவந்த சுகாதாரப் பாதுகாப்புச் சட்டமும்தான் இவருடைய பெரும் சாதனை யாகும். தொழிலாளர் நஷ்ட ஈட்டுச் சட்டப்படி, விபத்து ஏற்பட்ட தொழிலாளர்களுக்கு நஷ்ட ஈடு தரப்பட வேண்டு மென்று சட்டம் இயற்றப்பட்டது. தொழிலாளர் உடல் நலன்களையும், அவர்கள் பாதுகாப்பையும் போற்ற சுகாதாரப் பாதுகாப்புச் சட்டம் சமீபத்தில் ஆஸ்குவித்தால் திட்டமிட்டு இயற்றப்பட்டது. ஜெர்மனியில் கொண்டுவந்துள்ள சமுதாய இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தைப்போல, இங்கிலாந்திலும் சேம்பர் லேன் கொண்டுவரவேண்டுமென்று முயன்றார். தொழிலாளர் களின் வயதான காலத்தில், ஓய்வு பெறவும் பென்ஷன் பெறவும் ஒரு திட்டத்தை அவர் தயாரித்தார். சமூகச் சீர்திருத்தவாதியான சார்லஸ் பூத் என்பவர் இந்த இயக்கத்திற்கு நல்ல ஆதரவை அளித்தார். 1899-ல் வாரத்திற்கு 5 ஷில்லிங் வீதம், அறுபத்து ஐந்துக்கு மேற்பட்ட ஏழைத் தொழிலாளர்களுக்கு உதவித் தொகை தரவேண்டுமென்று திட்டமிட்டிருந்தது யுத்தத்தின் காரணமாகக் கைவிடப்பட்டது. 1899-ல் இயற்றிய லண்டன் அரசாங்கச் சட்டத்தின்படி, லண்டனிலுள்ள மாநகராட்சி மன்றத்தை அப்படியே மாற்றமில்லாது விட்டுவிட்டனர். ஆனால், மற்றப் பகுதிகளில் உள்ள போர்டுகளையும் சங்கங்களையும் ரத்து செய்துவிட்டு, தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்தெட்டு பரோ கவுன்சில்களை நிறுவினர். 1896-ல் விவசாய வரி விதிப்புச் சட்டம் இயற்றப்பட்டது. இந்தச் சட்டம் இயற்றியதன் முக்கியமான நோக்கமென்னவெனில், விவசாய மந்தநிலையால் பாதிக்கப் பட்ட விவசாயிகளுக்குப் பாதிக்குமேல் அவர்கள் கொடுத்து வந்த வரிகள் குறைக்கப்பட்டன.

இந்த நூற்றாண்டில், எல்லாத் துறைகளிலும் புதியதொரு மாற்றம் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். 1900-ல் நடந்த தேர் தலைக் 'காக்கி'த் தேர்தல் என்று அழைத்தார்கள். மக்களுடைய போருணர்ச்சியின் அடிப்படையில் கட்சி பலம் நிர்ணயம் செய் யப்பட்டது. 1901 ஜனவரியில் அரசியார் இறந்தார். மே 1902-ல் தென் ஆஃப்பிரிக்காவில் அமைதி நிலவியது. ஜூலைமாதம் ஸாலிஸ் பரி ராஜிநாமா செய்தார். ஸாலிஸ்பரிக்கு அதிக வயதாகி விட்டதால், வெளிநாட்டுத் துறையை லேண்ட்ஸோனுக்கு அளித்துவிட்டார். வீடு கட்டும் சீர்திருத்தத்தைத் தவிர, மற்ற எந்த உள்நாட்டுச் சீர்திருத்தத்தையும் அவர் அதிகமாக விரும்ப வில்லை. அவர் பதவியை விட்டு வெளியேறியபோது, அவருடன்

மற்ற முதுமையுற்ற மந்திரிகளான கிராஸ், கோஷென், சாப்ளின், ஹிக்ஸ் பீச் ஆகியோரும் விலகினர். ஹிக்ஸ் பீச், பேரரசின் தொடர்புபெற்ற பல கொள்கைகளை வெறுத்தார். இப்பொழுது சேம்பர்லேனின் நிலைமை மிகவும் உயர்ந்துவிட்டது. காலனி நிர்வாகக் காரியாலயத்தை நாட்டின் பெரிய நிறுவனமாக்கிவிட்டார். பேரரசின் மாநாடுகளை அடிக்கடி கூட்டி நாளடைவில் அதை ஒரு நிலையான நிறுவனமாக்கிவிட்டார். அந்தக் காலனிகளிலிருந்து வருகின்ற மந்திரிகளின் முன்பு, ஒற்றுமையை வளர்ப்பதற்குரிய திட்டங்கள், வர்த்தகம், பாதுகாப்பு ஆகியவற்றைப்பற்றியும் அவர் ஆலோசனை செய்தார். வைர விழாவிற்குப் பல காலனிகளிலிருந்தும் போர்வீரர்கள் வந்து குவிந்திருந்தனர். தென் ஆஃப்பிரிக்காவிலிருந்தும் ஆஸ்திரேலியாவிலிருந்தும் நிறைய போர் வீரர்கள் வந்திருந்தனர். பேரரசின் விஸ்தரிப்பிற்கு ஏற்ப, வெளிநாட்டுக் கொள்கைகளையும் மாற்றி அமைத்துக்கொண்டார். ஸாலிஸ்பரியைவிட, இந்தப் பிரச்சினையில் இவர் அதிகமாகக் கருத்தைச் செலுத்திப் பெரும்பணி புரிந்திருக்கிறார். ஃபிரான்சுடன், ஆஃப்பிரிக்கக் காலனிகளைப்பற்றிய உடன்படிக்கையைச் செய்துகொண்டார். பின்பு, ஜெர்மானியருடன் உடன்படிக்கை செய்துகொள்வதால் ஏற்படுகின்ற நன்மை தீமைகளை அலசிப் பார்த்து, உடன்படிக்கை செய்துகொள்வதில் காலதாமதம் செய்தார்.

பெரும்பான்மை கன்சர்வேடிவ் கட்சியைத் தலைமை தாங்கி நடத்த இன்னும் பல்ஃபோரைத் தவிர வேறு யாரும் இல்லாததால், அவரிடமே தலைமைப் பதவி ஒப்படைக்கப்பட்டது. லிபரல் யூனியனிஸ்டு எவரும் இந்தப் பொறுப்பை ஏற்கமுடியாது. பல்ஃபோரும் சேம்பர்லேனும் நட்புறவுடன் இருந்துவந்த காலம் வரை அரசாங்கம் ஒழுங்காக நடைபெற்றது. ஆனால், இருவரும் வெவ்வேறு கொள்கைகளை உடையவர்கள். அதனால், அரசாங்கத்தின் பலம் சிறிது குறைந்தே போயிற்று. பல்ஃபோர் நியமனம் செய்த மந்திரிகளும் கேபினட்டுக்கு அதிக பலத்தைத் தேடித் தரவில்லை. ஜார்ஜ் விண்டாம், அவருடைய சகோதரரான கெரால்டு, அவருடைய உறவினர் செல்போர்ன், ஆஸ்டின் சேம்பர்லேன், ரிட்சி, புரோடிரிக் ஆகியோர் கேபினட்டில் பதவி வகித்தனர். ரிட்சி, நிதி மந்திரியாகவும், புரோடிரிக் யுத்த மந்திரியாகவும் பதவிவகித்தனர். மக்களை உற்சாகப்படுத்தவோ அல்லது கொள்கைகளில் உறுதிப்பாடோ, அவருக்கு அதிகம் இல்லாததால், அவரை கிளாட்ஸ்டன், சர்ச்சில், சேம்பர்லேனைப்போல சிறந்த ஜனநாயகத் தலைவராகக் கருத முடியவில்லை, ஆனால், சட்டம் இயற்றுவதிலும், ஆட்சித்துறை

யிலும், கட்சி வகுத்த திட்டங்களைவிட அதிகமாகவே அவர் சாதித்திருக்கின்றார். லிபரல் கட்சியைச் சார்ந்த இளம் அங்கத்தினர்களான ஆஸ்குவித், ஹால்டேன் ஆகியவர்களுடன் நல்ல தொடர்பு வைத்திருந்ததுமன்றி, அக் கட்சிகளிடையே உள்ள வேறுபாடுகளைப் பேரளவிற்குப் போக்கினார். அவருக்கு உள்ள நல்ல குணங்களான பற்றுதல் இல்லாமையும், கொள்கைகளைப் புரிந்துகொள்ளும் திறனும், கூர்மையான அறிவும், மிகவும் நெருக்கடியான நேரத்திலும் முக்கியமான பிரச்சினைகளைத் தீர்ப்பதிலும் உதவிபுரிந்தன.

அவருடைய ஆட்சித்திறனின் சிறந்த சாதனையாக, 1902-ல் இயற்றிய கல்விச் சட்டத்தைக் கூறலாம். 1870-ல் கிளாட்ஸ்டன் இயற்றிய கல்விச் சட்டத்தில், எல்லோருக்கும் ஆரம்பக்கல்வி அளிக்கவேண்டுமென்ற அளவில் மட்டுமே திட்டமிடப்பட்டிருந்தது. இந்தத் திட்டத்தை அமல் நடத்தும்பொழுது, தேர்ந்தெடுக்கப்பட்ட பள்ளிக்குழுவினர், சில பகுதிகளில் வசூலிக்கப்படும் கல்வி வரியிலிருந்து நடத்தும் பள்ளிகளுக்கும், மற்ற ஆங்கிலிகன், கத்தோலிக்கத் திருச்சபையினர் நடத்தும் பள்ளிகளுக்கும் எப்பொழுதுமே தகராறு இருந்து வந்தது. திருச்சபையினர் நடத்தும் பள்ளிகளை அவர்களுடைய பொறுப்பாளர்களே கவனித்து வந்தனர். அந்தச் சட்டம், மேலும் உயர்நிலைக் கல்வியைப்பற்றிச் சிறிதும் கவலைகொள்ளவே இல்லை. அதற்குக் காரணம், ஜெர்மனியின் வர்த்தகப் போட்டியும், ஸ்விஸ், ஃபிரெஞ்சுப் போட்டிகளும் அதிகமாகிவிடவே, கல்வித் திட்டத்தில் அவ்வளவு அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. நாளடைவில், தனியார் நடத்துகின்ற பள்ளிகளும் கிராமப் பள்ளிகளும் பணக்காரர்களுக்கு அதிகச் சலுகைகளை அளித்து வகுப்புகளை நடத்தின. இடைநிலையில் உள்ள சில மக்களுக்கும் உயர்நிலைக்கல்வி வசதிகளைத் தரத் திட்டமின்றிச் சிலநடவடிக்கைகளை எடுத்தனர். இப் பொறுப்பைச் சில சமயங்களில், அக்கறையுள்ள பள்ளிக் குழுவினரும், மானியங்களைப் பெற்ற தல அதிகாரிகளும் பள்ளிகளை ஏற்று நடத்தினர்.

கிளாட்ஸ்டனுடைய அரசாங்கத்தில் ஆக்லண்ட் தீட்டியிருந்த கல்வி முறையை, 1899-ல் ஸாலிஸ்பரி கேபினட் பின்பற்றிக் கல்வி போர்டு ஒன்றை நியமித்தது. பல கல்வி நிலையங்களை ஒரே மாதிரியாக இயக்குவதற்கு, ஒரு கல்வித்துறை அமைச்சரை நியமித்தனர். அப்படியிருந்தும் உயர்நிலைக் கல்வி சரியான அளவில் சீராக வளர்ச்சி அடையவில்லை. அப் பள்ளிகள் ஒழுங்காக நடைபெறுவதற்குவேண்டிய நிதி வசதிகளும் தரப்படவில்லை. மேலும், திருச்சபையினர் நடத்தும் பள்ளிகளுக்கும் போதிய நிதி

வசதிகள் இல்லாததால், அப் பள்ளிகளில் திறமை மிகவும் குன்றி விட்டது. ஆனால், இதிலுள்ள குறைபாடுகளை உடனடியாக அகற்ற முயற்சி செய்தாலும், திருச்சபையினருக்கும் அச் சபையில் இணங்காதார்களுக்கும் மோதல் ஏற்படக்கூடும். தவிர, லிபரல் யூனியனிஸ்டுகளின் ஆத்திரத்தையும் கிளறிவிடும். இந்தச் சூழ் நிலையில்தான் அஞ்சாநெஞ்சத்துடன் பல்ஃபோர் (Balfour), ராபர்ட் மோரான்ட் என்ற அதிகாரியின் உதவிகொண்டு பாராளுமன்றத்தில் கல்விச் சீர்திருத்தச் சட்டம் ஒன்றைக் கொண்டு வந்தார்.

தல அரசாங்கத்தில், இச் சட்டம் மிகவும் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. சென்ற நூற்றாண்டில் காணப்பட்ட பள்ளி முறைகள் எல்லாம் இப்பொழுது மாற்றி அமைக்கப்பட்டன. பின்பு, அதற்கென்றே நிறுவப்பட்ட தனிக்குழுவினர் கண் காணிப்பில் இத் திட்டத்தை அமல்செய்ய விட்டுவிட்டனர். பள்ளி போர்டுகள் ஒழிக்கப்பட்டு, அவைகளுக்குப் பதிலாக, கவுன்டிக்கும், கவுன்டி பரோவுக்கும், அல்லது நகர ஜில்லாக் கவுன்சிலுக்கும் தனிக் கல்விக் குழுவினர் நியமனம் செய்யப் பட்டனர். அவர்களுடைய கண்காணிப்பில், ஆரம்பக் கல்வியும் உயர்நிலைக் கல்வியும் விடப்பட்டது. இந்தக் குழுவினர் அப் பகுதி களில் வசூலாகும் கல்வி வரிகளிலிருந்து, எல்லாப் பள்ளிகளுக்கும் திருச்சபைப் பள்ளிகள் உட்பட அனைத்திற்கும் நிதி வசதி அளித்து உதவி செய்தனர். தவிர, மதச்சார்பற்ற கல்வி அளிப்பது அவர் களுடைய பொறுப்பாக ஏற்றுக்கொண்டனர். திருச்சபையினர் நடத்தும் பள்ளிகளில், அவர்கள் விருப்பப்படி சமயக் கல்வியை அளிக்க அனுமதிக்கப்பட்டனர். அப் பள்ளி ஆசிரியர்களையும் அவர்களே நியமனம் செய்துகொள்ளலாம். உயர்நிலைப் பள்ளி களில் ஒரே மாதிரியான கல்வியை அளிப்பதிலும், அதைப் போன்றே ஆரம்பக் கல்வி நிலையங்களில் ஒரே மாதிரியாகக் கல்வியை அளிப்பதிலும் இந்தச் சட்டம் ஓர் ஒழுங்கு முறையை அமைத்தமை கல்வித் துறையில் பெரிய முன்னேற்றத்தை உண்டாக்கியது எனலாம். கல்வியைப் பொறுத்த அளவில் முன்னேற்றம் ஏற்பட்டாலும், அரசியல் நோக்கத்துடன் கவனிக்கும்போது, பலருக்குக் கோபமும் இச் சட்டத்தைப் புறக் கணிக்கின்ற அளவு வெறுப்பும் ஏற்பட்டது. ஏனெனில், திருச் சபைப் பள்ளிகளுக்குத் திருச்சபையிலிருந்தே நிதி உதவிகளும், மேற்கொண்டு வரிவசூல் பணமும் அளிக்கப்படுவதைக் கண்டு, நியமிக்கப்பட்ட திருச்சபையில் சேராதவர்கள் ஆட்சேபித் தனர். ஏனெனில், வேல்ஸ் போன்ற பகுதிகளில் அவர்கள் வைத்து நடத்தும் பள்ளிகளில் மதபோதனைகளுக்கும் அவர்களே செலவுசெய்ய வேண்டுமென்பதுமட்டுமன்றி, மதபோதனை

களையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அவ்விதமான பள்ளிகளின்மீது அவர்களுக்கு அதிகாரம் இல்லை. திருச்சபைப் பள்ளிகளுக்குமட்டும் அவர்களே மதபோதனை வைத்துக்கொள்வதும், அதற்கான ஆசிரியர்களை அவர்கள் செலவில் அமர்த்திக் கொள்வதும், மேலும், அவர்களுக்கு மானியம் வழங்காமல் இருப்பதும், அவர்களுக்குப் பள்ளிகளை வைத்து நடத்துவதும் கடினமாக இருந்தது. ஆனால், மற்றப் பள்ளிகளுக்கு அளிக்கப்படும் மானியங்களைப்போல இவர்களுக்கும் சமநிலையில் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் வேண்டினர். ஆனால், பெற்றோர்களுக்கு இவர்களுடைய சமயக் கருத்து வேறுபாடுகளைப்பற்றிக் கவலையே இல்லை. அவர்களுக்கு வேண்டியது, அவர்கள் குழந்தைகள் நன்முகப் படிக்கவேண்டுமென்பதுதான். இவ்விதமான தகராறு பத்தாண்டு வரையிலும் நீடித்தது. ஹால்டேனுடைய முயற்சியால், பல்ஃபோர், கல்வி கற்பிக்கும் பல்கலைக் கழகங்களை லண்டனிலும், மான்செஸ்டரிலும், லிவர்பூலிலும் நிறுவினர்.

கன்சர்வேடிவ் கட்சிக்கு ஆதாரங்களாக, பீர் என்ற மதுவும், விவிலிய நூலுமேதான் இருக்கின்றது என்று ரேடிகல்கள் கூறினர். 1904-ல் அவர்கள் இயற்றிய அனுமதிச் சட்டம் இதைப் போன்றதே. அந்தச் சட்டம் கடுமையான தாக்குதலுக்கு ஆளாயிற்று. மதுபானம் அருந்துவது அக்காலத்தில் ஒரு தீய பழக்கமாகக் கருதப்பட்டது. அக் குடிப்பழக்கத்தை எவ்வாறு தடுத்து நிறுத்துவது. அனுமதிகளை ரத்து செய்துவிட்டால், அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டாமா? அல்லது 'அனுமதிகள்' சொத்துடைமையாகக் கருதப்படலாமா? அனுமதிச் சீட்டுகள் நீதிக் காவலர்களால் தரப்படலாமா? இவைகளைப்பற்றிச் சட்டத்தின் கருத்து மாறுபட்டிருந்தது. மதுபானங்களைத் தயாரிப்பவர்களும் மிதமாகக் குடிப்புவர்களும் அரசியல் துறையில் நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தனர். பல்ஃபோர் இயற்றிய சட்டம் இவற்றிற்கெல்லாம் ஒருவகையில் முடிவு காணக்கூடிய வழியே என்று கூறப்பட்டது. நேர்வழியில் செல்லாத சில வியாபாரிகளின் அனுமதிச் சீட்டுகளைத் தவிர, மற்ற அனுமதிகளை வைத்திருப்பவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதென்றும், ஆனால், அந்த நஷ்ட ஈட்டை மது வர்த்தகத்திலிருந்தே ஈடு செய்வதென்றும், மேலும் அனுமதிகளை வழங்கும் அதிகாரிகள், நீதிபதிகள் உயர்ந்த நிலையில் இருக்கவேண்டுமென்றும் அந்தச் சட்டத்தில் கூறினார்கள்.

தேசியப் பாதுகாப்பு நடவடிக்கைகளைப் பலப்படுத்துவதற்கு பல்ஃபோர் எடுத்துக்கொண்ட முயற்சியைக்கொண்டு, அவருடைய

திறமையைத் தெரிந்துகொள்ள முடிகின்றது. ஆஃப்பிரிக்காவில் ஏற்பட்ட தோல்விகள் நன்கு ஆராயப்பட்டன. சரியான திட்டங்கள் இல்லை. இராணுவத்தில் உள்ள உளவுமுறை சரியான படி பயன்படுத்தப்படவில்லை. தலைமை அதிகாரிகள் திறமை இல்லாதவர்களாக இருந்தனர். போக்குவரத்துகளிலும், தக்க சமயங்களில் பண்டங்களை விநியோகம் செய்வதிலும் குறை பாடுகள் இருந்தன. அதனால் அவைகளைப் பரிசீலனை செய்து சீர்திருத்தங்களைக் கொண்டுவர 1903-ல் எஷர் தலைமையில், பணித்துறைச் சார்பான ஒரு குழுவினரை நியமித்தனர். அப்பொழுது பிரதம தளபதியாக இருந்த வயதான கேம்பிரிட்ஜ் கோமகனை, அரும்பாடுபட்டு, போர்த்துறைக் காரியதரிசியாக இருந்த லிபரல் கட்சியைச்சார்ந்த கேம்ப்பெல்-பானர்மென் பதவி யிலிருந்து நீக்கிவிட்டு, அவருக்குப் பதிலாக, உல்ஸ்லி என்பவரை நியமித்தார். அவர் கடுமையான இயல்பு உடையவர். 1890-ல் ஹார்டிங்டன் கமிஷன் சிபாரிசு செய்ததைப் போன்றே, எஷர் குழுவினரும், இராணுவத்தில் செய்யவேண்டிய மாற்றங்களும் திருத்தங்களும் எவை என்பதை ஆராய்ந்து சிபாரிசு செய்தனர். இராணுவ அதிகாரம் முழுவதும் ஓர் அதிகாரியிடமே குவிந்திருப் பது கூடாதென்று அவர்கள் ஆலோசனை கூறி, அதற்குப் பதிலாக ஓர் இராணுவக் கவுன்சிலிடம் அந்த அதிகாரத்தை ஒப்படைக்க வேண்டுமென்று அறிவித்தனர். அதனால், பிரதம இராணுவத் தளபதியின் பதவி ரத்தாகியது. இந்த இராணுவக் கவுன்சில் ஏறக்குறைய கப்பற்படைக் கவுன்சிலைப் போன்றே அமைந்தது. ஆனால், இராணுவக் காரியாலயத்தை அமைத்து, இராணுவ அதிகாரிகளை நியமனம் செய்யும் திட்டத்தை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. புரோடிரிக், ஆர்னல்ட்-ஃபார்ஸ்டர் ஆகிய போர்க் காரியாலயத்தைச் சேர்ந்த அதிகாரிகள் கொண்டுவந்த சில சீர்திருத்தங்கள் ஏட்டளவில் நின்று விட்டதுமன்றி, அவை களினால் எந்த விளைவுகளும் ஏற்படவில்லை.

கடற்படையைப் பலப்படுத்துவதில் சில நல்ல சீர்திருத்தங் களைச் செய்தனர். ஏனெனில், 1898; 1900-ல் ஜெர்மன் சில கடற்படைச் சட்டங்களைக் கொண்டு வந்ததால், பிரிட்டனு டைய பாதுகாப்பிற்கு ஆபத்து ஏற்படும் நிலை இருந்தது. உண் மையில், பிரிட்டனுடைய பாதுகாப்பே அதனுடைய கடற்படை யின் வலிமையைப் பொறுத்தே இருக்கிறது. 1894-ல் கிளாட்ஸ் டன் ராஜிநாமா செய்துவிட்டார். கடற்படைக்குக் குறைந்த அளவில் பத்து மில்லியன் பவுன்கள் செலவு செய்யவேண்டு மென்று மதிப்பிட்டதை எதிர்த்ததனால், அவர் அவ்வாறு செய்ய நேரிட்டது. ஆனால், 1901-ல் அதற்காகச் செலவிடப்படும்

தொகை 31 மில்லியன் பவுன்களுக்குச் செல்லுகின்றது. இதில் இவ்வளவு மாறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தவர்கள், சர் ஜான் ஃபிஷர் என்பவரும், அவருக்கு உதவியாக இருந்த முதற் பிரபுக்களாக பல்ஃபோரினுல் நியமனம் செய்யப்பட்ட செல்போர்ன், காவ்டார் என்பவர்களுமாவர். மத்தியதரைக் கடலிலுள்ள ஆங்கிலேயக் கப்பற்படையை அட்லான்டிக் கடலுக்கு மாற்றிவிட்டனர். மேலும், ஆங்கிலேயக் கால்வாயிலும் அதன் ஒரு பகுதியைக் கொண்டுவந்து அமர்த்தினர். வட பாகத்திலுள்ள ரோஸித் என்ற துறைமுகத்தைக் கப்பற்படை தளமாக்கினர். இரண்டாவது நடவடிக்கையாக, புதிய போர்க் கப்பல்களையும் போர் நாசகாரிகளையும் நிர்மாணித்தனர். டிரட்நாட், இன்வின்சிபிள் போன்ற போர்க் கப்பல்களை மாதிரிகளாக வைத்துக்கொண்டு அவற்றைப் போலவே தயாரித்தனர். அவைகளில் பெரிய துப்பாக்கிகள் பொருத்தப்பட்டன. டார்ப்பிடோ தாக்குதல்களிலிருந்து பாதுகாக்கப்படுவதற்காக, இந்த முறை பின்பற்றப்பட்டது. இதனுல் கப்பல்களுக்கும் நல்ல பாதுகாப்பு ஏற்பட்டது. மூன்ருவதாகக் கடற்படை அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிப்பதற்கும், பழைய அதிகாரிகளுக்குப் புதிய முறைகளில் பயிற்சி அளிப்பதற்கும், டார்ட்மவுத்தில் ஒரு கடற்படைக் கல்லூரியை ஏற்படுத்தினர்.

நாட்டின் பாதுகாப்பு நடவடிக்கைகளைப் பலப்படுத்தியது மட்டுமல்லாமல், அவர் ஏற்படுத்திய பேரரசுப் பாதுகாப்புக் குழு அவருடைய சொந்த முயற்சியால் நிறுவப்பட்டதாகும். அந்தக் கமிட்டியில் பிரதம அமைச்சரே தலைவராகவும், மற்ற யுத்த மந்திரிகள் அங்கத்தினர்களாகவும், மற்ற நிபுணர்களை வேண்டுமென்கின்றபொழுது நியமித்துக்கொள்ளலாம் என்றும் ஒரு திட்டம் வகுத்தார். இந்தக் குழுவின் நடவடிக்கைகள் எழுத்து மூலமாகப் பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன. அந்தப் பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கென்று தனிப்பட்ட காரியாலயமும் நிறுவப்பட்டது.

பல நெருக்கடிகளுக்கிடையே பத்து ஆண்டுகள் வரையிலும் ஆட்சிசெய்த கன்சர்வேடிவ் அரசாங்கம் பல அரிய சாதனைகளைச் செய்தது. அப்பொழுது ஏற்பட்ட பல நெருக்கடிகளாவன: 1895-ல் நிகழ்ந்த ஜேம்சன் தாக்குதலும், வெனிஸுலாவைக் குறித்து அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் மோதலும், ஆர்மீனியாவில் நிகழ்ந்த துருக்கியப் படுகொலைகளும், 1896-ல் டிரான்ஸ்வாலில் ஜெர்மனியின் தலையீடும், 1897-ல் கிரேக்க-துருக்கியப் போரும், 1898-ல் சீனுவில் ஜெர்மன் ரஷ்யாவின் ஆக்கிரமிப்பும், சூடானை மீண்டும் நாம் கைப்பற்றலும், ஃபாஷடாவில்

(Fashoda) ஃபிரான்சுடன் மோதலும், தென் ஆஃப்பிரிக்காவில் நிகழ்ந்த மூன்று ஆண்டுப் போர்களும், பாரசீகம், திபெத், சீனு ஆகிய நாடுகளில் ரஷ்யாவின் ஆக்கிரமிப்புப் பயமுறுத்தலும், தவிர, ஜெர்மனியின் பயமுறுத்திக் காரியத்தைச் சாதிக்கின்ற வெல்திறனும் போன்ற பல நிகழ்ச்சிகள் இந்தப் பத்தாண்டு களில் நடந்தன. இந்த நிகழ்ச்சிகளால், நமது வெளிநாட்டுக் கொள்கையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டது.

தென் ஆஃப்பிரிக்கப் போர் உள்நாட்டு அரசியலில் மாபெரும் திருப்பத்தை உண்டாக்கியது. ரோட்ஸ் மற்றும் அவருடைய ஆட்களும் புரிந்த தாக்குதல்களும், மேட்டாபெலே போரும், மேட்டாபெலேயினரின் தாக்குதல்களும் உள்நாட்டு அரசியலில் பெரிய கலக்கத்தை ஏற்படுத்தியது. இவற்றைப் பரிசீலனை செய்யப் பாராளுமன்றம் ஒரு குழுவினரை நியமித்தது. அவர்களுடைய சிபாரிசுகளும் ஒருவித பயனையும் அளிக்கவில்லை. இரண்டு குடியரசு களின்மீது போரும், ஆங்கிலேய அரசாங்கத்தின் பெயரைச் சொல்லி வைரம், தங்கம், பணம் ஆகியவற்றைக் கள்ளத்தன மாகக் கடத்தலும்,போயர் குடிமக்களுக்குவைத்த சிறைக்காவலும் போன்ற நிகழ்ச்சிகள் அரசாங்கத்தைப் பலமாகக் கண்டனத்திற் குள்ளாக்கின. இதனால், ஜனநாயகக் கருத்துகளைப் போற்றுகின்ற மக்களின் மனம் புண்பட்டது. இந்தப் போரினால் எதிர்பாராத விளைவு ஏற்பட்டது. ஆனால், அந்த விளைவு தாற்காலிகமானது தான். பழிவாங்கவேண்டுமென்று எழுந்த கூக்குரலில், லிபரல் கட்சியிடையே பிளவு ஏற்பட்டது. 1898-ல் ரோஸ்பரி, ஹார் கோர்ட், மார்லி ஆகியோர் ராஜிநாமா செய்தனர். அந்தச் சமயத்தில் காமன்ஸ் சபையின் கட்சித் தலைவராக கேம்ப்பெல்-பானர்மென் தேர்ந்தெடுக்கப்பட்டது மீண்டும் அதிகமான கசப்பை விளைவித்தது. இந்தப் போர், குடியரசுகளை இணைக்க வேண்டுமென்று அவர் கருதினாலும், கிட்சினரின் தீயிட்டு அழித் தலையும் அவருடைய போர் முறைகளையும் 'காட்டுமிராண்டித் தனம்' என்று கூறிக் கண்டித்தார். அக் குடியரசுகளுக்குச் சுய ஆட்சி அளித்து, அங்கே அமைதியை நிலை நிறுத்த வேண்டுமென்று அவர் கருதினர். அவருடைய கட்சியிலேயே உள்ள 'போயர் ஆதரவாளர்கள்' குழுவினரிடம் இவர் அனுதாபம் கொண்டிருந்தார். அந்தக் குழுவிலுள்ள வேல்ஸ் பகுதியிலிருந்து வந்த இளைஞரான டேவிட் லாயிட் ஜார்ஜ் என்பவர் நல்ல பேச்சுவன்மை உடையவராக இருந்தார். இதனால், ரோஸ்பரியுடன் மட்டுமல்லாது, மற்றும் முன்னணிக்கு வரக்கூடிய ஆஸ்குவித், ஹால்டேன், எட்வர்ட் கிரே ஆகியோருடனும் உறவு பாதிக்கப்படக்கூடிய அளவில் இருந்தது.

எல்லோருமே இந்தப் போர் துவங்கியதை ஆதரிக்கவில்லை. என்றாலும், மில்னரின் சாதனையைப் போற்றினர். அதுமட்டு மன்றி இந்தப் போர் தேசியப் பிரச்சினையாகிவிட்டதென்பதை யும் உணர்ந்தனர். 1902-ல் அவர்கள் ரோஸ்பரியுடன் சேர்ந்து 'லிபரல் சங்கம்' ஒன்றை நிறுவினர். இந்த வலையில் விழாமல் லிபரல்கள் மெதுவாகக் காப்பாற்றப்பட்டனர். அவர்களைக் காப்பாற்றியவர்களில் கேம்ப்பெல்-பானர்மெனுங்கூட ஒருவ ராவர். லிபரல் சங்கத்தின் தலைவர்களுடன் அறிவுத்திறனில் அவரை ஒப்பிட முடியாதெனினும், ரோஸ்பரியைவிட இரண்டு பங்கு அதிகமாக அவருக்கு நல்லகுணங்கள் இருந்தன. அரசாங்கத் தவறுகளால்கூட அவர் கட்சிக் கொடியைத் தாழ்த்தமாட்டார். ஆஃப்பிரிக்கா பிரச்சினையில், லிபரல்கள் பிளவுபட்டபோதிலும் கல்வித் திட்டத்திலும் மற்ற அனுமதி வழங்கும் சட்டத்திலும் அவர்கள் மீண்டும் ஒன்றுபடுவார்கள் என்ற நம்பிக்கை இருந்தது.

இவர்கள் மீண்டும் ஒன்றுசேர்வதற்கு அயர்லாந்துப் பிரச்சினை காரணமாக அமையாது என்று அவர்களுக்குத் தெரியும். மேலும் கிளாட்ஸ்டனுடைய உறுதிவாய்ந்த உள்ளத்தை இவர்களிடம் இவ்வகையில் காணமுடியவில்லை. ஆனால், 'யூனியனிஸ்டுகள்' அல்லது ஐக்கியத்தை விரும்புகிறவர்களை அயர்லாந்து மிகவும் பாதித்துவிட்டது. 'எண்பதுகளில்' ஐரிஷ் காரியதரிசியாக இருந்தவர் எவருமே அவர்களுடைய பாதுகாப்பிற்காகச் சுடுவதற்குத் தயாராக வைத்திருந்த துப்பாக்கியைவிட்டுப் பிரிந்ததே கிடையாது. பல்ஃபோர், அயர்லாந்திலே 'இரத்த வெறியன் பல்ஃபோர்' (Bloody Balfour) என்ற பெயரைப் பெற்றிருந்தார். கொடிய ஆட்சியும், அனுதாபம் காட்டியே அயர்லாந்தின் சுய,ஆட்சி இயக்கத்தை அழிக்க முயன்றதும் இந்த இருபது ஆண்டுகளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளாகும். இப்படித்தான் நடைபெறவேண்டுமென்று ஸாலிஸ்பரி நினைத்ததும், இவ்வித நிகழ்ச்சிகள் ஏற்படும் என்று பார்னெல் எதிர்பார்த்ததும் நிகழ்ந்து விட்டன. 1887–1905 வரையிலும் மூன்று பிரதம காரியதரிசி களான பல்ஃபோர், அவருடைய சகோதரர் கெரால்டு (Gerald), ஜார்ஜ் விண்டாம் (George Wyndham) ஆகியோர், அயர்லாந்து மக்களுக்கு நிறைய சீர்திருத்தங்களைச்செய்து அவர்களுடைய சுய ஆட்சி இயக்கத்தை ஒடுக்கிவிட முயற்சி செய்ததும் ஒரு விதத்தில் அங்கே அமைதியை நிறுவுவதற்குச் சாதகமாக இருந் தது. உண்மையில் கடந்த நூற்றாண்டுகளில் இருந்த நிலைமையை விட, இப்பொழுது அயர்லாந்தில் அமைதி நிலவுகின்றது. அவர்கள் நிறுவிய ஜில்லா போர்டுகளும், விவசாய வளர்ச்சிக்

கழகமும், அயர்லாந்து மக்களுடைய தேவைகளை நன்குணர்ந்து செயலாற்றின. இந்த விவசாய வளர்ச்சிக் கழகம் ஹொராஸ் பிளங்கட்டினுல் நிறுவப்பட்டது. டென்மார்க்கிலுள்ள பால் பண்ணைகளைப்போல, அயர்லாந்திலுங்கூட அவர் நிறுவ முயற்சி செய்தார். 1898-ல் இயற்றிய சட்டம், அயர்லாந்துக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட கவுன்டி, ஜில்லா கவுன்சில்களை நிறுவுவதற்கு வசதிகளை அளித்தது. 1885-ல் இயற்றிய ஆஷ்போர்ன் சட்டத் திலிருந்து 1903-ல் விண்டாம் நிலம் வாங்கும் சட்டம் வரை யிலும் அயர்லாந்திலுள்ள நிலப்பிரபுக்களிடமிருந்து விவசாயிகள் நிலம் வாங்கும் கொள்கை பின்பற்றப்பட்டது. கடைசியாக, ஆங்கிலேய அரசாங்கம் இப்படி நிலம் வாங்குவதற்காக 100 மில்லியன் பவுன்களைக் கடனுக அயர்லாந்து விவசாயிகளுக்கு அளித்திருக்கிறது. இதனுல், நிலத்தை உழுகின்றவர்களே நிலச் சொந்தக்காரர்களாகவும் ஆகும் வாய்ப்பு அளிக்கப்பட்டது. இவர்களுக்கு அளிக்கப்பட்ட இந்தக் கடனுதவியை, ஆண்டு தோறும் சிறு தவணைகளில் 68 வருடங்கள் வரையிலும் திருப்பித் தர வசதி செய்யப்பட்டது. 1909ஆவது ஆண்டுக்கு முன்பே ஏறக்குறைய கால்மில்லியன் விவசாயிகள் இந்த வசதி களைப் பெற்று அரசாங்கத்துடன் ஒப்பந்தம் செய்துகொண் டனர். இங்கிலாந்துடன் இணைந்திருந்த இந்தக் கடைசி ஆண்டு களில், அயர்லாந்து முற்றிலும் மாறுபட்ட அயர்லாந்தாக மாறிவிட்டது. அயர்லாந்திலிருந்து இப்பொழுது ஆண்டு ஒன்றுக்கு 150 மில்லியன் பவுன்கள் வரையிலும் ஏற்றுமதிகள் செய்யப்பட்டன. இதில் பெருமளவு வருமானம் பிரிட்டனுக்கே சென்றது.

இவ்வளவு சீர்திருத்தங்கள், அயர்லாந்தில் செழுமையை உண்டாக்கினுலும், இவற்ருல்மட்டும் ஐரிஷ் மக்கள் அவர் களுடைய சுய ஆட்சி இயக்கத்தை மறந்துவிடுவார்களோ என்ற ஐயம் இருந்தது. குறிப்பாக, சமய வேறுபாடுகளும் கல்வித் திட்டத்தில் உள்ள வேறுபாடுகளும் அதிகரித்தே வந்ததால், அவைகளுக்கு ஒரு முடிவு காண்பதென்பது அரிதாக இருந்தது. கிளாட்ஸ்டனுலும் பார்னெல்லாலும் இவற்றிற்கு முடிவு காணு கின்ற முயற்சியில் தோல்வியுற்றனர். அதைப்போலவே விண்டாமும் இதற்கு ஒரு முடிவு காணத் தவறிவிட்டார். அவரு டைய தோல்வி, மேலும் கசப்புணர்ச்சியையும் சந்தேகத்தையும் அதிகமாக்கிவிட்டது. உணர்ச்சி மிக்கவராகவும், அளவுகடந்த சக்தி மிக்கவராகவும் இருந்ததால், அவருடைய ஆட்சியுங்கூட முரட்டுத்தனமாகவே அமைந்திருந்தது. பல்ஃபோரின் பேச் சைக் கேட்காது, அவர் தமக்கு உதவி காரியதரிசியாக சர்

அந்தோனி மேக்டொனல் என்பவரை நியமித்தார். அவர் ஒரு ஐரிஷ் கத்தோலிக்கராவர். அயர்லாந்தில், டன்ரேவன் (Dunraven) என்பவரும், மற்ற மிதிவாதிகளும் தொடங்கியிருந்த ஒரு சீர்திருத்தக் கழகத்துடன் சர் அந்தோனி மேக்டொனல் தொடர் வைத்துக் கொண்டதால், அல்ஸ்டரில் உள்ளவர்களும் மற்றும் ஐக்கியத்தை விரும்புகிறவர்களும், அவருடைய காரியதரிசியையும் சந்தேகக் கண்கொண்டு பார்த்தனர். அந்தக் கழகத்தின் முக்கிய மான குறிக்கோள் என்னவெனில், அயர்லாந்திலுள்ள எல்லாத் தல அரசாங்கங்களையும் இணைத்துப் பாதியளவிலாவது தேர்ந் தெடுக்கப்பட்ட ஐரிஷ் அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு குழுவினரிடத்தில் அதன் நிர்வாகத்தை ஒப்படைப்பது என்பதே யாகும். இந்தக் குறிக்கோள் ஓரளவு தவருகப்படவில்லை யெனினும், ஐரிஷ் சுய ஆட்சி கோருகின்ற சில தலைவர்களுடன் இந்த இயக்கம் தொடர்புகொண்டிருந்ததால் இயற்கையாகவே மற்றவர்கள் இதனிடத்துச் சந்தேகமுற்றனர். 1905 மார்ச்சில் மக்கள் விண்டாமைக் கட்டாயப்படுத்தி ராஜிநாமா செய்ய வைத்தனர். இவருடைய ராஜிநாமாவினுல், பல்ஃபோருக்கு ஒரு நல்ல நண்பருடைய சேவை கிடைக்காமல் போய்விட்டது. அவர் கட்சித்தலைவராக இருந்தும், இவ்வாறு ராஜிநாமா செய்ய வேண்டிய நெருக்கடி உண்டானமை அவருடைய மனத்தை மிகவும் புண்படுத்திவிட்டது. ஐரிஷ் பாராளுமன்றக் கட்சியின ருக்கும் இவருடைய ராஜிநாமா மிகுந்த பரபரப்பை ஏற்படுத் தியது. அப்பொழுதுதான், ஜான் ரெட்மாண்ட் என்பவர் அக் கட்சியிலுள்ள பார்னெல் குழுவையும், பார்னெல் எதிர்ப்புக் குழுவையும் ஒன்ருக இணைத்தார். இதனுல், அந்தக் கட்சிக்கு எதிராக இருந்த ஐரிஷ்காரர்கள் இக் கட்சியைத் தாக்குவதற்கு நல்ல வாய்ப்பு கிடைத்தது. ஐக்கியவாதிகள் எடுத்துக்கொண்ட ஓரளவு முயற்சியாலும், பிளங்கட் (Plunkett) என்பவர் அந்தக் கட்சிக்கு அளித்த சுயமரியாதை உணர்விலுைம், புதிய ஐரிஷ் மறுமலர்ச்சி அங்கே தோன்றியதென்று கூறலாம். அயர்லாந்துக் கலகத்தின் நூற்ருண்டு விழா 1898-ல் விமரிசையாகக் கொண் டாடிய பிறகு, ‘கேலிக் லீக்’ என்ற சிறப்பு மிக்க ஐரிஷ் நாடக மன்றமும் ஸின் ஃபின் (Sinn Fein) இயக்கமும் ஆரம்பிக்கப் பட்டன. ஸின் ஃபின் என்ருல் ‘நாம்மட்டுமே’ என்று பொருள் படும். இந்தக் கழகங்கள் எல்லாம் 1905-ல் தோற்றுவிக்கப் பட்டன. ஆனுல், விண்டாமின் வீழ்ச்சி யூனியனிஸ்டுக் கட்சியில் மற்ருெரு பிளவையும் ஏற்படுத்தியது. அந்தப் பிளவு அக் கட்சி யின் அழிவுக்குக் காரணமாக இருந்தது.

டில்கைப் (Dilke) போன்று அவருடைய தோழரான சேம்பர்லேனும், அவருடைய தீவிரமான கொள்கைகளைப் பின்

பற்றிய காலத்திலுங்கூட, பிரைட்டின் (Bright) அமைதிக் கொள்கையையும், கிளாட்ஸ்டனின் பேரரசு வெறுப்பையும் ஒப்புக்கொண்டதில்லை. அக் காலத்திலிருந்தே, இடைவிடாது ஒரே கொள்கையைப் பின்பற்றி வருகிற இவர் ஒருபோதும் 'சுய ஆட்சி' (ஹோம் ரூல்) கொள்கையை ஒப்புக்கொண்டதே இல்லை. அவருடைய வியாபார அனுபவமும், சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்ததும் அவருடைய உணர்ச்சி இயல்பும் அவரை, ஸாலிஸ்பரி, பல்ஃபோர் ஆகியோரின் மனப்பாங்கிலிருந்து பிரித்துத் தனியே எடுத்துக்காட்டியது. அவருடைய மனம் எதிர்காலத்தை நோக்கியே திட்டமிட்டது. அவர் அரசியலை ஒரு சதுரங்க விளையாட்டைப்போலக் கருதினார். அவருக்கு முழு அதிகாரமும் கொடுக்கப்பட்டால், நமது நீடித்த 'தனித்து நிற்றல்' கொள்கையை ரத்து செய்திருப்பார். ஏனெனில், அகில உலகத்தில் பல நெருக்கடிகளும் அபாயங்களும் ஏற்படும்பொழுது, தனித்து நிற்றலால், நாம் அபாயத்தைத் தேடிக்கொள்ளுகின்றோம் என்று அவர் நினைத்தார். ஆனால், பேரரசில் உள்ள பகுதிகளிலுள்ள சக்திமிக்க பலத்தை நாம் இன்னும் அபிவிருத்தி செய்யாமல் இருந்தாலும், அவர்களுடைய உதவி நமக்குப் பலத்தை அளிக்கும் என்று அவர் உணர்ந்தார்.

வைர விழாவில், பேரரசின் பல பகுதிகளிலிருந்தும் போர் வீரர்கள் வந்து குவிந்தனர். தென் ஆஃப்பிரிக்கப் போரில் கலந்துகொள்ளப் போகும் படைகளும் இத் திருவிழாவில் கலந்து கொண்டன. உண்மையில் இவற்றைக் காண்பது உணர்ச்சியூட்டுவதாக இருந்தது. ஆனால், இரண்டு கலோனிய மாநாடுகள் 1897; 1902-ல் நடந்தன. அந்த மாநாடுகளில், அவருடைய பணி மிகவும் குறுகியதாக அமைக்கப்பட்டிருந்தது. அந்தக் குறுகிய வரையறையிலேதான் அவர் செயலாற்றவேண்டி இருந்தது. இத்தகைய மாநாடுகளையோ அல்லது பாராளுமன்றத்தையோ அவசரப்பட்டு நிறுவக்கூடாது. ஏனெனில், பேரரசின் பாதுகாப்பிற்குக் காலனிகள் அளித்த பங்கு மிகவும் குறைவாகவே இருந்தது. இன்னும், அந்தக் காலனி பிரதிநிதிகள், தங்கள் நாடுகளைப் பாதுகாத்துக்கொள்ளமுடியும் என்று தெளிவாகக் கூறினர். பேரரசு நாடுகளிடையே 'கட்டுப்பாடற்ற வாணிகம்' செய்யமுடியும் என்ற கனவை அவர் கனவாகவே கருத வேண்டியதாயிற்று. ஏனெனில், காலனிகளிடையே ஏற்படுத்தப் பட்ட காப்பு வரிகள் இன்னும் எடுபடுவதற்கான அறிகுறியே காணப்படவில்லை. கனடா, ஆங்கிலேயப் பொருள்களுக்குக் காப்பு வரிச் சலுகைகளை அளிப்பதாக முன்வந்தது. அப்படிக்

கனடா செய்வதால், அது ஜெர்மனியுடனும் பெல்ஜியமுடனும் செய்துகொண்ட வர்த்தக உடன்படிக்கைகளை ரத்து செய்தது. அதைப்போலவே, 1902-ல் நடந்த காலனிகள் மாநாட்டில், பிரிட்டனும் கனடியப் பொருள்களுக்குக் காப்பு வரிச் சலுகைகள் தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டது.

ஆனால், இந்தப் பிரச்சினையைக் கட்சி-அரசியல் கண்ணோட்டம் கொண்டு பார்க்க ஆரம்பித்தனர். கல்விச்சட்டம் கொண்டுவந்தே பல வாக்குகளை இழந்துவிட்டனர் என்பதைச் சேம்பர்லேன் நன்றாக உணர்ந்திருந்ததால், மற்றக் காலனிகளிலிருந்து வரும் பொருள்களுக்குத் தனிச் சலுகைகள் அளிக்கப்படுமா என்பதில் அவர் சந்தேகங்கொண்டிருந்தார். இருப்பினும், காலனிகளிடையே கட்டுப்பாடற்ற வாணிகத்தைக் கொண்டுவரவேண்டுமென்று அவர் வற்புறுத்திக் கூறிவந்தார். ஆனால், நிதி மந்திரியாக இருந்த ஹிக்ஸ் பீச் இந்தக் காலனி ஆலோசனையைப் புறக்கணித்துவிட்டார். அவர் ஓய்வு எடுத்துக் கொள்ளும் முன்பு, 'கறுப்பு மைக்கேல்' (Black Michael) வருவாய்க்காக, தானியப் பதிவுக் கட்டணம் வசூலிக்கும் முறையைப் புதுப்பித்தார். 1869-ல் அது கைவிடப்பட்டது. அதனால், மீண்டும் பாதுகாப்பு அளிப்பதைப்பற்றி ஆலோசனை செய்யப்பட்டது. நவம்பர் 1902-ல் சேம்பர்லேன் தென் ஆஃப்பிரிக்காவுச் செல்வதற்கு முன்பு, கேபினட்டில் இலேசாக, காலனிகளுக்குப் பாதுகாப்புச் சலுகைகள் அளிப்பதைப்பற்றிப் பேச்சு நடந்தது. பல்ஃபோரும், இந்தப் பிரச்சினையைச் சாதகமாகப் பரிசீலனை செய்வதாகக் கூறினார். ஆனால், 1903 மார்ச்சில் சேம்பர்லேன் திரும்பி வந்தபொழுது பீச்சுக்குப் பதிலாக வந்த நிதி மந்திரி ரிட்சி, தானியத் தீர்வையை ரத்து செய்துவிட்டார். மே மாதத்தில் அவர் பர்மிங்ஹாமில் பேரரசுப் பகுதிகளுக்குப் பாதுகாப்புச் சலுகைகள் தரப்படவேண்டுமென்றும், அந்நிய நாட்டுப் பொருள்களுக்குத் தீர்வை விதிக்கவேண்டுமென்றும் பிரசாரம் செய்தார்.

சேம்பர்லேன் நாட்டில் இல்லாதபொழுது, அவருடைய திட்டத்தைப் புறக்கணித்துவிட்டதால், அவர் வேறு முறையைப் பின்பற்றிப் பழிவாங்கத் திட்டமிட்டார். நேரடியாக மக்களிடம் முறையிட்டு மந்திரி சபையில் கொள்கை மாற்றத்தைக் கொண்டுவரவேண்டுமென்று விரும்பியது, மந்திரிகள்மீது துப்பாக்கியைக் காட்டி மிரட்டுவது போன்றிருந்தது. பல்ஃபோரின் முக்கிய கவனம், இப்பொழுது கட்சியை எப்படிப் பாதுகாப்பது என்பதைப்பற்றியதாக இருந்தது. ஏற்கெனவே, கத்தோலிக்க விடுதலைப் பிரச்சினையிலும், தானியச் சட்டங்களிலும் இவர்கள்

கருத்து வேற்றுமை கொள்ளவில்லையா என்று அவர் கேட்டார். இருப்பினும், அவர் கொள்கையளவில் காப்டெனிசத்தைவிட, சேம்பர்லேன் திட்டத்தையே ஆதரிக்க விரும்பினார். இந்தக் கொள்கை மாறுட்டத்தினுல்மட்டும், கன்சர்வேடிவ்களிடமும் லிபரல் யூனியனிஸ்டுகளுடனும் பிரிவு ஏற்பட்டுவிட்டதென்று கூறவும் முடியாது. ஏனெனில், கட்டுப்பாடற்ற வாணிகத்தை ஆதரிக்கின்றவர்களில் பலர், பழைய அரசியல்வாதிகளான டெவன்ஷயர், ஹிக்ஸ் பீச், கோஷன் போன்றவர்கள் இரு கட்சியிலும் உள்ளனர். செப்டம்பர் மாதத்தில், அவர் கட்டுப்பாடற்ற வாணிகத்தை ஆதரிக்கின்ற இரண்டு மந்திரிகளைப் பதவியிலிருந்து விலக்கினார். அவர்கள் ரிட்சி, பார்லேவைச்சார்ந்த பல்ஃபோர் என்ற இரண்டு மந்திரிகளாவர். தவிர, அவர் சேம்பர்லேனின் ராஜிநாமாவையும் ஏற்றுக்கொண்டார். அவருக்குப் பின்பு, இன்னும் ஜார்ஜ் ஹாமில்டன், டேவன்ஷயர் என்ற கட்டுப்பாடற்ற வாணிகத்தை ஆதரிக்கின்ற மந்திரிகளும் ராஜிநாமா செய்தனர். பொதுப்படையான பாதுகாப்புச் சலுகைகளும், உணவுப் பொருள்கள்மீது தீர்வை விதிப்பதையும் தான் அவர் புறக்கணித்தாரே தவிர, மற்ற வெளிநாடுகளிலிருந்து வருகின்ற பொருள்களுக்கும், அந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்ற பொருள்களுக்கும், காப்புத் தீர்வைகளை எப்படிப் போடுவதென்று பேரம் செய்து விதிப்பதென்று அவர் திட்டமிட்டிருந்தார். இக் கொள்கைக்கேற்ப கேபினட்டையும் மாற்றி அமைத்துக்கொண்டார். புதிய நிதி மந்திரியாக ஆஸ்டின் சேம்பர்லேனை நியமித்தார். அவருடைய தந்தையின் கொள்கைகளைப் புறக்கணிக்கமாட்டோம் என்ற உறுதிமொழியை அவருக்கு அளித்தே அப் பதவியில் கொண்டுவந்து வைத்தார்.

இன்னும் இரண்டு ஆண்டுகளுக்கு எந்தவிதமான முடிவுக்கும் வராமல், இந்தக் கட்சியினர் அரசியலிலேயே காலத்தைக் கழித்து விட்டார்கள். பொதுமக்களிடம் இதைப்பற்றிப் பிரசாரம் செய்தனர் என்றாலும், அவர்களும் நாளடைவில் துன்புறுத்தப்பட்டனர். கட்சியில் 'ஐக்கியம்' ஏற்படவேண்டுமென்பதற்காக பல்ஃபோர், காலதாமதம் செய்துகொண்டே வந்தார். ஒரு வகையில் லிபரல் கட்சிக்கு வெற்றியேற்பட்டு, ஐரோப்பியப் போருக்குத் தூபம் போட்டார்களென்றால், பொதுமக்கள்தான் அதிகத் தொல்லைகளுக்குள்ளாவார்கள் என்று கருதியுங்கூட அவர் இந்தப் பிரச்சினையில் ஒரு முடிவிற்கு வரக் காலதாமதம் செய்தார். சேம்பர்லேன், பர்மிங்ஹாமில் காப்புத் தீர்வை சீர்திருத்த இயக்கம் ஒன்றையே ஆரம்பித்து மக்களிடையே

பிரசாரம் செய்துவந்தார். இந்த பிரசாரத்திற்கு பர்மிங் ஹாம்தான் சரியான இடம் என்று அவர் கருதினர். வர்த்தகத்தில் ஏற்பட்ட பல நஷ்டங்களை எடுத்துக்காட்டி, பட்டு, இரும்பு, கம்பளி, பின்பு பருத்தி ஆகிய எல்லா வர்த்தகங்களும் ஒன்றன்பின் ஒன்ருக வீழ்ந்துவிடும் என்று புள்ளிவிவரங்களுடன் எடுத்துக் கூறி எச்சரிக்கை செய்தார். அவருடைய பிரசாரத்திற்கு உதவியாக, 1903-4-ல் வேலையில்லாத் திண்டாட்டம் வேறு மிகுந்திருந்தது. ஆனுல், 1905-ல் வர்த்தகம் அதிகமாகத்தான் நடந்திருக்கிறது. அதனுல் பேரரசு நாடுகளுக்குக் காப்புத்தீர்வைச் சலுகைகள் அளிக்கவேண்டுமென்று கூறப்பட்ட காரணங்களும், உணவுப் பொருள்களுக்கு அதிகத் தீர்வை விதிக்கவேண்டுமென்பதற்குச் சொன்ன காரணங்களும் இப்பொழுது வலுவிழந்து விட்டன. அரசாங்கம் உணவுப் பொருள்களுக்கு வரிவிதிக்க வேண்டுமென்று கூறுவதையும் மக்கள் கேட்க மறுத்துவிட்டனர். இதனுல், படிப்படியாக அவருடைய இயக்கத்தினர் ஆங்கிலேயத் தொழில்களுக்குமட்டுமே பாதுகாப்புச் சலுகைகள் தரவேண்டுமெனத் தங்களுடைய கோரிக்கைகளைக் குறைத்துக்கொண்டனர். யூனியனிஸ்டுக் கட்சியில் சேர்ந்த கட்டுப்பாடற்ற வாணிகம் தேவையென்று சொல்லுகின்றவர்கள் தொகை இப்பொழுது கணிசமாகக் குறைந்துவிட்டது. அவர்களில், ஹியுக்செசில் (Hugh Cecil), வின்ஸ்டன் சர்ச்சில் போன்ற முன்னணிக்கு வருகின்றவர்கள் முக்கியமானவர்களாவர். ஆனுல், அவர்களிடையேயும், திட்டத்தை அமல் நடத்தும் முறையில் பல வேறுபாடுகள் இருந்தன. சர்ச்சிலைப் போன்றவர்கள், வர்த்தகத்தில் பெரிய சரிவு ஏற்படப்போகிறதென்று எச்சரிக்கை செய்தாலும், மற்றவர்கள் இந்தப் பிரச்சினையில் காலதாமதம் செய்தாலும் கவலையில்லை; எப்படியும் லிபரல்கள் பதவிக்கு வந்தார்களென்றுல் இந்தக் கட்டுப்பாடற்ற வாணிகம் ஏற்படாமல் விளைகின்ற நஷ்டத்தைவிட, லிபரல்களுடைய வெற்றியால் ஏற்படுகின்ற நஷ்டங்கள் அதிகமாக இருக்குமென்று நம்பினர். அவர்கள் தீவிர சீர்திருத்தங்களையும், ஐரிஷ் சுய ஆட்சித் திட்டத்தையும் அமல் நடத்த முயற்சி செய்வர் என்று பயந்தனர். அந்த அளவில், கேம்ப்பெல்-பானர்மென், யூனியனிஸ்டுக் கட்டுப்பாடற்ற வர்த்தக விரும்பிகளுடன் பல சலுகைகளை அளித்தாவதும் ஒன்றுசேர முயற்சி செய்வதாக அறிவித்தார்.

இரு புறங்களிலிருந்து வருகின்ற கவர்ச்சியான வாய்ப்புகளால், யூனியனிஸ்டுகளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை இந்தியாவில் இராணுவச் சீர்திருத்தங்கள் செய்வதைப்பற்றியும். வைசிராயின் அதிகாரங்களைப்பற்றியும் ஏற்பட்ட கர்ஸன்–,

கிட்சனர் (Curzon-Kitchener) தகராறில், பல்ஃபோர் தனது கவனத்தைச் செலுத்தியிருந்தார். இதைத் தவிர, இவரும் லேண்ட்ஸோனும் ஜப்பானியர்களுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர்; மேலும், ஜெர்மனியுடன் உறவு முறிந்து, ஃபிரென்சுடன் ஒரு நேச ஒப்பந்தத்தையும் செய்துகொண்டார். 1905 ஜனவரியில் அவருடைய திட்டம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. அவருடைய திட்டத்தின்படி, ஆங்கிலேயப் பொருள் களுக்கு அதிகமாக வரி விதிக்கும் நாடுகளிலிருந்து வருகின்ற பொருள்களுக்கும் அவ்விதமாகவே வரி விதிப்பதென்றும், விலை இறக்கத்தை ஏற்படுத்துவதற்காகப் பொருள்களை ஒரே இடத்தில் குவிப்பது கூடாதென்றும், தேர்தல் தீர்ந்தவுடன், காலனிகள் எல்லாம் கலந்துகொள்ளும் ஒரு மாநாட்டைக் கூட்டி, அதில், வர்த்தகத்தில் எல்லாக் காலனிகளும் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக்கொள்ளும் சாத்தியக்கூறுகளைக் கவனிப்பதென்றும், அவருடைய முக்கியமான கொள்கைகளாகும். ஆனால், சேம்பர் லேன் பொறுமையை இழந்துவிட்டார். ஏனெனில், ஆங்கி லேயத் தேர்தல்கள் தீர்ந்தபின்பே, காலனிகள் மாநாடு கூட்டுவ தென்பது, மேலும் காலம் கடத்தும் திட்டமாகும் என்று அவர் கருதினார். நவம்பரில் அவர் பொதுக் காப்பு வரித் திட்டத்தைத் தேர்தல் அடிப்படைப் பிரச்சினையாக வைத்து, கட்சியின் செல் வாக்கைப் பெற்றுவிட்டார். ஆனால், காலம் மிகவும் கடந்து விட்டது.

இதனால், மந்திரி சபை மாற்றி அமைக்கப்பட்டது. கட்சிக் குள்ளேயே நிறையப் பிளவுகள் ஏற்பட்டன. கல்வித் திட்டம், அனுமதி வழங்குதல், உணவுப் பொருள்கள் பற்றுக்குறை ஏற்படுமோ என்ற பயம் முதலியவற்றோடு மற்றப் பிரச்சினை களிலும் கருத்து வேறுபாடுகள் தோன்றின. சமீபத்தில் நிகழ்ந்த போரில், மந்திரிகள் அந்தப் பிரச்சினையைச் சரியாகக் கவனித்து நடத்தவில்லை என்ற குற்றச்சாட்டுகள் கிளம்பின. பல கமிஷன் அறிக்கைகள் மேலும் மந்திரிகளின் திறமையின்மையை அம்பலப் படுத்தின. அதனால், இப் போருக்குப் பிறகு, லிபரல்களுடைய கை சிறிது வலிவுற்றது. இந்த வலிமையைப் பயன்படுத்திச் 'சீனர்களை அடிமைகளாக்கிவிட்டனர்' என்ற கூக்குரலில் இவர் களும் சேர்ந்து கூச்சலிட்டனர். இதற்கு என்ன காரணமெனில், ராண்ட் சுரங்கங்களில் வேலை செய்வதற்கு அங்கேயுள்ள சுதேசிக் கூலிகள் முன்வரவில்லையாதலால், பொருளாதார நெருக்கடி ஏற்படுவதை முக்கியமாகக் கருதிச் சீனுவிலிருந்து கூலிகளை வரவழைத்து வேலைக்கு அமர்த்திக்கொண்டனர். உண்மையில், சேம்பர்லேன் இந்தத் திட்டத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்.

ஆனுல், அவருக்குப் பின்பு பதவியில் அமர்ந்த ஆல்ஃபிரட் லிட்டல்டன் என்பவர் சீனக் கூலிகளை அமர்த்துவதை ஏற்றுக்கொண்டார். இதையொட்டி 1904-ல் டிரான்ஸ்வால் சட்டசபையில் ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஆனுல், ரேண்ட் சுரங்க அதிபர்கள், ஆங்கிலேய மக்களுடைய உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ளவில்லை. இந்தச் சுரங்கங்களில் வேலைசெய்கின்ற சீனக் கூலிகளின் எண்ணிக்கை சற்றேறக் குறைய 50,000 பேர் இருக்கும். இவர்கள் எல்லாம் ஒரே வேலையைச் செய்ய மூன்று ஆண்டுக்கால ஒப்பந்தம் எழுதிக் கொடுத்துவிட்டு வேலைக்குச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய வேலை முடிந்தவுடன், திறந்தவெளியில் மதிற்சுவர்களுக்குள் வசித்து வந்தனர். இவர்களை நடத்தியவிதத்தைப் பார்த்தால், மற்றக் காலனிகளில் அடிமைகளைப் பயன்படுத்துவதைப்போல இருந்த காரணத்தால், இந்த நிகழ்ச்சியை மிகைப்படுத்திக் கூற ஆரம்பித்தனர். இதைக் கேட்டு ஆங்கிலேயத் தொழிலாளர்கள் மிகவும் வருந்தினர். அவர்கள் படுகின்ற துன்பங்களும் இத்துடன் சேர்ந்துகொண்டன.

வர்த்தகம் நல்ல செழிப்பான நிலையை அடைந்திருந்தாலும் தொழிலாளர்களின் கூலிகள் தேக்கநிலையில்தான் இருந்தன. விவசாயக் கூலிகளுங்கூட மிகவும் குறைவாகவே இருந்தன. வீடு கட்டுதலும் மிகவும் குறைந்தே இருந்தது. மக்கள் கூட்டம் ஒரே இடத்தில் பெருகி வருவதை அவர்கள் தடுக்கவில்லை. 1900-ல் சுதந்திரத் தொழிலாளர் கட்சியிலிருந்து இரண்டு அங்கத்தினர்கள்மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1901-ல் வழங்கப்பெற்ற இரண்டு நீதிபதிகளின் முடிவுகள் தொழிற் சங்க வளர்ச்சியைப் பாதிக்குமளவில் இருந்தன. வேலை நிறுத்தங்கள் செய்வதனுல் நட்டங்கள் ஏற்படும்பொழுது தொழிற் சங்கங்கள் மீது வழக்குத் தொடரலாம் என்று அந்த நீதிபதிகளின் முடிவு எடுத்துக்காட்டின. மேலும், வேலைக்குப் போகின்றவர்களைத் தடுத்து நிறுத்துவதும் மிரட்டுதலுக்கு ஒப்பாகும் என்று கூறினர். 1900ஆவது ஆண்டிலிருந்து தொழிலாளர் கட்சியிலும் நிறைய அங்கத்தினர்கள் வந்து சேர்ந்தவண்ணமிருந்தனர். சில இடைத் தேர்தல்களிலும் தொழிலாளரின் கட்சியைச் சார்ந்தவர்கள் வெற்றி பெற்றனர். நீதி வழங்கும் சில அதிகாரங்களைப் பிரபுக்கள் சபை பெற்றிருந்ததால், அதனைப் பயன்படுத்தி அரசியல் முடிவுகளைக் காணும் முறையை எதிர்க்கும் வகையில் தொழிலாளர்களும் தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டனர்.

டிசம்பர் 1905-ல் சேம்பர்லேன் வெளிப்படையாகவே பல்ஃபோரின் கொள்கைகளைத் தாக்க ஆரம்பித்துவிட்டதாலும்,

சுய ஆட்சிக் கொள்கையில் லிபரல்களிடையே பிளவு ஏற்படும் என்ற சந்தேகம் ஏற்பட்டதாலும், பல்ஃபோர் (Balfour) கடைசியாக ராஜிநாமா செய்தார். அவருடைய வீழ்ச்சியிலிருந்து இன்னும் பல விளைவுகள் ஏற்பட்டன. 1906 ஜனவரியில் நடந்த பொதுத் தேர்தல்களில், 157 யூனியனிஸ்டுகள்மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டனர். பல்ஃபோரும், மற்றும் பல மந்திரிகளும் தோல்வியுற்றனர். 377 லிபரல்களும், 83 ஐரிஷ் தேசியவாதிகளும், 53 தொழிலாளர் கட்சியினரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இனி மேல்தான், கிளாட்ஸ்டனின் லிபரலிசம் பேரரசுவாதிகளையா அல்லது ஜனநாயகவாதிகளையா கவரப்போகிறதென்பதைப் பார்க்கவேண்டும்.

## சமகால நிகழ்ச்சிகள்

1893 சையாம்மீது ஃபிரெஞ்சுத் தாக்குதல்.

மேட்டாபெலே ஆட்சி முடிவும் லாபெங்குலாவின் மரணமும்.

செய்கோவ்ஸ்கி (Tschaikovsky) எழுதிய 'பேத்தடிக் சிம்பனி' ('Pathetic Symphony).

1894 டிரேஃபஸ் (Dreyfus) என்பவர் முதல் தடவையாகக் கைது செய்யப்பட்டார்.

ஹோஹன்லோஹி (Hohenlohe) ஜெர்மன் பேரரசின் சான்சலராக நியமிக்கப்பட்டார்.

ஜப்பான், கொரியா வழியாகச் சீனவைத் தாக்கியது.

ஃப்ருட் (Freude), பேட்டர் (Pater), ஆர். எல். ஸ்டீவன்சன் (R. L. Stevenson) ஆகியோரின் மரணம்.

—1917. ஜார் இரண்டாவது நிக்கோலஸின் ஆட்சி (Reign of Czar Nicholas II).

1895 தூரக் கிழக்கில் ஷிமனோஸக்கி உடன்படிக்கை (Shimonoseki) ஏற்படல்.

ஆர்மீனியப் படுகொலைகள்.

சித்தரால் முற்றுகை (Siege of Chitral).

தந்தியில்லாச் செய்தி அனுப்பும் முறையை மார்க்கோனி கண்டு பிடித்தல்.

ஹக்ஸ்லி (Huxley), பேஸ்சர் (Pasteur) ஆகியோரின் மரணம்.

1896 கிரீட்டில் புரட்சி.

அடோவாவில் இத்தாலியர் தோற்றுப்போதல்.

'டெய்லி மெயில்' செய்தித்தாள் தொடங்கப் பெற்றமை.

1897 துருக்கிக்கும் கிரீசுக்கும் போர்.

போர்ட் ஆர்த்தரை ரஷ்யா கைப்பற்றல்.

அமெரிக்க-ஐக்கிய நாடுகள் ஹவாயைக் கைப்பற்றல்.

1898 அமெரிக்க-ஸ்பானியப் போர்.

டெல்கேஸி (Delcasse) ஃபிரான்சின் வெளிநாட்டு மந்திரியாதல்.

முதல் ஜெர்மன் கடற்படை மசோதா.

ரேடியத்தைக் கியூரி தம்பதிகள் கண்டுபிடித்தல்.

செப்ளின் (Zeppelin) விமானத்தைக் கண்டுபிடித்தல்.

1899 டிரேஃபஸ் (Dreyfus) மீது இரண்டாவது வழக்குத் தொடரல்.

ஹேக் நகரில் சமாதான மாநாடு கூடல்.

1900 ஜெர்மனியில் பூலோ (Bulow) என்பவர் சான்சலராகப் பதவி ஏற்றல்.

சீனுவில் பாக்ஸார் கலகம்.

1901 விக்டோரியா அரசியாரின் மரணம்.

மேக்கன்லி கொலைக்குப் பிறகு, தியோடார் ரூஸ்வெல்ட் ஜனுதிபதியாதல்.

ஈட்ஸ் (Yeats) எழுதிய கவிதைகள் (Poems).

1902 வெரீநிகிங் (Vereeniging) சமாதானம்.

ஆங்கிலோ-ஜப்பானிய உடன்படிக்கை.

ஆக்டன், ரோட்ஸ் ஆகியோரின் மரணம்.

1903 ஸெர்பியா அரசர் அலெக்சாந்தர் கொல்லப்பட்டார்.

அலாஸ்கா எல்லையில் சமரச உடன்படிக்கை.

ரைட் சகோதரர்கள் விமானத்தில் பறத்தல்.

1904 ருஷோ-ஜப்பானியப் போர்.
ஹார்டி எழுதிய 'டைனஸ்ட்ஸ்' (Dynasts).

1905 டெல்கேஸியின் ராஜிநாமா.
நார்வே, ஃவீடன் பிரிதல்.
போர்ட்ஸ்மவுத் உடன்படிக்கை.
திருச்சபையும் அரசும் ஃபிரான்சில் பிரிக்கப்படல்.
ஸின் ஃபின் (Sinn Fein) இயக்கம் தோன்றல்.
எச். ஜி. வெல்ஸ் எழுதிய 'கிப்ஸ்' (Kipps).

# 12. தென் ஆஃப்பிரிக்கப் போர், 1884-1914

போரின் விளைவுகளைப் பல வகைகளில் மதிப்பிடலாம். இந்தத் தென் ஆஃப்பிரிக்கப் போர் மூன்று ஆண்டுகள் 1899–1902 வரை நடந்தது. இதனால் பிரிட்டனுக்கு 200 மில்லியன் பவுன்கள் செலவாயின. 20,000 பேர்கள் பலியாயினர். ஆனால், இந்தப் போரின் துவக்கமும் விளைவும், இந்தச் சேதங்களைவிட மிக ஆழமாகப் பதிந்தன. ஏனெனில், பிரிட்டனுடைய பேரரசு இந்தப் போரின் அடிப்படையில் வைத்துத்தான் மதிப்பிடப் பட்டது. சில வகைகளில், பேரரசு நிர்வாகம் குறைபாடுள்ள தாகவும் தோன்றியது. அதனால், அதன் நிர்வாகத்தை மாற்றி அமைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால், பிரிட்டனுக் குள்ளேயே, கொள்கைச் சமநிலையில் சில மாறுபாடுகள் விளைவித்த தல்லாமல், மேலும், உலகப் போருக்கும் பல காரணங்களில் ஒன்றாக அது அமைந்தது.

இதற்கு முன்பு, தென் ஆஃப்பிரிக்காவில் ஒருமைப்பாடு ஏற்படுத்த வேண்டுமென்ற முயற்சி இருந்ததைக் கண்டோம். நாட்டு மக்களுடைய பிரச்சினைகளும், அங்குக் குடியேறிய இரண்டு ஐரோப்பிய இனங்களிடையே ஏற்பட்ட தகராறுகளைச் சமரசமாக முடித்துக்கொள்ளவேண்டுமென்ற ஆர்வமும் படிப் படியாகக் குறைந்துவிட்டன. அதற்குப் பதிலாக, ஐரோப்பிய இனங்களிலேயே, ஆறு வகையாக சிறு வகுப்பினராகப் பிரிந்து சென்று அங்குள்ள நிலப்பகுதிகளை ஆதிக்கம் செய்யவேண்டு மென்ற ஆர்வங்கொண்டிருந்தனர். அவர்களுக்கிடையே நெடுந் தூரமும் கடற்கரையிலிருந்து பிரிக்கப்பட்டும் இருந்ததால் அவர்களிடையே தொடர்பு ஏற்படமுடியவில்லை. ஆனால், முதல் பிரச்சினையின் தொடக்கம் ஆரம்பமானது. பெச்சுவானாலாந்து, பசுட்டோலாந்து (1884–5), ஜுலு இராச்சியத்திலிருந்து எஞ்சிய பகுதியான நேட்டால் பகுதியை 1887-ல் கேப் காலனி யுடன் இணைத்தும், அத்துடன் நேட்டாலுக்கும் கேய் (Kei) நதிக்கும் இடையேயுள்ள சுதேச மக்களையும் அதில் சேர்த்துக்

கொண்டதால், ஒரு காலனியில் சுதேசிகளின் போர் நிகழும் பொழுது, மற்றொரு காலனி இப் போரில் ஈடுபடாது செய்து விட்டனர். ஆனால், பத்தாண்டுக்கு ஒரு முறையாவது, இரண்டாவது பிரச்சினை அதிக ஆபத்தை ஏற்படுத்தியது.

1881, 1884ஆவது ஆண்டுகளில் கிளாட்ஸ்டன் ஆட்சிக் காலத்திலேயே டிரான்ஸ்வாலுடன் ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்துகொள்ள ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்பட்டன. அந்த ஏற்பாட்டின்படி, போயர்களின் விருப்பத்தை ஏற்றுத் தென் ஆஃப்பிரிக்கக் குடியரசு என்ற பெயரில் ஒரு குடியரசை நிறுவினர். அதனால், சுதேசி மக்களுடைய பிரச்சினையில் நாம் தலையிடுவது முடியாமற் போய்விட்டது. அத்துடன் அந்தக் குடியரசின்மீது மேலான ஆதிக்கம் செலுத்துவதும் இயலாதுபோயிற்று. ஆனால், டிரான்ஸ்வாலின் எல்லைகள் வரையறுக்கப்பட்டன. 'ஆரஞ்சு ஃபிரீ ஸ்டேட்' (Orange Free State) என்ற நாட்டுடன்மட்டும் ஒப்பந்தம் செய்துகொள்ளலாமே தவிர, ஆங்கிலேயரின் அனுமதியின்றி மற்ற நாடுகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளக் கூடாதென்றும், அல்லது கிழக்கு, மேற்குப் பகுதிகளிலுள்ள சுதேசி மக்களுடனும் அவர்கள் ஒப்பந்தம் செய்துகொள்ளக் கூடாதென்றும் கட்டுப்படுத்தப்பட்டனர். மேலும், ஆங்கிலேயப் பொருள்களுக்குப் பாதகம் விளைவிக்கக்கூடிய அளவில் காப்புத் தீர்வைகளை விதிக்கக்கூடாதென்றும் உறுதிமொழி வாங்கினர். ஐரோப்பியர்களுடைய வாக்குரிமையைப்பற்றி பிரிட்டன் அதிகமாக வற்புறுத்தவில்லையெனினும், இரண்டு ஒப்பந்தங்களிலும், அவர்களுடைய உரிமைகளும் பாதுகாக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டன. அதேசமயத்தில் சமமாக எல்லா ஐரோப்பியர்களுக்கும் வரி விதிப்பும் போடுவதாக அறிவித்தன. திட்டவட்டமாக இவைகளைப்பற்றிக் கூறியிருந்தபோதிலுங்கூட மஜுபா நிகழ்ச்சிக்குப் பிறகு சூழ்நிலையே மாறிவிட்டது.

பெரும் பயணத்திற்குப் பிறகும், டச்சுக்காரர்களின் இனவெறி மறையாமல் இருந்தது; இணைப்பிற்குப் பிறகு இன்னும் அதிகமாகிவிட்டது. 1879-ல் அவர்கள் ஆஃப்பிரிக்கண்டர் பிணைப்பு என்ற நிறுவனத்தைத் தோற்றுவித்தார்கள். இந்தக் கழகம், அவர்களுடைய பண்பாட்டையும், மொழியையும், இலக்கியத்தையும் பாதுகாக்க ஏற்பட்ட ஒரு நிறுவனமாகும். ஒருவகையில் அது பொருளாதார வளர்ச்சியையும் அபிவிருத்தி செய்ய முயன்றது. ஆனால், மஜுபா நிகழ்ச்சிக்குப் பிறகு, இக் கழகத்தில் அரசியல் முக்கியத்துவமே அதிகம் கொடுக்கப்பட்டது. ஏற்கெனவே, அவர்களுக்கு ஆங்கிலேயரின் ஆதிக்கத்தைக் கண்டு பொறாமை ஏற்பட்டது. மேலும், வைரச் சுரங்கங்களும் ஆங்கி

லேயரின் கைகளுக்கு மாறிவிட்டதையும், கேப் காலனியிலும் போயர் குடியரசுகளிலும் ஆங்கிலேயரின் செல்வாக்குப் பெருகி வருவதையும் அவர்கள் எதிர்த்தனர். இப்பொழுது சிவப்புக் கோடுகளை அணிந்த படையினரைத் தோற்கடித்ததில் பெருமை கொண்டனர். கேப் காலனியில் உள்ள தலைவர்கள், ஆங்கிலே யரைப் போலவே, தென் ஆஃப்பிரிக்கா ஒன்ருக இணையவேண்டு மென்ற கொள்கையை உடையவராக இருந்தனர். அதே சமயத்தில் ஆங்கிலேயர்களின் தொடர்பு அவர்களுக்கு இன்றி யமையாத தேவையாகத் தோன்றியது. எப்படியும் இந்த இரண்டு இனங்களும் ஒன்ருக வாழவேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். போற்றத்தக்க பிரதம நீதிபதியாக இருந்த டி வில்லியர்ஸ் (De Villiers), ஒரே உயர் நீதிமன்றமும் ஒரே சட்டமும் வேண்டுமென்று விரும்பினுர். ஜேன் ஹாஃப்மேர் (Jan Hofmeyr), டிரான்ஸ்வால் மக்களின் குறுகிய இனவெறி அழிவைத் தேடித்தரும் என்பதை உணர்ந்திருந்தார். அதனுல், கேப் காலனியிலிருந்து தென் ஆஃப்பிரிக்கா முழுவதும் ஒரே நாடாகவும், அந்த நாட்டில் தென் ஆஃப்பிரிக்கர்கள் வாழ வேண்டுமென்றும், கூட்டாட்சி முறையில் ஆங்கிலேயர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்வதற்கு ஆஃப்பிரிக்கண்டர் பிணைப்புக் கழகம் முயற்சி செய்யவேண்டுமென்றும் கூறினுர். அதேசமயத்தில் ஆங்கிலேய அரசாங்கத்தின் தலையீடு, இந்தத் தென் ஆஃப்பிரிக் காவில் இருக்கக் கூடாதென்றும் அவர் வலியுறுத்தினுர்.

இனவெறியை ஒழிப்பதற்கு உண்மையில் அங்குள்ள பல இனத் தலைவர்கள் போட்டிபோட்டுக்கொண்டு முன்னுக்கு வந்தனர். ஆனுல், இனவெறி ஒழியுமா என்பது ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட்டைப் பொறுத்திருந்தது. அந்த நாட்டின் ஜனுதிபதி யாக அப்பொழுது 1864–88-ல் இருந்தவர் பிராண்ட் (Brand) என்பவராவர். அவர் மிதமான கொள்கைகளை உடைய கேப் ஆஃப்பிரிக்கண்டராவார். கேப் துறைமுகத்தின் உதவியைப் பெறுவதால் அவர் பகுதியின் பொருளாதாரச் செழுமை உயரும். அதனுல், பொதுவான கலால் வரிகளும் பொதுவான ரயில்வே யையும் வைத்துக்கொண்டால், அவர்களிடையே உள்ள சிறு சிறு சண்டைகளும் ஒழிந்து நாளடைவில் தென் ஆஃப்பிரிக்கா முழு வதும் ஒரு நாடாகும் வாய்ப்பு ஏற்படும் என்பதை அவர் உணர்ந் திருந்தார். ஆனுல், கேப்பில் உள்ள மக்கள் இந்தக் கலால் வரிகளை விட்டுக்கொடுக்கவே மாட்டார்கள். மிகவும் ஆர்வத்துடன் அவர்களுடைய உரிமைகளைப் போற்றிவந்தனர். நேட்டால் பகுதியிலும் குறுகிய மனப்பான்மை மிகுந்திருந்தது. மற்றப் பகுதிகளில் இதைவிட இன்னும் அதிகமாக இருந்தது. அந்தப்

பகுதிகளில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற இரண்டு தலைவர்களான குருகர் (Kruger), செசில் ரோட்ஸ் (Cecil Rhodes) ஆகியவர்களுடைய செல்வாக்கைப் பொறுத்துத்தான், அந்த மக்களின் எதிர்காலமும் அமைந்திருந்தது. இந்த இரண்டு பேர்களுள், ஆங்கிலேய, டச்சு ஆகிய இரண்டு இனங்களின் நடுநிலை மக்களின் ஆர்வத்தை, யார் பெறுகின்றனரோ அவரிடம்தான் மக்களின் எதிர்காலம் அடங்கியிருந்தது என்று சொல்லலாம்.

டிரான்ஸ்வாலின் பழைய வரலாறும், அதனுடைய எல்லைப் புறச் சூழ்நிலையும், கால்வினிஸ்டு சமயக் கோட்பாடும் அங்கே பெருத்த இனவெறியை ஏற்படுத்துவதற்குக் காரணங்களாக இருந்தன. டிரான்ஸ்வாலின் ஜனாதிபதியாக இருந்த குருகர் (Kruger) 1883-லிருந்து தொடர்ச்சியாக 1902 வரையிலும் ஜனாதிபதியாக இருந்திருக்கிறார். அந்த இனவெறி இயக்கத்திற்கு அவர் மிகவும் முக்கியமானவர். அந்த நாட்டு மக்களின் வீரத்திற்கும், பழைய ஏற்பாடு காலத்திலிருந்தே அவர்கள் தனிப்பட்ட மக்கள் என்ற கருத்திற்கும், அவர்களுடைய சுதந்திர ஆர்வத்திற்கும், அவர்களுடைய கடுமையான உழைப்புக்கும் அவர் மிக்க பலம் பொருந்திய பிரதிநிதியாகக் கருதப்பட்டார். அவர் ஆங்கிலேயரின் தலையீட்டிலிருந்து விலகியும், இந்தக் காலனிகளின் ஒப்பந்தங்களைப் புறக்கணித்தும், சுதந்திரமான ஒரு நாட்டை ஏற்படுத்தவேண்டுமென்று விரும்பினார். தவிர, அவர்களுடைய நாட்டிற்குத் துறைமுகமே கிழக்குக்கரையில் இல்லாததால், டெலகோவா விரிகுடாவோ (Delagoa Bay) அல்லது எந்தத் துறைமுகத்தையோ பெறவேண்டுமென்று அவர் முயற்சி செய்தார். பிரிட்டனுடைய ஆதிக்கத்திற்குள் இல்லாதிருந்தால், வேறு நாடுகளுடன் சுதந்திரமாகத் தொடர்பு வைத்துக்கொள்ளலாம் என்று கருதினார். மேலும், அவருடைய விவசாயிகளுக்கு நிறைய நிலம் வேண்டுமென்றும், அப்படி அவர்களுக்கு நிலம் அளித்தால்தான், அவர்களுடைய பண்பாட்டை இழக்காமலும், அதனால், நிலப் பிரபுக்களுக்கு நிறைய அதிகாரம் ஒதுக்கவேண்டுமென்றும் அவர் விரும்பினார். கிராமத்து மக்களுக்கு நிறைய செல்வாக்கை அவர் பெற்றுக் கொடுத்ததால், ஹாஃப்மேர் போன்ற முன்னேற்றவாதிகளை மிகவும் பலவீனமானவர்களாக்கிவிட்டார்.

ஒவ்வொரு கட்டத்திலும் ஆங்கிலேயர் குறுக்கிடுவது அவருக்குத் தெரிந்தது. மேற்கிலும், தென்கிழக்கிலும் முன்னேற முடியாதபடி, பெச்சுவானாலாந்தும், பசுட்டோலாந்தும் வழி அடைத்துக்கொண்டிருந்தன. மேட்டாபெலே பகுதிகளை அளித்துவிட்டதனால் வடக்கே முன்னேற முடியவில்லை. ஆங்கிலேயர்கள்

செயின்ட் லூசியா விரிகுடாவைக் கைப்பற்றிக்கொண்டதால் அவர்கள் ஒரு நல்ல துறைமுகத்தை இழந்துவிட்டனர். ஆனால், 1886-ல் அவருடைய எண்ணமெல்லாம் ஒரே நொடியில் மாறி விட்டது. தென் ஆஃப்பிரிக்க வரலாறும் மாறிவிட்டது. ஏனெனில் மிக வறுமைமிக்க அந்த நாட்டில் திடீரென்று தங்கம் கண்டு பிடிக்கப்பட்டதுதான் இதற்குக் காரணமாகும். அதுமட்டு மன்றி ரேண்டில் கண்டுபிடிக்கப்பட்ட ஏராளமான தங்கம், தென் ஆஃப்பிரிக்காவில் உள்ள வறுமைமிக்க நாட்டைச் செல்வம் கொழிக்கும் நாடாக மாற்றிவிட்டது. அந்த நாட்டிற்குத் தனித் தன்மையும், ஆனால், பலதரப்பட்ட மக்கள் வசிக்கின்ற வாய்ப்பும் ஏற்பட்டது. குருகரின் செல்வாக்கும் அவருடைய ஆட்சி முறை யும் இப்பொழுது மாறிவிட்டது; அவருக்கிருந்த அபாயங்களும் நீங்கிவிட்டன. அவர் இப்பொழுது, கலால் வரித் தீர்வைக்காகப் பொது யூனியன் ஏற்படுத்துவதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று அவர் சொல்லி விட்டார். மேலும், ஹாஃப்மேர் வற்புறுத்திவந்த கேப் காலனி யுடன் ஒரு சமரச ஏற்பாட்டிற்கு வரவேண்டுமென்ற திட்டத் தையும் அவர் ஏற்க மறுத்துவிட்டார். அவர் டெலகோவா விரிகுடா வரையிலும் ரயில்வே பாதையைப் போடத் திட்ட மிட்டார். 1889-ல் 'ஆரஞ்சு பிரீஃ ஸ்டேட்'டுடன் ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்துகொண்டார். அப்பொழுது அந்த நாட்டின் தலைவராக இருந்தவர், பிராண்டுக்குப் பின்பு வந்த ரெயிட்ஸ் என்பவராகும். இவருடன், பொருளாதார, ராணுவத் துறைகளில் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக்கொண்டார். அதனால், பிரிட்டனுடன் மோதல் ஏற்படக்கூடிய வாய்ப்புகள் இப்பொழுது இரட்டிப்பு மடங்கு அதிகமாயின. இந்த மோதல் ஏற்படுவதென்பது, மற்றொரு மனிதனை செசில் ரோட்ஸ் (Cecil Rhodes) என்பவரைப்பொறுத்தும் இருந்தது. அவர் ஹெர்ட்ஃபோர்ட்ஷயர் பாதிரியின் மகனாவார்.

இவர், 1870-ல் நேட்டாலுக்குச் சிறுவயதிலேயே இளைத்துத் துரும்பாக வந்தார். பருத்தி வயல்களில் வேலைசெய்து கொண்டிருந்தவர், பின்பு, கிம்பர்லி வைரச் சுரங்கத்தில் வேலைக்குச் சேர்ந்தார். அடிக்கடி ஆக்ஸ்ஃபோர்ட் பல்கலைக் கழகத்திற்குச் சென்று, பட்டப்படிப்பையும் 1881-ல் முடித்தார். பின்பு, கேப் அரசியலில் அவர் நுழைந்தார். அவர் எந்தத் துறையில் நுழைந் தாலும், பெரிய எண்ணங்களையும், பரந்த மனப்பான்மையை யுமே கொண்டிருந்தார். கிப்பனும், டார்வினும் எழுதிய நூல்களை ஆக்ஸ்ஃபோர்டில் படிக்கும்பொழுதும் சரி; அல்லது பரந்த வயல்களில் வேலைசெய்யும்பொழுதும் சரி; பரந்த மனப்

பான்மை உடையவராகவே இருந்தார். எழுபதுகளிலேயே, 'நாம்தான் உலகத்திலேயே மிகச் சிறந்த இனம்' என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தார். ஆஃப்பிரிக்கா முழுவதும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்குள் கொண்டுவரவேண்டுமென்று அவர் முயற்சி செய்யப்போவதாகக் கூறினார். மேலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் ஐக்கியப்படுத்திக்கொண்டால், ஆங்கிலோ-சாக்ஸன் கூட்டாட்சி அரசாங்கத்தை ஏற்படுத்த முடியு மென்றும், அப்படிச் செய்வதால், 'எல்லாப் போர்களும் ஒழியும்' என்றும் கருதினார். 1890-ல் அவருடைய சாதனையும், அதனால் அடைந்த புகழும் சிறப்புடையதாகும். ஆல்ஃபிரட் பீய்ட் என்பவரின் உதவியால், டீ பீர்ஸ் கம்பெனிக்கு (De Beers Company) உலகத்திற்கே வைரம் விநியோகம் செய்கின்ற சலுகைகளை வாங்கித் தந்தார். ரேண்டிலுள்ள தங்க வயல்களையும் அவர் வாங்கியிருந்தார். பெச்சுவானலாந்தைக் கேப்புடன் இணைப் பதற்கு அவர் எவ்வளவோ முயற்சிசெய்து பார்த்தார். பிரிட்டிஷ் தென் ஆஃப்பிரிக்கக் கம்பெனியையும் அவர்தான் நிறுவினார். வடக்கில் அந்தக் கம்பெனி விஸ்தரிக்கப்படுவதற்கு எவ்விதமான தடையுமின்றிச் சாஸனத்தைப் பெற்றார். 1890-91-ல் அவரைப் பின்பற்றுகிறவர்கள் வெல்திறன் முறையைத் துவக்கி வைத் தார்கள். அதன் வெற்றியால், நையாஸாலாந்தும் மஷோனா லாந்தும் பிரிட்டிஷ் பாதுகாப்பிற்கு வந்துவிட்டனவென்று ஸாலிஸ்பரி அறிவித்தார். ரோஸ்பரியின் செல்வாக்கைப் பயன் படுத்தி, உகாண்டாவை நம் ஆதிக்கத்தில் வைத்திருப்பதற்கு அவர் உதவிசெய்தார். கேப் ரயில்வே பாதையைக் கெய்ரோ வரையிலும் எடுத்துச்செல்ல அவர் திட்டமிட்டிருந்தார். அப்படிச் செல்லும் ரயில்வே டிரான்ஸ்வாலின் ஊடே செல்லுவ தென்றும், அப்படிச் செல்வதற்கு டிரான்ஸ்வால் அரசாங்கம் அனுமதி தரவில்லையென்றால், டிரான்ஸ்வாலைச் சுற்றிச் செல்வ தென்றும் அறிவித்தார். அதனால், போயர் குடியரசுகளைக் கட்டாயப்படுத்தி, ஐக்கிய பிரிட்டிஷ் தென் ஆஃப்பிரிக்காவில் கொண்டுவர முயற்சி செய்யவேண்டுமென்று விரும்பினார்.

கேப்பில் உள்ள டச்சுக்காரர்களுடன் நல்லுறவு கொண்டு வரவேண்டுமென்று அவர் மேற்கொண்ட முயற்சிகளில்தான் அவர் அடைந்த பெரிய வெற்றி அடங்கியிருந்தது. அவர் களுடைய தலைவர்களின் உதவிகொண்டு, அவர் பிரதம அமைச் சராக இருந்தபொழுது 1890-ல் ஒரு கேபினட்டை அமைத்தார். அவருடைய நண்பரான ஹாஃப்மேர் போல, பேரரசின் தலையீடு அடிக்கடி ஏற்படுவதை செசில் ரோட்ஸ் விரும்ப வில்லை. வடக்கு பெச்சுவானலாந்தையும், ஸம்பேஸிக்கு

வடக்கேயுள்ள பகுதியையும் அவருடைய கம்பெனியின் ஆதிக்கத்திற்குள் கொண்டுவர வேண்டுமென்று திட்டமிட்டதில், ஆங்கிலேய அரசாங்க நிர்வாகிகளுடன் மோதவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சேம்பர்லேனைப் போன்றோர், அவருடைய நோக்கத்தையும், கம்பெனியின் நிதி நிலைமையையும், விருப்பப்படி சுதேச மக்கள் பிரச்சினைகளில் பிரவேசிப்பதையும் சந்தேகக் கண்கொண்டு பார்த்தார்கள். கம்பெனி அதன் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருகின்ற பகுதிகளையெல்லாம் ஆங்கிலேய அரசாங்கம்தான் ஆட்சிசெய்யும் என்று அவர்கள் அறிவித்தனர். அவர், பார்னெல்லின் இயக்கத்திற்கு நிதி உதவி செய்தார். ஆனால், ஐரிஷ் அங்கத்தினர்களெல்லாம் வெஸ்ட்மினிஸ்டரில் தான் இருக்கவேண்டுமென்ற நிபந்தனையின்பேரில்தான் நிதி உதவி அளிக்கப்பட்டது. அதைப்போலவே லிபரல் கட்சிக்கும் அவர் நிதி உதவி செய்தார். ஆஃப்பிரிக்காவிற்கும் பேரரசு முழுவதற்கும் பொருளாதார ஐக்கியத்தை ஏற்படுத்தவேண்டுமென்றும், இரண்டு இனங்களும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்ற ஹாஃப்மேரின் திட்டத்தை மிகவும் பரிவுடன் கவனித்து, அவருக்கு ஆதரவும் அளித்தார். போயர்களுடைய விவசாயப் பாதுகாப்பிற்கும், சுதேசிகளுடன் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ளுவதற்கும் அவர் நிதி உதவி அளித்தார்.

1890-95 வரையிலும் அவர் பிரதம அமைச்சராக இருந்தபொழுது குரூகருடன் கொண்டிருந்த வேறுபாடுகள் வெளிப்படையாகவே மோதலில் கொண்டுவந்துவிட்டன. 1893-ல் குரூகர் மீண்டும் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், இந்த முறை ஜோபர்ட் என்பவர் அவரை எதிர்த்துப் போட்டியிட்டார். போட்டி மிகவும் கடுமையாக இருந்தது. குறைந்தபட்ச வாக்குரிமைகளே பெற்று குரூகர் வெற்றி பெற்றார். ஜோபர்ட் என்பவர், அவரைவிடப் பரந்த மனப்பான்மை உடையவர். அதே ஆண்டில், ஜேம்ஸன், ரோட்ஸ் ஆகியோர் மேட்டாபெலேக்கள்மீது போர் தொடுத்தனர். அந்தப் போரினால் அவர்களுடைய கம்பெனிக்கு டிரான்ஸ்வாலின் வடக்குப் பகுதி கிடைத்தது. இந்த நிகழ்ச்சியினாலும், ரோட்ஸ் நெப்போலியனைப்போல ஆக்கிரமிப்பில் இறங்கிவிட்டதாலும், டச்சு மிதவாதிகளுடைய தொடர்பையும் ஆதரவையும் இழந்துவந்தார். ரயில்வேக்களை அமைப்பதில் கடுமையாகப் போட்டி ஏற்பட்டது. கேப் திட்டத்தின்படி அமைத்த ரயில்வே பிரிடோரியா வரையிலும் சென்றது. குரூகரின் ஆதரவில் டெலகோவா விரிகுடா வரையிலும் அமைத்த ரயில்வேயில் சில தகராறுகள் ஏற்பட்டன. அந்த ரயில்வே கம்பெனி போர்ச்சுகீசியருக்குச் சொந்தமானது.

இந்தத் திட்டத்திற்கு ரோட்ஸ் எதிர்ப்புத் தெரிவித்தார். ஜெர்மானியர் அவர்களை எச்சரித்து, பிரிட்டனிடம் இந்த ரயில்வேயை ஒப்படைக்கக்கூடாது என்று கூறினர். மேற்குப் பகுதியில் மேஃபிகிங் (Mafeking) வரையிலும் போட்ட ரயில்வே பாதை, நாளடைவில் டிரான்ஸ்வாலைச் சுற்றி வளைத்துக்கொள்ளும் என்று தெரிந்தது. ஒரு கம்பெனி ரயில்வே பாதையை அமைத்தால், மற்றொரு கம்பெனியார் மற்றொருபுறத்தில் ரயில்வே பாதையை அமைத்துப் போட்டியிட்டனர். ரோஸ்பரி அரசாங்கம் டோங்கோலாந்தைக் கைப்பற்றிவிட்டதால், கிழக்குக் கரையில் துறைமுகத்தைப் பிடிக்கவேண்டுமென்றிருந்த குரூகரின் கடைசி நம்பிக்கையும் அற்றுப்போய்விட்டது. ஜெர்மனியின் வெல்திறன் முறை காங்கோவில் நல்ல பயன் அளித்தது. அத்துடன் போர்ச்சுகீசியருடனும் அவர்கள் ஒப்பந்தம் செய்துகொண்டனர். இதனால், ரோட்ஸ், வடக்கிலும் கிழக்கிலும் முன்னேற முடியாமல் போயிற்று. இருப்பினும், டிரான்ஸ்வாலில் உள்நாட்டுப்போர் ஏற்படக்கூடிய வாய்ப்பு அதிகமாக இருந்தது. அதனால், வேறு வகையில் 'யூனியன்' ஏற்படக்கூடிய வாய்ப்பு இருந்தது என்று சொல்லலாம்.

கடைசியாக, ஜனாதிபதி, போயர் விவசாயிகளையே அதிகமாக நம்பியிருந்தார். அத்துடன் அவருடைய தொழில் வளர்ச்சித் திட்டங்களும், வெல்திறன் முறையுங்கூட அபிவிருத்தி அடைந்திருந்தன. ஹாலந்துக்காரர்களையும் ஜெர்மானியர்களையும் உதவிக்கு அழைத்து, அவர்களுடைய பொறுப்பில் ரயில்வே, பாங்கிகள், அரசாங்கத் தனி உரிமைகள் ஆகியவற்றைப் போற்றி வளர்ப்பதற்காக ஒப்படைத்தார். ஹாலந்துக்காரர்களில், டாக்டர் லேயிட்ஸ் (Dr. Leyds) என்பவர் ஜனாதிபதிக்கு உதவி செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவராவார். அவருடைய பெரிய பிரச்சினை, உடிலாண்டர்களை (Uitlanders) எப்படிச் சமாளிப்பது என்பதைப் பற்றித்தான் இருந்தது. இவர்கள் எல்லாரும் அந்நியர்கள்; ரேண்டில் உள்ள தங்க வயல்களில் வேலை செய்வதற்காகப் பெரும்பாலும் பிரிட்டனிலிருந்து கொண்டுவரப்பட்டவர்களே எனினும், மற்ற, தென் ஆஃப்பிரிக்க நாடுகளிலிருந்தும், ஐரோப்பாவிலிருந்தும் வந்தவர்கள் என்றும் இவர்களைக் கூறலாம். ஜனாதிபதி இவர்களை நடத்தும்விதம் சரியில்லையென்று ஏற்கெனவே கிளாட்ஸ்டன் அரசாங்கம் எச்சரிக்கை செய்தது. டிரான்ஸ்வாலின் ஆறில் ஐந்து பங்கு வருமானம் தங்க வயல்களிலிருந்துதான் கிடைக்கிறது. எனினும், அத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றவர்களுக்கு டிரான்ஸ்வால் நிறுவனங்களில் எவ்விதப் பிரதிநிதித்துவமும் கொடுக்கப்படவில்லை. மிகப் பெரிய பணக்காரச்

சுரங்க அதிபர்கள் இதனுல் பாதிக்கப்படவில்லே. ஆயினும், அவர்களுடைய லாபங்கள் ஊழல்களினுலும், தனி உரிமை களினுலும் அதிகமாகப் பாதிக்கப்பட்டன. அவர்களிடம் வேலே செய்கின்றவர்களுக்கு நிறைய குறைகள் இருந்தன. அவர்கள் போயர் மக்களேவிட இரண்டு மடங்கு அதிகமாகவே இருந்தனர். இருந்தாலும் டச்சு மொழிதான் ஒரே ஆட்சி மொழியாக இருந்தது. நீதிமன்றங்களிலும் பள்ளிகளிலும் டச்சு மொழியில் தான் எல்லாக் காரியங்களும் நடந்தன. ஆனுல், அவர்களுக்குச் சுரங்கத் தொழில்களில் நல்ல செல்வாக்கு இருந்தது. மேலும், 1890-94-ல் அமலிலிருந்த சட்ட திட்டங்களின்படி, அங்கே பதினுன்கு வருடங்கள் குடியிருப்பவர்களுக்குமட்டுமே, ஜனுதிபதி, மற்றும் சட்டசபைத்தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமை கொடுக் கப்பட்டிருந்தது. அதைத் தவிர, அவர்கள் கடும் பிரமாணத் தையும் எடுக்கவேண்டியவர்களாகிருர்கள். அவர்களுக்கு, ஜனுதி பதியின் ஆதரவில் இயங்குகின்ற நீதிபதிகளின்மீது நம்பிக்கை இல்லே. அதைப்போலவே ஜூரர்களும் போயர்களாகவே இருந் தனர். 1892-ல் அவர்கள் நேஷனல் யூனியன் என்ற கழகத்தைத் தோற்றுவித்து, அவர்களுடைய குறைகளே எடுத்துக் கூறினர். ஆனுல், அவர்களுடைய விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டன. கேப்பில் உள்ள நமது ஹை கமிஷனரான லோச் (Loch) 1894-ல் புரட்சி, கண்டிப்பாக அங்கே தோன்றப்போகிறதென்று உணர்ந் திருந்தார். அதனுல், அதிகத் துருப்புகளே அனுப்பிவைக்கவேண்டு மென்று கேட்டுக்கொண்டதற்கு, லிபரல் அரசாங்கம் அவருடைய வேண்டுகோளே ஏற்றுக்கொள்ளவில்லே. 1895-ல் குருகர் ஜெர் மானியர் பக்கம் சேர்ந்துகொண்டு யுத்த தளவாடங்களேப் பெருக்கிக்கொண்டார். கேப்பிலிருந்து வருகின்ற பொருள் களுக்கு அதிகமான ரயில்வே கட்டணங்களே விதித்து வசூல் செய் தார். இதனுல், போர் ஏற்படக்கூடிய சூழ்நிலே இன்னும் நெருங் கிக்கொண்டே வந்தது. சேம்பர்லேன் ஏற்கெனவே செய்து கொண்ட ஒப்பந்தங்களே நினேவுறுத்தி அவருக்குக் கடும் எச்சரிக்கை விடுத்ததின்பேரில் குருகர் சிறிது கீழிறங்கினுர். புரட்சி ஏற்படுகின்ற சமயத்தில், ரேண்டிலுள்ள தங்க வயல் தொழில்களுக்கு என்ன ஏற்படும் என்பதைக் காலனி அலுவலகத் தினர் உணர்ந்தே இருந்தனர். அதனுல், அந்தச் சமயத்தில் ஹை கமிஷனர் இந்தப் பிரச்சினேயில் தலேயிட்டு, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே வைத்து ஒரு மாநாட்டைக் கூட்டிச் சிக்கல்களே தீர்க்கச் செய்யவேண்டுமென்று அவருக்கு உத்தரவிடப்பட்டது.

ஆனுல், ரோட்ஸ், இந்த உத்தரவை மதிக்காது தன் விருப்பப் படியே செயலாற்ற முனேந்தார். இல்லாவிடில் சமாதான

மாகவே ஓர் ஒப்பந்தம் ஏற்படக்கூடிய வாய்ப்பு இருந்தது. அவருக்குச் சேம்பர்லேனின் போக்குச் சிறிதும் பிடிக்கவில்லே. பெச்சுவானுலாந்தை அவருடைய கம்பெனி அடைய அவர் உதவி செய்யவில்லே. அதற்குப் பதிலாக, மேஃப்கிங்கிலிருந்து, ரொடீஷியா வரையிலும் செல்லுகின்ற ரயில் பாதை அமைக்கப்பட்டிருக்கும் நிலத்தைமட்டுமே அவருடைய கம்பெனிக்கு அளித்தார். அவர்களுக்குச் சொந்தமான அந்தப் பகுதியில் ஜேம்ஸன் ஒரு சிறிய படையைத் தயாராக வைத்திருந்தார். ஜோஹன்னஸ்பர்க்கிலிருந்து செய்தி வந்தவுடன், அப் படையினர் போரிடத் தயாராகவேண்டுமென்று எச்சரிக்கை செய்திருந்தார். அத்துடன், ரோட்ஸ் இப் புரட்சிக்காரர்களுக்குப் போர்க் கருவிகளே வாங்கித் தந்தார். இப்படிச் செய்வதன் நோக்கம் ஒருவகையில் கலோனியக் காரியாலயத்தைக் கட்டாயமாக இந்தப் பிரச்சினேயில் ஈடுபடச் செய்வதேயாகும்.

1895-ல் தென் ஆஃப்பிரிக்காவில் போரை ஆரம்பிப்பதென்பது பிரிட்டனுக்குப் பெரிய ஆபத்தை ஏற்படுத்துவதாகும். ஏனெனில், அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் இருந்த நட்புறவு அப்பொழுது முறிவடைந்திருந்தது. அத்துடன், ரஷ்யா, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளுடனும், பிரிட்டன் பகைத்துக் கொண்டது. ஆஃப்பிரிக்காவில் எந்த விதத்திலும் பழைய நிலேமையை மாற்றக்கூடாதென்றும், அப்படி ஏதாவது ஏற்படும் பட்சத்தில் போர் தொடுக்கப்போவதாக ஜெர்மனி பயமுறுத்தியது. உடிலாண்டர்களின் கிளர்ச்சி ஏற்படும்பொழுது, ஒன்று, விரைவில் அந்த விவகாரத்தை முடித்துவிடவேண்டுமென்றும் இல்லேயெனில், கால வரையின்றிக் காலம் கடத்தவேண்டுமென்றும் சேம்பர்லேன் ரோட்ஸிடம் கூறினுர். இதற்கு இவர் பொறுப்பாகிருர் என்பதை மறுக்கமுடியாது. ஜேம்ஸன் புரட்சிக்காரர்களுடன் சேர்ந்து தாக்குவார் என்பதை அவர் எதிர்பார்க்கவே இல்லே. இந்தத் தாக்குதலே நடத்தியாவதும், இந்தப் பிரச்சினேக்கு ஒரு முடிவு காணவேண்டுமென்று அவர் விரும்பினுர். தாக்குதலேத் தொடங்கிய ஜான்ஸனின் படைகளிடையே எந்தவிதமான உறுதிப்பாடும், அல்லது முடிவும் இருந்ததாகத் தெரியவில்லே. அவர்கள் பிடித்த பகுதிகளில் பிரிட்டிஷ் கொடியை நாட்டுவதா என்ற கொள்கையில் சில மாறுபட்ட கருத்துகள் இருந்து வந்ததால் சிறிது காலம் கடத்தினர். டிசம்பர் மாதம் 29ஆம் நாள் ஜேம்ஸன் படையெடுத்துச் சென்ருர். அரசாங்கத்தின் ஆலோசனேயையும், ஹைகமிஷனரின் நேரடியான உத்தரவையும் அவர் ஏற்கவில்லே. ஆனுல், 1896 ஜனவரி 2ஆம் தேதியன்று, அவரும், மற்ற 500 பேரும் போயர் துருப்புகளால் கைது செய்யப்பட்டனர்.

திட்டமில்லாத, குழப்பிவிட்ட இந்தத் தாக்குதல் பல நெருக்கடியான விளைவுகளை உண்டாக்கியது எனலாம். ஆங்கிலேயர்களுக்கும் ஆஃப்பிரிக்கண்டர்களுக்குமிடையே இருந்த கூட்டுறவு, இந்தத் தாக்குதலால் முறிந்துபோயிற்று. ஸ்டெயின் (Steyn) என்ற தீவிரவாதி ஆரஞ்சு ஸ்டேட்டின் ஜனாதிபதியாகப் பதவியேற்றார். ரோட்ஸினால், ஹாஃப்மேரும் அவருடைய 'பிணைப்பும்' முறிவடைந்தது. ரோட்ஸ் தம்முடைய பிரதம அமைச்சர் பதவியை ராஜிநாமா செய்தார். அவருக்குப் பெரிய களங்கமேற்பட்டதல்லாமல், அவருடைய கம்பெனியின் சாஸனம் மீண்டும் புதிப்பிக்கப்படுமா என்ற ஐயம் ஏற்பட்டுவிட்டது. இவர்களுடைய வீழ்ச்சியைப் பயன்படுத்திக்கொண்டு மேட்டாபெலேக்கள் கலகம் விளைவித்தனர். சேம்பர்லேன் இந்தத் தாக்குதலைப்பற்றி ஒன்றும் முன் கூட்டியே தெரியாது என்று கூறியது மட்டுமன்றி, டிரான்ஸ்வாலில் சீர்திருத்தங்களைக் கொண்டு வர உதவுவதாலும், பின்பு இங்கிலாந்திற்கு விஜயம் செய்யுமாறு குருகருக்கு அழைப்பு விடுத்தார். பிரிட்டனுடைய தோல்வியின் அறிகுறியேதான் இது என்று போயர்கள் நினைத்து மகிழ்ச்சி அடைந்தார்கள், ஆனால், இந்தச் சமயத்தில் ஜெர்மன் கெய்சர் குருகருக்குப் பாராட்டுத் தந்தி ஒன்றை அனுப்பியதால், ஆங்கிலேய மக்களுக்குக் கோபம் வந்தது. இதுவரையிலும் ஆங்கிலேய மக்களிடம் ரோட்ஸ்மீதிருந்த கோபம் மாறி இப்பொழுது அவர்மீது நல்லெண்ணம் தோன்றத் தொடங்கியது. அவர்கள் மீது விதிக்கப்பட இருந்த தண்டனைகளுங்கூடப் பெரிய மாற்றத்திற்குள்ளாகிவிட்டன. காமன்ஸ் சபையில் அவர்களை விசாரிக்க அழைத்துச் சென்றபொழுது, அவர்களை வெற்றி வீரர்களாகவே கருதி, மக்கள் ஆரவாரித்தனர். இதனால், இனவெறி ஆஃப்பிரிக்காவில் இன்னும் மோசமான நிலையை அடைந்துவிட்டது. காமன்ஸ் சபை கமிட்டி நடத்திய விசாரணையில் கேம்ப்பெல்-பேனர்மெனும், ஹார்கோர்ட்டும் பங்கெடுத்துக்கொண்டனர். இதுவே ஒரு துரதிருஷ்டவசமானதாகும். அவர்கள் விசாரணையின்பொழுது சேம்பர்லேனைக் குற்றவாளியல்லர் என்று விட்டுவிட்டார்கள். மேலும், ரோட்ஸிடமிருந்து எல்லா தஸ்தாவேஜிகளையும் கேட்டு வாங்க விரும்பவில்லை. இவற்றில் அந்நியர்களுடைய அபிப்பிராயம் கலந்திருக்கின்றதென்ற சந்தேகம் அரசாங்கத்திற்கு ஏற்பட்டுவிட்டது.

ரோட்ஸின் அபாயத்திலிருந்து விடுபட்ட குருகர் மற்ற எதிரிகளை ஒழிக்க அதிக பலம் பெற்றுவிட்டார். அவர் மீண்டும் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பழைய நிகழ்ச்சிகள் அவரைக் கடின மனதுடையவராக மாற்றிவிட்டன. யுத்த

தளவாடங்களை அவர் அதிகமாகப் பெருக்கிக்கொண்டார். பேரரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களை இப்பொழுது கண்டித்தார். ஆரஞ்சு ஃபிரீஸ்டேட்டுடன் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொண்டார். கேப் அரசியலில் ரோட்ஸை வெறுப்பவர்களும் ஆதரிப்பவர்களுமென்ற இரண்டு குழுவினர் ஏற்பட்டுவிட்டனர். அவர்களில் ஸ்கிரினியர் (Schreiner), ஹாஃப்மேர் (Hofmeyr) என்பவர்கள் 'பாண்ட்' அல்லது பிணைப்புக் கட்சியிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டு, ரோட்ஸையே நம்பியிருக்க வேண்டுமென்ற கொள்கையை விட்டுவிட்டனர். ஆனால், சில முன்னேற்றவாதிகள் இன்னும் ரோட்ஸையே நம்பியிருந்தனர். இவர்களுக்கு ஆங்கிலேயரின் ஆதரவு இருந்தது. ரோட்ஸ் இப்பொழுது கேப் அரசியலில் தமது செல்வாக்கை இழந்து விட்டதனால் வடக்குப் பகுதியில் வளர்ச்சியை ஏற்படுத்துவதற்குத் தீவிரமாக முயன்று வந்தார். சேம்பர்லேன் அவருடைய கம்பெனியின் சாஸனத்திற்கு எந்தவித ஆபத்தும் நேராத வண்ணம் பார்த்துக்கொள்வதாக உறுதிமொழி அளித்தார். அத்துடன், ரோட்ஸின் சேவைகளை வெளிப்படையாகவே சேம்பர்லேன் பாராட்டினார். ரொடீஷியா, நேட்டால், உடிலாண்டர்ஸ் ஆகியவர்களின் உதவியைப் பெற்று டிரான்ஸ்வாலைக் கட்டாயப்படுத்தி எப்படியும் 'யூனியனில்' இணைத்து விடுவதென்று இன்னும் நம்பிக்கை வைத்திருந்தார்.

தாக்குதலுக்கும், பின்பு ஏற்பட்ட போருக்குமிடையே இருந்த இக் காலத்தில், அதாவது 1896–99 வரையிலும், மூன்று பிரச்சினைகளை முக்கியமாகக் கவனிக்கவேண்டியதாயிற்று. குருகர் தீவிரமாகப் படை திரட்டிக்கொண்டு வருகிறார் என்பது மறக்கமுடியாததாகும். மற்ற அந்நிய நாடுகளுடன் சமரசத்தை ஏற்படுத்த அவர் முயற்சி செய்துவந்தார். எல்லாவற்றையும் விட, டிரான்ஸ்வாலில் இருந்த உள்நாட்டு நிலைமையும் கவனிக்க வேண்டியதாயிற்று. அந்நியர்களைக் கட்டுப்படுத்தும் கடுமையான சட்டதிட்டங்கள், பத்திரிகைகளைத் தடைசெய்தல், நீதிபதிகளை விலக்குதல், துன்புறுத்தல், காவலர்களுடன் மோதல் ஆகிய நிகழ்ச்சிகளால், அங்கே உண்மையான ஜனநாயக உணர்ச்சி உடிலாண்டர்களிடையே பெருகிக்கொண்டு வந்தது. அவர்களுடைய முறையீடுகளை இப்பொழுது ஆங்கிலேய அரசாங்கத்திற்கே அனுப்பினர். ஜனதிபதி குருகருடன் போருக்குச் சென்று அவருடைய நாட்டின் சீர்திருத்தங்களைக் கொண்டுவரவேண்டுமென்பது, அறிவுடைய செயலாகாது என்று சேம்பர்லேன் காமன்ஸ் சபையில் கூறினார். ஆனால், அவர் அப்படிப்பட்ட செயலைச் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏற்கெனவே,

செய்துகொண்ட ஒப்பந்தங்களின்படி பிரிட்டனுடைய மக்களைப் பாதுகாக்கவேண்டிய பொறுப்பு பிரிட்டனுக்கு இருந்தது. குருகரிஸத்தை ஒழித்து, டிரான்ஸ்வாலில் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதைவிட, வேறு எந்த அமைதியான முறையில் அங்குள்ள ஆங்கிலேய மக்களைப் பாதுகாக்கமுடியும் என்று கேட்கப்பட்டது. பிரிட்டனுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களையும், அந்த நாட்டு மக்களுடைய நலன்களையும் குருகர் புறக்கணித்து வெளிநாடுகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்வதைத் தடுக்கவேண்டிய அவசியம் ஏற்படுகின்றபொழுது, ஏன் ஆஃப்பிரிக்கண்டர் உணர்ச்சிக்கும் பிரிட்டிஷ் மக்களுடைய பாதுகாப்புக்கும் ஆதரவு அளிக்கக்கூடாது என்று கேட்டனர்.

உள்நாட்டு நிலைமையில் குருகர் சிறிது அபிவிருத்தியை ஏற்படுத்தினரென்பது உண்மையே. கேப் அரசியலில் பயிற்சி பெற்ற சில மிதவாதிகளான ரெயிட்ஸ் (Reitz), ஸ்மட்ஸ் (Smuts), ஸ்டெயின் (Steyn) ஆகியோரை ஆரஞ்சு ஃபிரீ ஸ்டேட்டில் மந்திரிகளாக வந்ததை அவர் ஏற்றுக்கொண்டார். அப்படி ஏற்றுக் கொள்ளுகின்ற அவசியத்தையும் அவர் உணர்ந்திருந்தார். மேலும், லேயிட்ஸ் ஐரோப்பாவிலிருந்து உதவி பெறுவதை நம்புவதற்கு இல்லை என்பதையும் அவர் நன்கறிந்திருந்தார். மற்றொரு புறத்தில், சேம்பர்லேனும், மற்றும் ஸாலிஸ்பரி, பல்ஃபோர், ஹிக்ஸ்-பீச் ஆகியோர் எப்படியும் போரைத் தவிர்க்கவேண்டுமென்று முடிவுசெய்திருந்தனர். ஏனெனில், ரோட்ஸ் என்பவரின் ஆதிக்கத்தை இவர்களில் யாரும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. தவிர, சர்வ தேசிய அரசியல் நிலையும் மிகவும் மோசமாக இருந்தது. 1898 முடியும்வரை தென் ஆஃப்பிரிக்காவில் நம்முடைய படைகள் மிகவும் குறைந்த அளவிலேதான் இருந்துவந்தன. ஹை கமிஷனர், போர் தவிர்க்கமுடியாதது என்று அடிக்கடி வற்புறுத்தி வந்ததைச் சேம்பர்லேன் ஏற்றுக்கொள்ளவில்லை. அப்படிப் போர் ஏற்பட்டால், 'யூனியன்' அமைவதற்கு இன்னும் ஒரு தலைமுறையாகும் என்று சேம்பர்லேன் கூறினர்.

கட்சிகள் அனைத்தினுடைய நல்லாசிகளையும் பெற்று மில்னர் 1897-ல் அங்கே அனுப்பப்பட்டார். அவர் ஏற்கெனவே நிதித் துறையிலும், எகிப்திலும் நல்ல பெயரை வாங்கியிருந்தார். அவர் ஆஸ்குவித்தைப் போல, பொதுப்பணியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினர். அவர்களெல்லாம் ஜோவெட்ஸ் பேலியல் (Jowett's Balliol) என்பவரிடம் கல்வி கற்றவர்களாவர். ஆர்வம், தூய்மை, சுயநலமற்ற தன்மை ஆகிய நற்பண்புகளைக்கொண்ட இவரிடம், நற்குணங்களாலேயே ஏற்பட்ட சில குறைகளும், ஜெர்மன் கல்வியைப் பெற்றதால்

ஏற்பட்ட சில குறைகளும் இருந்தன. சிந்தனையிலும் பேச்சிலும் நிதான குணமும், எதையும் தீர ஆலோசனை செய்து முடிவு செய்வதும் அவருடைய திறமைக்குக் காரணங்களாக இருந்தன. வெள்ளாடுகளையும், செம்மறியாடுகளையும் அவருக்குப் பிரிக்கத் தெரியும். நல்ல நோக்கமில்லாதவர்களுடைய பேச்சை நம்பி அவர் எந்தக் காரியத்திலும் ஈடுபடுவதில்லை. அவருடைய அலுவலகக் காரியங்களையும் நிறுத்தி நிதானமாகவே செய்தார். தென் ஆஃப்பிரிக்காவில் இனவெறி தாண்டவமாடும் சூழ்நிலையை நன்ருகப் புரிந்துகொண்டு, ஸ்கிரினியர் (Schreiner) அரசாங்கத்துடன் சேர்ந்து மிதிவாதிகளான டி வில்லியர்ஸ் போன்றவர்களை அவர் நம்பத் தயாராக இல்லை. தவிர, கேப்பில் உள்ள டச்சுக்காரர்களின் நாணயத்தை அவர் நிரூபிக்கச் சொல்லிச் சவால் விட்டார். டிரான்ஸ்வாலைப் பொறுத்தவரையிலும், அங்கு வசிக்கின்றவர்களின் இதயங்கள் புண்பட்டிருந்தனவென்றும், அவர்களுக்காக ஏதாவது நல்ல காரியங்களைச் செய்யவேண்டுமென்ருல், உடனடியாகப் போர் நடவடிக்கைகளில் ஈடுபடுவதைப் போன்ற பாசாங்கையாவது செய்யவேண்டுமென்றும், இல்லையெனில், நம்மீதுள்ள நம்பிக்கையை அவர்கள் அறவே இழந்துவிடுவார்கள் என்றும் கூறினுர். 1898-ல் ஒன்றும் செய்யவில்லையெனில், நமது நண்பர்களை நாம் இழந்தவர்களாவோம் என்று அவர் கருதினுர்.

ஓர் ஆண்டு காலம் வரையிலும், சேம்பர்லேன் அவருடைய கருத்துகளை ஏற்றுக்கொள்ளவில்லை. கேப்பிலுள்ள டச்சுக்காரர்களைப் பகைத்துக்கொள்வதில் பயனில்லை என்று சேம்பர்லேன் கருதினுர். ஏப்ரல் 1899-ல் கேபினட் உடிலாண்டர்களின் முறையீட்டைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டது. அந்தச் சிக்கலான பரிசீலனையில், செப்டம்பர் மாதம் வரையிலும் அவர்களுடைய செயலாற்றல் தாமதமாகிக்கொண்டே வந்தது. ஜூன் மாதத்தில் பிளோம்ஃபான்டின் (Bloemfontein) என்பவர் மில்னரையும், இரண்டு போயர் ஜனுதிபதிகளையும் பேட்டி கண்டு பேசியதை வரவேற்றனர். மேலும், பேரரசினுல் நியமிக்கப்பட்ட நடுவர் குழுவினரால், உடிலாண்டர்களுக்கு எந்த அடிப்படையில் வாக்குரிமை அளிக்கவேண்டுமென்று ஆலோசித்ததிலும் குழப்பியதாகத் தெரியவில்லை. வாக்குரிமை பெறுவதற்கு ஐந்து ஆண்டுகள் குடியிருப்புத் தகுதி பெற்ருல் போதுமென ஸ்மட்ஸ் ஆலோசனையைக் கூறினுர். எல்லாத் தீமைகளுக்கும் காரணமான இந்த வாக்குரிமைப் பிரச்சினை தீர்க்கப்பட்டால் நல்லதென்று சேம்பர்லேன் கருதினுர். டிரான்ஸ்வாலில் உள்ள பிரிட்டிஷ் குடிகளை அடிமைகளைப்போல நடத்தி வந்ததைச் சிறிதும்

பிடிக்காது, மேலும் இவ்விதக் கொடுமைகள் ஏற்படாவண்ணம் பார்த்துக்கொள்ள அவர் முயன்றார். அப்பொழுது ஒரு சமயம் க்ருகர் இன்னும் சில சலுகைகளைத் தர முடியுமென்ற நோக்கத்தில் இருந்தார். ஆனால், எவ்வித சலுகைகளும், இனிமேல் பிரிட்டன் டிரான்ஸ்வால் பிரச்சினையில் தலையிடக்கூடாதென்ற வகையில் இருந்ததால், இந்த நிபந்தனையை ஏற்றுக்கொள்வதா என்ற சிக்கல் வேறு ஏற்பட்டுவிட்டது. ஆனால், சலுகைகளை எப்படியும் தரத்தான் வேண்டுமென்று மிதிவாதிகள் வற்புறுத்தினர். எப்படியிருந்தபோதிலும், அந்த மக்களைச் சுதந்திர இறைமை பெற்றக் குடிமக்களாக்க முடியாவிட்டாலும், சுதந்திர மக்களாகவாவது நடத்தமுடியும் என்று கூறினார். இன்னும் அவர் வெளிநாடுகளின் உதவியைத்தான் நம்பியிருந்தார். பிரிட்டனிலுள்ள லிபரல் கட்சி அவருக்கு உதவிசெய்யும் என்று நம்பினார். இன்னும், மில்னர் கூறியதைப்போல, அதிகமான இராணுவப் படைகள் அங்கு அனுப்பப்பட்டால் ஒரு சமயம் போர் ஏற்படுவதே தவிர்க்கப்படும் என்று நம்புவதற்கும் இடமிருந்தது. அல்லது மில்னரைப் போன்ற சமரசத்தில் நம்பிக்கையுடையவர் போரை முழுவதுமே தவிர்க்கவும் முடியுமென்றும் நம்பினர். ஆனால், இரண்டும் முடியாதவைகளாகிவிட்டன. இந்த வாக்குரிமைப் பிரச்சினை, தென் ஆஃப்பிரிக்காவிலுள்ள நமது ஆதிக்கத்தையும், நம்முடைய பலத்தையும் சோதனை செய்கின்றது என்று சேம்பர்லேன் கூறினார்.

செப்டம்பர் கடைசியில், பிரிட்டிஷ் கேபினட் இறுதி எச்சரிக்கை ஒன்றை விடுத்தது. அந்த எச்சரிக்கையில், வாக்குரிமையைப்பற்றி உறுதியான முடிவும், நீதிமன்றங்களில் சுதந்திரமும், ஆயுத தளவாடங்கள் குறைப்பும் வேண்டுமென்று அறிவிக்கப்பட்டது. அக்டோபர் ஒன்பதாம் தேதியன்று, அங்கே ஜூன் மாதத்திலிருந்து வந்து குவிந்துள்ள படைகளைத் திருப்பிப் பெறவேண்டுமென்று, அக்டோபர் மாதத்தில் க்ருகர் கேட்டுக்கொண்டார். மேலும், அப் பக்கத்தில் படை அனுப்புவதையும் நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று கேட்டார். ஆனால், ஃபிரீ ஸ்டேட்டிலும், கேப்பிலும் உள்ள அவருடைய இனத்தார், அவருக்கு உதவி செய்வதாக வாக்களித்திருந்தார்கள். அந்த நம்பிக்கையின்மீது அவர் ஆங்கிலேயர் தாக்குதல் நடத்தினாலும் அதைச் சமாளித்துக்கொள்ளவேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்துவைத்திருந்தார். மழைகாலம் வந்து, குதிரைகளுக்கு நல்ல புல் கிடைத்தவுடன், போயர்கள் எச்சரிக்கையாக, நேட்டால், கேப் காலனிமீது தாக்குதலை நடத்தினர். பழைய பாசுரத்தில் கூறியபடி, 'நான் செச்சேமைப் (Shechem) பிரித்து,

சக்கோத் (Succoth) பள்ளத்தாக்கை அடையப்போகிறேன்'' என்ற பழைய நிகழ்ச்சியை அவருடைய ஆலோசனைக் குழுவின ரிடம் சொல்லி நினைவுறுத்தினர். பிரிட்டனிலே இந்தப் போரில் வெற்றி கண்டுவிடுவோம் என்ற அதிகமான நம்பிக்கையை வைத்திருந்தபோதிலும், அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு, அந்த நம்பிக்கை குறைந்தே இருந்தது. கிரிமியாவுக்குப் பின்பு, இது ஒரு பெரிய போராக இருக்குமென்றும், நாம் வெற்றி அடைந் தாலும் இதனால் நமக்குப் புகழ் கிடைக்கப்போவதில்லை என்றும் சேம்பர்லேன் மில்னரிடம் கூறினர்.

இராணுவக் கண்ணோட்டத்தில் பார்த்தால், இந்தப் போர் கடினமானது என்றே கூறவேண்டும். ஏனெனில், போக்குவரத்துக்காக ரயில் பாதை கிடையாது. குன்றுகளும் எதிரிகளுக்குச் சாதகமாக நதிகளும் இருப்பதால் படை யெடுப்பிற்கு மிகவும் இடையூறாக இருக்கும், தவிர, அந்தப் பகுதியின் வெப்பநிலை, ஒரு பருவத்தில் அதிகக் குளிராகவும் மற்றொரு பருவத்தில் அதிக வெப்பமாகவும் இருந்தது. போரின் தொடக்ககாலத்தில் அவர்களுக்கு நல்ல அனுகூலங்கள் இருந்தன. அவர்கள் மலைத்தொடர்களில் பாது காப்பாகத் தங்கள் படைகளை அமர்த்தியிருந்தனர். அவர்களுக்கு உதவிசெய்ய அங்கே குடியரசுகளும் இருந்தன. மலைப் போரில் அவர்கள் எளிதாக முன்னேறவும், இலேசான ஆயுதங்களைப் பயன்படுத்துவதிலும் பயிற்சி அளிக்கப்பட்டிருந்தனர். குறி வைத்துச் சுடுவதில் அவர்களுக்கு நல்ல பயிற்சியும் திறமையும் இருந்தன. கிரப், (Krupp), கிரசோட் (Creusot) பீரங்கிப் படைகளைப்போல ஆங்கிலேயரிடமுங்கூடக் கிடையாது. அவர்களுக்கு ஏற்பட்ட மற்றொரு நல்ல அனுகூலம் என்ன வென்றால், அவர்கள் முன்னேறிச் சென்றாலும், நிலப்பகுதியிலே தான் இருந்தார்கள். தவிர, வடக்கு நேட்டாலிலும், வடக்கு கேப் காலனியிலும் அவர்கள் பிரவேசித்து முன்னேறும்பொழுது, ஆஃப்பிரிக்கண்டர்கள் மத்தியில் செல்லவேண்டியிருந்தது. ஆனால், ஆஃப்பிரிக்கண்டர்கள் நடுநிலைமைக் கொள்கையைப் பின்பற்றியதால், அவர்களுடைய முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த விரும்பவில்லை. ஸ்கிரீனரின் (Schreiner) மந்திரிசபை போரில் ஈடுபட விரும்பாததால், ஆங்கிலேயர்களுக்கு ராணு வத்தைப் பொறுத்தவரையிலும் பெரிய இடையூறாக இருந்தது.

முதலில், ஆக்கிரமிப்பில் இறங்குவதற்கு ஆங்கிலேயர்கள் தயங்கினர். உல்ஸ்லி உதவிப்படை வேண்டுமென்று கோரிய தையும் கேபினட் நிராகரித்தது. போயர்கள் இறுதி எச்சரிக்கை அளித்தபொழுது, அங்கே, 14,000 போர்வீரர்கள்தான்

இருந்தனர். இந்தியத் துருப்புகளைக் கொண்டுவரலாம் என்ற ஆலோசனையும் இவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஒரு வகையில் அது நல்ல முடிவாகத்தான் காணப்பட்டது. அடுத்த சில மாதங்களில் நெருக்கடி முற்றியது. நல்ல ராணுவ அதிகாரிகள் இல்லாததால், அவர்களுடைய திட்டமும் குறைபாடுள்ள தாகவே தெரிந்தது. அப் பகுதிகளில் போர்வீரர்கள் சண்டை செய்வது புதிதாக இருந்ததுமட்டுமன்றி, அங்கேயுள்ள சூழ் நிலையும் அவர்களுக்கு ஒத்துவரவில்லை. அதிர்ஷ்டவசமாக, வயதான, ஆனால் மிகுந்த எச்சரிக்கையுடன் இருந்த ஜோபர்ட் என்பவரின் தலைமையில், போயர்கள், தொடர்பற்றுச் சிறுசிறு இடங்களில் நிறுத்தப்பட்டிருந்த ஆங்கிலேயப் படைகளை ஒன்றும் செய்யாது, நேராகக் கேப் காலனியில் பிரவேசித்து முன்னேறினர். அப்பொழுது இன்னும் ஆங்கிலேயர் படைகளை சரியாக அங்கே திரட்டவில்லை.

இந்தப் போர் துவங்கி, நான்கு மாதங்கள் வரையிலும் ஆங்கிலேயர் தோல்விகளையே அடைந்தனர். டிசம்பர் மாதக் கடைசியில் அவர்களுடைய தோல்வி ஓர் உச்ச கட்டத்தை அடைந்தது. இந்தக் 'கறுப்பு வாரத்துடன்' போரின் முதற் கட்டம் உருவாகியது. நேட்டாலுக்கு வெளியே நிறுத்தப்பட் டிருந்த துருப்புகளை லேடிஸ்மித் என்ற நகருக்குள் அனுப் பினார்கள். ஆனால், அங்கே அவர்கள் சுற்றி வளைக்கப்பட்டனர். நமது தலைமைத் தளபதி புல்லர் (Buller), துணிச்சல் உள்ளவர் என்றாலும், திறமையில்லாதவர். அவர் ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட்டில் படைகளை அணிவகுத்துச் செல்லாமல் மெதுவன் (Methuen) என்பவருடைய தலைமையில் மேற்கிலுள்ள மோடர் (Modder) நதியோரம் ஒரு படையை அனுப்பி வைத்தார். கட்டாக்ரே (Gatacre) காலனியைப் பாதுகாப்பதற்காக ஒரு படையுடன் அங்கே நின்றுவிட்டார். அவர் கடல் மார்க்கமாக நேட்டாலுக்கு ஒரு படையை அழைத்துச் சென்றார். ஒரே வாரத்திற்குள், அதாவது டிசம்பர் 10ஆம் தேதியிலிருந்து 15ஆம் தேதிக்குள், ஸ்டார்ம்பர்கில் கட்டாக்ரேயும், மேகர்ஸ்ஃபான்டினில் மெது வனும், டுகிலாவில் புல்லரும் தோற்கடிக்கப்பட்டனர். லேடி ஸ்மித்தைச் சரணடையச் சொல்லிப் புல்லர் ஆலோசனை கூறினார் ஜனவரி 1900-ல் மீண்டும் அந் நகரை மீட்கும்பொழுது தோற் கடிக்கப்பட்டார். ஸ்பியன் காப் (Spion Kop) என்பவரின் குழப்பமிக்க செயலாற்றலே இந்தத் தோல்விக்குக் காரணமாக இருந்தது.

புது வருடத் தொடக்கத்தில், இந்தப் போரின் இரண்டா வது கட்டம் உருவாகியது. ராபர்ட்ஸ் என்பவர் தளபதியாகவும்,

கிட்சனர் (Kitchener) என்பவர் பிரதம ராணுவ அதிகாரியாக வும் நியமிக்கப்பட்டனர். ஃபிரெஞ்சு நாட்டில் குதிரைப்படைத் தளபதி, மெதுவன், கட்டாக்ரே ஆகியோரின் படைகளைக் காப்பாற்றினர். தீவிரமாகப் போர் ஏற்படப் போகிறதை பிரிட்டன் அப்பொழுதுதான் உணர்ந்தது. அதற்குப் பின்பு தான் கனடாவிலிருந்தும் ஆஸ்திரலேசியாவிலிருந்தும் நிறைய படைகளை வரவழைத்தனர். ராணுவத்தில் சேர நிறைய தொண் டர்களும் வந்தனர். கேந்திர தளமான 'ஃபிரீ ஸ்டேட்டை'த் தாக்க ராபர்ட்ஸ் படையுடன் சென்றார். பிப்ரவரி மாதத்தில் அவருடைய குதிரைப் படைத் தளபதியான ஃபிரெஞ்சு என்பவர் கிம்பர்லிமீது முற்றுகையிட்டார். கிரான்ஜின் (Cronje) படைகள் விரட்டி அடிக்கப்படடன. கொடுமையான போருக்குப் பின்பு, பார்டிபர்கில் (Paardeberg) அவர் சரணடைந்தார். லேடி ஸ்மித்தில் தொல்லைகளுக்குள்ளான வைட்டின் (White) படை களுக்கு அவர் உதவி அளித்தார். மார்ச் மாதத்தில் புளோம் ஃபோன்டின் (Bloemfontein) நகரை, ராபர்ட்ஸ் கைப்பற்றினர். பின்பு படைகளுக்கு ஓய்வு அளிப்பதற்கும், அவர்களுடைய படை களுக்கு வியாதிகள் பரவாமல் இருப்பதற்குத் தடுப்பு நடவடிக் கைகள் எடுப்பதற்கும், பின்பு சமாதானம் பேசுவதற்கான நிபந் தனைகளை அளித்துக் காத்திருப்பதற்கும் சிறிது காலதாமதம் ஏற்பட்டுவிட்டது. அதற்குப் பின்பு மீண்டும் அவர் படை யெடுப்பைத் தொடர்ந்தார். வடமேற்கில் போரிட்டுக்கொண் டிருந்த பேடன்-பவுலுக்கு அவர் உதவியளித்தார். அப்பொழுது மேஃப்கிங்கில் அவர் முற்றுகையிட்டுக்கொண்டிருந்தார். அதே சமயத்தில் அவர் ஜோஹன்ஸ்பர்கையும் கைப்பற்றினர். நேட் டால் வழியாகப் புல்லர் டிரான்ஸ்வாலுக்குள் ஊடுருவிச் சென்று ஜூன் மாதத்தில் பிரட்டோரியாவை அடைந்தார். குரூகர் போர்ச்சுகீசிய ஆஃப்பிரிக்காவிற்குள் சென்று, அங்கிருந்து ஐரோப்பாவிற்குச் சென்றுவிட்டார். ஸாலிஸ்பரி துவக்கத்தி லிருந்தே இப் பகுதியை இணைக்கவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தார், இப்பொழுது அந்தச் சாதனையை வெற்றிகர மாக முடித்துவிட்டார். அதற்குப் பின்பு. ராபர்ட்ஸ், கிட்சனரிடம் தளபதி பதவியை ஒப்படைத்துவிட்டு, எஞ்சியிருக்கின்ற புகைச் சலையும் அணைக்கச் சொன்னர்.

போர் முடிவதற்கு முன்பே, அரசியார் இறந்துவிட்டார்; ரோட்ஸும் இறந்துவிட்டார். ஸாலிஸ்பரி பதவியிலிருந்து விலகிக்கொண்டார். தென் ஆஃப்பிரிக்காவில் 200,000 பேர் கிட்சனர் தலைமையில் படைகளில் பணியாற்றினர். ஆனல், எதிர்கட்சியில் 60,000 விவசாயிகள்மட்டுமே இருந்தனர்.

ஆனால், இந்தப் போரில் ஏற்பட்ட ஒரு தொல்லை என்னவென்றால், போயர்கள் ராணுவ உடைதரித்துப் போரிடாமல், சாதாரண உடைதரித்தே போரிட்டதால், அவர்கள் எப்பொழுது போரிட வருகிறார்கள்; எப்படி மறைகிறார்கள் என்பதையெல்லாம் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர்களுக்கு வேண்டியதெல்லாம் குதிரையும் துப்பாக்கியும்தான். அதனால் அவர்களைப்பற்றி ஒன்றும் திட்டமாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. கிட்சனர் அவருடைய படைகளை, ரயில்வே நிலையங்களையும், மற்ற முக்கியமான இடங்களையும் கைப்பற்றும்படி உத்தரவிட்டிருந்தார். அதே சமயத்தில், மலைப்பகுதியில் சண்டை செய்யத் தகுதிபெற்ற குதிரைப் படையைத் திரட்டினார். அவருடைய திட்டமெல்லாம், எதிரிகளை ஒரு குறிப்பிட்ட நகரப் பகுதிகளிலேயே, அதாவது வீடுகள் உள்ள பகுதிக்கும், மற்றும் வேலியிட்டுள்ள அதன் எல்லையோரத்திலுள்ள பகுதிக்கும் இடையிலேயே, நெருக்குவதற்கு முயற்சி செய்தார். மேலும், இந்தப் போர் ஓர் உள்நாட்டுப் போர் என்பதையும் நினைவில் வைக்கவேண்டியிருந்தது. உள்நாட்டுப் போரை அவ்வளவு எளிதில் முடிப்பதும் முடியாத காரியம் என்று வரலாறு எடுத்துக்காட்டுகிறது. செய்திகளை எதிரிகளுக்குக் கூறுவதாலோ, அல்லது உணவையோ, ஆயுதங்களையோ அவர்களுக்குக் கொடுத்து உதவுவதாலோ அல்லது ஏதாவது இடையூறுகளை உண்டுபண்ணுவதாலோ, ஆஃப்பிரிக்கண்டர்கள் எதிரிகளுக்கு உதவி செய்ய முடியும். ஆனால், தொண்டர்களைத் திரட்டுவதற்கும், கலகக்காரர்களுக்கு வாக்குரிமைகளைப் பறிப்பதற்கும், அவர்களுக்கு ராணுவ தண்டனை அளிப்பதற்கும் ஸ்கிரீனர் (Schreiner) அரசாங்கம், விடாப்பிடியாக மில்னரை எதிர்த்தது. இப் போருக்கு 'குரூகர்ஸம்' காரணமாக இருந்ததென்றால், சுதந்திர ஆர்வம் இப் போர் ஆரம்பமாகாதவண்ணம் ஒத்திப்போட்டது. 'ஃபிரீ ஸ்டேட்டில்' உள்ள தலைவரான ஸ்டெயினும் (Steyn) டிரான்ஸ்வாலிலுள்ள தலைவர்களைக் காட்டிலும் அதிக ஆத்திரம் கொண்டிருந்தார். ஃபிரீ ஸ்டேட்டின் தளபதியான டி வெட் (De Wet) என்பவர் கொரில்லாப் போரில் மிகவும் தீவிரமாகப் போரிட்டார் கடைசியாக, ஜோபர்ட் இறந்தவுடன், முழு அதிகாரமும் லூயி போத்தா (Louis Botha) என்ற மனம் தளராத போர் வீரனிடம் சென்றது.

முடிவு மெதுவாக ஏற்பட்டதென்றாலும், உறுதியாகச் செய்யப்பட்டது. கிட்சனர் திறமைமிக்க போர்வீரர்மட்டுமல்லர்; ஒரு பெரிய ராஜதந்திரியுமாவர். அவர் மில்னரைவிட, மிகவும் சமரசமாகப் போகக்கூடியவர். அவர் கலகக்காரர்களைக் கடுமையாகத் தண்டிக்கவேண்டுமென்று விடாப்பிடியாக

இருந்ததால், சமாதானம் ஏற்படுகின்ற ஒரு நல்ல வாய்ப்பைக் கைநழுவி விட்டுவிட்டார். அங்கே வெற்றியையும், அதே சமயத்தில் புனரமைப்பையும் ஏற்படுத்த வேண்டுமென்றால், கேப் அரசியல் அமைப்பை முதலில் ரத்து செய்யவேண்டுமென்று அவர் விரும்பினார். இந்த ஆலோசனையைச் சேம்பர்லேன் ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும், கனடாவும் ஆஸ்திரேலியாவும் ஆட்சேபித்தன. கேபினட், போயர்களுக்குச் சுய ஆட்சி அளிப்பதற்குக் காலதாமதம் செய்ததே தவிர, அதற்குச் சுய ஆட்சித் தரக்கூடாதென்ற எண்ணம் இருந்ததே இல்லை. ஆனால், கட்சிப் பிரிவுகளும், போரிடவேண்டிய அவசியமும் கடைசிக் கட்டத்தில் சிறிது மனக்கசப்பை ஏற்படுத்திவிட்டன. கிட்சனர் படைகளுடன் முன்னேறியபொழுது, விவசாயிகளுடைய வீடுகளையெல்லாம் தீயிட்டுக் கொளுத்தினர். குடிமக்கள், பெண்கள், குழந்தைகள் உட்பட வரிசைவரிசையாகச் சிறைக்கு அனுப்பப்பட்டனர். அங்கே கவனிப்பாரின்றிப் பலர் இறந்து விட்டனர். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் ஆங்கிலேயரின் மனத்தைப் புண்படுத்தின. அதேசமயத்தில் ஸ்கிரீனர் ஒரு நடுநிலைக் கொள்கையைப் பின்பற்ற முயற்சிசெய்தபோதிலும், 'பாண்ட்' கழகம் அவரைப் பதவியிலிருந்து விலக்கியது. கெப் பாராளுமன்றமும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒத்திவைக்கப்பட்டது.

மே 1902-ல் கடைசியாகச் சமாதானம் ஏற்பட்டது. லிபரல் பேரரசுவாதிகள் நிபந்தனையில்லாமல் சரணடையவேண்டுமென்று வற்புறுத்தியதில், போயர்களுக்குச் சிறிது பயம் ஏற்பட்டது. அதனாலும் அவர்கள் சமாதானத்திற்கு ஒப்புக்கொண்டிருக்கக்கூடும். தவிர, நாடு அழிவிலிருந்து காப்பாற்றப்படவேண்டுமென்றால், சமாதானத்திற்கு ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது. இதில் மில்னர், சமாதானப் பேச்சுகளில் கலந்துகொள்வதைவிட, நேரடியாகவே கிட்சனரும் போத்தாவும் பேசி ஒரு முடிவுக்கு வருவதென்று ஒப்புக்கொண்டனர். பிரிட்டன் இந்த இரண்டு குடியரசுகளையும் இணைத்துக் கொண்டது. ஆனால், இந்த இரண்டு குடியரசுகளிலும் படிப்படியாகச் சுய ஆட்சியைத் தருவது என்று பிரிட்டன் உறுதி கூறியது. அத்துடன், அந்தக் குடியரசுகளின் புனரமைப்பிற்கு பிரிட்டன் மூன்று மில்லியன் பவுன்களைத் தருவதாக ஒப்புக் கொண்டது. அவர்களுடைய பள்ளிகளில் டச்சு மொழியைக் கற்பித்துக் கொடுக்க வேண்டுமென்றும், பொறுப்பான ஆட்சி ஏற்படும் வரையிலும், சுதேசிகளின் வாக்குரிமையைப்பற்றி எந்தவிதமான முடிவும் எடுக்கமுடியாதென்றும் அறிவித்தது. இந்த நிபந்தனைகளை ஒப்புக்கொள்ள விரும்பாத ஃபிரீ ஸ்டேட்டில்

உள்ள தலைவர்களான ஸ்டெயின், ரெயிட்ஸ் ஆகியோர் நாட்டை விட்டே ஓடிவிட்டனர். ஆனால், அந்த ஆண்டு முடிவடை வதற்குள் சேம்பர்லேன் தென் ஆஃப்பிரிக்காவிற்கும், போத்தா வும், டி வெட்டும் லண்டனுக்கும் விஜயம் செய்து அவரவர் களுடைய கண்ணோட்டத்தின்படி எதிர்கால அமைதியை நிர் மாணிக்க முயன்றனர்.

ஏழு ஆண்டு காலமாக ரோட்ஸ், ஆஃப்ரிக்கண்டர்கள் ஆகியோர் தென் ஆஃப்பிரிக்க யூனியனை நிறுவவேண்டுமென்று அரும்பாடுபட்டனர். ஆனால், எதிர்பாராதவிதமாக மனக்கசப் பின்மூலமாகவும். துயரத்தின்மூலமாகவும் இந்தக் காரியத்தைச் சாதிக்கவேண்டியதாயிற்று. மில்னர், விவசாயத்தையும், தொழில் வளத்தையும் வளர்ச்சியடையச்செய்து, 'யூனியனை' ஏற்படுத்தவேண்டுமென்று எடுத்துக்கொண்ட முயற்சியும் ஒரு வகையில் இச் சாதனையை நிறைவேற்ற உதவியாக இருந்தது. 1905-ல் தென் ஆஃப்பிரிக்காவை விட்டுச் செல்லும்வரை அவர் புரிந்த சாதனைகள் பல. ஆட்சித்துறையைச் செம்மையாக்கித் தக்க அதிகாரிகளை நியமித்து ஆட்சியை ஒழுங்காகச் செயலாற் றியது, உண்மையில், அவர் புரிந்த பெரிய சேவையாகும். ஆனால், அதேசமயத்தில், யூனியன் ஏற்படுவதற்கு இடையூறாகவும் சில காரியங்களைச் செய்தார். அவருடைய சுங்க வரி முறை, மத்திய ரெயில்வே ஆதிக்கம், கல்வி மற்றும் சுதேசிகளின் பிரச்சினை களைக் கவனிக்க ஓர் ஆலோசனைக் குழுவை நியமித்ததும் பல தொல்லைகளை அளித்தன. பேரரசு அரசாங்கம் 35 மில்லியன் பவுன்களைக் கடனாகக் கொடுத்ததும், ஒருமைப்பாட்டை ஏற்படுத்தவேண்டுமென்ற அடிப்படையில்தான் தரப்பட்டது. 1905-8 வரையிலும் கேப்பில் பிரதமராக இருந்த ஜேம்ஸன் என்ப வருங்கூட, இந்த யூனியன் உருவாவதற்குக் காரணமாக இருந் திருக்கிறார். இனவெறி மிகவும் ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்தும் என்று அவர் உணர்ந்திருந்தார். கேப்பிலும், ரொடீஷியாவிலும் அவருடைய காலத்தில் பொருளாதார மந்த நிலை ஏற்பட்டதால், அவருக்குப் பல தொல்லைகள் ஏற்பட்டன. இவர்களைத் தவிர, கேம்ப்பெல்-பானர்மென் என்பவருங்கூட இந்த யூனியன் உருவாக அவரால் இயன்றவரை உதவி செய்திருக்கிறார். யூனியனிஸ்டுகள் நிறுவிய 'கிரவுன் காலனி அரசாங்கங்களை' அவர் ரத்து செய்து, அங்கே 1907-ல் பொறுப்பான ஆட்சியையும் கேபினட்டையும் ஏற்படுத்தியுள்ளார்.

ஆனால், யூனியன் ஏற்படுவதற்கு மற்ற நிகழ்ச்சிகளும், ஆஃப் பிரிக்கண்டர்களுடைய தலைவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி யுமே முக்கியமான காரணங்களாகும். ரேண்டில் உள்ள பொன்

வயல்களில் வேலைசெய்ய மில்னர் சீனக்கூலிகளை வேலைக்கு அமர்த்தினார். அவர்களை வேலைக்கு அமர்த்துவது மிகவும் அவசியமாக அவருக்குப்பட்டது. லிபரல்கள், சீனர்களை அங்கே வேலைக்கு அமர்த்தக்கூடாதென்று தடை செய்திருந்தபோதிலுங்கூட, அந்தக் கூலிகள் அவர்களுடைய பணிகளைச் செய்தனர். உலகத்திலுள்ள மூன்றில் ஒரு பாகம் தங்கத்தை உற்பத்தி செய்கின்ற இந்த டிரான்ஸ்வால் பகுதியில், மில்னர் தகுந்த அதிகாரிகளை மட்டும் அங்கே நியமித்துச் சோதனை செய்யவில்லை. ஆனால், நல்ல தலைவர்களையும் அப் பகுதி உற்பத்தி செய்தது. 1905-ல் ஹெட் வால்க் கட்சி (Het Volk party) மூலமாக போத்தா என்பவர் அப் பகுதியிலுள்ள மக்களையெல்லாம் ஒன்றுபடுத்தினார். 1907-ல், அவரும், ஸ்மட்சும் பிரிட்டிஷ் மந்திரிகளாக அங்கே பதவி வகித்தனர். இதைப்போலவே ஃபிஷ்சர் (Fischer), ஹெர்ட்ஸாக் ஆகியோர் ஆரஞ்சு காலனியிலும் செய்தனர். ஹாஃப்மேர் (Hofmeyr) 'பாண்ட்' இயக்கத்தை விரிவாக்கி, தென் ஆஃப்ரிக்கக் கட்சியாக அதை உருவாக்கினார். 1908-ல் ஜேம்ஸனுக்குப் பின்பு மெரிமேன் பதவியேற்றார். அதனால், இந்த மூன்று பலமிக்க இனத்தவர் வசிக்கும் இடங்களில், ஆஃப்பிரிக்கண்டர் மந்திரி சபைகளே அமைக்கப்பட்டன. போர் ஏற்பட்டதால், அவர்களுடைய தேசிய உணர்ச்சி மிகவும் அதிகரித்துவிட்டது. ஆனால், ஆங்கிலேயர் மற்ற வகைகளில் பிரிந்திருந்தனர். ரேண்டில் முதலாளி தொழிலாளர் தகராறு அல்லது கம்பெனிக்கும் ரொடீஷியாவில் குடியேறிய மக்களுக்கும் தகராறு, அல்லது சுதேச மக்கள் அதிகம் மிகுந்துள்ள நேட்டாலில், அவர்களுக்கு அதிக நிலமும், வர்த்தகச் சலுகைகளைக் கோருதலும் போன்ற பல பிரச்சினைகள் ஆங்கிலேயர்களுக்கு இருந்தன.

1907-ல் மில்னருக்குப் பின்பு பதவியேற்ற செல்போர்னும் அவருக்கு உதவியாக 'யங்மென்' அல்லது இளைஞர்கள் கட்சி என்ற மில்னர் தொடங்கிய இயக்கத்தினரும் டிரான்ஸ்வால் தலைவர்களுடன் கலந்து ஆலோசனை செய்து, யூனியன் அமைவதற்கான முதல் நடவடிக்கையை மேற்கொண்டனர். இவர்கள் இந்த நடவடிக்கையில் ஈடுபடுவதற்குக் காரணங்களாக இருந்தவை, அங்கே தோன்றிய வரட்சி, பொருளாதார மந்தநிலை, ஜூலுக்களுடன் போர், சீனத் தொழிலாளிகள், இந்தியர்கள் குடியேறுதல், ரயில்வேக்களிலும், சுங்க வரிகளிலும் தகராறு போன்ற நிகழ்ச்சிகள் உடனடியாக யூனியனை ஏற்படுத்தத் தூண்டின. இரண்டு இனங்களிலுள்ள எல்லாத் தலைவர்களும் இதை வரவேற்றனர். அக்டோபர் 1908-ல் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. அதனுடைய நடவடிக்கைகள் 1909 வரையிலும் நீடித்தன. இந்த மாநாட்டிற்கு டி வில்லியர்ஸ் தலைமை தாங்

கினார், அவருக்கு உதவியாக ஸ்டெய்ன் இருந்தார். ஆங்கிலேயர்கள் இதுகாறும் செய்துவந்த முயற்சி பயன் அளிக்கவில்லை. ஆனால், இந்த மாநாட்டில் நல்ல முயற்சிகள் எடுக்கப்பட்டன. டிரான்ஸ்வால் தலைவர்கள், அவர்களுக்குவேண்டிய தேவைகளையும் அவசியத்தையும், நன்குணர்ந்து அதற்கேற்ப முன்கூட்டியே திட்டமிட்டிருந்தனர். அதன்படி அவர்கள் ஆஸ்திரேலியாவை விடக் குறைவான கூட்டரசாங்க அம்சங்களையும் கனடாவைவிட அதிக அளவில் ஒற்றை அரசாங்க அம்சங்களையும் கொண்ட அரசியல் அமைப்பை இயற்ற ஒப்புக்கொண்டனர். ஹாஃப்மேரின் எதிர்ப்பை அவர்கள் பொருட்படுத்தவில்லை. ரயில்வே வருமானத்தில் ஒரு பங்கை நேட்டாலுக்கு அளிப்பதாக வாக்குறுதி அளித்தவுடன், கூட்டரசாங்க விருப்பத்தை நேட்டால் கைவிடவேண்டியதாயிற்று. செனேட் என்ற மேல்சபையில் ஒவ்வொரு காலனிக்கும் சமநிலை பிரதிநிதித்தவம் அளிப்பதென்றாலும் அல்லது ஒவ்வொரு பழைய காலனியையும், ஒரு மாகாணமாக்கி அதில் ஒரு சட்டசபையை நிறுவுவதும் யூனியன் கீழ்ச்சபை அல்லது சட்டசபைக்கு அளிக்கப்படும் ஆதிக்க அதிகாரத்தை தடுத்துநிறுத்த முடியவில்லை. மத்திய அரசாங்கத்திற்கு வரி விதித்தல், போலிஸ், சிவில் சேவை ஆகியவற்றை நிர்வகிக்கும் அதிகாரங்கள் தரப்பட்டன. எல்லா மாகாண நீதிமன்றங்களும் தென் ஆஃப்பிரிக்க மேல் நீதிமன்றத்திற்கு அடங்கியே இருக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். ஆங்கில மொழியையும் டச்சு மொழியையும் சமநிலையில் வைத்து, இரண்டு மொழிகளுமே ஆட்சி மொழிகளாகும் என்று அறிவித்தனர். பிரட்டோரியாவில் (Pretoria) நிர்வாகத் துறையையும், மேல் நீதிமன்றம் பிளோம்ஃபான்டினிலும் (Bloemfontein), பாராளுமன்றம் கேப் டவுனிலும் வைத்துக்கொள்வதென்று இந்த மூன்று காலனிகளும் ஒப்புக்கொண்டன. விருப்பப்படி அரசியல் அமைப்பில் திருத்தம் கொண்டுவரக்கூடாதென்ற ஒரே பகுதி, கேப்பில் உள்ள ஐரோப்பியரல்லாதவர்களுடைய நலன்களைப் பாதுகாத்தது. இந்தப் பாதுகாப்பு நாடுகள் யூனியனுடன் சேரும்பொழுது அந்த நாடுகளின் பெயர்கள் நீடிப்பதும், அங்குள்ள சுதேசி மக்களின் அக்கறைகளைப் போற்றப் போதிய பாதுகாப்புத் தடுப்புகளையும் விதிக்க ஒப்புக்கொண்டன. முக்கியமாக, ஆஃப்பிரிக்கண்டர்களுடைய நோக்கம் நிறைவேறியது. எந்தச் சுதேசியும் யூனியன் சட்டசபையில் அங்கம் வகிக்கக்கூடாது. தொகுதிகளைப் பிரிக்கும்பொழுது, வெள்ளையர்களுக்குமட்டும் வாக்குரிமை இருக்கவேண்டுமென்ற அடிப்படையில் அமைக்கவேண்டும். மேலும், அவை விவசாயத் தொகுதிகளாக இருப்பது விரும்பத்தக்கது என்று அவர்கள் முடிவு செய்தனர்.

1910-ல் போத்தா முதல் யூனியன் பிரதம அமைச்சராகப் பதவி ஏற்றூர். அவருடைய கேபினட்டில் தேசிய கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பதவி வகித்தனர். ஒவ்வொரு மாகாணமும் முக்கியமான வகுப்பினரும் திருப்தி அடைவதற்காகக் கேபினட்டில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் தரப்பட்டது. மேலும், ஸ்மட்ஸ் (Smuts), ஹெர்ட்ஸாக் (Hertzog), சாயுர் (Sauer), ஃபிஷ்சர் (Fischer) ஆகியோரும் கேபினட்டில் இடம் பெற்றனர். இந்தக் கேபினட்டிலேயே, இனவெறியும், மொழி, கல்வி ஆகிய கொள்கைகளில் வேறுபாடான கருத்துகளும் நிறைய கிளம்பின. இரண்டு ஆண்டுகளில் ஹெர்ட்ஸாக் எதிர்கட்சியைத் துவக்கிவிட்டார். போத்தாவின் பெருந்தன்மையும், ஸ்மட்ஸின் திறமையும் மந்திரி சபையைப் பாதுகாத்தன. இச் சிக்கல்களைத் தீர்ப்பதற்காவது மந்திரி சபையும், யூனியனும் அவசியம் என்பதை உணர்ந்திருந்தனர். பாதுகாப்பைப்பற்றிய பெரும் பிரச்சினையும், இந்தியக் குடியேற்ற மக்களின் நலன்களைப் பாதுகாக்கவும் இந்திய மக்களின் அரசியல் உணர்ச்சியைத் தூண்டிவிட்டவருமான காந்தி அடிகள் செய்த போராட்டத்தை ஒடுக்கவும், ஐரோப்பிய நிலம் சுதேசிகளின் நிலம் என்ற தகராறும், ரேண்டில் ஏற்பட்ட வேலை நிறுத்தங்களும் அந்த மந்திரிசபைக்குப் பெரிய அதிர்ச்சியை உண்டாக்கியது.

இவ்விதமாக, அங்கேயிருந்த இனப் பிரச்சினை தீர்ந்து அவர்கள் பேரரசுடன் புதிய தொடர்பை ஏற்படுத்திக்கொண்டனர். அதற்குப் பின்பு, அங்கே பழைய பிரிட்டன், போயர் ஆகிய இரு சாராரிடையே புதிய அரசியல் பிரிவுகள் தலையெடுக்கத் தொடங்கின. 1914-ல் ஏற்பட்ட ஏகாதிபத்தியப் போரில் யூனியன் கலந்திருந்ததால், அவர்களுடைய பழைய சண்டை சிறிது காலம் ஓய்ந்திருந்தது.

# 13. லிபரலிசத்தின் இறுதிக் கட்டம், 1905-1914

அரசியல், அரசியல் கட்சியின் தொடர்ச்சி 1914ஆவது ஆண்டின் மாபெரும் போருக்குப் பிறகு ஏற்பட்ட கொந்தளிப்பில் முறிவடைந்து, பல மாற்றங்களுக்குள்ளாகிவிட்டது. சாதாரணமாக, இந்த மாற்றங்கள் ஏற்பட பல ஆண்டுகள் ஆகியிருக்கும். ஆனால், போரின் காரணமாக, எதிர்பாராத விதத்தில் இவைகள் விரைவுபடுத்தப்பட்டன. கேபினட் அரசாங்கம், அயர்லாந்து, இந்தியா, எகிப்து, ஜனநாயக வாழ்க்கைத் தரம் முதலியவை யாவும் மாறிவிட்டன. பழைய அரசியல் பிரிவினைகள் மறைந்தன; புதியதற்கு வழிவிட்டன. ரஸ்ஸலுடைய கட்சியென்றும், கிளாட்ஸ்டனின் கட்சியென்றும் இப்பொழுது கிடையாது. இருப்பினும் அவர்கள் விட்டுச் சென்ற சில மரபுகள் முற்றிலும் மாறிவிடவில்லை.

1906-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் இக் கட்சி, யூனியனிஸ்டுகள், லேபர், ஐரிஷ் கட்சிகளின் கூட்டுத்தொகையைவிட, எண்பத்துநான்கு ஓட்டுகள் அதிகம்பெற்றுப் பெரும்பான்மை ஆதரவைப் பெற்றது. இந்த முன்னேற்றம், போராட்டமில்லாமல் ஏற்பட்டதன்று. கேம்ப்பெல்-பானர்மென் அப்பொழுது ஆற்றல்மிக்க கேபினட்டை அமைத்தார். அவர் பிரதமராக இருப்பதற்குத் தகுதியற்றவரா என்பதைப்பற்றி யாரும் ஆட்சேபிக்கவில்லை. எனினும், அவருடைய உடல்நிலை சரியில்லாததாலும், திறமையும் மிதமானதாக இருந்ததாலும், லிபரல் பேரரசுவாதிகள் அவரை ஒரு பிரபு பட்டத்தைப் பெற்றுப் போகாமல் ஒய்வு எடுத்துக்கொள்ளும்படி ஆலோசனை கூறினார்கள். ஆனால், அவர் பிரதமராக இருப்பதைக் கட்சியின் பெரும்பான்மையினர் விரும்பினர். அதற்குக் காரணம், அவர் கட்சியின் ஒற்றுமையைப் பாதுகாத்தார். ஏழாவது எட்வர்ட் மன்னரும் அவரை மிகவும் பாராட்டியிருக்கிறார். லிபரல் பேரரசுவாதிகள் மெதுவாக அவரிடமிருந்து பதவியைப் பறித்துக் காமன்ஸ் சபையில் உள்ள ஆஸ்குவித் தலைமையில் கொடுத்துவிட

வேண்டுமென்று விரும்பினர். அயல்நாட்டு விவகாரத்தை ரோஸ்பரிக்குப் பின்பு கவனித்துவந்த கிரே, ஹால்டேன் ஆகியோர், ஆஸ்குவித் பதவி அடைவதற்காக வேலை செய்தவர்களில் மிகவும் முக்கியமானவர்களாவர். ஆனால், இதைக் கேம்ப்பெல்-பானர்மேன் சிறிதும் விரும்பவில்லை. பொது மக்களுக்காற்றும் பணியை இன்னும் தொடர்ந்து செய்வதில் அவருக்கு அதிக ஆர்வம் இருந்தது. இந்தக் கேபினட்டில், இராச்சியவாதிகளும், நல்ல ஆட்சித்திறமை படைத்தவர்களும் பதவி வகித்தனர். இந்தக் கேபினட்டில் லாயிட் ஜார்ஜ், மார்லி, கிரு (Crewe), லெவிஸ் ஹார்கோர்ட் (Lewis Harcourt) ஆகிய மிகச் சிறப்புடைய மந்திரிகளும், உதவி மந்திரிகளாக மேக்கென்ன (McKenna), வின்ஸ்டன் சர்ச்சில், ஸாமுவெல், ரன்ஸிமேன் ஆகியோரும் அதில் அங்கம் வகித்தனர்.

கட்சியில் ஏற்பட்டிருந்த பிளவுகளாலும், பல்ஃபோர் அரசாங்கம் செய்யத் தவறிவிட்ட சில சீர்திருத்தங்களாலும், என்ன எதிர்வினை ஏற்பட்டிருக்கின்றதென்பதை அந்த மந்திரிகள் அனுபவவாயிலாக உணர்ந்திருந்தனர். அவர்களுடைய சீர்திருத்த உணர்ச்சி நீண்ட நாட்களாகவே தடுத்து நிறுத்திவைக்கப் பட்டிருந்தது. இவ்வளவு பெரும்பான்மை ஆதரவை வைத்துக் கொண்டு, அவர்கள் சாதிக்கப்போகின்ற காரியங்களைப் பொறுத்தே, அந்த லிபரல் கட்சியின் எதிர்காலம் அடங்கியிருந்தது. ஆஸ்குவித் போன்றவர்கள், கிளாட்ஸ்டனுடைய லிபரலிசக் கொள்கைகளான சமாதானம், சிக்கனச் சீரமைப்பு, சீர்திருத்தங்கள் ஆகியவற்றோடு நிறுத்திக்கொள்ளலாம் என்னும் கருத்துடையவராக இருந்தனர். சிலர் மேலும் மக்களுக்குப் பிடித்த ஜனநாயகக் கொள்கைகளையும், இன்னும் அதிகமான அளவில் சோஷியலிசக் கருத்துகளுக்கு மதிப்பைத் தருதலும், தாராள செலவினங்களைச் செய்வதிலும் அதன் எதிர்காலம் அடங்கியிருக்கின்றதென்று கருதினர். இந்த அடிப்படைப் பிரிவு போர்க்காலத்திற்கு முன்பிருந்த இரண்டு சட்டங்களை எடுத்துக்காட்டுகின்றது. கேம்ப்பெல்-பானர்மென் பதவியை விட்டு ஏப்ரல் 1908-ல் விலகிவிட்டதாலோ, அதற்குப் பின்பு இறந்துவிட்டதாலோ ஏற்பட்டது என்று சொல்லுவதற்கு இல்லை. ஒருவகையில் 1909-ல் லாயிட் ஜார்ஜ் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்திலும், அதற்குப் பின்பு ஏற்பட்ட விளைவுகளிலும் இது புலனாயிற்று. ஆஸ்குவித், லாயிட் ஜார்ஜ் ஆகிய இருவரிடமும், இரண்டு விதமான லிபரலிசக் கொள்கைகளும், இரண்டுவித வாய்ப்புகளும் அழுத்தமாக வெளிவந்த போதிலும், அவைகளைப் போட்டிப் பிரிவுகள் என்று கருதாது, ஒன்றுக்கு

ஒன்று உதவுகின்றபிரிவே என்று கருதவேண்டும். லாயிட் ஜார்ஜ் பாராளுமன்றத்தில் கடைசி பெஞ்சில் உட்கார்ந்திருக்கும் பொழுதே, ஆஸ்குவித் பெரிய பதவியில் இருந்திருக்கிறார். மேலும், அவர் லாயிட் ஜார்ஜைவிட பதினொரு ஆண்டுகள் மூத்தவர். அவர் பழமையை விரும்புகிற பரம்பரையைச் சார்ந்தவர். திருச்சபையில் இணங்காதவரும், யார்க்ஷயரில் தொழில் செய்யும் வகுப்பினரைச் சார்ந்தவருமான ஆஸ்குவித், ஜோவட் பேலியில், பள்ளியில் நல்ல விதமாகப் படித்து முன்னேறிச் சிறந்த வழக்கறிஞருமாக இருந்திருக்கிறார். அவருக்குக் கூரிய அறிவுத்திறன் இருந்தது. எதையும் தெளிவாகவும் சிறப்பாகவும் பேசும் திறமை படைத்தவர் அவர். அவருக்கு விசுவாசமும், அதேசமயத்தில் பற்றற்ற தன்மையும் இயல்பாக அமைந்திருந்தன. இத்தனை பெரிய திறமைசாலியுங்கூடப் பிரதமராகப் பதவிவகித்தவுடன், அவருடைய திறமைக்கும் சாதனைக்கும் பொறுத்தமில்லாமல் போய்விட்டது. சிறிது வேகமாகவே முதுமையை அடைந்தவர் போலவும், எந்த முடிவைச் செய்வதிலும் காலதாமதம் செய்தல் போன்ற குறைபாடுகள் சில அவரிடம் காணப்பட்டன.

ஆனால், லாயிட் ஜார்ஜ் இவருக்கு முற்றிலும் மாறுபட்டவர். வெல்ஷ் ஆரம்பப் பள்ளியில் படித்துப் பின்பு அங்கேயே வழக்கறிஞராகப் பணியாற்றியவர். கெல்டிக் மக்களுடைய இயல்பான தன்மைகள் இவரிடம் அப்படியே காணப்பட்டன. அவருடைய குரல் மிகவும் இனிமையானது. அவர் சிறந்த நாவன்மை படைத்தவர். அவருடைய பேச்சில், நகைச்சுவையும் நையாண்டித் தன்மையும் மிகுந்திருந்தன. அவருடைய கொள்கைகளுக்காகப் போராட்டம் நடத்தியாவது சாதிக்கவேண்டுமென்ற ஆர்வம் படைத்தவர். மக்களுடைய காரணமில்லாத வறுமை நிலையும், போரின் அபாயத்தையும், பேரரசில் நம்பிக்கையின்மையும் அவர் உணர்ந்திருந்தார். மேலும், திருச்சபை, முதலாளித்துவம் ஆகியவற்றை அவர் வெறுத்தார். நிலப் பிரபுக்களைக் கண்டால் அவருக்குப்பிடிக்காது. மனத்திலும் தன்மையிலும் ஆஸ்குவித்தை ஒரு சாதாரண உலோகத்திற்கு ஒப்பிட்டால், லாயிட் ஜார்ஜை அந்த உலோகத்திற்கு வெள்ளி முலாம் பூசியதற்கு ஒப்பிடலாம். நல்லதற்கும் சரி, கெட்டதற்கும் சரி, அவர் நெகிழ்ச்சியுடைய தன்மையுடையவர். ஒழுக்க நிலையைப்பற்றியும் அதிகமாகக் கவலைப்படாதவர். ஆணவ மனப்பான்மையுடையவர். கட்சிக் கொள்கைகளிலும் அதிகப் பற்றுடையவரல்லர். ஆனால், அவர் விரைவாகக் காரியங்களைச் சாதிக்கும் திறமையும், பிறரைக் கவர்ச்சி செய்கின்ற தன்மையும், உள்ளக் கிளர்ச்சியுமுடைய

வராக இருந்ததால், கேபினட்டில் புதிய ஜனநாயக காலத்தின் பிரதிநிதியாக இருந்த ஜான் பர்ன்ஸ் என்பவரைவிடச் சிறப்புடையவராக இருந்தார்.

முதல் கட்டத்தில் கேம்ப்பெல்-பானர்மென் என்பவருக்கு எழுபது வயதாகிவிட்டபோதிலும், அவர் கட்சியிலிருந்த இளைஞர்களுக்கு நல்ல ஆதரவு அளித்து அவர்களை முன்னணிக்குக் கொண்டுவந்தார். அதனுல், இளைஞர்களுக்கு அவர் காலத்தில் முன்னுக்கு வர வாய்ப்பே இல்லையென்ற சந்தேகம் நீங்கியது. அதனுல், இளைஞர்கள் சாதித்த பெரும் சாதனைகளுக்கு இவர் பெரும் உதவியாக இருந்தார் என்று கூறினுல் மிகையாகாது. தென் ஆஃப்பிரிக்காவிற்கு உடனடியாகப் பொறுப்பாக ஆட்சி அளிக்கவேண்டுமென்று அவர்தான் முயற்சி செய்தார். பின்பு, பிரபுக்கள் சபைக்குச் சவால்விட்டதும், 1906-ல் தொழிற் தகராறு சட்டம் இயற்றுவதற்கும் காரணமாக இருந்தது அவர் தான். ஐம்பது தொழிலாளர் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டதால் இந்தத் தொழில் தகராறு சட்டம் அவசரமாக இயற்றப்படவேண்டியதாயிற்று. மேலும், சில நீதிபதிகளின் முடிவுகளால் தொழிற் சங்கங்களுக்குச் செயலாற்ற முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. இந்த நிலை மேலும் நீடித்திருக்கக் கூடாது என்று அவர் கருதினுர். அப்பொழுது இந்தத் தொழிற்சங்கங்களின் நிலை மிகவும் முரண்பட்டதாக இருந்தது. பல அங்கத்தினர்களைக் கொண்டுள்ள ஒரு கழகமே என்ருலுங்கூடச் சட்டபூர்வமான அங்கீகாரம் பெருத கழகங்களாக இன்னும் இருந்தன. அவற்றின் செயல்கள், பெரும்பாலும் பொருளாதாரத் துறையைப் பொறுத்ததாக இருந்தாலும், சில அரசியல் பணிகளையும் அவை ஏற்றிருந்தன என்று கொள்ளவேண்டும். மேலும், அந்தக் கழகத்திலுள்ள அங்கத்தினர்களைக் கண்காணிக்க அக் கழகத்து அதிகாரிகளுக்குச் சரியான அதிகாரங்கள் கிடையா. அக் கழகங்களுக்கான நிதி வசூல்கள் பல பக்கங்களிலிருந்தும் வசூலிக்கப்பட்டவை. ஆனுல், அந்த நிதி இன்ன காரணங்களுக்குத்தான் பயன்படவேண்டுமென்று வரையறுக்கப்பட்டிருந்தது. 1871-ல் இயற்றிய சட்டங்களும் 1875-6-ல் இயற்றிய சட்டங்களும் இந்தச் சங்கங்களின் நிதியை நஷ்ட ஈட்டிற்காகப் பறிமுதல் செய்யாதபடி காப்பாற்றின. மேலும், மறியல் செய்வதற்கும், ஓரளவிற்கு அச் சங்கங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டிருந்தது. மேலும், இந்தச் சங்கங்கள் வேலை நிறுத்தம் அல்லது மறியல் ஆகிய செயல்களில் ஈடுபட்டிருந்ததால் அச் செயல்கள் சதிக்குற்றங்களாகா என்ற அளவில் சட்டமும் இவர்கள் சார்பாகவே அமைக்கப்பட்டிருந்ததும் உண்மையாகும். ஆனுல், சில சமயங்களில் சட்டங்களை

அவர்களுக்குப் பாதகமாகவும் திருப்பமுடிந்தது. தெற்கு வேல்ஸில் உள்ள டேஃப் வேல் ரயில்வே (Taff Vale Railway) தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்தனர். ரயில்வே கம்பெனிக்கும் ரயில்வே தொழிலாளர் யூனியனுக்கும் தகராறு முற்றவே, பிரபுக்கள் சபையில் அந்தத் தகராறு முறையிடப்பட்டது. பிரபுக்கள் சபை இந்த முறையீட்டை விசாரித்து முடிவு சொல்லும்பொழுது, இந்த வேலைநிறுத்தம் அதிகாரபூர்வமாகச் செய்யப்பட்டதன்று என்றும், சில வன்செயல்களை ஒப்புக்கொள்ள முடியாதென்றும் கூறி, ரயில்வே தொழிலாளர் யூனியன் இதனால் ஏற்பட்ட நஷ்ட ஈட்டுத் தொகையை அளிக்கவேண்டுமென்று அறிவித்தது. தொழிலாளர் இந்தக் குறைகளை அகற்றவேண்டுமென்றும், இதுகாறும் அவர்கள் அனுபவித்துவந்த தொழிற் சங்க உரிமைகளை மீண்டும் நிலைநிறுத்தவேண்டுமென்றும் கூறியதல்லாமல், எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளும், மேலும் ஓரளவிற்கு ராயல் கமிஷன்கூட, இக் குறைகளை அகற்றவேண்டுமென்று கோரினர். இந்தக் குறைகளை எப்படிச் சட்டமூலமாக அகற்றுவது என்று விவாதித்தனர் இந்த விவாதத்தில் கேம்ப்பெல்-பானர்மென் குறுக்கிட்டுச் சட்ட அதிகாரிகள் எடுத்துக்கூறிய பாதுகாப்புத் தடுப்புகளைப் புறக்கணித்துவிட்டு மசோதாவிலேயே தொழிலாளர்களுக்குச் சாதகமாக ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்தார். இந்தத் திருத்தத்தை ஆஸ்குவித்தும் அங்கீகரித்தார். இப்படி உருவாகிய 1906ஆவது ஆண்டுச் சட்டம் தொழிற் சங்கங்களுக்குச் சதிக்குற்றங்களிலிருந்து பாதுகாப்பு அளித்ததுமட்டுமன்றி, அமைதியான முறையில் மறியல் செய்வதையும் அனுமதித்தது. மேலும், எந்த நீதிமன்றமும் தொழிற் சங்கத்தின் மீது சிவில் வழக்குத் தொடர்வதை ஆதரிக்கக்கூடாது என்று கூறினர்.

1909-ல் அரசாங்கத்திற்கும் தொழிற் சங்கங்களுக்கும் இன்னும் பல தொடர்புகள் ஏற்பட்டன. ஆஸ்போர்ன் வழக்கில் ரயில்வே யூனியனின் ஒரு கிளை நிறுவனம், அந்தச் சங்கத்திலிருந்து தொழிலாளர் கட்சிக்கு எப்படிப் பொது நிதியிலிருந்து எடுத்துக் கொடுக்கலாம் என்ற பிரச்சினையைக் கிளப்பி, பின்பு இவ் வழக்கு, பிரபுக்கள் சபைக்கு விசாரணைக்குச் சென்றது. இப்படிச் செய்தது தவறு என்று பிரபுக்கள் சபை முடிவு செய்தனர். இந்தத் தொழிலாளர் பிரதிநிதிகள் போதிய வருமானத்தைப் பெறப் பாராளுமன்றம், பழைய ரேடிகல்களின் ஆலோசனைப்படி, பாராளுமன்ற அங்கத்தினர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு 400 பவுன் சம்பளமாகத் தருவதென்று முடிவு செய்தனர். இந்த முடிவு 1911-ல் செய்யப்பட்டது. அவர்களது அடுத்த சட்டம் 1913-ல் இயற்றப்

பட்டது. அதன்படி, அரசியல் கட்சிக்கு, அதன் அங்கத்தினர்கள் பொது நிதியிலிருந்து பணம் கொடுக்கவேண்டுமென்று வாக்களிப்பின்மூலமாக முடிவு செய்தார்களென்றால், தாராளமாகக் கொடுக்கலாம் என்றும், அப்படி விரும்பாதவர்கள் ஒதுங்கி விடலாம் என்று அறிவித்தனர்.

தொழிலாளர்களுக்கு இயற்றிய இந்தச் சட்டங்கள் நாளடைவில் பெரிய பிரச்சினையை உருவாக்குகின்ற சூழ்நிலைக்கு, அறிகுறிகளாக அமைந்தன. ஏனெனில், மூன்றாவது கட்சியாகத் தோன்றிய தொழிலாளர் கட்சி, 1910-ல் நடந்த தேர்தல்களில் அதிகப் பிரதிநிதிகளைப் பாராளுமன்றத்திற்கு அனுப்ப முடியவில்லை. அவர்கள் பெருமளவில் தோல்வியுற்றனர். அவர்களுடைய வாக்காளர்கள் எண்ணிக்கைக்கேற்பத் தொழிலாளர் பிரதிநிதிகள் வெற்றிபெற முடியவில்லை. அதனால் இந்த இடது சாரித் தலைவர்கள் அரசியலில் அதிகமாகப் போட்டி போடுவதைவிட, பொருளாதாரத் துறையில் முதலாளி, தொழிலாளி என்ற இனப் போராட்டத்தில் ஈடுபட்டு, சோஷியலிஸ்டு அரசாங்கத்தை ஏற்படுத்த முயன்றனர். இதனால் அவர்கள் பலவேலை நிறுத்தங்களை செய்வதும், வன்செயல்களில் ஈடுபடுவதும் போன்ற செயல்களில் அதிகக் கவனம் செலுத்தினர். தவிர, வெளிநாடுகளிலிருந்து வந்த புரட்சிகரமான கருத்துகள் தொழிலாளரிடம் கற்பிக்கப்பட்டன. ஜெர்மனி நாட்டைச் சார்ந்த கார்ல் மார்க்ஸ், அல்லது அமெரிக்க தீவிரவாதிகள், அல்லது ஃபிரெஞ்சு சிண்டிகலிஸ்டுகள் ஆகியோரின் கருத்துகளில் யாருடைய கருத்துகள் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தது என்று சொல்ல முடியாது. இதற்கு மாறாக, எல்லாக் கருத்துகளும் இனப் போராட்டத்தையே அடிப்படையான பிரச்சினையாகக் கொண்டிருந்ததால், பொருளாதாரக் குழுவினர் வேலைநிறுத்தங்கள், வன்செயல்களில் இறங்குதல் போன்ற நேரடியான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். இந்தப் போராட்டம் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தது வாழ்க்கைத் தரம் உயர்வதற்கேற்ப 1912வரையிலும் கூலிகளில் உயர்வு ஏற்படவில்லையென்பதும், பின்பு அதன் காரணமாக ஏற்பட்ட தொழில் தகராறுகளுமே யாகும். தொழிற்சங்கங்களில் இணைக்கப்பட்டு, ஆதிக்கம் செலுத்துகின்ற வரையில் மத்திய தொழிற் சங்கத்திற்குச் செல்வாக்கு ஏற்பட்டுவிட்டதால் அவர்களுடைய போராட்டம் அப்பொழுது உச்சகட்டத்தையே அடைந்தது. 1911-12-ல் துறைமுகத் தொழிலாளிகள், கப்பல் தொழிலாளிகள், ரெயில்வே தொழிலாளிகள், சுரங்கத் தொழிலாளிகள் ஆகியோர் நாடு முழுவதும் வேலைநிறுத்தம் செய்தனர். இவ் அரசாங்கத்தின்

முதல் கட்டத்தில், இந்தப் பிரச்சினைகள் பெரிய தலைவலியைக் கொடுத்தன என்பதை மறக்கலாகாது.

பெரிய பிரச்சினைகளில் ஐரிஷ்காரர்கள் எதற்கும் ஒத்து வராததாலும், மேலும், ஐரிஷ் வோட்டுகளைப் பெருமலேயே சாதிக்க முடிந்ததாலும், அயர்லாந்தின் வளர்ச்சிக்காக அவர்கள் ஒன்றும் செய்யவில்லை. ஆனால், 1907-ல்மட்டும் அயர்லாந்தின் தல அரசாங்கம், கல்வி, விவசாயம் போன்ற துறைகளை தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் குழுவிடம் ஒப்படைப்பது என்று திட்டமிட்டனர். ஆனால், ஐரிஷ்காரர்கள் ஒரு மாநாட்டைக் கூட்டி, அந்தத் திட்டத்தை ஏற்கமுடியாது என்று அறிவித்துவிட்டனர். அரசாங்கத்தின் மற்றப் பழைய பிரச்சினைகளான தென் ஆஃப்பிரிக்கா, சீனக் கூலிகள், கல்வி, தடையிலா வாணிபம் போன்றவைகளில் அவர்கள் கவனம் செலுத்தினர். கல்வித்துறையில் சீர்திருத்தம் கொண்டுவர வேண்டுமென்ற ஒரே ஆர்வத்தால் சில மாற்றங்களைச் செய்ததில் கடைசி முறையாக, திருச்சபையினருக்கும், அச் சபையில் இணங்காதார்களுக்கும் இடையே பெரிய பகைமை ஏற்பட்டது. 1906-ல் பிர்ரல் (Birrell) கொண்டுவந்த கல்வி மசோதாவைக் கேபினட்டில் உள்ள பல மந்திரிகளுங்கூட ஆதரிக்காத அளவற்குத் தீவிரமான மாற்றங்களைக் கொண்டதாக இருந்தது. உண்மையில் அந்த மசோதா, பெரும்பான்மையினரின் சகிப்புத் தன்மை இல்லாமையை எடுத்துக் காட்டியது. தலஅரசாங்கங்கள் மட்டுமே ஆரம்பப் பள்ளிகளை வைத்து நடத்தவேண்டுமென்றும், திருச்சபையினர் வைத்து நடத்தும் பள்ளிகளை அவர்களிடமே ஒப்படைத்துவிட வேண்டுமென்றும், அவர்களே எல்லா ஆசிரியர்களையும் நியமனம் செய்துகொள்ளலாம் என்றும் கூறினர். பள்ளிகளில் எவ்விதமான மதபோதனையையும் அளிக்கலாம் என்பது அப் பள்ளி அதிகாரிகளின் விருப்பத்தைப் பொறுத்துள்ளது என்றும், ஆனால், மாற்றப்பட்ட பள்ளிகளில் கொடுக்கப்படும் மதபோதனை அந்தப் பள்ளியில் கற்பிக்கின்றவர்களால் செய்யக் கூடாதென்றும் கூறினர். இந்த மசோதாவைப் பிரபுக்கள் சபை நிராகரித்தது. 1908-ல் மேக்கென்ன (McKenna) ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அவருடைய திட்டத்தில் திருச்சபையினர் வேண்டுமென்றால் தனியாகப் பள்ளிகளை நடத்துவதை அவர் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், மிக முக்கியமான மாற்றம் அதற்கடுத்த ஆண்டில், ரன்சிமேனும் காண்டர்பரி ஆர்ச்பிஷப் டேவிட்சனும் கொண்டு வந்த திட்டத்தில் ஒருவித சமரசம் ஏற்பட்டது. ரன்சிமேன், மேக்கென்னவிற்குப் பின்பு பதவிக்கு வந்தவர். தனிப் பள்ளிக்கூடம் இருக்கும்

தொகுதிகளைத் தவிர, மற்றப்பகுதிகளில் திருச்சபையினர் தங்கள் விருப்பப்படி பள்ளிகளை அமைத்துக்கொள்வதும், மேலும் தல அரசாங்கத்தின்கீழுள்ள எல்லாப் பள்ளிகளிலும், சமயபோதனைக்காக வசதிகளைச் செய்துகொடுக்கவும், அதற்காக உதவி ஆசிரியர்களையும் நியமிக்கவேண்டுமென்று கோரினர். ஆனால், திருச்சபை நிர்வாகிகள் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொள்ளாததால், இந்த முயற்சியும் வீணாகியது.

அப்பொழுது பிரபுக்கள் நிராகரித்த பல மசோதாக்களில் கல்வி மசோதாவும் ஒன்றாகும். 1906-ல் பிர்ரல்லின் கல்வி மசோதாவைப் பிரபுக்கள் சபை நிராகரித்தது. அதைப்போல, பன்மைமுறை வாக்களிப்பை ரத்து செய்யும் மசோதாவையும் ஏற்றுக்கொள்ளவில்லை. 1907-ல் ஸ்காட்லாந்திய நிலச்சீர்திருத்த மசோதாக்கள் இரண்டையும், 1908-ல் அரசன் எடுத்துச் சொல்லியுங்கூட, அனுமதி வழங்கும் மசோதாவையும் நிராகரித்தனர். அனுமதி வழங்கும் மசோதாவை (Licensing Bill) ஆஸ்குவித் அந்த ஆண்டின் முக்கியமானதொரு சாதனையாக இருக்கும் என்று கருதினார். 1893-ல் இதைப் போன்ற சூழ்நிலை ஏற்பட்டதால்தான், கிளாட்ஸ்டன், பிரபுக்கள் சபைமீது போராட்டம் நடத்துவது என்று முடிவு செய்திருந்தார். கன்சர்வேடிவ் அரசாங்கங்கள் கொண்டுவரும் மசோதாக்களைமட்டும் அப்படியே ஒப்புக்கொள்வதும், ஆனால், மிக் முக்கியமான மசோதாக்களை லிபரல் அரசாங்கம், பெரும்பான்மையான ஆதரவுடன் கொண்டுவந்தாலும் நிராகரிப்பது என்பதும் ஒரு மேல்சபைக்கு அழகன்று என்று லிபரல்கள் கருதினர். பிரபுக்கள் சபையில் பரம்பரையாக வந்த பிரபுக்கள் எப்படியும் ஜனநாயகக் காலத்திற்கேற்பத் தோன்றும் மாறுதல்களை ஒப்புக்கொள்ளவே மாட்டார்கள் என்பதை எல்லாக் கட்சியினரும் ஒப்புக்கொண்ட உண்மைதான் என்றாலும், இந்த மேல் சபையை எப்படி மாற்றி அமைப்பது என்பதில் பல சிக்கல்கள் இருந்தன. குறிப்பாக, ரோஸ்பரி இதை நன்றாக உணர்ந்திருந்தார். ஆனால், பிரபுக்கள் சபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரபுக்களை அங்கத்தினர்களாகக் கொண்டுவந்தாலும், அல்லது ஆயுள் பிரபுக்களைக் கொண்டு வந்தாலும், இந்த மேல்சபை இன்னும் பலமுள்ளதாக மாறிவிடும் என்பது தெரிந்ததே. ஆனால், கேம்ப்பெல்-பானர்மென் இந்தப் பிரபுக்களின் அதிகாரங்களைக் குறைத்துவிடவேண்டுமென்ற எண்ணத்தில் 1907-ல் தடுத்து நிறுத்தும் அதிகாரம்மட்டுமே தரவேண்டுமென்று ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். இவ்விதமான ஆலோசனையை 'பிரைட்' என்பவர் பல ஆண்டுகளுக்கு முன்பே கூறியிருக்கிறார். ஒரே பாராளுமன்றத்தில்,

காமன்ஸ் சபையின் முடிவே மேலானதாகக் கருதவேண்டு மென்று கருதினர்.

பதவி வகிக்கின்றவர்களிடையே மாற்றங்கள், சர்வதேசிய விவகாரங்களில் முக்கியத்துவம் அளித்தல், இன்னும் கட்சிக் குள்ளேயே மாறுபட்ட கருத்துகள் இருப்பதால் முன்னேற்றக் கொள்கைகளைச் சாதிப்பதில் தயக்கம் ஆகிய பலவகைச் சிக்கல்கள் அவர்களுக்குமிருந்தன. 1895-ல் செய்ததைப்போல, கன்சர்வேடிவ்கள் இந்த அரசாங்கத்தையும் வாட்டி வதைக்க முடியும் என்று கருதினர். வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிக் கொண்டே வந்தது. பல வகைகளில் மக்கள் அதிருப்தி அடைந் திருந்தனர். இடைக்காலத் தேர்தல்கள் கட்சிக்குச் சாதகமாக இல்லை. ஆனால், 1909-ல் பிரபுக்கள் ஒரு பெரிய தவற்றைச்செய்து விட்டனர். அதனால் அவர்களுடைய பகைவர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது.

சிறப்புற்ற கிளாட்ஸ்டனுடைய கொள்கைகளையே நீதித் துறையில் ஆஸ்குவித் பின்பற்றி வந்தார். அவர், தேயிலை மீதிருந்த வரியையும், சர்க்கரை மீதிருந்த வரியையும் குறைத்தார். யுத்த தளவாடங்களில் ஏற்பட்ட செலவினங்களைக் குறைத்தார். அவர், வரவு செலவினத்தை 150 மில்லியன் பவுன்களுக்குக் குறைவாகவே வரையறுத்திருந்தார். தடையிலா வாணிகத்தை விடாப்பிடியாகப் பல காலனிகளின் எதிர்ப் பிற்கும் மாறாகப் பின்பற்றினார். உழைத்துப் பெறுகின்ற ஊதியத்திற்கும், உழைக்காது பெறுகின்ற ஊதியத்திற்கும் உள்ள வேறுபாட்டை அவர் கொண்டுவந்தார். சேம்பர்லேன், ஏற் கெனவே திட்டமிட்டிருந்த வயோதிகர் பென்ஷன் திட்டத்தை 1908-ல் அவர் கொண்டு வந்தார். அதன்படி, அரசாங்கம் எழுபது வயதிற்கு மேற்பட்ட வயோதிகர்களின் வார வருமானம் 10 ஷில்லிங்குக்கு மேற்படாமல் இருந்ததால், அவர்களுக்கு வாரம் ஒன்றுக்கு 5 ஷில்லிங் வீதம் கொடுப்பதென்று முடிவு செய்தனர். ஆஸ்குவித் பிரதமரான பின்பு, நிதித்துறையை லாயிட் ஜார்ஜிடம் ஒப்படைத்துவிட்டார். அவர் பிரதமரான பின்பு, அவருடைய தன்மையில்மட்டும் மாறுதல் ஏற்படவில்லை. அப்பொழுதிருந்த சூழ்நிலையிலும் பெரிய மாறுதல் ஏற்பட் டிருந்தது. வாணிகம் மிகவும் கீழிறங்கிவிட்டது. இத்துடன் புதிய பென்ஷன் திட்டத்திற்கு அரசாங்கம் பணம் செலவழிக்க வேண்டியிருந்தது. ஜெர்மனியின் புதிய கடற்படைச் சட்டம் பிரிட்டனுக்கு பெரிய நெருக்கடியை ஏற்படுத்தும்படி இருந்தது. அதனால் உடனடியாக, எட்டுப் புதிய போர்க்கப்பல்களை நிர் மாணிக்கவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. லாயிட் ஜார்ஜ்

சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டம், சமுதாயத்தினருக்கும் அரசியல்வாதிகளுக்கும் ஓர் அறைகூவல் விடுத்ததைப்போன்று காணப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். புதிதாகத் தோன்றிய மோட்டார் போக்குவரத்துக்கும் இயற்கை வளங்களைப் பெருக்கவும், ஒரு சாலைக்குழுவும் அபிவிருத்தி நிதியும் தோற்றுவிக்கப் பட்டன. மது விற்பதற்கு அதிக அனுமதிகள் வழங்கப்பட்டன. மது வழங்கும் அனுமதிகளைக்கொண்ட ஒரு மசோதாவைப் பிரபுக்கள் சபை நிராகரித்தற்கு, இது ஒரு சவாலாகும். மேலும் வருவாய்களை அதிகரிக்க, அவர், 5000 பவுன்களுக்கு மேற்பட்ட சொத்துடையவர்களுக்கு அதிக மரணவரி விதித்தார். வருமான வரியை 1 ஷில்லிங் 2 பென்சாக உயர்த்தினார்; 5000 பவுன்களுக்கு மேற்பட்ட வருமானமுள்ளவர்களுக்கு அமிதவருமான வரியையும் விதித்தார். வீட்டு மனைகளுக்கும், குத்தகை நிலங்களுக்கும், அபிவிருத்திசெய்யாத நிலங்கள், உலோக உரிமைகள் ஆகிய வற்றிற்கும் இவ் வரிகள் போடப்பட்டதால், எதிர்க்கட்சியினர் ஆட்சேபித்தனர். இதனால் எதிர்காலத்தில் நகர விஸ்தரிப்பு ஏற்படுவது தடைப்படும் என்று கூறினர். இதைப் போர் வரவு செலவுத் திட்டம் என்று பறைசாற்றினர். வறுமையை எதிர்த்துப் போரிடுவதற்காகவும், மக்களிடமிருந்து பெறுகின்ற பணத்திற்கேற்ப அவர்களுக்கே அவ்வளவு நலன்களையும் செய்ய வேண்டுமென்று அவர் கூறினார். இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பின்தொடர்ந்து கோமகன்களைப்பற்றியும், கோழிப்பண்ணை வைத்து நடத்துகிறவர்களைப்பற்றியும், எப்படி அவர்கள் தூங்கிக்கொண்டே சீமான்களாகிறார்கள் என்பதைப் பற்றியும் விவாதம் நடந்தது. சொத்து வைத்திருப்பவர்கள், தங்களுக்கு வரும் உழைக்காத வருமானத்தின்மீது வரி விதிப்பதை ஆட்சேபித்தனர். அவர்களுடைய சொத்துகளைப் பறிமுதல் செய்வதுபோல இருக்கிறது இந்த மசோதா என்று அவர்கள் வாதாடினர். காப்புத் தீர்வைகளில் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவேண்டுமென்று விரும்புகிறவர்கள், இந்த வரிகளினால், அவர்கள் போட்ட மற்றத் திட்டங்கள்மூலமாக வருவாயைச் சம்பாதிப்பது கடினமாகிவிடுமே என்று குறை கூறினர். ஆனால், எல்லாவற்றையும்விட, எதிர்க்கட்சியினர் தனிப்பட்ட முறையில் லாயிட் ஜார்ஜ்மீதுதான் பாய்ந்தனர். இருபது ஆண்டுகளுக்கு முன்பு, சேம்பர்லேனைத் தாக்கியதைப் போல, அடுத்தது, இவரைத்தான் தனிப்பட்ட முறையில் கண்டிக்க ஆரம்பித்துவிட்டனர்.

இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பிரபுக்கள் சபை முழுவதுமாக நிராகரித்தது. அரசனும், மற்றும் செயின்ட் ஆல்ட்வின்,

கிரோமர் ஆகியோர் எவ்வளவோ சொல்லியுங்கூட எதிர்க் கட்சித் தலைவர்களான பல்ஃபோர், லேண்ட்ஸோன் ஆகியோர் பிரபுக்கள் சபையில் வரவு செலவுத் திட்டம் நிராகரிக்கப் பட்டதை இவர்கள் அனுமதித்தனர். நவம்பர் மாதத்தில் பிரபுக்கள் சபையில் 350 : 75 வோட்டுகள் பெற்று, இந்த மசோதா நிராகரிக்கப்பட்டது. இதனால் காமன்ஸ் சபையினருக் குக் கோபம் வந்தது. பிரபுக்கள் சபை வரவு செலவுத் திட்டத்தை நிராகரித்தது அரசியல் அமைப்பிற்கே விரோதமானதாகும். மேலும், காமன்ஸ் சபையின் உரிமைகளை அது பறித்துக்கொள்வது போலாகும் என்று காமன்ஸ் சபை அறிவித்தது. கடந்த இரண்டு நூற்றாண்டுகளாகப் பிரபுக்கள் சபை நடந்துகொண்டு வரும் முறையைப் பார்த்தால், காமன்ஸ் சபையின் அறிக்கை மிகவும் பொருத்தமானதாகக் காணப்படுகிறது. இதற்குப் பின்பு, இரு சபைகளிடையே பெரிய போராட்டம் நடக்கவேண்டிய நெருக் கடி உண்டாயிற்று. இதனால் அரசாங்கத்தின் எதிர்காலம், அரசனின் எதிர்காலம், மக்களின் மன எழுச்சி முதலியவை அடங்கியிருந்தன. ஆனால், இதற்கு முடிவு, இரண்டு தேர்தல்கள் நடந்து, மேலும் அரசியல் மாற்றங்கள் ஏற்பட்ட பிறகே காணப் பட்டது.

அரசனும், பிரதம அமைச்சர் ஆஸ்குவித்தும் ஆட்சியை மிகவும் நல்ல முறையிலும் நிதானமாகவும் நடத்திச் சென்றனர் என்பதில் சந்தேகம் இல்லை. அரசியல் அமைப்பைமீறி அவர்கள் ஒன்றும் செய்யவில்லை. ஆனால், பிரபுக்கள் சபை, அரசாங்கத் தின் மசோதாக்களை நிராகரித்து இடையூறுகளை விளைவிப்பதைப் பார்த்தால், எப்படியும் இந்த மந்திரிசபையை அகற்றிவிட்டு, பாராளுமன்றத்தையும் கலைத்துவிட வேண்டுமென்று முயற்சி செய்தனர் என்று தோன்றுகிறது. ஆனால், இந்த முயற்சிக்கு அரசாங்கம் ஒரு முடிவு காணவேண்டும் என்று முனைந்திருந்தது. பிரபுக்கள் எதிர்ப்பதும், லிபரல் கட்சியினர் சரண் அடைய முடியாது என்று கூறிக்கொண்டே போவதும் ஒரு முடிவில்லாத காரியமாகும். இதனால் 1832-ல் கிரே பிரபு, நான்காவது வில்லி யத்திடம், சீர்திருத்த மசோதா நிறைவேற்றும்பொழுது அதிகப் படியான பிரபுக்களை நியமனம் செய்யவேண்டுமென்று கூறிய தைப்போல, இவர்களும் கேட்க ஆரம்பித்தனர். இந்த சமயத் தில் 500 பிரபுக்களைப் புதிதாக நியமனம் செய்தால்தான், அவர் களுடைய எதிர்ப்பை அடக்கமுடியும் என்று கருதினர். ஏழாவது எட்வர்ட் இப்படிச் செய்யவில்லையென்றால், அரசியல் அமைப் புக்கும், பின்பு பரம்பரை அரச பதவிக்குங்கூட ஆபத்து நேரிடும் என்பதை உணர்ந்தார். ஆனால், வெளியில் உலவும் வதந்திகள்படி, அரசர் அதிகப்படியான பிரபுக்களை நியமனம்

செய்யமாட்டார் என்பதைக்கேட்ட அரசர், மக்களின் சந்தேகத்தைப் போக்குவதற்காக, இரண்டு தேர்தல்கள் நடந்த பின்பு, பிரபுக்கள் நியமனம் செய்யப்படுவதை யோசிப்போம் என்று கூறினார்.

ஜனவரி 1910-ல் நடைபெற்ற தேர்தல் இன்னும் நிலைமையை மோசமாக்கிவிட்டது. ஏனெனில், யூனியனிஸ்டுகள் சென்ற தேர்தலை விட, இதில் 100 இடங்களை அதிகமாகக் கைப்பற்றினர். அவர்களுடைய மொத்த எண்ணிக்கை இப்பொழுது 273. ஆனால், லிபரல்கள் 274 இடங்களைக் கைப்பற்றினர். தொழிலாளர் கட்சிக்கு 41 இடங்கள் கிடைத்தன. சென்ற தேர்தலைவிட அவர்கள் இப்பொழுது விழுந்துவிட்டனர். அதனால் இப்பொழுது மந்திரிசபையை அமைக்க 82 ஐரிஷ் பிரதிநிதிகளைச் சரி செய்யத் தொடங்கினர். அவர்களும் நிபந்தனைகளை விதிக்க ஆரம்பித்தனர். கடைசியில் லிபரல்களுடன், சில நிபந்தனைகளைப்பெற்றுச் சேர்ந்தனர். வரவு செலவுத் திட்டத்தை ஆதரிக்கவேண்டுமென்றால், அவர்களுக்குப் பிடிக்காத மதுத் தீர்வைகளை எடுத்துவிடவேண்டுமென்றும், பிரபுக்களின் ரத்து அதிகாரத்தைப் பறித்துவிட வேண்டுமென்றால், அவர்களுக்குச் சுய ஆட்சி பெறுவதற்கு ஆதரவு தரவேண்டுமென்றும் கோரினர். கடைசியில், அவர்களுடைய நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டனர். ஏப்ரல் 1910-ல் ஆஸ்குவித் பாராளுமன்றச் சட்டத்தைக் கொண்டு வந்தார். அந்தச் சட்டத்தின்படி,

(1) சபாநாயகர் நிதி மசோதாக்கள் என்று உறுதிமொழியளித்த பிறகு, பிரபுக்கள் அவற்றை விவாதிக்கவேண்டிய அவசியமில்லை.

(2) காமன்ஸ் சபையில் கொண்டு வரப்படும் மற்ற மசோதாக்கள், மூன்று வாசிப்புகளில் நிறைவேறிய பிறகு, பிரபுக்கள் சபை நிராகரித்ததென்றால், முதலில் மசோதாக்கள் கொண்டு வரப்பட்டதிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குள் அவைகள் சட்டங்களாகக் கருதப்படவேண்டும்.

(3) பாராளுமன்றத்தின் காலம் ஏழு ஆண்டுகளிலிருந்து ஐந்து ஆண்டுகளுக்குக் குறைக்கப்பட்டது. கிரே போன்றவர்களைத் திருப்தி செய்வதற்கு இந்தச் சட்டத்தில் முன்னுரை ஒன்று கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி, மேல் சபையைப் புனரமைப்பதற்கும், அவர்களுடைய ரத்து அதிகாரத்தைக் குறைப்பதற்கான அவசியத்தையும்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ஆனால், மே மாதம் ஆறும் தேதியன்று ஏழாவது எட்வர்ட் மரணமடைந்தார். அவருக்குப் பின்பு பட்டத்திற்கு வந்த ஐந்தாவது ஜார்ஜ் அரசனை, அதிகமாகக் கட்டாயப்படுத்த மாட்டார்கள்

என்று பொதுவான அபிப்பிராயம் இருந்தது. அதனுல் நவம்பர் மாதத்திலிருந்து எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து அடிக்கடி இப்பிரச்சினையைப்பற்றி விவாதித்தனர். இந்த விவாதங்களில் அதிகாரப் பற்றற்றவர்கள் கொண்டுவந்த சில ஆலோசனைகள் மிகவும் முக்கியமானதாக இருந்ததால், அவைகளையும் கவனித்தனர். இந்தக் கூட்டங்கள் கூடுவதற்கெல்லாம் காரணமாக இருந்தவர் லாயிட் ஜார்ஜ் என்பவரேயாகும். அவர் கவனிக்க வேண்டிய பல நெருக்கடியான பிரச்சினைகள், நாளடைவில் மிகவும் அதிகமான முக்கியத்துவம் அடைந்துவிட்டன என்றே சொல்லவேண்டும். வேலையில்லாத் திண்டாட்டம், மார்க்கட்டுகளை இழந்துவிடல், ஜெர்மனியின் படை திரட்டல், அயர்லாந்து ஆகிய பிரச்சினைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகவே இருந்தன. அதனுல், அவர் இப் பிரச்சினைகளை எல்லாம் நல்ல படியாகக் கவனிக்க, ஒரு கூட்டு மந்திரிசபையை அமைக்க வேண்டுமென்று ஆலோசனை கூறினுர். அத்துடன் இக் கூட்டு மந்திரிசபை, நல்ல காப்புத் தீர்வைகளை விதிக்கும் சாத்தியக் கூறுகளையும், தேசிய இராணுவச் சேவையையும் கவனிப்பதற்குச் சாதகமாக இருக்கும் என்று நம்பினுர். ஆனுல், எந்தக் கட்சிக்கும் இந்த ஆலோசனை அதிர்ச்சியைத் தந்தது. அயர்லாந்து விவகாரத்தில் 'யூனியனிஸ்டுகள்' பிடிவாதமாகவே இருந்தனர். அயர்லாந்தின் சுய ஆட்சிப் பிரச்சினையில் இந்த மாநாட்டு நடவடிக்கைகள் எவ்வித முடிவையும் காணுது முறிவடைந்தன. அயர்லாந்து விவகாரத்தில், இரண்டு சபைகளும் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருப்பின், பொதுமக்கள் வாக்கெடுப்பிற்கு விடும்படி கோரப்பட்டது.

மேல்சபையின் வேலையும் அதன் அதிகாரங்களும் எப்படி நிர்ணயம் செய்யப்பட வேண்டுமென்று பேச்சு நடந்து கொண்டிருக்கும் பொழுதே, யூனியனிஸ்டுகளின் அரசியல் தாழ்வுச் சிக்கலால் பேச்சுகளில் குழப்பம் ஏற்பட்டு, தெளிவில்லாத நிலை அடைந்துவிட்டது. அவர்களில் சிலர், காப்புத் தீர்வைகளில் சீர்திருத்தம் வேண்டுமென்ருர்கள்; சிலர் தடையில்லாத வாணிபத்தை ஆதரித்தார்கள்; சிலர் பிரிட்டனில் அயர்லாந்து ஒரு கூட்டரசாங்கப் பகுதியாக இருக்கவேண்டுமென்றனர். ஆனுல், சிலர் அயர்லாந்துக்கு ஒன்றுமே கொடுக்கவேண்டியதில்லை என்றனர். பல தொகுதிகளில், கன்சர்வேடிவ்களுக்கும் லிபரல் யூனியனிஸ்டுகளுக்கும் இடையே ஏற்பட்ட பொருமையால் மக்கள் பல்வேறு கருத்துகளினுல் குழம்பிவிட்டனர். 1906-ல் ஜோசப் சேம்பர்லேனுக்குப் பக்கவாத நோய் ஏற்பட்டது. ஆனுல், பல்ஃபோரைவிட, அவருடைய செல்வாக்குதான் அரசியல்

வட்டாரத்தில் அதிகமாகக் காணப்பட்டது. அவருக்குப் பதிலாக அவர் மகன் ஆஸ்டின் இந்தப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொண்டாலும், பெருந்தன்மை கொண்டவரும், ஆனாலும், சரியான யோசனை கூற முடியாதவராகவும் இருந்தார். பல தலைவர்களிடையே கருத்து ஒருமைப்பாடில்லாததால், அவர்கள், மக்கள் முடிவுக்கே இப் பிரச்சினைகளை விடுவதென்று மிகவும் பலவீனமாக எண்ணிக்கொண்டிருந்தனர். இந்த முடிவிற்கு, உணவுப் பண்டங்கள்மீது வரி விதிப்பதையும் விட்டுவிடலாம் என்று பல்ஃபோர் ஆலோசனை கூறியது, சேம்பர்லேனுக்கு ஒரே அதிர்ச்சியை அளித்தது. லேண்ட்ஸோன், நல்ல மரியாதையான மனிதரும் தேசபக்தி உடையவரென்றாலும், எதையும் முடிவு செய்ய முடியாத தலைவராக இருந்தார். அவர் விட்டுக் கொடுக்காத அயர்லாந்தின் நிலப்பிரபு, மேடைமீது ஏறிப் பேசுகிறவர்களில் லாயிட் ஜார்ஜ் மிகச் சிறந்தவராக இருந்தார். பிரபுக்கள் சபை வெறும் விவாதத்துடன் தங்களுடைய காரியங்களை முடித்துக்கொள்வதில் விருப்பமடையவில்லை. அத்தகைய அதிகாரமின்மை அவர்களுக்குக் கேலிக் கூத்தாக இருந்தது. மேலும் பல பிரபுக்கள் அவர்களுக்கு வருகின்ற உழைக்காத ஊதியங்களைப் பாதுகாத்துக்கொள்ளுகின்றவர்களே என்று பிரச்சினை வேறு விதமாகத் திருப்பிவிடப்பட்டது, பின்பு அவர்களுடைய தாக்குதல் சூடேறி, ஆஸ்குவித்தின்மீது பாய்ந்தது. அரசனுடைய அதிகாரத்தை ஆஸ்குவித் பயன்படுத்துகிறார் என்று குற்றம் சாட்டினர். அதனால், அவருடைய பாராளுமன்றச் சட்டத்தையே பிரபுக்கள் நிராகரித்துவிட வேண்டுமென்றுங்கூட அவர்கள் ஆலோசனை கூறினர்.

ஆஸ்குவித்தின்மீது சாட்டப்பட்ட இந்தக் குற்றச்சாட்டுகள் ஆதாரமற்றவை. அவைகளை நிரூபித்தாலொழிய நம்புவதற்கும் இயலாது. நவம்பர் மாதத்தில் இந்த மாநாடு முறிந்தது. 1910 நவம்பரில் ஐந்தாவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்து ஆறுமாதங்களே ஆகின்றன. ஆனால், அதற்கு முன்பிருந்தே அதாவது பதினெட்டுமாதங்களாகவே நாட்டில் இந்தப் பிரச்சினை இருந்து வருகிறது. பாராளுமன்றம் கலைக்கப்பட்டு, மறுபடியும் தேர்தலில் லிபரல்களே பெருவாரியாகவே வெற்றி பெற்றார்கள் என்றால், பல பிரபுக்களை நியமனம் செய்யவேண்டுமென்று ஆஸ்குவித் அரசரைக் கேட்டுக் கொண்டார். இந்தக் கோரிக்கையை அரசர் ஒப்புக்கொண்டார். ஆனால், தேர்தல் நடைபெறுவதற்கு முன்பு, இந்தச் சட்டத்தை மீண்டும் பிரபுக்கள் சபையில் விவாதிக்க ஒரு வாய்ப்பளிக்கவேண்டுமென்று அரசர் கேட்டுக் கொண்டார். 1911ஆம் ஆண்டு ஜூலை மாதம் வரையிலும் இந்த

ஏற்பாட்டை வெளிப்படையாக அறிவிக்கவில்லை. அரசன் விவா தத்தில் பங்கெடுத்துக்கொள்ளவில்லை என்னும் நிலை உண்டாகிய பொழுது இப்படி இரகசியமாக வைத்துக்கொண்டது அவசிய மாகப் பட்டது. யூனியனிஸ்டுகளுக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியாது. புதிய பிரபுக்களை நியமனம் செய்வது என்பது ஒரு 'பொய்' என்று தீவிரவாதிகள் பிரசாரம் செய்ததை யூனிய னிஸ்டுகள் நம்பும் நிலையில் இருந்தனர்.

1910-ல் நடந்த தேர்தலில், ஜனவரி மாதத்தில் கட்சிகளின் நிலைமை எப்படி இருந்ததோ அப்படியேதான் இருந்தது. பிரபுக் கள் இப்பொழுது பொதுமக்கள் வாக்கெடுப்பதையோ, அல்லது அவர்களுடைய பிரதிநிதித்துவத்தில் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதையோ விரும்பினர். சாகப்போகின்றவன் தன்னுடைய பாவங்களைக் குறித்து வருந்துவதைப்போல இது காணப்பட்டது. மே 1911-ல் 121 அதிக வாக்குகள் பெற்று இந்தச் சட்டத்தைக் காமன்ஸ் சபையில் நிறைவேற்றினர். எதற்கும் உடன்பட்டு வராத சில கன்சர்வேடிவ் பிரபுக்கள் இன்னும்கூட இந்தச் சட்டத்தைப் பிரபுக்கள் சபையில் நிராகரித்துவிட வேண்டு மென்று கருதினர். ஹால்ஸ்பரி, மில்னர், ஸாலிஸ்பரி, மற்றும் பாராளுமன்றத்தில் இல்லாதவர்களான சேம்பர்லேன்கள், செசில்கள், எஃப். ஈ. ஸ்மித், அல்ஸ்டர் தலைவர் கார்ஸன் ஆகியோர் அவர்களுக்குச் சாதகமாகப் பரிந்து பேசினர். அரசருடைய விருப்பத்தைச் அறிந்துகொண்ட பல்ஃபோரும், லேண்ட் ஸோனும் இது தற்கொலைக்குச் சமமானது என்று கூறி, ஆகஸ்டு மாதத்தில், 29 யூனியனிஸ்டு பிரபுக்களும் 13 பிரபுக்கள் அந்தஸ் தில் உள்ள குருமார்களும் வாக்களிப்பு அளித்ததால், 17 வாக்கு கள் அதிகமாகப் பெற்று இந்தச் சட்டம் பிரபுக்கள் சபையில் நிறைவேறியது.

இந்தப் பிரச்சினையைப்பற்றி இரண்டு ஆண்டுகளாகவே விவாதம் நடந்து வந்தது. இந்த விவாதம் ஆங்கிலேய அரசியல் அமைப்பு வளர்ச்சியில் மிகவும் முக்கியமான சிறப்பைப் பெறுகிறது. ஒரு சமயம், இந்த அரசாங்கத்தின் மற்ற ஏதாவது சாதனையால், இதனுடைய முக்கியத்துவம் அவ்வளவாகத் தெரியாமல் போயிருக்கலாம். ஒவ்வொரு பிரச்சினையிலும், இருவகையான கருத்துகள் இருந்துகொண்டேதான் வந்தன. ஆஸ்குவித், மற்றும் அவருடைய நெருங்கிய நண்பர்களான கிரே, ஹால்டேன், கிரு, மேக்கன்னு ஆகியோர் ஒரு பக்கத்திலும், லாயிட் ஜார்ஜ், சர்ச்சில் ஆகியோர் இளைஞர் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி மற்றொரு பக்கத்தில் செல்வாக்குப் பெற்றிருந் தனர். இவர்களுக்குத் திட்டமான ஆர்வம் கிடையாதென்று

சொல்லலாம். குறிப்பாக லாயிட் ஜார்ஜ், 'விக்டோரியன் லிபரலிசத்திலிருந்து' மாறுபட்ட கருத்தை உடையவராக இருந்தார். அவர் எளிய குடும்பத்திலிருந்து வந்தவர்; கெல்ட் வகுப்பைச் சார்ந்தவர், அவர் கன்சர்வேடிவ்களின் ஒவ்வொரு செய்கையையும் வெறுக்கின்ற திருச்சபையில் இணங்காதார் கோஷ்டியைச் சார்ந்தவராவர். அவர் பெரிய அரசியல் மேதை. சில சமயங்களில், அவர் எதைப்பற்றியும் கவலைப்படாதவர். அவருடைய கருத்துகளைப் பரப்ப, எந்த மேடையையும், அச்சகத்தையும் அவருடைய நன்மைக்காகப் பயன்படுத்தத் தயங்காதவர். ஆனால், 1912-ல் இவரைப்போன்ற மதிப்புமிக்க மந்திரிகள் செய்யக்கூடாத ஒன்றைச் செய்துவிட்டார் என்று தெரிந்ததும், யூனியனிஸ்டுகள் அகமகிழ்ந்தனர். பிரிட்டிஷ் மார்கோனி கம்பெனியின் காரியதரிசி, அரசாங்க வழக்கறிஞரான ரூஃபஸ் ஐஸாக்ஸ் என்பவரின் சகோதரர். அதனால், லாயிட் ஜார்ஜும், ஐஸாக்ஸும், அமெரிக்காவில் உள்ள அதனுடைய மற்றக் கிளைக் கம்பெனியில் நிறைய பங்குகளை வாங்கியிருந்தனர். தவிர, பேரரசு நாடுகளுக்குத் தந்தியில்லாத செய்திப் போக்குவரத்தை நடத்தும் உரிமை இந்தக் கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டது. இவர்மீது லஞ்சக் குற்றச்சாட்டுக் கொண்டுவரவில்லையெனினும், இவர் பங்குகளை வாங்கியது, இவரைப்போன்ற மந்திரிக்கு அழகன்று என்றுமட்டும் இவருடைய கட்சியினர் கண்டனம் தெரிவித்தனர். ஒரு பெரிய புயலிலிருந்து மந்திரிசபை தப்பித்ததென்று கூறலாம். இருப்பினும், பிரைஸ் (Bryce), வாஷிங்டனுக்கு இராச்சிய தூதராக அனுப்பப்பட்டார். மார்லியும் ஹால்டேனும் பிரபுக்கள் சபையின் அங்கத்தினர்களாகிவிட்டனர்; மற்றும் பல மாறுதல்கள் நிகழ்ந்ததால், காமன்ஸ் சபையிலுள்ள முன் பெஞ்சு அதன் சிறப்பை இழந்திருந்தது.

இந்தப் பாராளுமன்றச் சட்டத்தைக் கொண்டுவந்ததைத் தவிர, மற்றும் பல சமூகச் சீர்திருத்தங்களையும் கட்சி கொண்டு வந்ததால், கட்சியிலேயே பல மாற்றங்கள் ஏற்பட்டு, ஒரு வகையில் அதன் அழிவுக்கும் காரணமாக இருந்தன. கூலிகள், வேலை நேரங்கள், சுகாதாரம், தொழிலாளர் வாழ்க்கை நிலை கடந்த அரை நூற்றாண்டில் நல்ல நிலைமையை அடைந்திருந்தன என்று கூறலாம். தடையில்லா வாணிகத்திற்கு இருந்த ஆர்வம் சிறிது சிறிதாகக் குறைந்துவந்தது. 1909-ல் இரவலர் கமிஷன் வெளியிட்ட அறிக்கை, அரசாங்கத்தார், மற்றும் தனிப்பட்டவர்கள் கொண்டுள்ள கருத்தையே மேலும் வலியுறுத்தியது. வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாகிவிட்டதென்றாலும்,

அதைச் சமாளிக்க முடியாத அளவில் சென்றுவிடவில்லை. அதைப்போலவே, முழுநேர வேலையின்மையும், தாற்காலிகத் தொழில் செய்தலும், அதிகமாக இருந்தன. முழுப்பயிற்சி யில்லாத தொழிலாளர் தொழிற்சாலைகளிலும் விவசாயத்திலும் ஈடுபட்டிருந்தனர். அவர்களுக்கு மிகக்குறைந்த கூலி கொடுக்கப் பட்டது. அவர்கள் குடியிருந்த வீடுகள் மிகவும் மோசமாக இருந்தன. இரவலர்கள் எண்ணிக்கையும், அவர்களுக்காகச் செலவிடப்படும் தொகையும் அதிகமாகிக்கொண்டே வந்தது. இவற்றைத் தவிர, எவ்வளவோ முயன்றும் குழந்தைப் பருவத்தில் இறத்தல் மிகவும் அதிகமாகிவிட்டது. ஆறு குழந்தைகள் பிறந்தால், ஒரு குழந்தை இறந்துவிடுகிறது என்று கணக்கிட்டார்கள்.

பொருளாதாரத் துறையில்மட்டுமல்லாமல் அரசியல் துறை யிலும் புதிய முறையைப் பின்பற்றினல்தான் இந்த வறுமை நிலை நீங்க ஏதாவது செய்யமுடியும். பல்கலைக் கழகப் படிப்பு அதிகரித்தது உண்மையே என்ருலும், அது சேரிகள் பெருகுவதில் வந்து முடியக்கூடாது. தல அரசாங்கங்களை இப்பொழுது தேர்ந் தெடுக்கப்பட்ட குழுவினர் ஆட்சி செய்தனர். 1902-ல் இயற்றிய கல்விச் சட்டத்திற்குப் பிறகு, மற்றச் சமூகப் பணிகளில் ஈடுபட முயன்றனர். தல அரசாங்கத்தின் பல சிறப்புமிக்க தனி நிறுவனங்கள், இதற்கு உதவியாக இருந்தன. தவிர, தனிப்பட்ட வகையில் சீர்திருத்த மோகம் கொண்டவர்கள் பலர் தங்களால் இயன்ற அளவில் இந்தச் சமூகப் பணியில் இறங்கித் தொண் டாற்றினர். குறிப்பாக, சேம்பர்லேன் குடும்பம் முழுவதும் இப் பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டது.

இந்தச் சமூகப் பணிகளைச் செயலாற்ற ஆஸ்குவித் அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. ஆனல், தல அரசாங்க போர்டுகள் மெதுவாகச் சென்றன. அவைகள் போதிய ஆர்வத் தைக் காண்பிக்கவில்லை. தல அரசாங்கத்தின் தலைமைப் பதவியில் இருந்த பர்ன்ஸ் என்பவர் ஆக்க வேலைகளில் ஆர்வமுடைய வராகத் தெரியவில்லை, இரவலர் கமிஷனில், பெரும்பான்மை அங்கத்தினர்களைக் கொண்ட கன்சர்வேடிவ்கள், சோஷிய லிஸ்டுச் சிறுபான்மையினருடன் உடன்பட்டு வராததால், இரவலர் சட்டச் சீர்திருத்தங்களுக்காக ஒன்றும் செய்யமுடிய வில்லை. ஆனல், வறுமையை வேருடன் அறுத்தெறிவதற்காகவும் சில சமூகத் திட்டங்களைச் சட்டமயமாக்குவதற்கும், லாயிட் ஜார்ஜும், சர்ச்சிலும் நல்ல முயற்சி எடுத்துக்கொண்டனர். அதனல், வயோதிகர் பென்ஷன் திட்டம் அமலுக்கு வந்தது.

எட்டுமணி வேலை நேரம் சுரங்கத் தொழிலாளிகளுக்கு 1908-ல் கொண்டுவரப்பட்டது. 1909-ல் தொழிலாளர் பரிமாற்றங்களும், கூலிகளை நிர்ணயம் செய்வதற்குத் தொழில் போர்டுகள், பெரிய தொழிற்சாலைகள் உள்ள பகுதிகளில் நிறுவப்பட்டன. மற்றச் சட்டங்கள், பள்ளிச் சிறுவர்களுக்கு உணவு அளிப்பதும், பள்ளிகளைப் பாதுகாக்கும் கமிட்டிகளும், மருத்துவ வசதிகளும், இளம் குற்றவாளிகளைச் சீர்திருத்தச் செய்யும் போர்ஸ்டல் முறையும் (Borstal reformatory), 1908-ல் சிறுவர்கள் சட்டமும், இந்தச் சட்டத்தில் அவர்களை நல்ல முறையில் நடத்தவேண்டுமென்றும், பதினான்கு வயதிற்குக் கீழ்பட்ட சிறுவர்களைச் சிறையில் அடைக்கக்கூடாதென்றும் பல சட்டங்கள் கொண்டுவரப் பட்டன. வீடுகளை நிர்மாணித்துத் தருவதில், அவர்களுடைய முன்னேற்றம் மெதுவாகத்தான் சென்றது. லாயிட் ஜார்ஜின் நில மதிப்புத் தீர்வைகளும், அதிக வட்டி வீதங்களும், புதிய கட்டடங்கள் ஏற்படுவதற்குத் தடையாக இருந்தன. 1909-ல் கொண்டுவரப்பட்ட நகர அபிவிருத்திச் சட்டம், சுகாதாரத் திற்குக் கேடுவிளைவிக்கக்கூடிய வீடுகளை இடித்துத் தள்ளுவதற்கு அதிகாரம் அளித்திருந்ததென்றாலும், அப்படிச் செய்வதற்கு அவர்கள் தயங்கினர். மற்ற எல்லாத் துறைகளிலும் பலவிதச் சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. சிறு பண்ணையாள் சட்டம், ஸ்காட்லாந்து விவசாய போர்டு, 1911-ல் இயற்றிய கடைகள் சட்டம், அதன்படி வேலை நேரங்கள் குறைக்கப்பட்டும் பாதி நாள் விடுமுறை நாளாகக் கருதப்பட்டும், 1912-ல் சுரங்கத் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்து ஒரு சட்டமும் ஆகப் பல சட்டங்கள் இயற்றப்பட்டன. லாயிட் ஜார்ஜின் முயற்சியால், தொழில் தகராறுகள் ஏற்படும்பொழுது அரசாங்கம் தலையிட்டு ஒரு முடிவு ஏற்பட்டது. கடைசியில் கூறிய சட்டம், இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

ஜெர்மனியின் முன் மாதிரியைப் பின்பற்றிச் சர்ச்சிலும் லாயிட் ஜார்ஜும், தேசிய இன்ஷ்யூரன்ஸ் சட்டம் ஒன்றை 1911-ல் கொண்டுவந்தார்கள். உண்மையில், இந்தச் சட்டம்மற்ற எல்லாச் சட்டங்களையும்விட மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஜெர்மனியில் கொண்டுவந்த இந்தச் சட்டத்தை நமது சூழ் நிலைக்கு ஏற்ப மாற்றி அமைத்துக்கொண்டனர். இதற்கு முன் பும் பின்பும் அரசாங்கத்தின் முழு உதவியுடன் தனிப்பட்டவர் களின் உதவியும் சேர்ந்து இயங்கவேண்டுமென்பது அரசாங்கத் தின் அடிப்படைக் கருத்தாக இருந்தது. இதன் முதல்பகுதியில் சுகாதாரத்தைப்பற்றிய அக்கறை எடுத்துக்கொள்ளப்பட்டது. பதினாறு வயதிலிருந்து எழுபது வயதுக்குள்ளிருக்கும் உடல்

உழைப்பால்மட்டும் ஆண்டு ஒன்றுக்கு 160 பவுன்களுக்கும் குறைவாகச் சம்பாதிக்கிறவர்களுக்குக் கட்டாயமாக இன்ஷ்யூரன்ஸ் செய்யப்படும். தவிர, அவர்களாகவே இன்ஷ்யூரன்ஸ் செய்துகொள்ளலாம். அவர்களாகவே இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளும் திட்டத்தில், அரசாங்கமும், வேலைக்கு அமர்த்தும் முதலாளிகளும் தொழிலாளிகளும் முன்வந்து இன்ஷ்யூரன்ஸ்செய்து கொள்ளுகிறார்கள். இந்த வசதிகளை எல்லாம் கவனித்துக் கொள்ளுவதற்கும் நிர்வாகம் செய்வதற்கும், தனிப்பட்ட நிறுவனங்கள், ஆனால், அரசாங்கத்தால் அங்கீகக்கப்பட்டவை அல்லது பல கழகங்களும், தொழிற் சங்கங்களும், அஞ்சல் நிலையங்களும், தலக் குழுவினரால் மேற்பார்வையிடப்பெற்று இயங்கிவந்தன. இவ்விதமான வசதிகளை அளிப்பதில், தேசிய சுகாதார சேவை என்று ஆரம்பிக்கப்பட்டன. நோய்கள் உண்டாகும்பொழுதும், அல்லது ஏதாவது அங்கஹீனம் ஏற்படும்பொழுதும், குழந்தைகள் பிறக்கும்பொழுதும், மருந்துகளைப் பெறவும் டாக்டர்களின் சேவைகளைப் பெறவும் வசதிகள் செய்து தரப்பட்டன.

இந்தச் சட்டத்தின் இரண்டாவது பகுதி, வேலையில்லாத் திண்டாட்டத்தைப்பற்றியது. இந்தப் பகுதி பெரும்பாலும் பரிசோதனை செய்கின்ற முறையிலேயே இருந்தது. அதைப் போன்றே வேலையில்லாத காலங்களில் காப்புறுதியைப் பெற இன்ஷ்யூரன்ஸ் செய்துகொள்வதும் விஸ்தரிக்கப்பட்டது. இதிலும் கட்டாய முறை, அவர்களே விரும்பி இன்ஷ்யூரன்ஸ் செய்துகொள்ளும் முறை, மற்றும் உதவிப்பணம் பெற்று இன்ஷ்யூரன்ஸ் செய்துகொள்வது என்ற பல திட்டங்கள் அமலுக்குக் கொண்டுவரப்பட்டன. பொறியியல் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களும் அல்லது கப்பல் தொழில், வீடுகட்டும் தொழில் ஆகியவகைகளில் ஈடுபட்டுள்ளவர்களும் வேலையில்லாமல் சில காலத்திற்குப் பாதிக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு இந்தத் திட்டம் நல்ல பயனைத் தருகின்றது. வருடம் ஒன்றுக்குப் பதினைந்து வாரங்கள் அதிகபட்சமாக அவர்கள் வேலையில்லாமல் இருந்தால், அவர்களுக்கு நிர்ணயம் செய்யப்பட்ட கூலிகளைவிடக் குறைவாகவே காப்புறுதி அளிக்கப்படுகின்றது. இதில் அவர்களுடைய வேலையோ, அல்லது சம்ரட்சணையோ என்ற அடிப்படையில் அவர்களுக்குக் காப்புறுதி அளிக்கப்படவில்லை.

இவ்விதமாகச் சமுதாயத்திலே, புதிய மனிதாபிமான உணர்ச்சியையும், பொருளாதார வாழ்க்கைத் தரத்திலே அரசியல் சமத்துவ நிலையையும் படிப்படியாக அரசாங்கம் கொண்டுவந்தது. அரசாங்கமே நிலைநிற்பதற்கு மிகவும் அவசியமாகப்பட்டது என்று சொல்லலாம். ஸ்காட்டியப் பண்பாடும், ஜர்மானியக் கல்வியும்,

சட்டத்திலே மெய்யுணர்வும், தரமும் வேண்டுமென்று நினைத்த ஹால்டேன் என்பவர், இவ்வகையில் தம்முடைய கடமையைச் செம்மையாகச் செய்து இருக்கிறார். நல்ல சமயத்தில், கேம்ப் பெல்-பானர்மென் அவருக்குச் சான்சலர் பிரபு என்ற பதவியை அளிக்க மறுத்துப் போர் அலுவலகத்தில பதவியேற்கச் செய்தார். பல திறமைமிக்க அரசியல்வாதிகள் இந்த அலுவலகத்தில் பணி யாற்றித் தங்களுடைய புகழைப் பறிகொடுக்கும் கல்லறை யாகவே இது அமைந்திருந்தது. அவர் கட்சி இராணுவத்தில் அதிக நம்பிக்கை வைக்கவில்லை. மிகவும் எளிய முறையில்தான். இராணுவம் அமைக்கப்பட்டிருந்தது. அதற்கு நிறைய சீர்திருத் தங்கள் தேவைப்பட்டன. பேரரசுப் பாதுகாப்புக் கமிட்டியில் சிபாரிசுகளும், எஷர் கமிட்டியின் சிபாரிசுகளும், இராணுவத்தில் பல மாற்றங்களைக் கொண்டுவரவேண்டுமென்று பல்ஃபோர் காலத்திலேயே சில ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அவைகளைப் பயன்படுத்தும் வாய்ப்பு, ஹால்டேனுக்குக் கிடைத்தது. இராணுவ நடவடிக்கைகளைச் சரியாக மேற்பார்வை செய்வதற்கு மத்திய நிறுவனம் ஏற்படுத்தவில்லை. அமைதிகாலத்தில் உள்ள அதனுடைய அமைப்புக்கும், போர்க்காலத்திலுள்ள அதனு டைய அமைப்புக்கும் எவ்விதத் தொடர்புமில்லாமல் இருந்தது. அதனுடைய படைகள் பல பகுதிகளாகப் பிரிக்கப்படவில்லை. அவைகளுக்குப் போக்குவரத்துச் சாதனங்கள், மருத்துவ வசதி கள், துப்பாக்கிகள் சரிவரத் தரப்படவில்லை. அதனுடைய இரண்டாவது படை அமைப்பான உள்நாட்டு இராணுவம், வெளிநாடுகளுக்கு வழக்கமாக அனுப்பப்படுவதில்லை. மூன்றுவது படை, தலப் பகுதிகளிலுள்ள தொண்டர்களாலும் விவசாயி களாலும் நிறுவப்பட்டிருந்தது. அப் படைக்குச் சரியான அமைப்போ அல்லது சாதனங்களோ இல்லை. இந்த நிலையில், ஹால்டேன், இப் படைகளையெல்லாம் சீரமைத்து, அரசியல் நெருக்கடிகள் ஏற்படும்பொழுது பயன்படுத்தவேண்டுமென்று நினைத்தார். மேலும், ஜெர்மனியின் ஆக்கிரமிப்பைச் சமாளிக் கவும், கால்வாய்ப் பகுதியிலுள்ள துறைமுகங்களைப் பாதுகாக்க வும், பிரான்ஸ் படையுடன் ஒத்துழைத்துப் பாதுகாப்பு அமைப்பு களைப் பலப்படுத்திக்கொண்டார். இராணுவச் சட்டத்தை இயற்றி, இராணுவக் காரியாலயம் ஒன்றை நிறுவினர். ஆறு காலாட் பகுதிகள், ஒரு குதிரைப்படைப் பகுதி கொண்ட ஒரு உதவிப் படையை அமைத்தார். கார்டுவெல் ஏற்படுத்திய இரண்டு தொடர்புள்ள பகுதிகள் ஒருங்கே இயங்கும் காலாட் படையை அப்படியே வைத்துக்கொண்டார். தேசியப் படையை மூன்றுவது படையாகவும், அல்லது போர்க்காலத்தில் சேதமேற்

பட்டால், உதவிப் படையாக அனுப்புவதற்கும் ஏற்ற முறையில் அதை அமைத்துக்கொண்டார். தொண்டர்களும் விவசாயிகளும் பணிபுரிகின்ற இந்த இரண்டாவது படையைப் பிரதேசப் படையாக மாற்றியமைத்து, அந்தப் படையைப் பதினுன்கு காலாட் படைப் பகுதிகளாகவும், பதினுன்கு குதிரைப்படைப் பகுதிகளாகவும் அமைத்தார். பல்கலைக் கழகங்களிலும் பள்ளிகளிலும், மாணவர்களுக்கு இராணுவ அதிகாரிகளாக்கும் பயிற்சி தரப் பட்டது. இராணுவ நிர்வாகத் திட்டங்களுக்கு அவருக்கு உதவி செய்ய நல்ல ஆர்வமுள்ள, திறமையுள்ள இராணுவ அதிகாரிகளையும், ஆலோசனையாளர்களையும் தேர்ந்தெடுத்துக்கொண்டார். ஹேய்க், நிக்கல்ஸன், ஃபிரெஞ்சு, ஈவார்ட், கிரியர்ஸன் ஆகியோரை, அவர் உயர்ந்த இராணுவப் பதவிகளில் அமர்த்தினுர். பேரரசுப் பாதுகாப்புக் கமிட்டியில் பல உப-கமிட்டிகளை ஏற்படுத்தி, ஒவ்வொரு அவசரகால நெருக்கடியையும் பரிசீலனை செய்ய ஏற்பாடு செய்தார். ஒரு துணைக் குழுவினை நிறுவி ஹாங்கி என்ற காரியதரிசியின் உதவியால், 'போர் நூல்' ஒன்றைத் தொகுத்தார். எல்லா இராணுவ விவரங்களும் நடவடிக்கைகளும் இதில் அடங்கியிருந்தன.

ஜெர்மனியின் ஆக்கிரமிப்பு எந்தச் சமயத்திலும் நிகழலாம் என்ற சூழ்நிலையில், ஏதாவது ஒரு வகையில் கட்டாய இராணுவ சேவையை அமலாக்கவேண்டுமென்ற ஒரு திட்டம் அப்பொழுது அதிகமாகப் பேசப்பட்டது. இந்தத் திட்டத்திற்கு ராபர்ட்ஸ் என்பவர் காரணமாக இருந்தார். சேம்பர்லேனின் செல்வாக்கும் இத் திட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென்று பயன்படுத்தப்பட்டது. உண்மையில் இத் திட்டத்தை, லாயிட் ஜார்ஜும் வெறுக்கவில்லை. ஆனுல், இப்படிப்பட்ட ஒரு திட்டத்தை லிபரல் கட்சி ஏற்றுக்கொள்ளுமா, அல்லது அதற்கான செலவை எப்படிச் சமாளிப்பது என்ற பிரச்சினை எழுந்தது. ஆனுல், ஹால்டேன், கடற்படையைப் பலப்படுத்துவதென்று முடிவுசெய்தார். கடற்படையின்மூலமாகத்தான் பரம்பரையாக நாட்டைப் பாதுகாக்கவும் எதிரிகளைத் தாக்கவும் முடியும் என்று அவர் நம்பினுர்.

1910 வரையிலும், சர் ஜான் ஃபிஷர் என்ற திறமை மிக்க அதிகாரியின் முயற்சியால், கடற்படை வலுவாக்கப்பட்டது. அவர் உருவாக்கிய 'டிரட்நாட்' (Dreadnought) கப்பற்படை மிகவும் புகழ்பெற்றது. ஆனுல், அவர் மிகவும் கடுமையான கண்டிப்புடன் நிர்வாகம் நடத்தியதால், கப்பற்படையில் பல பிளவுகள் ஏற்பட்டுவிட்டன. அதற்குப் பிறகுதான் ஹால்டேன்,

கடற்படைக் காரியாலயத்தை ஏற்படுத்தித் திரும்பவும் அதைச் சீரமைத்தார். கப்பல்களை நிர்மாணிப்பதில் நிறையச் செலவு ஏற்பட்டது. சமூகச் சீர்திருத்தங்களில் கவனத்தைச் செலுத்திவந்த லாயிட் ஜார்ஜுக்கும், மற்ற மந்திரிகளுக்கும் இதனால் கவலை ஏற்பட்டது. இரண்டு மூன்று முறை, பாதுகாப்புக்குத் தேவையான கப்பல்கள் வேண்டுமென்று கடற்படைப் பிரபுக்கள் வற்புறுத்தினர். 1907-ல் எட்டு கப்பல்கள் வேண்டுமென்று மேக்கென்னு கூறிய ஆலோசனையை ஏற்றுக்கொண்டனர். அதைப்போலவே 1914-ல் சர்ச்சில் கொண்டுவந்த ஆலோசனையையும் ஏற்றுக்கொண்டனர். ஆனால், ஜெர்மனியின் பயமுறுத்தல் மிகவும் அதிகமாகவே இருந்தது. அதைப் புறக்கணிக்க முடியாது. போர்க் கப்பல்கள் நிர்மாணிப்பதும், அல்லது காலம் கடத்துவதும் இப்பொழுது நீடித்து நடக்கமுடியாததால், இரண்டு கப்பல்களுக்கு ஒன்று வீதம் நிர்மாணிப்பதென்று முடிவு செய்யப்பட்டது. 1913-14-ல் கடற்படைச் செலவுகள் 51 மில்லியன் பவுன்களுக்குமேல் உயர்ந்துவிட்டன. 1905-ல் இருந்த செலவினத்தைவிட, இப்பொழுது 18 மில்லியன் பவுன்கள் அதிகமாகிவிட்டன. 1911 கடைசியில், ஆஸ்குவித், தரைப்படைக்கும் கப்பற்படைக்கும் போர் முறைகளில் ஒருமைப்பாடு ஏற்படுத்துவதற்காக, கடற்படைக் காரியாலயத்தை நிர்வகித்து வந்த மேக்கென்னவை, உள்நாட்டுத் துறைக்கும் உள்நாட்டுத் துறையைப் பார்த்துவந்த சர்ச்சிலைக் கடற்படைக் காரியாலயத்திற்கும் மாற்றினர். புதிய கடற்படைப் பிரபுவின் தலைமையில் கடற்படையின் ஒவ்வொரு பகுதியிலும் சீர்திருத்தம் ஏற்பட்டது. மாலுமிகளின் சம்பள விகிதங்கள் உயர்த்தப்பட்டன. அவர்களுக்கு விநியோகிக்கப்பட்ட பொருள்கள் அதிகமாக்கப்பட்டன. கப்பல் கட்டும் தொழில் விரைவுபடுத்தப்பட்டது. மேலும், ஸ்கேபா ஃபிளோவிலும் (Scapa Flow), கிரோமார்டியிலும் (Cromarty) புதிய கப்பல் தளங்கள் நிறுவப்பட்டன. ஆங்கிலோ-பெர்ஷிய எண்ணெய்க் கம்பெனியிடம், தாராளமாக எண்ணெய் எரிபொருளை வாங்கினர்.

சமூகச் சீர்திருத்தச் சட்டங்களை இயற்ற முன்வந்த அரசாங்கம், அப் பணியிலிருந்து விடுவித்துக்கொள்ள முடியவில்லை. 1910-ல் நடந்த தேர்தல் அடிப்படைக் கொள்கைகளிலிருந்தும், பாராளுமன்றச் சட்ட அமைப்பிலிருந்தும், அரசாங்கம் சிறிதும் பிறழாது அதனுடைய காரியங்களைச் செய்துவந்தது. இதன் விளைவாகப் பல்ஃபோர் 1911-ல் தமது கட்சித் தலைமையை விட்டு விலகிவிட்டார். கட்சியில் ஏற்பட்ட பூசல்கள் காரணமாகவும் நாட்டின் சீர்திருத்த ஆர்வத்தாலும், அவருக்குப் பின்பு யார்

தலைமைப் பதவியை அடைவது என்ற பிரச்சினை எழுந்தது. லிபரல் யூனியனிஸ்டுகளும், மாறுதலைச் சிறிதும் விரும்பாதவர்களும், காப்புத் தீர்வை சீர்திருத்தவாதிகளும் ஆஸ்டின் சேம்பர்லேனை நியமனம் செய்தனர். மற்றக் கன்சர்வேடிவ்கள், வால்டர் லாங் என்ற நாட்டுப்புற நிலக்கிழாரை நியமனம் செய்தனர். இதனால் குழப்பம் ஏற்பட்டுப் பின்பு போனர் லா (Bonar Law) என்பவரையே தேர்ந்தெடுத்தனர். இவர், பிறப்பில் கனடா நாட்டைச் சேர்ந்தவர்; பின்பு, ஸ்காட்லாந்தில் குடியேறியவர்; இவர் இரும்பு வியாபாரத்தைத் தொழிலாகச் செய்து வந்தார். நிதிபற்றிய விவகாரங்களில் அவர் பங்கெடுத்துக்கொண்டு சிறிது பெயர் சம்பாதித்தார். ஆனால், கேபினட் பதவியை இதுவரையிலும் வகித்ததில்லை. பாராளுமன்றத்திற்குள் அவருடைய நடுவயதில்தான் நுழைந்தார். பிறர் நேசிக்கின்ற அளவில் நல்ல தன்மையுடையவர். என்றாலும், காலம்தான் அவரைத் தகுதி பெற்ற மந்திரி என்று நிரூபிக்கவேண்டும். விவாதத்தில் நல்ல திறமை பெற்றிருந்தாலும், டிஸ்ரேலியும் ஸாலிஸ்பரியும் இருந்த கட்சியில், அவர் மக்களுடைய கவர்ச்சியைப்பெற முடியவில்லை. பலவகைகளிலும், எச்சரிக்கையாகவும் ஆர்வமில்லாதவராகவும் அவர் காணப்பட்டார். எனினும், அவர் ஐரிஷ் விவகாரத்தில் வெறி பிடித்தவர்; அல்ஸ்டர் பிரஸ்பிடீரியச் சமயத்தைச் சார்ந்தவர். அத்துடன் லேண்ட்ஸோனின் நெகிழ்ச்சியில்லாத கொள்கையையும், சேம்பர்லேனின் விசுவாசத்தையும் பின்பற்றுகிறவர். இவருக்குச் சாதகமாக எஃப். ஈ. ஸ்மித் என்ற முன்னணிக்கு வருகின்ற தலைவரும் இருந்ததால், நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. அவர்கள் மக்களின் ஆத்திரத்தைத் தூண்டிவிடுகின்ற சூழ்நிலையை ஏற்படுத்திவிட்டனர்.

1910-1914ஆவது ஆண்டுகளை மீண்டும் கவனித்தோமென்றால், இந்தப் பிரிவு நாட்டிற்கு எவ்வளவு ஆபத்தைத் தேடிக் கொடுத்தது என்பது புரியும். அப்பொழுதுதான் ஐரோப்பா உலகப் போருக்குத் தயாராகிக்கொண்டு வந்தது. 1830-க்குப் பிறகு நாட்டில் இவ்வளவு ஆபத்து ஏற்பட்டதில்லை. ஒவ்வோர் அங்கத்திலும் தொத்துநோய் போல இந்த ஆபத்துப் பரவிவிட்டது. முதலில் கன்சர்வேடிவ்கள் பிரபுக்களைத் தூண்டிவிட்டனர். பின்பு அரசரிடத்தில் முறையிட்டு, ஆஸ்குவித்தைப் பதவியிலிருந்து விலக்குமாறு கேட்டனர். இல்லாவிடில் அல்ஸ்டர் கிளர்ச்சி செய்யுமென்றும், இராணுவ அதிகாரிகள் அல்ஸ்டரைக் கட்டாயப்படுத்துவதைவிட, உத்தரவுகளை மறுக்கப்போவதாகவும், பொருள்கள் விநியோகத்தைத் தடுக்கப்போவதாகவும் பயமுறுத்தினர். இந்தச் சமயத்தில் அரசாங்கத்தை எதிர்த்துச்

சிண்டிகலிஸ்டுகள், குறிப்பாகச் சுரங்கத் தொழிலாளிகள் அரசாங்கத்தின் மெதுவான முன்னேற்றத்தைக் கண்டித்துத் தொழிலாளர்களிடம் வன்செயல்களைப் பின்பற்றுவது நியாய மானதே என்று பிரசாரம் செய்தனர். வேலைநிறுத்தங்கள் செய்தும், நாசவேலைகள் செய்தும் முதலாளிகளின் லாபத்தை அழிக்கப்போவதாகக் கூறினர். சுரங்கத் தொழிலாளர்களும், ரயில்வே தொழிலாளர்களும், போக்குவரத்துத் தொழிலாளர் களும் ஒன்று சேர்ந்தால், சமுதாயத்தில் என்னதான் செய்ய முடியாதென்று அவர்கள் பிரசாரம் செய்தனர். 1905-க்குப் பிறகு, தொழிற் சங்கங்களில் அங்கத்தினர்கள் தொகை மிகவும் அதிகமாகப் பெருகிவிட்டது. லிபரல் அரசாங்கத்தின் உதவியை விட, அந்தத் தொழிற் சங்கப் பிரசாரங்களாலேயே அவர்களு டைய எண்ணிக்கை அதிகரித்துவிட்டது. அவர்களுடைய சங்கங்கள், இன்ஷ்யூரன்ஸ் சட்டத்தின்படி, அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்களாகிவிட்டதால், அவைகளின் செல்வாக்கு இன்னும் அதிகமாகிவிட்டது. ரயில்வே, சுரங்கத்தொழிலாளர் வேலை நிறுத்தங்களில், அக் கம்பெனிகளின் முதலாளிகளுடன் சரி சமமான நிலையில் அவர்கள் பேச்சு வார்த்தைகளைத் தொடங் கவும், அவர்களுடைய வேலைநிறுத்தங்களில் தலையிடவும், இத் தொழிற் சங்கங்கள் செல்வாக்குப் பெற்றுவிட்டன. தொழிற் சங்கங்கள் சட்டங்களைப் புறக்கணித்துவிடுகின்றன என்ற குற்றச் சாட்டுகள் சுமத்தப்பட்டன. ஏனெனில், ஆதாரமற்ற பல வேலை நிறுத்தங்கள் சிறிய அளவில் நடைபெற்றுவந்தன. கடைகளில் வேலை செய்கின்றவர்களும் கிளர்ச்சி செய்தனர். ஜனநாயக வளர்ச்சியுடன் பல துன்பங்களும் வளர்ந்தன. எப்படியும் அத் துன்பங்களைக் களைய பொருளாதாரத் துறையில் மாற்றம் அவசியம் தேவைப்பட்டது.

சமுதாயத்தின் மற்றப் பகுதிகளிலும், பொறுமையின்மையும், அதிருப்தியும், வன்செயல்களும் அதிகரித்தன. அரசாங்கச் சட்டத்தை உயர்தர குருமார்கள் அதிகமாகப் புறக்கணிக்க வில்லையென்றால், அதற்கு முக்கிய காரணமாக இருந்தது அவர்கள் விருப்பம்போல மதச்சடங்குகளைப் பின்பற்றியதால் தான் என்று தெரியவருகிறது. பெண்கள் பொது வாழ்க்கையில் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாதென்ற எண்ணம் மாறி, விக்டோரியா அரசியாரின் ஆட்சிக்காலத்தில், அவர்கள் உரிமை களைக் கோரி போராட்டம் நடத்தவும் தயாராக இருந்தனர். அவர்களுடைய கோரிக்கைகள் வெற்றி பெறுவதற்காக, ஜான் ஸ்டுவர்ட் மில் பெரிய போராட்டத்தைத் தொடங்கி வைத்தார். அறுபதுகளில், பெண்கள் வாக்குரிமை வேண்டு

மென்று கோரி, அதற்காகப் பல சங்கங்களை நிறுவினர். 1884-ல் அவர்களுக்கு வாக்குரிமை தரவேண்டுமென்று ஒரு திருத்தம் கொண்டு வரப்பட்டது. திருமணமான பெண்களுக்குச் சொத்துரிமை உண்டு என்ற 1887ஆவது ஆண்டுச் சட்டம் பெண்களுக்குச் சட்டபூர்வமாகச் சுதந்திர உரிமை அளித்தது. கிறிஸ்துவச் சோஷியலிஸ்டு இயக்கத்தால் பெண்களுக்கு 1840-லிருந்தே தனிக் கல்லூரிகள் நிறுவப்பட்டன. லண்டன், மற்றும் பல மாகாணப் பல்கலைக் கழகங்கள் பெண்களுக்குப் பட்டங்களும் வழங்கின. 1880-க்குப்பிறகு ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் நகரங்களில் பெண்கள் கல்லூரிகள் நிறுவப்பட்டன. லண்டன், மற்ற மாகாணப் பல்கலைக் கழகங்கள் பட்டங்களை அளித்தாலும், இந்தப் பழைய நிறுவனங்கள்மட்டும் அவ்விதம் பட்டங்களை அளிக்க மறுத்துவிட்டன. 1894-லிருந்து, அவர்கள் பாரிஷ், ஜில்லா கவுன்சில்களில் அங்கத்தினர்களாக வரலாம் என்று முடிவு செய்யப்பட்டது. 1907-ல் இயற்றிய சட்டப்படி, அவர்கள் கவுன்டி, பரோ கவுன்சில்களிலுங்கூட அங்கம் வகிக்கலாம் என்று முடிவு செய்தனர். நூற்றுக்கணக்கான பெண்கள் கல்விக் குழுக்களிலும், அல்லது இரவலர் பாதுகாவலர்களாகவும் பணியாற்றினர். அரசாங்கம் அவர்களைத் தொழிற்சாலை ஆய்வாளர்களாகவும் அமர்த்தியது. அவர்கள் வர்த்தக போர்டுகளை நிறுவுவதில், நல்ல பணியைச் செய்தனர். ஆஸ்திரேலியாவிலும் நியூஸிலந்திலும், பெண்களுக்கு வாக்குரிமை அளித்ததைப்போல, அவர்களுக்கு இங்கிலாந்திலும் பாராளுமன்ற வாக்குரிமைகள் வேண்டுமென்று கோரினர். அவர்களுடைய நிலைமையை உயர்த்துவதற்கு அவர்களுக்குஆண்களுடன் சம உரிமை வேண்டுமென்று கோரினர். முன்பு வாக்குரிமை வேண்டுமென்று ஆண்கள் கோரியபோது என்ன விவாதங்களைப் பயன்படுத்தினரோ, அப்படியே பெண்களும் கோரினர்.

பெண்களின் சமூக அரசியல் யூனியன் ஒன்று 1903-ல் நிறுவப்பட்டது. அதனுடைய பிரசாரம் மிகவும் பலமிக்கதாக இருந்தது. அந்த இயக்கத்தின் முக்கியமான தலைவிகள், ஸ்ரீமதி பாங்கர்ஸ்ட் (Mrs. Pankhurst), அவருடைய மகளான கிறிஸ்டாபில் (Christabel) ஆகியோராவர். இந்தப் பெண்கள் இயக்கம் வன்செயல்களில் ஈடுபட்டது. கூட்டங்களைக் கலைத்தல், பொதுக் கட்டிடங்களை உடைத்தல், தாக்குதல், குண்டு வீசுதல், தீயிடுதல் ஆகிய செயல்களைச் செய்தால், அரசாங்கம் விரைவாக அவர்களுடைய உரிமைகளைப் பரிசீலனை செய்து மசோதா கொண்டுவருவார்கள் என்று நினைத்தனர். அவர்களுடைய வன்செயல்கள் முதல் உலகப் போர் துவங்கும் வரையில்

நீடித்தது. இவர்கள் அமைதியான முறையிலேயே அவர்களுடைய உரிமைகளை எடுத்துக் கூறியிருந்தால், பாராளுமன்றம் செவி சாய்த்திருக்கும். ஆனால், இவர்களுடைய வன்செயல் முறை களால், பாராளுமன்றமும் கோபங்கொண்டது. இந்தப் பிரச் சினையால், கட்சிக்குள்ளேயே பிளவு ஏற்பட்டது. கேபினட்டில் ஆஸ்குவித் பலமான எதிர்ப்பை இவர்களுக்குத் தெரிவித்தார். ஆனால், மற்றொரு பக்கம், கிரே, ஹால்டேன், லாயிட் ஜார்ஜ் ஆகியோரும், தொழிலாளர் கட்சி முழுவதும் இவர்களுக்கு ஆதரவளித்தனர். தல அரசாங்க நிறுவனங்களில் இவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளித்தவுடன், கொள்கையளவில், இவர் களுக்கு உரிமைகள் மறுக்கப்படலாகாது என்றுகூறினர்.

கிளாட்ஸ்டனுடைய வாழ்க்கை லட்சியமான விடுதலை படிப்படியாக அவருடைய சந்ததியாரால் எல்லாத் துறைகளிலும் சாதிக்கப்பட்டது. வலுக்கட்டாயமாகக் கொண்டுவரப்பட்ட சமத்துவத்தினால் லிபரலிசத்தின் அபாய எல்லைக்கே வந்து விட்டனர் என்ற உணர்வைப் பெற்றனர். 1912-ல் 2½ மில்லியன் புதிய வாக்காளர்களைச் சேர்ப்பதென்று ஒரு மசோதா கொண்டு வரப்பட்டது. ஆனால், பெண்கள் வாக்குரிமை இயக்கத்தினால் இந்த மசோதா கைவிடப்பட்டது. அயர்லாந்தில் நிலச் சீர் திருத்தங்கள் கொண்டுவந்ததைப் போல, பிரிட்டனிலும், அரசாங்கக் கட்டுப்பாடு, வரையறுக்கப்பட்ட குத்தகைகள், வாடகை நீதிமன்றங்கள் ஆகியவற்றைக் கொண்டுவர லாயிட் ஜார்ஜ் திட்டம் வகுத்தார். இந்தியாவில், நிர்வாகக் கவுன்சில் களில் இந்தியர்களை நியமனம் செய்யும் சீர்திருத்தத்தை மார்லி கொண்டுவந்தார். மேலும், அங்கே கவுன்சில்களில் தேர்தல் முறையைப் பின்பற்றுவது என்றும் முடிவுசெய்தார். இதே கொள்கைகளை எகிப்தில் கொண்டு வருவதற்கு கிராக்மருக்குப் (Cromer) பின் வந்தவர்கள் முயற்சி செய்தனர். ஆனால், அயர்லாந்தில்தான் அவர்களுக்கு நிறைய வேலை இருந்தது. முற்றுப்பெறாத பல உறுதிமொழிகள் இன்னும் இருந்தன. 1912–14-ல் அயர்லாந்துப் பிரச்சினை பிரிட்டனில் உள்ள எல்லாக் கட்சியினரையும் மனக்கசப்புக்குள்ளாக்கிவிட்டது. புதிய வரவு செலவுத் திட்டத்தைக் கொண்டுவந்ததற்கும், பாராளுமன்றச் சட்டத்தைக் கொண்டுவந்ததற்கும் பழிவாங்கும் எண்ணத்தில் கன்சர்வேடிவ்கள் காத்திருந்தனர். வட இங்கிலாந்திலே கட்சி யின் செல்வாக்கைப்பற்றிச் சந்தேகம் ஏற்பட்ட உடனேயே, போனர் லா உணவுப் பண்டங்கள்மீது வரி விதிக்கவேண்டுமென்ற ஆலோசனையைக் கைவிட்டுவிட்டார். அதனால், அல்ஸ்டர் பிரச் சினையில் தீவிரமாக அவருடைய கட்சியை ஈடுபட வைத்தார்.

கிளாட்ஸ்டனின் இரண்டாவது தோல்விக்குப் பிறகு, அயர்லாந்து விவகாரம் முற்றிலும் மாறிவிட்டது. நிலங்கள் வாங்குவது ஏறக்குறைய முடிந்துவிட்டது. விவசாயிகள் நல்ல செழுமையில் இருந்தனர். ஐரிஷ்காரர்களின் ஆதிக்கத்திலேயே தல அரசாங்கம் இருந்தது. ரெட்மாண்ட் என்ற பார்னெல்லின் ஆதரவாளர், பாராளுமன்றத்தின் கட்சித் தலைவராக இருந்தார். அவர் பாராளுமன்ற மரபுகளை விரும்புகிறவர். அதனால், விரைவில் லிபரல் கட்சியின் ஆதரவைப் பெற்று, ஆங்கிலேயப் பேரரசில், அயர்லாந்தும் ஒரு பகுதியாக இருக்கவேண்டுமென்று ஆர்வமிக்கவராக இருந்தார். 1910ஆவது ஆண்டுத் தேர்தலுக்குப் பின்பு, அவருடைய வாய்ப்பு மிகவும் அதிகரித்துவிட்டது. பாராளுமன்றச் சட்டத்தை ஆதரித்ததால், அவருடைய கட்சிக்கு ஏதாவது சலுகை கிடைக்கும் என்று எதிர்பார்த்திருந்தார். அவருக்கு மற்ற டொமினியன்கள் ஆதரவு அளிக்குமென்று நம்பினார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வற்புறுத்தலும், ஐரிஷ் வாக்குகளும் மேலும் இந்த வாய்ப்பைப் பலப்படுத்தின. ஆனால், அயர்லாந்தில் புதிய சக்திகள் வேலைசெய்யத் தொடங்கிவிட்டன. அவைகளைப் புதிய சக்திகள் என்று சொல்லுவதைவிட, பழையவர்களே புதிய மாற்றங்களை மேற்கொண்டவர்கள் என்று சொல்லுவதே பொருத்தமானதாகும். அவர்களுக்குப் பாராளுமன்ற முறைகள் பிடிக்கவில்லை. அயர்லாந்து வரலாற்றில், எப்பொழுதாவது சமரச மனப்பான்மையிருந்ததாகவே தோன்றவில்லை. வுல்ஃப் டோன் (Wolfe Tone) அல்லது 'நாற்பதுகளில்' தோன்றிய இளைஞர்கள் அயர்லாந்து இயக்கம் (Young Ireland) அல்லது ஃபெனியன்களோ (Fenians) அல்லது பார்னெலோ (Parnell) அயர்லாந்தின் பரம்பரை எதிரியுடன் ரெட்மாண்ட் சமரசப் பேச்சை நடத்துவதென்பதை ஆதரித்தே இருக்க மாட்டார்கள். பிரிட்டனுக்கு அபாயம் நேருகின்ற எந்த வாய்ப்பையும் பயன்படுத்தத் தயாராக இருந்ததுமன்றி, அங்கே வன்செயல்களைப் புரியவும் காத்துக்கொண்டிருந்தனர். 'கேலிக் சங்கம்' (Gaelic League) என்பது தேசிய உணர்ச்சியை ஊட்டுகின்ற பல இயக்கங்களில் ஒன்றாகும். டப்ளின் தொழிலாளர் குடும்பத்தைச் சார்ந்த ஆர்தர் கிரிஃபித் என்பவருடைய இடையறாத் தன்னலமற்ற முயற்சியால் 'யுனைடெட் ஐரிஷ்மேன்' (United Irishman) என்ற பத்திரிகையைத் துவக்கி, மக்களிடையே கிளர்ச்சி மனப்பான்மையை ஊட்டினார். பிறகு ஸின் ஃபென் (Sinn Fein) என்ற மற்றொரு இயக்கம் சத்தியாகிரக முறைகளைக் கையாளுவதில்தான், சுய ஆட்சி அடையமுடியும் என்றும் வற்புறுத்தி வந்தது. இவற்றைத் தவிர, டப்ளினில் உள்ள குறைந்த கூலிகளை வாங்கும் தொழிலாளிகளும், மோச

மான வீடுகளில் குடியிருப்பவர்களும், சிண்டிகலிஸ்டுகள் பிரசாரம் செய்து வந்த வன்முறைச் செயல்களில்தான் வெற்றி அடைய முடியும் என்ற கொள்கை அவர்களிடையே நன்றாகப் பதிய ஆரம்பித்தது.

1907ஆவது ஆண்டிலிருந்து ஐரிஷ் காரியதரிசியாகப் பணி யாற்றிவரும் அகஸ்டின் பிர்ரல் (Augustine Birrell) என்பவர் உறுதிப்பாடுடன் ஆட்சிசெய்யும் திறனற்றவர். மேலும் நிலங்களை வாங்கக் கடனுதவி அளிக்கும் வசதிகளும் திடீரென்று துரதிர்ஷ்டவசமாக நிறுத்தப்பட்டன. இதனால் நிலங்கள் விற்பனை நின்றுவிட்டது. அவர்களுக்கு வெளிநாடுகளிலிருந்து வருகின்ற ஆயுதங்களையும், அவர்கள் ஆயுதங்களை வைத்துக் கொள்வதையும் அனுமதித்த சட்டம் 1907-ல் ரத்தாகிவிட்டது. இது அவர்கள் செய்த பெரிய தவறாகும். அந்த ஆண்டின் குறைந்த செலவினங்களும், 1912 வரையிலும் அயர்லாந்துச் சுய ஆட்சி மசோதா கொண்டுவரத் தாமதமாக்கப்பட்டதால், ரெட் மாண்டின் எதிரிகள் பெருகினர். மேலும் அவர்கள் கொண்டு வந்த மசோதாவில், அல்ஸ்டர் பிரச்சினையை எடுத்துக் கொள்ளவே இல்லை. அல்ஸ்டரில் மில்லியன் புராடஸ்டன்டுகள் இருந்தனர். பெல்ஃபாஸ்டின் துரிதமான வளர்ச்சியால், அவர்களும் பணக்காரர்களாகி வந்தனர். அது மட்டுமன்றி, ஆங்கிலேய அரசாங்கம் இவர்களைக் கட்டாயப்படுத்திக் கத்தோலிக்க டப்ளின் ஆட்சிக்குள் கொண்டுவர முடியாது என்று கருதலாயினர். ஆஸ்குவித்துக்கு இதைப்பற்றி நன்றாகத் தெரிந்ததால், ஏதாவது சலுகைகளைத் தர வேண்டுமென்று உணர்ந்திருந்தார். ஆனால், பல நடைமுறை இடையூறுகளால், இவற்றை நிறுத்திவைத்துக்கொண்டு, மசோதாவைச் சமர்ப் பிக்கும்பொழுது பேரரசின் கூட்டாட்சியில் தனித்து ஒரு பகுதியாக அயர்லாந்து இருக்கவேண்டுமென்றும், விரைவில் பேரரசுப் பாராளுமன்றத்திலிருந்து அவர்கள் பிரிந்துவிட்டால் நல்லதென்ற அடிப்படையால் வற்புறுத்தினர். ஆனால், பேரரசு கூட்டரசாங்கத்தில் ஒரு பகுதியாக இருக்கவேண்டுமென்பதால், வெஸ்ட்மினிஸ்டரிலும் சில ஐரிஷ் அங்கத்தினர்கள் இருக்கத் தான் வேண்டுமென்பது வெளிப்படையாகத் தெரிந்ததே. இந்த மசோதாவைப் பிரபுக்கள் சபை 1913-ல் நிராகரித்துவிட்டது. ஆனால், பாராளுமன்றச் சட்டத்தின்படி, மீண்டும் அவர்களுடைய சம்மதமில்லாமலேயே நிறைவேற்றப்பட்டது. மாறுபட்ட சூழ்நிலையில் இந்த மசோதா செப்டம்பர் 1914-ல் சட்டமாகியது.

யூனியனிஸ்டுகளின் எதிர்ப்பு இரண்டு வகைகளில் காட்டப் பட்டது. சுய ஆட்சியை எந்த வகையிலும் அவர்கள் ஏற்றுக்

கொள்ள முடியாதென்று அறிவித்தனர். இந்தச் சுய ஆட்சியில், அல்ஸ்டரும் சேர்த்துக்கொள்ளப்பட்டாலும், தெற்கு அயர்லாந்திலுள்ள யூனியனிஸ்டுகளை இத்துடன் இணைப்பதென்பது மாபெரும் குற்றமாகும். அல்லது சுய ஆட்சியை அவர்கள் சம்மதித்ததால், அல்ஸ்டர் அந்த ஆட்சியிலிருந்து விலகியே இருக்கும் என்பது வெளிப்படை. அயர்லாந்திற்குச் சுய ஆட்சி தரப்பட்டால், அல்ஸ்டர் அந்தச் சட்டத்தைப் புறக்கணிக்கும் என்று மசோதாவைக் கொண்டுவரும்பொழுதே அவர்கள் கூறினர். அதனால், இதை எதிர்த்து 1912 துவக்கத்திலேயே அல்ஸ்டர் தொண்டர்கள் திரட்டப்பட்டனர். அவர்கள் ஒரு சாசனத்தைத் தயாரித்தனர்.

அவர்களுடைய அரசியல் தலைவர் எட்வர்ட் கார்ஸன் (Edward Carson) ஆவார். போனர் லா, அவருடைய கட்சியின் ஆதரவைக் கடைசிவரையிலும் அல்ஸ்டருக்குத் தருவதாக உறுதி கூறினர். கார்ஸனுக்கு விரோதமாக அரசாங்கம் எந்தச் சட்ட நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. எந்த அல்ஸ்டர் ஜூரியும் அவர் குற்றவாளி என்று சொல்ல முன்வரவில்லை. சில சமரசப் பேச்சுவார்த்தைகளுக்குப் பிறகு அரசர் 1914ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அவர்களிடையே ஓர் உடன்பாட்டை ஏற்படுத்திக் கொடுத்தார். அதன்படி சில அல்ஸ்டர் கவுன்டிகள் வேண்டுமென்றால், சில வருடங்களுக்குத் தனியாகவே இருக்கட்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இந்த ஏற்பாட்டை ரெட்மாண்ட் ஏற்றுக்கொண்டார். காலதாமதம் செய்கின்ற இந்தக் கொள்கையை அல்ஸ்டர் சிறிதும் விரும்பவில்லை. அதனால் ஒரு குறிப்பிட்ட அல்ஸ்டர் பகுதியை நிரந்தரமாகவே பிரித்து விட்டால் என்னவென்றும், பின்பு வேண்டுமென்றால் ஐக்கிய அயர்லாந்துடன் இணைந்துகொள்ளும் விருப்பமேற்படின், அதற்கான வாக்கெடுப்பை எடுத்து முடிவு செய்துகொள்ளலாம் என்றும் அல்ஸ்டர் தலைவர்கள் கூறினர். ஜூலை மாதத்தில், அரசர் இதைப்பற்றிப் பரிசீலனை செய்ய எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் கொண்ட ஒரு மாநாட்டைக் கூட்டினர். ஆனால், அவர்களிடையே எந்தவிதமான கருத்து ஒருமைப்பாடும் ஏற்படவில்லை. ஒரு வாரத்திற்குள் போர் தொடங்கியதால் இந்தப் பிரச்சினை மறைந்தது.

ஆனல், அது மறைந்தாலும், அதனுடைய வேகம் இன்னும் குறையவில்லை. இன்னும் வெடித்துக்கொண்டுதானிருந்தது. அயர்லாந்து பழைய வரலாற்றைத் திருப்பியும் பின்பற்றியது. பிர்ரலின் பலவீனமான ஆட்சியில், பகிஷ்கரிப்பும், சுட்டுக் கொள்வதும், ஆடுமாடுகளைத் திருடுவதும் போன்ற நிகழ்ச்சிகள்

மீண்டும் தலைதூக்கின. அதனுல், ஜூரி முறையை அவர்கள் பின்பற்ற முடியவில்லை. சுய ஆட்சிக்குப் பிறகு, சமய அடிப் படையிலும் பல பிளவுகள் ஏற்பட்டன. 1913-ல் ஜேம்ஸ் லார்கின், டப்ளினில் போக்குவரத்துத் தொழிலாளிகளின் வேலை நிறுத்தத்தைத் தலைமை தாங்கி நடத்தினர். அவருக்கு உதவி யாகச் சோஷியலிஸ்டுக் குடியரசுக் கட்சியை சார்ந்த ஜேம்ஸ் கானலி என்பவரும் இருந்தார். இந்தச் சமயத்திலிருந்துதான் குடிமக்கள் படை ஒன்று திரட்டப்பட்டது. அல்ஸ்டர் தொண்டர் படையில் இப்பொழுது 100,000 உறுப்பினர்கள் சேர்ந்தனர். ஏப்ரல் 1914-லிருந்து லார்னேயில் முற்றுகையிட்டும், படைகளைக் குவித்தும் ஆர்பாட்டம் செய்தனர். அவர்களுடைய இயக்கம் தெற்கிலும் முன்மாதிரியாக அமைந்து, தெற்கில் தேசியத் தொண்டர்கள் படையை ஸின் ஃபென் கழகம் தோற்றுவித்தது. இந்தப் படைக்கு மற்றத் தீவிர இயக்கங்களும் ஆதரவளித்தன. இவர்களையெல்லாம் அடக்குவது ரெட்மாண்டின் பொறுப்பில் விடப்பட்டது.

சட்டத்திற்குப் புறம்பான பல படைகள் அயர்லாந்தில் இருந்ததுமட்டுமல்லாது, அதனுல், ஆங்கிலேயப் படையின் ஒழுக்கமும் கெட்டுவிட்டது. கடற்படை, இராணுவ நடமாட்டங் களெல்லாம் அல்ஸ்டர் கிளர்ச்சியை அடக்குவதற்காகத்தான் நடக்கின்றன என்று அல்ஸ்டரில் இந்தவிதமான கருத்து நிலவியது. இராணுவத்தைக்கொண்டு அல்ஸ்டரைப் பணிய வைப்பதென்பதும் கடினமான காரியமே. இராணுவத்தில் ஐரிஷ் புராடஸ்டென்டுகள் பணியாற்றுகின்றனர். ராபர்ட்ஸ் என்ற ஐரிஷ் புராடஸ்டென்டு இராணுவத்தில் நல்ல செல்வாக்குப் பெற்றவர். போர்க் காரியாலயத்தில் உள்ள ஹென்றி வில்ஸன் என்பவர் அல்ஸ்டர் எதிர்ப்பு இயக்கத்துடன் தொடர்பு வைத் திருந்தார். மார்ச் மாதத்தில் அல்ஸ்டர் இயக்கத்தினரை ஒடுக்க இராணுவத்தை அனுப்பியபொழுது, அவருடைய சூழ்ச்சி களாலும், மற்றும் போர்க் காரியாலயத்தில் பணியாற்றிய ஹால் டேனுக்குப் பிறகு வந்த ஸீலியின் சில தவறுகளாலும், டப்ளினின் பொது உத்தரவுகளாலும், கர்ரா (Curragh) என்ற இடத்தில் ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. அல்ஸ்டர் கிளர்ச்சிக் காரர்களை எதிர்த்து இராணுவத்தினர் உத்திரவுகளை ஏற்று கீழ்ப் படியவில்லையெனின், அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவர் என்று உத்தரவிடப்பட்டது. ஆனுல் இராணுவத்தினர் அல்ஸ்டர் கிளர்ச்சியை ஒடுக்குவதைவிட, வேலையிலிருந்து நீக்கப்படு வதையே விரும்பினர். பின்பு, ஆஸ்குவித்தே போர்க்காரியாலய பொறுப்பை மேற்கொண்டு அங்கே ஒழுங்கை நிலை நிறுத்தினர்.

வெளிப்படையாகத்தான் ஒழுங்கு நிலை நிறுத்தப்படட்டதே தவிர, ஆங்கிலேயே அரசியலிலும், மற்றும் தொழிலாளி, முதலாளி என்ற தகராறுகளிலும், அயர்லாந்திலும், இந்த இயக்கத்தினால் பெரும் தீமைகள் விளைந்தன. ஜெர்மன் அரசாங்கமும் இந்த நிலைமையைக் கூர்ந்து கவனித்து வந்தது.

ஜூலைமாதம் இருபத்து நான்காம் நாள் நடந்த ஒரு மாநாட்டில், 'என்னுடைய பொறுப்பு வாய்ந்த மக்களிடையே உள் நாட்டுப் போர் என்ற பேச்சு அடிபட்டு வருகிறதே' என்று அரசருடைய குறிப்பு ஒன்று அறிவிக்கப்பட்ட இரண்டு நாட்களுக்குப் பிறகு அல்ஸ்டர் கிளர்ச்சிக்காரர்களைப் போலவே டப்ளின் தொண்டர்களும் ஹவ்த் (Howth) என்ற இடத்தில் தங்களுடைய துப்பாக்கிகளை அரசினரிடம் ஒப்படைத்து விட்டனர். ஆனால், 28ஆம் தேதியன்று, ஆஸ்திரியா ஸெர்பியாமீது போர் தொடுத்தது. ஐரோப்பாவில் விளக்குகள் அணைக்கப்பட்டன. பிரிட்டிஷ் லிபரலிசத்திற்கோ, அல்லது அயர்லாந்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கோ இனி ஒளிவீசுவதற்குரிய வாய்ப்பே இல்லாமற் போயிற்று.

## சமகால நிகழ்ச்சிகள்

1906 அல்ஜிகிராஸ் மாநாடு.
டூமாவின் முதல் கூட்டம்.

1907 பாரிஸ், ரோம் நகரங்களில் ஏழாவது எட்வர்ட்.
வில்லியம் ஜேம்ஸ் எழுதிய 'பிராக்மேடிஸம்' (Pragmatism).
ஸின்ஞ் (Synge) எழுதிய 'மேற்கு உலகத்தின் விளையாட்டுப் பையன்' (Playboy of the Western World).

1908 ஹெட்ஜாஸ் ரயில்வேயின் துவக்கம்.
லண்டனில் ஜனாதிபதி ஃபாலியர்ஸ் (Fallieres).
எச். ஜி. வெல்ஸ் எழுதிய 'ஆகாயத்தில் போர்' (The War in the Air).

1909 சுல்தான் அப்துல் ஹமீதைப் பட்டத்தைவிட்டு இறக்கல்.
ஜெர்மனியில் பெத்மேன்-ஹால்வெக் (Bethmann-Hollweg) சான்சலராக நியமிக்கப்படல்.
பிளரியட் (Bleriot) ஆங்கிலேயக் கால்வாய்மீது பறத்தல்.
மெரிடித், ஸ்வின்பர்ன் ஆகியோரின் மரணம்.

1910 ஐந்தாவது ஜார்ஜ் மன்னர் பட்டத்திற்கு வருதல்.

கொரியாவை ஜப்பான் கைப்பற்றுதல்.

ஆர்னல்ட் பென்னட் எழுதிய 'கிளே ஹேங்கர்' (Clay hanger).

டால்ஸ்டாயின் மரணம்.

1911 திரிபோலியை இத்தாலி கைப்பற்றல்.

அகாடிரில் 'பேந்தர்'.

சார்லஸ் டில்கின் மரணம்.

1912 ஃபிரான்சில் பாயின்கேர் (Poincare) பிரதமராதல்.

சீன குடியரசாதல்.

வுட்ரோ வில்ஸன் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஜனதிபதியாதல்.

1913 பால்கன் போர்கள்.

ஐன்ஸ்டீனின் (கால இடத்) தொடர்புறு கோட்பாடு (Theory of Relativity).

1914 முதல் உலகப் போர்.

பனமா கால்வாய் தொடங்கப்பெறுதல்.

# 14. அயல்நாட்டு விவகாரங்களும் போருக்கான நடவடிக்கைகளும், 1895-1914

பேரரசி விக்டோரியா இறக்கும்பொழுது, வரலாறே இது வரையிலும் கண்டிராத ஓர் அழிவுக்காலத்தில் அவருடைய மக்கள் வாழ்ந்துகொண்டிருந்தனர். பல இடையூறுகளையும் கடந்து, 1815-க்கு முன்பு சற்றேறக்குறைய இருபது ஆண்டுகளாக பிரிட்டன் போரிட்டு உருவாக்கிய பெரிய பேரரசு இப்பொழுது சிதறிவிட்டது. உலக அரசியல் படத்தில் அதைக் காணலாம். பேரரசைப் பாதுகாக்கும் திட்டமெல்லாம் வெறும் கற்பனையாகிவிட்டது. மீண்டும் தனித்து நிற்கின்ற நிலையிலிருந்து வெளிப்பட்டு வந்தாலும், இருநூறு ஆண்டுகளாகப் பின்பற்றிவந்த பழைய கொள்கைகளையெல்லாம் மறந்துவிட்டுப் புதிய சமரச உடன்படிக்கைகளைச் செய்யவேண்டி நேரிட்டது. பழைய பகைவர்களான ஃபிரான்சுடனும் ரஷ்யாவுடனும் உடன்படிக்கை செய்துகொண்டு, இதுவரையிலும் நட்புடன் இருந்த ஜெர்மனியைப் பகைத்துக்கொள்ள நேரிட்டது.

பல சக்திகள், தனிப்பட்ட அரசியல்வாதிகளின் கருத்துகளையும் மக்களின் எண்ணங்களையும்மீறி, சர்வ தேசிய நிலையை மாற்றிவந்தன. 1789-ல் தோன்றிய புரட்சி, சுதந்திரம் என்ற எண்ணத்தைப் பல நாட்டு மக்களிடம் விதைத்துவிட்டது. அந்தக் கருத்து, தேசிய இனம் உருவாக்குவதில் பேரளவிற்குப் பயன்படுத்தப்பட்டது. இது தேசிய ஆர்வமாக வளர்ச்சி அடைந்து, அந் நாட்டிலுள்ள சிறுபான்மையினரையும் புறக்கணித்துவிட்டது. தேசிய இன உணர்ச்சி வளர்வதற்கு எது தடையாக இருந்தாலும், அவற்றையெல்லாம் புறக்கணித்து, இவ்வுணர்ச்சி மக்களுடைய மனதில் பதிய வைப்பதற்கு, ஜனநாயகத்தின் கருவிகளான பத்திரிகை, ஒன்று திரட்டப்பட்ட மக்கள் கருத்து ஆகியவை பயன்படுத்தப்பட்டன. ஜனநாயக ஆட்சி இல்லாத நாடுகளிலும், இந்த ஜனநாயக முறைகள் பின்பற்றப்பட்டன,

புனித ரஷ்யாவின் தலைமையில் அகில ஸ்லாவ் இன மக்கள் ஒன்றுபடவேண்டுமென்றும், அல்லது பால்கன் நாட்டு மக்களை ஒன்றுதிரட்டுவது போன்ற அணிவகுப்புகளிலும், எகிப்தின் வழியாக ஆப்பிரிக்காவுக்குச் செல்லவேண்டும், அல்லது இந்தியா, ஜப்பான் வழியாக ஆசியாவுக்குச் செல்லவேண்டும்; இல்லாவிடில் பயன் இல்லை என்ற அளவிற்கு மக்களின் தேசிய உணர்ச்சி ஒருங்கு திரட்டப்பட்டது. அதே சமயத்தில் தடையில்லாத வாணிபம் தடைபட்டு, ஐரோப்பிய மூலதனம் உலகின் பல்வேறு பகுதிகளில் போடப்பட்டு, காலனிகளைக் கைப்பற்றுவதிலும், மூலப்பொருள்களை அடைவதிலும், மார்க்கட்டுகளைப் பிடிப்பதிலும் தீவிரமாக உலக நாடுகள் பல முனைந்திருந்தன. மனித சமுதாயத்தின் முன்னேற்றமே இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும் இரண்டு மடங்காக்கிவிட்டது. ஏனெனில், ஒவ்வோர் அரசும் முன்பிருந்ததைக் காட்டிலும் பன்முறை பலமுள்ள நாடாக்கிக்கொண்டது. இப்பொழுதெல்லாம் போர் ஏற்படுமெனின், தேசிய ஐக்கியமும், முழு இராணுவ சேவையும் முக்கியமானதாகக் கருதப்பட்டன. பல ஆண்டுகளாக ஆசியாவில் அமைதி நிலவி வந்துவிட்டதால், மக்கள் தொகை மிகவும் பெருகிவிட்டது. அது மேலும் வளரவேண்டும், அல்லது அழியவேண்டும். புதிய விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளும், நீராவி சக்திகளும், மின்சார சக்திகளும், கடலுக்குள் செல்லும் நீர்மூழ்கிக் கப்பல்களும், ஆகாயத்தில் பறக்கும் விமானமும், வெடிகுண்டுகளின் தரமும், போர் ஆயுதங்களின் சக்தியைப் பலப்படுத்திவிட்டன. மனிதனுடைய மனத்திலிருந்து மதக் கட்டுப்பாடுகள் மறைந்து வருகின்ற இந்தக் காலத்திலேயே, இவ்வளவும் நடைபெற்றன.

அரசியல் ஆதிக்கச் சமநிலை என்ற தராசில், இப்பொழுது புதிய எடைகள் போடப்பட்டு, நிலைமை மாறிவிட்டது என்று கூறவேண்டும். துருக்கியப் பேரரசு சீர்குலைந்துவிடும் என்று கூறிவந்தது, இப்பொழுது அதனுடைய அந்திய காலத்தை நெருங்கிவிட்டது. எப்பொழுது அந்தக் காலம் வரும் என்று, கிரேக்கர்கள், பல்கர்கள், செர்பியர்கள் காத்துக்கொண்டே இருந்தனர். மேலும் அதனுடைய அழிவு, ஆஸ்திரியா-ஹங்கேரியின் பேரரசுக்கும் சாவு மணி அடிக்கும் என்று நம்பப்பட்டது. இந்தப் பேரரசு 1848-ல் உலுக்கப்பட்டு, 1859-ல் சின்னபின்னப்பட்டு 1860-ல் அவமானப்படுத்தப்பட்டதென்றாலும் அந்தப் பேரரசில் எந்தவித மாறுதலும் அபாயத்தை அதிகமாக்கிக் கொண்டே வந்தது. ஏனெனில், அங்கேயுள்ள பெரும்பான்மையான மக்கள் ஸ்லாவ் இனத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் செக்கினத்தினரைப் போல, ரஷ்யாவின் ஆதரவை எதிர் நோக்கி

யிருந்தனர். இதைப் போலவே, குரோட்டுகளையும் தெற்கு ஸ்லாவ் இனத்தினராகவும், ஸெர்பியா தூண்டிவிட்டுக்கொண்டிருந்தது. பிஸ்மார்க்கின் ஜெர்மனி இன்னும் ஐரோப்பாவில் தலைசிறந்த இராணுவம் படைத்த நாடாக இருந்தது. ஆனால், பிஸ்மார்க்குக்குப் பின்பு வந்தவர்கள் அவருடைய பொன்னான கருத்துகளை ஏற்று நடக்கவில்லை, 1893-ல் ஏற்பட்ட ஃபிரெஞ்சு ரஷ்யா உடன்படிக்கை ஜெர்மனியை இரு பக்கங்களிலிருந்தும் தாக்கும் அபாயத்தைத் தவிர்க்கவில்லை. பிரிட்டன்மீது போர் தொடுப்பதென்றால், இத்தாலி முக்கூட்டு உடன்படிக்கையிலிருந்து விலகிக் கொள்வதாக வெளிப்படையாகவே அறிவித்தது. ஃபிரஞ்சுக் குடியரசில் முன்பிருந்ததைக் காட்டிலும் இப்பொழுது நிறைய ஊழல்களும் பிரிவினைகளும் மலிந்திருந்தன. அதற்கு, ஜெர்மனியைப் பழி வாங்குவதா, அல்லது பேரரசை விஸ்தரித்துக்கொள்வதா என்ற இரண்டு பிரச்சினைகளில் எதை ஆதரிக்கலாம் என்று தத்தளித்துக்கொண்டிருந்தது. பேரரசைப் பரப்பும் கொள்கையில் பிரிட்டனுடன் மோதவேண்டிய அவசியமும் ஏற்படுகிறது. 1878-1890 வரை நிகழ்ந்த பால்கன் நிகழ்ச்சிகளைப் பார்த்தால், ரஷ்யா அங்கே தோல்வி அடைந்திருப்பது தெரியும். அதனால், இந்தியாவின்மீதிருந்த அதனுடைய கண்ணோட்டம் நின்றுவிட்டது. அதற்குப் பதிலாக தூரக் கிழக்குப் பகுதியில் அதனுடைய நாட்டம் சென்றது. 1890-ல் மற்ற உலகநாடுகளிலும், ஐரோப்பாவில் ஏற்பட்ட தொத்து நோய் பரவிவிட்டது. திரிபோலி, ஸிரியா ஆகிய நாடுகளில், துருக்கி அரசாங்கத்தின் ஊழல்மிக்க ஆட்சி பெரிய குழப்பத்தை ஏற்படுத்திவிட்டது. அதைப்போன்றே ஃஆப்ரிக்காவிலும் போர்ச்சுகீசிய ஆதிக்கம் பல பகுதிகளில் நிலவியிருந்தது. இவைகளைத் தவிர, மற்றப் புதிய நாடுகளும் முன்னேற்றமடைந்திருந்தன. அதனாலும் அதிர்ச்சி ஏற்பட்டது என்று சொல்லலாம். மேற்கத்திய நாடுகளிலிருந்து புதியபுதிய போர்க்கலன்களையும் மாதிரிகளையும் பெற்று ஜப்பான் நவீன நாடாக மாறிவிட்டது. 1890-1900 வரை, அமெரிக்க ஐக்கிய நாடுகள் அதனுடைய தனித்து நிற்கும் கொள்கையை உதறிவிட்டுத் தென் அமெரிக்காவிலும், பஸிஃபிக்கிலும் புதிய நாடுகளைப் பிடிக்கும் ஏகாதிபத்யக் கொள்கையைக் கடைப்பிடிக்கலாயிற்று.

இந்த நிகழ்ச்சிகளால், மோதல் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருந்தன. இவற்றையும்விட, கருத்து வேற்றுமைகளிலும் மோதல் ஏற்பட்டதால், இந்த வாய்ப்புப் பன்மடங்கு பெருகுவதற்கும் சந்தர்ப்பம் இருந்தது. இதனால் சமநிலை குன்றிவிடும் என்று முன்பே காஸில்ரேயும், கேனிங்கும் அறிந்திருந்தனர்.

கிழக்கத்திய நாடுகளில் ஆட்சி புரிந்துவந்த வல்லரசர்கள், பெரும் பாலும் ஜனநாயக ஆட்சிக்கு முரண்பட்டவர்கள். அந்த வல்லரசர்கள் தங்களுடைய படைகளையும் மற்ற ஆலோசகர்களின் புகழுரைகளையும் கேட்டே, எந்தவிதமான சமரச உடன்பாட்டிற்கும் ஜனநாயக நாடுகளுடன் வர விரும்பவில்லை. அவர்களுடைய பயத்தைவிட, பலவீனத்தினால்தான் இந்த மோதல் ஏற்படும் வாய்ப்புகள் அதிகமாக உருவாகிக்கொண்டிருந்தன. நிலைமையைச் சரியாகப் புரிந்துகொள்வதற்கு இரண்டாவது கெய்சர் வில்லியமுக்குத் திறமையில்லை. அதைப்போன்றே, ஃபிரான்ஸ் ஜோசப்புக்கும் நல்ல மனப்பான்மையுடைய இரண்டாவது ஜார் நிக்கோலசுக்கும் அரசியல் நிலைமையை அறிந்து கொள்ள முடியவில்லை. அவர்களுடைய பலவீனத்தால்தான் அமைதிக்கே ஆபத்து ஏற்படும் நிலைமை இருந்தது. புகழ்ச்சியையும், படைவீரர்களையும், இரகசிய ஆலோசனையாளர்களையும் நம்பியிருப்பவர்களுக்குச் சமரசம் செய்துகொள்ளும் மனப் பான்மையே இல்லாது போய்விட்டது.

எந்த நாட்டுடனும் கூட்டுசேராக் கொள்கையைத்தான் இது வரையிலும் பின்பற்றிவந்திருக்கிறோம். சாலிஸ்பரியின் கடைசி மந்திரிசபையும் இந்தக் கொள்கையைத்தான் பின்பற்றிவந்தது. வாட்டர்லூ காலத்தில் இருந்த இரு பகை நாடுகளையே இன்னும் பகைவர்கள் பட்டியலில் முன்வரிசையில் பிரிட்டன் குறித்து வைத்திருந்தது. பாஸ்பரஸ் வழியாக ரஷ்யா முன்னேற வேண்டும் என்ற அதனுடைய ஆர்வம் குறைந்திருந்ததென்றாலும், வெளிப்படையாக இன்னும் மறையவில்லை. சீனா ஜப்பான் நாடுகளிடையே நிகழும் போரில் தலையிட்டு நமது செழிப்பான தூரக்கிழக்கு வாணிகத்தை அழிப்பதே அதனுடைய முக்கிய நோக்கமாக இருந்தது. ஃபிரான்சைப் பொறுத்த வரையிலும் உலகம் முழுவதிலும் அதனுடன் பிரிட்டன் மோதிவிட்டது. இந்தோ-சீனா, பர்மா எல்லைப்புறங்களில் ரோஸ்பரி, போரைத் தவிர்க்க முடியாது என்று கூறிவிட்டார். டூனிஸ் கடற்படை தளத்தில் உள்ள பிஸர்டாவை (Bizerta) பலப்படுத்தியதை பிரிட்டன் சிறிதும் விரும்பவில்லை. நைல் சமவெளியில் பாய்கின்ற நைகர், காங்கோவில் உள்ள எல்லைப்புறங்களில் தகராறுகள் ஏற்பட்டன. 1895-ல் ரோஸ்பரியின் உதவி காரியதரிசியான கிரே அந்தப் பகுதி பிரிட்டனைச் சேர்ந்ததே என்று தெளிவாக அறிவித்தார்.

எந்தப் பக்கத்திலும் கூட்டு சேராதிருத்தலைச் சாலிஸ்பரி நிலைநிறுத்தவேண்டுமென்று விரும்பியபோதிலும், அந்தக் கொள்கையைக் கடைசி வரையில் பின்பற்றுவது மிகவும் கடின

மாகிவிட்டது. ஏனெனில், இரு தரப்பினரும், மோதலுக்கு வேண்டிய நடவடிக்கைகளைத் தீவிரமாக்கிக்கொண்டிருந்தனர். ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டியவர் இறந்துவிட்டார். அவர் இறந்துவிட்டதற்குப் பிறகு, ஸாலிஸ்பரி அவருடைய சேவைகளை உண்மையில் உணர்ந்தார். 1895-96-ல் ஆர்மீனியாவில் நடந்த படுகொலைகள், அவரை இவ்வாறு உணரச் செய்தன. ஜெர்மனி, துருக்கியின் ஆதரவாளராக இருக்க முனைந்தது. துருக்கியினுடைய பகுதிகளில் ஏதாவது அபாயம் நேர்ந்தால் ஆஸ்திரியாவும் ஜெர்மனியின் பக்கம் சேர்ந்துகொண்டு, இத்தாலியையும் ரஷ்யாவையும் விலகி இருக்கச்செய்தன. கிரீடன்கள் கிளர்ச்சி செய்தபொழுதும், 1897-ல் கிரேக்கர்கள் துருக்கியை எதிர்த்துப் போரிட்டபோதுங்கூட, ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டுகின்றவர் இல்லையே என்று ஸாலிஸ்பரி உணரத்தான் செய்தார். ஆனால், நாம் காலம் தனித்து நிற்கும் கொள்கையைக் கடைப்பிடித்ததால், தூரக்கிழக்கில் நமக்கு அபாயம் ஏற்பட்டது. 1895-ல் ரஷ்யா, ஃபிரான்ஸ், ஜெர்மனி ஆகிய நாடுகள் ஒன்று சேர்ந்து ஜப்பானைப் பணிய வைத்து, சீனாவிடமிருந்து பறித்த நிலப் பகுதியை அளித்துவிடுமாறு வற்புறுத்தின. இதன் பிறகு ஷிமனோஸெக்கி (Shimonoseki) உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. சீனா, ரஷ்யாவுக்கு மஞ்சூரியா வழியாக ரயில்வே பாதை அமைத்துக்கொள்ள அனுமதித்தது. இதனால், சைபீரியன் ரயில்வே பாதை விளாடிவஸ்டாக்குடன் இணைய வசதியாக இருக்கும். 1898-ல் ரஷ்யா ஆர்தர் துறைமுகம் என்ற மிகச் சிறந்த துறைமுகத்தைப் பெற்றது. அப்பொழுது ஜெர்மனியும் கியா-சௌ (Kiao-chau) என்ற துறைமுகத்தைப் பெற்றது. இவர்கள் அடைந்த ஆதிக்கத்தைச் சமமாக்க பிரிட்டன் வேய்-ஹாய்-வேய் (Wei-hai-wei) என்ற துறைமுகத்தைத் தூரக் கிழக்குக் கடலில் பெற்றது.

ஃபிரான்சுடன் இருந்த நமது வேறுபாடுகளால், கடைசியில் போரில் முடிந்துவிட்டது. 1896-ல் அடோவாவில் (Adowa) இத்தாலியப் படையை, அபிசீனியர்கள் முழுவதுமாகத் தோற்கடித்தனர். கோர்டனுடைய மரணத்திற்குப் பிறகு, சூடானில் டெர்விஷ் அதிகாரம் மீண்டும் தலைதூக்கியது. அதனால் மீண்டும் சூடானை நாம் பிடிக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதே ஆண்டில் ஆங்கிலோ எகிப்தியப் படை ஒன்று கிட்சனர் தலைமையில் தாங்கோலாவைக் கைப்பற்றியது. அதே படை, 1897-ல் பெர்பரையும் (Berber), செப்டம்பர் 1898-ல் காலிஃபாவின் படையை ஓம்துர்மான் (Omdurman) என்ற இடத்தில் முறியடித்துக் கார்டூமைக் கைப்பற்றியது. இந்தச் சமயத்தில்,

மிகவும் உறுதியான வெளிநாட்டு அமைச்சரான ஹானோடாக்ஸ் (Honotaux) என்பவரின் ஆதரவால், ஃபிரெஞ்சு ஆஃப்பிரிக்கப் பேரரசு மேற்கு ஆஃப்பிரிக்கச் சமவெளியில் உள்ள குடியிருப்புப் பகுதிகளில் அதனுடைய ஆதிக்கத்தைப் பரப்பிக்கொண்டிருந்தது. டிம்பக்டூவில் நைகர் வரையிலும், சாட் ஏரிவரையிலும், பின்பு, காங்கோ மலைச்சரிவு வரையிலும் அதனுடைய ஆதிக்கம் பரவிவிட்டது. கர்னல் மார்ச்சாண்ட் என்பவருடைய தலைமையில், நைல் பிரதேசத்தை அடையவும் ஒரு குழு அனுப்பப்பட்டது. அவர் வெள்ளை நைல் வரையிலும் வந்து ஃபிரெஞ்சுக் கொடியை ஃபாஷடாவில் (Fashoda) ஏற்றிவைத்தார். கிட்சனர் கார்டுமை அடைவதற்குச் சற்று முன்புதான் இந்த நிகழ்ச்சி நடந்தது. நாம் உறுதியுடன், ஃபிரெஞ்சு ஆதிக்கத்தின் விஸ்தரிப்பைக் கண்டித்தோம். ஆனால், 1899-ல் ஹானோடாக்ஸிற்குப் பிறகு வெளிநாட்டு மந்திரியாக வந்த டெல்காஸி நமது பயமுறுத்தலுக்குப் பயந்து, பிரிட்டிஷ், ஃபிரெஞ்சு ஆதிக்கப் பகுதிகளைத் திட்டமாக வரையறுக்க முன்வந்தார்.

இந்த மாறுதல்கள் நிகழும்பொழுது, அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்தும் ஸாலிஸ்பரி அரசாங்கத்திற்கு எச்சரிக்கை வந்தது. அமெரிக்க உள்நாட்டுப் போருக்கு முன்பும், பின்பும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் இருந்த தொடர்பில் நட்புரிமை இல்லை. ஐரிஷ் ஃபெனியன் (Fenian) சதித்திட்டத்தில் கனடாவை ஒரு சதுரங்கக் காயாகப் பயன்படுத்தினர். அமெரிக்காவுடன் பரஸ்பர வர்த்தக ஒப்பந்தம் செய்துகொள்ளவோ அல்லது பிரிட்டனுடன் காப்புவரிச் சலுகைகளைப் பெறவோ கனடா தயங்கிக்கொண்டிருந்தது. நியூஃபவுண்ட்லாந்தில் மீன்பிடிப்பு உரிமைகளைப்பற்றிய பழைய தகராறுகள் இன்னும் தீர்ந்தபாடில்லை. பெகரிங் கடலையும் (Behring Sea) அங்கு ஸீல் (Seal) என்ற மீன் வகையைப் பிடிக்கும் உரிமையையும் அமெரிக்காவின் உடைமை என்று அது கூறியது. டிசம்பர் 1895-ல் ஜேம்ஸனின் தாக்குதல் நடைபெறும்பொழுது, ஜனாதிபதி கிளிவ்லேண்ட் மன்ரோ கோட்பாட்டின் அடிப்படையில் இதுவரையிலும் பிரிட்டிஷ் கயானாவுக்கும் வெனிசுலாவுக்கும் இடையே இருந்த தகராறைத் தீர்த்துவிட வேண்டுமென்று அறிவித்தார், அவர் ஜனநாயகக் கட்சியின் வெற்றிக்காக இந்தத் தகராறை உடனடியாகத் தீர்க்கவேண்டுமென்று நினைத்தார்போலும்! பிரிட்டனுக்கு இது சம்பந்தமாக அவர் விடுத்த அறிக்கை மிகவும் கோபத்தை யூட்டுவதாக இருந்தது. இதனால் அவர்களுக்குள்ளேயே போர் ஏற்படும் நிலைமை இருப்பதைச் சேம்பர்லேன் உணர்ந்து, இந்தத் தகராறை நடுவரிடம் தீர்ப்புக் காண விட்டுவிடும் ஆலோசனையைக்

கூறினர். ஆனல், இந்த ஏற்பாட்டை அமெரிக்கச் செனேட் சபை நிராகரித்துவிட்டதால், ஆங்கிலேய-அமெரிக்க நட்பு திட்ட வட்டமாக உருவாகாமல் போயிற்று.

இந்தக்காலம் முழுவதும் ஜெர்மனியும் அதிகத் தொல்லேகளை அளித்து வந்ததுதான் கவலேக்கிடமாக இருந்தது. கெய்சரின் செல்வாக்கு மிகவும் உச்சநிலேயில் இருந்ததுமட்டுமன்றி மிகவும் ஆபத்தாகவும் இருந்தது. அவர் அர்த்தமற்ற கற்பனைகளில் ஈடு பட்டுப் பரபரப்படைந்தார். அவர் ஜாருக்கு எழுதிய கடிதங் களிலிருந்து அவர் மனநிலே ஒருவாறு விளங்குகிறது. அமெரிக்கா விற்கும் பிரிட்டனுக்கும் போர் ஏற்படுவது தவிர்க்க முடியாதது என்றும், கோப்பன்ஹேகனில் ஜெர்மன் கடற்படை இன்னும் குழந்தைப் பருவத்தில்தான் இருப்பதாக பிரிட்டன் கூறியது என்றும், இதைப்போன்ற இன்னும் அர்த்தமற்றவற்றையும்பற்றி அவர் பேசிக்கொண்டிருந்தார். அத்துடன் 'நமது பழைய பிரஷ் யக் கடவுள்', 'அரசனுக்குக் கடவுள் அளித்த தெய்வீக உரிமை களும்' அல்லது கூரிய கத்தி முனையைக் காட்டுவதும் போன்ற பிதற்றல்கள் மற்ற மக்களுக்கு எரிச்சலேயூட்டின. மஞ்சள் இனத் தின் ஆபத்தான நடவடிக்கைகளை ஜெர்மனியும் ரஷ்யாவும் சேர்ந்து தடுக்கவேண்டுமென்றும், மேலும், அவருடைய நோக்கத் தின்படி ஹால்ஸ்டினில் ஒரு பங்கைப் பெறவேண்டுமென்றும் அறிவித்தார். முக்கூட்டு உடன்படிக்கையை விஸ்தரித்து ஐரோப் பியக் கூட்டாட்சியை ஏற்படுத்த வேண்டுமென்றும், வீழ்ந்து விட்ட பிரிட்டனிடமிருந்து பல சலுகைகளைக் கட்டாயப்படுத்தி வாங்கவேண்டுமென்றும் விரும்பினர். உண்மையில், அவரை நம்பவே முடியாது. பிரிட்டனிடம் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருக்கும்பொழுதே, இரகசியமாக, ஃபிரான்ஸ் ஃபாஷடா வில் (Fashoda) சண்டையே போடவில்லே என்று ஃபிரான்சிற்குச் சாதகமாகப் பேசினர். அல்லது ஆசியாவில் ரஷ்யாவிற்குக் குழி பறித்துக்கொண்டிருக்கும்பொழுதே, பிரிட்டன் ஜெர்மனிக்கு என்ன சலுகைகள் கொடுக்கப்போகிறதென்று ஜாருக்கு அறிவிப் பார். அவருடைய தன்மை, ஏழாவது எட்வர்டான அவருடைய மாமாவை மிகவும் புண்படுத்தியது. அதைவிட முக்கியமானது, ஸாலிஸ்பரியை மிகவும் அவர் புண்படுத்திவிட்டார்.

ஆஃப்பிரிக்காவில் எல்லேத் தகராறுகளை நிர்ணயம் செய்ய வேண்டுமென்று முன்வந்தபொழுதெல்லாம் எகிப்திய நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி, பிஸ்மார்க் காலங்கடத்தியதைப் போலவே இவரும் செய்துவந்தார். அதனல் ஆஃப்பிரிக்காவில் தோன்றிய எந்தத்தகராறும் சரியாகத் தீரவில்லே. முக்கியமாக மூன்று பிரச் சினைகளைக் கவனிக்கவேண்டியிருந்தது. முதலில், துருக்கியில்

ஜெர்மனி பின்பற்றிய கொள்கையாகும். ஒரு ஜெர்மன் கம்பெனிக்குத் துருக்கி ரயில்வேக்களை அமைக்கும் உரிமையைப் பெற கெய்சர் தீவிரமாக முயற்சிசெய்தார். இதற்கான பிரசாரத்தையும் செய்தார். 1898-ல், அவர் மிகுந்த ஆரவாரத்துடன் பாலஸ்தீனத்திற்கு விஜயம் செய்து எல்லா முகமதியர்களுக்கும் அவர் ஒரு சிறந்த நண்பராவார் என்று அறிவித்தார். இரண்டாவதாக அவர் வான் டர்பிட்ஸ் என்பவரைக் கடற்படைத் தளபதியாக நியமித்து, 1898-ல் ஒரு கடற்படைச் சட்டத்தையும் இயற்றினார். அச் சட்டத்தின்படி ஆறு ஆண்டுகளுக்குள் பன்னிரண்டு போர்க் கப்பல்களையும் முப்பத்து மூன்று நாசகாரிகளையும் உற்பத்தி செய்யவேண்டுமென்று உத்தரவிட்டார். மூன்றாவது, தென் ஆஃப்பிரிக்காவில் நிகழ்ந்த நிகழ்ச்சியாகும். டெலகோவா விரிகுடாவை பிரிட்டன் ஆதிக்கம் செய்யக்கூடாதென்றும், டிரான்ஸ்வாலுக்கு ஆதரவு அளிக்கவேண்டுமென்றும் ஜெர்மனி முடிவு செய்திருந்தது. 1895-96-ல் ஜேம்ஸன் தாக்குதல் நிகழ்ந்தபொழுது இந்தப் பிரச்சினையில் தகராறு ஏற்பட்டது. ஜெர்மனி தூதுவரைத் திருப்பிப்பெறப் போவதாகவும் குரூகருக்கு பாராட்டுதல் தந்தியை அடித்ததும், ஜெர்மனி துருப்புகளை அங்கே குவிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் செய்யப்பட்டவையேயாகும். அத்துடன் அப் பகுதியை ஜெர்மனி பாதுகாப்பில் கொண்டுவரவும், அதற்காக ரஷ்யாவும் ஃபிரான்சும் ஜெர்மனிக்கு உதவி செய்ய வேண்டுமென்றும் அவர் கோரினார்.

அதிலிருந்து நிலைமை மோசமாகிவிட்டது. இரு நாடுகளின் பத்திரிகைகள் இன்னும் ஆத்திரத்தை அதிகமாகக் கிளப்பிவிட்டன. உலக நாடுகளில் ஜெர்மனியின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தவேண்டுமென்றால், அதற்கு நல்ல பலமிக்க கடற்படை தேவையானது என்று கெய்சரும் டர்பிட்ஸ் என்பவரும் உறுதியாக நம்பினர். தென் ஆஃப்பிரிக்கப் போர் தொடுக்கப்பட்ட பிறகு, நாம் தனியாக நிற்பது முடியாததுமட்டுமன்றி, ஆபத்தானதுங்கூட என்று நன்கு விளங்கியது. அதனால் ரஷ்யா, ஃபிரான்ஸ், ஜெர்மனி ஆகிய நாடுகளுடன் சமரசப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கலாமா என்றும் ஆலோசிக்கப்பட்டது. ஆனால், இந்த அபாயமான கட்டம் அமைதியாகவே கடந்துவிட்டது. ஃபிரெஞ்சு மக்களுக்கு ஜெர்மனியின்மீது நல்லெண்ணம் இருக்கவில்லை. இதைத் தவிர, ரஷ்யாவின் பலவீனமும், முக்கூட்டு உடன்படிக்கையைச் சேர்ந்த இத்தாலியின் தெளிவில்லாத தன்மையும், இதற்குக் காரணமாக அமைந்தன. மேலும், ஜெர்மனியுடன் அமைதியாகப் போகவேண்டுமென்பதே பிரிட்டனின் கொள்கையாகும். போர்ச்சுகீசியப் பேரரசு சீர்

குலையும் தருணத்தில் இருந்ததால், அந்தப் பேரரசில் ஜெர்மனி பங்கு பெறுவதற்கு பிரிட்டன் உதவுவதாக வாக்களித்தது. மேலும், 1899-ல் ஆஸ்திரலேசியாவின் காலனிகளின் விருப்பத்திற்கு மாருக, ஸமோவா தீவுகளை ஜெர்மனிக்கும், அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டது.

அடிக்கடி இதைப்போல நெருக்கடியான கட்டங்கள் ஏற்பட்டு வருவதால், ஆங்கிலேய மந்திரிகள் 'தனித்து நிற்றல்' கொள்கையை ஒதுக்கிவிட்டு, ஜெர்மனியுடன் ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்துகொள்ளும் சாத்தியக் கூறுகளை ஆராய்ந்தனர். அப்பொழுது சேம்பர்லேன்தான் தலைவராக இருந்தார். ஆனல், டேவன்ஷயரும் லேண்ட்ஸோனும் அவரை ஆதரித்தனர். 1898 முதல் 1901 வரையிலும் மூன்று முறை ஜெர்மனியுடன் சமரசம் செய்துகொள்ளுவதற்கு முயற்சி செய்யப்பட்டது. இந்தச் சமயத்தில் ஜெர்மனியில் பிரதம அமைச்சராக இருந்தவர் மிகவும் அடக்க குணமுடைய புலோ (Bulow) என்பவராவர். அவர், கெய்சர், ஹால்ஸ்டின், டர்பிட்ஸ் ஆகியோரின் கருத்துகளை ஒப்புக்கொண்டார். ஜெர்மனியின் அபாயமான கட்டத்தைக் கடப்பதற்குக் காலதாமதம்தான் செய்யவேண்டுமென்று அவர்கள் விரும்பினர். அந்தச் சமயத்தில், அவர்கள் ஜெர்மனியின் கடற்படையைப் பலப்படுத்திக்கொள்ளலாம் என்று நினைத்தனர். ஆனல், இந்தக் காலதாமதம் பிரிட்டனுக்கு இடையூருக இருந்தது. ஜெர்மானியர்களுக்கு, ரஷ்யாவின் மீது பயம் இருந்துகொண்டே வந்தது. பிரிட்டனுடன் அவர்கள் ஒப்பந்தம் செய்துகொள்வதால், அவர்களைப் பாஸ்பரஸிலேயாவது, அல்லது இந்திய எல்லையிலாவது ரஷ்யாவுடன் மோத வைத்துவிடும் என்று அஞ்சினர். அல்லது பிரஷ்யாவிலிருந்து கொஸாக்குகளை வெளியேற்ற பிரிட்டனுடைய கடற்படை என்ன செய்யமுடியும் என்று ஜெர்மனி கேட்டது. அல்லது பிரிட்டன் வேறு எந்த மாற்று யோசனையைக் கொடுக்கப்போகிறதென்று வினவியது. ரஷ்யாவுடனும் ஃபிரான்சுடனும் பிரிட்டன் கூட்டு சேர்வது என்பது முடியாத காரியமாகும் என்று ஹால்ஸ்டின் உறுதியாக நம்பினர். இந்த நாடுகள் இச்சமயத்தில் போரில் ஈடுபடும் என்று நினைப்பது நியாயமற்றதாகும். இயன்ற வரையிலும், அந்த நாடுகள் சிக்கலில்லாமல் இருக்கவே விரும்பின. அவரவர்களுடைய கட்சிகளைப் பலப்படுத்திக் கொள்ளவே அவர்கள் முயற்சி செய்தனர். மேலும், ரஷ்யாவுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டால், ஃபிரான்சையும் அதன் பக்கம் இழுத்துக்கொண்டு, ஐரோப்பியத் திட்டம் ஒன்றைத் தயாரிக்கச் சாதகமாக இருக்கும். மேலும், அப்படி செய்வதால், பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் ஆகியநாடுகளை

கட்டுப்படுத்தி வைத்துக்கொள்ளமுடியும் என்று நம்பினர். அதனால், மொராக்கோவில் ஜெர்மனியின் ஆதிக்கம் ஏற்படுவதற்கு பிரிட்டன் உதவி செய்வதாகச் சேம்பர்லேன் கூறியதை ஆர்வமின்றி எடுத்துக்கொண்டனர். அல்லது பாக்தாத் ரயில்வே அமைப்பதற்கும், அல்லது ஜெர்மனி, பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகள் முக்கூட்டு நேச உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொள்வதற்கும் சாதகமாக இருப்பதாக பிரிட்டன் பல மாற்று நிபந்தனைகளை அளித்தது.

ஜெர்மனியுடன் பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடைபெறும்பொழுதே, ஜெர்மனியின் முறை இன்னும் நிலைமையை மோசமாகத்தான் ஆக்கிவிட்டது. வெளிப்படையாகவே சேம்பர்லேனின் நிபந்தனையை, புலோ ஏற்க மறுத்ததுமன்றிப் பத்திரிகைகளிலும் இச் செய்தியைப் பரப்பிவிட்டார். அத்துடன் 1900-ல் இரண்டாவது கடற்படைச் சட்டத்தையும் அவர் இயற்றினார். அதன்படி முப்பது நான்கு போர்க்கப்பல்களும், ஐம்பத்திரண்டு நாசகாரிகளும், இன்னும் பதினாறு ஆண்டுகளில் உற்பத்தி செய்யவேண்டுமென்று உத்தரவிடப்பட்டது. 1899-ல் யுத்த தளவாடங்களைக் குறைப்பதற்காக ஒரு மாநாட்டை ஹேக்கில் ஜார் மன்னன் கூட்டினார். ஆனால், இதற்கும் ஜெர்மனி பல இடையூறுகளை விளைவித்தவண்ணமாகவே இருந்தது. சீனாவில், பாக்ஸார்களின் கலகத்தை 1900-ல் ஒடுக்கவேண்டுமென்று எல்லா வல்லரசுகளும் கூட்டு சேர்ந்தது இன்னும் பல கருத்து வேறுபாடுகளைத் தோற்றுவித்தது. மேலும் மஞ்சூரியாவில் ரஷ்யா ஆக்கிரமிப்புச் செய்வதை ஜெர்மனி தடுத்து நிறுத்தாது என்று தெளிவாகத் தெரிந்தது. அதனால் 1901-ல் அவர்களுக்கிடையே நடந்த கடைசிப் பேச்சு வார்த்தைகளில், இரு நாடுகளும் ஒன்றுசேருவதற்கு வாய்ப்பே இல்லாமல் இருந்தது. குறைந்த அளவில், ஜெர்மனியுடன் பாதுகாப்பு உடன்படிக்கையாவது செய்துகொள்ள பிரிட்டன் விரும்பியது. ஆனால், ஜெர்மனி ஒரு முழு உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டும், அல்லாவிடில், உடன்படிக்கையே தேவையில்லை என்று கூறிவிட்டது. ஜெர்மனி பிரிட்டனிடமிருந்து எதிர்பார்த்தது, முக்கூட்டு உடன்படிக்கையை பிரிட்டன் ஆதரிக்கவேண்டுமென்றும், அல்சாஸ்-லோரேய்ன் பகுதியை ஜெர்மனியில் நிலைநிறுத்த வேண்டுமென்றும், அத்துடன் பால்கனில் ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் ஜெர்மனி விரும்பியது.

பிரிட்டனின் நிபந்தனைகளை ஜெர்மனி ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால், வேறு நாட்டுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள

முடியும் என்று சேம்பர்லேன் எச்சரிக்கை விடுத்தார். அதனால், 1901-5 வரையிலும் பிரிட்டனுடைய கொள்கையில் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது. அந்தத் திருப்பத்தின் விளைவாக, வெல்திறனில் திட்டமிட்டே ஒரு புரட்சியை ஏற்படுத்தியது. 1902-ல் பிரிட்டன் ஜப்பானுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். 1904-ல் ஃபிரான்சுடன் இங்கிலாந்து ஒரு நேச உடன்படிக்கையைச் செய்து கொண்டது; 1907-ல் ரஷ்யாவுடன் ஓர் உடன்பாட்டிற்கு வந்தது. தர்க்கரீதியாக இந்த உடன்படிக்கைகள் ஒரே திட்டத்தின் அடிப்படையில் ஏற்பட்டதென்று கூறமுடியாது. அவைகளைத் தனித்தனியாக ஏற்படுத்திக்கொண்ட பாதுகாப்பு உடன்படிக்கைகள் என்றே கூறவேண்டும். இந்த நாடுகளுடன் ஒன்றாகக் கூட்டுச் சேர்ந்து எடுக்கப்பட்ட முயற்சி அன்று இது. 1904-5-ல் எதிர்பார்த்தவிதமாக ரஷ்யா ஜப்பானிடம் தோற்றுப் போன பிறகு, இந்த வெல்திறன் போக்கில் மாறுதல் ஏற்பட்டது. ஆனால், அப்பொழுது செய்துகொண்ட பல உடன் படிக்கைகளையும் அவ்வளவு எளிதில் மாற்றிவிடவும் முடியாமல் போயிற்று.

சீனு சீர்குலைந்துவிட்டாலோ, அல்லது ரஷ்யாவின் ஆக்கிரமிப்பு ஏற்பட்டாலோ, நமது வர்த்தகம் அங்கிருந்து மறைந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. மேலும் அப் பக்கத்தில் பலமுள்ள கடற்படையை வைத்துக்கொள்ளவும் முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். அதைவிட, ஜப்பானுக்கு இது பெரிய அபாயத்தை ஏற்படுத்திவிடும். மஞ்சூரியாவிலிருந்து ரஷ்யாவின் ஆதிக்கத்தை விரட்டி, கொரியாவை ரஷ்யாவிடமிருந்து காப்பாற்றுவது ஜப்பானுக்கு மிகவும் கடினமான வேலையாகும். 1902-ல் ஜப்பானுடன் ஏற்படுத்திக்கொண்ட உடன்படிக்கை வெறும் பாதுகாப்பு உடன்படிக்கை மட்டுமேதான். உடன் படிக்கையின் வாசகம் மிகவும் எச்சரிக்கையாக எழுதப்பட் டிருந்தது. தனியாக எந்தப் பகைமை நாடு தாக்கினாலும், பாதிக்கப்பட்ட நாட்டைத் தவிர, மற்ற நாடு நடுநிலைமை வகிக்க வேண்டுமென்றும், ஆனால், இரண்டு மூன்று பகைமை நாடுகள் ஒருங்கே தாக்கினால்தான் நேரடியாக உதவி அளிக்கமுடியும் என்றும் வாசகத்தில் குறிப்பிட்டிருந்தது. இந்த வாசகம், 1905-ல் ஜப்பானுடன் செய்துகொண்ட உடன்படிக்கையில்தான் மாற்றி அமைக்கப்பட்டது. அதன்படி எந்தப் பகைமை நாடாவது தாக்கினால், மற்றொரு நாடு அதற்கு நேரடியான உதவியை அளிக்க முன்வரும் என்றும், இந்த உடன்படிக்கை, கிழக்கு ஆசியாவுக்கும் இந்தியாவுக்கும் பொருந்தும் என்றும் குறிப்பிட் டிருந்தது.

ஃபிரான்சுடன் செய்துகொண்ட சமரச ஏற்பாடும் ஆங்கிலேயரின் கருத்துப்படி குறுகியதாகத்தான் இருந்தது. கடந்த இருபது ஆண்டுகளாக, பிரிட்டனும் ஃபிரான்சும் பல காலனிகளில் மோதியிருக்கின்றன. 1783-ல் ஏற்பட்ட ஒப்பந்தப்படி மீன் பிடிக்கும் சில உரிமைகளைக் கோரி ஃபிரான்ஸ் மோதியிருக்கிறது. அதைப்போலவே சையாம், மேற்கு ஆஃப்பிரிக்கா, நியூ ஹெப்ரைட்ஸ் ஆகிய இடங்களில் ஃபிரெஞ்சு ஊடுருவல் ஏற்பட்டதால், இருநாடுகளுக்கிடையே மோதல் ஏற்பட்டது. இந்த நூற்றுண்டின் துவக்கத்தில் ஃபிரெஞ்சு மக்களின் உணர்ச்சி மிகவும் தீவிரமாக இருந்தது. ஃபாஷடாவில் அவர்கள் அவமானமடைந்தனர்; டிரேஃபஸ் (Dreyfus) ஊழலினுல் அவர்கள் மிகவும் வருத்தமடைந்திருந்தனர். இதனுல் ஃபிரான்சிலேயே கன்சர்வேடிவ், ஜனநாயகக் கட்சிகளிடையே பலத்த பிளவு ஏற்பட்டது; வெளிநாட்டு விவகாரங்களைப் போலவே, உள்நாட்டு விவகாரங்களிலும் அங்கே குழப்பம் ஏற்பட்டிருந்தது. இவற்றைத் தவிர, உடனடியாக இன்னும் இரண்டு பிரச்சினைகளை அவர்கள் சமாளிக்கவேண்டியிருந்தது. எகிப்து விவகாரத்தில், ஃபிரான்ஸ் மிகவும் புண்பட்டுவிட்டது. அந்தப் புண் ஆறவே இல்லை. அதனுல் இரு நாடுகளிடையே அதிகப் பிளவு ஏற்பட்டது. எகிப்தில் மிகவும் அவசியமாகத் தேவைப்பட்ட சீர்திருத்தங்களுங்கூட ஃபிரான்சின் தொல்லைகளால் கொண்டுவர முடியவில்லை என்று கிராமெர் கூறினுர். இரண்டாவது, மொராக்கோவைப்பற்றியது. மொராக்கோவில், அராபியர்களும், பெர்பர்களும், யூதர்களும் மற்ற அயல்நாட்டினரும் குடியிருந்தனர். அந்த நாட்டை ஆண்ட சுல்தான் சரிவர ஆட்சி செய்யவில்லை. அவன் ஊதாரித்தனமாகச் செலவு செய்துகொண்டிருந்தான். அல்ஜியர்ஸில் உள்ள ஃபிரான்சிற்கு, இது எதற்கும் ஒத்துவராத அண்டை நாடாக இருந்தது. இது ஃபிரெஞ்சு மேற்கு ஆஃப்பிரிக்காவிற்கும், ஃபிரெஞ்சு வட ஆஃப்பிரிக்காவிற்கும் இடையே அமைந்திருந்தது. இங்கே எந்தவித ஒழுங்குமில்லாததால், எந்த வல்லரசிற்கும் இதன்மீது ஒரு கண் இருந்துவரலாயிற்று.

1902-ல் இரு நாடுகளுக்குமிடையே சமரசப் பேச்சு வார்த்தைகள் தொடங்கின. சேம்பர்லேனும், லண்டனிலுள்ள ஃபிரெஞ்சுத் தூதுவரான பால் கேம்போன் இப் பேச்சு வார்த்தைகளில் அதிக முயற்சி எடுத்து, அடுத்த இருபது ஆண்டுகள் வரையிலும் நீடித்த சமரசத்தை ஏற்படுத்தினர். 1898-லிருந்து ஃபிரான்சின் வெளி விவகார மந்திரியாக இருந்த டெல்காஸி, இந்தச் சமரசம் ஏற்படப் பேருதவியாக இருந்தார். ரஷ்யாவின்

போலி நட்பைக் கண்டு ஃபிரான்ஸ் ஏமாந்துவிட்டதால், பல வகைகளிலும் ஃபிரான்ஸ் இழந்ததை மீட்கவேண்டுமென்று அவர் முயற்சி செய்தார். இன்னும் மொராக்கோவில் ஃபிரான்ஸ் வைத்திருந்த நம்பிக்கை வீணுகிவிடும் என்பதற்காக, மெதுவாக இத்தாலியைத் தன் பக்கம் இழுத்து, திரிபோலியில் ஈடுசெய்ய வாய்ப்பை எதிர்நோக்கியிருந்தார். அவருடன் சமரசப் பேச்சுகளை நடத்துவது அவ்வளவு எளிதான காரியமல்லவென்று லேண்ட்ஸோன் உணர்ந்தார். அவர் பேரம் பேசுவதில் சிறந்தவராக இருந்தார். இருப்பினும் 1904 ஏப்ரல் மாதக் கடைசியில், ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். நியூஃபவுண்ட்லாந்திலும், சையாமிலும் ஃபிரான்ஸ் கொடுத்த சில சலுகைகளுக்காக ஆஃப்பிரிக்காவில் அதற்குச் சில எல்லைப்புறப் பகுதிகள் கிடைத்தன. ஆனல், முக்கியமாக, மொராக்கோ, எகிப்து ஆகிய நாடுகளைப்பற்றித்தான் இந்த உடன்படிக்கையில் அதிகமாகக் காணப்பட்டது. மொராக்கோவில் பிரிட்டன் சுதந்திரமாக வியாபாரம் செய்துகொள்ளும் உரிமையைத் தவிர, மற்ற ஆதிக்கத்தை ஃபிரான்சிற்கு மாற்றிவிட பிரிட்டன் உதவி செய்வதாகவும், அதைப்போலவே, எகிப்தில் பிரிட்டனுடைய ஆதிக்கம் ஏற்பட ஃபிரான்ஸ் ஆதரவு அளிக்கவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. எகிப்திலுள்ள அந்நிய காலனிகளில் சீர்திருத்தம் செய்ய பிரிட்டனுக்கு இரகசியமான முறையில் ஃபிரான்ஸ் ஆதரவு அளித்தது. மொராக்கோ சீர்குலைந்ததென்றல், ஃபிரான்ஸ் தன் விருப்பப்படி செய்துகொள்ளட்டும் என்று விடப்பட்டது. ஆனல், ஸ்பெயினுக்கு ஒரு பகுதி தரப்படவேண்டுமென்றும், ஜிப்ரால்டருக்கு எதிர்புறமாக உள்ள கரையை இராணுவத் தளமாக்கக்கூடாது என்றும் குறிப்பிடப்பட்டது.

ஜெர்மனியைப் புறக்கணித்துவிட்டதாக, அது குறை கூறியதுமட்டுமன்றி, மீண்டும் அதனுடைய வலிமையைக் காட்ட அடுத்த இரண்டு ஆண்டுகளில் அது தீவிரமாக முயற்சி செய்தது. ஜப்பானிடம் ரஷ்யா படுதோல்வி அடைந்தது. ஐரோப்பாவில் ஃபிரான்சின் நிலைமையைப் பலவீனமாக்கியது என்னவோ உண்மைதான் அக்டோபர் 1904-ல் ரஷ்யாவின் கடற்படையினர் ஆங்கிலேய மீன்பிடிப்பவர்கள்மீது சுட்டதால், போர் மூண்டுவிடும் என்றிருந்த நிலையை ஃபிரான்ஸ்தான் மத்தியஸ்தம் செய்து நிறுத்தியது. ஃபிரான்சின் புதிய நண்பனுக்கும், பழைய நண்பனுக்கும் இடையே ஏற்பட இருக்கும் போரை அது தடுத்து நிறுத்தியது. அதனல் ஜெர்மனி இரட்டைக் கொள்கையைப் பின்பற்றியது. ஜெர்மானியர் ஃபிரெஞ்சு ஆக்கிரமிப்பை மறுத்து, கெய்சரையும் டேங்கியருக்கு விஜயம்

செய்ய அனுப்பிவைத்தனர். ஆனால், அதே சமயத்தில் ஜார் மன்னனுக்கும் உதவி செய்வதாக அவர்கள் நம்பிக்கையூட்டினர். ஓர் உடன்படிக்கையைத் தயார்செய்து, ஃபிரான்சையும் கட்டாயப்படுத்தி ஐரோப்பியத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளுமாறு ரஷ்யாவைத் தூண்டிவிட்டனர். ரஷ்யா-ஜப்பான் தகராறில், ரஷ்யாவுக்காக ஜனாதிபதி ரூஸ்வெல்ட் பரிந்து பேசி, ஜப்பானிடம் நிறையச் சலுகைகளை வாங்கமுடியும் என்று சொன்னார்கள். சுருக்கமாகச் சொன்னால் ஃபிரான்சைக் கட்டாயமான முறையில் பணிய வைக்கவேண்டும்; மேலும், ஆங்கிலோ-ஃபிரெஞ்சு நேச உடன்படிக்கை முறியவேண்டும் என்று அவர்கள் எண்ணினர்.

ஜூன், 1905-ல் டெல்காஸியைப் பதவியிலிருந்து ராஜிநாமா செய்யவேண்டிய சூழ்நிலையைக் கொண்டு வந்ததில் அவர்கள் வெற்றி அடைந்தனர். ஆனால், மற்ற எதிலும் அவர்கள் வெற்றி பெறவில்லை. ஃபிரான்சுக்கு பிரிட்டன் இராணுவ உதவி அளிப்பதாக உறுதிமொழி அளிக்கவில்லை. ஆனால், ஃபிரான்ஸ் தாக்கப்பட்டால், பிரிட்டன் போரிடுவதற்குத் தயாராக இருந்தது. பிரிட்டிஷ், ஃபிரெஞ்சு இராணுவக் கடற்படை அதிகாரிகளின் உரையாடல்களை லேண்ட்ஸோன் அனுமதித்தார். இதைக் கேம்ப்பெல்-பானர்மேனும், பின்பு 1906-ல் கிரேயும் பின்பற்றினர்.

எல்லா வகைகளிலும் அந்த ஆண்டில் அல்ஜிகிராஸில் நடைபெற்ற மாநாடு, ஜெர்மனிக்கு எதிராகவே அமைந்தது. ஜெர்மனிக்கு இது ஒரு பெரிய தோல்வியே என்று சொல்லவேண்டும். ஆஸ்திரியாவிற்கு ஆத்திரமூட்டுவதாக இருந்தது. ஃபிரான்சுடன் இத்தாலி வெளிப்படையாகவே ஒத்துப்போய்விட்டது. மேலும், ரஷ்யா எல்லாரையும் காலைவாரிவிட்டது. மொராக்கோவில் ஏற்பட்ட ஃபிரெஞ்சு, ஸ்பானிய ஆதிக்கத்தை மற்ற நாடுகள் அங்கீகரித்தன. அதனால் ஃபிரான்ஸ்-ரஷ்யா நட்புறவு இன்னும் நல்லவிதமாகத்தான் இருக்கிறதென்பது தெளிவாகத் தெரிந்தது. ஆங்கிலோ, ஃபிரெஞ்சு நேச ஒப்பந்தமும், உடன்படிக்கையாகிவிடும் என்ற அளவிற்கு வந்துவிட்டது. இந்த இரண்டு நாடுகளும் ஒன்று சேர்ந்துவிட்டால், ஜெர்மனியைச் சுற்றி வளைத்துக் கொள்வது எளிதில் முடியக்கூடிய காரியமாகும்.

1907-8-ல் ஆங்கிலோ-ஜெர்மனி கடற்படைப் போட்டியும், ஆங்கிலோ-ரஷ்ய நேச ஒப்பந்தமும், பால்கனில் ரஷ்யா மீண்டும் தலைதூக்குதலும் ஆகிய மூன்று நிகழ்ச்சிகள் மிகவும் முக்கியமானவை. ஆங்கிலேயர்களுக்கு முதல் நிகழ்ச்சிதான் அச்சத்தைக் கொடுத்ததுமட்டுமன்றி, போர் ஏற்படுவதற்கும் மூல காரணமாக இருந்தது. ஏனெனில், ஐரோப்பாவிலேயே மிகப்

பலமிக்க இராணுவத்தை உடைய ஜெர்மன் நாடு, இன்னும் ஏன் கடற்படையையும் வலிமையாக்கிக் கொள்கிறது? என்று கேட்கப் படும் கேள்விக்குச் சரியான விடையை அதனால் அளிக்க முடிய வில்லை. மேலும், நாட்டைப் பாதுகாப்பதற்காகவோ, அல்லது வர்த்தகக் கப்பல்களைப் பாதுகாப்பதற்கோ, அல்லாமல் பெரிய போர்க் கப்பல்களையும் நாசகாரிகளையும் உற்பத்தி செய்து அதனு டைய கடற்கரையிலேயே வைத்திருப்பதென்பது சந்தேகத்தை ஏற்படுத்தியது. அமைதியை விரும்பும் லிபரல் அரசாங்கம் 1905-ல் காவ்டார் கொண்டுவந்த திட்டத்தைக் குறைத்தனர். ஆயுதப் பெருக்கைக் குறைக்க எந்த நடவடிக்கையும் எடுக்கத் தயாராக இருந்தனர். 1906-ல் புதிய ஜெர்மன் கடற்படைச் சட்டம் இயற்றப்பட்டது. அதனுடைய திட்டம் மிகவும் பெரியது. அவர்கள் கீல் கால்வாயைப் பெரிதாக்கத் திட்ட மிட்டனர். ஹேய்க் மாநாட்டில் நாம் கொண்டுவந்த ஆயுதக் குறைப்பு யோசனைகளையெல்லாம், 'மெக்கியவில்லி தந்திரம்' என்று சொல்லிப் புறக்கணித்துவிட்டதுமன்றி, இப்படி பிரிட்டன் பேசுவது கெய்சருக்கு அவமானமும், ஜெர்மனியின் சுய மரியா தைக்கு இழுக்குமாகும் என்று கெய்சர் கூறினார். 1908-ல் மற்றொரு கடற்படைச் சட்டத்தை இயற்றி, ஆண்டு ஒன்றுக்கு நான்கு போர்க் கப்பல்களை உற்பத்தி செய்ய அவர் ஆணை யிட்டார்.

இவர்கள் உற்பத்தி செய்கின்ற போர்க் கப்பல்களைப்போல நாம் அவ்வளவு விரைவில் செய்யமுடியவில்லையென்றாலும், தாற்காலிகமாக அவ்வித உற்பத்திகளை நாமும் மேற்கொண் டோம். பழைய மாதிரியான கப்பல்களே நிறைய இருந்தன. நமது துறைமுகங்களை விஸ்தரிப்பதிலும், புதிய தளவாடங் களையும் துப்பாக்கிகளையும் கப்பல்களில் பொருத்துவதுமாக இருந்தால், ஜெர்மானியர்களின் போர்க் கப்பல்களின் உற்பத்தி, குறித்த காலத்தைவிட இன்னும் முன்னராகவே தயாராகிவிடும் என்பதும் தெரிந்ததே. அதனால் 1908-9-ல் கடற்படைக் குழுவின் ஆதரவுடன் மேக்கன்னா, ஆண்டு ஒன்றுக்கு ஆறு போர்க் கப்பல் களையாவது குறைந்தபட்சமாக நிர்மாணித்தால் தான் பதவியில் இருக்கப் போவதாகவும், இல்லாவிடில் ராஜிநாமா செய்துவிடப் போவதாகவும் அறிவித்தார். நாட்டு மக்களுடைய வற்புறுத்தல் அதிகமாகிவிடவே, கேபினட் எட்டு போர்க் கப்பல்களை நிர் மாணிக்க உத்தரவிட்டது. ஜெர்மனியின் இரண்டு தவறான எண்ணங்களுக்கு, இதுவே பிரிட்டன் அளித்த இடைக்கால பதிலாகும். பிரிட்டனைவிட, அதிகப் போர்க் கப்பல்களை நிர் மாணிப்பதால், ஜெர்மனியின் மதிப்பு பிரிட்டனில் உயரும்

என்பதும், பிரிட்டனுடைய வர்த்தகத்திற்குப் போட்டியாக ஜெர்மனி வருவதால், பொறாமையின் காரணமாக பிரிட்டன் ஜெர்மனியுடன் போரிடும் என்பதும், ஜெர்மனியின் தவறான எண்ணங்களாகும். இருப்பினும் ஜெர்மனிக்கு நாம் ஏற்றுமதி செய்கின்ற பொருள்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்ற பொருள்களைவிட அதிகமானதாகும். அல்லது, லண்டன் மாநகரத்தைப் போல, பிரிட்டனில் எந்த நபரும் அவ்வளவு அமைதியை விரும்பக்கூடியவர்களாக இருக்க முடியாது.

1907-ல் ஆங்கிலோ-ரஷ்யப் பேச்சு வார்த்தைகள் நடந்தது ஜெர்மனிக்குப் பெரிய அச்சத்தை ஏற்படுத்திவிட்டது. பலமிக்க ரஷ்யா இருப்பது, சமநிலையை உருவாக்கச் சாத்தியமாக இருப்பதாக ஸாலிஸ்பரி நினைத்தார். ஆனால், ரஷ்யா பலமுறை பிரிட்டனைச் சங்கடத்தில் இழுத்துவிட்டிருக்கிறது. ரஷ்யாவுடன் சமரசம் செய்துகொள்வது என்பது அவ்வளவு எளிதான காரியமன்று. மேலும், லிபரல் அரசாங்கம் பதவியில் இருக்கும்பொழுது இன்னும் இச் செயல் கடினமானதாகும். ஏனெனில், லிபரல் அரசாங்கம் ரஷ்யாவில் 1905-ல் ஏற்பட்ட புரட்சியை ஆதரித்தது. 1906-ல் ஜார், டூமாவைக் கலைத்தது, லிபரல் அரசாங்கத்திற்குப் பிடிக்கவில்லை. மேலும், இந்தியாவின் அக்கறைகளையும் பார்த்துக்கொள்ளவேண்டியிருந்தது. அதற்காக வைசிராய் கர்ஸன் தீவிரமாகப் போரிட்டு வந்தார்.

ரஷ்யாவுடன் எகிப்து கொண்ட உடன்படிக்கை குறுகிய வரையறைக்குள் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கையாகும். இந்த உடன்படிக்கை ஏற்படுவதில், கிரேயும், இந்திய அரசின் காரியதரிசியுமான மார்லி என்பவரும் அதிகப் பங்கெடுத்துக் கொண்டனர். ஸ்டிரைட்ஸ் (Straits), பாரசீக வளைகுடா ஆகியவற்றின் எதிர்காலத்தைப்பற்றி மௌனமாக இருந்துவிட்டனர். ஆனால், தொல்லைகள் மிகுந்த மூன்று பகுதிகளில், சமரச உடன்பாடு ஏற்பட்டது. யங் ஹஸ்பண்ட் (Young Husband) என்பவருடைய முயற்சியால், லாசா வரையிலும் திபேத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டிருந்ததை, இந்த உடன்படிக்கை புறக்கணித்துவிட்டது. இதனால் கர்ஸனுக்கும் கோபம் ஏற்பட்டது. ஒருவர் விவகாரத்தில் மற்றொருவர் தலையிடுவதில்லை என்ற உறுதிமொழி அளிக்கப்பட்டது. அத்துடன் ஆங்கிலேயர் திருப்தி அடைந்தனர். ஆப்கானிஸ்தானத்தைப் பொறுத்தவரையிலும் இதைப்போலத்தான் ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டது. ஆனால், ஆப்கானிஸ்தானம், ரஷ்யாவின் ஆதிக்கத்திற்குப் புறம்பே இருக்கிறது என்பதை ஒப்புக்

கொண்டது. பாரசீகம்தான் மிகவும் முக்கியமாகக் கவனிக்கப் பட்டது. ஏனெனில், அங்கே ரஷ்யப் பிரதிநிதிகள் நிறைய இருந் தனர். அவர்களுடைய மூலதனமும் அங்கே போடப்பட்டிருந் தது. அதனுல், பாரசீகத்தின் வடக்குப் பகுதியை, ரஷ்யாவின் ஆதிக்கத்திற்குள்ளானது என்று கிரே ஒப்புக்கொண்டார். வளை குடாவையும், இந்தியாவையும் பாதுகாப்பதற்காக, பிரிட்ட னுக்கும் ஓர் ஆதிக்கப் பகுதியை ஏற்படுத்திக்கொண்டனர். இரண்டு பகுதிகளுக்குமிடையே நடுநிலைமை வகிக்கின்ற ஒரு சிறிய இடைவெளியையும் ஏற்படுத்திக்கொண்டனர். ஆனுல், ரஷ்யா இந்த உடன்படிக்கையைச் சிறிதும் பொருட்படுத்தாமல் 1914 வரையிலும் பிரிட்டனுடைய பகுதியில் ஊடுருவி வந்திருக் கிறது. இதனுல் உறவும் பாதிக்கப்பட்டது.

ரஷ்யாவுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்வது என்பது அவ்வளவு எளிதில் முடிகிற காரியமாகத் தெரியவில்லை. ஏனெனில், அங்குள்ள செல்வாக்கு மிகுந்த மந்திரிகளும், பிரபுக் களும் ஜார் மன்னனை ஜெர்மனியின் பக்கம் சேர்ந்துகொள்ளு மாறு தூண்டினர். 1906-1910 வரையிலும் வெளிநாட்டு மந்திரி யாக இருந்த இஸ்வால்ஸ்கி (Isvolsky) என்பவர் குறிப்பாக ஜெர் மனியின் ஆதரவை நாடினுர். இவ்விதமாக, தூண்டுதல்களாலும் மற்றும் ஸ்லாவ் இனத்தவரின் கட்டாயத்தாலும் மீண்டும் பால் கன் விவகாரங்களில் ஜார் மன்னன் கவனம் செலுத்தினுர். 1908-9-ல் வல்லரசு கோஷ்டிகள் மிகவும் குறுகிய மனப்பான்மை யுடன் சில கொள்கைகளில் ஈடுபட்டு, அபாயத்தை அதிகரித்து விட்டனர். மாசிடோனியாவில் உள்ள ஒரு கொலைகார கோஷ் டியோ, அல்லது ஆட்ரியாடிக்கில் உள்ள ஓர் எல்லைப்புற கிராமத் திலோ ஏதாவது சிறு நிகழ்ச்சி நடந்தாலுங்கூட, வல்லரசுகளின் தலைநகரங்களில் இவைகளைப் பிரமாதப்படுத்தினர். பொது வாகப் போர் ஏற்படும் சூழ்நிலை இதனுல் ஏற்பட்டது. ஆனுல், அப்படிப் போர் ஏற்படுவதை பிரிட்டன், ஜெர்மனி, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகள் சிறிதும் விரும்பவில்லை.

ஐரோப்பாவின் மிகவும் குழப்பமிக்க பகுதியில் மீண்டும் நெருக்கடி ஏற்பட்டது. சுல்தான் அப்துல் ஹமீது இன்னும் அங்கே ஆட்சி செய்துவந்தார். மாசிடோனியாவில் போர் வெறி பிடித்த சில பல்கர்களும், துருக்கியர்களும், ஸெர்பியர்களும், கிரேக்கர்களும் பெரிய குழப்பத்தை உண்டாக்கி ஒருவருக்கொரு வர் மோதிக்கொண்டனர். இதைத் தவிர, ஆஸ்திரியாவிற்கும் ரஷ்யாவிற்குமிடையே ஒரு சங்கடமான ஒப்பந்தம் நடை முறையில் பத்து ஆண்டுகள் வரையிலும் இருந்துவந்தது. போர்

ஏற்படுவதற்கான முதல் முயற்சி ஆஸ்திரியா-ஹங்கேரியின் அமைச்சரான ஏரந்தால் (Aerenthal), மற்றும் அவருடைய கூட்டத்தினரிடமிருந்து வந்தது. அவர்களுடைய நாட்டிலுள்ள தெற்கு ஸ்லாவ் இனத்தினரிடம் பெரிய அபாயம் ஏற்படும் என்று அவர்கள் உணர்ந்தனர். குறிப்பாக 1903-ல், இந்த நாட்டின் புதிய அரசர் ஷெர்பியாவில் உள்ள ஐந்து மில்லியன் ஷெர்பியர்களேயும் கிரோட்டுகளேயும் ஆஸ்திரிய ஆதிக்கத்திற்குள் கொண்டு வர முயன்றபொழுது, அங்கே அபாயம் ஏற்படக்கூடிய நிலை இருந்தது. ஆங்கிலோ-ரஷ்யா நேச ஒப்பந்தம் இந்த நெருக்கடி நிலைமையை இன்னும் விரைவுபடுத்தியது. ஜூன் 1908-ல் ஜார் மன்னரும் எட்வர்ட் அரசனும் ஒன்றுகூடிப் பேசினர். துருக்கியில் சீர்திருத்தங்களே உடனடியாகச் செய்ய வரவேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தினர். இந்த மாநாடு முடிந்த பின்பு, ஒரு மாதத்திற்குள் சுல்தானுடைய ஆட்சியை எதிர்த்து இளைஞர்கள் துருக்கியக் கட்சி (Young Turk party) அப்பொழுது உருவாகியது. ரஷ்யாவின் நேச நாடுகளுக்குத் தெரியாமல் இஸ்வால்ஸ்கி ஏரந்தாலுடன் இரகசியப் பேச்சுவார்த்தைகளே நடத்தினர். ஆஸ்திரியா 1878-லிருந்தே போஸ்னியா, ஹெர்ஸிகோவினியா ஆகிய இரு ஸெர்பிய மாகாணங்களிலும் துருப்புகளே வைத்திருந்தது. அதனல் இந்த இருநாடுகளேயும் ஆஸ்திரியா ஆக்கிரமிப்புச் செய்து கைப்பற்ற ரஷ்யா அனுமதிக்கும் என்று முடிவுசெய்தனர், ஆனல், அதற்குப் பதிலாக ஸ்டிரைட்ஸில் ரஷ்யப் போர்க்கப்பல்கள் செல்வதற்கு ஆஸ்திரியா ஆதரவு தரவேண்டுமென்று முடிவு செய்தனர்.

ஆனல், ஆஸ்திரியா வெகுவிரைவில் ரஷ்யாவுக்கே விரோதமான காரியங்களில் ஈடுபட்டதுமன்றி, அதற்குச் சேரவேண்டிய பகுதியிலேயே சூழ்ச்சியைச் செய்துவிட்டனர். அக்டோபர் மாதத்தில் ஆஸ்திரியா இரண்டு மாகாணங்களேயும் தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டது. ஆனல், அதேசமயத்தில் பல்கேரியா அரசனுன ஃபெர்டினண்டை இறைமை பெற்ற சுதந்திர அரசனுகப் பறைசாற்ற ஆதரவும் அளித்தது. இதுவரையிலும் அவர் துருக்கியின் ஆதிக்கத்தின்கீழ் அடங்கிய அரசனுகவே இருந்தார்.

உடன்படிக்கைக்கு முரண்பட்ட நடவடிக்கைகளேப் பரிசீலனே செய்ய ஓர் ஐரோப்பிய மாநாட்டைக் கூட்டவேண்டுமென்று கிரே கருதினர். இந்த உடன்படிக்கை நிபந்தனேகளே மீறியதால்மட்டும், இஸ்வால்ஸ்கியின் சூழ்ச்சிக்காகமட்டும், அல்லது ஸ்டிரைட்ஸ்பற்றிய ஒருபட்சமான ஏற்பாட்டைக் குறித்தும்

நாம் யாரிடமும் போரிடத் தயாராக இல்லை. துருக்கிய நண்பர்களை ஏமாற்றிவிட்டதற்காக, ஆஸ்திரியாமீதும் ஜெர்மனிக்கு அதிகக் கோபம் ஏற்பட்டது. ஆனால், ஜெர்மனியைப் பொறுத்த வரையிலும் இது பலப் பரிசோதனையாகும். ஆஸ்திரியாவை அவர்கள் புறக்கணித்துவிடமுடியாது. ஜெர்மனியின் உறுதியான நட்புறவு நாடு ஆஸ்திரியாமட்டுமே என்பது அவர்களுக்குத் தெரியும். போரை விரும்புகின்ற ஸெர்பியாவும் ஆத்திரமடைந்துள்ள ரஷ்யாவும் ஏற்படுத்தியுள்ள சூழ்நிலையில், ஜெர்மனி, ஆஸ்திரியாவின் நட்பை இழக்கத் தயாராக இல்லை. கடைசியில், துருக்கிக்கு 1909-ல் ஏதோ நஷ்ட ஈடு கொடுத்தும், இன்னும் அந்த நாட்டை அதிகமாகத் திருப்திபடுத்த ரஷ்யாவிற்கு இறுதி எச்சரிக்கை விடுத்தும் ஜெர்மனி இந்த நெருக்கடியைச் சமாளித்தது. ஜெர்மனி அப்பொழுது போரை விரும்பவில்லை. போர் ஏற்படுவதற்கான காரணத்தையும் இந்த நெருக்கடியில் காணவில்லை. ஆனால், ஆஸ்திரியப் பிரதம தளபதி கான்ராட் போர் வேண்டுமென்ற நிலையை ஏற்படுத்தி, அப்படிப் போர் ஏற்பட்டால், ஜெர்மனி உறுதியாக ஆஸ்திரியாவை ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஆஸ்திரியாவுக்கு ஆதரவளித்துப் போர் முனைக்குச் செல்லத் தயார் என்று கெய்சரும் கூறினார். ஃபிரான்சுக்கு டெல்காஸின் வீழ்ச்சியும் ரஷ்யாவுக்கு போஸ்னியாவினால் ஏற்பட்ட அவமானமும், போர் ஏற்படுதவற்கான பயமுறுத்தல்களின் விளைவுகளே. ஜெர்மனி மற்ற நாடுகளைப் புண்படுத்தியதுமல்லாமல், மானக்கேடு உண்டாகுமாறும் அது நடந்துகொண்டது. இதையே கொள்கையாகவும் பின்பற்றியது. மற்ற நாடுகள் ஒதுங்கியிருக்கவும் முடியாத நிலையை அது ஏற்படுத்திவிட்டது.

ஐரோப்பா இந்த அழிவுப் பாதையை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும்பொழுது, 1910-ல் லிபரல் அரசாங்கம் இரண்டு முறைகளில் பொதுத் தேர்தல்களில் வெற்றி பெற்றிருக்கிறது. எந்த அளவிற்கு இந்தச் சிக்கலில் அவர்கள் ஈடுபடப் போகிறார்கள் என்பதை நிர்ணயம் செய்யவேண்டியிருந்தது. பிரிட்டனின் தலைவிதியை, கேனிங்குக்குப் பிறகு, மிகவும் சிறப்பெய்திய வெளிநாட்டு மந்திரியாகப் பத்து ஆண்டுகள் பணியாற்றிவரும் எட்வர்ட் கிரே நிர்ணயம் செய்யவேண்டி நேரிட்டது. அவர் விக்பரம்பரையைச் சார்ந்தவர்; மக்களுடைய நன்மதிப்பையும் செல்வாக்கையும் பெற்றவர். தனிப்பட்ட வாழ்க்கையில் எவ்வளவோ துன்பங்கள் இருந்தபோதிலும், அவர் பொதுவாழ்வில் கடமையைக் கண்ணும் கருத்துமாகக் ஆற்றுகின்றவர் அவருடைய நெருங்கிய நண்பர்களைவிட அவர் முன்னேற்றக் கருத்துகளைக்

கொண்டவர். லேண்ட்ஸோனுடைய கொள்கையின் அடிப்படையில் அவருடைய வெளிநாட்டுக் கொள்கையும் அமைக்கப்பட்டிருந்தது. ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டவேண்டுமென்றும் அதற்கான பங்கை அவர் செய்யவேண்டுமென்றும் விருப்பமுடையவர். அவருக்கு மற்ற ஐரோப்பிய நாடுகளைப் பற்றியோ, அல்லது அங்கே ஆட்சி செய்கின்றவர்களைப்பற்றியோ தெளிவாக அறிந்தவருமல்லர்; போதிய அளவிற்கு அவற்றுடன் தொடர்பை வைத்துக்கொண்டவருமல்லர். அவர் இதைப் போன்ற விவகாரங்களில், தனித்து நிற்றலும், விருப்பு வெறுப்பற்று நோக்கலும் என்ற சில கொள்கைகளைப் பின்பற்றியதாலே அவருடைய நாட்டின் அபிப்ராயத்தைத் திட்டவட்டமாக எடுத்துக் கூற அவரால் முடிந்தது.

இந்த நெருக்கடியான கட்டத்தில் அவர் ஒரு மிதமான கொள்கையைப் பின்பற்றினர். பிரிட்டனுடைய ஏகாதிபத்திய நாடுகள் ஒன்றுபட்டு இயங்கவேண்டுமென்பதையும் அப்பொழுது நன்குணர்ந்திருந்தார். பிரிட்டனிலேயே, பலதரப்பட்ட கருத்துகளும் கருத்து வேறுபாடுகளும் இருந்து வந்தன. அவருடைய நண்பர்களே, யுத்த தளவாடங்களில் பணத்தைச் செலவிடுவதை விரும்பவில்லை. லிபரல்களும் தொழிலாளர் கட்சியினரும், ஜார் மன்னரிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்வதை வெறுத்தனர். மற்ற எல்லாக் கட்சிகளிலும் உள்ள பெரும்பான்மையினர் ஃபிரெஞ்சு இராணுவப் போரார்வத்தையும் எதையும் திட்டவட்டமாகச் செய்யும் வாக்குறுதிகளையும் அதிகமாக நம்ப மறுத்தனர். இன்னும் சிலர், ஜெர்மனி போர் தொடுப்பதற்குத் தயாராக இருந்தது என்றும், பல நேச ஒப்பந்தகளைச் சரியான உடன்படிக்கைகளாக மாற்றிக்கொள்ளவேண்டுமென்றும் நினைவுறுத்தினர். இந்தக் கருத்து, இராணுவத்திலும் வெளிநாட்டுக் காரியாலயத்திலும் அதிகமான ஆதரவைப் பெற்றிருந்தது. வெளிநாட்டுக் காரியாலயத்திலுள்ள ஐயர் கிரோ (Eyre Crowe), நிக்கல்ஸன், ஹார்டிஞ் ஆகியோர் இந்தக் கருத்தைக் கொண்டிருந்தனர்.

ஆனல், பிரிட்டன் எந்தக் கட்டுப்பாட்டிற்குள்ளும் வராது, சுதந்திரமாகக் காரியங்களைச் செய்யவேண்டிய அவசியத்தை கிரே உணர்ந்திருந்தார். ஸாலிஸ்பரியின் கொள்கையும் இதுவேயாகும். அவரும், கேம்ப்பெல்-பானர்மேனும், பிரிட்டிஷ் இராணுவ அதிகாரிகளை ஃபிரஞ்சு அதிகாரிகளுடன் இராணுவப் பிரச்சினைகளைப்பற்றிப் பேச அனுமதித்திருந்தனர். அவ்விதமான பேச்சுவார்த்தைகள் எந்தச் செய்கையிலும் கட்டுப்படுத்தல் நோக்கத்

துடன் நடக்கக்கூடாதென்று அவர்கள் திட்டவட்டமாக அறிவித்திருந்தனர். 1912-ல் கேபினட்டில் அவர்கள் எடுத்துரைத்தனர். மேலும், பல கடிதப் போக்குவரத்திலும், இந்தக் கொள்கையை அவர்கள் வலியுறுத்தினர். ஆனால், அவருடைய கடிதப் போக்குவரத்தில் ஜெர்மனி போரிட விரும்புகிறதென்பதை உணர்ந்து எழுதியிருந்ததைக் காணமுடிகின்றது. கெய்சர், மற்றும் அவருடைய அமைச்சர்களைவிட, கிரேயின் போரை விரும்புகிற கட்சி பலமிக்கதாக இருந்தது. உண்மையில் ஜெர்மனிக்கு உரித்தான தகுதியையும் கவுரவத்தையும் அளிக்க கிரே எப்பொழுதும் காத்துக்கொண்டிருந்தார். ஆனால், அதே சமயத்தில் ரஷ்யாவிலும் ஃபிரான்சிலும் உள்ள ஆக்கிரமிப்புச் சக்திகள் எப்படிப்பட்டவை என்பதையும் அறிந்திருந்தார். நாம் வாழ்வதற்கே ஆதரவாக இருந்த நட்பு நாடுகளிடம் பகைத்துக் கொள்வதில் பயனில்லை என்று கடைசியில் உணர்ந்தார். பாரசீகத்தில் ரஷ்யாவின் சூழ்ச்சிகளைக் கண்காணாது விட்டுவிட்டார். மொராக்கோவில் ஃபிரான்சிற்கு ஆதரவு அளித்தார். திரிபோலியில் நிகழ்ந்த இத்தாலியின் ஆக்கிரமிப்பைச் சகித்துக்கொண்டார். இவ்வளவு சகிப்புத் தன்மையுடைய இவருக்கு, நாட்டின் கவுரவத்தைக் காப்பாற்றவேண்டிய கடமை இருந்தது. நமது நேச நாடுகளுக்கு ஆசையைக் காட்டிவிட்டு அவர்களை ஏமாற்றிவிடுவதென்பது நமது நல்லபெயருக்கு இழுக்கு ஏற்பட்டுவிடும் என்று அவர் கருதினார்.

அமைதியை ஏற்படுத்துவதற்காக, நாம் பலமுறை நமது கடற்படைக்கு வேண்டிய யுத்த தளவாடங்களையும் குறைத்திருக்கிறோம் என்பதைக் காணமுடியும். கட்டாய இராணுவ சேவை அவசியம் என்ற பிரசாரத்தையுங்கூட, விரைவுபடுத்தாது விட்டிருக்கிறோம். ஹேக் மாநாட்டிற்கும் பிறகு, 1911-ல் கடற்படை மசோதாவைக் கொண்டுவந்தபொழுது, பிரபுக்கள் சபை அந்த மசோதாவை நிராகரித்திருக்கிறது. கடற்படையின் பலத்த கண்டனத்திற்கும், பிறகு இந்த மசோதாவைக் கொண்டு வந்திருந்தால், கடல் மார்க்கமாகச் செல்லும் கப்பல்களை யுத்தகாலத்தில் சோதனை செய்யும் உரிமையையும் இழக்க நேர்ந்திருக்கும். நடுநிலைமை நாடுகளின் வர்த்தகக் கப்பல்களைச் செல்லவிட்டிருந்தால், அந்தக் கப்பல்களில் எடுத்துச் செல்லப்படும் பருத்தி, ரப்பர் போன்ற மூலப் பொருள்கள் நவீன போர் முறைகளுக்கு அவசியமாக இருந்திருக்கும்.

இதைப்போன்ற செயல்களிலும், காங்கோவில் பெல்ஜியன் அரசாங்கம் இழைத்த கொடுமைகளிலும், கிரே, ஒழுக்கத்தைத்

தான் கடைப்பிடித்தாரே தவிர, மற்றபடி உலக மக்களின் நீதி முறைகளுக்குப் புறம்பாக நடந்துகொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். அவரால் இயன்ற அளவு, சமரசமாகச் சென்றிருக்கிறார். இந்தக் கொள்கையின்படியே, அமெரிக்க ஐக்கிய நாடுகளுடனும் புதிய நட்புறவை ஏற்படுத்திக் கொண்டது அவருடைய பெரிய சாதனையாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் நட்புறவு கொண்டாடவேண்டுமென்று, லேண்ட்ஸோனும் சேம்பர்லேனும் ஏற்கனவே தொடங்கியிருந்தனர். 1898-ல் நிகழ்ந்த ஸ்பானிய அமெரிக்கப்போரில் அமெரிக்காவிற்காகப் பரிந்து பேசினார்கள். பனமா கால்வாயில், அமெரிக்கர்கள் ஆதிக்கம் செலுத்துவதை பிரிட்டன் ஆட்சேபம் தெரிவித்ததை இப்பொழுது நிறுத்திவிட்டது. அலாஸ்கா எல்லைப்புற நிர்ணயத்தில், அவர்களுடைய விருப்பத்தை பிரிட்டன் அங்கீகரித்தது. அமெரிக்காவுடன் நட்புறவு ஏற்படுவதற்குத் தியோடர் ரூஸ்வெல்ட், உட்ரோ வில்ஸன் ஆகிய இரு ஜனாதிபதிகளும், அமெரிக்க வெளிநாட்டு அமைச்சரான ஜான் ஹே என்பவரும் முக்கியமானவர்களாக இருந்தனர். சில சமயங்களில், இந்த நட்புறவு பாதிக்கப்படும் கட்டங்களில், கிரேயும், வாஷிங்டனில் இருந்த ஆங்கிலேயத் தூதுவரான பிரைசும் பல இக்கட்டுகளைச் சரி செய்தனர். நடுநிலை நாடுகளின் 'கடல் சுதந்திரம்' என்ற கோட்பாட்டை அவர்கள் கொண்டுவந்தனர். லண்டன் அறிக்கையில் இந்தக் கோட்பாட்டை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். இரண்டாவதாக, ஜப்பானுடன் செய்துகொண்ட உடன்படிக்கையாகும். இந்த உடன்படிக்கையைச் சீனு அவ்வளவாக விரும்பவில்லை. அதுவும் பெரிய பஸிஃபிக் வல்லரசாக இருந்ததால், அதற்கு அபாயம் ஏற்படுமோ என்று அஞ்சியது. 1911-ல் மீண்டும் செய்துகொண்ட உடன்படிக்கையில், நேச ஒப்பந்தம் செய்துகொண்ட எந்த மூன்றாவது நாட்டின்மீதும் போர் தொடுக்கமாட்டோம் என்று உறுதிமொழி அளிக்கப்பட்டது. கிரேயின் முதல் உடன்படிக்கையை 1912-ல் அமெரிக்க செனேட் நிராகரித்துவிட்டதென்றாலும், அவருடைய வற்புறுத்தலால் 1914-ல் அதனுடன் ஒரு மத்தியஸ்த உடன்படிக்கையைச் செய்துகொண்டார். இந்த உடன்படிக்கை காரணமாக, உட்ரோ வில்சன் 1914-ல் பனமா சட்டத்தை ரத்து செய்ததனால், அமெரிக்கக் கப்பல் போக்குவரத்திற்குச் சலுகைகள் கிடைத்தன.

போஸ்னியன் நெருக்கடிக்குப் பின்பு, மந்தநிலை ஏற்பட்டது. எனினும், தனிப்பட்ட முறையில் சில மாறுதல்கள் நிகழ்ந்தன. ரஷ்ய அரசியலில் இஸ்வால்ஸ்கி அவமானப்பட்டுப் பதவியை

விட்டு விலகினார். அவருக்குப் பின்பு, ஸாஸனேவ் என்பவர் பதவிக்கு வந்தார். பெர்லினில், பூலோவிற்குப் பதிலாக, பெத்மேன்-ஹால்வெக் என்பவர் சான்சலராகப் பதவியேற்றார். பூலோவைவிட, அவர் நாணயமானவர். 1912-ல் பாயின்கேர், ஃபிரான்சில் பிரதம அமைச்சரானார். அடுத்த ஆண்டில் அவர் ஜனாதிபதியானார். 1912-ல் ஏரந்தால் இறந்துவிட்டார். அவருக்குப் பதிலாக பெர்ச்டோல்ட் என்ற பலவீனமானவர் பதவி ஏற்றார். இவ்வளவு மாற்றங்கள் ஏற்பட்டும், நெருக்கடி மட்டும் முற்றிக்கொண்டே சென்றது. ஸ்டிரைட்ஸில் போர்க் கப்பல்களை அனுமதிக்கும் அதனுடைய பழைய கோரிக்கையை இன்னும் ரஷ்யா வற்புறுத்திக்கொண்டே இருந்தது. தவிர, பால்கனில் பழிவாங்க, பல்கேரியர்கள், ஸெர்பியர்கள், கிரேக்கர்கள் ஆகியோரின் உணர்ச்சிகளை அது தூண்டிவிட்டுக்கொண்டிருந்தது. ஐரோப்பாவில், இத்தாலி பல உடன்படிக்கைகளைச் செய்து அதனைப் பாதுகாத்துக்கொண்டது. அல்ஜிசிராஸ் சட்டத்தைப் பயன்படுத்தி ஃபிரான்ஸ் மொராக்கோவில் அதனுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்த முயன்றது.

பிரிட்டனைப் பொறுத்தமட்டிலும், ஜெர்மனியின் கப்பற்படையைத்தான் அது அளவுகோலாகக் கவனித்து வந்தது. அதனுடைய கப்பற்படை வளர்ச்சி நின்றுலொழிய, பிரிட்டனுடைய அச்சம் தீராத நிலையில் இருந்தது. பெத்மேன்-ஹால்வெக்கை 1909-ல் நியமித்ததிலிருந்து இரண்டு ஆண்டுகள் வரையிலும் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடந்தன. அப்பொழுது, ஜெர்மன் கடற்படைப் பெருக்கத்தைச் சிறிது தளர்த்தலாம் என்ற அளவில் ஜெர்மன் அமைச்சர்கள் பேசினர். இந்தப் பேச்சு வார்த்தைகள் நீடித்து வருகின்ற தன்மையைப் பார்த்தால், டர்பிட்ஸ் கோஷ்டியினரின் செல்வாக்கு அதிகமாகி வருவதைக் காணலாம். மேலும், சாதாரண ஜெர்மன் மக்களுங்கூட, பிரிட்டனுடன் ஓர் அரசியல் உடன்படிக்கையைச் செய்துகொள்ளவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினர். அப்படிச் செய்துகொண்டால், ரஷ்யா, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளுடன் செய்துகொண்ட நேச ஒப்பந்தங்களை ரத்து செய்யவேண்டி நேரிடும். இது சம்பந்தமாக, ஹால்டேன் தூது கோஷ்டியினர் ஜனவரி 1912-ல் பெர்லினுக்குச் சென்றபொழுது இது விஷயமாக ஒரு முடிவு ஏற்பட்டது. பாக்தாத் ரயில்வேயைப்பற்றியும், அல்லது ஆஃப்பிரிக்கக் காலனிகளைப்பற்றியும், ஜான்ஸிபாரை அவர்களுக்கு அளித்துவிடுவதைப்பற்றியும் சாதகமாக நடந்து வந்த பேச்சு வார்த்தைகள், கப்பற்படைப் பிரச்சினையைப் பேசும்பொழுது, அவர்களுடைய பேச்சுவார்த்தைகள் முறிந்தன. நாம்

'ஆக்கிரமிப்பு ஒப்பந்தம்' செய்துகொள்வதாகக் கூறிய பொழுது, ஜெர்மனியின்மீது போர் தொடுக்கும்பொழுது பிரிட்டன் நடுநிலைமை நாடாக இருக்கவேண்டுமென்று கட்டுப் படுத்தியது. அதே சமயத்தில் புதிய கடற்படை சட்டத்தையும் ஜெர்மன் தயாரித்துக்கொண்டிருந்தது. அப்படியென்றால், பெரிய கப்பல்கள் நிர்மாணிப்பதுமட்டுமன்றி, அவர்களுடைய துறைமுகங்களில் மூன்றாவது பெரிய கடற்படை நிறுத்தப்படும் என்பதும் தெளிவாகியது.

கடற்படை பலப்படுத்தப்படுவதைத் தளர்த்தவேண்டு மென்று பிரிட்டன் கூறியதை ஜெர்மனி பொருட்படுத்தவில்லை. அதனால் அதனுடைய கடற்படையைவிடப் பலமிக்கதாகச் செய்ய பிரிட்டன் முயற்சி எடுப்பதுதான் ஜெர்மனிக்கு அளிக்கும் சரியான பதிலாகும். அறுபது சதவிகிதம் போர்க் கப்பல்கள் அதிகமாக உற்பத்தி செய்ய உத்தரவிடப்பட்டது. மற்றும் பல துரிதமான அரசியல் விளைவுகளும் ஏற்பட்டன. முதலாவதாக, டொமினியன் நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டு, பாதுகாப்பு நடவடிக்கைகளை பிரிட்டன் பலப் படுத்திக்கொண்டது. இரண்டாவதாக, ஃபிரான்சுடன் நீண்ட கால உடன்படிக்கையையும் செய்துகொண்டது. கடற்படையில் மாற்றங்களை ஏற்படுத்தும்பொழுது, முதலில் இங்கிலாந்தைச் சுற்றிலும் கடற்படைகளை வைத்துக்கொள்வதற்கு முதலில் முக்கியத்துவம் அளிக்கவேண்டுமென்றும், பின்பு மத்தியதரைக் கடலில் வைத்துள்ள கடற்படையை ஜிப்ரால்டர் பாதுகாப்புக் காகத் திருப்பவேண்டுமென்றும் கப்பற்படைக் காரியாலயம் வலியுறுத்தியது. அப்படிச் செய்யும்பொழுது, மத்தியதரைக் கடல் பாதுகாப்புச் சில ஆண்டுகள் வரையிலும் ஃபிரான்சின் ஆதரவை நம்பியாகவேண்டியிருந்தது ஏனெனில், ஃபிரான்சும் அதனுடைய பாதுகாப்பை அப் பகுதியிலேதான் திருப்பிவிட் டிருக்கிறது. இவ்விதமான இராணுவ முடிவை எடுக்கும் பொழுது, அரசியல் முக்கியத்துவமும் இதில் கலந்திருக்கிறது. இவ்விதமான விளைவுகளை ஏற்படுத்தியது டார்பிட்ஸின் வெற்றியே யாகும். 1900–14 வரையிலும் கடற்படைக்காக 200 மில்லியன் பவுன்கள் செலவிடப்பட்டன. 1920-க்குள் முப்பத்தைந்து டிரட்நாட் போர்க் கப்பல்களை நிர்மாணிப்பது என்று திட்டம் வகுத்தனர்.

1911-ல் ஏற்பட்ட அடுத்த நெருக்கடி அகாடிரை (Agadir) மையமாக வைத்து எழுந்ததாகும். மொராக்கோவில் பட்டத் திற்காகப் போட்டியிடும் இரண்டு சுல்தான்களின் பிரச்சினையில்

ஃபிரான்ஸ் தலையிட்டது. 1906-ல் ஏற்பட்ட ஓர் ஒப்பந்தத்தை ஃபிரான்ஸ் பெஸ் (Fez)மீது படையெடுத்ததால் புறக்கணித்த தாகக் கொள்ளவேண்டும். இது விஷயமாக ஜெர்மனி உண்மை யில் மனக்குறை கொண்டது. ஜெர்மனிக்குப் பெரிய மனக்குறை ஏற்பட்டிருப்பதை கிரேயும் நன்குணர்ந்திருந்தார். ஆனால், ஜெர்மனி அந்த மனக்குறையோடு நின்றுவிடாமல், மீண்டும் இதைப்பற்றிப் பேசவும் அதனுடைய உரிமைகளை நிலைநாட்டவும் முயன்றதால், ஐரோப்பாவில் மீண்டும் நெருக்கடியான நிலை ஏற் பட்டது. போர்க்கப்பல்கள் செல்ல அனுமதியில்லாத அட்லான் டிக்கிலுள்ள அகாடிருக்கு ஜெர்மனி ஒரு போர்க்கப்பலை அனுப் பியது. ஏதாவது நெருக்கடி ஏற்படும்பொழுது, இவ்விதமாக ஒரு நடவடிக்கையில் இறங்குவதென்று ஏற்கெனவே ஜெர்மன் முடிவு செய்திருந்தது. இந்தப் பிரச்சினையைப் பயன்படுத்தி காங்கோ காலனியில் ஃபிரான்ஸ் நிறையச் சலுகைகள் அளிக்க வேண்டுமென்றும் ஜெர்மனி கோரியது. எந்தப் புதிய ஏற்பாடு செய்தாலும், பிரிட்டனும் அதில் கலந்துகொள்ளவேண்டிய அவசியத்தை வற்புறுத்திய பிறகு, சிறிது காலம் மௌனம் நிலவியது. இந்த நிகழ்ச்சிகளெல்லாம் எடுத்துக் காட்டப்பட்டு, லாயிட் ஜார்ஜின்மீது கேபினட்டுங்கூடக் கண்டிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஏனெனில், அமைதியைக் கோருகின்ற கோஷ்டியின் தலைவராக லாயிட் ஜார்ஜ் விளங்கினார். அவருக்குங் கூடக் கோபம் ஏற்பட்டு 'மேன்ஷன் மாளிகையில்' பேசும்பொழுது 'பிரிட்டனை ஒரு பொருட்டாக நினைக்காது மற்ற நாடுகள் புறக் கணித்தால், மானத்தை அடகு வைத்து நாட்டிற்கு அமைதியைத் தேடிக் கொடுக்கவேண்டிய அவசியமே இல்லை' என்றும், 'அவ்வித அவமானத்தை நமது நாட்டைப் போன்ற ஒரு பெரிய நாடு சகித் துக் கொள்ள முடியாது' என்றும் கூறினார். ஜெர்மனியோ, அல்லது அமைதியை விரும்பும் கேய்லாக்ஸ் (Caillaux) அரசாங் கமோ ஒரு பொதுப்படையான போரை விரும்பவேயில்லை. பல நெருக்கடியான கட்டங்களைக் கடந்து, பிறகு ஓர் ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டது. மொராக்கோவில் உள்ள ஃபிரெஞ்சு ஆதிக் கத்தை ஜெர்மனி அங்கீகரித்தது. அதற்குப் பதிலாக, காங்கோ வில் செழிப்பான ஒரு பகுதியை ஜெர்மனிக்கு, ஃபிரான்ஸ் அளிப்பது என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்தப் பகுதியை அளித்ததால்மட்டும் ஜெர்மனியின்மனப்புண் ஆறியதாகத் தெரிய வில்லை.

இந்த நெருக்கடியின் காரணமாக மற்ற விளைவுகளும் ஏற்பட்டன. இத்தாலி ஃபிரான்சினைப் பொறாமைக் கண்ணோடு பார்த்துக்கொண்டிருந்தது. அத்துடன், செப்டம்பர் 1911-ல்

திரிபோலியைக் கைப்பற்றும் எண்ணத்துடன் துருக்கிமீது போர் தொடுத்தது. இந்த நிகழ்ச்சியால் பெரிய வல்லரசுகள் இதுவரை யிலும் விருப்பமில்லாது செய்துகொண்டிருந்த ஒப்பந்தங்கள்படி என்ன செய்யப்போகின்றன என்ற சோதனைக் காலமும் ஏற்பட் டது. இந்தப் போர் நிகழ்ந்துகொண்டிருக்கும்பொழுதே, பால்கன் நாடுகளில் உள்ள பல்வேறு இனத்தவர் துருக்கியின் சீர் கேடான நிலையைப் பயன்படுத்திக்கொள்ள முயன்றனர். அப்பொழுது துருக்கியின் இளைஞர்கள் கட்சி, சுல்தான் அப்துல் ஹமீது என்பவரை முடிதுறக்க வைத்தது. அந்தக் கட்சிக்கும், இப்பொழுது பெரிய நெருக்கடி ஏற்பட்டது. பல்கேரியாவின் அரசனான பேரார்வமுள்ள ஃபெர்டினண்டும், புதிய கிரேக்க அமை சரான வெனிஸிலாஸ் என்பவரும், மற்றும் பல ரஷ்யப் பிரதிநிதி களும் 1912 தொடக்கத்திலேயே பல்கேரியர்கள், ஸெர்பியர்கள் கிரேக்கர்கள் கொண்ட ஒரு சங்கத்தினரைத் தோற்றுவித்திருந் தனர். அக்டோபர் மாதத்தில், இந்தச் சங்கத்தில் மான்டி நிக்ரோவும் சேர்ந்து, துருக்கியைத் தாக்கியது. இந்தச் சங்கத் திற்கு ரஷ்யாவின் ஆதரவு நிறைய இருந்தது. ஃபிரெஞ்சு அரசாங் கம் எவ்வளவோ கண்டித்தும், இந்தத் தாக்குதலை ரஷ்யாவில் நிறுத்த முடியவில்லை.

பால்கன் போர்கள் இரண்டு கட்டங்களைக் கடக்கவேண்டி யிருந்தன. முதலில், மே 1913-ல் துவங்கிய இப் போர்க் காலத் திலிருந்து நேச நாடுகள், அல்பேனியாவிலிருந்து ஸலோனிக்கா வரையிலும், பின்பு அட்ரியனோப்பிளையும் கைப்பற்றின. இரண் டாவதாக, ஜூன் மாதத்திலிருந்து ஆகஸ்டு 1913 வரையிலும், அவர்களுக்குள்ளேயே போர் மூண்டுவிட்டது. ஸெர்பியர்களுக் கும் கிரேக்கர்களுக்கும், ருமேனியர்களும் துருக்கியர்களும் உதவி செய்து, பல்கேரியர்கள்மீது தாக்க ஆரம்பித்தனர். அதனால், கட்டாயமாகச் சமாதானம் செய்துகொள்ளவேண்டிய நிலைமை பல்கேரியாவிற்கு ஏற்பட்டது. சமாதானம் ஏற்பட்டாலும், பல்கேரியா மிகவும் அதிர்ச்சி அடைந்துவிட்டது. தவிர, ஒவ்வொரு பால்கன் நாடும் அதிர்ச்சியுற்றது. பொதுவான போர் இந்தச் சமயத்திலும் தவிர்க்கப்பட்டதுதான் இந்த நிகழ்ச் சியிலும் காணப்படுகின்ற முக்கியமான அம்சமாகும்.

ஸ்லாவ் நாடுகளின் மறைமுகமான வெற்றி, ரஷ்யாவின் வெற்றியென்றே சொல்லவேண்டும். அதனல், ஆஸ்திரியாவின் தோல்வியுமாகும். ஆஸ்திரியாவின் இராணுவத் தளபதி கான் ராட், ஓர் ஆண்டிற்கு முன்பே இத்தாலியைத் தவிர்க்கவேண்டு மென்றிருந்தார். ஆனல், இப்பொழுது ஸெர்பியர்களைத் தாக்க

வேண்டுமென்று முனைந்தார். ஆனால், ரஷ்யா இன்னும் போருக்கு ஆயத்தமாக இல்லை. ஃபிரான்ஸ் சமாதானத்தையே விரும்பியது. ஆஸ்திரியாவிற்காக ஜெர்மனி போரில் குதிக்க விரும்பவில்லை. இந்தச் சமயத்தில் 1912–13-ல் கிரேயின் தலைமையில் லண்டனில் ஒரு மாநாடு கூட்டப்பட்டுப் போர் வெறியைச் சிறிது அடக்கி வைத்தது. இந்த மாநாட்டில் சுதந்திரமான அல்பேனியா நாட்டை அங்கீகரிப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அதனால், ஸெர்பியர்கள் அட்ரியாடிக் வழியாகச் சென்று மான்டிநிக்ரோ வின் உதவியைப் பெறுவது தடுக்கப்படுகின்றது. இதுதான் ஆஸ்டிரியாவிற்கும் வேண்டிய முக்கியமானதொரு தேவையாகும்.

இருப்பினும் இந்த ஒப்பந்தத்திற்கு எல்லாம் புறம்பாகவே எல்லாம் நிகழ்ந்திருப்பதை பல ஆதாரங்களைப் பார்க்கும்பொழுது தெரிய வருகின்றது. இதற்குப் பின்பு எல்லா நாடுகளும் ஆயுதப் பெருக்கத்தில் தீவிரமாக முனைந்திருந்தன. இதில் துரிதமான வேகத்தை ஒவ்வொரு நாடும் பின்பற்றியது. ஃபிரான்ஸில், இராணுவ சேவை இரண்டு ஆண்டுகளிலிருந்து மூன்று ஆண்டு களுக்கு அதிகரிக்கப்பட்டது. ஜெர்மனியில் இராணுவத்தை அதிகரிக்க நிறைய வரி விதிக்கப்பட்டது. ரஷ்யாவிலும் பெரிய படைகள் திரட்டப்பட்டன. ஒவ்வொரு நாடும் அச்சத்திலேயே வாழ்ந்து வந்தது. எல்லைக் கல் ஒன்றை இழந்தாலும், முழு அமைப்பும் தலைகீழாக மாறிவிடும் என்ற நிலைமை ஏற்பட்டது. எல்லைக் கல் எவ்வளவு மோசமான இடத்தில் இருந்தாலும் சரி, அது பறிபோனால் ஒவ்வொரு நாடும் போரிடத் தயாராக இருந்தது.

1913–14-ல் ஆங்கிலேய ஜெர்மனி நட்புறவு, பத்தாண்டு களுக்கு முன்பிருந்ததைவிட, இப்பொழுதும் அவ்வளவு மோச மாகிவிடவில்லை. ஜெர்மன் தூதுவரான லிக்னோவிஸ்கி (Lichnowsky), பிரிட்டனில் போர் வெறி இல்லாதிருந்ததை நன்றாக உணர்ந்தார். அவருக்கு முன்பிருந்த தூதுவரும் இப்படியேதான் உணர்ந்திருந்தார். பால்கன் மாநாட்டில் ஒரு முடிவுகாண ஜெர்மன் அதிகாரிகள் பெருமுயற்சி செய்தனர். குறைபாடுகளை நிறைவுசெய்ய கிரேயும் பெருமுயற்சி செய்தார். பாக்தாத் ரயில்வேயை ஜெர்மனி அமைப்பதற்குப் பல எதிர்ப்புகள் கிளம்பின. ரஷ்யா இந்தத் திட்டத்தை எதிர்த்தது. துருக்கி யிடம் பணம் இல்லை என்று எடுத்துக்காட்டப்பட்டது. பாரசீக வளைகுடாவிற்கு ஆபத்து ஏற்படும் என்று கூறப்பட்டது. இத்தனை எதிர்ப்புகளுக்குமிடையே, ஜெர்மனிக்கு இந்த ரெயில் வேயை அமைக்க அனுமதி தரப்பட்டது. எதிர்ப்புகளைக் கிளப்பிய அத்தனை நாடுகளுடைய நலன்களும் பாதுகாக்கப்படும் என்று

உறுதிமொழி கூறப்பட்டது. அதனால் நீடித்த பேச்சு வர்த்தைகளுக்குப் பின்பு ஜூன் 1914-ல் இதுபற்றிய முடிவு ஜெர்மனிக்குச் சாதகமாக எடுக்கப்பட்டது. கொள்கையளவில், போர்ச்சுகீசிய காலனிகள் விஷயமாகவும் ஓர் ஏற்பாடு செய்துகொள்ளப் பட்டது. அவைகளைப் பொருளாதார அடிப்படையில், ஜெர் மனியும் பிரிட்டனும் பிரித்துக்கொள்வதென்று முடிவு செய் தனர். போர்ச்சுகல் அரசியல் உரிமைகளை விட்டுக்கொடுத்தால், அதன்படியும் பிரிவினை செய்துகொள்வதென்று முடிவு செய்தனர்.

ஆனால், இந்தத் தீமைகளின் ஆணிவேர் வேறு எங்கேயோ இருந்தது. இருபது ஆண்டுகள் ஜெர்மனி பின்பற்றிவந்த தவறான ஆக்கிரமிப்புக் கொள்கைகளால், ஆஸ்திரியாவைத் தவிர, வேறு எந்த நாடும் ஆதரவு அளிக்கமுடியாத நிலைக்கு வந்துவிட்டது. ஆஸ்திரோ-ஹங்கேரியின் பேரரசுக்கும் அழிவு காலம் நெருங்கிவிட்டது. அதனுடைய ஸ்லாவ் இனத்து மக்கள் சூழ்ச்சி செய்துகொண்டிருந்தனர். இத்தாலி, பொறாமைபிடித்த போட்டி நாடாக அமைந்திருந்தது. அவர்கள் ருமேனியர்களுடைய நட்பை இழந்துவிட்டனர். இதற்குக்காரணம், ருமேனியப் பகுதிகளில், ஹங்கேரியர்கள் பல கொடுமைகளைப் புரிந்தனர். பால்கன் போர் வெல்திறன் முறைப்படி ஒரு தோல்வியென்றே ஒப்புக்கொள்ளவேண்டும். ஸெர்பியா, கிரீஸ் ஆகிய நாடுகள் வளர்ச்சி அடைய ரஷ்யாவின் ஆதரவைப் பெற விரும்பின. ஆஸ்திரியாவின் பட்டத்தரசனான ஃபிரான்ஸ் ஃபெர்டினண்ட் நெருக்கடியை வளர்க்கத் தயங்கினர். ஆனால், அவருடைய அமைச்சர்களான கான்ராட், மற்றப் படைவீரர்கள் அவருடைய தயக்கத்தை விரும்பவில்லை. சான்சலர் பெர்ச்டோல்டும், ஹங் கேரிய அமைச்சரான டிஸ்ஸாவும், ஸெர்பியா முழுவதுமாக ஒடுக்கப்படவில்லையெனின், அவர்களுடைய பேரரசு அழிந்து விடும் என்றும், அதனால் ஸெர்பியாவை வெல்திறன் முறையிலாவது, அல்லது நேரிடையான போர்மூலமாவது அடக்கித் தான் ஆகவேண்டுமென்று எச்சரித்தனர். 1913-14-ல் ரஷ்யாவும் ஜெர்மனியும், தங்களுடைய நிலைமையைப் பலப்படுத்திக்கொள்வதற்காக, பல்கேரியா, அல்லது துருக்கி, கிரீஸ், அல்லது ருமேனியாவைத் தங்கள் வசம் கொண்டுவரவேண்டுமென்று பெரு முயற்சி எடுத்துக்கொண்டன. இதைத் தவிர, தப்போ சரியோ, கடைசி காலத்தில் ஆஸ்திரியாவிற்கு முழு உதவியும் செய்தாக வேண்டுமென்று, கெய்சரும் அவருடைய படை வீரர்களும் கருதியிருந்தனர். டியூடானியர்களுக்கும், ஸ்லாவ் இனத்தாருக்கும் போர் ஏற்படத்தான் போகிறதென்ற நிலை வந்தவுடன், அப்

போர் விரைவில் ஏற்படுவதே நல்லதென்று கருதினர். ஏனெனில், ரஷ்யர்களுடைய யுத்த தளவாடங்களைப் பெருக்கிக்கொள்ளும் முன்பும், அவர்களுடைய ரயில்வேக்களை அமைக்குமுன்பும், அல்லது ஸ்டிரைட்ஸ் பகுதியில் போர்க் கப்பல்களை அனுப்பு வதற்கும் முன்பே ஏற்பட்டால் நல்லது என்று அவர்கள் கருதினர். ரஷ்யப் படையும், இஸ்வால்ஸ்கியும், ஸ்லாவ் மக்களின் பத்திரிகைகளும் போருக்காகப் பிரசாரம் செய்தனர். இஸ்வால்ஸ்கி பாரிஸில் அப்பொழுது இருந்துகொண்டே போர்ப் பிரசாரம் செய்துவந்தார். ஆனால், அதே சமயத்தில் ஜாரும், ஸாஸனேவும், மற்றும் பலரும் போரைத் தள்ளிப்போட வேண்டுமென்று விரும்பினர். 1909-ல் கொடுக்கப்பட்ட இறுதி எச்சரிக்கையைப்போல மற்றுமோர் எச்சரிக்கை விடுவிக்கப்பட் டால், ரஷ்ய அரச பரம்பரையோ, அல்லது அந்த நாட்டின் பெருமைக்கோ இந்த மாதிரி எச்சரிக்கையைச் சகித்துக்கொண் டிருக்க முடியாது போய்விடும்.

இவ்விதமான இனவெறுப்புகளிடையேயும், ஐரிஷ் விவகாரத் தின் நெருக்கடியிலும் சிக்கிக்கொண்டிருந்த பிரிட்டிஷ் கேபினட் பல நேச ஒப்பந்தங்களைச் செய்துகொண்டதுமன்றி, அவர்களின் கூட்டாளிகளுக்கு, ஆக்கிரமிப்பில் இறங்கவேண்டாமென்று எச்சரிக்கையும் அடிக்கடி விடுத்து வந்திருக்கின்றது. ஜெர் மனியின் மனப்பான்மையைப் பார்த்தால், அது நிச்சயமாகப் போர் தொடுக்கத்தான் போகிறதென்று பல அதிகாரிகளும் ஆலோசனையாளர்களும் கூறியதை, ஆஸ்குவித்தும் கிரேயும் முற்றிலும் புறக்கணிக்காது, குறைந்த பட்சம் ஃபிரான்சின்மீது, அல்லது பெல்ஜியத்தின்மீது, அல்லது கால்வாய்த் துறைமுகங் களின்மீது தாக்குதல் ஏற்பட்டால், உறுதியாக அவர்கள் கடைசிவரையிலும் போராடத் தயார் என்று கூறினர். பெர்லி னில் அவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று உன்னிப்பாகக் கவனிப்பதிலோ, அல்லது வியன்னாவுடனும் பால்கன் நாடுகளுடனும் நெருங்கிய தொடர்புவைத்துக்கொள்ள வில்லை என்று கூறுவதிலோ அல்லது ஜெர்மன் படையைக் கவனிக் காமல் அவர்களுடைய அமைச்சர்கள் கூறுவதையே பெரிதாகக் கருதுவதிலோ எவ்விதப் பயனும் ஏற்படப்போவதில்லை என்று எளிதாகப் புறக்கணித்துவிட்டனர்.

ஜூன் 28ஆம் தேதியன்று, ஃபிரான்ஸ் ஃபெர்டினண்டையும் அவரது மனைவியையும், ஸெர்பியர்களின் ஆதரவைப் பெற்ற இரண்டு பாஸ்னியர்கள் ஸரோஜிவோ என்ற இடத்தில் படு கொலை செய்துவிட்டனர். உடனே ஆஸ்திரியா ஸெர்பியாவைக் கைப்பற்றித்தான் ஆகவேண்டுமென்ற முடிவுக்கு வந்தது.

ஜுலை 5ஆம் தேதி, கெய்சர் உதவி செய்வதாக வாக்குறுதி அளித்தார். ஜுலை 28ஆம் தேதியன்று ஆஸ்திரியா இறுதி எச்சரிக்கை விடுத்தது. இவ்வளவு விரைவில் இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்றுவிட்டன. ஆஸ்திரியாவின் விரைவான இறுதி எச்சரிக்கையை எந்தச் சுதந்திர நாடும் ஏற்றுக்கொண்டிருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. இந்த நெருக்கடியான நிலையில், போரா அல்லது அமைதியா என்று இரண்டில் ஒன்றை முடிவு செய்யும் கட்டம் நெருங்கிவிட்டது. அந்த வாரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி அட்டவணையைப் பார்த்தவுடன், இந்தப் போருக்கான உடனடியான பொறுப்பு வேறு எங்கேயாவது இருக்கவேண்டும் என்பது புலனாகும். போருக்கான ஆதாரங்களைப் பார்ப்போமெனில், ஜெர்மனியின் இரட்டைக் கொள்கையையும் இரட்டைத் தவறுகளையும், நிலைமையைப் பரிசீலனை செய்யும்பொழுது செய்திருக்கின்றதைக் காணமுடிகின்றது. ஆஸ்திரியா-ஸெர்பியப் போரை இருதரப்பினருக்கு மட்டுமே நடக்கும் போராக்கி, உடனடியாக இதை முடித்துவிடவேண்டுமென்றும் ஜெர் மானியர் கருதினர். கிரிமியா போர் நிகழ்ச்சியைப் போலவே, கேபினட்டும், மற்ற அரசியல் கட்சிகளும், சமாதானம் செய்து வைக்கின்ற ஒரு நல்ல வாய்ப்பைக் கைநழுவ விட்டுவிட்டதென்றே சொல்லலாம். உடனடியாக, நாம் ஃபிரான்ஸ், ரஷ்யா பக்கம் சேர்ந்து போரிடப் போகிறோம் என்று அறிக்கை விட்டிருந்தோமென்றால், அல்லது சில நாட்களுக்கு முன்பே, பெல்ஜியத்தைத் தாக்கினால் போரிடுவோம் என்ற நமது முடிவை அறிவித்திருந்தாலும், ஜெர்மானியர் பின் வாங்கியிருக்கக்கூடும்.

ஆனால், போர் வெறி அணைகடந்த வெள்ளம்போல் பெருக்கெடுத்தோடும் இச் சமயத்திலும், ஸ்கிலிஃபென் (Schlieffen) திட்டப்படி, பெல்ஜியம் வழியாகச் சென்று ஃபிரான்ஸ் முழுவதையும் சுற்றி வளைத்துக்கொள்ள வேண்டுமென்று திட்டமியற்றிய பின்பு, மேற்கூறிய கருத்து எந்தப் பயனையும் அளித்திருக்க முடியாது என்றே சொல்லலாம். முதலிலேயே பிரிட்டிஷ் கேபினட் அதனுடைய அறிக்கையை விட்டிருந்தாலும், கேபினட் வீழ்ந்திருப்பதுமட்டுமன்றி, நாட்டிலேயும் பிளவுகள் ஏற்பட்டிருக்கும் என்பதை மந்திரிகளுடைய பல கடிதப் போக்குவரத்துகளிலிருந்து தெரிந்துகொள்ள முடிகின்றது. அதனால் இந்த வகையில், பிரிட்டன்மீது குற்றம் சுமத்துவது, வெறும் ஏட்டளவில்தான் இருக்க முடியும். ஆஸ்குவித், கிரே, ஹால்டேன், சர்ச்சில் ஆகியோர் ஃபிரான்ஸை இந்த நிலைமையில் கைவிட்டு விட்டார்கள் என்றால் அழிவும் அவமானமும் கண்டிப்பாக

பிரிட்டனுக்கு ஏற்படும் என்று நம்பினர். ஆனால், மற்ற மந்திரிகளான மார்லி, பர்ன்ஸ் போன்றவர்கள், இந்தப் பிரச்சினையில் தலையிடுவதே கூடாது என்று கருதினர். இந்தக் கருத்தை வலியுறுத்துவதற்காக, மார்லி, பர்ன்ஸ் ஆகியோர் ராஜிநாமா செய்தனர். மக்களுடைய பெரும்பான்மை விருப்பமும், கேபினட்டின் பெரும்பான்மை விருப்பமும், பால்கன் போரில் ஈடுபடக் கூடாதென்பதேயாகும். அரசாங்கம் பிழைக்கவேண்டுமென்பதற்காகவும், நாட்டில் ஒற்றுமையை நிலைநிறுத்துவதற்காகவும், ஆஸ்குவித்தும் கிரேயும் படிப்படியாக முன்னேறினர்.

ஜூலை 29ஆம் தேதியன்று, பிரிட்டன் நடுநிலைமை வகிக்க வேண்டுமென்று ஜெர்மனி கேட்டுக்கொண்டது. அதனால், பிரான்ஸ், பெல்ஜியத்தின்மீது படையெடுக்கக் கூடாதென்று பிரிட்டன் ஜெர்மனியைக் கேட்டது. அதற்குள் ஆஸ்திரியாவும் ஜெர்மனியும் படை திரட்டிவிட்டன. ஜெர்மனி, ரஷ்யாவுக்கு இறுதி எச்சரிக்கையும் அளித்துவிட்டது. கேபினட் எந்த முடிவையும் எடுப்பதற்குள்ளாகவே, இவ்வளவு நிகழ்ச்சிகள் துரிதமாக நடந்துவிட்டன. யூனியனிஸ்டுகளின் ஆதரவைப் பெற்ற பிறகே, ஆகஸ்ட் 2ஆம் தேதியன்று ஜெர்மன் கப்பல்கள் ஆங்கிலேயக் கால்வாயில் நுழையக்கூடாது என்று கேபினட் எச்சரிக்கை விடுத்தது. ஆனால், அதற்கு முன்பே, ஜெர்மனி, பெல்ஜியத்தின் நடுநிலைமையை மதிக்க முடியாதென்று கூறிவிட்டது. அன்று மாலையே, ஜெர்மன் துருப்புகள் லக்ஸம்பர்க் மீது படையெடுத்து, பெல்ஜியத்தின் வழியாகச் செல்லுவதற்கு அனுமதி கோரினர். அதற்குப் பிறகுதான், லாயிட் ஜார்ஜும், கேபினட்டின் பெரும்பான்மையினரும், பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வதென்று முடிவுசெய்தனர்.

ஃபிரான்சைக் கைவிட்டிருந்தோமென்றால், லாயிட் ஜார்ஜுடன், கிரேயும் ஆஸ்குவித்தும் ராஜிநாமா செய்திருப்பார்கள் என்பது நிச்சயமே. ஆனால், பெல்ஜியன் பிரச்சினை வேறு வந்துவிட்டதால் கேபினட்டும், நாடும் ஒன்றுபட்டுவிட்டன. தேசிய ஆர்வம் மக்களிடையே எப்பொழுதும் இருந்ததைவிட, இந்தச் சமயத்தில் அதிகமாகக் காணப்பட்டது. யூனியனிஸ்டுகளுக்காக போனர் லாவின் ஆதரவும், அயர்லாந்திற்காக ரெட்மாண்டின் ஆதரவும் பெற்று, ஆகஸ்டு 3ஆம் தேதியன்று, கிரே, மக்களுடைய ஆர்வத்தைத் தெளிவாக உணர்த்தினர். 4ஆம் தேதியன்று, பெல்ஜியத்தில் ஜெர்மன் துருப்புகள் இருப்பதை உணர்ந்து, பெல்ஜியத்தின் நடுநிலைமையைக் காப்பாற்றவேண்டி பிரிட்டன் ஜெர்மனிக்கு ஓர் இறுதி எச்சரிக்கை விடுத்தது. அன்றிரவு முழுவதும் அந்த எச்சரிக்கைக்குப் பதிலே வரவில்லை.

டியூடர் காலத்திலிருந்து ஐரோப்பிய நிலையையும் நமது தலைவர்கள் அத்துடன் மறந்துவிட்டனர்.

இந்தப் போர் ஏற்படுவதற்கான பொறுப்பை மனித சமுதாயத்தின்மீது சுமத்துவது மிகவும் எளிதான காரியமாகும். ஆக்கிரமிப்பு முறையைப் பின்பற்றி ஆஸ்திரியா-ஹங்கேரி அதனுடைய பேரரசைப் பாதுகாத்துக்கொள்ளப் போரிட்டது. இன ஆக்கிரமிப்பை எதிர்த்து ஸ்லாவ் மக்கள் போரிட்டனர்; அல்லது பிரிட்டனும் ஃபிரான்சும் பின்பற்றிய ஏகாதிபத்தியக் கொள்கைகள் இயற்கையாகவே மக்களிடம் வெறுப்பைத் தூண்டின. போர் ஏற்பட்டதற்கு எந்தக் காரணத்தையும் குறிப்பிடலாம். இன்னும், இந்தப் போர் ஏற்படுவதற்கான நிகழ்ச்சிகள் நீண்டகாலமாகவே தொடர்ந்து வந்திருக்கின்றன. துருக்கியர்களின் கொடுமைகளும், போலந்து பிரிவினைகளும், அல்லது பதினான்காவது லூயி அரசனின் ஆக்கிரமிப்புகளுங்கூட, இப் போர் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தனவென்று சொல்லலாம். ஆனால், பிரிட்டனைப் பொறுத்த வரையிலும், எந்தச் சந்தேகங்களையும், எந்தக் காரணங்களையும்விட, இராணுவ பலத்தை அதிக அளவில் வளர்த்துக்கொண்ட காரணத்தால் சமநிலையை ஏற்படுத்தவும், கடல் சுதந்திரத்தையும் நாடுகளின் சுதந்திரத்தையும் பாதுகாக்கவும் பிரிட்டன் கடமைப்பட்டிருக்கிறது. தவிர, அவர்களின் வாழ்க்கையும், பாதுகாப்பும், கொள்கைகளும் இவைகளைப் பாதுகாப்பதில்தான் அடங்கியிருந்தன. இக் காரணங்களுக்காகத்தான், பிரிட்டன், ஸ்பெயின் நாட்டு பிலிப் அரசனை எதிர்த்தும், பதினான்காவது லூயி மன்னனை எதிர்த்தும், நெப்போலியனை எதிர்த்தும் போரில் முன்பு ஈடுபட்டது.

## கால அட்டவணை, 1914

| | | |
|---|---|---|
| 28 | ஜூன் | சரோஜிவோவில் படுகொலை. |
| 5 | ஜூலை | ஜெர்மனி, ஆஸ்திரியாவுக்கு முழு ஆதரவை அளித்தல். |
| 23 | ,, | ஆஸ்திரியாவின் இறுதி எச்சரிக்கையை பெல்கிரேடில் கொடுத்தல். |
| 25 | ,, | ஸெர்பியா அதைப் பெரும்பாலும் ஏற்றுக்கொண்டது. அதில் கண்டுள்ள முக்கியமான இரண்டு குறிப்புகளை வல்லரசுகளிடையே அல்லது ஹேக் மாநாட்டில் சமர்ப்பிப்பதாக முடிவுசெய்தது. |

26 ஜுலை பிரிட்டிஷ் கடற்படையின் படைதிரட்டல் பயிற்சி. நான்கு வல்லரசுகள் மாநாட்டைக் கூட்ட கிரே ஆலோசனை கூறல் (பிரிட்டன், ஜெர்மனி, ஃபிரான்ஸ், இத்தாலி).

27 ,, ஜெர்மனி இந்த மாநாடு வேண்டாமென்று நிராகரித்தல்.

28 ,, ஸெர்பியாமீது ஆஸ்திரியா போர் தொடுத்தல். கெய்சரும் பெத்மேன்-ஹால்வைக்கும், வியன்னவை மிதமான கொள்கையைப் பின்பற்றக் கேட்டுக்கொள்ளுதல்.

29 ,, ஆஸ்திரியாவுக்கு எதிராக ரஷ்யா ஓரளவிற்குப் படை திரட்டல். நடுநிலைக்கொள்கையைப் பின்பற்றுமாறு பிரிட்டனை ஜெர்மனி கேட்டுக் கொள்ளுதல். ஆஸ்திரியா பெல்கிரேட்மீது. குண்டுவீச்சு நடத்துதல்.

30 ,, ரஷ்யா மாநாட்டைக் கூட்ட ஒப்புக்கொள்ளு தல். ஆனல், அதே சமயத்தில் படை திரட்டவும் உத்தரவிடுதல். இதையறிந்த வுடன் மோட்க் ஆஸ்திரியாவையும் இப் படியே செய்யத் தூண்டுதல்.

31 ,, ஆஸ்திரியாவில் படை திரட்டல்; ஸெர்பியாவில் அவர்கள் படையெடுப்பதை நிறுத்த முடி யாது என்று அறிவித்தல். ரஷ்யாவுக்கு ஜெர் மனியின் இறுதி எச்சரிக்கை. பன்னிரண்டு மணி நேரத்திற்குள் படையைக் கலைக்க வேண்டுமென்று ரஷ்யாவுக்கு ஜெர்மனி அறிவித்தல். மற்றுமோர் எச்சரிக்கையை ஃபிரான்சுக்கு அனுப்பி, நடுநிலைமைக் கொள்கையைப் பின்பற்றவேண்டுமென்று கோரியது.

1 ஆகஸ்ட் ரஷ்யாமீது ஜெர்மனி போர் தொடுத்தல் ஃபிரான்சில் பொதுப் படை திரட்டல். பெல்ஜியன் நடுநிலைமையைப்பற்றி ஜெர் மனி எவ்வித உறுதிமொழியையும் கொடுக்க மறுத்துவிட்டது.

| | |
|---|---|
| 2 ஆகஸ்ட் | கன்சர்வேடிவ் எதிர்கட்சியினர், ஃபிரான்சையும் ரஷ்யாவையும் ஆதரிக்கச்சொல்லி வற்புறுத்தினர். ஆங்கிலேயக் கால்வாயிலும் வடகடலிலும், ஜெர்மன் கப்பல்கள் நுழையவிடாதபடி பார்த்துக்கொள்வதாக கிரே, ஃபிரான்சிற்கு உறுதிமொழி அளித்தல். பெல்ஜியத்திற்கு, ஜெர்மனி இறுதி எச்சரிக்கை விடுத்தல். |
| 3 ,, | பிரிட்டிஷ் முதற் படையைத் திரட்டுதல். நமது வெல்திறன் ஆதரவை பெல்ஜியம் கோருதல். ஃபிரான்ஸ்மீது ஜெர்மனி போர் தொடுத்தல். |
| 4 ,, | ஜெர்மன் துருப்புகள் பெல்ஜிய எல்லையைக் கடத்தல். பிரிட்டன் இறுதி எச்சரிக்கை விடுத்தல். |

# 15. முதல் உலகப் போர், 1914-1918

1914ஆம் ஆண்டு முடிவிலேயே ஜெர்மனியின் மாபெரும் திட்டம் முறிந்துவிட்டது. ஆறு வாரத்திற்குள் அவர்கள் ஃபிரெஞ்சு மக்களின் வாழ்வைச் சீர்குலைத்துவிடவேண்டுமென்று திட்டமிட்டிருந்தனர்; அதற்குப் பிறகு, கால்வாயில் உள்ள துறைமுகங்களைக் கைப்பற்றி பிரிட்டனைத் திணற அடிப்ப தென்றும், பிறகு ரஷ்யாவின் பல முக்கியமான இடங்களைத் தாக்கி அதையும் சீர்குலைத்துவிடவேண்டுமென்றும் மாபெரும் திட்டம் ஒன்றைத் தீட்டியிருந்தனர். ஆனால், அதற்கு மாறாக, போர் ஐம்பத்திரண்டு மாதங்கள் வரையிலும் நிகழ்ந்தது. நீடித்த போரும், அதனால் ஏற்பட்ட எல்லையற்ற துயரங்களும், உலகம் முழுவதும் போர் துவக்க காலத்தில் பிரதிபலித்தன. இந்தப் போர், மூன்று பேரரசுகளை அழித்தது. அதாவது, ஜெர்மன், ஆஸ்திரோ-ஹங்கேரி, துருக்கி ஆகிய பேரரசுகள் அழிந்தன. ரஷ்யாவில் பெரிய புரட்சியையும், ஆங்கிலேய ஏகாதி பத்யத்தில் பெரிய மாறுதலையும், இந்தப் போர் உண்டாக்கியது.

இராணுவ பலமிக்க நாட்டை எதிர்த்துப் போரிடுவதிலே தான் முதன்முதலாக இந்தப் போரின் தன்மை வெளிப்பட்டது. பதினான்காவது லூயி மன்னனையோ, அல்லது நெப்போலியனையோ எதிர்த்துப் போரிட்டதற்கும், இந்தப் போரில் ஈடுபட்டதற்கும், பிரிட்டன் அதிக வேறுபாட்டைக் காணவில்லை. இந்தப் போரில் வெற்றி பெறுவதற்கு முன்பு மார்ல்பரோவும், பிட்டுகளும் பின் பற்றிய கடற்படையைப் பயன்படுத்துகின்ற முறையையே இப்பொழுதும் பிரிட்டானியர் பின்பற்றினர். கடற்படையின் உதவிகொண்டு பல துறைமுகப் பட்டினங்களை முற்றுகையிடு தலும், பகை நாடுகளின் துருப்புகளை நமது நேச நாடுகள்மூலமாக நிறுத்திவைப்பதும், தரைப் படையினருக்கு எந்தவிதமான உதவியையும் அளிப்பதிலும் கடற்படை நன்கு பயன்படுத்தப்பட்டது. பல இடங்களிலிருந்து படைகளைப் பரவலாக அனுப்பிப் போர் நிகழும் இடத்தைத் தாக்குவதென்பது பிரிட்டனின் போர் முறை

யாகும். இதே முறையைத்தான் 1704ஆவது ஆண்டிலும், அல்லது 1805-15ஆவது ஆண்டுகளிலும் பிரிட்டன் பின்பற்றியது. முற்றுகையிடுவதாலும், வர்த்தகத்தை அழிப்பதாலும், தரைப் படையினருக்கு அதிகச் சேதங்களை விளைவிக்கமுடிந்தது. உலகம் முழுவதும், நேச நாடுகளின் நட்பைப் பெறுதலும், பல நாடுகளை நடுநிலைமையைப் பின்பற்றச் செய்தலும் பிரிட்டனுடைய போர் முறையாகும். ஒவ்வொரு நாட்டின் நட்பைப் பெறும்போதும், அந்த நாட்டிற்குச் சங்கடமான நிலையிலும் பல அரசியல் உதவி களைச் செய்யவேண்டி நேரிட்டது. போஸ்னியாவில் ஏற்பட்ட கொலையின் காரணமாக, ஆங்கிலேயப் படைவீரர்கள், இறுதியில் ஸிரியாவிலும், காஸ்பியனிலும், ஆர்க்கேஞ்சலிலும், கிழக்கு ஆஃப்பிரிக்காவிலும், ஆல்ப்ஸிலும், காகஸஸிலும் போரிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அவசியமேற்படின் பிரிட்டன், ஃபிரான்ஸ், ரஷ்யா ஆகிய நாடுகள் ஒன்ருகச் சேர்ந்துதான் ஒரு சமாதான ஏற்பாட்டை முடிவு செய்யவேண்டுமென்ற ஒப்பந்தம், இன்னும் வெளிப் படையாக நேச நாடுகளின் தொடர்பைப் பலப்படுத்தியது. ஜெர்மனியின் தாக்குதலால், பெல்ஜியம் உடனடியாக நேச நாடுகளுடன் சேர்ந்துகொண்டது. அதைப்போலவே, ஜப்பா னுக்குப் பல கொடுமைகளை ஜெர்மனி இழைத்ததால், பழிவாங்கு வதற்காக நேச நாடுகளுடன் இதுவும் சேர்ந்துகொண்டது. ஸெர்பியாவும் அதனுடைய கூட்டாளி நாடான மான்டி நிக்ரோவும் போரில் நேரிடையாக ஈடுபட்டிருந்ததால், வெகுவிரைவில் மற்ற பால்கன் நாடுகளும் வளைக்கப்படலாம். 1912-13-ல் தோற்றுப்போன நாடுகளான துருக்கியும் பல்கேரி யாவும் பழிவாங்கவேண்டுமென்ற மனப்பான்மையுடன் இருந் தன. அதை யாரும் தடுத்து நிறுத்திவிட முடியாது. ஆனுல், ரஷ்யா வெற்றி பெற்றிருந்தாலும் அல்லது 1913-ல் வெற்றி பெற்றவர்கள் ஒரு சமாதான ஒப்பந்தத்தைச் செய்திருந்தால், ஒரு சமயம் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. இப்பொழுது பிரிட்டனுடைய வெல்திறன் திறமையினுலும் முயற்சியாலும் அது செய்ய முடிந்ததெல்லாம், ஸெர்பியர்களையும் கிரேக்கர் களையும் வற்புறுத்தி, மாஸிடோனியாவின்மீதிருந்த பிடியைத் தளர்த்தமுடியும் என்பதேயாகும். உண்மையில், ருமேனியாவும் ஹங்கேரியின் டிரான்ஸில்வானியாவைக் கைப்பற்ற முயன்றது. ஆனுல், அவர்களுங்கூடப் பல்கேரியன் நிலப்பகுதியை ஆக்கிர மித்தனர். 1916வரையிலும் மிகவும் எச்சரிக்கையாக நிடுநிலை மைக் கொள்கையைப் பின்பற்றியது, ரஷ்யா துருக்கியின்மீது போர்தொடுக்க விரும்பவில்லை. ஏனெனில், ரஷ்யாவே மிகவும் அபாயமான நிலையில் இருந்தது. அல்லது, பிரிட்டனுங்கூட

இப்படிச் செய்யமுடியாது. ஏனெனில், அதனுடைய பேரரசில் லட்சக்கணக்கான முகமதியர்கள், குறிப்பாக எகிப்தில் அமைதியாக வாழ்கிறார்கள். துருக்கியின்மீது போர் தொடுப்பதால் அவர்களைப் புண்படுத்துவதாகும். அதனால், வெனிஸிலோ சமாதான ஒப்பந்தத்திற்கு வந்தபொழுது அதை உறுதியாக கிரே நிராகரித்துவிட்டார். தவிர, நேச நாடுகள், துருக்கியின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதாக உறுதி கூறின. ஆனால், துருக்கியின் இளைஞர்கள் கட்சி (Young Turks) ஏற்கெனவே ஒரு முடிவு செய்து ஜெர்மனியிடம் ஓர் இரசிய ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது. கோபன் ((Goeben), பிரஸ்லா (Breslau) என்ற ஜெர்மன் போர்க் கப்பல்கள் மால்டாவிலிருந்து கான்ஸ்டான்டிநோபிளுக்குத் தப்பித்துச் சென்றவுடன், அக்டோபர் மாதத்தில், 'இளைஞர் துருக்கி' போரில் இறங்கிவிட்டது. துருக்கியில் ஏற்பட்ட போரினாலும், பின்பு அதனுடைய ஏற்றத் தாழ்வுகளாலும், பல்கேரியா மிகவும் தயங்கிக்கொண்டே இருந்தது. ஆனால், கடைசியில் செப்டம்பர் 1915-ல் ஜெர்மனியுடன் சேர்ந்து கொண்டது. அத்துடன், கிரீஸிலும் அது ஆதிக்கம் பெறவேண்டி, கெய்சருடைய மைத்துனரான கான்ஸ்டன்டைனுடனும், வெனிஸிலோவுடனும் மோதியது.

பால்கன் நாடுகளில் இவ்விதமாக இழுத்துக்கொண்டிருப்பதைப் போன்று இத்தாலியுடனும் வியாபாரம் பேசவேண்டி ஏற்பட்டது. முக்கூட்டு உடன்படிக்கை நாடுகளுடன் சேர்ந்து இத்தாலி போரிடாது என்பது நன்றாகத் தெரிந்துவிட்டது. ஆனால், அவர்களை எதிர்த்து இப்பொழுது போரிடுமா என்பது தான் இப்பொழுதுள்ள பிரச்சினையாகும். அதனுடைய நிதி நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. ஜெர்மன் நாட்டுடன் இத்தாலி அதிகத் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தது. கியாலிட்டி (Giolitti) தலைமையில் ஒரு பலமிக்க கட்சி இத்தாலியில் நடுநிலைமைக் கொள்கையை அதிகமாக ஆதரித்தது. ஸலாந்திரா (Salandra), ஸோனினோ (Sonnino) ஆகியோரும் தேசிய ஆர்வம் மிக்க இளம் இத்தாலியர்களும் அவர்களுடைய உணர்ச்சிகளைப் பிரதிபலித்த கவிஞர் டி' அனுன்ஸியோவும் (D'Annunzio) இந்தப் போர் இத்தாலிய மக்களுக்கு நல்ல வாய்ப்புகளை அளிக்கும் என்று கருதினர். இத்தாலி கேட்டதையெல்லாம் ஆஸ்திரியாவில் கொடுக்க முடியவில்லை. அதனுடைய சக்திக்கு மீறியது. ஸ்லாவ் இனத்தவர்களை அதிகப் புண்படுத்துவதாக இருந்தது. ஆனால், ஏப்ரல் 1915-ல் லண்டனில் நடந்த இரகசிய ஒப்பந்தத்தின் பொழுது, நேசநாடுகள் மிகவும் துணிச்சலுடன் இத்தாலியின் கோரிக்கைகளை, அதாவது, டிரென்டினோ, தெற்கு டைரல்,

டிரியஸ்டி, இஸ்ட்ரியா, வடக்கு டால்மாஷியா அல்பேனியாவில் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதிலும், 1912-ல் துருக்கியிடமிருந்து கைப்பற்றிய பன்னிரண்டு ஈசியன் தீவுகளையும், லிபியா முழுவதையும், நேசநாடுகள் துருக்கியைப் பங்குபோட்டுக்கொள்ளும் பொழுதோ, அல்லது ஜெர்மன் காலனிகளை எடுத்துக்கொள்ளும் பொழுதோ இத்தாலிக்கு ஆஃப்பிரிக்காவிலும், ஆசியா மைனரிலும் அதனுடைய ஆதிக்கத்தைப் பரப்பிக் கொள்ளுவதற்கான சலுகைகளும் போன்ற பல இத்தாலிய கோரிக்கைகளை நிறைவேற்றுவதாக நேசநாடுகள் கூறின.

அதனால் பழைய மாதிரியாகவே, பல நேசநாடுகள் அரைகுறையாகக் கூட்டுச் சேர்ந்து, ஒரு வல்லரசைத் தாக்குவதாக இருந்தது. திறமையற்ற ஆஸ்திரியப் படையையும் ஜெர்மன் இராணுவ அதிகாரிகள் மேற்பார்வை செய்தனர். ரஷ்யாவுக்கும் அதனுடைய மேற்கத்திய நேசநாடுகளுக்கும் உண்மையில் தொடர்பே கிடையாது. அதைவிட, தப்பிதமாகப் புரிந்து கொள்வதற்கு நிறைய வாய்ப்புகள் இருந்தன. 1917-வரையிலும், ஃபிரான்ஸ், பிரிட்டன் ஆகிய நாடுகளின் படையை ஒருமைப்பாட்டுடன் செலுத்தமுடியவில்லை. ஆனால், அவர்களிடையே பரஸ்பரம் பொறாமை குடிகொண்டிருந்தது. பல சமயங்களிலும், நேசநாடுகளின் வெறுப்பு மனப்பான்மையும், அல்லது அவைகளின் சில குறிப்பிட்ட குறிக்கோள்களை வற்புறுத்துவதிலும் போர் நடவடிக்கைகள் தடைபட்டிருக்கின்றன. சமாதானம் ஏற்படுவதற்கான வாய்ப்புகளும் தடைபட்டிருக்கின்றன.

இவைகளெல்லாம், ஆங்கிலேய வரலாற்றில் காணக்கூடிய சாதாரணத் தொல்லைகளே. ஆனால், இந்தப் போரில் புதிய போர்க்கருவிகளையும், புதிய கண்டுபிடிப்புகளையும் பயன்படுத்தியதால், போரின் போக்கே மாறிவிட்டதுமட்டுமன்றி, நீண்ட காலத்திற்கு நீடித்துவிட்டது. துரிதமாக அழிவை ஏற்படுத்துகின்ற வெடிமருந்துகள் பயன்படுத்தப்பட்டன. இதன் வளர்ச்சியை எந்த நாடும் எதிர்பார்க்கவில்லை. தென் ஆஃப்பிரிக்கப் போர் முழுவதற்கும் பயன்படுத்தப்பட்ட வெடிமருந்து, ஒரு போர்க் களத்திலேயே பயன்படுத்தப்பட்டது. பாதுகாப்புப் போர் முறைகளில் புதிய முன்னேற்றம் காணப்பட்டது. உதாரணமாக ஜெர்மனி, அகழிகளையும், 'மெஷின்கன்' துப்பாக்கிகளையும், மின்சாரம் பாய்ச்சிய கம்பிகளை வேலியாகஅமைத்தும், எறிகுண்டுகளைப் பயன்படுத்தியும், அவர்களுடைய பாதுகாப்புப் போர்முறையை பலப்படுத்திக்கொண்டனர். 1915-ல் யெப்ரஸ்

(Ypres) என்ற போர்க்களத்தில் முதல்முதலாக அவர்கள் நச்சுப் புகையைப் பயன்படுத்தினர். மேலும், ஸெப்ளின் (Zeppelin) என்ற விமானத்தைப் பயன்படுத்தி, தொழில் நகரங்களில் குடியிருக்கும் ஏராளமான மக்கள்மீது குண்டுகளை வீசி, அநாகரிகமான போர்முறையை விஞ்ஞான அடிப்படையில் அவர்கள் புரிந்தனர். விமானத் தாக்குதல்களை நடத்தியதால், போர்க்களங்களில் பின்பற்றுகின்ற போர்த் தந்திர முறைகள் பயனளிக்காமல் போய்விட்டன. நவீன முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு போர்க்கருவியை வைத்திருப்பது எண்ணிக்கையில் பல பழைய போர்க் கருவிகளை வைத்திருப்பதற்கொப்பாகும். போர்க் கப்பல்கள் பகைவர்களிடம் நெருங்கி வராமலேயே, 20,000 கெஜ தூரத்திலிருந்து குண்டுகளை வீசித் தாக்கமுடிந்தது. கடற்படைக் காரியாலயத்திலிருந்து, ஹெலிகோலண்ட், அல்லது டாக்கர் பாங்க் போன்ற தொலைதூரத்திலுள்ள போர்க் கப்பல்களுக்கும் தந்தியில்லாத செய்திப் போக்குவரத்துமூலமாக உத்தரவுகளையும் செய்திகளையும் அனுப்பமுடிந்தது. சிறிதும் முன்னெச்சரிக்கையின்றிப் பிரயாணிகள் கப்பல்களையும், வர்த்தகக் கப்பல்களையும் கடற்கண்ணிகளை வைத்தும், நீர்மூழ்கிக் கப்பல்களைக் கொண்டும் அழித்தனர். மூழ்கிய கப்பல்களிலிருந்து ஆட்களைத் தப்புவிக்கவும் முடியாத நிலை ஏற்பட்டது. இதனால், நடுநிலைமை நாடுகளுக்குப் பின்பற்றப்படும் சட்டங்களெல்லாம் பயனில்லாமல் போய் விட்டன. மேலும், போர், கடல் வெளிகளிலும் பரவியது.

இவ்வளவு அபாயங்கள் இருந்தபோதிலும் ஆங்கிலேயக் கடற்படை மிகவும் கடமையுணர்ச்சியுடன் அதனுடைய பழைய குறிக்கோளை நிறைவேற்றியது. 1914 முடிவில், ஆஃப்பிரிக்காவில் உள்ள சில காலனிகளைத்தவிர, மற்றக் காலனிகள் முழுவதும் நேச நாடுகளின் பிடியில் சிக்கின. ஃபிரான்சுக்கு உதவிப்படை அனுப்பப்பட்டது. இதில் ஒரு கப்பலுக்கோ, அல்லது ஒரு மனிதனுக்கோ சேதம் ஏற்படவில்லை. கனடாவிலிருந்து துருப்புகள் இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்டன. ஆஸ்திரேலியாவிலிருந்தும், நியூஸிலந்திலிருந்தும், துருப்புகள் எகிப்திற்குக் கொண்டுவரப்பட்டன. நிரந்தரமாக இருந்த இந்தியத் துருப்புகளைப் பிரதேசப் படையாகவும், பிரிட்டனில் உள்ள பிரதேசப் படையை இந்தியாவிற்கும் மாற்றிக்கொண்டார்கள். யார்க்ஷயர் கடற்கரையைத் தாக்க முயற்சி செய்ததைத் தவிர, மற்றபடி, ஜெர்மன் கடற்படை, மிகவும் பாதுகாப்பான துறைமுகங்களில் வைத்திருந்தனர். ஆனால், போர் ஆரம்பித்து முதல் இரண்டு ஆண்டுகளில் ஐந்து முறை தாக்கியிருக்கிறது. பெரிய கடற்படையை ஓர்க்னிஸ் (Orkneys) என்ற தளத்திலும், சிறிய படையை ஹார்விக்சிலும் (Harwich), ஷீர்னஸ் (Sheerness)

என்ற இடத்தில் மற்ருேர் உதவிக்கப்பற் படையும் வைத்து, கால்வாயையும் வட கடலேயும் நன்கு பாதுகாத்தனர். அதனுல், ஜெர்மன் நாசகாரிகள் அப் பக்கம் வந்தால், அவற்றை வேட்டை யாடத் தயாராக இருந்தனர். இந்தியக் கடலில் 'எம்டன்' என்ற நாசகாரிக் கப்பல் பல துணிச்சலான காரியங்களைச் செய்தது. ஜாவா அருகில் அது மூழ்கடிக்கப்பட்டது. சிலியன் (Chilean) கரையோரத்தில் வான் ஸ்பீயின் (Von Spee) நாசகாரிக் கப்பல்கள் நவம்பர் மாதத்தில் கரோனல் (Coronel) அருகே கிரேடாக்கின் (Cradock) கப்பல்களைத் தாக்கின. ஆனுல், டிசம்பர் மாதத்தில், ஃபால்க்லாந்து தீவுகளில் ஸ்டர்டீ (Sturdee) என்பவர் செலுத்தி வந்த கப்பற் படையினுல் அவைகள் நாசமாக்கப்பட்டன.

எல்லாவற்றையும்விட, முக்கியமாக உணவுப் பொருள்களையும் யுத்த தளவாடங்களையும் கடல் மார்கத்தில் அனுப்பி வைக்க வேண்டியது கடற்படையின் முக்கியமான பணிகளுள் ஒன்ருகும். இவைகளைப்பொறுத்தேதான் நமது சாதாரண வாழ்க்கையே அமைந்திருந்தது. இதனுல், நடுநிலைமை நாடுகளுடைய விவகாரங்களில் தலையிடவேண்டிய அவசியமும் அவர்களுடைய கப்பல்களில் கள்ளத்தனமாக ஜெர்மனிக்குவேண்டிய பொருள் களை ஏற்றிச் செல்லுகின்றனவா என்ற சோதனையையும் செய்ய வேண்டியிருந்தது. சப்மரின் போர் முறையினுல் இந்தவிதமாகச் சோதனை செய்வது ஆபத்தாக இருந்தது. லண்டன் அறிக்கை யின்படி, சரியானபடி முற்றுகையிடுவதென்பது கடினமாகவே இருந்தது. டார்பிடோக்களைப் போடுவார்கள் என்ற பயம் காரணத்தினுல் நெடுந்தொலைவிலிருந்தே மிகவும் எச்சரிக்கையான நடவடிக்கைகளை எடுக்கவேண்டியிருந்தது. அதுமட்டுமன்றிச் சோதனை செய்வதும் அவ்வளவு எளிதானதாகத் தெரியவில்லை. அல்லது பகை நாடுகளுக்கு மிகவும் அவசியமாகத் தேவைப்படு கின்ற ரப்பரும் எண்ணெயும் எடுத்துச் செல்லும் கப்பல்களையும் விட்டு விட முடியாது. நல்லகாலமாக, கிரேயின் முயற்சியால், அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் நல்ல தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள முடிந்தது. அத்துடன் அவர்களுடைய யுத்த தளவாடங் களும் நமக்கு மிகவும் தேவையாக இருந்தன. ஒரு சமயத்தில் அவர்கள் மத்தியஸ்தம் செய்துவைக்கவும், அல்லது நட்பு நாடா கவே, நேச நாடுகளிடம் சேர்ந்து போரிடலாம் என்ற நம்பிக்கை இருந்தது. அப்படிப் போரிட்டால், இதனுல் ஏற்படுகின்ற நல்ல பயன்களையும் அறிந்திருந்தனர். ஸ்வீடன் போன்ற சிறு நாட்டை யும் ஜெர்மனியுடன் சேர விட்டுவிட்டால், ரஷ்யாவிற்கு மிகவும் ஆபத்தாகிவிடும். ஆனுல், இந்தச் சமயத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பகைத்துக்கொண்டால் தோல்வி ஏற்படக்கூடிய

வாய்ப்பும் இருந்தது. இதனுல் பல தொல்லைகளும் அயாயங் களுங்கூட ஏற்பட்டன. சற்றேறக்குறைய அமெரிக்க ஆயில் கம்பெனிகள் பகை நாட்டுடன் வர்த்தகம் செய்கின்றனவென்று பிரிட்டன் அறிந்தது. இப்படியிருந்தும் அமெரிக்க ஐக்கிய நாடு களுடன் நல்ல உறவை ஏற்படுத்தியிருந்ததென்ருல், அதற்குக் காரணமானவர்கள் கிரேயும், பிரிட்டனில் உள்ள அமெரிக்கத் தூதுவரான வால்டர் பேஜ் என்பவருமாவார்கள்.

பகைவர்களின் கப்பல்களைக் கண்காணிக்கும் வரையில், முற்றுகை அமெரிக்கா, அல்லது மேற்கு இந்தியத் தீவுகள் வரை யிலும் சென்றுவிட்டது. அங்கெல்லாம் எதிரிக் கப்பல்களை எல்லாக் காலத்திலும் ஊன்றிக் கவனிக்கவேண்டியதாயிற்று. அதற்காகப் பல கடற்கண்ணிகளையும் போர்க் கப்பல்களையும் அங்கு வைத் திருக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சர்ச்சிலின் செல்வாக் கினுல் ஃபிஷர் என்பவர் கடற்படைக் காரியாலயத்திற்கு முதல் பிரபு என்ற பதவியைப் பெற்ருர். அவருடைய முயற்சியால் புதிய கப்பல்களைத் தோற்றுவிக்கும் திட்டமொன்று உருவாக்கப் பட்டது. அத் திட்டத்திற்குப் பின்பு, டிரெட்நாட் மாதிரியான போர்க் கப்பல்கள் மிகவும் அதிகமாக நிர்மாணிக்கப்பட்டன. அத்துடன் சப்மரின்கள், நாசகாரிக் கப்பல்கள் ஆகியவை இன் னும் அதிகரிக்கப்பட்டன.

நல்லதற்கோ, அல்லது கெட்டதற்கோ, போர்க் காலத்தில் மற்ெருரு தன்மையையும் காணமுடிந்தது. ஜனநாயக காலத்தில் நீண்டகாலம் போர் நிகழும்பொழுது மக்கள் தியாகம் செய்வ தற்கு ஆர்வமுடையவர்களாக இருத்தல்வேண்டும். அதற்கு மக்க ளுடைய அபிப்ராயமே சாதகமாக உருவாக்கப்பட்டால்தான் ஆர்வமும் நீடித்து நிற்கமுடியும். இதற்கு முன்பு இம் மாதிரிச் சமயங்களில் பிட், கேனிங் ஆகியவர்களின் சொற்பொழிவுகளும் அல்லது நெப்போலியனின் அறிக்கைகளும் மக்களிடையே ஆர்வத்தைத் தூண்டின. ஆனுல், இந்தப் போர்க்காலத்தில், அப் பிரசாரத்தைப் பத்திரிகைகளும், அரசாங்கமுமே மேற்கொண் டன. பத்திரிகை அதிபர்கள் புதிய உணர்ச்சி பெற்றிருந்தனர். எப்பொழுதுமே இதைப்போன்ற உணர்ச்சியைப் பத்திரிகை களில் பார்த்தது கிடையாது. இது சில சமயங்களில் கெடுதி யாகவுங்கூட இருந்தது. உதாரணமாக, ஹால்டேன் என்பவரை ஜெர்மனிக்குச் சாதகமாகப் பரிந்து பேசுகிறவர் என்ற காரணத் தைக் காட்டிப் பதவியை விட்டு விலகுமாறு பத்திரிகைகள் செய் தன. அதைப்போலவே, கடற்படையின் முதற் பிரபுவான பேட்டன்பர்கைச் சேர்ந்த லூயி என்பவரை ஜெர்மன்காரர் என்று கூறிப் பதவியைவிட்டு விலகச் செய்தன. இப்

பிரசாரத்தை அரசியல்வாதிகளும் பல தளபதிகளும் மற்றும் பல அரசாங்கத் துறைகளுங்கூடப் பயன்படுத்தின. சமாதானத்தைப் பேசும் காலத்தில், இப் பிரசாரத்தால் சில தீமைகளும் விளைந்தன.

நாம் நமது நாட்டிற்காகமட்டுமன்றி, மற்றச் சிறு நாடுகளுக்காகவும் அவைகளின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகவும் போரிடுகின்றோம் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. போர் நீடித்து நடக்கும்பொழுது பிரிட்டனின் இந்த லட்சியம் நன்கு உணரப்பட்டது. இதனால் 1914-ல் பட்டாளத்திற்கு ஆள் சேர்க்குமிடங்களிலும் மக்கள் ஆர்வத்துடன் குழுமினர். இராணுவமயமல்லாத இந்த நாட்டிலுங்கூட மூன்று மில்லியன் தொண்டர்கள் சேர்ந்தனர். இவ்விதமான தியாக மனப்பான்மையும் இலட்சியமும் அமெரிக்காவையுங்கூடப் போரில் ஈடுபடச்செய்தது. அந்த நாடு கிழக்கில் தனது முழுபலத்தையும் திரட்டி, 1919ஆவது ஆண்டுடன் போரின் சில தீய விளைவுகளை அகற்றி ஒரு நல்ல உலகத்தை உருவாக்க முனைந்தது.

நான்கு வருடப் போரை, இரண்டு தெளிவான கட்டங்களில் வைத்துப் பார்க்கலாம். டிசம்பர் 1916 முதல் 1917 இளவேனிற் காலம் வரையிலும் ஆஸ்குவித் ஆட்சிக்குப் பதிலாக லாயிட் ஜார்ஜின் ஆட்சி நிகழும்பொழுதும் ரஷ்யாவில் புரட்சி நிகழும்பொழுதும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போர் தொடுக்கும்பொழுதும் எனப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். ஆனால், ஒவ்வொரு கூட்டத்தினையும் பல பருவங்களாகவும் இடர்ப்பாடுகளையுடையனவாகவும் நிகழ்ச்சிகள் நிறைந்தனவாகவும் பிரித்துக் கொள்ளவேண்டும்.

இவற்றில், முதல் கட்டம் 1914-ல் முடிவடைந்தது. ஃபிரான்சுக்கு நான்கு தரைப் படைகளையும், ஒரு குதிரைப் படையையும் உடனடியாக அனுப்பிவைக்கவேண்டியிருந்தது. இந்த ஆலோசனையை ஏற்கெனவே ஹால்டேன் கூறியிருந்தார். அவருடைய அபிப்பிராயத்தை இப்பொழுதுதான் புரிந்துகொண்டனர். அவர்களுக்கு நல்ல இராணுவப் பயிற்சியும், துப்பாக்கிச் சுடும் பயிற்சியும் இருந்தது. அப்பேர்பட்டவர்களைத்தான் அனுப்பினர். அடுத்த மே மாதத்திற்குள் முன்னணிக்கு 90,000 பேரிலிருந்து 600,000 பேருக்குப் படைவீரர்களின் தொகையை அதிகரித்தனர், ஆனால், இந்தப் படைக்கு உடனடியாகவே தோல்வி ஏற்பட்டது.

ஜெர்மானியரின் திட்டத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாது ஃபிரெஞ்சுப்படை மிகவும் துரிதமாக வடகிழக்கில் முன்னேறிவிட்டது. 22ஆம் தேதி ஆகஸ்டு மாதத்திற்குள் பிரிட்டிஷ் படை

மான்ஸ் (Mons) என்ற இடத்தில் அணிவகுத்து நின்றது. 1½ மில்லியன் படைவீரர்கள் கொண்ட ஜெர்மன் துருப்புகள் மேற்குநோக்கிச் சூழ்ந்துவந்தன. இதனால் நேசநாட்டுப்படைகள் பாரிஸின் இரு திசைகளிலும் சிதறி ஓடின. அதே சமயத்தில் ஜெர்மன் படைகள் கிழக்கிலிருந்தும் துரிதமாக முன்னேறின. ஒவ்வொரு நாளும் பிரிட்டிஷ் படை பின்வாங்கிக் கொண்டே சென்றது. இந்தப் படையும் கடைசியில் ஜெர்மன் துருப்புக்களால் சூழப்பட்டிருக்கும். ஆனால், நல்ல சமயத்தில் லெ கேட்டயூ (Le Cateau) என்ற இடத்தில் வைக்கப்பட்டிருந்த ஸ்மித்-டோரியன் (Smith-Dorrien) என்பவருடைய இரண்டாவது படையில், பிரிட்டிஷ் படை தப்பித்து, மேர்னேவுக்கு (Marne) பின்னடைந்தது. நமது தளபதியான ஃபிரெஞ்சு, ஸீயனைக் (Seine) கடந்து லாய்ர் பகுதியில் இராணுவதளத்தை அமைத்துக்கொள்ள கிட்சனருங்கூடத் தடை செய்யவில்லை.

ஜெர்மன் இராணுவத் தளபதியான மால்ட்க் (Moltke) என்பவரின் பிடிப்புத் தளர்ச்சியாலும், மற்றும் அவருடைய தளபதிகளின் தவறுகளாலும் ஃபிரெஞ்சுக்காரர்கள் முறியடிக்கப்படாமல் தப்பித்துவிட்டனர். இல்லாவிடில் பாரிஸ் நகரம் வீழ்ந்திருக்கும். ஒருசமயம், போரில் நேசநாடுகளுக்குத் தோல்வியே ஏற்பட்டிருக்கும். அவர்கள் செய்த தவறுகளால், ஜாஃப்ரேவுக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. செப்டம்பர் 6 முதல் 13 வரை மேர்னே போர்க்களத்தில் நடந்த போர், உலகத்தின் தலைவிதியை நிர்ணயம் செய்யும் மிகவும் முக்கியமான போரெனக் கருதப்படவேண்டும். பிரிட்டிஷ் படைக்கான வெற்றி என்று கூறுவிடிலுங்கூட, ஜெர்மானியப் படை ஏய்ன் (Aisne) வரைவிரட்டி அடிக்கப்பட்டனர். இதனால் நேசநாடுகளின் போர் முனை செப்பனிடப்பட்டது. மேலும், ஜெர்மானியர்கள் கால்வாய்த்துறைமுகங்களைக் கைப்பற்ற முடியவில்லை. ஆன்ட்வர்ப்பில் அவர்கள் முழுமூச்சுடன் போரிட்டனர். இந்தப் போரில் சர்ச்சில் ஒரு சிறிய பிரிட்டிஷ் படையை முன்னின்று நடத்திச் சென்றார். எஞ்சியிருந்த பெல்ஜியன் படைவீரர்களை மிகவும் பாதுகாப்பாக எஷர் (Yser) என்ற இடத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தனர். அதே சமயத்தில் பிரிட்டிஷ் படை ஒன்று யெப்ரசைக் (Ypres) கைப்பற்றியது. இங்கே, அக்டோபர், நவம்பர் மாதங்களில், ஜெர்மன் படையினர் மிகவும் அதிக எண்ணிக்கையுடன் வந்து தாக்கினர்; யெப்ரஸின் முதல் போரில், பிரிட்டிஷ் படையில் பாதி அழிந்துவிட்டது. ஆனால், கால்வாய்த் துறைமுகங்கள் காப்பாற்றப்பட்டன. அந்தப் படையும் கடலை அடைந்துவிட்டது.

கிழக்குப் பகுதியிலும் போர் மும்முரமாக நடந்தது. ஃபிரெஞ்சுக்காரர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, கிழக்குப் பிரஷ்யாவில் ரஷ்யர்கள் தாக்குதல் நடத்திக்கொண்டிருந்தவர்களை ஜெர்மானியர் விரட்டி அடித்தனர். இதனால், ரஷ்யர்களுக்குப் பலத்த சேதம் ஏற்பட்டது. ஆனால், ஆஸ்திரியர்களை, ரஷ்யத் துருப்புகள் கார்ப்பேதியன் வரையிலும் விரட்டி அடித்தன. ஆனால், மேற்குப் போர்முனையில், நீண்ட தூரத்திற்கு அகழிகளும் அரண்களும், பெல்ஜியம் கடற்கரையிலிருந்து ஃபிளாண்டர்ஸ் மணல் வெளிவரையிலும் அமைத்திருந்தனர். இந்த அரண்களும் அகழிகளும், மத்திய ஃபிரான்சிலும் ஆர்கான் காடுகளிலும், லோரேய்ன், அல்ஸாஸ் குன்றுகளிலும், சுவிட்சர்லாந்து வந்தடையும் வரையிலும் போடப்பட்டிருந்தன. இப் பகுதிகளில் மூன்று ஆண்டுகள் வரையிலும் பிரிட்டிஷ் படைபலத்திற்கு மிகுந்த சோதனைக்காலமாக இருந்தது. அப் படையினர் பல தொல்லைகளை அனுபவித்துவிட்டனர்.

1915ஆவது ஆண்டுமுழுவதிலும் இடைவிடாது இப் பகுதியில் போர் நடைபெற்றது. மார்ச் மாதத்தில் நிவி செப்பலேயிலும் (Neuve Chapelle), ஏப்ரல் மாதத்தில், இரண்டாவது யெப்ரஸ் போரும், மே மாதத்தில் ஃபெஸ்டுபெர்ட் (Festubert) போரும், செப்டம்பரில் லூஸ் (Loos) என்ற இடத்தில் நடந்த போரிலும், ஆர்டாய்ஸ் என்ற இடத்திலும், பிரிட்டிஷ் படை, ஃபிரெஞ்சுப் படையுடன் கலந்து போரிட்டன. தவிர ஃபிரெஞ்சுத் தாக்குதல், இன்னும் தெற்கேயும் பரவியிருந்தது. ஆனால், இப் போர்களில் அவர்கள் வெற்றியே காணமுடியவில்லை. இந்த ஆண்டுமட்டும், 300,000 பேர் நேசப்படையில் அழிந்தனர். லூஸ்போரில் மட்டும் 60,000 பேர் உயிரிழந்தனர். அனுபவமற்ற படையைச் செலுத்தியதால் இவ்வளவு சேதங்கள் ஏற்பட்டுவிட்டன. இதற்குப் பிறகு ஃபிரெஞ்சுக்காரர்களிடமிருந்து படை செலுத்தும் பொறுப்பை சர் டக்ளஸ் ஹெய்க் (Sir Douglas Haig) என்பவரிடம் ஒப்படைத்தனர்.

ஒரு பிரதம தளபதிப் பொறுப்பை ஏற்று நடத்த ஃபிரெஞ்சுக்காரர்களுக்குப் போதிய சமநிலை கிடையாது. குறிப்பாக, ஒரு சிறிய நேசநாட்டுப் படையைச் செலுத்துவதில், அவர்களுக்கு அனுபவம் போதாது. ஆனால், இவர்களுடைய தோல்விகளுக்குத் தனிப்பட்டவர்களுடைய தவறுகளைத் தவிர, வேறுபல காரணங்களையும் கூறலாம். ஃபிரான்சில் உள்ள தொழிற்சாலைகள் மிகுந்த பகுதிகளில் ஜெர்மானியர் ஆக்கிரமிப்புச் செய்திருந்தனர். அவர்களை எப்படியாவது காலதாமதம் செய்து

விரட்ட வேண்டுமென்று ஃபிரெஞ்சுப் படையினர் போர்த் தந்திர மாகவே பின்பற்றினர். ஆனால், நாம் சில சமயங்களில், நம்முடைய முடிவுகளுக்கும் மாறாகவே போரிடவேண்டிய தாயிற்று. எடுத்துக்காட்டாக, ஹேய்க் ஆட்சேபணையையும் நாம் பொருட்படுத்தாது, லூஸ் (Loos) போர்க்களத்தில் போரிட்டோம். இவைகளுக்கெல்லாம், கிட்சனரும் (Kitchener) ஒருவகையில் பொறுப்பானவர் என்றே கூறவேண்டும். அவர் மக்களுடைய வேண்டுகோளுக்கேற்ப இராஜாங்கக் காரிய தரிசியாக நியமிக்கப்பட்டார். அவர் மக்களுடைய நன் மதிப்பைப் பெற்றிருந்தார். மேலும், நாட்டிற்கு அவர் புரிந்த சேவைகள் ஏராளமானவை. ஆனால், அவருக்கு அமைச்சர் பொறுப்பும், பிரதம தளபதிப் பொறுப்பும் கொடுக்கப்பட்டன. இரண்டையும் அவர் செய்யும்பொழுது, சில சமயங்களில் அதிகாரத்தை அதிகமாகத் தன்கையிலேயே வைத்துக்கொள்ள விரும்பினார். அவருக்குக் கேபினட் அரசாங்கத்தின் ஆட்சிமுறை சரியாகப் பிடிபடவில்லை. ஏனெனில், அவருடைய பெரும் அனுபவம் கிழக்கத்திய நாடுகளிலேயே பணியாற்றியதிலிருந்து கிடைக்கப்பெற்றதேயாகும். மேலும், முழு அளவில் போரிடு வதற்கு மக்களுடைய உதவியும் ஆதரவும் மிகவும் அவசியம் என்பதை அவர் உணரவில்லை.

எதிரிகளிடமிருக்கும் யுத்த தளவாடங்களைப்போல நம்மிடம் இல்லை. முதலில் பல தோல்விகள் அடைவதற்கு இதுவே பெரிய காரணமாகும். நமது காலாட்படையின் ஒவ்வொரு பகுதிக்கும் முதலில் இரண்டு இயந்திரத் துப்பாக்கிகள் வீதமே கொடுக்கப் பட்டன. நமது பீரங்கிப் படையிடம், எதிரிகளின் அகழிகளையும் வேலிகளையும் அழிக்கவல்ல சக்திமிக்க வெடி மருந்துகள் இல்லை. நம்மிடம் அதற்கான பெரிய துப்பாக்கிகளோ, அல்லது சாதனங் களோ மிகவும் குறைவாகவே இருந்தன. முதலில் இந்த யுத்த தளவாடங்களையெல்லாம் அதிகரித்துக்கொள்ளவேண்டுமென்ற அவசியம் ஏற்பட்டது. ஃபிரான்சுங்கூட இந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டது. நமது ஆயுத உற்பத்திக் கிடங்கில் புதிய யுத்த தளவாடங்களை உடனடியாக உற்பத்தி தொடங்கப்பட வில்லை; மிகவும் காலம் கடந்தே, இப் புதிய தளவாடங்களை உற்பத்தி செய்ய முன்வந்தனர். உற்பத்தி செய்வதற்கும் தொழிற்சங்கங்கள் பல முட்டுக்கட்டைகளைப்போட்டு, உற்பத்தி யைப் பெருக்குவதற்குத் தடைசெய்தவண்ணமாக இருந்தன. நார்த்கிளிப் போன்றவர்கள் பத்திரிகைகளில், நமது ஆயுத உற்பத்தி, போதிய தேவைகளுக்கு இன்னும் ஐந்தில் ஒரு பங்கு தான் உற்பத்தி செய்யப்படுகின்றது என்று கண்டித்தனர்.

ஆனால், கோடைகாலத் துவக்கத்தில், நமது யுத்த தளவாட உற்பத்தியுங்கூட, முன்பிருந்ததைவிட இருபது மடங்கு அதிக மானது என்றே கூறவேண்டும். இவ்வளவு தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தனியாக யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்ய ஒரு மந்திரியே பொறுப்பேற்றுக்கொண்டார். ஜுன் மாதத்தில் லாயிட் ஜார்ஜே அந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். ஆனால், 1915-ல் நடைபெற்ற படையெடுப்பிற்கு, இம் முயற்சிகள் எந்தப் பயனையும் அளிக்க முடியவில்லை. ஏனெனில், அதிகக் காலதாமதம் ஏற்பட்டுவிட்டது.

மேற்குப் போர் முனையில் இதனால் பெரிய முட்டுக்கட்டை ஏற்பட்டது. போதிய யுத்த தளவாடங்கள் இல்லையென்ற குறை இருந்துவந்தது. ரஷ்யாவில் இந்தக் குறை இன்னும் அதிகமாகவே இருந்தது. இதன் விளைவாக, நேசநாடுகளின் ஆலோசனைக் குழுவில் அடிக்கடி மோதல் ஏற்பட்டது. இந்தக் குறை ஃபிரான்சை மிகவும் பாதித்தது. பகைவர்களின் படை பாரிஸ் நகரத்திற்கு அறுபது மைல் தூரத்தில் முன்னேறிக் கொண்டிருந்தது. ஃபிரான்சின் வளம்மிக்க இரும்பு, நிலக்கரி உற்பத்தி செய்யும் பகுதிகளை எதிரிப் படைகள் ஆக்கிரமித்துக் கொண்டன. அதனால், மேற்குப் போர்முனையில் மிகவும் தீவிர மான போர் முயற்சிகளில் ஈடுபட்டாகவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. பழைய முறைப்படி, முக்கியமான போர்முனை யிலேயே நமது போர்வீரர்கள் தங்களுடைய முழுக் கவனத்தை யும் செலுத்திவந்தனர். மேலும், அந்தப் போர்முனையில், இப் பொழுது புதிய அபாயம் வேறு காத்துக்கொண்டிருந்தது. ரஷ்யா தோற்றுவிட்ட பிறகு, அதிக அளவில் ஜெர்மன் போர் வீரர்கள் அந்தப் போர்முனைக்கு வந்து குவிந்தவண்ணமிருப்பர் என்று நன்றாகத் தெரிந்தது. இதன்படி நடந்தால், பிரிட்டன் மீது படையெடுப்பதும் சாத்தியமாகும் அளவில் இருந்தது. ஆனால், நமது தீவுகளைத் தாக்க எதிரிகளுக்குக் கடற்படைதான் அதிகமாகத் தேவைப்பட்டது. தரைப்படையில் அவ்வளவு வலிமை மிக்க தாக்குதல் செய்யமுடியாதென்ற நம்பிக்கையும் இருந்தது. அத்துடன், பகைவர்களை இந்த மேற்குப் போர்முனை யில் முழுக்கவனத்தையும் செலுத்திப் போரிடுவதைவிட, ஜெர் மனியின் பலவீனமான நேச நாடுகளைத் தாக்கினால் நல்லதென்று அபிப்ராயம் கூறப்பட்டது. ஜெர்மனியின் தீவுகளைக் கைப்பற்ற வும், பால்டிக் நாடுகளைத் தாக்குவதும், நல்ல போர் முறை யாகும் என்ற ஃபிஷரின் அபிப்ராயம் மிகவும் ஆபத்தானது என்று கருதப்பட்டது. ஆனால், ஜனவரி 1915ஆவது ஆண்டில்கூட, லாயிட் ஜார்ஜ் பால்கன் பகுதியைத் தாக்குவதையே முதலில்

வற்புறுத்தினர். அதன்வழியாகத்தான் ஆஸ்திரியாவின் பின் புறம் செல்ல முடியும் என்று அவர் கருதினர். சர்ச்சில் ஏற்கெனவே டார்டனல்ஸ் பகுதியைத் தாக்கவேண்டுமென்று கூறினர். அதனல் மேற்குப் பகுதியில் தாக்குவதா அல்லது கிழக்குப் பகுதியில் தாக்குவதா என்ற கருத்து வேற்றுமை அவர்களிடையே இருந்துவந்தது. ஃபிரான்சுக்கும் பிரிட்டனுக்கும், அல்லது குடி மக்களுக்கும் போர் வீரர்களுக்கும் இருந்த மன வேறுபாடுகளைப் போல இந்தப் பிரச்சினையிலும் இருந்தது.

துருக்கி, போரில் ஈடுபட்டபிறகு, இத்தாலியை நேச நாடுகள் பக்கம் எப்படியும் இழுத்துக்கொள்வதென்ற நம்பிக்கை இருந்தது. இத்துடன், கிரீஸ், ருமேனியா ஆகிய நாடுகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அவர்கள் விரும்பினர். மேலும், பல்கேரியா பகைவர்கள் பக்கம் சேராவண்ணம், தடுக்கவேண்டுமென்று எச்சரிக்கையாக இருந்தனர். இதனல் டார்டனல்ஸ் பகுதியிலிருந்து தாக்குதலை ஆரம்பிக்கும் அபிப்ராயத்திற்கு நல்ல ஆதரவு கிடைத்தது. தவிர, ரஷ்யா நேச நாடுகளிடம் துருக்கியின்மீது தாக்குதலை நடத்தவேண்டுமென்று வேண்டிக்கொண்டது. முதலில் இப் பகுதிகளில் போரிடுவதென்பது, பகை நாடுகளுக்கு ஒரு திருப்பத்தை ஏற்படுத்த வேண்டுமென்றுதான் கருதி ஆரம்பித்தனர். ஆனல், நாளடைவில், அப் பகுதிகளிலேயே பெரிய அளவில் படையெடுப்பு எடுக்க வேண்டியநிலை ஏற்பட்டுவிட்டது. இதனல், பால்கன் நாடுகளின் பலதரப்பட்ட கொள்கைகளிடையே சிக்கிக்கொள்ளவேண்டியதாயிற்று. இந்தப் படையெடுப்பிற்கு கிரேக்கர்களின் உதவி மிகவும் அவசியமாகத் தேவைப்பட்டது. ஆனல் ரஷ்யர்கள், கிரேக்கப் படையைப் பயன்படுத்த விரும்பவில்லை. அதனல் ரஷ்யர்களைச் சமாதானம் செய்யும் முறையில் போருக்குப் பிறகு, கான்ஸ்டான்டிநோபிளை ரஷ்யர்களுக்கே கொடுத்துவிடுவதாக, எதிர்க் கட்சியையும் கலந்து ஆலோசனை செய்து ஆங்கிலேய அரசாங்கம் அறிவித்தது. ஆனல், கிரேக்கர்களின் படையைப் பயன்படுத்தக்கூடாதென்று ரஷ்யர்கள் பிடிவாதமாக இருந்தனர். தவிர, இந்தப் படையெடுப்பு இப்பொழுது தேவையில்லாதது என்று கிட்சனரும், மற்ருெரு நோக்கத்தில் ஃபிஷரும் வற்புறுத்தினர். இதற்கிடையே ஒரு சமரசமாக அப் பகுதிகளுக்கு கப்பற்படையையாவது அனுப்பிவைத்தால், சிறிது பயமிருக்கும் என்றும் அவர்கள் கருதினர். அத்துடன் அக் கப்பற்படை கான்ஸ்டான்டிநோபிளுக்குச் செல்லவும் முடியுமென்று கருதினர். ஃபிரெஞ்சு அரசாங்கத்தினரும் கிட்சனரும், படைகளை இங்கு அனுப்புவதற்கு முடியாதென்று அறிவித்தனர். இத்

திட்டம் ஆபத்தானது என்று அவர்கள் கருதினர். ஆனால், இதை ஒரு துணிச்சலான திட்டமாகவே கருதவேண்டுமென்றும் வெற்றி ஏற்பட்டாலும், ஒரு சிறிய படையின் உதவிகொண்டே இப் பகுதிகளில் ஆக்கிரமிப்புச் செய்யமுடியும் என்று கருத்துத் தெரிவிக்கப்பட்டது. தோல்வியுற்றாலும் அதிகச் சேதம் ஏற்பட வழியில்லை என்று கூறினர். மார்ச் மாதக் கடைசியில், கடற் படைமட்டும் அங்குத் தனியாகச் செல்ல முடியாதென்று கடற் படையினர் அறிவித்தனர். அதற்குப் பின்பு, கிழக்கிலிருந்தே படைகள் திரட்ட முடிந்ததால், அப் படைகளைக் கடற்படைக்கு உதவியாக அனுப்பிவைத்தனர். ஏப்ரல் மாதத்தில், ஐயான் ஹேமில்டன் (Ian Hamiiton), கல்லிபோலி (Gallipoli) தீபகற் பத்தைக் கைப்பற்ற ஒரு படையுடன் அனுப்பப்பட்டார்.

திடீரென்று தாக்கிய அதிர்ச்சி விரைவில் தீர்ந்த பிறகு, மீண்டும் நமது படைகள் ஜெர்மானியத் துருப்புக்களால் சூழப் பட்டன. மறுபடியும் தீவிரமாகத் தாக்குதல் நடைபெற்றது. கேப் ஹெல்ஸ் (Cape Helles) மற்றும், தீபகற்பத்தின் தெற்குப் பகுதியில் ஆங்கிலேயப் படைகளும், அதற்கு மேற்குப் பகுதியில் போரிட்டுவந்த ஆஸ்திரேலிய-நியூஸிலாந்துப் படைகள் (Anzac) முன்னேறவே முடியவில்லை. திறந்த கடற்கரைகளுக்கும், நன்கு பாதுகாக்கப்பட்ட குன்றுகளுக்குமிடையே நமது படைகள் அகப்பட்டுக்கொண்டு தவித்தன. அப் படையினரை நோக்கி எதிரிகள் ஓயாமல் சுட்டுக்கொண்டே இருந்தனர். அப் படை யினருக்குப் போதிய வசதிகளுங்கூடக் கிடைக்கவில்லை. குடிக்கத் தண்ணீரும்கூடக் கிடைக்கவில்லை. போர் வீரர்கள் நோயால் பீடிக்கப்பட்டு இறந்தும்விட்டனர். மே மாதத்தில் ஹேமில்டன் அதிகமான போர் வீரர்கள் வேண்டுமென்று கேட்டுக்கொண் டார். ஆகஸ்டு மாதம் வரையிலும் அவர் கேட்டிருந்த உதவிப் படைகள் அனுப்பப்படவே இல்லை. இங்கிலாந்தில் அரசாங்க மாறுதல்கள் ஏற்பட்டதால், இந்தக் காலதாமதம் ஏற்பட்டு விட்டது.

ஆகஸ்டு, 6, 9 தேதிகளுக்கிடையே அவர் கடைசி முறையாக இருபுறத் தாக்குதல் ஒன்றை நடத்தினார். ஆஸ்திரேலியா, நியூஸிலாந்துத் துருப்புகளும் இத் தாக்குதலில் கலந்துகொண் டன. அத்துடன் வடபுறத்தில் சுவ்லா விரிகுடாவில் (Suvla Bay) இறங்குவதென்றும் திட்டமிட்டிருந்தார். ஆனால், ஏதோ சிறிய தவறு நேர்ந்துவிட்டதால், அவருடைய திட்டம் வெற்றிபெற முடியவில்லை. இத் திட்டம் வெற்றிபெறாததற்குக் காரணமாக இருந்தவர்கள், அவருடைய திறமையற்ற தளபதி

கள் என்றே கூறலாம். இப் போரில், ஆங்கிலேய விவசாயிகள் பேரளவில் ஈடுபட்டிருந்தனர். அவர்களில் பாதிப் பேராவது இப் போரில் அழிந்திருப்பர். இதற்குள் ரஷ்யர்கள் போலந்தில் தோற்றுவிட்டனர். பல்கேரியா தாக்குவதற்குத் தயாராக இருந்தது. ஃபிரான்சில் பெரிய போர் ஏற்படுகின்ற சூழ்நிலை இருந்தது. அதனால் ஃபிரான்சும் எதிரிகளைக் கிழக்கில் தாக்கு வதென்று முடிவுசெய்து ஸலோனிக்காவில் (Salonica) போரிட முற்பட்டது. இதுவரையிலும் அங்குக் கொடுமையாக வெயில் அடித்துக்கொண்டிருந்தது மாறி, இப்பொழுது ஒரே புயலும் பனியும் அடித்தன. ஃபிரான்சில் இருந்ததைப் போலவே, இங்கும் போர்க் கருவிகள் போதவில்லை. இந்தச் சமயத்தில் ஜெர்மன் சப்மரின்கள் மத்தியதரைக் கடலை நெருங்கிக்கொண் டிருந்தன. கிட்சனர் விஜயத்திற்குப் பிறகு, இப் பகுதியிலிருந்து வெளியேறிவிடுவதென்று முடிவு செய்யப்பட்டது. அதிர்ஷ்டவச மாக, டிசம்பர் மாதத்திலேயே அப் பகுதியைவிட்டு நேசப்படை கள் வெளியேறின. இதை ஓர் அதிசயமான சாதனையென்றே கருதவேண்டும். அவர்களுக்கு இதில் எவ்விதமான சேதமும் ஏற்படவில்லை. இதற்குப் பதிலாக, கிட்சனர் இதற்கு அருகி லுள்ள அலெக்சாண்டிரிட்டாவில் (Alexandretta) படையுடன் பிரவேசிப்பதென்று ஆலோசனை கூறினர். ஆனல், ஃபிரெஞ்சு அரசாங்கம் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. பல இராணுவத் தளபதிகள் ஆலோசனை கூறியுங்கூட நமது அரசாங்கம் ஸலோனிக்காவிற்குப் படையை அனுப்பிவைத்தது.

கல்லிபோலியில் நடந்த விளைவுகளைக்காட்டிலும் அதிக அளவில் விளைவுகள் துருக்கியுடன் தொடுத்தபோரில் ஏற்பட்டன. துருக்கியுடன் போர் தொடுத்ததால், பேரரசுடன் தொடர்பு வைத்திருக்கும் எல்லாக் காலனிகளுக்கும் மிகவும் முக்கியமான தொரு சூயஸ் மார்க்கத்தைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு வேறு புதிதாக ஏற்பட்டுவிட்டது. இதனுல் எகிப்தை ஆங்கிலேய ஆதிக்கத்திற்குள் கொண்டுவரவேண்டிய கட்டாயமும், பின்பு அதையொட்டி ஓர் அறிக்கையையும் ஆங்கிலேயே அரசாங்கம் விடுவித்தது. தவிர, கிட்சனரின் ஆலோசனையின்பேரில் துருக்கியர்களை எதிர்த்து அரேபியர்களைத் தூண்டிவிடும் முயற் சியும் செய்யப்பட்டது. அதற்கேற்ப ஜெர்மானியர்களும், ஆசியாவிற்குச் செல்லும் எல்லாவழிகளையும் கைப்பற்றவும் பின்பு, இந்தியாவில் ஒரு கிளர்ச்சியைத் தூண்டிவிடவும் திட்ட மிட்டனர். இந்தச் சூழ்நிலையில் 1915-ல் மெஸபடோமியாவில் வேறு போர் தொடுத்தனர்.

போருக்கு எண்ணெய்வேண்டியிருந்ததால், பாரசீக வளைகுடாவைக் கைப்பற்றினர். இந்திய அரசாங்கம் 1914ஆம் ஆண்டிலேயே ஒரு படையை அனுப்பி பஸ்ராவைக் கைப் பற்றியது. 1915-ல் ஆங்கிலேயத் துருப்புகள் டைகரிஸ், யூப் ரடிஸ் பகுதிகளில் விரைவாகவே முன்னேறின. இந்த வெற்றி யால் நமது படைவீரர்கள் நல்ல நம்பிக்கை அடைந்திருந்தனர். செப்டம்பர் மாதத்தில் தளபதி டவுன்ஷெண்ட் 300 மைல் வரை யிலும் அப் பகுதியின் உள்ளே பிரவேசித்துக் குட் எல் அமாரா (Kut el Amara) என்ற இடத்தை வந்தடைந்தார். அக்டோபர் மாதத்தில், கிட்சனரின் ஆலோசனையைக் கேபினட் புறக்கணித்து விட்டு, பாக்தாத்மீது படையெடுப்பதை அனுமதித்தது. டார்ட னல்லசை அடைவதற்குப் பதிலாக இப் பகுதியைக் கைப் பற்றுவது இலாபமாகத் தோன்றினாலும், இந்த முயற்சியில் அதிக அபாயம் இருந்ததையும் காணவேண்டும். இராணுவப்படை யெடுப்புகள் செய்வதற்கு இப் பகுதி சரியானதன்று. இந்தியா அதனுடைய நல்ல துருப்புகளை அனுப்பிவைத்தது. அதனுடைய துருப்புகள், மற்றும் பிரிட்டனுடைய துருப்புகள் ஃபிரான்சிற்கும் எகிப்திற்கும் அனுப்பிவைக்கப்பட்டன. இந்தியாவிற்கு நல்ல கடற்படை இல்லாததால், அனுப்பிவைக்கவில்லை. செடீஸ்பான் (Ctesiphon) என்ற இடத்தில் தளபதி டவுன்ஷெண்ட் தோற் கடிக்கப்பட்டுப் பின்வாங்கினார். அவர் பின்வாங்கிச் சென்று கொண்டிருக்கும்பொழுது குட் (Kut) என்ற இடத்தில் அவரு டைய படைகளைச் சூழ்ந்து கொண்டனர். பின்பு ஏப்ரல் 1916-ல் அவர் சரண் அடைந்தார். அவர் உதவிபெற எடுத்துக்கொண்ட முயற்சிகளெல்லாம் பயன் அளிக்கவில்லை. நமக்கு ஏற்பட்ட சேதங்கள் மிகவும் அளவுகடந்தவை. நமக்கு வேண்டிய மருத் துவச் சேவைகள் அனைத்தும் பாழடிக்கப்பட்டன. காயம் பட்ட வர்களுடைய துயரத்தை, இதுவரையிலும் மேற்கில் அவ்விதமாக யாரும் கண்டிக்கமுடியாது.

ஸலோனிக்காமீது படையெடுத்தது எந்தப்பயனையும் அளிக்க வில்லை. அதற்குப் பதிலாக, ஸெர்பியா முழுவதும் 1916 துவக் கத்தில் அழிக்கப்பட்டது. மான்டிநிக்ரோவும் கைப்பற்றப் பட்டது.

இத் தோல்விகளால், ஆஸ்குவித் அரசாங்கம் நீடித்து அதிகாரத்தில் இருக்கமுடியவில்லை. பழைய பிரச்சினைகளில் குழப்பமடைந்ததைத் தவிர, புதிய குழப்பங்களையும் தோற்று வித்தனர். ஏதாவது தவறுகள் நேர்ந்துவிட்டதால், கட்சி களுக்குள்ளேயே சமரசம் ஏற்படும் என்று ஆளும் கட்சியினர்

எதிர்பார்ப்பது தவறு. மே 1915-ல் பல குறைபாடுகள் காணப் பட்டன. எறிகுண்டுகள் போதிய அளவிற்குக் கிடைக்கவில்லை. மேற்குப் போர்முனையில் பலத்த தோல்விகள் ஏற்பட்டன. கிட்சனர் வேறு போர் முறைகளைக் கண்டித்தார். போரில் தோல்வி அடைந்துவிட்டதாகவே லாயிட் ஜார்ஜ் உறுதியாக நம்பினார். இந்தச் சூழ்நிலையில் ஃபிஷர் ராஜிநாமா செய்தார். அவர் டார்டனல்ஸிற்கு (Dardanelles) அதிகக் கப்பல்களை அனுப்ப முடியாதென்று கூறிவிட்டே ராஜிநாமா செய்தார். புதிய கூட்டுமந்திரிசபை டிசம்பர் 1916 வரை நீடித்தது. அந்த மந்திரிசபையில், ஆஸ்குவித், கிரே, கிட்சனர் அப்படியே பதவி யில் நீடித்தனர். ஆனால்,அக் காலச் சூழ்நிலைக்கேற்ப, ஹால்டேன் இந்த மந்திரிசபையில் இடம் பெறவில்லை. சர்ச்சிலுக்குச் சிறிய பதவியே அளித்து வைத்துக்கொண்டனர். போனர் லாவின் (Bonar Law) யூனியனிஸ்டுக் கட்சியினர், பல்ஃபோர், கர்ஸன், கார்ஸன் ஆகியோரின் திறமையில் நம்பிக்கை வைத்தனர். தொழிலாளர் கட்சியின் பிரதிநிதியாக ஆர்தர் ஹெண்டர்சன் (Arthur Henderson) பதவியில் அமர்த்தப்பட்டார். தொழி லாளர் கட்சியின் ஆதரவு போருக்கு எப்பொழுதும் இருந்தது. ஆனால், இக் கட்சிப் பிரதிநிதியை, ராம்ஸே மேக்டொனல்டு (Ramsay MacDonald), ஸ்நோடன் (Snowben) ஆகியோரின் கீழுள்ள ஒரு சிறுபான்மையினர்மட்டும் அங்கீகரிக்க மறுத் தனர். தவிர, இந்தக் கூட்டு மந்திரிசபை ஒரு தோல்வியே என்பது நன்குணரப்பட்டது.

அந்தக் கேபினட்டில் இருபத்தைந்துபேர் பதவி வகித்தனர், அதனால் இந்த மந்திரிசபை அளவுக்கு மீறிய பெரிய சபையாகவே இருந்தது. லிபரல்கள் கையில்தான் எல்லா முக்கியமான பதவிகளும் இருக்கின்றனவென்று யூனியனிஸ்டுகள் குறைபட்டுக் கொண்டனர். லிபரல் கட்சியின் சில கருத்துகள் போர் நடவடிக்கைகளைப் பாதித்தன. ஆஸ்குவித் மிகவும் எச்சரிக்கை யாகப் போர் நடவடிக்கைகளைச் செய்தது சில சமயங்களில் கால தாமதத்தை ஏற்படுத்திவிட்டது. அவருக்கு விளம்பரம் பிடிக் காது. அவர் நண்பர்களிடம் தன்மையாகப் பழகுகிறவர். அவர் களிடம் அதிக விசுவாசம் உடையவர். அதைப்போலவே போர்க் களத்தில் பணிபுரிகின்ற தளபதிகளிடமும் அன்பாகப் பழகு கிறவர். இதைப்போன்ற நல்ல குணங்களை உடையவருக்கு, நாட் டிற்கு நேர்ந்த இந்த நெருக்கடியான நிலைமையைச் சமாளிக்கப் போதிய தகுதியில்லாதவராக இருந்தார். மக்களுடைய அபிப் பிராயத்தை உருவாக்குகின்ற பத்திரிகையாளர்களையும் அவர் நல்லவிதமாகப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. ஸெர்பியா

உதவியற்று அழிந்தபொழுது, கார்ஸன் ராஜிநாமா செய்தார். போர் ஆலோசனைக் குழுவிலிருந்து சர்ச்சில் விலக்கப்பட்டு, வெளி நாட்டிற்கு ஒரு படைத்தளபதியாக அனுப்பப்பட்டார். யூனி யனிஸ்டுகள் விரைவாக முடிவுகளைச் செய்யவேண்டுமென்று கோரினர். அதனுல் போனர் லாவுக்கும் லாயிட் ஜார்ஜுக்கும் ஒரு புதிய நட்புறவு ஏற்பட்டது.

யுத்த தளவாடங்களைத் தயாரிக்கும் அவருடைய பொறுப்பு நல்ல வேகத்தில் நிறைவேற்றப்பட்டு வந்தது. மே 1915-ல் 70,000 எறிகுண்டுகள் தயாரிக்கப்பட்டன. ஆனுல், ஜனவரி மாதத்தில் 238,000 எறிகுண்டுகள் தயாரிக்கப்பட்டன. 1914-ல் 287 இயந்திரத் துப்பாக்கிகள் தயாரிக்கப்பட்டன. ஆனுல்,1916-ல் 33,000 இயந்திரத் துப்பாக்கிகளுக்குமேல் தயாரிக்கப்பட்டது. இவ்வளவு துரிதமான வளர்ச்சியைக் காட்டியபோதிலும் யுத்த தளவாட உற்பத்தித் துறையைப்பற்றிப் பலவித குறைகள் கூறப் பட்டன. துரிதமான தயாரிப்பும் அதிகக் கூலி உயர்வும், தொழிற்சங்கச் சட்ட திட்டங்களில் தளர்ச்சியும், பயிற்சிபெற்ற தொழிலாளர்களிடையே, பயிற்சிபெருத தொழிலாளர்கள் வேலைக்கு அமர்த்தப்படலும், பெண்களை வேலைக்கு அமர்த்தலும், தனிப்பட்டவர்கள் பெறுகின்ற இலாபங்கள் கட்டுப்படுத்த வேண்டுமென்ற தொழிற்கட்சியின் கூக்குரலும், குடிப்பழக்கத் தால் உற்பத்தி பாதிக்கப்படுகின்றதென்ற கருத்தும், எல்லா வற்றையும்விட, கட்டாயச் சேவையும் போன்ற பிரச்சினைகளை அந்த இலாகா கவனிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

கிட்சனர் இராணுவத்தில் எழுபது பகுதிகளைக்கொண்ட படைகளை ஏற்படுத்தவேண்டுமென்ற திட்டமோ, அல்லது போர் செலவினங்களை அனுமதித்தலோ அப்பொழுதுள்ள சூழ் நிலையில் முடியாதென்று லிபரல் கட்சியைச் சார்ந்த அமைச் சர்கள் கருதினர். இவ்விதத் திட்டங்களை ஏற்பதால், தொழில் உற்பத்திக்கு அதிக அழிவு ஏற்பட்டுவிடுகிறதென்று அவர்கள் கருதினர். மேலும், இராணுவத்தில் நிறைய சேதமாக்கப் பட்டது. பட்டாளத்திற்கு வேண்டிய ஆட்களையும், கட்டாய இராணுவச் சேவையின்றி சேர்க்க முடியாத நிலையும் இருந்தது. திறமைமிக்க தொழிலாளர்கள் பட்டாளத்தில் சேர்ந்துவிட்ட தால், யுத்த தளவாடங்களைப் பெருக்கவும் முடியவில்லை. இதைப் போன்ற பல முரண்பாடுகள் அப்பொழுது தீர்க்கப்படவேண்டி யிருந்தன. யுத்த தளவாடங்களைத் தயாரிக்கும் வேலைகளில் இளைஞர்கள் ஈடுபட்டிருந்தார்கள். ஆனுல், பெரிய குடும்பங்

களின் தலைவர்கள் போர்க்களங்களில் சண்டை செய்து வந்தனர். அதேசமயத்தில் போரில் காயமுற்றவர்கள் திரும்பி வந்துகொண்டிருந்தனர். இவர்களை என்ன செய்வது என்ற பிரச்சினையும் பொதுமக்கள் இவர்களை எப்படி நடத்துகிறார்கள் என்ற பிரச்சினையும் அப்பொழுது தோன்றியது.

தொழிலாளர் கட்சியும் லிபரல் கட்சியும் தொடக்கத்தில் கட்டாய இராணுவ சேவையை ஆதரிக்கவில்லை. அதைவிட, கட்டாயமாகத் தொழிற்சாலைகளில் வேலைசெய்யவேண்டுமென்ற நிர்பந்தத்தையும் எதிர்த்தனர். ஆனால், நாளடைவில் இப்படிச் செய்வது மிகவும் அவசியமாகப் பட்டதால், அவர்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டனர். அவர்களுக்கு இவ்விதமான நடவடிக்கைகளில் இருந்த சந்தேகங்கள் மறைந்து விட்டன. கேபினட்டில் கட்டாய இராணுவ சேவை கொண்டு வருவதைப்பற்றிப் பலத்த வேறுபாடான கருத்துகள் நிலவின. 1915-ல் தானாகவே பட்டாளத்திற்கு ஆட்கள் வந்து சேரட்டும் என்று முடிவு செய்தனர். டெர்பி பிரபு பட்டாளத்தில் ஆள் சேர்க்கும் பொறுப்பை மேற்கொண்டு, 18 வயது முதல் 41 வயது வரையில் உள்ள ஆட்களைப் பட்டாளத்தில் சேரும்படி பிரசாரம் செய்தார். சுமார் ஒரு மில்லியன் பிரம்மச்சாரிகள் வரையிலும் பட்டாளத்தில் சேவைசெய்ய மறுத்ததால், இந்தத் திட்டம் கைவிடப்படவேண்டியதாயிற்று. இந்தப் பிரச்சினையைச் சமாளிக்கப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டு, பிறகு தோல்வியே ஏற்பட்டது. ஸைமன், கேபினட்டிலிருந்து ராஜிநாமா செய்தார். பின்பு 41 வயதுக்குட்பட்ட ஆட்கள் பட்டாளத்தில் கட்டாயமாகச் சேவைசெய்ய வேண்டுமென்று, மே 1916-ல் இராணுவ சேவை சட்டம் ஒன்று இயற்றப்பட்டது. ஆனால், இத் திட்டத்தின்படியும், பட்டாளத்திற்கு நிறைய ஆட்கள் சேர்வது தடைபட்டது. ஏனெனில், பல அரசாங்கத் துறைகளில் வேலை பார்க்கின்றவர்களையும், குறிப்பாக யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்கின்ற தொழிற்சாலைகளில் ஈடுபட்டிருப்பவர்களையும், பட்டாளத்திற்கு அனுப்பமுடியாத நிலை இருந்தது. மக்களுக்குச் சரியான நியாயம் வழங்கப்படவில்லை என்ற எண்ணம் இருந்து வந்ததால், போதிய அளவிற்கு இராணுவ சேவை செய்ய ஆட்கள் முன்வருவது தடைபட்டவண்ணம் இருந்தது. மேலும், பலருக்கு இந்தச் சேவை செய்வதிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

அயர்லாந்தின் கிளர்ச்சியும் அரசாங்கத்திற்குப் பெரிய தலைவலியாக இருந்தது. போர் துவங்கும்பொழுது அயர்லாந்திற்குச் சுய ஆட்சி (Home Rule) தருவதாகப் பாராளுமன்றத்தில்

ஒரு சட்டம் இயற்றப்பட்டது. ஆனால், போர் நின்ற பிறகு தான், அந்தச் சட்டம் அமல் நடத்தப்படும் என்று அறிவிக்கப் பட்டது. அதுவரையிலும் அச் சட்டம் நிறுத்தி வைக்கப்பட்டது. அல்ஸ்டர் விவகாரங்களில் தலையிடும்பொழுது பாராளுமன்றத் தைக் கலந்தோசிப்பதாக உறுதிமொழியும் பெற்றுக்கொள்ளப் பட்டது. அயர்லாந்திலுள்ள கத்தோலிக்கர்கள் பெல்ஜியத்தின் விஷயத்தில் மிகவும் அக்கறை காட்டினர். அத்துடன் ரெட் மாண்டும் போர் விவகாரங்களில் அரசாங்கத்திற்கு அனுசரணை யாகத்தான் இருந்தார். அதனால், அவர் பட்டும் படாமலும் இது வரையிலும் பின்பற்றிவந்த நடுநிலைக்கொள்கை கைவிடப்பட்டது. தாற்காலிகமான பிரிவினையை ஏற்றுக்கொள்ளும் அவருடைய கொள்கையைக்கூட, தேசியவாதிகள் பலமாகக் கண்டித்தனர் பல ஐரிஷ்காரர்கள் பட்டாளத்தில் சேர்ந்தவுடன் அவர்களு டைய ஆர்வம் சிறிது குறைந்தது. ஸின் ஃபென் கட்சிக்கு இந்தப் போர் மேலும் கிளர்ச்சி செய்வதற்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. அந்தக் கட்சியினருக்கு ஜெர்மனியின் ஆதரவும் அமெரிக்காவிலுள்ள ஐரிஷ்காரர்களின் பணமும் கிடைத்தது. அதனால் அவர்களுடைய புரட்சிப் படையைப் பெரிதாக்கிக் கொள்ள அவர்களால் முடிந்தது. ஏப்ரல் 1916-ல் ஜெர்மனியி லிருந்து அயர்லாந்திற்கு ஆயுதங்களைக் கொண்டுவர முயற்சி செய் தனர். அந்த முயற்சியில் ஈடுபட்டிருந்த ஐரிஷ் பிரதிநிதியான ரோஜர் கேஸ்மெண்ட் கைது செய்யப்பட்டார். மேலும், ஸின் ஃபென் கட்சியைச் சார்ந்த பதினைந்து தலைவர்கள் கைதுசெய்யப் பட்டனர். ஸின் ஃபென் கட்சியின் புரட்சியும் ஒடுக்கப்பட்டது. கைது செய்யப்பட்ட தலைவர்களைத் தூக்கிலிட்டனர். இதன் விளைவாக அயர்லாந்துப் பிரச்சினையைப்பற்றி மீண்டும் இந்தக் கூட்டு மந்திரிசபை ஒரு சமரச ஏற்பாட்டிற்கு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அயர்லாந்துப் பிரச்சினையில் கேபினட்டில் இரண்டுவிதமான கருத்து வேறுபாடுகள் இருந்தன. இந்த ஏற்பாட்டைச் செய்யும்பொழுது அவர்களுடைய ஒற்றுமையும் சீர்குலைந்துவிட்டது. ஆஸ்குவித்தும் லாயிட் ஜார்ஜும், அயர்லாந்திற்கு, உடனடியாகச் சுய ஆட்சி தருவதாகக் கூறினர். ஆனால், அல்ஸ்டரில் உள்ள ஆறு கவுன்டிகளுக்கு இந்தப் போர்க் காலத்தில் சுய ஆட்சி தர முடியாதென்றும் கூறினர். இந்த ஆலோசனையைக் கார்ஸன், ரெட்மாண்டு ஆகியோர் ஏற்றுக் கொண்டனர். பல்ஃபோர், போனர் லா ஆகியோரும் ஒப்புக் கொண்டனர், ஆனால், இதன் விளைவாக, ஸெல்போர்ன் (Selborne) ராஜிநாமா செய்தார். லேண்ட்ஸோன் இதைப் பலமாகக் கண்டித்துக் கிளர்ச்சி செய்தார்; கன்சர்வேடிவ் கட்சி அமைச்சர்கள் இந்த ரத்து அதிகாரத்திற்குத் தலை குனிந்தார்கள்,

இப் பிரச்சினைகளும் பிளவுகளும் அரசாங்கத்திற்குத் தொல்லைகளைத் தருவதாக இருந்தன. அரசாங்கத்திற்குப் போரை நடத்தும் பொறுப்பே மிகவும் கடினமாக இருந்தது. 1916-ல் ரஷ்யாவும் இத்தாலியும் பல தோல்விகளைப் பெற்றன. ஆங்கிலேயரின் முற்றுகையைச் சமாளிப்பதற்கு முன்பாகவே மத்திய அரசுகள் தங்களுடைய சக்தி முழுவதையும் ஒன்று சேர்த்துப் பலத்த தாக்குதலை ஏற்படுத்திவிட்டால், போர் உடனடியாக முடிந்துவிடும் என்று கருதினர். ரஷ்யா பல தோல்விகளைப்பெற்றுப் பெருத்த குழப்பத்தில் சிக்கிக்கொண்டிருப்பதால், அதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. அதனால், ஜெர்மன் தளபதியான ஃபால்கன்ஹேய்ன் (Falkenhayn) முழுபலத்தையும் திரட்டி வெர்டன்மீது தாக்குதலை நடத்தத் திட்டமிட்டார். இந்தத் தாக்குதலில் அவர்கள் ஊடுருவிச் செல்ல முடியவில்லையென்றாலும், ஃபிரான்சை அழித்துவிட முடியுமென்று அவர் நம்பினார். ஓரளவிற்கு அவருடைய திட்டம் வெற்றி பெற்றதென்றே கூறலாம். ஏனெனில், ஃபிரான்ஸ் முழுவதும் சூழப்பட்டு, பெரிய தாக்குதல்களுக்குள்ளாகியது. பிப்ரவரியிலிருந்து ஜூலை மாதம் வரையிலும் நடந்த இந்தத் தாக்குதல்களில்மட்டும், சுமார் 350,000 பேர் உயிரிழந்திருப்பர் என்று மதிப்பிடப்படுகிறது. இதற்குள் ஆஸ்திரியத் தளபதியான கான்ராட் இத்தாலிக்குள் பிரவேசித்துக் கடுந்தாக்குதலை நடத்தியதால், மீண்டும் ரஷ்யர்கள் தங்கள் முழு பலங்கொண்டும் கடைசி முறையாக ஆஸ்திரியாமீது தாக்கி, அதனுடைய படைகளை அழித்துவிட்டனர். ஆனால், இப்படிச் செய்ததால், ரஷ்யர்களுடைய படைவீரர்களுக்கும் பெருத்த சேதம் ஏற்பட்டுவிட்டது. ரஷ்யத் தளபதியான பிரஸ்ஸிலோவ், ஜூன் மாதத்திலிருந்து ஆகஸ்டு வரையிலும் ஆஸ்திரியப் படைகளைத் தாக்கியதால், ஆஸ்திரியப் படைகளுக்கு நிரந்தரமான சேதம் ஏற்பட்டுவிட்டது. ஆனால், ரஷ்யப் படைகளிடையே போதிய யுத்த தளவாடங்கள் இல்லை. மேலும், அவர்களுடைய நிர்வாகமும் ஊழல் மிகுந்ததாக இருந்தது.

வெர்டனில் எங்குப் பார்க்கினும் இரத்தக் களரியாகக் காட்சி அளிக்கப்பட்டது. குட் (Kut) வீழ்ச்சியுற்று வந்தது. ஸலோனிக்கா இந்தச் சமயத்தில் என்ன செய்வதென்று அறியாமல் அசைவற்றிருந்தது. ஆல்ப்ஸ் மலையிலிருந்து இத்தாலியர் விரட்டப்பட்டனர். வீனைக டிரியஸ்டியை நோக்கி இத்தாலியர் தாக்குதலை நடத்த முன்னேறினர். ரஷ்யர்களுடைய படைபலம் சோர்வடைந்துவிட்டது. இந்தப் பின்னணியில், பிரிட்டன், ஸோம் (Somme) பகுதியில் படையெடுத்தது. இந்தச் சமயத்தில்

போரிடுவதை லாயிட் ஜார்ஜும் கிட்சனரும் விரும்பவில்லை. ஆங்கிலேயப் படையினருக்கு இன்னும் நல்ல பயிற்சி அளித்த பிறகும், போதுமான யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்த பிறகும் போரிடலாம் என்று அவர்கள் நினைத்தனர். ஆனால், இன்னும் போர்க்களத்தில் இறங்காமல் இருக்கமுடியாது. போரிடவேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. ஏனெனில், வெர்டனில் அடைந்த தோல்விக்குப் பிறகு ஃபிரான்சின் பலம் மிகவும் குறைந்துவிட்டது. அதனால் பிரிட்டன் தான் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்தப் படையெடுப்பில் குறிப்பாக ராலின்ஸனின் நான்காவது படையும், மற்றும் கிட்சனரின் படைகளும் பங்கெடுத்துக்கொண்டன. ஜெர்மானியத் தளபதி இவ்வித மான தாக்குதலை எதிர்பார்க்கவில்லையாதலால், அவருடைய திட்டங்களெல்லாம் கவிழ்ந்துவிட்டன. இப் படையெடுப்பின் முதல் நாளான ஜுலை முதல்தேதியன்று மட்டும், 60,000 பேர் வரையிலும் உயிர்ச் சேதமடைந்தனரென்று மதிப்பிடப் படுகின்றது. அக்டோபர் மாதத்தில் இப் படைபெடுப்பு முடிவடையும்பொழுது 410,000 பேர்கள் சேதமடைந்தனர். முப்பது மைல் நீளமுள்ள இந்தப் போர்க்களத்தில், இத்தனை சேதத்திற்குப் பிறகுங்கூடச் சிறிதளவேதான், எதிரிகளைக் கடந்து முன்னேற முடிந்தது. இருப்பினும் ஸோம், வெர்டன் ஆகிய போர்க்களங்களில் ஜெர்மானியர்களின் சேதங்களும் மிகவும் அதிகமாகவே இருந்தன. இந்தப் போர்களுக்குப் பிறகு ஜெர் மானியரின் வீழ்ச்சி ஆரம்பமாகியதென்று கூறலாம்.

தாற்காலிகமாக நேச நாடுகளுக்கும் பல தொல்லைகள் நேர்ந் தன. காலங்கடந்து முடிவு செய்ததாலும், கடைசிவரையிலும் அதிக நிலப்பகுதிகள் வேண்டுமென்று காத்திருந்ததாலும், படை யெடுப்பின்போது பல தவறுதல்களை இழைத்ததாலும், நேச நாடுகளுக்குப் பல இடர்ப்பாடுகள் தோன்றின. இந்தச் சமயத் தில் ஆகஸ்டு மாதத்தில், ருமேனியர்களும் நேச நாடுகள் பக்கம் சேர்ந்து போரிட முடிவுசெய்தனர். டிசம்பர் மாதத்தில் மேக்கன் சென் (Mackensen), ஃபால்கன்ஹேய்ன் (Falkenhayn) ஆகிய ஜெர்மன் தளபதிகள் ருமேனியர்களை முற்றிலும் முறியடித்தது மட்டுமின்றி அப் பகுதியைக் கைப்பற்றியதால், அவர்களுக்கு நிறைய விளைச்சல் தருகின்ற செழிப்பான நிலப்பகுதிகளும், எண்ணெய் கிடைக்கக்கூடிய பகுதிகளும் கிடைத்தன.

இந்தத் தோல்வியால் ஏற்பட்ட மனக்கசப்பு, ஜட்லாண்ட் போரில் (Battle of Jutland), ஆங்கிலேயருக்கும் ஜெர்மானியக் கடற்படைக்கும் ஏற்பட்ட மோதலால்மட்டும் தணிந்துவிட

வில்லை. இந்தப் போர் மே மாதம் 31ஆம் நாள் நிகழ்ந்தது. இந்தப் போரில் உறுதியான வெற்றி ஆங்கிலேயருக்குத்தான் கிடைத்ததென்று சொல்லமுடியாது. நமது கடற்படைத் தளபதி ஜெல்லிகோ (Jellicoe), நமது கப்பற்படையை எதிரி களின் நாசகாரிகளும் சப்மரின்களும் நடமாடுகின்ற இடத்தில் போதிய பாதுகாப்பின்றிச் செலுத்தியது பெரிய ஆபத்திற் குள்ளாக்கிவிட்டது. இந்தப் போரை ஒரே நாளில் இழந்துவிட வேண்டிய சூழ்நிலையும் ஏற்பட்டது. ஆனால், அதே சமயத்தில் ஸ்கீர் (Scheer) என்பவருக்கு நேருக்குநேர் கடற்படையை மோதவிடுவதென்பது பொறியில் வீழ்ந்துவிடுகின்ற அபாயம் இருப்பதை உணர்ந்து, அவ்விதமாகச் செய்யாமல் தவிர்த்தார். ஆனால், எதிர்பாராத விதமாக இருதரப்பினரும் மோதிக் கொண்டதால், நமது கப்பற்படையின் தாக்கும்சக்தி அதிக வலிமை பெற்றிருந்ததை உணர்ந்திருந்தபோதிலும், நமக்கு ஏற்பட்ட சேதம் மிகப்பெரியது. இந்தப் போரில், மூன்று போர்க் கப்பல்களும், மூன்று நாசகாரிக் கப்பல்களும், மற்றும் எட்டு நாசகாரிகளும் சேதமாகின. ஆனால், ஜெர்மானியர்களின் கப்பல் சேதமும் உயிர்ச்சேதமும், நம்முடைய சேதத்தைவிட குறைவானதே என்று சொல்லவேண்டும். ஜெல்லிகோவினு டைய ஆணைகளைப் புறக்கணித்துவிட்டு, பெட்டி (Beatty) என் பவர் மிகவும் துணிச்சலாக நாசகாரிக் கப்பல்களை முன்னுக்குச் செலுத்தியதோ, அல்லது, நமது நாசகாரிகளின் அமைப்பு மிகவும் பலவீனமானது என்று சொல்லுவதோ, அல்லது, நம்முடைய கப்பல்களில் பொருத்திவைத்திருந்த பீரங்கிகள் சரியானபடி வெடிக்கவில்லையென்று சொல்லுவதோ, முடிவை ஒன்றும் மாற்றிவிடப் போவதில்லை. இன்னும் சொல்லப் போனால், ஜெர்மானியர் நமக்குச் சமமாகப் போரிட்டனர். கப்பலுக்குக் கப்பல் அவர்கள் சேதமாக்கினர். இன்னும் அவர் களுடைய பீரங்கிகளின் வலிமை அதிகமாகவே இருந்தது. இருப் பினும் இந்தக் குறுகிய கால்வாயில் நமது கற்பற்படை இன்னும் சிதறாமல், சரியானபடி வைக்கப்பட்டிருந்தது. இந்தப் போர் ஏற்படாமல் இருந்தால், ரஷ்யர்களுடன் சேர்ந்து பால்கனில் போரிடுவதாக இருந்தது. ஆனால், இந்தப் போருக்குப் பிறகு அந்தத் திட்டம் கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாக, இனி மேல் ஆங்கிலேயக் கடற்படை சரியானபடி முற்றுகை செய்து கொண்டிருப்பதே அதனுடைய முக்கியமான பொறுப்பாகும் என்று முடிவு செய்யப்பட்டது. இதனால் ஜெர்மானியர்களும், சப்மரின்கள்மட்டுமே அவர்களைக் காப்பாற்ற வல்லது என்று அந்தச் சப்மரின் போரில் தீவிரமாக இறங்கினர். 1916ஆவது ஆண்டு முடிவில் ஜெர்மானியர் மாதம் ஒன்றுக்கு, சுமார் 300, 000

டன்கள் மதிப்பிடக்கூடிய வர்த்தகக் கப்பல்களை சப்மரின்களால் மூழ்க்கடித்தனர்.

ஜட்லாண்ட் போர் நிகழ்ந்தது ஒரு வாரம் கடந்து, அதாவது ஜூன் 5ஆம் தேதியன்று கிட்சனர் ரஷ்யப் படையுடன் சேர்ந்து போரிடச் செல்லும்பொழுது, ஆர்கினிஸ் (Orkneys) அருகில் அவர் சென்றுகொண்டிருந்த 'ஹேம்ப்ஷயர்' (Hampshire) என்ற நாசகாரிக் கப்பல் மூழ்க்கடிக்கப்பட்டது. அதனுல் கிட்சனரும் அங்கேயே உயிரிழந்தார். அவர் இறந்துவிட்டதால், போர் நடவடிக்கைகளிலும் அரசியல் விவகாரங்களிலும் மாறுதல் ஏற்பட்டது. இப்பொழுது போர்த்துறையை நிர்வகிக்கும் பொறுப்பு லாயிட் ஜார்ஜிடம் ஒப்படைக்கப்பட்டது. இதனுல் ஹேய்க் (Haig) இதுவரையிலும் பின்பற்றிவந்த இராணுவ முறையையும் பிரதம தளபதியான வில்லியம் ராபர்ட்ஸன் பின்பற்றிவந்த இராணுவ முறையையும் மாற்றி அமைக்கவேண்டியதாயிற்று. இரு தளபதிகளிடையேயும், இந்த அரசியல் மேதையாக கெல்ட் வகுப்பைச் சார்ந்த லாயிட் ஜார்ஜ் அடிக்கடி மோதவேண்டி ஏற்பட்டது. ஹேய்கும், வில்லியம் ராபர்ட்ஸனும் போர் வீரர்கள். ஹேய்குக்கு வெற்றியில் அசையாத நம்பிக்கை இருந்தது. ஆனுல், வெற்றி கிடைக்கும் வழியை அவர் முறைப்படி இதுவரையிலும் திட்டமிட்டு வந்தார்.

இந்தப் போர்த் துறையிலே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளால் பெரிய நெருக்கடி ஏற்பட்டது. போரைத் தொடர்ந்து நடத்துவதா என்ற சந்தேகங்கூட ஏற்பட்டுவிட்டது. இந்த இரத்தக் களறி ஏற்பட்டுக்கொண்டிருக்கும்பொழுது, சிலர் அமைதியை நிறுவுவதற்காகப் பேச்சு வார்த்தைகளையும் நடத்தி வந்தனர். நவம்பர் 1916-ல் ஃபிரான்ஸ் ஜோசப் (Franz Joseph) இறந்துவிடவே, அவருக்குப் பின்பு பட்டத்திற்கு வந்த பேரரசன் கார்ல் (Karl) என்பவர் ஆஸ்திரியாவை எப்படியும் காப்பாற்றியாக வேண்டுமென்ற முடிவில் இருந்தார். அவசியம் ஏற்படின் அவருடைய நேச நாடுகளையும் கலந்தாலோசிக்காது ஆஸ்திரியாவைக் காப்பாற்றவேண்டுமென்றிருந்தார். ஃபால்கன்ஹேய்னுக்குப் பிறகு பதவிக்கு வந்த புதிய போர் பிரபுக்களான ஹிண்டன்பர்க் (Hindenburg), லூடென்டார்ஃப் (Ludendorff) ஆகியோருக்கும் பெத்மேன்-ஹால்வெக் என்பவருக்கும் (Bethmann-Hollweg) பல கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன. இந்தச் சமயத்தில் ஜனுதிபதி வில்ஸனின் பிரதிநிதியான கர்னல் ஹவுஸ் (Colonel House) என்பவர் சமாதான ஏற்பாடுகளைச் செய்யப் போவதாக அறிவித்தார். அதாவது, ஜெர்மனி ஓரளவிற்கு நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு சமாதானம் செய்துகொள்ள

முன்வரவில்லையென்றால், அமெரிக்கா நேச நாடுகள் பக்கம் சேர்ந்து போர்புரியும் என்று அறிவித்தார். ஆனால், திட்டவட்டமான வெற்றி கிடைக்காமல் சமாதானம் ஏற்படுவதென்பது முடியாத காரியமாகும் என்பதை நமது அரசாங்கம் உணர்ந்திருந்தபோதிலும், பல தொல்லைகளை ஏற்றுக்கொண்டுள்ள நேச நாடுகளைப் பாதிக்கும் எந்த ஏற்பாட்டிற்கும் குறுக்கே நிற்கவில்லை. இவ் விஷயத்தில் அமெரிக்காவை எப்படி அணுகுவதென்பதில் கிரே ஒரு திட்டமான முடிவிற்கு வராமல் இருந்தார். லேண்ட்ஸோன், ஏன் ஒரு சமாதானத் திட்டத்தை அறிவித்து, அதை ஜெர்மனி ஏற்றுக்கொள்ளச் செய்யக்கூடாதென்று கேபினட்டைக் கேட்டார். ஃபிரான்சிலும் அமைதியை விரும்புவோர், திறமைமிக்க, கேய்லாக்ஸ் (Caillaux) என்பவரின் தலைமையில் சமாதானத்தை நிலைநாட்ட முயற்சி செய்தனர்.

இவ்வளவு தடைகளிலும் லாயிட் ஜார்ஜ் தமது பதவியைப் பலப்படுத்திக்கொண்டார். அவருக்கு ஆதரவாக சிலச் செல்வாக்கான சக்திகளும் வேலை செய்தன. பத்திரிகை அதிபர்களான நார்த்கிளிஃப், பீவர்புருக் தங்களுடைய செல்வாக்கை இவருக்காகப் பயன்படுத்தினர். இவர்களைத் தவிர, கேர்ஸன், மற்றும் கன்சர்வேடிவ் கட்சியின் தலைவரான போனர் லா ஆகியோரும் இவர் பக்கம் இருந்தனர். இவருடைய தலைமையில், உணவுப் பொருள்கள் உற்பத்தி, மற்றும் யுத்த தளவாடங்களின் உற்பத்தி, பட்டாளத்திற்கு ஆட்களைச் சேர்த்தல், விமானத் தாக்குதல்களை முறியடிக்கும் சாதனங்கள் ஆகியவற்றையெல்லாம் கண்காணிக்கும் பொறுப்பை ஒப்படைக்கவேண்டுமென்ற பொதுப்படையான கருத்து அப்பொழுது நிலவி வந்தது. அப்பொழுது ஜெர்மானியர்கள் சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்ற வதந்திகளைக் கிளப்பிக்கொண்டிருந்தனர். இந்த வதந்திகளுக்குப் பதில் அளிக்கும் முறையில் அவர் ஜெர்மனியை வீழ்த்திவிட்டுத்தான் மறு பேச்சு என்று ஆணித்தரமாகக் கூறிவிட்டார். அவர் போர் நடவடிக்கைகளைப் பார்த்துக்கொள்வதற்கு ஒரு சிறிய போர்க் குழுவை அமைத்தார். இந்தப் போர்க் குழுவைப் பொதுவாக மக்கள் வரவேற்றனர். இறுதியில் இந்தப் போர்க் குழுவின் தலைவராக இருக்க ஆஸ்குவித் சம்மதிக்கவில்லை. ஏனெனில், லாயிட் ஜார்ஜிடம் வேலைசெய்வது அவருக்குக் கடினமாகப்படவில்லை. ஆனால், பல்ஃபோர் அல்லது போனர் லா ஆகியோரிடம் வேலைசெய்வதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால், டிசம்பர் மாத ஆரம்பத்தில், அவர் ராஜிநாமா செய்தார். பல்ஃபோர்இந்தக் குழுவில் அங்கம் வகித்ததால், பெரும்பான்மையான கன்சர்வேடிவ்கள் ஆதரவை அளித்தனர் என்பது

உண்மை. ஆனால், முன்பு லாயிட் ஜார்ஜ் அரசாங்கத்தின்மீது அவர்களுக்கு அவ்வளவு நம்பிக்கை கிடையாது. இந்தப் போர்க் காலத்து அமைச்சரவையில், லாயிட் ஜார்ஜ், போனர் லா, மில்னர், கர்ஸன், ஹெண்டர்ஸன் ஆகியோர் அங்கம் வகித்தனர். இதைப்போலவே ஃபிரான்சிலும் பிரியாண்ட் என்பவரின் தலைமையில் போர்க்கால அமைச்சரவையை அமைக்க முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஜாஃப்ரேயின் சமாதானப் பேச்சுகளையெல்லாம் அவர்கள் பொருட்படுத்தவில்லை. ஜனாதிபதி வில்ஸன் ஆலோசனை கூறிய சமாதான மாநாட்டை, நேச நாடுகள் புறக்கணித்துவிட்டன; தவிர, அவைகள் போர் நீடித்து நடக்க வேண்டுமென்றும் கருதலாயின. அந்த நாடுகளின் முக்கியமான நோக்கம் தீமைகளை விளைவித்ததால் பழிவாங்கவும், மற்றும் அந்நியர்களுடைய ஆதிக்கத்திலிருந்து எல்லா இனங்களையும் விடுவித்து அவைகளுக்குச் சுதந்திரம் வாங்கித்தரவேண்டுமென்பதுமாகும்.

1917-ல் மிகவும் துயரமிக்க நிகழ்ச்சிகள் ஏற்பட்டுவிட்டன. ரஷ்யாவின் பலத்தை, மார்ச் மாதத்தில் நிகழ்ந்த புரட்சி அழிக்கத் தொடங்கிவிட்டது. ஏப்ரல் மாதத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களின் புதிய தலைவரான நீவெல் (Nivelle) என்பவருடைய தலைமையில் நிகழ்ந்த படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. அத்துடன் அவர்களுக்கு நிறையச் சேதமும் ஏற்பட்டது. அதே மாதத்தில் சப்மரின்களால் சுமார் 900,000 டன் மதிப்புள்ள கப்பல்கள் நாசமாக்கப்பட்டன. நிறையக் கப்பல்கள் நாசமாக்கப்பட்டதால், உணவுப் பண்டங்கள் கிடைப்பதே மிகவும் கடினமாகிவிட்டது. ஆறு வாரத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களே கைவசம் இருந்தன. இனிமேலும் உணவுப் பண்டங்களை ஏற்றிவரும் கப்பல்கள் நாசமாக்கப்படாமல் பாதுகாத்தால்தான், நேச நாடுகளின் மக்கள் பட்டினி கிடக்காமலும் படைவீரர்கள் அழிந்து போகாமலும் பாதுகாத்துக்கொள்ள முடியும். ஜெர்மானியர்களின் சப்மரின்களின் தாக்குதல்கள் கண்மூடித்தனமாக எல்லா நாட்டுக் கப்பல்களையும் தாக்கியதால், ஏப்ரல் மாதத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும் ஜெர்மனியை எதிர்த்துப் போரில் இறங்கியது. இருப்பினும், அமெரிக்கத் துருப்புகள் ஓர் ஆண்டுகாலம் வரையிலும் நேச நாட்டுப் படைகளுடன் வந்து சேரவில்லை. இன்னுமோர் ஆண்டு வரையிலும் காத்திருக்க முடியுமா என்பதே பிரச்சினையாகிவிட்டது. பலத்த சேதங்களை அடைந்து ஃபிரான்ஸ் இப்பொழுது செயலற்றுவிட்டது. இராணுவக் கலகங்கள் ஏற்பட்டதால், ரஷ்யாவும் பலமற்றுவிட்டது. அக்டோபர் மாதத்தில் வட இத்தாலியப் படைகள் கேப்பரெட்டோ (Caporetto) என்ற இடத்தில்

முறியடிக்கப்பட்டு, வெனிஸ் வரையிலும் பின்வாங்கிவிட்டன. அதனால், இனிமேல் போரின் சுமை முழுவதும், ஹேய்கின்மீதும் பிரிட்டிஷ் படையின்மீதுமே விழுந்தது.

இந்தச் சமயத்தில் லாயிட் ஜார்ஜின் தளராத உணர்ச்சியாலும், வாய்ப்புகளைப் பயன்படுத்தி நாட்டிற்கு வேண்டிய தேவைகளை நல்லபடி கவனித்து வந்ததாலும், நாட்டு மக்கள் முழுவதுமே இந்தப் போரில் ஈடுபடும்படியான சூழ்நிலையை உருவாக்கினர். அவருடைய அதிகாரங்கள் இப்பொழுது மிகவும் அதிகரித்து ஏறக்குறைய ஒரு ஜனாதிபதிக்கு இருக்கும் அதிகாரங்களைப்போல, அவர் நிர்வகிக்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. அவர் நேரடியாகவே, மற்றத் துறைகளான, தொழில் துறை, இராணுவத் துறை, மற்றும் பத்திரிகைகளைக் கண்காணிப்பது போன்றவைகளில் தொடர்பு வைத்துக்கொண்டார். அவருடைய சிறிய போர்க்காலக் கேபினட், இப்பொழுது விரிவடைந்து, டொமினியன் அமைச்சர்களையும் சேர்த்துக்கொண்டு, ஒரு பேரரசிற்கே அமைச்சரவையாகப் பணிபுரியத் தொடங்கி விட்டது. இதனால், வழக்கமாகப் பின்பற்றும் முறை மாறி விட்டது. பாராளுமன்ற விவகாரங்களை போனர் லா பார்த்துக் கொண்டார். லாயிட் ஜார்ஜ் போர் விவகாரங்களைப் பார்த்துக் கொண்டார். போர்த்துறையில் அவர் செய்த சேவைகள் மிகவும் மகத்தானவை. அப்பொழுது அவர்களை எதிர்நோக்கியிருந்த உடனடியான அபாயம் சப்மரின் போர்தான். எப்படியும் ஜெர்மானியச் சப்மரின்களை ஒழித்துக்கட்டிவிட வேண்டுமென்று அவர் பல முயற்சிகளைச் செய்தார். அதன் விளைவாக, இந்தப் போர் முறையின் அபாயம் மிகவும் குறைக்கப்பட்டு, ஆகஸ்டு மாதத்திலிருந்து நேசநாடுகளின் கப்பல்களுக்கு ஏற்பட்ட சேதம் 200,000 டன்களுக்குக் குறைக்கப்பட்டுவிட்டது. ஜெல்லிகோ (Jellicoe)விற்குப் பதிலாக, பெட்டி (Beatty) கடற்படை நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டார். அதற்குப் பின், வர்த்தகக் கப்பல்களுக்குப் போதிய பாதுகாப்பு அளிக்கும் முறையைக் கொண்டுவந்தனர். இதற்கு முன்பு, இவ்விதமான முறையை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. உணவுத்துறை, மற்றும் கப்பல்துறை அமைச்சர்களுக்கு சர்வாதிகாரம் கொடுக்கப் பட்டிருந்தது. பின்பு, உள்நாட்டிலேயே உற்பத்தி செய்கின்ற தொழிற்சாலைகளுக்குப்பணவசதிகளைக்கொடுத்து, உற்பத்தியைப் பன்மடங்கு பெருக்கிக்கொண்டனர். உணவுப் பங்கீட்டு முறையும் கொண்டுவரப்பட்டது.

நெருக்கடியான இந்த ஆண்டில், நம்பிக்கையையூட்டும் சில நிகழ்ச்சிகளும் இருந்தன. இந் நிகழ்ச்சிகள் கிழக்குப் போர்க்

களத்தில் ஏற்பட்டன. மார்ச் மாதத்தில், இராணுவப் போர் முறைகளில் நல்ல பயிற்சிபெற்ற திறமைசாலியான ஜெனரல் மாட் (General Maude) என்பவர் தலைமையில் நமது படைகள் பாக்தாத்தில் நுழைந்தன. இந்தச் சமயத்தில், எகிப்தை இது வரையிலும் பாதுகாத்து வந்த படைகள், இப்பொழுது ஸினய் (Sinai) தீபகற்பத்தையும், செங்கடலையும்கூடப் பாதுகாக்கவும், பின்பு, அப் பகுதிகளில் தாக்குதல்களை நடத்தவேண்டிய அவசியமும் ஏற்பட்டது. வேனிற்காலத்தில், கரையோரம் முன்னேறிச்சென்ற நமது படைகள் காஸாவின் (Caza) அருகில் பலமாகத் தாக்கப்பட்டன. ஆனால், ஜூன் மாதத்தில் அலென்பி என்பவர் ஃபிரான்சிலிருந்து, இந்தப் போர்க்களத்திற்கு அனுப்பப் பட்டார். தவிர, மற்றுமொரு திறமைமிக்க தளபதியான டி. இ. லாரன்ஸ் (T. E. Lawrence) என்பவரும் அங்கே அனுப்பப் பட்டார். ஹுஸேய்ன் மன்னருடைய அரேபியத் துருப்புகள் மெக்காவை முற்றுகையிட்டன. அதே சமயத்தில் ஹெட்ஜாஸ் ரயில்வேயையும் கைப்பற்ற முயற்சிசெய்தன. அக்டோபர் மாதத்தில் பீர்ஷிபா (Beersheba) என்ற இடத்தில் அல்லன்பி எதிரிகளைத் தாக்கி வெற்றி பெற்றதால், கரையோரம் பாது காத்துவந்த துருக்கியர்களின் பிடி சிறிது தளர்ந்தது. அவ் வெற்றிக்குப் பிறகு, டிசம்பர் மாதத்தில் அவர் ஜெருசலேமிற்குள் பிரவேசித்தார். ஜூன் மாதத்தில் நேச நாடுகள் கான்ஸ்டன்டைன் (Constantine) மன்னரைப் பட்டத்திலிருந்து நீக்கிவிட்டு, வெனிசிலாஸ் (Nenizelos) என்பவரைப் பட்டத்தில் அமர்த்தினர். இது வரையிலும் கிரேக்கர்களிடையே பலத்த பிளவுகள் இருந்தமை மறைந்து, இப்பொழுது, துருக்கியர்களைத் தாக்க, அவர்கள் முன் வந்தனர்.

கிழக்குப் போர்க் களத்தில் போரை நிறுத்திவிடலாம் என்ற அபிப்ராயத்தை லாயிட் ஜார்ஜ் மாற்றிக்கொள்ள விரும்பவில்லை. 1916-17 பனிக்காலத்தில் இரு முறை இத்தாலிய எல்லைகளின் வழியாக வியன்னாவை நோக்கிப் படையெடுக்க அவர் திட்டமிட்டார். ஆனால், ஃபிரெஞ்சு அரசாங்கம் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பல தடைகளைக் கூறினர். மேலும், இத்தாலியர்கள் இப் படையெடுப்பிற்குத் தயாராக இல்லை என்று கூறினர். நமது படை வீரர்களுக்கும் இவ்விதமான படையெடுப்பில் உற்சாகமில்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே டார்னலஸ்ஸின் இத் திட்டம் கைவிடப்பட்டதே. அப்பொழுதிருந்த நிலைமை வேறு; ஆனால், இப்பொழுதிருந்த நிலைமை வேறு. இப்பொழுது நிறைய அபாயங்கள் இந்தத் திட்டத்தில் சூழ்ந்திருந்தன. ரஷ்யாவில் பெரிய குழப்பம்

ஏற்பட்டுவிட்டது. ஃபிரான்ஸ் செயலற்றுவிட்டது. அதைவிட, ஃபிரெஞ்சுத் தலைவரான நீவெல் (Nivelle) இவருடைய அபிப் ராயத்தை மாற்றி அமைத்துவிட்டார் என்றே சொல்ல வேண்டும். நீவெல் தம்முடைய திறமையில் அளவிற்கு மீறிய நம்பிக்கையை வைத்திருந்தார்.

வடக்கு ரெய்ம்ஸ் பகுதியில் நடத்திய தாக்குதல் ஏப்ரல் 1917-ல் படுதோல்வி அடைந்துவிட்டது. இதனால், தொடர்ந்து ஸோம் பகுதியில் தாக்குதலை ஆரம்பிக்கவேண்டுமென்று ஹெய்க் போட்டிருந்த திட்டமும் சீர்குலைந்துவிட்டது. இதைத் தவிர, நன்கு பாதுகாக்கப்பட்ட ஹிண்டன்பர்க் பகுதியில், மிகத் திறமையுடன் ஜெர்மானியர் பின்வாங்கிவிட்டனர். 1917-ல் நடைபெற்ற ஹேய்கின் தாக்குதல், அரசியல் அடிப்படையில் செய்யப்பட்ட தாக்குதலாகும். ஃபிரெஞ்சுப் படையினர் சிதறிக் கிடந்தனர். மேலும், ரஷ்யாவின் படைகள் கடைசியாக முறியடிக்கப்பட்டன. 'ரஷ்யாவைத் தாக்கிவருகின்ற ஜெர்மன் படைகள் எல்லாம் கிழக்குப் போர்க்களத்திலிருந்து மேற்குப் போர்க்களத்திற்குத் திருப்பிவிடப்படும் என்று அவர் நம்பினார் மேலும் கடற்படையும், சப்மரின் தாக்குதல்களால் மிகவும் நலிந்திருந்தது. ஆஸ்டெண்ட், சீபிரக் (Zeebrugge) என்ற இடங் களிலிருந்து ஜெர்மானியச் சப்மரின்களின் தாக்குதல்கள் அதிகரித்து வந்தன. கால்வாயைப் பாதுகாப்பதும் மிகவும் கடினமாகிவிட்டது. அதனால் கடற்படையின் செல்வாக்கும் இவர் கொண்டிருந்த அபிப்ராயத்திற்குக் காரணமாகும்.

இந்த ஆண்டில் சிதறுதலாக நடைபெற்ற மூன்று போர் களில் வெற்றிகிடைத்தது, எதிர்காலப் போர் நடவடிக்கைகளுக்கு மிகுந்த முக்கியத்துவத்தைக் கொடுத்தது. ஏப்ரல் மாதத்தில் கனடியர்கள் விமி ஹைட்ஸ் (Vimy heights) என்ற இடத்தைக் கைப்பற்றினர். யெப்ரஸிற்குத் தெற்கேயுள்ள மெஸின்ஸ்-வைட்ஸ்சாட் (Messines-Wytschaete) என்ற பகுதியையும் புளூமர் (Plumer) நீண்டகாலமாகவே திட்டமிட்டு, இப்பொழுது தான் கைப்பற்ற முடிந்தது. நவம்பர் மாதத்தில் பிங் (Byng) என்பவரின் டாங்கிகள் வெற்றிகரமாகக் கேம்ப்ரேய் (Cambrai) என்ற பகுதியில் பிரவேசித்தன. இந்த வெற்றிகளுக்கு மாறாக, கால்வாய் அருகிலுள்ள துறைமுகங்களைக் காப்பாற்றும், பாது காப்புத் திட்டம் ஜூலை, அக்டோபர் மாதத்தில் நிகழ்ந்த பேஸ் செண்டேல் (Passchendaele) அல்லது மூன்றாவது யெப்ரஸ் போரினால் தடைப்பட்டது. இங்கே நடந்த போரில் அடாது மழை பெய்த காரணத்தினாலும், லூடென்டார்ஃபின் (Luden-

dorff) மூர்க்கத்தனமான தாக்குதல்களாலும் நேசப் படைகள் சிதறடிக்கப்பட்டன.

மேற்குப் போர்க்களத்தில் பின்பற்றப்பட்ட இராணுவ முறையில் ஏற்கெனவே லாயிட் ஜார்ஜுக்குச் சந்தேகம் இருந்தது. அந்தச் சந்தேகம் இப்பொழுது உறுதிசெய்யப்பட்டது. மேற்குப் போர்க்களத்தில் ஏற்பட்ட தோல்விகளின் விளைவாக, மக்கள் ஹேய்கை மாற்றிவிடவேண்டுமென்று கருதினர். ஆனால், இதை அவ்வளவு எளிதாகச் செய்ய முடியாததால், லாயிட் ஜார்ஜ், அவருடைய இராணுவ அதிகாரிகளை மாற்றியமைத்தும், அவரையே நீவெல் (Nivelle) என்பவருக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டுமென்றும் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார். இதன் முக்கிய நோக்கம், ஹேய்கின் போரிடும் பலத்தைக் குறைக்க வேண்டுமென்பதேயாகும். ஃபிரான்ஸ் போர்க்களத்தைத் தவிர, இன்னும் 760,000 படை வீரர்கள் மற்றப் போர் முனைகளில் வைக்கப்பட்டிருந்தனர். இன்னும் 300,000 பேர், முன்னணிப் போர் செய்யப் பயிற்சி அளிக்கப்பட்டுத் தயாராக பிரிட்டனிலேயே வைக்கப்பட்டிருந்தனர். பிரதம இராணுவத் தளபதியாகப்பணியாற்றிய ராபர்ட்ஸன் அப் பதவியிலிருந்து அகற்றப்பட்டு, அதற்குப் பதிலாக ஹென்றி வில்ஸன் என்பவர் நியமிக்கப்பட்டார். ஸிரியா, கார்பேதியன்ஸ் ஆகிய கிழக்குப் போர்முனைகளில் படையெடுத்துச்சென்று வெற்றி காண்பதென்பதும், மேலும் போரை 1919, அல்லது 1920 வரையிலும் நீடிப்பதற்கான முயற்சிகளைச் செய்வதுமே அவருடைய கொள்கையாகும். வெர்சேய்ல்ஸில் நேச நாடுகளின் ஆலோசனைக் குழுவொன்று நிறுவப்பட்டது. தயாராக ஒரு படையைத் திரட்டி வைத்துக்கொண்டு அபாயம் நேரிடும்பொழுது அதைப் பயன்படுத்தவேண்டுமென்று தீர்மானித்தனர். இந்த ஆலோசனைக் குழு சரியாகப் பணியாற்ற முடியவில்லை. பிரிட்டிஷ், ஃபிரெஞ்சுக்காரர்களிடையே பலத்த சந்தேகங்கள் ஏற்பட்டுவிட்டதே இதற்குக் காரணமாகும். மேலும், பிடெய்னும் (Petain) ஹேய்கும் (Haig) இந்தத் திட்டத்தை ஏற்க மறுத்துவிட்டனர்.

ஏற்கெனவே ஹேய்க் கூறியபடி, 1918-ல் நேச நாடுகள் பெரியதொரு தாக்குதலைச் சமாளிக்கவேண்டி நேரிட்டது. இத்துடன் நேச நாடுகளுக்கிடையே பல முரண்பாடுகள் வேறு உண்டானமை குறிப்பிடத்தக்கதாகும். ஜனவரியில் ஏற்பட்ட தாற்காலிக உடன்படிக்கைக்குப் பிறகு, மார்ச் மாதத்தில், ஜெர்மானியர் போல்ஷ்விக் ரஷ்யாவுடன் பிரெஸ்ட்-லிடோவ்ஸ்க் (Brest-Litovsk) என்ற இடத்தில் ஒரு சமாதான உடன்படிக்கை

யைச் செய்துகொண்டனர். ஜெர்மானியர் போல்ஷ்விக் ரஷ்யா வின்மீது, இந்த உடன்படிக்கையைத் திணித்தனர். இந்த உடன் படிக்கைக்குப் பிறகு அவர்கள் 192 டிவிஷன் படைகளை மேற்குப் போர்க்களத்திற்கு அனுப்பிவைத்தனர். நேச நாடுகளிடம் அப்பொழுது 173 டிவிஷன் படைகளே இருந்தன. நேச நாடு களின் படைகள் ஒன்று சேராதவண்ணம், மார்ச் மாதம் 21ஆம் நாள் லூடென்டார்ஃப் பேரளவில் தாக்குதலை நடத்தினர். அவர் தாக்குதல் நடத்திய போர்முனை 125 மைல் நீளமுள்ளது, அவ்வளவு தூரத்திலும் நேச நாடுகள் பாதுகாக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. சென்ற ஆண்டில் அந்தப் போர்முனையில் போரிட்டவர்களைவிட 180,000 பேர் குறைவாகவே ஹேய்கிடம் இருந்தனர். இந்த ஆபத்தான போரில் கப் (Gough) என்பவரின் 5ஆம் படையே போரில் தீவிரமாக ஈடுபட்டிருந்தது. ஆனால், அப் படையில் இருந்தவர்கள் போதுமான எண்ணிக்கையினராக இல்லை. குறைந்த அளவில் அங்குப் போர்புரிய அரை மில்லியன் பேர்களாவது வேண்டுமென்று கணக்கிட்டனர். ஆனால், இந்தப் பேரிடி விழுந்த பிறகுதான் அரசாங்கத்திற்கு இதைப்பற்றி அதிக அக்கறை பிறந்தது. பிறகு, பலருக்குப் போரில் சேராமல் இருப்பதற்கு விதிவிலக்களிக்கப்பட்டதையெல்லாம் ரத்து செய்துவிட்டு, அவரவர்கள் வயதிற்கு ஏற்பப் பட்டாளத்தில் சேர்த்துக்கொள்ளும் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது யுத்த தளவாட உற்பத்தியில் ஈடுபட்டிருந்தவர்கள்கூடப் பட்டாளத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர்.

லூடென்டார்ஃபின் முதல் தாக்குதலே, நேச நாடுகளின் 5ஆவது படையைச் சிதறடித்துவிட்டது. அதனால், அந்தப் படையை ஸோம் பகுதிக்கு அழைத்துச்சென்றனர். ஏப்ரல் 5ஆம் தேதியன்று எதிரிகள் மீண்டும் தாக்குதலை நடத்தி, ஏமியன்ஸ் (Amiens) பகுதியில் பத்து மைல் ஊடுருவிச் சென்று, நேச நாடுகளின், 4ஆவது, 5ஆவது படைகள் ஒன்று சேர இருக்கும் பகுதியில் அவர்களைப் பலவீனப்படுத்தினர். இந்தச் சமயத்தில் நம்பிக்கையை இழந்துவிட்ட பிடேய்ன் பிரிட்டிஷ் இராணுவத்துடன் கத்தரித்துக்கொண்டு, பாரிஸ் நகரின் பாது காப்பிற்கே செல்வதென்று முடிவு செய்தார். ஆனால், ஹேய்க் இந்த அபாயமான நிலையைக் கருதி, உடனடியாக ஃபோச் (Foch) என்பவரை நேச நாட்டுப் படைகளின் பிரதம தளபதியாக்க ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தார். இவ்விதமான யோசனையை ஏற்கெனவே, ஹேய்க் நிராகரித்திருந்தார். இரண்டாவது ஜெர் மன் தாக்குதல் ஏப்ரல் மாத மத்தியில் யெப்ரஸ் பகுதியில் நிகழ்ந்தது. இந்தத் தாக்குதல் மிகவும் பலமாக நிகழ்ந்ததால்,

தெற்கேயுள்ள மெஸின்ஸ் (Messines), மவுன்ட் கெமல் (Mount Kemmel) ஆகிய இடங்களை நேசநாடுகள் இழந்துவிட்டன. தவிர, வடக்கிலுள்ள ஹேஸ்புருக் (Hazebrouck) சந்திப்பிலும் அதிக அபாயம் நிலவியிருந்தது. இனி, அப் படைகள் பின்னேறுவதும் முடியாதென்பதை ஹேய்க் அறிவித்து, கலே நகரத்தைக் காலிசெய்யும் முயற்சிகளில் ஈடுபட்டார். இந்த இரண்டு போர்களிலும், ஜெர்மானியரின் 120 டிவிஷன்கள் தாக்குதலில் ஈடுபட்டன. ஆனால், பிரிட்டிஷாரிடம் 58 டிவிஷன்களே இருந்தன. இத் தாக்குதல்களில் சுமார் 300,000 பேர் பிரிட்டிஷ் தரப்பில் சேதமடைந்தனர். மே மாதத்தில் மூன்றாவது தாக்குதலையும் ஜெர்மானியர் நிகழ்த்தினர். இச் சமயம் அவர்களுடைய தாக்குதல் ஃபிரெஞ்சுப் பகுதியான ஏய்ன் (Aisne) ஓரமாக அவர்களுடைய தாக்குதல் நிகழ்ந்தது. ஜூன் முதல் தேதியன்று, ஜெர்மானியர் மீண்டும் மார்ன் (Marne) வரையிலும் வந்துவிட்டனர். ஆனால், ஆகஸ்டு மாத மத்தியில், மேலும் அவர்கள் போரிடுவதில் பயனில்லையென்பதை உணர்ந்துவிட்டனர். அதனால், அக்டோபர் மாதத்தில், சமாதானப் பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்டனர். வரலாற்றை உருவாக்கியவர்கள் இச் சமாதானப் பேச்சு வார்த்தைகளில் முதலில் மெதுவாக நகர்ந்தனர் என்றாலும், உக்கிரமான கடைசி நேரத்தில், அவர்களுடைய வேகமும் அதிகரிக்கத்தான் செய்தது.

பிரிட்டனுடைய வரலாற்றைப் பொறுத்தவரையிலும் பல வெற்றி தோல்விகளுக்கான நிகழ்ச்சிகளைக் கணக்கெடுக்கும் பொழுது, மிகச் சிறந்த சில வெற்றிகளையும் நாம் ஒதுக்கத்தான் வேண்டியிருந்தது. ரோஜர் கேய்ஸ் (Roger Keyes) என்பவருடைய முயற்சியால், ஏப்ரல் மாதத்தில் நிகழ்ந்த கடற்படைத் தாக்குதல் சீபிரக் (Zeeprugge) என்ற பகுதியின்மீது நடந்தது மட்டும், பெல்ஜியத்தின்மீது ஜெர்மன்வைத்திருந்த பிடியைத் தளர்த்தி விடவில்லை. உண்மையில் சீபிரக்கிலும், ஒஸ்டெண்டிலும் உள்ள அவர்களுடைய தளங்களை முழுவதுமாக, இத் தாக்குதல் பாதிக்கவில்லை. மெகிட்டோ (Megiddo) என்ற பகுதியில் அலென்பி (Allenby) என்பவர் பெரிய வெற்றியை அடைந்து, காலாட் படைகளுடனும், குதிரைப் படைகளுடனும், அராபியர்களின் உதவியைக்கொண்டும், ஜோர்டானுக்குக் கிழக்கேயும் மேற்கேயும் உள்ள பகுதிகளில் முன்னேறி டமாஸ்கஸ் நகரினுள் பிரவேசித்தார். அக்டோபர் மாதத்தில் அவருடைய படைகள் அலெப்போ (Aleppo) என்ற பகுதியிலும் பிரவேசித்தன். சலோனிக்காவில் செப்டம்பர் மாதத்தில் முன்னேறியதால் பல்கேரியர்கள் போரிலிருந்தே விரட்டப்பட்டதைப்போல,

துருக்கியுங்கூட அலென்பியின் வெற்றிகளுக்குப் பின்பு போரிலிருந்து விரட்டப்பட்டது. ஆனால், இந்த வெற்றிகள் கிட்டும்பொழுது, ஜெர்மனி அதனுடைய மத்தியப் போர்க் களத்திலேயே சீர்குலைந்து வந்தது.

மேற்குப் போர்முனையில் பின்பற்றப்பட்ட முறையே சிறந்தது என்று பின்பு தெரியவந்தது. ஏனெனில், ஜெர்மனியின் பெரும் படைகள் ஃபிரான்சில் அடைந்த தோல்விகளே, அவர்களைப் பின்வாங்கவைத்ததுமன்றி, அவர்களுடைய பலத்தையும் சீர் குலையச் செய்தது எனலாம். இவ்விதமாக ஏற்படும் என்று மேற்குப் போர்முனையில் நம்பிக்கை வைத்திருந்தவர்கள் நினைத் தனர். சில குறிப்பிட்ட விஷயங்களில், ஹேய்க் உறுதியான மனமும், அதே சமயத்தில் நினைத்ததைச் சாதிக்கின்ற தன்மை யையும் பெற்றிருந்ததால், அவரை ஒரு சிறந்த தளபதிகளில் ஒருவராகக் கருதமுடிகின்றது. ஜூன் 1918-ல் எல்லா இராச்சிய வாதிகளும் இன்னும் ஓர் ஆண்டுக்கு வெற்றியைத் தள்ளிப்போடு கின்ற நிலையை, இவர்தான் தடுத்து நிறுத்தி எல்லாப் பொறுப்பு களையும் இவரே ஏற்று, அந்த ஆண்டிலேயே, அதுவும் அந்தப் போர்முனையிலேயே போரிட்டு, இரண்டில் ஒன்று பார்த்துவிட வேண்டுமென்று உறுதியாக இருந்தார். இதைப்போன்ற ஆலோசனையை ஒரு முறை ஃபோச் (Foch) கூறியிருந்தார். ஹேய்க், இவ்விதமாக டாங்கிப் போர் இங்குப் பெருகக் கூடா தென்று கூறி, இதே இடத்தில் அவர் போரிட்டார். உண்மையில் அரசாங்கத்தின் எச்சரிக்கையையும் புறக்கணித்துவிட்டு, எல்லாப் பொறுப்புகளையும் அவரே ஏற்று, போரை விடாது நடத்தினர். ஸோம் போர்க்களத்தை அவர்தான் நிர்ணயித்தார். அவர் தான் ஃபிரெஞ்சு, அமெரிக்கர்களின் தாக்குதல் ஆர்கானை Argonne) நோக்கி வடமேற்குப் பகுதியில் நடத்தவேண்டு மென்று திட்டம் வகுத்தார். இல்லாவிடில் லோரேய்ன் பகுதி யில் இந்தத் தாக்குதல் நிகழ்ந்திருக்கும். அவர் நடத்திய தாக் குதல், ஒரு போர்க்களத்திலிருந்து, மற்றொரு போர்க்களத்திற்குச் சிறிதும் இடைவெளி விடாது தொடர்ந்து நடத்தினர். இத் தாக் குதல்களுக்கு அவருக்கு உதவியாக, விமானப்படையும், எண் ணற்ற டாங்கிகளும், மற்றும் புதிய படைகளும் ஒத்துழைத்தன. அத்துடன் அமெரிக்கப் படைவீரர்களும் அந்த இளவேனிற் காலத்தில் சுமார் இரண்டு மில்லியன் வரையிலும் வந்து குவிந் தனர். தொடர்ந்து இவர் தாக்குதல்களை நடத்தியதால், எதிரி களின் ஒழுக்கமும், அவர்களுடைய உறுதியும் சீர்குலைந்து விட்டன. ஆகஸ்ட் மாதத்தில் அவர் ஸோம் போர்க்களத்தில் அடைந்த வெற்றி, பகைவர்களின் வீழ்ச்சியின் ஆரம்பம் எனக்

கருதவேண்டும். இதனால், அவருடைய போர்த் திட்டத்தின் வெற்றியையும் பாராட்டவேண்டியதாகிறது.

அவர்கள் பக்கத்தில், லூடென்டார்ஃபின் தவறுகள், மிகுந்த அபாயத்தை விளைவித்துவிட்டன. போரின் கடைசிக் கட்டத்தில், பிரிட்டிஷ் கடல் வலிமையும் நன்கு வெளிப்பட்டது. இந்தக் கடல் வலிமையினால், ஜெர்மனிக்குச் செல்லவேண்டிய யுத்த தளவாடங்கள் செல்லமுடியாமல் முற்றுகையிட்டும், அதேசமயத்தில் தொடர்ந்து போரிட்டு அவர்களிடையே தோல்வி ஏற்படுகின்ற ஒரு மனப்பான்மையைப் பதியவைத்து,ஃபிரான்சிலும், இத்தாலியிலும் போரிடுகின்ற எண்ணற்ற போர் வீரர்களுக்குக் கடற்படையின்மூலமாக உணவுப் பொருள்களையும், நிலக்கரியையும் அனுப்பிவைத்தும், பல லட்சக்கணக்கான அமெரிக்கப் போர் வீரர்களைப் பாதுகாப்பாகப் போர்முனைக்கு அழைத்து வருதலும், பாலஸ்தீனத்திலும் பால்கனிலும் வெற்றியைப்பெற்றும் வந்ததால், ஜெர்மானியர்களுடைய உறுதி குலைந்துவிட்டது. அவர்கள் ஏமியன்ஸிலும் மேர்னிலும் வெற்றி பெற்றும் பயனில்லாமல் போய்விட்டது.

ஜூலையிலிருந்து செப்டம்பர் மாதம் வரையிலும் அவர்களுடைய துருப்புகள் மிகவும் சாமார்த்தியமாகப் போரிலிருந்து ஒதுங்கிவிட்டு, ஜெர்மன் எல்லைகளைக் காப்பாற்றச் சென்றுவிட்டன. சரியானபடி மதிப்பிட்டால், அவர்கள் இன்னும் ஓர் ஆண்டு வரையிலும் சமாளித்துக்கொள்ளும் நிலையை ஏற்படுத்திக் கொண்டனர். ஆனால், முற்றிலும் மாறாக, ஜெர்மன் அரசாங்கமும், பின்பு மக்களும் படிப்படியாகத் தங்களுடைய எதிர்ப்பைக் குறைத்துக்கொண்டனர். செப்டம்பர் 29ஆம் தேதியன்று நமது நான்காவது படை ஹிண்டன்பர்க் அரணை ஊடுருவி முன்னேறியது. அதே நாளன்று, ஹிண்டன்பர்கும், லுடெண்டார்ஃபும் சமாதானம் வேண்டுமென்று பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர். அக்டோபர் ஐந்தாம் தேதியன்று, ஜெர்மனி அரசாங்கம் ஜனாதிபதி வில்சனை, சமாதானம் செய்து கொடுக்கும்படி கேட்டுக்கொண்டது. சென்ற ஆண்டு ஜனவரி மாதத்திலேயே ஜனாதிபதி வில்சன் சமாதானம் செய்து வைப்பதற்கு முன்வந்தார். அதற்காக அவர் 14 அம்ச சமாதானத் திட்டம் ஒன்றை அறிவித்திருந்தார். ஜெர்மன் அரசாங்கம், இந்த சமாதானத் திட்டத்தை ஏற்றுக்கொள்வதாக அறிவித்தது. சமாதானத்தைச் செய்து வைப்பதற்கு முன்பு, படைகள் போரில் ஈடுபட்டிருப்பதை நிறுத்திக்கொள்ளவேண்டுமென்று உறுதிமொழி பெற்றுக்கொண்டார். இதற்குள், ஜெர்மன் கடற்படையில் புரட்சி ஆரம்பமாகி, பின்பு வடக்குத் துறைமுகங்களி

லிருந்து, பெர்லின், மியுனிச் ஆகிய நகரங்களுக்கும் பரவியது. நவம்பர் நான்காம் தேதியன்று வேலன்ஷியன்ஸ் (Valenciennes) அருகில் உள்ள போர்முனையில் பிரிட்டிஷ் படைகள் ஊடுருவிச் சென்று, ஸாம்பர் (Sambre) வரையிலும் முன்னேறினர். நவம்பர் 9ஆம் தேதியன்று கெய்ஸர் பட்டத்தைத் துறந்தார். அதற்குப் பிறகு, ஜெர்மனியில் குடியரசு அரசாங்கம் நிறுவப்பட்டது. இந்தப் புதிய குடியரசு அரசாங்கம் யுத்த நிறுத்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தது. ஹேய்க் எதிர்பார்த்ததை விட இந்த நிபந்தனைகள் கொடுமையாக இருந்தன. ஆனல், அமெரிக்கத் தளபதி பெர்ஷிங் (Pershing) நினைத்ததைவிட, சிறிது குறைவான கொடுமையாகத்தான் அவருக்குப் பட்டது. ஜெர்மானியர்கள் எல்லா சப்மரின்களையும், அவர்களது சில பலமிக்க கப்பல்களையும் சரணடையச் செய்யவேண்டுமென்று பிரிட்டன் வற்புறுத்தியது. மேலும், கடல் சுதந்திரத்தைப் பாதிக்கின்ற அளவில் அவர்களுக்கு நிபந்தனை தரப்பட்டால், வில்சன் திட்டத்தை பிரிட்டன் நிராகரிக்கவும் தயாராக இருந்தது.

நவம்பர் 11ஆம் தேதியன்று யுத்த நிறுத்த உடன்படிக்கை கையெழுத்தாகியது. நீண்ட காலமாகவே எதிர்பார்த்திருந்த தேர்தலில், 22ஆம் தேதியன்று லாயிட் ஜார்ஜ் போட்டியிட்டார். ஒரு மாதம் கழித்து, ஜெர்மனி போரினல் ஏற்பட்ட சேதங்களுக்காக எல்லா நஷ்டங்களையும் ஈடுசெய்ய வேண்டுமென்றும், கெய்ஸரையும் மற்ற யுத்தக் கைதிகளையும் தக்க முறையில் தண்டிக்கவேண்டுமென்றும் வாக்காளர்கள் வற்புறுத்தினர். லாயிட் ஜார்ஜ் பெரும்பான்மை ஆதரவுடன் மீண்டும் பதவியேற்ருர். அவருக்குத் துணையாக யூனியனிஸ்டு ஆதரவு இருந்தது. தொழிற் கட்சி, மற்றும் ஆஸ்குவித்தின் லிபரல் கட்சியினரைவிட, லாயிட் ஜார்ஜுக்கு அதிகப் பெரும்பான்மை ஆதரவு கிடைத்தது. 1919 ஜனவரியில் அவர் சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திட பாரிஸ் நகரத்திற்குச் சென்ருர்.

போர் நிறுத்தம் செய்யப்பட்டபொழுது, பிரிட்டிஷ் படைகளில், விமானப்படை, கடற்படை உட்பட, 8 மில்லியன் ஆண்களும், சுமார் 1 மில்லியன் பெண்களும் பணியாற்றி வந்தனர். பிரிட்டன் இந்தப் போரில் 6000 மில்லியன் பவுன்கள் வரையிலும் செலவு செய்திருக்கிறது. கடல் கடந்த நாடுகளில் உள்ள எல்லாப் பங்குகளையும் விற்றுவிட்டது. நேச நாடுகளுக்கு 1500 மில்லியன் பவுன்கள் வரையிலும் கடன் கொடுத்திருக்கிறது. தவிர, 6 மில்லியன் டன் எண்ணிக்கையுள்ள கப்பல்களையும் இழந்திருக்கிறது. போர்க் காலத்திற்கு முன்பிருந்ததைவிட

மூன்றில் ஒருபாகம் விளைச்சல்களை அதிகரித்திருக்கின்றது. 3 மில்லியன் ஏக்கர் நிலங்கள் புதிதாகச் சாகுபடிக்கு ஏற்றவாறு ஆக்கப்பட்டிருந்தன. வருமான வரி, 1 ஷில்லிங் 6 பென்னியிலிருந்து 6 ஷில்லிங் வரையிலும் அதிகரிக்கப்பட்டது; உபரி-வரி 6 பென்னியிலிருந்து 6 ஷில்லிங் வரையிலும் ஏற்றப்பட்டது: மேலும், தொழில்களைப் பொறுத்தவரையிலும், அமிதலாப வரி 80 சத விகிதம் வசூலிக்கப்பட்டது. மொத்த விலைவாசிகள் 1914-ல் இருந்ததைவிட 125 சத விகிதம் உயர்ந்துவிட்டன. அயர்லாந்தைத் தவிர, ஐம்பது வயதுக்குட்பட்ட எல்லா ஆண்களுமே பட்டாளத்தில் சேர்ந்தனர். சில முக்கியமான அலுவல்களில், $1\frac{1}{2}$ மில்லியன் பெண்கள், ஆண்கள் செய்யும் வேலைகளை மேற்கொண்டனர்.

பிரிட்டிஷ் சாம்ராச்சியத்தின் அரும் புதல்வர்களும், வருங் காலத் தலைவர்களுமாக ஏறத்தாழ ஒரு மில்லியன் பேர்கள் இறந்தது சாம்ராச்சியத்திற்கு ஈடில்லாத இழப்பாக அமைந்தது. மேற்கத்தியப் போர்முகத்தில் மட்டும் 1915 பிப்ரவரி முதல் 115,000 அதிகாரிகள் போர்ப் பலியானார்கள்; அதாவது மேற்படி காலக்கட்டத்தில் இரண்டு ஜெர்மன் அதிகாரிகளுக்கு ஐந்து பிரிட்டிஷ் அதிகாரிகள்வீதம் மாண்டார்கள் என்று சொல்லலாம்.

# போருக்குப் பிறகு
## 1919-1938

# 1. போர், அமைதி ஆகியவற்றின் விளைவுகள், 1919-1929

கிழக்கு ஐரோப்பாவில் ஏற்பட்ட ஒரு கொலை காரணமாக 1914ஆவது ஆண்டில் உலக அமைதியே சீர்குலைந்துவிட்டது. அதற்குப் பிறகு அந்த அமைதியை முழுவதுமாக நிலைநிறுத்த முடியவில்லை. பத்து மில்லியன் இளைஞர்கள் இந்தப் போரில் கொல்லப்பட்டனர். பலர் நோய்வாய்ப்பட்டு இறந்தனர். பல மில்லியன் மக்கள் ஆயிரக்கணக்கான வருடங்களாக அரும்பாடு பட்டு வளர்த்த கிறித்துவச் சமுதாயத்திலும் நாகரிகத்திலும், பாதுகாப்பின்றியும் ஆதரவின்றியும் இந்த நான்கு ஆண்டு போர்க்காலத்தில் தவித்தனர். இவ்வுலகத்தில் ஏற்பட்ட ஆன்மீக வளர்ச்சி மிகவும் குன்றிவிட்டது. அந்தச் சமயத்தில் பல தலைமுறையினர் அரும்பாடுபட்டுச் சேகரித்த மூலதனமும், உற்பத்திச் சாதனங்களும், போக்குவரத்துச்சாதனங்களும் அழிந்தன. புதிய ஆர்வங்கள் முளைத்தபோதிலும், கடன் அமைப்பில் தான் அவைகள் வளர்ச்சியடையவேண்டிய புதிய சூழ்நிலை ஏற்பட்டது. பழைய அமைப்புச் சீரழிந்துவிடுகின்ற நிலைமையும் ஏற்பட்டது. தவிர, ரஷ்யாவின் பழைய அமைப்பு முறை அழிந்துவிட்டது. ஆஸ்திரியா-ஹங்கேரியின் பேரரசு அழிந்து விட்டது. ஜெர்மனியும் துருக்கியும் துண்டாடப்பட்டன. இவைகளினால் புதிய அமைப்பு ஐரோப்பாவில் ஏற்படலாயிற்று. ஐரோப்பாவிலும் ஆசியாவிலும், இதுவரையிலும் அடக்கி ஆளப்பட்ட இனங்கள் புதிய தேசிய எழுச்சிகொண்டு உரிமைக்காகப் போராடத் தொடங்கின.

மேலும், பிட் காலத்தில் தோன்றியதைப் போன்று போர்க் காலத்தில் பல அவசரமான பிரச்சினைகளைக் கவனம் செலுத்த

முடியாமல் போய்விட்டது. போரின் விளைவாக, அந்தப் பிரச்சினைகளில் இப்பொழுது புதிய வேகம் தோன்றிவிட்டது. அயர்லாந்திலும், இந்தியாவிலும், எகிப்திலும், தென் ஆஃப்பிரிக்க யூனியனிலும் புதுக் கிளர்ச்சிகள் தோன்றின. நாடுகளின் முக்கியமான நலன்களைப் பாதுகாப்பதற்குமட்டும் இப் போர் நடத்தப்படவில்லை. ஆனால், ஜனநாயக லட்சியங்களுக்காகவுங்கூடத்தான் இந்தப் போர் நடத்தப்பட்டது. 1911–1912-ல் தொழிலாளர்கள் பல வேலை நிறுத்தங்கள் செய்து கிளர்ச்சிகளை ஆரம்பித்தனர். அக் கிளர்ச்சிகள் இன்னும் அதிகமாகப் போர் முடிந்தவுடன் ஏற்பட்டன. போர்க்காலத்தில் இத் தொழிலாளர்கள் பல தியாகங்களைச் செய்ய முன் வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், போர்க்காலத்தில் யுத்தத்திற்கு வேண்டிய சாதனங்களை உற்பத்தி செய்வதற்காக இந்தத் தொழிலாளர்கள், தாங்கள் அரும்பாடுபட்டுச் சாதித்த தொழிற்சங்க உரிமைகளையும் புறக்கணித்துவிட்டு முழு மூச்சுடன் உற்பத்திச்சாதனையில் ஈடுபட்டனர். அதற்குப் பிறகு, யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களும், மற்றும் பல கடைகளில் வேலை செய்து வந்தவர்களும் இடைவிடாது வேலை நிறுத்தங்களைச் செய்துகொண்டிருந்தனர். தொழிலாளர் இயக்கம் வலுவடைந்து வருகின்றதை அறிவிக்கும் அறிகுறிகளாக இவை காணப்பட்டன. ரஷ்யப் புரட்சியில், சாதாரண மக்கள் பெற்றிருந்த வலிமையைக் கண்டனர். இவர்கள், ஆயுதம் தாங்கிய படைகளையும் தங்களுடைய ஆதிக்கத்திற்குள் கொண்டுவந்ததைக் கண்டனர். மேலும், பேரரசில் காணப்பட்ட பலதரப்பட்ட இனத்தினரையும் தொழிலாளர்களையும் ஆதிக்கம் செய்து வந்த பழக்கத்தை, இப் புரட்சி பலமாகக் கண்டித்ததையும் நன்குணர்ந்தனர்.

இவ்விதமான புரட்சிக் காலத்திலும், பிரிட்டனில் 1919–1939 வரை, கன்சர்வேடிவ் அரசாங்கங்களே அமைந்தது மிகவும் ஆச்சரியமான நிகழ்ச்சியாகவே வரலாற்றில் குறிப்பிடவேண்டியுள்ளது. ஒரு மூன்று ஆண்டுக்காலம்மட்டுமே கன்சர்வேடிவ் அரசாங்கம் பதவியில் இல்லை. அமைதி ஏற்பட்ட பிறகு, பிரிட்டனை முற்றுகையிட்டதைப் போன்று பல சக்திகள் அதனுடைய ஆதிக்கத்திற்கு அப்பால் சென்று பிரிட்டனை ஆட்டிப் படைத்துக்கொண்டிருந்தன.

பிரிட்டிஷ் அரசாங்கத்தில் இதுவரை போற்றப்பட்டதும் கடந்த ஒரு நூற்றுண்டுக்காலமாக பறைசாற்றி வந்ததுமான ஜனநாயகத்தை இன்னும் அதிக அளவில் மக்கள் இப்பொழுது புரிந்துகொண்டனர். போர்க்காலத்தில் எல்லாரும் தியாகம்

செய்யவேண்டிய கடமை ஏற்பட்டதால், எல்லாருக்கும் இப் பொழுது சம உரிமைகளை அளிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவ்விதமான உரிமை உண்மையிலேயே இதுவரையிலும் காலம் கடத்தப்பட்டதாகும். லாயிட் ஜார்ஜ் சாதாரணப் போர் வீரனாக இருந்து, பிரதம அமைச்சராகப் பதவிக்கு வந்தவர். அவர் கிராம்வெல்லைப் (Cromwell) போலச் சாதாரண மக்களுடைய உரிமையில் ஆர்வம்கொண்டவர். ஜனநாயகத்தின் பிரதிநிதி களுடன் நேரிடையான தொடர்புகொண்டவர். பொதுத் தேர்தல்கள் நிகழ்வதற்கு முன்பாகவே, லாயிட் ஜார்ஜ் அவரு டைய கூட்டு மந்திரிசபையில், தொழிலாளர் தலைவர்களை அங்கத்தினர்களாகக் கொண்டுவந்தவராவர். அப்பொழுது அவர் ஜனநாயகத்தின் வளர்ச்சியை முன்னிட்டு இரண்டு சட்டங் களை நிறைவேற்றினார். 1918-ல் அவர் நிறைவேற்றிய மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் மிகவும் குறிப்பிடத்தக்கது. இதனால், வாக்காளர்கள் எண்ணிக்கை மூன்று மடங்கு அதிகரித்தது. இதன்படி அவர்களின் எண்ணிக்கை இப்பொழுது 20 மில்லியன் மக்களுக்கு அதிகரித்துவிட்டது. 21 வயதுக்கு மேற்பட்ட எல்லா ஆண்களுக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டது. தல அரசாங்கத் தில் வாக்குரிமை பெற்ற பெண்களும், அல்லது வாக்குரிமை பெற்ற ஆண்களின் மனைவிகளும் முப்பது வயதிற்கு மேற்பட்ட வர்களாக இருந்தால், அவர்களுக்கும் வாக்குரிமை அளிக்கப் பட்டது. திறமை, அல்லது அறிவு ஆகியவற்றின் பரிசாக இது வரையிலும் கருதப்பட்ட சொத்துடைமை இப்பொழுது அகற்றப் பட்டு, அரசியல் உரிமையாக எல்லா மக்களுக்கும் சமத்துவமான நிலையில் வாக்குரிமை தரப்பட்டது. இதனால், பன்மை முறை வாக்குரிமை அகற்றப்பட்டது. இத்துடன், 50,000 மக்களுக்கும் குறைந்த அளவில் உள்ள பரோக்கள் பாராளுமன்றப் பகுதிகளாக இருக்கவேண்டியதில்லையென்று அறிவிக்கப்பட்டது. இதைத் தவிர, ஃபிஷர் என்ற கல்வி அமைச்சர், ஒரு சட்டத்தை நிறை வேற்றினார். அதன்படி பள்ளிகளில் படிக்கவேண்டிய வயதைப் பதினான்கு வரையிலும் உயர்த்திவிட்டார். அத்துடன், குழந்தை கள் வேலைக்கு அமர்த்தப்படுவதையும் ரத்து செய்தார். மற்றும் ஓய்வுகாலப் படிப்பு பதினெட்டு வயதுவரையிலும் தரப்பட வேண்டுமென்ற முறையை நீடித்தார்.

நாட்டில் பொருளாதாரக் குடியாட்சி எண்ணங்கள் மலரத் தொடங்கின. அதனால், அரசாங்கத்தின் செல்வாக்கும் அதிகார மும் அதிகரித்துவிட்டன. அரசாங்கத்தின் ஆதிக்கத்திற்குள் பல சக்திகள் அடக்கமாகிவிட்டன. அத்துடன் பழைய உரிமை களும் மிகவும் குறைந்துவிட்டன. அரசாங்கத்தின் அதிகாரம்

பெருகியவுடன், பிரதம அமைச்சரின் செல்வாக்கும் மதிப்பும் இப்பொழுது அதிகமாகிவிட்டன. இவ்வளவு மதிப்பும், செல் வாக்கும் பிரதம அமைச்சருக்கு கிளாட்ஸ்டன் காலத்தில் கிடைத்திருந்தால், அது கேபினட்டையும் பலவீனமாக்கிவிடும் என்று அவர் கண்டிப்பாகக் கூறியிருப்பார். ஆனால், ஒரு வகை யில், கேபினட்டின் அதிகாரங்களுங்கூட அதிகமாகிவிட்டதைக் காண்கின்றோம். இதைப்போலவே, காமன்ஸ் சபை, குடிமக்கள், நீதிமன்றங்கள் ஆகியவற்றின் அதிகாரங்களும் அதிகரித்து விட்டன. பேரரசின் பாதுகாப்பிற்காக ஒரு குழு அமைக்கப் பட்டு, அதைக் கேபினட்டுடன் தொடர்புபடுத்தினர். அந்தக் குழுவின் ஆலோசனைகளும் தீர்மானங்களும் முதன்முதலாகப் பதிவு செய்யப்பட்டன. அந்தக் குழுவினருக்குச் சில அதிகாரங் களும் தரப்பட்டன. இன்னும் தனிப்பட்ட அமைச்சர்களுக்கும் நிறைய அதிகாரங்கள் சட்டபூர்வமாகத் தரப்பட்டன. அவர் களுக்குச் சட்டத்தை இயற்றவும் சட்டத்தைப் பயன்படுத்த வும் அதிகாரம் தரப்பட்டது. சுகாதாரம், தொழில், போக்கு வரத்து, பென்ஷன் ஆகிய துறைகளுக்குப் புதிய அமைச்சர்கள் நியமிக்கப்பட்டனர். பாங்குகள், நாணய விநியோகம், உற்பத்தி, விலைகள், கூலிகள், உணவுப் பண்டங்களின் விலைகளைக் குறைத் தல் ஆகியவற்றைக் கட்டுப்படுத்த அரசாங்கம் அதன் நிதித் துறைமூலமாக முயற்சிகள் எடுத்துக்கொண்டது. அத்துடன், போர்க்காலத்தில் சுரங்கங்களைத் தேசியமயமாக்குதல், மற்றும் ரயில்வேக்கள், கப்பற் போக்குவரத்து ஆகியவற்றையும் தேசிய மயமாக்குதல் போன்றவைகளையும் அரசாங்கம் அதன் பொறுப் பில் எடுத்துக்கொண்டது. இதனால், பழைய தனிப்பட்டவர் களின் கோட்பாடுகளும், காப்டெனின் கருத்துகளும், லிபரல் எண்ணங்களும் இப்பொழுது முற்றிலும் மாறிவிட்டன.

மக்களுக்கும் அவர்களுடைய முயற்சிகளுக்கும் ஏற்ப அரசாங் கத்தை அமைக்கவேண்டுமென்று சேதாம் கூறியதைப் போன்று, இப் புதிய சூழ்நிலையில், வரலாற்றுப் புகழ்பெற்ற கட்சி அரசாங் கம் மாற்றி அமைக்கப்படவேண்டியதாயிற்று. 1794-ல் தோன் றியதைப்போல, இப்பொழுதும் போர்க்கால அவசரத்தை முன்னிட்டு, கட்சிக்கு முக்கியத்துவம் அளிக்காது, கூட்டு மந்திரி சபை அமைக்கப்பட்டது. கட்சி அரசாங்கத்திற்கு எப்படி இரண்டு பிட்டுகள் முக்கியத்துவம் அளிக்கவில்லையோ, அதைப் போலவே, மிகச் சிறப்பான அரசியல் ஆற்றல்பெற்ற லாயிட் ஜார்ஜ், சர்ச்சில், பர்க்கின்ஹெட் ஆகியோரும் கட்சி அரசாங் கத்திற்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை. ஆனால், போருக்குப் பிறகு, மீண்டும் கூட்டு மந்திரிசபை கவிழ்ந்துவிட்டது. அதனால்,

கட்சிகள் மீண்டும் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்குப் போராட்டம் நடத்தின. ஆனால், இந்தப் போராட்டம் இப்பொழுது கன்சர்வேடிவ், லேபர் கட்சிகளிடையேதான் அதிகமாக நிகழ்ந்தது. இந்தப் போராட்டங்கள் மீண்டும் லிபரலிசத்தை வீழ்த்தின.

1918 பொதுத் தேர்தல்களுக்குப் பிறகு, லாயிட் ஜார்ஜ் அரசாங்கம் நான்கு ஆண்டுகளில் பதவியை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. ஏனெனில், அந்த அரசாங்கத்தின் அடித்தளமே ஆட்டங்கண்டிருந்தது. பாராளுமன்றத்திலே, 400 கன்சர்வேடிவ்களுக்கிடையே 136 கூட்டு மந்திரிசபை ஆதரவாளர்களான லிபரல்களும் வீற்றிருந்தனர். லிபரல் கட்சியைச் சீர்குலைத்துவிட்டதால், லாயிட் ஜார்ஜ் தன் செல்வாக்கை இழந்துவிட்டார். கன்சர்வேடிவ் தலைவர்களான ஆஸ்டின் சேம்பர்லேன், பர்க்கின்ஹெட் போன்றவர்களும், லிபரல் கட்சியைச் சேர்ந்த சர்ச்சில் போன்றவர்களும் கூட்டு மந்திரிசபை நிரந்தரமாக இருக்கும் என்று நம்பினர். சோஷியலிசத்திற்கு எதிராக, லிபரல்களும் கன்சர்வேடிவ்களும் ஒன்றுசேர்ந்து பணியாற்றவேண்டுமென்று விரும்பினர். ஆனால், போருக்குப் பிறகு இந்த இரு கட்சிகளும் ஒன்று சேரும் வாய்ப்பு மிகவும் குறைந்து விட்டது. லிபரல் கட்சியிலிருந்தவர்கள் பெரும்பாலும் லேபர் கட்சிக்கு ஆதரவளித்ததே இதற்குக் காரணமாகும். லாயிட் ஜார்ஜும், அவருடைய ஆதரவாளர்களும் கன்சர்வேடிவ் அங்கத்தினர்களை அதிகமாகப் புண்படுத்திவிட்டனர். இதைத் தவிர, கன்சர்வேடிவ்களின்மீது வெறுப்பு ஏற்பட, பல பொதுப்படையான காரணங்களும் இருந்தன.

பல காரணங்கள் இருந்தபோதிலும் மற்ற எந்த அரசாங்கமும் பதவிக்கு வருவதைவிட, இதற்கு நல்ல ஆதரவு இருந்தது என்று கூறவேண்டும். ஜூன் 1919-ல் நேச நாடுகளுக்கிடையே பலத்த மனக்கசப்பு இருந்தபோதிலும், முக்கியமான நேச நாடுகளான பிரிட்டன், ஃபிரான்ஸ், அமெரிக்க ஐக்கிய நாடுகள் பொதுப்படையான கொள்கைகளில் சம்மதத்தை அளித்து வெர்சேல்ஸ் உடன்படிக்கையில் கையெழுத்திட்டன. இந்த உடன்படிக்கையில் ஏற்பட்ட குறைகளை இனிமேல்தான் கவனிக்க வேண்டியிருந்தது. பிரிட்டிஷ் பேரரசைப் பொறுத்தவரையிலும், ஜெர்மன் கடற்படை சரணடைதலும், மற்றும், ஜெர்மன் யுத்த தளவாடங்களை அழித்தலும், போரில் ஏற்பட்ட சேதங்களுக்காக, பிரிட்டனின் பங்கு 22 சதவிகிதம் ஜெர்மனியிடமிருந்து பெற்றுக்கொள்ளுதலும் வேண்டும் என்பன போன்ற நிபந்தனைகளைப் பல மாநாடுகளில் விவாதித்துப் பின்பு முடிவு செய்தனர்.

இந்த நஷ்ட ஈடு 1921-ல் 6000 மில்லியன் பவுன்களென்று நிர்ணயம் செய்தனர். தவிர, சர்வதேச சங்கத்தினரால், சில ஜெர்மன் காலனிகள், பிரிட்டன் கண்காணிப்பில் விட்டு வைக்கப் பட்டன. பிரிட்டன் கண்காணிப்பில் விட்டுவைக்கப்பட்ட நாடுகளாவன : ஈராக், பாலஸ்தீனம், தங்கனீக்கா, ஜெர்மன் தென்மேற்கு ஆஃப்பிரிக்கா; பின்பு, காமரூன், டோகோலாந்து, ஸமோவா, நியூகினியா, மற்றும் பஸிஃபிக் தீவுகள் ஆகியவற்றின் சில பகுதிகள் பிரிட்டனுக்குத் தரப்பட்டன.

முழுவதும் நம்முடைய முடிவுகளாக இல்லாவிடினும் சில முடிவுகள் அமைதியைச் சீர்குலைத்தன. பிரிட்டனைத் தனியாக ஒதுக்கும் அளவிற்குச் செய்துவிட்டன. அத்துடன் அரசாங்கத் தின் செல்வாக்கையும் பெரிதும் பாதித்துவிட்டன. நமது ஜனநாயக அரசாங்கத்திற்கும், போரைப்பற்றியும் அதனுடைய பொறுப்புகளைப்பற்றியும் வெறுப்பு ஏற்பட்டது. கட்டாய இராணுவ சேவை கூடாது என்று சொல்லியும், பின்பு வேகமாகப் படை குறைப்புச் செய்ததும், பல பகுதிகளிலிருந்து நமது படை கள் பின்வாங்கிக்கொண்டதும், உலகத்திலுள்ள நமது செல் வாக்கைப் பெரிதும் பாதித்துவிட்டன. அமெரிக்கஐக்கிய நாடுகள், ஜனாதிபதி வில்சனையும் அவருடைய பணிகளையும் ஏற்றுக் கொள்ளாததால், சர்வதேசச் சங்கத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் அங்கம் வகிக்கமுடியாமல் போய்விட்டது. இதனால், அமெரிக்காவுடன் சேர்ந்து ஃபிரான்சிற்கு சில எல்லைக் கோடுகள் சம்பந்தமாக உறுதி அளித்ததிலிருந்து நாமும் பின்வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. லாயிட் ஜார்ஜ் பதவியை விட்டுப் போவதற்குள், இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்கும் உள்ள நட்பு பாதிக்கப்பட்டது. ஆனால், பகைமை வளர்ந்தது என்று கூறமுடியாது. ஏனெனில், வெர்சேல்ஸ் மாநாட்டில் திருத்தி அமைக்கப்பட்ட ஐரோப்பிய வரைபடம், ஃபிரெஞ்சுக் காரர்களின் விருப்பத்திற்கேற்ப ஏற்பட்டதுதான் என்று கூற வேண்டும். இதன்படி, ஜெர்மனியைச் சுற்றிலும் சிறிய நாடுகள் ஏற்படுத்தப்பட்டு, அதன் ஆக்கிரமிப்பைத் தடுக்க வழி செய்யப் பட்டது. இந்தச் சிறிய நாடுகளெல்லாம், ஃபிரெஞ்சுக்காரர் களுக்கு நட்புரிமை கொண்டுள்ளதாக அமைத்துக்கொண்டன. ஆனால், இவ்விதமாகச் சிறிய ஜெர்மன் சிறுபான்மை இனத் தினரை அந்நிய அரசாங்க ஆதிக்கத்தில் விடுவதென்பது ஆபத்தை விளைவிக்கும் என்று லாயிட் ஜார்ஜ் எச்சரிக்கை விடுத் திருந்தார். சைலீஷியா முழுவதையும் போலந்து கைப்பற்று வதாக இருந்ததை பிரிட்டன்தான் தடுத்து நிறுத்தியது. ஆனால், போலந்தின் எல்லைகள் மிகவும் விஸ்தரிக்கப்பட்டதால், ரஷ்யா

வுடன் மோதவேண்டிய அவசியம் தவிர்க்க முடியாததாகி விட்டது. போருக்குப் பிறகு, போல்ஷ்விக் ரஷ்யாவை நேச நாடுகள் நடத்தியவிதம் மிகவும் மோசமானதாக இருந்ததென்று பிரிட்டிஷ் லேபர் கட்சியினர் கருதினர். போல்ஷ்விக் ரஷ்யா விற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தவர்களுக்கு நாம் ஆர்க்கேஞ்சல், முர்மான்ஸ்க், கிரிமியா, அல்லது சைபீரியா ஆகிய பகுதிகளின் வழியாக உதவி செய்தோம். இது 1917ஆவது ஆண்டிலிருந்தே தொடங்கப்பட்டதென்றாலும், 1919-ல்கூட, அதிக பொருட் செலவுடன் உதவி அளிக்கப்பட்டது. இறுதியில் முழுத் தோல்வி யில் முடிந்தது. இப்படிச் செய்வதால், ஜெர்மனி ரஷ்யப் பகுதி களைக் கைப்பற்ற முடியாமல் போகும் என்று பிரிட்டன் நினைத்தது. மற்ற நாட்டிலுள்ள மக்கள், போராட்டத்தை நடத்திச் சுதந்திரத்தைப் பெறவேண்டுமென்று விரும்பினார்கள். அதைத் தடுப்பதற்கு நமக்கு என்ன உரிமை இருக்கிறதென்று நமது ஜனநாயகம் கண்டித்தது.

போரின் விளைவுகளாலும் மற்றும் சமாதானத்தை நிலை நிறுத்தும் ஆர்வத்தாலும், மற்றப் பல நெருக்கடியான பிரச்சினை கள் கிளம்பின. சுய நிர்ணய உரிமை என்பது ஆர்வத்துடன் ஐரோப்பாவிலும் ஐரோப்பாவைக் கடந்தும் கோரப்பட்டது. இந்தியா போரில் சேவை செய்ததற்குப் பரிசாக இந்தச் சுய நிர்ணய உரிமையைக் கேட்டது. 1919-ல் பட்டாளத்திற்கு ஆள் சேர்க்கும்பொழுது பஞ்சாப்பில் பல கலவரங்கள் நிகழ்ந்தன. இந்தக் கிளர்ச்சிகளையெல்லாம் மிகவும் கடுமையாக அடக்கினர். தவிர, ஜனரல் டையர் என்பவர் அமிர்தசரசில் கிளர்ச்சி செய்த கூட்டத்தைக் கலைக்கத் துப்பாக்கிப் பிரயோகம் செய்தார். இதன் விளைவாக, மிகவும் சங்கடப்பட்டு அப்பொழுதிருந்த கன்சர்வேடிவ் அரசாங்கம் மாண்டேகு-செம்ஸ்ஃபோர்ட் திட்டத்தை (Montagu-Chelmsford) இந்தியாவிற்கு அளித்தது. அதன்படி பொறுப்பாட்சி அரசாங்கத்தை நிர்வகிக்கச் சில அதிக அதிகாரங்கள் தரப்பட்டன. தவிர, அராபியர்களுக்கு நாம் சில உறுதிமொழிகளை அளித்திருந்தோம். ஆனால், அதே சமயத்தில் பல்ஃபோர் அறிக்கை ஒன்றும் விடப்பட்டது. அந்த அறிக்கை யின்படி, யூதர்களுக்கும் ஒரு தேசத்தை உருவாக்கித் தருவ தாகவும் கூறப்பட்டிருந்தது. ஃபிரான்சின் கண்காணிப்பில் விடப்பட்ட ஸிரியாவுடன், இந்த உறுதிமொழிகள் எப்படியா வது பொருத்தப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டது. எகிப் திலும் சுய ஆட்சி உரிமை வேண்டுமென்று கோரி, 1919-ல் கிளர்ச்சி செய்யப்பட்டது. 1922-ல் நமது கண்காணிப்பை அங்கே ரத்துச் செய்துவிட்டு, எகிப்தைச் சுதந்திர நாடாக அறிவித்தனர்.

இவைகளெல்லாம் தவிர்க்கமுடியாத பிரச்சினைகள் என்ற போதிலும், ஒரு பிரச்சினையில்மட்டும், லாயிட் ஜார்ஜ் தன் விருப்பப்படி அயல்நாட்டுக் கொள்கையைப் பின்பற்றினர். அப்படி அவர் பின்பற்றியது, வெளிநாட்டு அமைச்சராக இருந்த கர்ஸனின் கொள்கைக்கும் முற்றும் முரண்பட்டதாக இருந்தது. 1920-ல் செய்துகொள்ளப்பட்ட ஸெவரஸ் (Sevres) உடன்படிக்கையின்படி, துருக்கியிலிருந்து ஸிரியா, மெஸபடோமியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளைப் பிரித்துவிட்டனர். ஆனால், ஸ்டிரைட்ஸ் (Straits) பகுதியை நடுநிலைமைப் பகுதியாக்கினர். கிரேக்கர்களால் சூழப்பட்ட சிறு பகுதியாகக் கான்ஸ்டான்டிநோபிளை உருவாக்கினர். தவிர, ஆசியா மைனரின் ஒரு பகுதியை கிரேக்கர்களின் ஆதிக்கத்தில் விட்டனர். இந்த உடன்படிக்கை ஆக்கிரமிப்பை ஒத்தது என்று எதிர்த்து, கல்லிபோலியின் வீரனை முஸ்தபா கெமால், புதிய துருக்கி அரசாங்கத்தை அங்கோராவில் அமைத்தார். 1922-ல் கிரேக்கப் படைகளை அவர் முற்றிலும் சிதறடித்தார். துருக்கியின் ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாத்து வந்த பிரிட்டிஷ் படைகளைச் சானுக் என்ற இடத்தில் முறியடித்து, துருக்கியப் படைகள் முன்னேறின. இந்தச் சமயத்தில், நமது நேச நாடுகளான ஃபிரான்ஸ், இத்தாலி தனிப்பட்ட விதத்தில் துருக்கியுடன் ஏதோ ஏற்பாடுகளைச் செய்திருந்தனவென்று தெரியவந்தது. அதனால், பிரிட்டன் தன்னந்தனியாக இந்தப் பயனற்ற காரணத்திற்காகமட்டும் போரிடுவதைப் பிரிட்டிஷ் மக்களோ, அல்லது டொமினியன் மக்களோ ஆதரிக்க முன்வரவில்லை.

போர் முடிந்தபிறகு வேலையில்லாத் திண்டாட்டம் நமது முக்கியமான தொழில்களில் ஏற்பட்டுவிட்டது. பல வேலை நிறுத்தங்கள் செய்யப்பட்டன. தொழிலாளர் கட்சியின் குறிக்கோள்களுக்கும், போர் முடிந்தபிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகளுக்கும் நிறைய மாறுபாடுகள் காணப்பட்டன. இந்த நெருக்கடியான பிரச்சினைகளைத் தவிர்ப்பதற்கு, அரசாங்கம் பல மானியங்களை அளித்தும் கூலிச் சலுகைகளைஅளித்தும் முயற்சி செய்தது. தவிர, அரசாங்கம் பல சிக்கன நடவடிக்கைகளை எடுக்கவும் தீர்மானித்தது. அதனால், பல துறைகளில் செலவு செய்யப்படுகின்ற செலவுத் தொகையைக் குறைத்தும், போர்க்காலத்தில் நியமிக்கப்பட்ட சில அமைச்சுத் துறைகளை ரத்து செய்தும், தானிய உற்பத்திச் சட்டத்தை ரத்து செய்தும், சிக்கனமாகவும் செயலாற்ற அரசாங்கம் முயன்றது. தானிய உற்பத்திச் சட்டத்தை ரத்து செய்ததால், தானியத்திற்கு நிர்ணயம் செய்திருந்த விலையையும், குறைந்தபட்ச விவசாயக் கூலியையும் ரத்து செய்யவேண்டிய

தாயிற்று. இந்த நடவடிக்கைகளினால், கன்சர்வேடிவ்-லிபரல் கட்சிகளின் கூட்டுறவு மிகவும் சோதனைக்குள்ளாகியது. ஆனால், இவற்றைவிட, அயர்லாந்துப் பிரச்சினையைத் தீர்த்து வைப்பதில்தான், இந்தக் கட்சிகளின் நட்புக்கு மிகவும் பெரிய சோதனை ஏற்பட்டது.

1917-18-ல் ஐரிஷ் கட்சிகள் ஒரு மாநாட்டைக் கூட்டி அல்ஸ்டரின் மனத்தை மாற்ற முயற்சி செய்தன. ஆனால், அக் கட்சிகளின் முயற்சி பயன் அளிக்கவில்லை. அந்தச் சமயத்தில் அயர் லாந்தில் கட்டாய இராணுவ சேவையை அமலாக்க எடுத்துக் கொண்ட முயற்சியின் விளைவாக,ஸின் ஃபென் (Sinn Fein) இயக் கத்திற்கு இப்பொழுது அதிக வலிமை ஏற்பட்டுவிட்டது. ஸின் ஃபென் இயக்கம் சட்ட விரோதமானதென்று அறிவிக்கப்பட்டது. அந்த இயக்கத்தின் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். ஆனால், அந்த இயக்கத்தினர் உறுதியுடன் இருந்ததுமட்டுமன்றி, ஆயுத தங்களைத் தாங்கியவர்களாகவும் இருந்தனர். 1918-ல் நடந்த பொதுத் தேர்தல்களில், அவர்கள் எழுபத்துமூன்று தொகுதி களைக் கைப்பற்றினர். ஆனால், அவர்கள் வெஸ்ட்மினிஸ்டரில் உள்ள பாராளுமன்றத்தில் அங்கம் வகிக்க மறுத்தனர். தவிர, அவர்கள் அயர்லாந்தைக் குடியரசென பிரகடனம் செய்தனர். அதனால் நாட்டில் உள்நாட்டுப்போர் ஏற்படுகின்ற சூழ்நிலை உருவாகியது. 60,000 பேர் கொண்ட பிரிட்டிஷ் படையினரால், அங்கு நிகழ்ந்த கொலைகளையும் கொள்ளைகளையும் தடுத்து நிறுத்த முடியவில்லை, 1920-ல் நான்காவது முறையாக அயர் லாந்துக்குச் சுய ஆட்சி தரும் மசோதா நிறைவேறியது. அதன்படி பெல்பாஸ்டில் ஒரு பாராளுமன்றமும், டப்ளினில் ஒரு பாராளு மன்றமும் அமைப்பதென்று அறிவிக்கப்பட்டது. ஆனால், ஸின் ஃபென் இயக்கத்தினர் இவ்விதமான பிரிவினையை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். இந்தச் சலுகைகள் எல்லாம், அவர்களால் ஏற்றுக்கொள்ளப்படாததால் லாயிட் ஜார்ஜ் வேறு வழியின்றி அடக்குமுறைகளில் ஈடுபட்டார். இதனால், பழிவாங்கும் படலம் ஆரம்பித்தது. சில சமயத்தில் துணைக் காவலர் படையாலும், சில சமயத்தில் படையாலும் அடக்குமுறைகளைப் பின்பற்றினர். ஒவ்வொரு சமயத்தில் அதிகாரபூர்வமல்லாத நடவடிக்கை களையும் மேற்கொண்டு இந்த இயக்கத்தை ஒடுக்க முயன்றனர்.

அல்ஸ்டருக்காகப் போரிடத் தம்முடைய ஓய்வையும் புறக் கணித்துவிட்டு போனர்-லா முன்வந்தார். ஆனால், மக்களுடைய கருத்து வேறுவிதமாக இருந்தது. கொலையும் கொள்ளையும் நீடித்திருப்பதில் அவர்களுக்குச் சிறிதும் விருப்பமில்லை. ஏதாவது

அசம்பாவிதம் ஏற்பட்டால், இந்த உள்நாட்டுப் போரில் சுமார் 100,000 பேர் ஈடுபடத் தயாராக இருந்தனர். அதனால் 1921-ல் எப்படியாவது இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடத்தப்பட்டன. டிசம்பர் மாதத்தில், இந்த சமாதானப் பேச்சு வார்த்தைகளால், அயர்லாந்து உடன்படிக்கை ஏற்பட்டது. இந்த உடன்படிக்கையின்படி, தெற்கு அயர்லாந்து டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடாகப் பாவிக்கப்பட்டது. அங்கிருந்த பிரிட்டிஷ் படைகளும் காவலர்களும் திருப்பி அழைத்துக்கொள்ளப்பட்டனர். இந்த அயர்லாந்து உடன்படிக்கையில் கையெழுத்திட்டவர்களில் முக்கியமானவர்கள், ஸின் ஃபென் இயக்கம் தோன்றுவதற்கு முக்கிய காரணமாக இருந்த ஆர்தர் கிரிஃபித் என்பவரும், அவர்களுடைய கொரில்லாப் படையின் தலைவராக இருந்த மைக்கேல் காலின்ஸ் என்பவருமாவர். இந்த உடன்படிக்கையில் அவர்கள் கையெழுத்திட்டதால், அவர்களுடைய உயிர்களுக்குங்கூட ஆபத்து ஏற்பட்டது. இதனால் கிரிஃபித் மிகவும் சோர்வுற்றார்; காலின்ஸ் சில அரசியல்வாதிகளால் கொல்லப்பட்டார். இந்த உடன்படிக்கையை ஆதரித்தவர்களுக்கும், அயர்லாந்தைக் குடியரசு நாடாக்க வேண்டுமென்று விரும்பிய டி வேலராவின் குடியரசுப் படையினருக்கும் மிகவும் கடுமையான போராட்டம் நிகழ்ந்தது. 1922-ல் நிகழ்ந்த அயர்லாந்துப் பொதுத் தேர்தல்களுக்குப் பிறகு, இந்த உடன்படிக்கையை ஆதரித்தவர்களுக்கே வெற்றி கிடைத்ததால், காஸ்கிரேவ் (Cosgrave), ஓ'ஹிக்கின்ஸ் (O'Higgins) ஆகியோர் இந்த உடன்படிக்கையை அமலாக்க முயற்சி செய்தனர். இவ்விதமாக இப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு லாயிட் ஜார்ஜுக்கு, கூட்டு சேர்ந்த கன்சர்வேடிவ்களான பர்க்கின்ஹெட்டும், ஆஸ்டின் சேம்பர்லேனும் உறுதுணையாக இருந்தனர். ஆனால், கட்சியின் பெரும்பான்மையோர், கொலைகாரர்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டதை சிறிதும் விரும்பவே இல்லை. தவிர அவர்களுக்கு, தெற்கு யூனியனிஸ்டுகளைப் புறக்கணித்துவிட்டதும் பிடிக்கவில்லை. அல்ஸ்டர் அல்லாத மற்ற அயர்லாந்துப் பகுதிக்குச் சுய ஆட்சி கிடைத்ததும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

இக் காரணங்களால் லாயிட் ஜார்ஜ் தலைமையில் கூட்டு மந்திரிசபை நீடிப்பது முடியாததாகிவிட்டது. லாயிட் ஜார்ஜ் இந்தக் கூட்டு மந்திரிசபை நீடித்திருக்கவேண்டுமென்பதற்காக மற்றொரு தேர்தலை நடத்தவேண்டுமென்றிருந்ததை, ஆத்திரத்துடன் மக்கள் நிராகரித்துவிட்டனர். 1922-ல் இலையுதிர் காலத்தில், கன்சர்வேடிவ் கட்சியைச் சார்ந்த சில உதவி அமைச்

சர்கள் பால்டுவின் தலைமையில் லாயிட் ஜார்ஜ் அமைச்சரவையை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவே, லாயிட் ஜார்ஜ் ராஜிநாமா செய்தார். பிறகு, போனர் லா கன்சர்வேடிவ் அரசாங்கத்தை அமைத்தார். லாயிட் ஜார்ஜின் அமைச்சரவை கலைந்தது லிபரலிஸத்தின் வீழ்ச்சியாகும். அப்பொழுது நடைபெற்ற பொதுத்தேர்தலில், லாயிட் ஜார்ஜின் குழுவினர் 57 இடங்களையும், ஆஸ்குவித் கோஷ்டியினர் 60 இடங்களையுமேதான் கைப்பற்றினர். ஆனால், யூனியனிஸ்டுகள் 344 இடங்களையும், லேபர் கட்சியினர் 159 இடங்களையும் கைப்பற்றினர். இந்தத் தேர்தலுக்குப் பிறகுங்கூட அரசியல் நிலைமையில் ஒரு தெளிவு ஏற்படவில்லை. உறுதியான நிலைமை இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் ஏற்பட்டது.

மே 1923-ல் போனர் லா இறந்தவுடன், கட்சி அனுபவம் மிக்கவரும் ஆணவம் மிக்கவருமான கர்ஸனைப் புறக்கணித்துவிட்டு பால்டுவின் என்பவரைத் தேர்ந்தெடுத்தது. அவர் திறமை மிக்க நல்ல வியாபாரி. இன்னும் பொதுமக்களுக்கு இவரைப் பற்றி அதிகமாகத் தெரியாது. தொழில்துறையில் நல்ல அனுபவமிக்க இவர், டிஸ்ரேலி கொண்டிருந்த கன்சர்வேடிவ் கொள்கைகளைத்தான் ஜனநாயகத்திற்குச் சிறந்ததென்று பின்பற்றினார். கூட்டு மந்திரிசபை கலைந்த பிறகு கன்சர்வேடிவ் கட்சியில் ஏற்பட்டிருந்த பலவீனத்தைச் சரிசெய்ய, பால்டுவின் சில கருத்துகளைக் கொண்டிருந்தார். கன்சர்வேடிவ் கட்சிக்கு அடுத்தபடியாகத் தகுதிபெற்ற ஆளும் கட்சி லேபர் கட்சிதான் என்று அவர் நினைத்திருந்தார். அதனால் அந்தக் கட்சியைச் சரியாக வளர்ப்பதற்கு அவர் நல்ல வாய்ப்புகளை அளித்தார். ஆனால், அவர் பிரிட்டனுடைய தொழில்கள் செழிப்புறவேண்டி பாது காப்புக் கொள்கையைப் பின்பற்றி, நிறைய காப்புவரிகளை விதித்தார். எங்குப் பார்க்கினும் வேலையில்லாத் திண்டாட்டம் இருந்து வந்தமையால், அவருக்கு இந்தக் கொள்கையைப் பின்பற்றுவதில் பல இடையூறுகள் நேர்ந்தன. கட்சிக்குள்ளேயே ஒற்றுமை மனப்பான்மை வளரும் முன்பும், மற்றும் பல தலைவர்கள் எதிர்ப்புத் தெரிவித்தும், இவர் டிசம்பரில் உடனடியாகத் தேர்தல்களை நடத்தவேண்டுமென்று முடிவு செய்தார். அவசரமாக இந்தத் தேர்தல்களை நடத்தியதில், அவருடைய கட்சியின் பலம் குறைந்ததைத்தான் காணமுடிந்தது. இப்பொழுது யூனியன்ஸ்டுகளின் கட்சி பலம் 259-க்குக் குறைந்து விட்டது. லேபர் கட்சியின் பலம் 191 வரை உயர்ந்துவிட்டது. கூட்டுச் சேர்ந்த லிபரல்கள் 158 இடங்களைக் கைப்பற்றினர். அதனால், எந்தக் கட்சி அரசாங்கத்தை அமைத்தாலும், மிகவும்

இடர்ப்பாடுகளிடையேதான் ஆட்சி செய்யவேண்டியிருந்தது. சிலர், மீண்டும் கன்சர்வேடிவ்-லிபரல் கூட்டு மந்திரிசபையை, அமைக்கலாம் என்று கருதலாயினர். ஆனால், வாக்காளர்கள் கன்சர்வேடிவ் கொள்கையை ஆதரிக்கவில்லையென்பதைத் தெளிவாக இந்தத் தேர்தலில் அறிவித்திருந்தனர். அதனால், பால்டுவினும் ஆஸ்குவித்தும் இதுவரை பலம்பொருந்திய எதிர் கட்சியாக இருந்தலேபர் கட்சியை அரசாங்கம் அமைக்க விடுவதே நல்லதென்று கருதினர்.

ராம்ஸே மேக்-டொனல்ட் தலைமையில் முதல் லேபர் அரசாங்கம் அமைக்கப்பட்டது. ஆனால், அந்த அரசாங்கம் ஓர் ஆண்டுக் காலம் வரைதான் பதவியில் இருந்தது. இந்த அரசாங்கம் வீழ்ச்சி அடைவதற்கு மிகவும் முக்கியக் காரியமாக இருந்தது அந்தக் கட்சியிலுள்ள இடதுசாரிகளேதான். போர்க்காலத்திலிருந்தே, லேபர் கட்சியில், தீவிரவாதிகளென்றும் அல்லது ஃபேபியன் (Fabian) என்றும் ஒரு தனிப்பட்ட இயக்கத்தைச் சார்ந்தவர்களும், புரட்சி எண்ணங்களைக்கொண்ட மற்றொரு தொழிலாளர் குழுவினருமாக இருவகைப்பட்டிருந்தனர். லான்ஸ்பரி (Lansbury) போன்ற உணர்ச்சி வசப்பட்ட புரட்சித் தொழிலாளர் குழுவினரும் தலைமை தாங்கினர். போப்லார் என்ற தொகுதியில் லான்ஸ்பரி நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தார். வேலையில்லாமல் தவிப்பவர்களையெல்லாம் அரசாங்கம் பாதுகாக்கவேண்டும், நாடுகளிடையே அமைதியை நிலவ வேண்டும் என்ற கொள்கைகளை அவர் கொண்டிருந்தார். இவர்களால் லேபர் அரசாங்கத்திற்கு இடையூறாக இருந்தது. இந்த அரசாங்கம் நீடித்திருப்பதற்கு, லிபரல்களுடைய ஓட்டுகளும் தேவைப்பட்டன. இந்தச் சமயத்தில் லேபர் அரசாங்கம் சோவியத் ரஷ்யாவுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டது. இதனால் ரஷ்யாவிடமிருந்து கடனும் பெற்றது. கம்யூனிஸ்டுகளுடன் பலத்த விவாதங்களையும் செய்துகொண்டிருந்தது. 1924, அக்டோபரில் மேக்-டொனல்டு மறு தேர்தல்களை நடத்த முடிவுசெய்தார். ஆனால், மக்களுடைய ஆதரவு அவருக்குக் கிடைக்கவில்லை. அத்துடன் ரஷ்யப் பிரசாரமும் அம்பலமாகியது. ஸினோவிவ் (Zinoviev) கடிதம் ஒன்றே அவருடைய செல்வாக்கை இழக்கப் போதுமானதாக இருந்தது. லேபர் அங்கத்தினர்கள் இந்தச் சமயத்தில் 151 இடங்களைத்தான் பெற்றனர். கன்சர்வேடிவ்களுக்கு 413 இடங்கள் கிடைத்தன. ஆஸ்குவித் மீண்டும் தோற்கடிக்கப்பட்டார். லிபரலிசத்தின் எதிர்காலம் இருள் சூழ்ந்துவிட்டது. அந்தக் கட்சியின் அங்கத்தினர்கள் 40 இடங்களைத்தான் பெற்றனர்.

பால்டுவின் அரசாங்கத்தை அமைத்தார். இது அவர் அமைத்த இரண்டாவது அரசாங்கமாகும். இந்த முறை அவருடைய அரசாங்கம் 1924 நவம்பரிலிருந்து 1929 மே வரையிலும் பதவியில் இருந்தது. போருக்குப் பின் ஏற்பட்ட பல மாறுதல்களும் பல முடிவுகளும் இந்த அரசாங்கம் பதவியிலிருந்தபொழுது மேற்கொள்ளப்பட்டன. கட்சியின் பழைய வலிமையும் மீட்கப்பட்டது. ஐரிஷ் அங்கத்தினர்கள் இல்லாததால், அவர்களுக்கு அந்தத் தொல்லையும் இல்லை. அதனால், பிரிட்டிஷ் அரசியல் கட்சி இருவகைகளில்தான் பிரிக்கப்பட்டு வளர்ச்சி அடைந்ததென்று கூறலாம். 1906-லிருந்து லிபரல் கட்சியிலிருந்த ஹால்டேன் போன்ற சிலர், லேபர் கட்சியில் சேர்ந்துகொண்டனர். ஆனால், பலர், சர்ச்சில், பின்பு ஸைமன் ஆகியோருடன் கன்சர்வேடிவ் கட்சிக்கே வந்துவிட்டனர். பால்டுவினுக்கு மிகவும் உதவியாக இருந்த நெவில் சேம்பர்லேனுடைய சமரச மனப்பான்மையால், கன்சர்வேடிவ் கூட்டு மந்திரி சபையில் இருந்தவர்களான ஆஸ்டின் சேம்பர்லேன், பல்ஃபோர் பர்க்கின்ஹெட் ஆகியோரும் கன்சர்வேடிவ் கட்சியிலேயே சேர்ந்து கொண்டனர்.

நாடு பழைய செழிப்பான நிலைமைக்கு வரவேண்டுமென்றும், உலகத்தில் அமைதி ஏற்படவேண்டுமென்றும் பால்டுவின் பெரிதும் விரும்பினர். இந்த நிலைமையை மீட்சிசெய்ய வேண்டுமென்று அவர் பாடுபடுவதற்கு எல்லாத் தகுதிகளும் அவரிடம் இருந்தன. ஆனால், போருக்குப் பிறகு நிலைமை முற்றிலும் வேறுவிதமாக மாறிவிட்டது. இதனால், பல சிக்கல்கள் தோன்றின. ஐரோப்பாவில் அமைதியை ஏற்படுத்துவதும், பேரரசில் சீரமைப்பை ஏற்படுத்துவதும், இங்கிலாந்தில் பழைய நிலையைக் கொண்டு வருவதும் என்ற மூன்றுமே அவரை நோக்கியிருந்த மூன்று முக்கியப் பிரச்சினைகளாகும்.

நிரந்தரமான அமைதியை நிறுவ எப்படித் தவறிவிட்டனர் என்பதைப் பிறகு பார்ப்போம். ஆனால், ஏற்கெனவே பல சமாதான உடன்படிக்கைகளைச் செய்யும்பொழுது, வெற்றி பெற்ற நேச நாடுகளிடையே பிளவு ஏற்பட்டது. ஜெர்மனியிலிருந்து வசூலிக்கப்பட்ட நஷ்டஈட்டுத் தொகையை நேச நாடுகள் பிரித்துக்கொள்வதிலும், பின்பு, போர்க்கடன்களை நிர்ணயம் செய்வதிலும் அவர்களுடைய உறவு மிகவும் கெட்டுவிட்டது. ஜெர்மனி, நேச நாடுகளுக்கு ஆராயிரம் மில்லியன் பவுன்கள் தரவேண்டுமென்று முடிவுசெய்யப்பட்டது. பிரிட்டன் இரண்டாயிரம் மில்லியன் பவுன்களை நேச நாடுகளுக்குக் கடனாக அளித்

திருந்தது. அமெரிக்காவிற்கு 920 மில்லியன் பவுன்கள் கடன் தரவேண்டியிருந்தது. இந்த வகையில் செல்லுவதையெல்லாம் ரத்து செய்து விடுவதே நல்லதென்று 1922-ல் பல்ஃபோர் அனுப்பிய ஓர் அறிக்கை கூறியபோதிலும், அந்த அறிக்கையை அமெரிக்காவும் ஃபிரான்சும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டன. நம்முடைய ஆட்சேபனையையும் புறக்கணித்துவிட்டு ஃபிரான்ஸ், ஜெர்மனியிடமிருந்து நஷ்டஈட்டுத் தொகையை வசூல் செய்வதற்காக ரூர் (Ruhr) பகுதியை அதனுடைய ஆதிக்கத்தில் கொண்டுவந்தது. கத்திமுனையில் ஜெர்மனியிடமிருந்து வசூல் செய்யும் முயற்சி முழுத்தோல்வியில் முடிந்தது. அத்துடன் மார்க், ஃபிராங் ஆகிய நாணயங்களின் மதிப்பும் அதிகமாகப் பாதிக்கப் பட்டது. அமெரிக்கா, டாவ்ஸ் திட்டப்படி (Dawes blan) 1924-ல் ஜெர்மனியின் கடன் சுமையை மிகவும் குறைத்து, ஆண்டு ஒன்றுக்கு 120 மில்லியன் பவுன்கள்மட்டுமே வசூலிக்கவேண்டு மென்று கொண்டுவந்தது. பிரிட்டனுக்கு ஃபிரான்ஸ் கொடுக்க வேண்டிய 600 மில்லியன் பவுன்களைத் தள்ளுபடி செய்தது.

சில சிக்கலான கடன்களால் மேலும் அதிகப் பிளவுகள் ஏற்பட்டன. இத்தாலிக்குத் தரப்பட்ட சலுகைகள் திருப்தி கரமாக இல்லை என்று அதற்கு மனக்குறைவு ஏற்பட்டது. குறிப் பாக மத்தியதரைக் கடலில் ஃபிரான்சின் ஆதிக்கம் ஏற்பட்டது இத்தாலிக்குப் பெரிய அதிருப்தியை அளித்தது. தவிர, பால்கனில் அதன் ஆதிக்கம் ஏற்படாதிருக்கப் பல தடைகளை ஃபிரான்சும் அதனுடைய நேச நாடுகளும் உண்டாக்கின. ஃபிரான்சின் உதவி யால், போலந்து, சைலீஷியா முழுவதையும் கைப்பற்றமுயன்றது. உண்மையில், போலந்து, கிழக்கு கேலிஷியா, யூக்ரேய்ன், வில்னு ஆகிய பகுதிகளைக் கைப்பற்றியது. கர்ஸான் சிபார்சு செய்த இன எல்லைக்கோட்டைத் தாண்டிப் போலந்து இப் பகுதிகளைக் கைப்பற்றியது. அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் நமது டொமினியன்களுக்கும், ஜப்பானுடன் உறவு வைத்துக்கொள்வது அவ்வளவாகப் பிடிக்கவில்லையென்பதால், 1922-ல் செய்து கொண்ட வாஷிங்டன் உடன்படிக்கையின் காரணமாக ஜப்பா னிடம் கொண்டிருந்த உறவு அப்படியே புறக்கணிக்கப் பட்டது. பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடு களிடையே சமரசம் ஏற்பட்டு, கடல் வலிமையை நிர்ணயம் செய்ய முற்பட்டன. இந்த நாடுகள் பஸிஃபிக் கடல் பகுதியில் அமைதியை நிலைநிறுத்த உறுதி அளித்தபோதிலும், அப் பகுதியில் ஜப்பானுடைய ஆதிக்கம் நீடிக்க அனுமதி அளித்தன. ரஷ்யா, தான் இழந்த செல்வாக்கை மீண்டும் பெற முயற்சி செய்தது. தவிர, அதனுடைய அனுமதியின்றிப் பறிக்கப்பட்ட பகுதிகளை

யும் மீண்டும் பெற முயற்சிசெய்தது. நேச நாடுகள் துருக்கியுடன் செய்துகொண்ட முதல் உடன்படிக்கையைத் துருக்கி புறக் கணித்துவிட்டது. ஹங்கேரி, ஜெர்மனி ஆகிய நாடுகளின் சிறுபான்மையினர் குறைகளை நீக்கவேண்டுமென்று முறை யிட்டனர். சுருக்கமாகக் கூறினால்,சமாதான உடன்படிக்கைகளில் கையெழுத்திட்டவுடன், அவைகளைத் திருத்தி அமைக்கவேண்டு மென்ற கூக்குரல் கிளம்பியது.

சமாதானத்தின் இரண்டு அடிப்படையான நோக்கங்கள் இன்னும் நிறைவேறவில்லை. ஜெர்மனியில் ஆயுதக் குறைப்புக் கொண்டுவரவேண்டுமென்று நேச நாடுகள் விரும்பின. அதற்கு அடுத்தபடியாக எல்லா நாடுகளிலுமே இவ்விதமான ஆயுதக் குறைப்புக் கொண்டுவரவேண்டுமென்று அவைகள் திட்ட மிட்டிருந்தன. 1933 வரையிலும் பதின்மூன்று ஆண்டுகளாக, இத் திட்டத்தை நிறைவேற்றப் பல மாநாடுகள் கூட்டப்பட்டன. ஆனால், 1933-ல் இந்த மாநாடுகளால், இத் திட்டத்தை நிறை வேற்ற முடியாத நிலை ஏற்பட்டது. ஜெனிவாவில் கூட்டப்பட்ட பல மாநாடுகளில் அவைகளால் முடிந்தவரையிலும் ஆயுதக் குறைப்பைக் கொண்டுவர முயன்று, பயன் அளிக்காமல் போய் விட்டது. இத் திட்டத்தை அமல் நடத்துவதில் பல இடை யூறுகள் இருந்தன. ஆயுத உற்பத்தியைக் கண்காணிக்க வேண்டும்; பின்பு கப்பல் எடைகளைக் கணக்கிடவேண்டும்; ஆக்கிரமிப்பிற்குத் தேவையான ஆயுதங்கள், பாதுகாப்புக்குத் தேவையான ஆயுதங்கள் எவை என்று திட்டவட்டமாக விளக்க வேண்டும். இவைபோன்ற இடையூறுகளைவிட, நாட்டிற்கு நாடு உருவாகிவந்த பொறாமையும், மற்றும் நாட்டின் தேவைகள் என்னவென்பதை மதிப்பிடுவதிலும் பெரிய சிக்கல்கள் நிரம்பி யிருந்தன. சமத்துவநிலை, இத்தாலி, ஃபிரான்ஸ் ஆகிய நாடு களிடையே கடற்படையைப் பொறுத்தவரையிலும் ஏற்பட வேண்டுமென்று விரும்பப்பட்டது. ஆனால், இந்த ஆலோசனையை இவ்விரு நாடுகளும் ஏற்றுக்கொள்ளவில்லை. பிரிட்டிஷ் கடற் படையின் நாசகாரிக் கப்பல்களின் தேவைகளை அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஏற்றுக்கொள்ளவில்லை. சப்மரின்களை ரத்து செய்துவிடவேண்டுமென்று நாம் கூறிய ஆலோசனையை ஃபிரான்ஸ் நிராகரித்தது. எல்லைப் பகுதிகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கு, பிரிட்டன் விமானப்படையை வைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பியது. அமெரிக்காவும் பிரிட்டனும், சர்வதேசியப் படையை வைத்துக்கொள்ளும் ஃபிரெஞ்சுத் திட்டத்தை மற்றவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. தவிர, ஃபிரான்சில்தான் அதிக ஆயுத பலம் அப்பொழுதிருந்தது.

அதனுடைய பாதுகாப்பில் அந்த நாடு திருப்தி அடைந்த பிறகு தான், ஆயுதக் குறைப்பைச் செய்யும் என்று ஃபிரான்ஸ் அறிவித்தது.

கூட்டுப் பாதுகாப்பு என்ற சர்வ தேசியக்கொள்கை வெறும் ஏட்டளவில் நின்றுவிட்டது. அமெரிக்கா, இந்தச் சங்கத்தில் அங்கத்தினராகச் சேரவில்லை. ஜெர்மனி 1926 வரையிலும் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. 1934 வரை ரஷ்யா அனுமதிக் கப்படவில்லை. ரஷ்யா அனுமதிபெற்றுச் சங்கத்தில் சேர்வதற்குள் ஜெர்மனியும் ஜப்பானும் சங்கத்தை விட்டே விலகிவிட்டன. போலந்தும் இத்தாலியும் சமதான உடன்படிக்கைகளை மீறிய போதிலுங்கூட அந்த நாடுகளுடைய செய்கைகளை மன்னித்தனர். 'தனித்து நிற்றல்' எனும் கொள்கையை பிரிட்டன் விரும்ப வில்லையெனினும், அதற்காகப் பழைய உடன்படிக்கைகளைப் புதுப்பிக்க, பிரிட்டனுக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. பிரிட்டன் கூட்டுப் பாதுகாப்பு முறையை ஆதரித்தபோதிலும். டொமி னியன்களைப் பொறுத்தவரையிலும் பிரிட்டனின் செய்கைகள் கட்டுப்படுத்தாது என்றும், அல்லது அப்பொழுதுள்ள எல்லைக் கோடுகளை அதன் விருப்பப்படி மாற்றி அமைக்கக்கூடாதென்றும் தெளிவாக அறிவிக்கப்பட்டது. இந்த டொமினியன்களின் விருப்பத்திற்கேற்ப, ஃபிரெஞ்சுத் திட்டமான பகிஷ்கரிப்புத் திட்டத்தை பிரிட்டன் ஏற்க மறுத்துவிட்டது. அதனால் 1925-ல் பால்டுவின் அரசாங்கம் லொகார்னு உடன்படிக்கையைச் (Locarno Treaty) செய்ய முயற்சிசெய்தது. இந்த உடன் படிக்கையின்படி, பிரிட்டன், இத்தாலி, ஜெர்மனி, ஃபிரான்ஸ், பெல்ஜியம் ஆகிய நாடுகளிடம் அனுக்கிரமிப்பு உறுதிமொழி பரிமாறிக்கொள்ளப்பட்டது. ஆனால், வெளிநாட்டுக் காரிய தரிசியாக இருந்த ஆஸ்டின் சேம்பர்லேன் எழுதிய வாசகத்தி லிருந்து, மேற்கு ஐரோப்பாவில் பாதுகாப்பைக் காக்கும் உறுதி மொழியைப் பின்பற்றுகின்ற அளவிற்குக் கிழக்கில் அந்த உறுதி மொழியைப் பின்பற்ற முடியாது என்னும் கருத்துப் புலனாகின்றது.

பலவகைகளிலும் நாம் மத்தியஸ்தம் செய்து 1930-ல் அமைதியான சூழ்நிலையை ஏற்படுத்தினோம். சர்வதேச சங்கத்தில் ஜெர்மனி அனுமதிக்கப்பட்டது. அதனுடைய கவுன் சிலிலும் அங்கத்தினராக அனுமதிக்கப்பட்டது. ஏற்கெனவே டாவ்ஸ் திட்டப்படி ஜெர்மனியின் நஷ்டஈட்டுத் தொகை குறைக்கப்பட்டது. மீண்டும் 1929-ல் யங் (Young) திட்டத் தின்படி இன்னும் அதிகமாகக் குறைக்கப்பட்டது. சமாதான உடன்படிக்கையில் கூறியிருந்ததற்கு ஐந்து ஆண்டுகள் முன் பாகவே, 1930-ல் அன்னியப் படைகள் ஜெர்மனியிலிருந்து

வெளியேறின, 1922-ல் வா ஷி ங் ட ன் உடன்படிக்கையில் வல்லரசுகள் இவ்வளவுதான் போர்க் கப்பல்கள் வைத்துக் கொள்ளவேண்டுமென்று நிர்ணயம் செய்திருந்ததைப் போன்று 1930-ல் ஏற்பட்ட லண்டன் உடன்படிக்கையின்படி பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜப்பான் ஆகியவை நாசகாரிகளும் விமானங்களும் இத்தனைதான் வைத்துக்கொள்ள வேண்டு மென்று முடிவு செய்தன.

ஆயுத பலத்தைப் பெருக்கிக்கொண்டே, சமாதானத்தை நிலைநிறுத்துவதைவிட, ஆயுதக் குறைப்பை மேற்கொண்டு, அமைதியைக் காக்கவேண்டுமென்பது பிரிட்டனுடைய குறிக்• கோளாகும். இனியும் பத்தாண்டுகளுக்கு ஒரு பெரிய போர் ஏற்படாது என்ற அளவில் அரசாங்கத்திலுள்ள எல்லாத் துறை களுக்கும் அறிவிக்கப்பட்டது. 1919-ல் நமது விமானப் படையில் 187 பிரிவுகள் இருந்தன. ஆனால், 1929-ல் 31 தான் இருந்தன. 1934 வரையிலும் நமது படையின் தேவைகள் ஒவ்வோர் ஆண் டிலும் மிகவும் குறைந்துகொண்டே வந்தன. இருபத்தொரு காலாட் படைப் பிரிவுகள் கலைக்கப்பட்டன. அத்துடன் அறுபது பீரங்கிப் படையினரும் கலைக்கப்பட்டனர். நாற்பது ஆண்டு களாக இருந்த கப்பற்படையைவிடக் கப்பற்படையினர் மிகவும் குறைந்த அளவில் இருந்தனர். சிங்கப்பூரில் உள்ள கப்பற்கட்டும் தொழிற்சாலை இரண்டுமுறை லேபர் அரசாங்கத்தால் மூடப் பட்டது.

போரினாலும் அமைதியாலும், பேரரசிற்கு நிறைய பொறுப் புகள் ஏற்பட்டன. பேரரசிலும் சிறந்த சாதனைகள் சாதிக்கப் பட்டன. 1922–32 வரை முடிகின்ற பத்து ஆண்டுகளில், காஸ்கிரேவும் (Cosgrave) அயர்லாந்து உடன்படிக்கையைப் பின்பற்றுகின்றவர்களும் அயர்லாந்தின் ஆட்சியை ஏற்றுக் கொண்டனர். அயர்–அல்ஸ்டர் எல்லைக்கோடுகளை நிர்ணயம் செய்வதில் உடன்பாடு உண்டாயிற்று. படையின்மூலமாக அமைதி நிறுவப்பட்டது. பின்பு, கிழக்குப் பிரதேசத்தில், புதிய தேசிய உணர்ச்சி ஏற்பட்டதால், அங்கே பெரிய பிரச்சினை தோன்றியது. 1919-ல் நியமனம் செய்யப்பட்ட மில்னர் கமிஷன் எகிப்திற்குச் சுதந்திரம் வழங்கவேண்டுமென்று சிபாரிசு செய்தது. ஆனால், அப்பொழுதிருந்த கூட்டு மந்திரிசபை இந்தப் பிரச்சினையில் எந்த முடிவும் எடுக்கமுடியாது காலதாமதம் செய்தது. பிறகு, இதனால் குழப்பம் ஏற்பட்டு, அல்லென்பியின் கட்டாயத்தால் 1922-ல் சுதந்திரம் வழங்கப்பட்டது. ஆனால், சூயஸ் கால்வாய், சூடான் ஆகிய பகுதிகளில் உள்ள நமது ஆதிக்கத்தையும் நிலைநிறுத்த வேண்டுமென்ற சலுகைகளை,

ஸாக்லல் (Zaghlul) என்பவரின் தலைமையில் நிறுவப்பட்ட தேசியக் கட்சி இந்தச் சலுகைகளைத் தர மறுத்தது. அதற்குப் பிறகு, அரசியல் கொலைகளும், அரசியல் அமைப்பை நிறுத்தி விடுதலும், அரசனுடைய அரண்மனை அரசியலும், பிரிட்டிஷ் ஹை-கமிஷனரின் தலையீடும் ஆகிய பல நிகழ்ச்சிகள் அங்கே பெரும் குழப்பத்தை ஏற்படுத்திவிட்டன. இதைத் தவிர மத்தியக் கிழக்குப் பிரதேசத்திலுங்கூட பெரிய பிரச்சினைக் கிளம்பியது. போர்க் காலத்தில், சில உதவிகளைப் பெற்றதால், அங்குள்ள அரேபிய நாட்டிற்குக் கடமைப்பட்டிருந்தோம். மேலும், கர்னல் லாரென்ஸ் அராபியர்களுக்கு நிறைய நம்பிக் கையை அளித்துவிட்டார். இவர் அளித்த வாக்குறுதிகளாலும், ஸிரியாவை ஃபிரான்சின் கண்காணிப்பில்விட்டதாலும் பெரிய தகராறு ஏற்படும் நிலை இருந்தது. 1917-ல் பல்ஃபோர் யூதர் களுக்கு ஒரு தேசத்தைப் பாலஸ்தீனத்தில் அமைத்துக் கொடுப்ப தாக வாக்குறுதி அளித்திருந்தார். அதனால் பெரும்பான்மையான அராபியமக்களுக்கு, இந்தத் திட்டம் முரண்பட்டதாக இருந்தது. இவர்களுக்கிடையே கைகலப்பு ஏற்பட்டு, இரத்தமும் சிந்தப் பட்டது. பிறகு, நமது நேச நாடான ஹெட்ஜாஸ் (Hedjaz)பகுதி யின் அரசனான ஹுசேன் என்பவரின் மகன் ஃபைசல் (Feisal) ஸிரியாவிலிருந்து அகற்றப்பட்டு ஈராக்கின் மன்னனாக நியமிக்கப் பட்டார். ஈராக் அப்பொழுது பிரிட்டனுடைய கண்காணிப்பில் தான் இருந்தது. அவருடைய சகோதரன் அப்துல்லா, நமது பாதுகாப்பிலிருந்த டிரான்ஸ்ஜோர்டன் பகுதிக்கு அரசனாக நியமிக்கப்பட்டார். கேந்திர முக்கியத்துவம் பெற்ற பாரசீக வளைகுடாவைப் பாதுகாக்கவும், அங்கேயுள்ள எண்ணெய் வளத்தைப் பெறவும் வேண்டியிருந்ததால், ஈராக்கை உதாசீனப்படுத்தமுடியாது ஆனால், அங்கே படையை வைத்துப் பாதுகாப்பு அளிக்க நிறையப் பணம் செலவாகும் என்பதாலும், தேசிய உணர்ச்சி இடம்பெற்றுவிட்டதாலும், அவ்விதமாக பிரிட்டன் செய்ய முன்வரவில்லை. அதனால் ஃபைசல் என்பவ ருடன் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி அந்த நாட்டின் சுதந்திரம் அங்கீகரிக்கப்பட்டது பிரிட்டிஷ் விமானப்படை பாதுகாப்புமட்டும் இலேசாக அமைந்தால் போதும் என்று ஏற்பாடாயிற்று. 1932-ல் ஈராக் சர்வதேசச் சங்கத்தில் சேர்வ தற்கு பிரிட்டன் ஆதரவு அளித்தது. இருப்பினும் ஸிரியாவில் உள்ள ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து அராபியர்கள் பெரும் கிளர்ச்சி செய்தனர். மேலும், 1926-ல் நெஜ்டு பகுதியின் (Nejd) வஹாபி சுல்தானான இபின் சவூத் (Ibn Saud) ஹுசேன் அரச பரம்பரையினரைப் புனித நாட்டில் தோற்கடித்து, பல இடங்

களில் வெற்றி பெற்றதால். அவர்களுடைய தேசிய இயக்கம் இன்னும் வலிமை பெற்றது.

நாம் அளித்த உறுதிமொழிகளை நிறைவேற்ற முயலும் பொழுது, நாம் செய்த தவற்றை அடிக்கடி பாலஸ்தீனம் நினைவுறுத்திக்கொண்டிருந்தது. இந்தச் செழிப்பற்ற பிரதேசம் வேல்ஸ் பகுதியளவில் இருந்தது. ஆயிரத்து முன்னூறு ஆண்டு களாக அது அராபியர்களுடைய நிலப் பகுதியாகவே இருந்தது. நாம் அராபியர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதாக உறுதி மொழி அளித்ததைப் போன்று, யூதர்களுக்கு ஒரு தேசத்தையும் உருவாக்கித் தருவதாக வாக்குறுதி அளித்திருந்தோம். இந்தச் சமயத்தில் யூதர்கள் கூட்டங்கூட்டமாக 1930-ல் அங்கே வந்து குடியேறினர். பிரிட்டிஷ், அமெரிக்க மூலதனத்தைக்கொண்டு அவர்கள் அங்கே பல தொழில் நிறுவனங்களை அமைத்தனர். அதே சமயத்தில், அங்கே இனப் போராட்டமும் நடந்துகொண் டிருந்தது. 1929-ல் மிகவும் கொடுமையான இனவெறிப் போராட்டம் அங்கே நிகழ்ந்தது. அதைப் பின்தொடர்ந்து அடக்குமுறையும், பின்பு, சலுகைகளும், விசாரணைகளும் நடந்தன. ஆனால், நெருக்கடி தீர்வதற்கான எந்த முடிவும் எடுக் கப்படவில்லை. முடிவுகள் எல்லாம் முரண்பட்டவையாகவே இருந்தன.

மத்தியக் கிழக்கில் உள்ள பாரசீகத்தில் தேசிய உணர்ச்சி பரவிவந்தது. அதனுடைய ஆதரவில் திறமையற்ற ஆப்கானிஸ் தானத்து அமீர் 1919-ல் இந்தியாவின்மீது படையெடுக்கவும் முயன்றார். ஆனால், இந்தியாவிலும் பெரிய கிளர்ச்சி வளர்ந்து வந்தது. போரில் இந்தியர்கள் புரிந்த தியாகங்களால், தேசியம் அங்கே வளர்ந்துவிட்டது. துருக்கியின் வீழ்ச்சியால், முகமதியர் கள் அதிருப்தி அடைந்திருந்தனர்; அராபியர்கள் ஏமாற்ற மடைந்திருந்தனர். இவைகளையெல்லாம் ஒன்றாக இணைத்து இந்தியாவில் காந்தி என்பவர் காங்கிரஸ் கோட்பாடுகளை உருவாக்கிக்கொண்டு இடைவிடாது பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். காந்தி; நுண்ணியத் திறமை பெற்ற ஓர் அரசியல்வாதி. மாண்டேகு-செல்ம்ஸ்ஃபோர்ட் சீர்திருத்தங்கள், அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யாத தால், 1927-ல் பால்டுவின் சைமன் கமிஷனை நியமித்து மீண்டும் விசாரணை செய்ய ஆரம்பித்தார். 1929-ல் டொமினியன் அந்தஸ்தை இந்தியா ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்ததால், இதன் அடிப்படையில் தொடர்ந்து பல மாநாடுகள் கூட்டப் பட்டன. பின்பு, இந்தியாவிற்குக் கூட்டரசாங்க முறையை

அமைத்துக் கொடுப்பதென்றும், அதனையொட்டி 1935-ல் பாராளுமன்றத்தில் ஒரு சட்டமும் நிறைவேற்றப்பட்டது.

இந்தக் கன்சர்வேடிவ் அரசாங்கத்திற்கு இவ்வளவு பிரச்சினைகள் வெளிநாட்டு விவகாரங்களில் நெருக்கடியை விளைவித்துக்கொண்டிருக்கும்பொழுது, உள்நாட்டில் ஏற்பட்ட சில நெருக்கடிகளையும் தீர்க்க முயன்றது. பழைய முறையில் காணப்பட்ட கட்சி வேறுபாடுகளெல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன. ஐரிஷ் உடன்படிக்கைக்குப் பிறகு, கட்சியில் இருந்த பெரிய பிளவு தீர்ந்துவிட்டது. மற்றொன்று நீண்ட காலத்திய மதப் பிரச்சினையால் ஏற்பட்ட பிளவு. இப்பொழுது சமய உணர்ச்சி மங்கிவிட்டதால், இதனால் ஏற்படுகின்ற மாறுபட்ட அபிப்ராயங்களும் பிளவுகளும் மிகவும் குறைந்துவிட்டன. மூன்றாவதாகக் கட்டுப்பாடற்ற வாணிகத்திற்கும், பாதுகாப்பிற்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள், பிளவை ஏற்படுத்திய போதிலும் சிறிதுகாலத்திற்கு அந்தப் பிரச்சினை நிறுத்திவைக்கப்பட்டது. இராணுவக் காரணங்களுக்காகவும், வருமானத்திற்காகவும் போர்க் காலத்தில் மேற்கொண்ட மேக்கென்னு திட்டத்தை அதாவது, சில முக்கியமான தொழில்களைப் பாதுகாப்பதற்காக விதிக்கப்பட்ட காப்பு வரிகளை நீடித்தனர். இதில் அதிகத் தகராறு ஒன்றும் இல்லை. முறையான பாதுகாப்போ, அல்லது டொமினியன்கள் கோரிய வரிச் சலுகைகளையோ அளிப்பதற்குப் போதிய அதிகாரம் வேண்டுமென்பதை பால்டுவின் 1923-ல் தோல்வியுற்றதற்குப் பின் நன்குணர்ந்திருந்தார். கட்டுப்பாடற்ற வாணிகம் வேண்டுமென்று லேபர் கட்சியைச் சார்ந்த நிதி மந்திரி பிலிப் ஸ்நோடன் (Philip Snowden) விரும்பினாலும், அக் கட்சியிலுள்ளவர்களைத் திருப்தி செய்ய முடியவில்லை. ஏனெனில், அக் கட்சியிலுள்ளவர்கள் முழுநேர வேலையும், அதிகக் கூலிகளும் வேண்டுமென்று வற்புறுத்தினர்.

பீல் பயந்த ஜனநாயக வளர்ச்சியோ, அல்லது ஸாலிஸ்பரி வெளிநாட்டு விவகாரங்களில் ஜனநாயகத்திற்கு ஆபத்தேற்பட்டுவிட்டதென்று பயப்படுவதோ இப்பொழுதுள்ள பிரச்சினை அன்று. 1918-ல் வாக்குரிமை விஸ்தரிக்கப்பட்டது. இப்பொழுது இன்னும் மிகவும் விரிவடைந்துவிட்டது. 1928-ல் இருபத்தொரு வயது நிரம்பிய பெண்களும் வாக்குரிமை பெற்றவர்களென்று சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதனால், ஆண்களுக்கு அளிக்கப்பட்டதைப்போலவே பெண்களுக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டது. இதனால் ஏழு மில்லியன் வாக்காளர்கள் அதிகமாகினர். இப்பொழுது மொத்த வாக்காளர்களின் எண்ணிக்கை

28 மில்லியன்களுக்கு அதிகரித்துவிட்டன. ஏதாவது ஒரு சமயத்தில் கன்சர்வேடிவ் கட்சியிலுள்ள வலதுசாரிகளின் குழு பிரபுக்கள் சபையை வலுவாக்கவேண்டுமென்று கூறியதால்மட்டுமே ஜனநாயக வளர்ச்சியில் தடை ஏற்பட்டுவிடவில்லை. ஆனால், உண்மையில் இப்பொழுதுள்ள பிரச்சினை, ஜனநாயகத்தைப் பற்றியதோ அல்லது, சோஷியலிசத்தைப்பற்றியதோ அன்று. ஆனால், எந்த அளவில் சோஷியலிசத்தை அல்லது பொருளாதார ஜனநாயகத்தை நடைமுறையில் பின்பற்றுவதென்பதில் தான் அவர்கள் அக்கறை கொண்டிருந்தனர். அதனால், கன்சர் வேடிவ் மந்திரிசபைகளிலும், லேபர் கட்சி மந்திரிசபைகளிலும், அரசின் அதிகாரம் படிப்படியாக வளர்ச்சி அடைந்துவந்தது. 1926-ல் அரசாங்க ஆதிக்கத்திற்குட்பட்ட மின்சாரக் குழு நியமிக்கப்பட்டது. அதைப்போன்றே பிரிட்டிஷ் செய்தி பரப்பும் வானொலி நிலையத்தார் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இவைகளெல்லாம் அரசின் ஆதிக்கம் பரவி வருவதாக சில எடுத்துக் காட்டுகளாகும். சுகாதாரம், வேலையின்மை ஆகிய காரணங்களுக்காக உதவி செய்யும் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்களும் லாயிட் ஜார்ஜ் காலத்திலேயே விஸ்தரிக்கப்பட்டன. 1925-ல் இந்த வசதிகள் இன்னும் அதிகமாக்கப்பட்டன. நெவில் சேம்பர் லேனின் சமுதாயத் திட்டத்தை அமல் நடத்தும் வரையில், அதே ஆண்டில் சர்ச்சில் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில், விதவைகளுக்கும், அநாதைகளுக்கும், வயோதிகர்களுக்கும் உதவிப் பணம் அளிக்கப்பட்டது. கன்சர்வேடிவ், லேபர் கட்சிகள் ஒரே மாதிரியான வழியைப் பின்பற்றியபோதிலும், அக் கட்சிகளிடையே பலத்த பிளவு ஏற்பட்டது. எதிர்காலத் திட்டங்கள் தீட்டுவதில், இவ்விரு கட்சிகளுக்கும் முரண்பட்ட கோட்பாடுகள் இருந்ததே இந்தப் பிளவிற்குக் காரணமாகும்.

போரினால் ஏற்பட்ட சுமை மிகவும் அதிகமாகிவிட்டது. கிளாட்ஸ்டன் 1881-ல் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில், 70 மில்லியன் பவுன்களைச் செலவினத்தில் காட்டியிருந்தார். ஆனால், 1913-ல் செலவினம் 197 மில்லியன் பவுன்களாக உயர்ந்தது. போரினால் இந்தச் செலவினம் 2,700 மில்லியன் பவுன்கள் வரையிலும் உயர்ந்தது. 1924–25-ல் 796 மில்லியன் பவுன்களாக இருந்தது. தேசியக் கடன்களின் வட்டிமட்டும் 350 மில்லியன் பவுன்களுக்குவந்தது. 1914-ல் இருந்ததைக் காட்டிலும் ஏழுமடங்கு அதிகமாக நேரடியான வரிகளை ஒவ்வொருவரும் கொடுக்கவேண்டி நேரிட்டது. மேற்கு ஐரோப்பாவிலுள்ள நாடுகளுள் பெரும்பான்மையானவற்றுள் மக்கள் தொகை அதிகரித்து வந்தது அப்பொழுது சிறிது குறைந்தது. அப்படியே இங்கிலாந்

திலும் உள்ள மக்கள்தொகை அப்பொழுது குறையும் முகமாக இருந்தது. இத்தனை சுமையும் அம் மக்கள்மீதே விழுந்தது. 1911 முதல் மக்கள்தொகை 2 மில்லியன்களுக்கு உயர்ந்துவிட்டது. 1922-ல் 42,700,000 வரை அதிகரித்தது. 1931-ல் 44 மில்லியன் கள் வரையிலும் அதிகரித்தது. அதே ஆண்டில், முன்பு நூறு கல்யாணமாகும் பெண்களுக்கு இப்பொழுது 81 பேர் மட்டுமே இருந்தனர் என்று மதிப்பிட்டார்கள். விக்டோரியா ராணி யின் இடைக் காலத்தில் 1000 பேருக்கு 34 பேர் வீதம் பிறப்பது இப்பொழுது 20 பேர் விகிதம்தான் பிறந்தனர். வயோதிகர்கள் நீண்டகாலம் வாழ்ந்தனர். அவர்களுக்கு மிகக் குறைவாகவே குழந்தைகள் பிறந்தனர். மக்கள்தொகை குறைந்துகொண்டும், வயதானவர்கள் அதிகமாக வாழ்கின்ற இந்தக் காலத்தில் 80 சத விகிதம் மக்கள் நகரப் புறங்களிலேயே வசித்தனர். அவர்களில் பாதி பேர், 100,000 பேருக்குமேல் வசிக்கின்ற நகரங்களிலேயே வசித்தனர். அவர்களில் 76 சதவிகிதம் கூலிக்கு வேலைசெய்கின்ற வர்களாக இருந்தனர். 1801-ல் வசித்து வந்த 8 மில்லியன் மக்கள் தொகைகொண்ட தொழில் வளம் நிறைந்த நாட்டின் இறுதி விளைவுகளாக இந்த மாறுதல்களைக் கருதவேண்டும். அப் பொழுதிருந்த மக்களில் பாதி பேர் நாட்டுப்புறங்களில் வசிக் கின்றவர்களும், சுயமாகத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளு கின்றவர்களாகவும் இருந்தனர். ஆனால், இப்பொழுதுள்ள மக்கள், தங்கள் உணவுத் தேவைகளில் 60 சதவிகிதத்தை வெளி நாடுகளிலிருந்தே பெற்று வாழவேண்டியவர்களாகின்றனர்.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஏற்றுமதிகள், செலாவணி மற்றும் வெளிநாடுகளில் போடப்பட்ட மூலதனம் ஆகியவை களில் போரினாலும், போருக்குப் பிறகும் அதிக சுமைகளைத் தாங்க வேண்டி நேர்ந்தன. 1855-க்குப் பிறகு, பணவீக்கமும் பணச் சுருக்கமும் ஒரே மாதிரியாகவே பொருளாதாரத்தைப் பாதித்தன. 1913-ல் இருந்த விலைவாசிகளை ஒப்பிடும்பொழுது 1920-ல் இருந்த விலைவாசிகள் நூற்றுக்கு 325 சதவிகிதம் அதிகரித்துவிட்டன. ஆனால், 1922-ல் மீண்டும் விலைவாசிகள் 154 சதவிகிதத்திற்குச் சரிந்துவிட்டன. போர்க்காலத்தில் பலர் பொறியியல் தொழில்களிலும், கப்பற்கட்டும் தொழில்களிலும், சுரங்கவேலைகளிலும் ஈடுபட்டனர். ஆனால், அமைதி ஏற்பட்ட பிறகு அவ்விதத் தொழில்களில் ஈடுபட்டவர்கள் மிகவும் அதிக மாக இருந்ததாக மதிப்பிடப்படுகின்றது. தவிர, அவ்விதத் தொழில்களை நீடித்து நடத்துவதிலும் பயன் இருப்பதாகத் தெரியவில்லை. போர்க்காலத்தில் வெளிநாடுகளிலும், அவர் களுடைய தொழிற்சாலைகளையே நியமித்துக்கொண்டனர்.

போருக்கும் பின்பு, அதனால் அவர்களுடைய தொழில் நிறுவனங்களைப் பாதுகாத்துக் கொள்ளும்பொருட்டு நிறைய காப்பு வரிகளை விதித்துக் காத்துக்கொண்டனர். ஜவுளி உற்பத்தித் தொழிலுங்கூட, ஜப்பான் நாட்டின் பலமான போட்டியைச் சமாளிக்கவேண்டி நேரிட்டது. அதனால், நமது நாட்டின் ஏற்றுமதிகளில் பாதி ஜவுளியாக இருந்தது இப்பொழுது ஐந்தில் ஒரு பாகத்திற்குக் குறைந்துவிட்டது. போரினால், நாம் பல பிரச்சினைகளைச் சமாளிக்கவேண்டியிருந்ததால், மாறுதல்களுக்கேற்பச் சிறிது நெகிழ்ந்துபோக வேண்டியதாயிற்று. விவசாயத் துறையில் நிலக்கிழார்கள் மறையும் நிலை எய்தி விட்டனர். தொழில் துறையிலும், பெரிய நிறுவனங்களும், பல இணைப்பு நிறுவனங்களும், வர்த்தக நிறுவனங்கள் முதற்கொண்டு கூட்டுறவு நிறுவனங்கள் வரையிலும் பெருகிவிட்டதால், தனிப்பட்ட முறையில் தொழில் செய்துகொண்டிருந்தவர்களும், சிறிய தொழிற்சாலைகளும் மறைந்துவிட்டன. பல நூதன இயந்திரங்களும், புதிய கண்டுபிடிப்புகளும் ஏற்பட்டதால் உற்பத்திப் பெருகியதுமட்டுமல்லாமல், பழைய இயந்திரங்கள் எல்லாம் பயனற்றவையாகிவிட்டன. பழைய முறைகளும் மாறிவிட்டன. அதனால் வேலை வாய்ப்புகளும் மிகவும் குறைந்துவிட்டன. உழுகின்றவனுக்குப் பதிலாக டிராக்டர் அவனுடைய வேலையைச் செய்தது. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் இயந்திர வசதிகள்மூலமாக நிலக்கரி எடுப்பது முப்பது மடங்கு அதிகரித்துவிட்டது.

இதற்கு முன்பிருந்த காலத்தில் பிரிட்டிஷ் பொருளாதாரம் செழுமை மிக்கதாக இருந்தது. தவிர, அதனுடைய பொருளாதார முறை சர்வதேசிய முறையாகவும் பின்பற்றப்பட்டது. அப்பொழுது அந்நியநாட்டுச் செலவாணிகளுக்கேற்ப, தங்கம் மதிப்பிடப்பெற்றுப் பொருள்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டன. இதனால், லண்டனில் உள்ள நாணய முறையும் நன்கு நிலை நிறுத்தப்பட்டது. தவிர, தங்கம் மற்ற நாட்டு செலவாணிகளுக்கேற்ப மதிப்பிடப்பட்டு, தக்கமுறையில் பரிமாற்றம் செய்யப்பட்டுவந்தது. அதன்படி, மூலதனம், தொழிலாளர், அவர்களுடைய கூலிகள் ஆகியவை நிலவலங்களுக்கேற்ப விலைவாசிகளின் நிர்ணயம் செய்யப்பட்டு வந்தது. ஆனால், போருக்குப் பிறகு இந்த முறைகளெல்லாம் பயனற்றதாகிவிட்டன. ஜெர்மனியின் நஷ்டஈடு வசூல்முறை ஒருவழி பொருளாதார முறையாக மாறிவிட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் இப்பொழுது உலகத்திலுள்ள பெரிய உற்பத்திகளைப் பெருக்கும் நாடாகவும் மற்ற நாடுகளுக்குக் கடன்களைக் கொடுக்கும் நாடாகவும்

மாறிவிட்டது. அதனுடைய தொழில்களைப் பாதுகாக்கும் பொருட்டு நிறைய காப்பு வரிகளை விதித்துக்கொண்டது. தவிர, அதனுடைய ஏற்றுமதிப் பொருள்களுக்குத் தங்கத்தின்மூலமாகச் செலாவணி செய்யவேண்டுமென்று நிர்ணயம் செய்து கொண்டது. உலக வர்த்தகத்திலிருந்து ரஷ்யா அடியோடு மறைந்துவிட்டது. ஜெர்மனியிலும், பிறகு ஃபிரான்சிலும் பணத்தின் மதிப்பு மிகவும் குறைந்துவிட்டது. அதனால், அவற்றின் செலாவணிகள் மிகவும் பாதிக்கப்பட்டன. ஒவ்வொரு நாடும் அதனுடைய தொழில் வளத்தைக் காத்துக்கொள்ளக் காப்பு வரிகளும், பங்குகளும், மானியங்களும் நிர்ணயித்துக் கொண்டு, பக்கத்து நாடுகளை வறுமையாக்க முயன்று வந்தன.

உலகத்திலுள்ள விநியோகத்தில் மூன்றில் இரண்டு பங்கு தங்கம் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் ஃபிரான்சிலும் முடங்கி விட்டன. போதிய ஈடுகள் இல்லாத கடன்களும், மேலும் செலாவணியாகாத பணத்தின் பழக்கமும், பழைய நாணய முறையை மிகவும் பாதித்துவிட்டன. அமெரிக்காவிடம் பண சக்தி மாற்றப்பட்டுவிட்டதால், உலக வர்த்தகத்தில் நிறைய சூதாட்ட வணிகமுறைகளும் ஏற்பட்டுவிட்டன. இவைகளுக் கேற்ற முறையில் வங்கி வசதிகள் வளர்ச்சி அடையவில்லை. தவிர, குடியேற்றங்களும் பேரளவில் தடைசெய்யப்பட்டு விட்டன. இவைகளும் அரசியல் தடைகளும் சேர்ந்து வறுமை, செல்வம் என்ற இரண்டு பகுதிகளைப் பலமாகப் பிரித்துவிடக் காரணமாகிவிட்டன. இந்த நாட்டில் நிறைய கடன்கள் ஏற்பட்டுவிட்டதால் அவைகளுக்கேற்ப அதிகவட்டியும், அதைத் தவிர, தொழிற் சங்கங்களாலும், வேலையில்லா இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தாலும் கூலி நிர்ணயங்களில் மாற்றங்கள் ஏற்படாது செய்ததால், விலைவாசிகள் காலத்திற்கேற்ப நெகிழ்ந்து கொடுக்க முடியவில்லை. இந்தச் சூழ்நிலையில், பிரிட்டன் போர்க்காலத் திற்கு முன்பிருந்த பழையநிலையை மீட்கமுடியாமல் தவித்தது. 1925-ல் பால்டுவின் அரசாங்கம் போருக்கு முன்பிருந்த டாலருக் கும் பவுண்டுக்கும் உள்ள சமநிலையை மதிப்பிட்டுத் தங்கச் செலா வணிக்கே வந்தது. உள்நாட்டிலுள்ள விலை நிர்ணயங்களுக்கு அதிகமான அளவிலேயே பவுண்டுடைய வெளிமதிப்பு நிர்ணயம் செய்யப்பட்டது. அதனால் நமது ஏற்றுமதி வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டது.

பிரிட்டிஷ் அரசில், போருக்குப் பின்பு ஏற்பட்ட விளைவுகள் 1929-ல் பலதரப்பட்டவையாக இருந்தன. வேலையிலிருப்பவர் களில் இன்ஷ்யூரன்ஸ் செய்துகொண்டவர்கள் தொகை முன்பிருந் ததைவிட இப்பொழுது மிகவும் அதிகமாக இருந்தது.

1913-லிருந்து நமது ஏற்றுமதிகளின் எண்ணிக்கை குறைந்து விட்டபோதிலும், உற்பத்திப் பொருள்களைத் தயாரிப்பதில் உலகிலேயே இந்த நாடுதான் முன்னணியில் இருந்தது. வாழ்க்கைத் தரத்தை ஒப்பிட்டுப்பார்த்து உண்மையான கூலிகளை நிர்ணயம் செய்துபார்த்தால், 1924–9 ஆண்டுகளில் 8 சதவிகிதம் அதிகமாகியிருந்தது. ஆனால், அமெரிக்க ஐக்கிய நாடுகளைவிட இது குறைவாக இருந்தபோதிலும், மற்ற ஐரோப்பிய நாடுகளைவிட அதிகமாகத்தானிருந்தது. போர்க்காலத்தில் இருந்ததைவிடப் பத்துச் சதவிகிதம் குறைவாகவே வேலைநேரம் இப்பொழுதிருந்தது. பல தொழிலாளர் வாடகைக்கு இருப்பதற்கு உதவிப்பணமாக 100 மில்லியன் பவுன்கள் தரப்பட்டன.

இந்த வசதிகளையெல்லாம் செய்த பிறகும், தேசிய வருமானம் போர்க்காலத்திற்கு முன்பிருந்ததைப் போலத்தான் இருந்தது. மீண்டும் தொழில்களில் மூலதனம் போடுவதற்கான சேமிப்புகள் பாதிக்குக் குறைந்துவிட்டன. 1929-க்குப் பிறகு நமது குடியேற்றங்கள் அறவே நின்றுவிட்டன. வேலையில்லாமல் இருந்தவர்கள் 1922-க்குப் பிறகு 1 மில்லியன் ஆட்கள் என்று மதிப்பிடலாம். 1929-ல் இந்தத் தொகை 1,200,000 பேருக்கு அதிகரித்துவிட்டது. இந்த எட்டு ஆண்டுகளில், வேலையில்லாதவர்களுக்கு அளித்த பணம் சுமார் 500 மில்லியன் பவுன்களாகும். ஒவ்வொரு அரசாங்கமும், வேலையில்லாதவர்களுக்கு இன்ஷ்யூரன்ஸ்மூலமாக உதவிசெய்து வந்ததைக் குறைத்தே வந்திருக்கிறது. அதாவது அவர்கள் அளித்த தொகைகளுக்கேற்ப கொடுக்கப்பட்ட உதவிப்பணம் குறைக்கப்பட்டது. அதே சமயத்தில், பல மாதங்களாகவும், வருடக்கணக்காகவும் அவர்கள் எந்தவிதத் தொகையையும் செலுத்தமுடியாமல் இருப்பவர்களுக்கு உதவிப்பணம் அளிப்பது விஸ்தரிக்கப்பட்டது.

இப்பொழுதிருந்த வேலையின்மைக்கும், பழைய வறுமை நிலைக்கும் நிறைய வேறுபாடு இருந்தது. சில தொழில்களிலும், சில பகுதிகளிலும் மட்டுமே வேலையின்மை இருந்ததைக் காணலாம். நூறு ஆண்டுகளாக நாட்டின் தொழிலுக்குக் காரணமாக இருந்த சில தொழில்களிலே வேலையின்மை இருந்தது மிகவும் வியப்பாக இருந்தது. குறிப்பாக ஜவுளி உற்பத்தித் தொழில்களில் இந்த நிலை இருந்தது. ஒரு காலத்தில் நமது ஏற்றுமதிகளின் பேரளவு இந்த ஜவுளிப் பொருள்களேயாகும். தவிர, கப்பல்கட்டும் தொழில், பொறியியல் தொழில், நிலக்கரித் தொழில்களிலும் வேலையின்மை இருந்தது. இந்தப் பத்து ஆண்டுகளில் பொதுவாக 12 சதவிகிதம் வேலையின்மை இருந்த

போதிலும், சில சமயங்களில் டர்ஹாம், மற்றும் சவுத் வேல்ஸ் ஆகிய பகுதிகளில் உள்ள நிலக்கரித் தொழில்களிலும் 40 முதல் 60 சதவிகிதம் வரையிலும் வேலையின்மை இருந்து வரலாயிற்று. முன்பு வடக்குப் பகுதிகளில் இருந்து வேலை வாய்ப்புகள், இப்பொழுது படிப்படியாக மத்தியப் பகுதியிலும், தெற்கிலும் பரவிவிட்டன. இரவலர் சட்டத்திற்குட்பட்ட 600 யூனியன்கள் இருந்தபோதிலும், அவைகளில் 15 யூனியன்கள் மட்டும் ஐந்தில் ஒரு பங்கு நிவாரணத்தை இரவலர்களுக்கு அளித்தன.

நிலக்கரித் தொழிலில்தான் அதிக நெருக்கடி ஏற்பட்டது. அந்தத் தொழிலில் நிறைய ஆட்கள் வேலைசெய்து வந்தனர். அந்தத் தொழில்களும் முறையாக அமைக்கப்படவில்லை. அங்கே மற்றத் தொழிற்சாலைகளில் உள்ளதைவிட, அதிக வர்க்க வேறுபாடுகள் மலிந்திருந்தன. மற்றத் தொழிலாளர்களைவிட இவர்களுடைய தன்மை தனித்தே இருந்தது. அத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் பல வேலை நிறுத்தங்களை 1920-ன் தொடக்கத்தில் செய்தனர். அதற்குப் பிறகும் அவர்களுடைய கூலிகள் உயரவில்லை. 1925-ல் அவர்கள் பெற்ற கூலிகள், 1914-ல் இருந்ததைவிட மிகவும் குறைவாகவே இருந்தன. அதனால் 1926-ல் தொழிற்சங்கக் காங்கிரஸ் பொது வேலை நிறுத்தம், அல்லது அனுதாப வேலை நிறுத்தம் செய்தது. பாராளுமன்றத்தில் இவர்களுடைய பிரச்சினையைக் கட்டாயத்தின்மூலமாகத் தீர்த்து வைப்பதென்பது முடியாததாக இருந்தது. ஆனால், பாராளுமன்ற அரசாங்கம் தொழிலாளர்களுடைய வசதிகளைப் பாதுகாக்கின்ற அவசியமும் இருந்தது. வேலை நிறுத்தம் மிகப் பேரளவில் நிகழ்ந்தபோதிலும், மக்களுடைய ஆதரவு இந்த வேலை நிறுத்தத்திற்குக் கிடைக்கவில்லை என்பது தெரிந்தது. அதனால், இந்த வேலை நிறுத்தம் எப்படியும் வெற்றியடையக் கூடாதென்ற மனப்பான்மை பேரளவில் நிலவியது. தொழிற்சங்க காங்கிரஸில் உள்ள அங்கத்தினர்களும் 8 மில்லியன்களிலிருந்து $4\frac{3}{4}$ மில்லியன் வரையிலும் குறைந்துவிட்டனர். அத்துடன் பெரும்பாலான தொழிலாளர்கள் அதே கூலிகளை ஏற்று வேலைக்குத் திரும்பினர். ஆனால், இவர்களுடைய வேலை நேரம் இன்னும் அதிமாக்கப்பட்டது. 1927-ல் தொழிற்சங்கத் தகராறுச் சட்டம் 1927-ல் (Trades Disputes Act) நிறைவேற்றப்பட்டது. இந்தச் சட்டம் பொது வேலைநிறுத்தம் செய்வதைச் சட்ட விரோதமானதென்று அறிவித்தது. தவிர, அங்கத்தினர்கள் அரசியல் கட்சியில் சேர்ந்து சந்தா அளிக்க விரும்புகிறவர்களிடம்மட்டுமே பணம் வசூல் செய்யவேண்டுமே தவிர, எல்லாத் தொழிற்சங்கத்திலுள்ள அங்கத்தினர்களிடமிருந்து பண வசூல் செய்யக் கூடாதென்று

அறிவித்தது. தவிர அரசாங்க ஊழியர்கள் எந்த அரசியல் கட்சியில் சேர்ந்து கொள்ளவும் தடை விதிக்கப்பட்டது.

இத் தகராறுகள் இரவலர் சட்டத்தின் எதிர்காலத்துடன் பிணைக்கப்பட்டிருந்தன. 1909-ல் நியமிக்கப்பட்ட ராயல் கமிஷன் இவற்றைப்பற்றிப் பல அறிக்கைகளைச் சமர்ப்பித்திருக்கின்றது. கிழக்கு லண்டன் பகுதியிலும், வேல்ஸ், மற்றும் வடக்குப் பகுதிகளிலும் நிவாரணம் அளிக்கப்படும் முறையால் சமுதாயத்தின் வாழ்க்கைத்தரத்தையே மாற்றிவிடுகின்றநிலைமை ஏற்பட்டுவிட்டது. பலவகைப்பட்ட நிவாரணங்களால், சில சமயங்களில் ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பங்கினரை இவ்விதமாகவே பாதுகாக்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிடுகின்றது. அதனால், அப்பொழுதிருந்த சட்டமும் மீறப்படுகின்றது. அதனால் சுகாதார அமைச்சராக அப்பொழுது பணியாற்றி வந்த நெவில் சேம்பர்லேன் பல நடவடிக்கைகளை எடுத்து, இரவலர் வரி விதிப்புகள் அதிகமாகாமல் தடுத்தும், பழைய கொள்கையின் படியே நிவாரணம் அளிக்கவேண்டுமென்றும் அறிவித்தார். இதனால் 'பாப்லாரிஸம்' (Poplarism) என்ற திட்டமும், நிராகரிக்கப்பட வேண்டியதாயிற்று. தவிர, தேர்ந்தெடுக்கப்பட்ட பாதுகாப்பாளர்மூலமாக நிவாரணம் அளிக்கப்படுவதும் ஒடுக்கப்பட்டது.

இந்தச் சூழ்நிலையில்தான் சுமார் ஒரு மில்லியன் மக்கள் வரையிலும் நிரந்தரமாக வேலையில்லாமல் தவித்தனர். ஆனால், சில சமயங்களில் சிலருக்கு வேலை வாய்ப்புகளும் கிடைத்தன. இதையெல்லாம் புறக்கணித்துவிட்டு மதிப்பிட்டாலும், சுமார் அரை மில்லியன் மக்கள் வேலையில்லாமல் இருந்தனர் என்று கூறலாம். பாதிக்கப்பட்ட பகுதிகளில், இளைஞர்களின் நம்பிக்கையும், அவர்களது வாழ்வும் மறைந்துவிட்டனவென்றே துயருற்றனர். இந்தப் பின்னணியில், போருக்குப் பிறகு தோன்றிய காலமும் முடிவுற்றது. அத்துடன் பால்டுவின் அரசாங்கமும் வீழ்ச்சியுற்றது. அக்காலத்தில் நிறைவேற்றப்பட்ட சீர்திருத்தங்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவையாகும். விதவைகளுக்கும், அனாதைகளுக்கும். வயோதிகர்களுக்கும், மற்றும் பல புதிய வகுப்பினருக்கும் தரப்பட்ட இன்ஷ்யூரன்ஸ் உதவி அதிகரிக்கப்பட்டது. தொழில்கள், விவசாயம் ஆகியவற்றைச் சீரமைத்ததும், மற்றும் 1929ஆவது ஆண்டின் நெவில் சேம்பர்லேனால் கொண்டுவரப்பட்ட தல அரசாங்கச் சட்டத்தால் சில சீர்திருத்தங்கள் நிதித்துறையிலும் ஆட்சித் துறையிலும் ஏற்பட்டன. இதனால், பாதுகாவலர்கள் தேர்ந்தெடுக்கப்

படுவது நிறுத்தப்பட்டது. அவர்கள் செய்துவந்த பணிகளைக் கவுன்டி கவுன்சில்களும், பரோக்களும் செய்தன. சாலைகளை அமைத்தலும், நகரப்புறங்களில் வீடுகளை அமைத்தலும் மத்திய அரசாங்கத்தின் காண்காணிப்பில் கொண்டுவரப்பட்டன. அப்பகுதிகளில், முழுநேரம் வேலைபார்க்கும் சுகாதார அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அப் பகுதிகளில் வரிகளை வசூலிப்பதற்குப் பதிலாக, தல அதிகாரிகள் மத்திய அரசாங்கத்திடமிருந்து மானியங்களைப் பெற்றனர். அப்பகுதிகளிலுள்ள வேலையின் மையைப் பொறுத்து இம் மான்யங்கள் வழங்கப்பட்டன. இது வரையிலும் தனிப்பட்ட முறையில் பணியாற்றிவந்த இரவலர் சட்ட முறையும், மற்றச் சமுதாயப் பணிகளும் இப்பொழுது இணைக்கப்பட்டு, ஒரு நெகிழ்வான ஆட்சிமுறைத் திட்டத்தைப் பின்பற்ற வழி செய்தனர்.

இதுவும், மற்றச் சேம்பர்லேனின் வரிவிதிப்பு முறையும் எதிர் கால நன்மைக்கு வழிகோலுவதாக இருப்பினும், அவைகளின் நன்மைகளை உணரச் சிறிது காலம் பிடிக்கும். அப்பொழுது, போரும், அதிக அளவில் காணப்பட்ட வேலையில்லாத் திண்டாட்டமும்தான் அரசாங்கத்தின் முக்கிய கவனத்தை ஈர்த்தன. அவைகளால், சென்ற நூற்றுண்டின் கோட்பாடுகளுக்கும் இனி வரப்போகின்ற நூற்றுண்டின் கோட்பாடுகளுக்கும் உள்ள முரண்பாடுகளைக் கவனிக்கமுடிகின்றது. சுய முயற்சியும், சேமித்து வைத்தலும் என்ற கொள்கைகளை விக்டோரியா காலத்தவர் பின்பற்றினர். பதினெட்டாவது நூற்றுண்டின் அனுபவத்தாலும், ஸ்பீன்ஹாம்லேண்டில் பட்ட அனுபவத் தாலும், வெளியாரிடமிருந்து நிவாரணம் பெறும் சீர்கேடுகளை அவர்கள் உணர்ந்திருந்தனர். அரசாங்கத்தையே நம்பிப் பிழைப் பதையும் அவர்கள் விரும்பவில்லை. வேலை செய்கின்றவனைவிட, வேலை செய்யாதவன் தகுதியற்றவன் என்ற ஒரு மனப்பான்மை இருந்தது. ஆனுல், இப்பொழுது சமுதாய மனப்பான்மை ஏற்பட்டுவிட்டது. பழைய கோட்பாடுகளை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். சுமார் ஒரு மில்லியன் தொழிலாளர் வேலையில் லாமல் இருப்பது அவர்களுடைய குற்றமன்று என்று கூறினர். அரசியல் சமத்துவமும் உரிமைகளும் பெற்ற பிறகு, ஜனநாயக வளர்ச்சியில் அவர்கள் படும் தொல்லைகளுக்குச் சமுதாயமே காரணம் என்று கூறினர். அதனுல், அவர்களுக்கெல்லாம் வேலை வாய்ப்புகளைச் செய்து கொடுப்பதும், அவர்களைப் பாதுகாப்பதும் அரசாங்கத்தின் பொறுப்பு என்று கூறினர். அந்தப் பாது காப்பைப் பெறுவது அவர்களுடைய உரிமை என்றுங் கூறினர். முறையான நாணயக் கொள்கையில், விலைகளை நிர்ணயம் செய்ய

முடியுமென்றும், முழுநேர வேலை வாய்ப்புகளைச் செய்துகொடுக்க முடியுமென்றும், அமைதியான புரட்சியின்மூலமாகச் செல்வத்தை இல்லாதவர்களிடம் பகிர்ந்துகொடுக்க முடியுமென்றும் பொருளாதாரவாதிகள் கூறினர். அதனால், அவர்கள் வர்க்க பேதமற்ற சமுதாயத்தையும் ஏற்படுத்த முடியுமென்றும் கூறினர்.

ஆனால், இவைகளை எவ்விதம் நடைமுறைக்குக் கொண்டு வருவது என்பதை அவர்களால் முடிவுசெய்ய முயடிவில்லை. பாதிக்கப்பட்ட பகுதிகளையும், ஐரோப்பாவில் அமைதி நிறுவப் பட்டதையும் ஒட்டி, ஜூன் 1929-ல் தேர்தல்களை நடத்துவதென்று முடிவு செய்தனர். இப்பொழுதுள்ள தனிப்பட்ட பாராளுமன்றத் தொகுதிகளில் ஆறு மில்லியன் புதிய வாக்காளர்கள் வாக்களிக்கும் தகுதியைப் பெற்றிருந்தனர். இந்தத் தேர்தல்களில், 287 தொழிற்கட்சி அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் அடைந்த மொத்த வாக்குகள் 8,360,000. 261 கன்சர்வேடிவ் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் பெற்ற மொத்த வாக்குகள் 8,664,000. 59 லிபரல்களுக்கு, மொத்தம் 5,300,000 பேர் வாக்களித்தனர். இந்தத் தேர்தல்களில் எவ்விதத் தெளிவான கொள்கை நிர்ணயமும் செய்ய முடியவில்லை. எனினும், மீண்டும் தொழிற்கட்சி ராம்சே மேக்டொனல்டைக்கொண்டு அரசாங்கம் அமைத்தது.

# 2. பேரரசு, 1919-1938

மரத்திலிருந்து கனி விழுந்துவிடும் என்று அனுபவம் நிறைந்த பேரரசி விக்டோரியா காலத்தவர் சோதிடம் கூறினர். ஆனால், இன்னும் அந்தக் கனி விழவில்லை. 1918 முடிய நடந்த மாபெரும் போரில், கனடா 650,000 போர் வீரர்களையும், ஆஸ்தி ரேலியாவும் நியூஸிலாந்தும் சேர்த்து ஏறக்குறைய இதே எண்ணிக்கையுள்ள போர் வீரர்களையும் அனுப்பின. தென் ஆஃப் பிரிக்காவும், மற்றும் டொமினியன் அந்தஸ்து அல்லாத காலனி களும், 135,000 வீதம் போர் வீரர்களை அனுப்பின. இந்தியாவி லிருந்து 1½ மில்லியன் போர் வீரர்கள் அனுப்பப்பட்டனர். ஒவ்வோர் இனத்தவரும், நிறத்தவரும், இன்னும் தூரத்தி லிருந்த தீவுகளிலிருந்த பலரும் இந்தப் போரில் பலவித சேவை களில் ஈடுபட்டு பிரிட்டிஷ் தலைமையில் போரிட்டனர். அவர்களை யெல்லாம் ஒன்றாக இணைத்துப் போரிடவைத்ததற்குக் காரண மாக இருந்தவை, பிரிட்டிஷ் கடற்படையும், பிரிட்டிஷ் அரசாங்க முறையுமேயாகும். ஆனால், இப் பகுதிகளில் போரினால் ஏற்பட்ட மற்ற நிகழ்ச்சிகளையும் வரலாறு குறிப்பிடுகின்றது. கட்டாய இராணுவச் சேவையால், கனடாவில் உள்ள இரண்டு இனத்தின ரிடையே கருத்து வேறுபாடுகள் அதிகமாயின. ஆஸ்திரேலியா வில் தொழிலாளர்களிடையே பிளவு ஏற்பட்டது. அயர்லாந்தில் பெரிய கலகம் ஏற்பட்டது. போரினால், தென் ஆஃப்பிரிக்கா விலும் இந்தியாவிலும் கிளர்ச்சிகள் தோன்றின.

எலிசபெத் காலத்தவர்கள் தற்செயலாக உருவாக்கி, பின்பு, பிறகு வந்தவர்களால் நிறைய செலவு செய்து நிறுவப்பட்ட இந்தப் பேரரசு பிரமாண்டமாக வளர்ச்சி அடைந்துவிட்டது. எனினும், கிளாட்ஸ்டன் தலைமுறையினர் இந்தப் பேரரசு வளர்ச்சி யில் சிறிதும் அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. 1930-ல் இந்தப் பேரரசு உலகத்திலுள்ள நான்கில் ஒரு பகுதியைக் கொண் டிருந்தது. பிரிட்டனின் கண்காணிப்பில் விடப்பட்ட பகுதி

களும் உட்பட, அதனுடைய பேரரசில் இருந்த மக்கள் தொகை ஏறக்குறைய 520 மில்லியன்களாகும். இந்தத் தொகை உலகி லுள்ள மொத்த ஜனத்தொகையில் நான்கில் ஒரு பாகமாகும். பிரிட்டிஷ் தீவுகளில் 46 மில்லியன்களும், 25 மில்லியன் மக்கள் சுய ஆட்சி பெற்ற டொமினியன்களிலும், அவற்றில் தென் ஆஃப்பிரிக்காவிலுள்ள 5 மில்லியன் மக்கள் ஐரோப்பியரல்லாத வர்களும், சுமார் 62 மில்லியன் மக்கள், பிரிட்டிஷ் காலனிகளி லும், பிரிட்டனின் பாதுகாப்பிலும் கண்காணிப்பிலும் உள்ள பகுதிகளிலும், இந்தியாவில் 390 மில்லியன் மக்களும் இந்தப் பேரரசின் ஆட்சியில் வாழ்ந்து வந்தனர். உலக வணிகத்தின் ஐந்தில் ஒரு பங்கை இந்தப் பேரரசு பெற்றிருந்தது. அதைப் போலவே கப்பல் போக்குவரத்தும், முன்பிருந்ததைவிட சிறிது குறைந்திருந்தபோதிலும், நான்கில் ஒரு பங்கைப் பெற்றிருந் தது. பிரிட்டிஷ் ஏற்றுமதிகளில் 40 சதவிகிதம் பிரிட்டனுடைய கொடியை ஏற்றே மற்ற நாடுகளுக்கு அனுப்பப்பட்டன.

1880 முதல், பேரரசின் அமைப்பும் அதன் நாடுகளும் பல வித மாற்றங்களை அடைந்துவிட்டன. சூயஸ் கால்வாய் திறக்கப் பட்டதாலும், ஆஃப்பிரிக்காவில் பல பகுதிகளைக் கண்டு பிடித்த தனாலும், பஸிஃபிக்கில் ஆதிக்கம்பெற சர்வ தேசிய போட்டி ஏற்பட்டதாலும், எண்ணெய்ச் சக்தியின் பயனை அறிந்ததாலும், கிழக்கத்தியப் பகுதியில் மக்கள் தொகை அதிகரித்ததாலும், நல்ல சுகாதார வசதிகளும் பாதுகாப்புகளும் பெற்றதாலும், உலகத்தின் பொருளாதார, மற்றும் கேந்திர முக்கியத்துவம் அட்லான்டிக் பகுதியிலிருந்து, சூயசுக்கும், கேப்டவுனுக்கும், டில்லிக்கும், சிங்கப்பூருக்கும் மாறிவிட்டது. பேரரசிலுள்ள வெள்ளை இனத்தவரிடையேயும், மற்றும் பிற்போக்கான மக்க ளிடையேயும் ஜனநாயக வளர்ச்சி ஏற்பட்டதால், முன்பிருந்த பேரரசு கண்டிராத பல மாறுதல்களும் பிளவுகளும் இப் பொழுது புதிதாகக் கிளம்பின. தெற்கு அயர்லாந்து, கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, தென் ஆஃப்பிரிக்கா ஆகிய ஐந்து நாடுகளில் டொமினியன் அந்தஸ்துபெற்ற அரசாங்கங்கள் நிறுவப்பட்டன. தெற்கு ரொடீஷியா, மால்டா, சிலோன் ஆகிய மூன்று நாடுகளில் ஓரளவிற்குப் பொறுப்பான அரசாங்கம் ஏற்பட்டிருந்தது. மற்றும் பல காலனிகள் பிரிட்டிஷ் அரசாங்கக் காரியதரிசியின் கண்காணிப்பில் ஆட்சி செய்யப்பட்டுவந்தன. அந்தக் காலனிகளின் ஆட்சி பலதரப்பட்டவையாகும். அவை களின் சுதந்திரத்தையும் பலவகையாகப் பிரிக்கலாம். சில பழைய பகுதிகள் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சில்களால் ஆட்சி செய்யப் பட்டு வருகின்றன. இதற்கு உதாரணமாகப் பார்படோஸ் காலனியைக் குறிப்பிடலாம். தவிர, ஸ்ட்ரெயிட்ஸ் பகுதிகள்

(Straits Settlements), கோல்ட் கோஸ்ட் (Gold Coast), மேற்கு இந்தியத் தீவுகளில் பல பகுதிகள் பெரும்பான்மை அதிகாரி களால் ஆட்சி செய்யப்படுகின்றன. அஷாந்தி (Ashanti) அல்லது செயின்ட் ஹெலினு (St. Helena) முழுவதும் அரசனுல் நியமிக்கப் பட்ட கவர்னர்களால் ஆட்சி செய்யப்படுகின்றன. இவற்றைத் தவிர பிரிட்டனின் பாதுகாப்பிலுள்ள நாடுகள் (Protectorates) பல அளவில் சுதந்திரத்தைப் பெற்றிருந்தன. உதாரணமாக, வடக்கு ரொடீஷியாவிலிருந்து கென்யாவரையிலும், பெச்சுவாஞ லேண்ட் (Bechuanaland) ஆகியவற்றைக் குறிப்பிடலாம். எகிப்து, மலேயா நாடுகள், ஜான்ஸிபார், வடக்கு போர்னியோ ஆகிய நாடுகள் ஓரளவிற்கு மட்டும் பிரிட்டனின் பாதுகாப்பில் இருந்தன. சர்வதேச சங்கத்திலிருந்து மேண்டேட் நாடுகளாக 1919-ல் பாலஸ்தீனம், தங்கனீக்கா, கேமரூன்ஸ், டோகோ லாந்து, டிரான்ஸ்ஜோர்டானியா ஆகிய நாடுகளை பிரிட்டன் ஆட்சிசெய்ய ஏற்றுக்கொண்டது. தென் மேற்கு ஆஃப்பிரிக்கா, சமோவா, நியூ கினியா ஆகிய நாடுகளை பிரிட்டனுடைய சில டொமினியன்களின் ஆட்சியில் கொண்டுவந்தனர். பின்பு பெரிய பேரரசான இந்தியாவும் அதனுடைய ஆட்சியில்தான் இருந்தது. அதைத் தனிப்பட்ட அரசியல் உலகம் என்றே சொல்ல வேண்டும். ஒவ்வொரு நாட்டின் ஆட்சியும் வெஸ்ட்மினிஸ்ட ருடன் தொடர்புபடுத்தப்பட்டிருந்தது. இவைகளை நிர்வாகம் செய்ய அயல்நாட்டு அலுவலகம் அல்லது இந்தியா அலுவலகம் என்ற காரியாலயங்கள் இருந்தன. 1925-க்கு முன்பு, இந்த இரண்டு அலுவலகங்களும் ஒரு காரியாலயமாகவே இருந்தன. அதற்குப் பிறகு அது இரண்டு துறைகளாகப் பிரிக்கப்பட்டு, டொமினியன்களுக்கும், காலனிகளுக்கும் தனித்தனி நிறுவனங் கள் ஏற்படுத்தப்பட்டன.

இந்தப் பேரரசில் நல்ல இயற்கை வளங்களும் போருக்கு வேண்டிய தேவைகளும் உள்ளன. தென் ஆஃப்பிரிக்காவிலிருந்து மட்டும் உலகத்திலுள்ள பாதித் தங்கம் வரையிலும் அவர்களுக் குக் கிடைத்தது. மலேயாவிலிருந்தும், மற்றப் பகுதிகளிலிருந்தும் அதற்குப் பாதிப் பங்கு ரப்பரும், மூன்றில் ஒரு பங்கு தகரமும் கிடைத்தன. கனடாவிலிருந்து பேரளவில் நிக்கலும், கால் பங்கு கோதுமையும் கிடைத்தன. கோல்டு கோஸ்டிலிருந்தும் அஷாந்தி யிலிருந்தும் கால் பங்கு கொக்கோ கிடைத்தது. சிலோனி லிருந்து கால்பங்குத் தேயிலை கிடைத்தது. இருந்தபோதிலும், 1930-ல் இந்தப் பேரரசு, மற்ற நாடுகளைப்போலவே தன்னி றைவு பெற்றதாக இல்லையென்றாலும், தவிர பொருளாதார நலன்களெல்லாம் சரியாகத் தொடர்புபடுத்தப்படவில்லை

என்றும் கூறினர். பேரரசில் வாழ்ந்த பிரிட்டிஷ் சமுதாயத்தினர் தங்களுடைய பாதுகாப்பிற்கு பிரிட்டிஷ் கடற்படையையும், தங்களுடைய வர்த்தகத்திற்கு லண்டன் பாங்குகளையும் நம்பி யிருந்தனர் என்று பேரரசின் ஆரம்ப வரலாறு கூறுகின்றது. போரினால் ஏற்பட்ட களைப்பாலும், பின்பு ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியாலும் அவர்களுக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டன. 1880 முதல் பேரரசின் அமைப்பு மிகவும் மாறி விட்டது. ஒவ்வொரு பகுதியும் பல வகைகளில் சுய ஆட்சி பெற்றிருக்கின்றது.

கனடா முதலில் சுதந்திரம் பெற்றதால், அது மற்றப் பேரரசு நாடுகளுக்கு முன் மாதிரியாகவே விளங்குகிறது. ஆனால், அது பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தபோதிலும், அதை ஆங்கிலோ-சாக்ஸன் கண்டத்தின் ஒரு பகுதி என்றே குறிப்பிட வேண்டும். அமெரிக்காவை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, அதனுடைய மக்கள் தொகை அதிகமாகப் பெருகவில்லை. கூட்டரசாங்கம் ஏற்படும்பொழுது 3½ மில்லியன் மக்களும், 1901-ல் 5¾ மில்லியன்களும், தற்பொழுது 10 மில்லியன் மக்களுமாக மக்கள் தொகை அங்கு அதிகரித்திருக்கிறது. இந்த நூற்றுண்டின் துவக்கத்தில்தான், அதனுடைய மக்கள் தொகை அதிகமாக வளர்ச்சியுற்றுள்ளது. ஆறு ஆண்டுகளில் கனடா' லண்டனிலிருந்து 250 மில்லியன் பவுன்களைக் கடனாக வாங்கியிருக்கிறது. அபிவிருத்தி மேற்குப் பகுதியில் மத்தியிலும் அப்பொழுது தான் ஏற்பட்டது. 1871-ல் மனிடோபா உருவாக்கப்படும்பொழுது 25,000 மக்களே இருந்தனர். 1911-ல் 425,000 பேர் அதிகரித்துவிட்டனர். சாஸ்காட்சிவான் (Saskatchewan), ஆல்பெர்ட்டா (Alberta) ஆகிய இரு மாகாணங்கள் 1905-ல் உருவாக்கப்பட்டன; அந்த இரு மாகாணங்களிலும் முறையே 492,000 ; 374,000 பேர் வரையிலும், 1911-ல் அதிகரித்துவிட்டனர். அந்த சமயத்திலிருந்து நல்ல தானிய அறுவடைகள் ஏற்பட்டன. சுமார் 400 மில்லியன் புஷல் கோதுமை ஏற்றுமதி செய்யப்பட்டது. கனடியன் பஸிஃபிக் ரெயில்வேக்களுக்குப் போட்டியாக, புதிய டிரான்ஸ்-கான்டினன்டல் ரயில்வேக்கள் விடப்பட்டன. புதிய நீராவிக் கப்பல்களும் வடக்கின் தூரப் பகுதிகள்வரையிலும் விடப்பட்டன. ஆதலால், ஹட்ஸன் விரிகுடாவுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளப்பட்டது. யூகான் (Yukon) பிரதேசத்தில் தங்கமும், ஒன்டாரியோ (Ontario) பிரதேசத்தில் நிக்கலும் கண்டு பிடிக்கப்பட்டன. ஏற்கெனவே அப் பகுதிகளில் புல்வெளிகளும், மீன் பிடிப்பு வசதிகளும் நிறைய இருக்கின்றன. நியூஃபவுண்ட்லாந்துமட்டும் கடலைநோக்கித் தொடர்பற்றிருந்தது.

டொமினியன் கீழ்ச் சபையில் 1935-ல் பல மாறுதல்கள் ஏற்பட்டன. குறிப்பாக, அந்தச் சபை அங்கத்தினர்களில், கியூபெக் (Quebec) 65 அங்கத்தினர்களையும், ஒன்டாரியோ 82 அங்கத்தினர்களையும், மூன்று புல்வெளி மாகாணங்களில் 55 பேரும், மூன்று மேரிடைம்ஸ் மாகாணங்களில் 26 அங்கத்தினர்களுமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். காலப்போக்கில் பிரிட்டிஷ் மக்கள் அங்கே குடியேறுவது பாதி அளவில் குறைந்துவிட்டது. தவிர, அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் கனடாவுக்கும் உள்ள ஆயிரம் மைல் திறந்த எல்லைக்கோடுகளில் ஏற்படுகின்ற பிரச்சினைகளும், அந்த நாட்டில் வளர்ச்சியடைந்துள்ள தீவிர ஜனநாயக இயக்கமும் மேல் சபையை வலிவில்லாமல் ஆக்கிவிட்டன. தவிர, பொருளாதார அடிப்படையில் கட்சிகள் செயல்பட ஆரம்பித்தன. பிரிட்டனிலிருந்து ஜனநாயக வளர்ச்சிக்கான எவ்வளவு அனுபவங்களைக் கற்றுக்கொண்டதோ, அதைப்போன்றே தெற்கு நாடுகளிலிருந்தும் கற்றுக்கொண்டது.

1891-ல் மேக்டொனுல்டின் மரணம் ஏற்பட்ட காலத்திலிருந்தே, பலதரப்பட்ட அவசர நெருக்கடிகளாலும், உணர்ச்சிகளாலும், நலன்களாலும் கனடியத் தேசியம் உருவாகியது. அவர்களிடையே மேற்கத்திய நாடுகளின்மனப்பான்மை வளர்ச்சி அடைந்தது. சில சமயங்களில் அமெரிக்கக் காப்பு வரிகளால் மோதல் ஏற்பட்டது. பிரிட்டிஷ் கப்பற்படையை மன்ரோ கோட்பாடுகள் ஆதரிப்பதா, அல்லது பேரரசுக்குள் இருப்பதா அல்லது சுய ஆட்சி பெற்று தனித்து இருப்பதா என்ற பிரச்சினை, களை அவர்கள் முடிவு செய்யவேண்டிய நிலையில் இருந்தனர். அந்தத் தலைமுறையின் அரசியல் தலைவராக இருந்தவர், ஃபிரெஞ்சுக் கனடியனுன வில்ஃபிரெட் லாரியர் (Wilfred Laurier) என்பவராவார். அவர் கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்தவர். கிளாட்ஸ்டனுடைய லிபரல் கொள்கைகளைக் கொண்டவர். அவருடைய முயற்சியால் பல பேரரசு மாநாடுகள் கூட்டப்பட்ட போதிலும், அவர் அப்பொழுதெல்லாம், கனடாவின் சுதந்திரத்தைத்தான் அதிகமாக வற்புறுத்தி வந்திருக்கிறுர். பேரரசில் அடங்கியிருப்பதைவிட, பேரரசில் உள்ள நாடுகளிடம் நேச மனப்பான்மையுடன் இருக்க விரும்புவதாகக் கூறினுர். கனடாவின் பிரச்சினைகளை, கனடாவே தீர்த்துக்கொள்ளவேண்டுமென்று விரும்பி கனடிய வெளிநாட்டு அலுவலகத்தை 1909-ல் ஏற்படுத்தினுர். அமெரிக்காவுடனும் ஃபிரான்சுடனும் தனித்தனியாக உடன்படிக்கைகளைச் செய்துகொண்டார். கனடியத் தொழில்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காகக் காப்பு வரிகளைப் பேரரசு சலுகைகள் விகிதப்படி அமைத்துக்கொண்டும், கியூபெக்,

இன்னும் மற்ற மாகாணங்களிலும் மாகாண உரிமைகளைப் பாது காத்தும், மேக்டொனல்ட் எடுத்துக்கொண்ட முயற்சியைப் பின் பற்றினர்.

இயற்கையாகவே கனடா நல்ல மத்தியஸ்த நாடாக அமைந்தபோதிலும், அந்த நாடு, பெருவாரியான பிரிட்டிஷ் மக்களுக்கும், அமெரிக்கர்களுக்கும் பயனுள்ளதாக இருந்தது. ஆனால், அலாஸ்கா (Alaska) எல்லைக்கோட்டை 1903-ல் நிர்ண யம் செய்தபொழுது, அதற்கும் பேரரசிற்கும் மனவேறுபாடு ஏற்பட்டு, பேரரசிலிருந்து விலகியிருக்கின்ற நிலை ஏற்பட்டது. கியூபெக்கில் இன்னும் பழைய கொள்கைகளையே பின்பற்றி வந்தனர். அங்கிருந்தவர்கள் கத்தோலிக்கர்கள் ; விவசாயிகள், நிறைய குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். அங்கே பல கலப்புத் திருமணங்கள் நடந்தபோதிலும், நிறையச் சிக்கல்கள் அவர்க ளிடையே ஏற்பட்டன. அவர்கள் தங்களுக்கென்று தனிப் பள்ளி கள் வேண்டுமென்று வற்புறுத்தினர். பிரிந்து வாழவேண்டு மென்ற மனப்பான்மை அவர்களிடையே வளர்ந்தது. பரோசா (Bourassa) தலைவரான பிறகு லாரியரின் கொள்கைகள் வலிவிழந் தன. பரோசா, பாபினியூவைப் (Papineau) பின்பற்று கின்றவர். தவிர, அவருக்கு 1839 ஆவது ஆண்டின் நிகழ்ச்சிகளில் நம்பிக்கையிருந்தது.

போர்க்காலத்தில் லாரியருக்குப் பின்பு போர்டன் (Borden) என்ற கன்சர்வேடிவ் அங்கத்தினர் பிரதம அமைச்சரானர். அவரும், லாரியர் பின்பற்றிய கனடிய தேசியத்தைப் பின் பற்றினர். இவரைத் தவிர, லாரியரின் வழியைப்பின்பற்றியவர் களில் மிகவும் முக்கியமானவர் மெக்கன்ஸி கிங் (Mackenzie King) என்பவராவார். ஐரோப்பாவில் இந்த மெனன்ஸீ கிங் கனடிய அமைச்சராகவும், கனடியப் படையைத் தலைமைதாங்கி நடத்துபவராகவும் இருந்தார். அவருடைய வற்புறுத்தலில், கனடா சமாதான உடன்படிக்கையில் சுதந்திர நாடாகக் கையெழுத்திட்டதும், சர்வதேச சங்கத்தில் தனி நாடாக அங்கம் வகித்ததும், வாஷிங்டனில் அரசனின் தூதுவராகச் சென்ற ஒரு கனடிய அமைச்சர் வர்த்தக உடன்படிக்கையைச் செய்து கொண்டதும் போன்ற நிகழ்ச்சிகள் கனடா பேரரசுடன் இணைந்து வாழ்வதற்கான நிபந்தனைகளைப் போன்று அமைந் திருந்தன. மீண்டும், கனடாவுக்கும் பிரிட்டனுக்கும் உறவு நீடித் திருப்பதற்கும், டொமினியனுக்கும் மற்ற மாகாணங்களுக்கும் நல்ல உறவு நீடித்திருப்பதற்கும் நிபந்தனைகள் விதிக்கப்பட்டன. கனடியக் கூட்டரசாங்கம் மற்ற மாகாணங்களுடன் ஏற்படுத்தப்

பட்ட உடன்படிக்கைபோன்றிருந்தாலும், டொமினியனில் இயற்றப்படுகின்ற சட்டங்களைப் பொறுத்து அந்த உறவு பல மடைய வேண்டியதாக இருந்தது. தவிர, டொமினியனின் ஆதிக்கத்தைத் தவிர்க்க, கியூபெக் சில உரிமைகளைக் கோரியது. இந்த மாகாணங்களிடையே ஏற்பட்ட நேச உடன்படிக்கையின் நிபந்தனைகளை, பேரரசின் பாராளுமன்றத்தைத் தவிர, மற்ற எந்தச் சட்டத்தாலும் மாற்ற முடியாதென்று அறிவிக்கப் பட்டது. தவிர, மாகாணங்களில் இயற்றப்படுகின்ற சட்டங்களை ரத்து செய்கின்ற டொமினியன் உரிமை, மாகாணங்களின் எல்லைப் பிரச்சினைகள், நீர்ப் பாசனப் பிரச்சினைகள், மற்றும் சமயப்பிரச்சினைகள் ஆகியவற்றைப்பற்றி முடிவான தீர்ப்பைத் தரும் அதிகாரம் வெஸ்ட்மினிஸ்டரில் உள்ள பிரிவி கவுன்சி லிடம்தான் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

பத்து மில்லியன் மக்கள் தொகையுள்ள இந்த நாடு முதல் உலகப் போரில் 600,000 போர் வீரர்களை அனுப்பியது. 400 மில்லியன் பவுன்களைச் செலவு செய்தது. இதைத் தவிர, மற்றொரு உலகப்போரிலும் மகத்தான சேவையும் தியாகமும் செய்திருக் கிறது. அந்த நாடு இயற்கை வளம் பொருந்திய மாபெரும் நாடாகும். அந்த நாட்டைக் கண்டுபிடித்தவர்களின் தளராத தன்மையும், இயற்கை அன்னை அளித்த வற்றாத வளமும் இருக் கின்றவரையிலும், அதன் எதிர்காலம் இன்னும் நன்றாகச் சிறப்புறும்.

சட்டத்தைத் தவிர மற்ற எல்லாவிதங்களிலும் மாறுபட் டிருந்த ஆஸ்திரேலியா, கனடாவின் சூழ்நிலைக்கு முற்றிலும் மாறு பட்ட நிலைமையில் வளர்ச்சியடைந்துள்ளது. மற்ற பிரிட்டிஷ் சமுதாயங்களிடமிருந்து இந்த நாடு மிகவும் ஒதுக்குப்புறமாக இருக்கிறது. இதன் அருகிலுள்ள மற்ற நாடு நியூஸிலந்தாகும். அதுவும் ஆயிரம் மைல்களுக்கப்பால்தான் உள்ளது. ஆஸ்திரேலி யாவில் உள்ள மக்கள் ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள். அவர்களில் 97 சதவிகிதம் பிரிட்டிஷ் பேரரசில் பிறந்தவர்களே யாவர். வட ஆஃப்பிரிக்காவைப் போன்று அதனுடைய பருவ நிலை மிகவும் வெப்பமுடையது. ஆனால், அதனுடைய அரசியல் சூழ்நிலை ஆசியாவைச் சார்ந்தது. பத்தொன்பதாம் நூற்றாண் டின் நடுவில் பிரிட்டிஷ் குடியேற்ற மக்கள் இந்தத் தூரமான பிரதேசத்தில் வந்து குடியேறினர். இந்த எல்லைக்குமேல் அவர் களால் செல்லமுடியவில்லை. இப் பிரதேசத்தில் ஆரம்பத்தில் வெள்ளை இனத்தவரும் அவருடைய ஆடுமாடுகளும் வாழ முடியாத நிலையில் வந்து குடியேறினர். அதற்குப் பிறகு டொமி

ணியனில் மக்கள்தொகை மிக விரைவில் பெருகியபோதிலும், இன்னும் பாதிப் பிரதேசத்தில் அப்பொழுது மக்களின்றிக் காலியாகத்தானிருந்தது. 1871-ல் அங்கே வாழ்ந்தவர்களின் தொகை 1,668,000 பேர். 1901-ல் 3,824,000 பேராக அதிகரித்தது. 1918-ல், 5,000,000 பேர். இப்பொழுது அங்கே 6,800,000 பேர் வாழ்ந்து வருகின்றனர். நாற்பது சதவிகிதத்திற்கு மேலாகவே உள்ள மக்கள் ஆறு இராச்சியங்களின் தலை நகரங்களில் வாழ்கின்றனர். அதனால் தென்கிழக்குப் பகுதியில் உள்ள இந்த இராச்சியங்கள் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தன. 1928-ல் ஆஸ்திரேலியக் கூட்டரசாங்கத்தின் கீழ்ச்சபையில் அவைகள்தான் அதிகம் ஆதிக்கம் பெற்றிருந்தன. நியூ சவுத் வேல்சும், விக்டோரியாவும் 48 அங்கத்தினர்களை அனுப்பின; ஆனால், மற்ற எல்லா இராச்சியங்களும் சேர்ந்து 27 அங்கத்தினர்களைத்தான் அனுப்பின.

பல ஆண்டுகளாக நடந்த விவாதங்களுக்குப் பிறகு, இந்தக் கூட்டரசாங்கம், 1900-ல் காமன்வெல்த் சட்டம் இயற்றிய பிறகு அமைக்கப்பட்டது. இந்தக் கூட்டரசாங்கத்தின் தன்மை அமெரிக்கக் கூட்டரசாங்கத்தைப் போன்றதன்று. தூரமும் வரலாறும் ஆஸ்திரேலியாவிற்கு ஒரு தனிப்பட்ட கூட்டரசாங்கத்தை ஏற்படுத்துகின்ற நிலைமையை உண்டாக்கின. காமன்வெல்த் அரசாங்கத்திற்குத் தனிப்பட்ட சில அதிகாரங்கள், அதாவது, பாதுகாப்பு, கலால் வரிகள், சுங்கவரிகள், அயல்நாட்டு உறவு, இராச்சியங்களிடையே உள்ள வர்த்தகம் போன்றவை அளிக்கப்பட்டன. நேரடியான வரிவிதிப்பு போன்ற சிலவற்றில், காமன்வெல்த், மற்றும் இராச்சிய அதிகாரங்கள் பங்கிடப் பெற்றன. ஆனால், இராச்சிய அரசாங்கங்களுக்குத் தனிப்பட்ட உரிமைகளும் இருந்தன. கனடாவைப் போன்று கவர்னர்கள் டொமினியன் அரசாங்கத்தால் நியமிக்கப்படாது, ஆஸ்திரேலியாவின் இராச்சியங்களுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தாலேயே கவர்னர்கள் நியமிக்கப்படுகின்றனர். அவர்களிடம் எஞ்சிய அதிகாரங்கள் தரப்பட்டன. இராச்சியங்களில் பெரும்பான்மையும், தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் பெரும்பான்மையும் சேர்ந்தால்தான், அரசியல் அமைப்பில் திருத்தங்கள் கொண்டு வரமுடியும். மேல்சபையான செனட்டில், ஒவ்வோர் இராச்சியத்திலிருந்தும் சரிசமமான அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நியூ சவுத் வேல்ஸின் செல்வாக்குக் கேன்பெர்ராவினால் அதிகமாக்கப்படுவதால், தலைநகரமும் சிட்னியிலிருந்து நூறுமைல் தூரத்திற்கு அப்பாலிருக்கவேண்டுமென்று நிர்ணயம் செய்யப்பட்டது.

ஆஸ்திரேலியா காமன்வெல்த்திலிருந்து மேல் முறையீடுகள் பிரிவி கவுன்சிலுக்குச் செல்லுவது கட்டுப்படுத்தப்பட்டிருப்பதாலேயே, ஆஸ்திரேலியா உண்மையில் நெடுங் காலமாகவே சுதந்திரத்தைப் பெற்றிருக்கின்றது என்பதை உணர்த்துகின்றது. தவிர, சமீபகாலத்தில் காமன்வெல்த்திற்கும் இராச்சியங்களுக்கும் ஏற்பட்டிருக்கும் உறவுகளைப் பார்க்கும்பொழுது, அவை நல்லவிதமாகவே இருக்கின்றதென்பதைக் காணலாம்.

1900-ல் தோன்றிய காமன்வெல்த் ஆற்றலுடையதாக விளங்குவதற்கு மூன்று காரணங்கள் இருந்தன. ஆஸ்திரேலியாவின் இராச்சியங்கள் மிகவும் சிறியவையாக இருந்ததால், அவைகள் காமன்வெல்த்தின் உதவியை நாடியே இருக்கவேண்டியிருந்தன. பிஸ்மார்க்கின் ஜெர்மனி ஆஸ்திரேலியாவில் ஆக்கிரமிப்புச் செய்யும் என்ற பயமும், ஃபிரெஞ்சு நியூ கேலிடோனியா ஆதிக்கமும், ஆசியாவிலிருந்து வந்த குடியேற்றங்களும் சேர்ந்து, ஆஸ்திரேலியாவின் பாதுகாப்பைப் பலப்படுத்துவதற்காக, ஒன்றாக இணையவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதனால்தான் அங்கே கூட்டரசாங்கமே ஏற்பட்டது. பேரரசு போரில் இறங்கிய பிறகு, அதன் அரசாங்கம் ஆஸ்திரேலியா முழுவதையும் ஒரே அங்கமாகவே பாவித்தது. போரும், அதற்குப் பிறகு ஏற்பட்ட பொருளாதார நெருக்கடிகளும், அதன் இராச்சியங்களை மீண்டும் நெருக்கமாக இணைத்தன. அதனால் வரிவிதிப்பில் அதிகரிப்பும், பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து கடன்களைப் பெறவும், மற்றப் பொதுவான ஏற்பாடுகளைச் செய்யவும் வழியாக இருந்தது. எல்லா இராச்சியங்களிலும் தொழில் வளர்ச்சி ஏற்பட்டது. அவர்களுடைய அரசியலில் தொழிலாளர் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தனர். தவிர, கூட்டரசாங்கத்தின் வளர்ச்சி ஆஸ்திரேலியாவின் உயர்நிதி மன்றத்தின்மூலமாக ஏற்பட்டது. இராச்சிய நீதிமன்றங்களிலிருந்தும் மத்தியஸ்த நீதிமன்றங்களிலிருந்தும் மேல் முறையீடுகள் உயிர்நீதி மன்றத்திற்கு அனுப்பப்பட்டன. தொழிலாளர் தகராறுகளைத் தீர்த்துவைப்பதும், இராச்சியங்களுக்குள் ஏற்படுகின்ற வர்த்தகத் தகராறுகளைத் தீர்த்துவைப்பதும், வாழ்க்கைத் தரம், கூலி நிர்ணயம் ஆகிய தேசியத் தேவைகளைச் செய்து தருவதும் இந்த உயர்நீதி மன்றத்தின் பணிகளாக இருந்ததால், கூட்டரசாங்கத்தின் செல்வாக்கு நன்றாக அங்கே வேரூன்றியிருந்தது.

ஆஸ்திரேலியாவில் தொடக்கத்திலிருந்தே தங்கம் கண்டுபிடிப்பதில் தீவிரமாக முனைந்திருந்தனர். தவிர அங்கே நிலம் வைத்திருப்பவர்களிடையேயும் அதிகப் போட்டி ஏற்பட்டது.

இவர்களால் புதிய வளர்ச்சி இந்த நூற்றுண்டில் ஏற்பட்டது. ஜனநாயக வளர்ச்சிக்கு ஒருமைப்பாடு இன்றியமையாததாக இருந்தது. கம்பளி எடுப்பவர்கள் எல்லாம் தொழிற்சங்கத்தில் சேர்ந்தனர். ஏற்கெனவே சுரங்கத் தொழில்களில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களும் தொழிற்சங்கங்களில் சேர்ந்தனர். ஆஸ்திரேலியாவில் ஏழுபேர்களுக்கு ஒருவர் விகிதம் தொழிற்சங்கத்தில் அங்கத்தினராக இருந்தனர். அவர்கள் வெள்ளை ஆஸ்திரேலியா கொள்கையில் தளராத நம்பிக்கை வைத்திருந்தனர். நிலப் போட்டியை, விக்டோரியாகாலத்து ஆல்ஃபிரட் டீக்கின் (Alfred Deakin) என்பவருடன் சேர்ந்து ஒருவிதமாக முடிவுசெய்தனர். தொழில் கட்சியினர், தொழில்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காக அதிகக் காப்புவரிகளை விதித்தனர். பின்பு அவர்களுடைய பலத்தையே நம்பி வாழ முயற்சி செய்தனர். அந்தக் கட்சியின் செல்வாக்கினுல் 1915-ல் காமன்வெல்த்தையும், மற்றும் ஐந்து இராச்சியப் பாராளுமன்றங்களையும் அவர்களது ஆதிக்கத்தில் வைத்திருந்தனர். கட்டாய இராணுவ சேவை என்ற பிரச்சினையில், அவர்களுடைய போர்க்காலத்துத் தலைவரான டபிள்யூ. எம். ஹியூக்ஸ் (W.M. Hughes) என்பவருடனே தகராறு ஏற்பட்டு மாறுன கருத்தைக் கொண்டிருந்தனர். இவருடைய கூட்டு மந்திரிசபைகள் போர்க் காலத்திலிருந்து 1923 வரை பதவியில் அப்பொழுது இருந்தன.

பிரிட்டிஷ் இனத்தைச் சேர்ந்த இந்த ஆறு மில்லியன் ஆஸ்திரேலிய மக்களுக்கு எண்ணற்ற காடுகளும் தண்ணீர் சக்தியும் வீணுகப் போய்விடுகின்றன. அவர்களுடைய அரசாங்கம் சாதாரண மனிதனின் தேவைகளை நன்கு கவனித்தது. அதற்காக அவர்களுடைய அரசியல் குறிக்கோளும் பயன்படுத்தப் பட்டது. ஆனுல், தனிப்பட்ட வகையில் அவர்கள் அவ்வளவு முறையாக அரசியல் எண்ணங்களை உடையவர்களாகத் தெரியவில்லை. இருப்பினும் நூறு ஆண்டுகளில் அவர்கள் ஒரு பெரிய தேசத்தை உருவாக்கினர். முதல் ஜெர்மன் போரில், அவர்கள் 330,000 போர் வீரர்களை அனுப்பினர். அவர்களில், 60,000 பேர் உயிரிழந்தனர். அவர்களுடைய கம்பள உற்பத்தி உலகத்திலுள்ள நான்கில் ஒரு பாகமாகும். தங்க உற்பத்தி குறைந்துவிட்ட போதிலும் அவர்களுடைய கோதுமை உற்பத்தி மிகவும் அதிகரித்துவிட்டது. இந்த முப்பது ஆண்டுகளில் அவர்களுடைய வெளிநாட்டு வர்த்தகம் இரண்டு மடங்கு அதிகரித்துவிட்டது. 1930-ல் அவர்களுடைய வெளிநாட்டு வர்த்தகத்தின் மதிப்பு, 200 மில்லியன் பவுன்களென்று மதிப்பிடலாம். ஆங்காங்கே சிதறியுள்ள மக்களை இணைப்பதற்காக, ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அரசாங்கம் ரெயில்வேக்களை அமைத்துள்ளது. பல புதிய குடி

யேற்றப் பகுதிகளுக்கு நீர்ப்பாசன வசதிகளைத் தருவதற்குப் பல ஆறுகளின் போக்கையும் அவர்கள் மாற்றி அமைத்தனர். ஏழு ஆண்டுகளில் அவர்கள் நிறைய செலவு செய்திருக்கின்றனர். அந்தக்காலத்தில் பிரிட்டனிடமிருந்துமட்டும் 260 மில்லியன் பவுன்களைக் கடனாக வாங்கியிருந்தனர். ஜனநாயக அரசாங்கம் எப்பொழுதும் செலவைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால், பொருளாதார மந்தநிலை 1929-31-ல் ஏற்பட்டபோது, உலகிலுள்ள எல்லா நாடுகளுமே மிகவும் கஷ்டப்பட்டன. ஆஸ்திரேலியாவும் மிகவும் இன்னலுற்றது. இந்த நாட்டில் அப்பொழுது பல சிக்கன முறைகளைப் பின்பற்றி அழிவு ஏற்படாதவண்ணம் பாதுகாத்துக்கொண்டனர்.

மற்றைய நாடுகளைக் காட்டிலும் நியூஸிலந்து சிறிய நாடாகும். ஏனெனில் 'ஐம்பதுகளில்' அதன் மக்கள் தொகை 130,000 பேர்தான் இருந்தனர். ஆனால், அதற்குப் பிறகு, 19 மில்லியன் மக்களுக்குமேல் அவர்கள் மக்கள் தொகை உயரவில்லை. ஆனால், பிரிட்டிஷ் மக்களுக்கும் நியூஸிலந்தில் வாழுகின்ற மக்களுக்கும் வரலாற்று வழியாகவும், வெப்பநிலையிலும், தன்மையிலும், உணர்ச்சியிலும், ஜனநாயகத்தை வளர்ச்சி அடையச் செய்வதிலும் நிறைய ஒற்றுமைகள் காணப்படுகின்றன. வட இந்தியாவிலுள்ள சில போரிடும் இனங்களைத் தவிர, நியூஸிலந்திலுள்ள போரிடும் மக்கள் இனம் மற்ற எல்லா நாடுகளையும் விட மிகவும் சிறப்பானது. 1914-ல் ஏற்பட்ட போரில், இந்த நாட்டிலிருந்து நான்கில் ஒருவன் வீதம் கலந்துகொண்டிருக்கிறான். மோரி போர்களாலும், நிலச் சட்டங்களால் ஏற்பட்ட குழப்பத்தாலும், நிறைய மராமத்துப் பணிகளைச் செய்ய வேண்டியதாலும், கடன் வாங்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதாலும் இந்தச் சிறிய காமன்வெல்த் மிக விரைவில் ஒற்றுமை பெற்று 1854-ல் பொறுப்பான ஆட்சியைப் பெற்றது. மாகாணங்களென்று பிரிப்பதைத் தவிர்த்து, புதிய மக்கள் குடியேறுவதால் வந்த பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு நிறையச் செலவு செய்தும், பொருளாதார மந்த நிலையையும் சமாளித்துக் கொண்டது. 1914-க்கு முன்பே, நல்லவிதமாக நிறுவப்பட்ட தீவிர முன்னேற்றக் கொள்கைகளையுடைய அரசாக, மேக்கன்ஸி, பெம்பர் ரீவ்ஸ், செட்டன், ஜோசப் வார்ட் ஆகியோரின் முயற்சியால் உருவாக்கப்பட்டது.

சில சமுதாயப் பிரச்சினைகளை பிரிட்டன் நிறைவேறுவதற்கு முன்பாகவே நியூஸிலந்தில் நிறைவேற்றினர். பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. தொழிலாளர் வேலை நிறுவனங்களும் வயோதிகருக்கு அளிக்கும் உதவிப்பணமும் இங்கே

முன்பே கொண்டுவரப்பட்டன. தவிர, சோஷியலிச வழியைப் பின்பற்றி, அரசாங்க பாங்குகளும், வைத்திய சேவைகளும், இன்ஷ்யூரன்ஸ் திட்டமும் அரசாங்கத்தின் பொறுப்பில் இருந்தன. இருப்பினும் அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சி, சிறிய அளவில் சொத்துடையவர்களின் கூட்டுறவு முயற்சியால் நிறுவப்பட்டதாகும். பல குளிர்சாதனங்களைக் கண்டுபிடித்ததற்குப் பின்பு, அந்த நாட்டிலிருந்து பால்கட்டி, இறைச்சி வகைகள் அதிகமான அளவில் ஏற்றுமதி செய்யப் பட்டன. பிரிட்டனில் விற்கப்படுகின்ற மூன்றில் இரண்டுபங்கு பால்கட்டியும், பாதி இறைச்சி வகைகளும் இங்கிருந்துதான் பெறப்படுகின்றன. சமீப காலம் வரையிலும் பிரிட்டனிட மிருந்துதான் இந்த நாடு கடன் உதவிகளைப் பெற்றுவந்தது. இந்த நாடு அடைந்த கடன்களையெல்லாம் கொடுக்க இயலாது என்று அது கூறவில்லை. ஆஸ்திரேலிய இராச்சியங்கள் ஒரு சமயத்தில் இப்படிப் பயமுறுத்தப்போய் அந்த இராச்சியங் களுக்கே கடன் பெறுவது இயலாமல் போய்விட்டது.

மற்ற ஐரோப்பிய நாடுகளிடையே கனடாவிற்கு அதிகத் தொடர்பு இருப்பதைப் போலல்லாது, இந்த இரண்டு ஆஸ்திர லேஷிய டொமினியன்களும் பிரிட்டிஷ் இனத்தைப் போன்றே வளர்ச்சி அடைந்து வந்ததால், கனடாவைப்போல, பிரிட்டி ஷாரின் தொடர்பையும், விளைவையும் அதிகமான சந்தேகத் துடன் காணவில்லை. ஆனால், இந்த மூன்று டொமினியன்களும் பல்வேறு வகையான கொள்கைகளையும் நோக்கங்களையும் வைத் திருந்தபோதிலும், ஒரே மாதிரியான உறவைத்தான் பேரரசுடன் கொண்டிருந்தன. ஆனால், தென் ஆஃப்பிரிக்கா, அயர்லாந்து ஆகிய டொமினியன்களுடன் பேரரசு அவ்வளவு நெருங்கிய உறவை வைத்திருக்க முடியவில்லை. அவைகள் இயற்கையாகவே மாறுபட்டவை. அந்த இனத் தகராறுகளும் அவைகளின் பழைய வரலாறும் நெருங்கியத் தொடர்பை ஏற்படுத்த முடியவில்லை.

போதா (Botha)வும்,ஸ்மட்சும்(Smuts) உருவாக்கிய யூனியன் நிபந்தனைகளிலிருந்து தென் ஆஃப்பிரிக்கா முழுவதும் விலகிவிட வில்லை. 1914 போயர் கலகத்திற்குக் காரணமாக இருந்த ஹெர்ட்ஸாக்கின் (Hertzog) இனவெறிக் கொள்கையால், ஓர் அளவைத் தவிர, மற்றபடி தென் ஆஃப்பிரிக்காவின் தன்மையை மாற்றிவிடவில்லை. இன்னும் அதனுடைய ஆதிக்கத்தைச் செல் வாக்குபெற்ற இரண்டு மாகாணங்களான டிரான்ஸ்வாலும், கேப்பும்தான் பெற்றிருந்தன. யூனியன் கீழ்ச்சபைக்கு இந்த இரண்டு மாகாணங்களும் மூன்றில் இரண்டு பாகமுள்ள அங்கத் தினர்களை அனுப்புகின்றன. சுதேச மக்கள் அதிகமாக இருப்ப

தால், அதனுடைய பாதுகாப்பிற்கு பிரிட்டிஷ் கப்பற்படையைத் தான் அது நம்பியிருக்கவேண்டும். பிரிட்டிஷாருடன் அது தொடர்பு வைத்திருப்பது அதற்கு மிகவும் அவசியமாகப்பட்டது. ஆஸ்திரலேஷியாவைப்போன்று இயற்கையாகவே நெருங்கிய உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அதற்கில்லை. ஸ்மட்ஸ் காலத்தில், பிரிட்டிஷ் காமன்வெல்த்தை அது நம்பியிருக்கவேண்டியதாயிற்று. சிறு நாடுகளின் பாது காப்பைப் போற்றிவந்த சர்வதேச சங்கத்திலும் அது அங்கத்தினராக, பிரிட்டிஷ் காமன்வெல்த்தை நம்பியிருக்க வேண்டி நேரிட்டது.

1936-ல் யூனியனிலிருந்த ஐரோப்பியர்களின் தொகை இரண்டு மில்லியன்களுக்குச் சிறிது குறைவாகவே இருந்தது. ஆஃப்பிரிக்க சுதேச மக்களும், அங்குக் குடியேறிய இந்தியர்களும், மற்றும் பலதரப்பட்டவர்களும், ஐரோப்பியர்களைவிட, மூன்று நான்கு பங்கு அதிகமாகவே இருந்தனர். குடியேறிய இந்தியர் களின் பிரச்சினை பெரும்பாலும் நேட்டால் பகுதியில்தான் இருந்தது. தவிர, சில தொழிற்சாலைகளில்மட்டுமே அவர்கள் வேலை செய்து வந்தனர். இந்திய அரசாங்கத்தின் உதவியாலும் காந்தியாலும் இவர்களால் நேர்ந்த பிரச்சினைக்கு ஒரு முடிவு காணப்படடது. ஆனால், ஆஃப்பிரிக்க மக்களால்தான் இந்த நாட்டின் தலைவிதியே நிர்ணயம் செய்யப்படவேண்டியிருந்தது. அவர்களுடன்தான், தங்கச் சுரங்கங்கள் நீடித்திருப்பதும் பின்னிக்கிடந்தது. தவிர, வெள்ளையர்களின் வாழ்க்கைத்தர நிர்ணயம், வெள்ளைத் தொழிலாளர்களின் மனப்போக்கு, நிலத் தைப் பண்படுத்துதல், எல்லைகளை விஸ்தரித்தல் ஆகிய பிரச்சினை களும் இவர்களுடன்தான் பிணைக்கப்பட்டிருந்தது. இதனால் தான் தெற்கு ரொடீஷியா 1922-ல் யூனியனுடன் சேர மறுத்தது. பேரரசு அரசாங்கமும், பெச்சுவானலாந்து, சுவாசிலாந்து, பசுட்டோலாந்து ஆகிய அதன் பாதுகாப்பிலிருந்த நாடுகளை யூனியனில் இணைத்துக்கொள்ளும் திட்டத்தை ஏற்றுக்கொள்ள வில்லை.

அமைதியை நிலைநாட்டுவதிலே அக்கறை காட்டிய போத்தா 1919-ல் மரணமடைந்த பின்பு, யூனியனின் அரசியல் வரலாற் றில் இரண்டு நெருக்கடியான நிகழ்ச்சிகள் ஏற்பட்டன. பேரர சுடன் தொடர்பு வைத்துக்கொள்வதைப்பற்றியும், பேரரசி லிருந்து விலகிவிடுவதற்கான உரிமை வேண்டுமென்று கோரியும், ஸ்மட்ஸ் இரண்டு தேர்தல்களில் போட்டியிட்டார். ஆனால், ஆஃப்பிரிக்கண்டர்களின் இன உணர்ச்சியின் காரணமாக, அவர்

தோற்கடிக்கப்பட்டு, அவருக்குப் பதிலாக, ஹெர்ட்ஸாக் என்பவர் 1924 முதல் 1933 வரை பதவியில் நீடித்திருந்தார். அவருடைய காலத்தில் தேசியக் கொடியில் என்ன சின்னத்தைப் பொறிப்பதென்பதைப்பற்றி ஒரு பெரிய தகராறு ஏற்பட்டது. பேரரசி மாநாடுகள் நிகழ்ந்தபொழுது, யூனியன் அதனுடைய தேசியத் தன்மையை வற்புறுத்தியது. ஹெர்ட்ஸாக்கின் வெற்றிக்குக் காரணமாக இருந்தது, வெள்ளையர்களின் இன உணர்ச்சிப் பிரச்சினையும், வெள்ளைத் தொழிலாளர்கள் அளித்த வாக்குகளுமே என்று கூறலாம். அவர்களுடைய கூட்டுறவால், ஆஃப்பிரிக்கண்டர் கொள்கையில் அவர் வெற்றி கண்டதுமட்டுமன்றி, அங்குள்ள சுதேச இனத்தினரைச் சில தொழிற்சாலைகளில் சேர்த்துக்கொள்ளக்கூடாதென்ற அடிப்படையில் ஒரு நிறவெறிச் சட்டத்தையும் இயற்றினர். பின்பு அவர்கள் வசிக்கின்ற பகுதிகளை ஒதுக்குப்புறமாக்கினர். மற்றும் அவர் எடுத்துக்கொண்ட சில முயற்சிகளின் விளைவாகக் கேப் மாகாணத்தில் சுதேசிகளின் வாக்குரிமையை முழுவதுமே ஒழித்துவிட்டார். அவர்களுக்கென்று தனிப்பட்ட வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்பட்டு, சிறிய அளவில் மட்டுமே அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது.

1933 முதல் ஸ்மட்ஸ் என்பவரும் ஹெர்ட்ஸாக் என்பவருடன் ஒரே அரசாங்கத்தில் ஆட்சி செய்ய நேரிட்டது. இந்த அரசாங்கம் மற்றொரு பெரிய போர் துவங்கும் வரையிலும் நீடித்தது. இந்த அரசாங்கமும் பழைய இன வெறிக் கொள்கைகளையே பின்பற்றியது.

பொருளாதார நெருக்கடியும், மாகாணங்களிடையே தோன்றிய வேறுபாடுகளும், சுதேச மக்களின் பிரச்சினையும், தவிர, பெரும்பகுதி வெள்ளையர்களும் கறுப்பர்களும் வறுமை நிலையில் இருந்ததும் ஆகிய பல காரணங்களால், இவர்களுடைய கூட்டு அரசாங்கம் தோன்றியது. இந்த இரண்டு கட்சிகளிடையே பல வேறுபாடுகள் இருப்பினும், சில பொதுப்படையான பிரச்சினைகளில், அதாவது, சுதேச மக்களின் பிரச்சினையிலும், அவர்கள் தனி தேசிய நாட்டை வற்புறுத்துவதிலும் ஒன்று சேர்ந்தன. கவர்னர்-ஜெனரலின் அலுவலகத்தையும், ஹை-கமிஷனர் அலுவலகத்தையும் அவர்கள் வேறுபடுத்தினர். 1934-ல் இயற்றிய அவர்களுடைய அந்தஸ்து சட்டத்தில் (Status Act) யூனியன், ஒரு இறைமை பெற்ற தனிச் சுதந்திர நாடென்று அறிவித்தனர். அவர்களுடைய நாட்டிற்கென்று ஒரு தனி அரசாங்க இலச்சினையையும் அமைத்துக்கொண்டனர்.

சட்டத்தைப் பொறுத்த அளவிலும் அவர்கள் பிரிந்துவிட்ட போதிலும், அவர்களுடைய பொருளாதார அரசியல் தொடர்புகள் நீடித்தன. இதைப்போலவே அயர்லாந்திலும் அப்பொழுது நிகழ்ந்தது. 1927-ல் காஸ்கிரேவின் (Cosgrave) வலதுகையாக இருந்த ஓ'ஹிக்கின்ஸ் (O'Higgins) என்பவர் கொல்லப்பட்டார். அதற்குப் பிறகு டி வேலரா (De Valera) அவருடைய குடியரசுக் கட்சியை அரசியலில் செல்வாக்குறச் செய்தர். வன்முறைகளால் சாதிக்க முடியாதவற்றை, அவர் கட்சியைப் பலப்படுத்தியே அதன்மூலமாகச் சாதித்தார். 1932-ல் நிகழ்ந்த தேர்தல்களில், அவர் வெற்றிபெற்றுப் பதவியில் அமர்ந்தார். அதற்குப் பிறகு அவருக்கு அதிக வாய்ப்புகள் கிடைத்தன. உலகப் பொருளாதார நெருக்கடியின் காரணமாக அயர்லாந்தும் மிகவும் பாதிக்கப் பட்டது. அதனுடைய இருபத்தாறு கவுன்டிகளிலுள்ள ஐந்து மில்லியன் மக்கள்தொகை, மூன்று மில்லியன்களாகக் குறைந்து விட்டது. அயர்லாந்திலிருந்து ஏற்றுமதியான பொருள்கள் 90 சதவிகிதம் பிரிட்டனுக்கு அப்பொழுது அனுப்பப்பட்ட போதிலும், அயர்லாந்து தன்னிறைவு பெற்று வாழவேண்டு மென்று விரும்பியது. வெஸ்ட்மினிஸ்டர் சட்டத்தின்படி, அயர்லாந்து அதன் விருப்பப்படி முன்னேற்றமான சட்டங்களை இயற்றும் வாய்ப்புப் பெற்று இருப்பதைக்கண்டு, டி வேலரா அந்த வழியைப் பின்பற்றி, பேரரசு அரசாங்கத்துடன் இதுவரையிருந்த சில பழக்கங்களை ரத்துசெய்தார். பிரமாணம் எடுத்துக்கொள் வதும், அயர்லாந்திலிருந்து மேல் முறையீடுகளைப் பிரிவி கவுன் சிலுக்கு அனுப்புவதும் ரத்துசெய்யப்பட்டது. கவர்னர்-ஜெனர லுக்கு அதிகாரங்கள் இருக்கக்கூடாதென்றும், மேல்சபையைக் கலைத்துவிட வேண்டுமென்றும் அவர் அறிவித்தார். பிரிட்டிஷ் சட்டத்திலிருந்து வேறுபடுத்தி, ஐரிஷ் குடிமகனுடைய குடி உரிமை யைச் சுதந்திரமானதாக்கினர். பிரிட்டிஷ் பேரரசின் தொடர்புகள் மிகவும் தாராளமாக இருந்தபோதிலும், அயர்லாந்து சட்டத்தால், அந்த நாடு தனிச் சுதந்திரம்பெற்ற நாடாகப் பாவிக்கப்படவேண்டுமென்றும் அந்த உரிமையைப் பறிக்கும் எந்தப் பேரரசின் நடவடிக்கையையும் அனுமதிக்க முடியாதென் றும் டி வேலரா கருதினர். அதற்குப் பிறகு பிரிட்டனுக்கும் அயர் லாந்திற்கும் உள்ள தொடர்பு சர்வதேசிய அடிப்படையில்தான் இயங்கவேண்டுமென்றாயிற்று. மற்ற வெளிநாடுகளை நடத்தும் வகையில்தான் பிரிட்டிஷ் அரசாங்கமும் அயர்லாந்தை நடத்த வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. அதிகக் காப்புவரிகளை விதித்துக்கொண்டதால், அயர்லாந்தின் வெளிநாட்டு வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டது. இந்தத் தகராறு ஆண்டுதோறும் பிரிட்டனுக்கு அயர்லாந்து அளிக்கும் கடன்களால் ஏற்பட்டது.

பிறகு இதைத் தவிர்ப்பதற்கு டி வேலரா 1921-ல் பிரிட்டனுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அதன்படி பிரிட்டன் அயர்லாந்திலுள்ள சில துறைமுகங்களைப் பயன்படுத்திக் கொள்ளும். போர்க்காலத்தில் அயர்லாந்து நடுநிலைமைக் கொள்கையைப் பின்பற்றவேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப் பட்டது.

டர்ஹாம் அறிக்கைக்குப் பிறகு, டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடுகளில் பல தாராளமான விதிவிலக்குகள் அளிக்கப் பட்டன. வரலாற்று வழியாகப் பார்ப்போமெனின் அதற்குப் பல காரணங்கள் உள்ளன. அந்த நாடுகள் பெற்ற பொறுப்பாட்சியில் திட்டவட்டமான கொள்கைகளைப் பின்பற்றி அவைகளுக்கும் பேரரசிற்கும் இடையே தடுக்கும் எந்தச் சுவரையும் எழுப்பமுடியாது. அந்த நாடுகளைக் கண்காணிக்கும் வேகத்தில், அங்கிருந்த சுதேசமக்களையும் பிரிக்கமுடியாது. அல்லது கனடாவிலுள்ள சமயத் தகராறுகளையோ, அல்லது நியூஸிலந்திலுள்ள மோரிகளையோ பிரித்துவைத்துவிட முடியாது. அவர்களுடைய உரிமைகளையும் போற்றவேண்டியிருந்தது. அவர்களுடைய வாழ்க்கையின் வளர்ச்சிக்கேற்ப அவர்கள் காப்புவரிகளை விதித்து அவர்களுடைய உற்பத்தித் தொழில்களைப் பாதுகாத்துக் கொண்டனர். அவைகளுக்கேற்ப வர்த்தக உடன்படிக்கைகளும் வெளிநாட்டுத் தொடர்புகளும் செய்துகொள்ளப்பட்டன. அமைதியான முறையில், கவர்னர்களின் இரட்டைப் பொறுப்பும் குறைந்துகொண்டே வந்தது. காலனிகள் பெற்ற சுதந்திரத்தால், அவைகள் தவறுசெய்யலாம். அவர்களது ஆட்சியில் ஊழல்கள் மிகுந்திருக்கலாம். அதிகாரிகளை வேலைகளிலிருந்து நீக்கலாம். மேல் சபைகளை ரத்துசெய்யலாம்; ஆனால், விக்டோரியா காலம் முடிவடையும்பொழுது, அந்தக் காலனிகளிலிருந்த கவர்னர்கள் இந்தப் பிரச்சினைகளில் தலையிடுவதை நிறுத்திக் கொண்டனர். ஆனால், சட்டப்படி கவர்னர்களுக்கு இந்தப் பிரச்சினைகளில் தலையிடும் உரிமை இருந்தது. ஆனால், நடைமுறையில் பின்பற்றவில்லை. 1865-ல் இயற்றப்பட்ட கலோனியச் சட்டங்களின் அதிகார வரம்பு (Colonial Laws Validity Act) சட்டப்படி, பேரரசிற்குப் பாதகமாகக் காலனிகளில் இயற்றப் படும் சட்டங்கள் செல்லாதவை என்று அறிவித்திருப்பது வெறும் பெயரளவில்தான் என்று கொள்ளவேண்டும். அந்தச் சட்டத்திற்குப் பயன் இல்லை. அது மறைந்துவிட்டது. ஆனால், இந்தச் சட்டங்கள் கனடாவிலோ அல்லது ஆஸ்திரேலியாவிலோ இன்னும் இருக்கிறதென்றால், அந்த நாடுகளில் ஏற்படும் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாணங்களுக்கும் அல்லது இராச்சியங்களுக்கும் ஏற்படுகின்ற சில தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்கே

பயன்படுத்தப்படுகின்றன. ‘எண்பதுகளில்’ மாற்றி அமைக்கப்பட்ட புதிய பேரரசில், பேரரசு நாடுகளிளிடையே புதிய தொடர்புகளும் ஏற்பட்டன. இதுவரையிலும் பேரரசின் ஆதிக்கத்தை ஏற்றிருந்த இந்த நாடுகள் இப்பொழுது சரிசமமான அந்தஸ்துடன் காமன்வெல்த்தில் அங்கத்தினர்களாக இருந்தன. 1914-க்கு முன்பு பேரரசு மாநாடுகள் கூட்டப்பட்டு, அந்தந்த நாடுகளின் பிரதம அமைச்சர்கள் பங்கெடுத்துக்கொண்டு பல கொள்கைகளையும் திட்டங்களையும் வகுத்துக்கொண்டதைப் போன்று, மேலும் பல மாநாடுகள் அடிக்கடி கூட்டப்பட்டன. 1887-ல் முதல் கலோனிய மாநாடு கூட்டப்பட்டது. அதற்குப் பிறகு 1907 வரையிலும் இவ்விதமாகக் கூடுவது நீக்கப்பட்டது. பின்பு நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறையாவது பேரரசு மாநாடு கூட்டப்பட வேண்டுமென்று விரும்பப்பட்டது. 1911-ல் கூட்டப்பட்ட மாநாட்டில் தென் ஆஃப்பிரிக்காவும் கலந்துகொண்டது. அந்த மாநாட்டில் கிரே, பேரரசின் அயல்நாட்டுக் கொள்கையின் சில இரகசியங்களை விவாதித்தார். அந்த மாநாடுகள் உண்மையில் எந்த முக்கியமான முடிவையும் செய்யவில்லை. அவ்விதமான முடிவுகளைச்செய்ய முடியாதென்று முதலில் கனடா தான் கூறியது. பின்பு அதைப் பின்தொடர்ந்து தென் ஆஃப்பிரிக்காவும் அறிவித்தது. அப்பொழுது சில ஏகாதிபத்தியவாதிகளான சேம்பர்லேன், லிட்டல்டன், மில்னர் ஆகியோர், இந்த நாடுகளை பிரிட்டிஷ் பேரரசுடன் நெருங்கிய தொடர்பையும் இணைப்பையும் ஏற்படுத்த முயன்றனர். நிரந்தரமான பேரரசின் கவுன்சிலை ஏற்படுத்துவதோ, அல்லது கூட்டரசாங்கப் பேரரசு பாராளுமன்றத்தை ஏற்படுத்துவதோ, அல்லது ஒரு பொருளாதாரக் கூட்டமைப்பை உருவாக்குவதோ, அல்லது இணைக்கப்பட்ட பேரரசின் கப்பற்படையை உருவாக்குவதோ, போன்ற திட்டங்களை அந்த டொமினியன்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இந்தக் கூட்டுறவு முயற்சியில் அவைகள் ஒரு குறிப்பிட்ட வகையில்மட்டுமே தொடர்பு வைத்துக்கொள்ள முடியும் என்று அவைகள் கூறின. 1897 முதல் கனடா பிரிட்டிஷ் பொருள்களை வாங்குவதில் சலுகைகள் அளித்து வந்திருக்கிறது. இந்த முறையை மற்ற டொமினியன்களும் பின்பற்றச் சம்மதித்தன. அந்த நாடுகளின் கடற்படை பிரிட்டிஷ் போர்த்திட்டத்திற்கேற்ப உதவிசெய்வதாக ஒப்புக்கொண்டன. ஹால்டேனின் ஒரே மாதிரியான இராணுவப் பயிற்சித் திட்டத்தைப் பெறவும் அந்த நாடுகள் சம்மதித்தன.

வெறும் ஒத்துழைப்பு மட்டும் இணைப்பாகாது. அல்லது பரஸ்பரம் தியாகம்செய்ய ஒப்புக்கொண்டது கூட்டுப் பொறுப்

பாகாது. முதல் ஜெர்மன் போரில் விக்டோரியா காலத்துக் கொள்கைகளைப் பின்பற்றிய ஆஸ்குவித் அவருடைய போர்த் திட்டங்களை மற்ற டொமினியன்கள் ஏற்று நடக்கவேண்டு மென்ற கொள்கை வெற்றி அளிக்கவில்லை. அதனால், 1917-ல் லாயிட் ஜார்ஜ் டொமினியன் தலைவர்களைப் பேரரசின் போர்க் கேபினட்டில் அனுமதித்துச் சரிசமமாகக் கொள்கைகளை விவாதித்ததால் நல்ல பயன் ஏற்பட்டது. சமாதான மாநாடுகளில் பேரரசு ஒன்றாகப் பிரதிநிதித்துவம் உடையதாக இருந்தது. ஆனால், சமாதான உடன்படிக்கைகளில் அவைகள் தனித்தனி நாடுகளாகக் கையெழுத்திடவேண்டுமென்று, கனடாவைச் சார்ந்த போர்டன் (Borden) கூறியதை ஏற்றுக்கொண்டனர். சர்வதேச சங்கத்திலும் அவை தனித்தனி நாடுகளாகத்தான் சேர்ந்தன. போர்க்காலத்தில் ஏற்பட்ட சோதனைகளிலும் போருக்குப் பின் ஏற்பட்ட பல நெருக்கடிகளிலும், இந்த நாடுகளிடமிருந்து எதிர்பார்த்த கூட்டுறவு, இறுதியில் பிரிந்து போவதில்தான் முடியும் என்று தெரியவந்தது.

அயர்லாந்திற்கும் இந்தியாவிற்கும் பாதி அளவில் புதிய டொமினியன் அந்தஸ்து தரப்பட்டது. அதையொட்டி ஆஃப்பிக்கண்டர்டம் தனித்து நிற்கவேண்டுமென்றும், அமெரிக்காவும் கனடாவைப் பிரிந்து தனித்து நிற்கவேண்டுமென்ற கொள்கைகளும் வலிமை பெற்றன. லாயிட் ஜார்ஜின் வெல் திறனை மற்ற டொமினியன்கள் ஏற்க மறுத்துவிட்டன. சர்வதேச சங்கத்திற்காக ஐரோப்பாவில் ஏற்பட்ட புதிய சிக்கல்களில் இந்த நாடுகள் தொடர்புபடுத்திக்கொள்ள விரும்பவில்லை. லொகார்னோ (Locarno) உடன்படிக்கை செய்துகொள்ளும் பொழுது இந்த நாடுகள் கலந்துகொள்ளவில்லை. இந்த மாறுதல்களைப் பார்த்தால், அந்த நாடுகளில் புதிய தேசிய உணர்ச்சி ஏற்பட்டுள்ளதைக் காணலாம். அயர்லாந்து போருக்கு முன்பாகவே, அதன் சார்பாக மற்ற வெளிநாடுகளில் இராச்சிய தூதுவர்களை நியமித்தது. 1923-ல் கனடாவும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும் வர்த்தக உடன்படிக்கையைச் செய்துகொண்டன. 1928-ல் தென்ஆஃப்பிரிக்கா ஜெர்மனியின் உற்பத்திப் பொருள்களுக்கும் சலுகைகளை அளித்தது. மற்ற டொமினியன் பிரதம அமைச்சர்களிடையே, நேரடியாகக் கடிதப்போக்குவரத்து நடைபெற்றது. முன்புபோல டொமினியன் அலுவலகத்தின்மூலமாக நடைபெறவில்லை. டொமினியன்களின் ஹை கமிஷனர்கள் வெஸ்ட்மினிஸ்டரில் அவர்களுடைய நாடுகளின் நலன்களைப் பாதுகாத்துக்கொண்டனர். கனடாவில் 1926-ல் ஏற்பட்ட ஓர் அரசியல் பிரச்சினையில், பாராளுமன்றத்தைக் கலைக்கும்பொழுது

கவர்னர்-ஜெனரல், அமைச்சர்களின் ஆலோசனையைக் கேட்டுத் தான் நடக்கவேண்டுமென்று முடிவு செய்தது.

இப் புதிய வளர்ச்சிகளுக்கேற்ப, 1926, 1930 ஆகிய ஆண்டு களில் நிகழ்ந்த பேரரசு மாநாடுகளில் டொமினியன்களின் உறவு முறையைத் தெளிவாக வரையறுத்தனர். அதற்குப் பிறகு 1931-ல் வெஸ்ட்மினிஸ்டர் சட்டம் இயற்றப்பட்டது. அதன்படி டொமினியன்கள் சம அந்தஸ்து பெற்றவை என்றும், பேரரசிற்குக் கீழ்ப்பட்டவை அல்லவென்றும் நிர்ணயம் செய்யப் பட்டது. அவைகளின் நோக்கங்கள் மாறுபட்டிருப்பினும், பொதுப்படையாகத்தான் பேரரசுடன் நட்புரிமை கொண்டி ருக்கிறதென்றும், அதனுல் தாராளமாகப் பிரிட்டிஷ் காமன் வெல்த்தின் அங்கத்தினர்களாக இருப்பதென்றும் முடிவு செய்தனர். அதற்குப் பிறகு டொமினியன்களின் கவர்னர்-ஜெனரல்கள், அந்த நாடுகளின் அமைச்சர்களின் ஆலோசனை யைக் கேட்ட பிறகே நியமிப்பதென்றும் ஒப்புக்கொள்ளப் பட்டது. பேரரசுடன் டொமினியன்கள் கொண்ட நல்லுறவைப் பேணிக்காப்பதற்கு அதனுடைய ஹை கமிஷனர்கள் எல்லா டொமினியன்களிலும் நியமிக்கப்படுவர். தவிர, பேரரசினுல் மட்டும் இயற்றப்படவேண்டியதென்ற அதனுடைய பல அதிகாரங்கள் கொண்ட வழக்காறுகள் மறைந்தன. டொமினி யன்கள் இயற்றுகின்ற சட்டங்களுக்கிருந்த பல தடைகள் அகற்றப்பட்டன. எல்லாச் சட்டங்களையும் டொமினியன்களே ரத்து செய்துகொள்ளும் உரிமை அளிக்கப்பட்டது. இதைப் பின் தொடர்ந்து அயர்லாந்து உடனடியாகப் பேரரசின் சட்டம் ஒன்றை ரத்து செய்தது. டொமினியன்களே விரும்பி, பேரரசு அவைகளுக்காகச் சட்டத்தை இயற்றவேண்டுமென்று கேட்டுக் கொண்டாலன்றி மற்றபடி அவைகளின் விவகாரங்களில் பேரரசு அரசாங்கம் தலையிடுவதில்லை என்று ஒப்புக்கொண்டது.

உள்நாட்டுக் கொள்கைகளைத் தவிர, மற்றபடி, சட்டபூர்வ மான உரிமைகள் மாறி, வெறும் பொதுப்படையான ஆன்மீக அடிப்படையில் இந்த டொமினியன்கள் பேரரசுடன் சம அந்தஸ் துடன் தொடர்புவைத்திருந்தன. அவற்றின் தொடர்புகள் சர்வ தேசிய அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டன. பிரிட்டனும், மற்ற டொமினியன்களும் ஒட்டாவாவில் (Ottawa) கூடி அவைகளின் சலுகைகளைப்பற்றி உடன்படிக்கை செய்துகொண்டன. 1936-ல் ஏழாவது எட்வர்ட் அரசன் முடி துறக்கும்பொழுது, மற்ற டொமினியன்கள் பேரரசுடன் ஒத்துழைத்தன. 'இந்தத் தொடர்புகளைப் பார்க்கும்பொழுது, இரண்டு நூற்றாண்டு

களுக்கு முன்பு பர்க் (Burke) என்பவரின் அமெரிக்கச் சொற்பொழிவுகள் நினைவுக்கு வருகின்றன. ஆங்கில அரசியல் அமைப்பின் உணர்ச்சி, மற்ற நாடுகளிலுள்ள எண்ணற்ற மக்களுடன் கலந்து, பின்பு அங்கெல்லாம் பரவி, இணைந்து, வளர்ச்சியுறச் செய்வதுமல்லாமல், ஒவ்வொரு பேரரசின் பகுதிக்கும் புத்துயிர் அளிக்கின்றதென்று கூறியது இப்பொழுது முற்றிலும் உண்மையாகிவிட்டது.

டொமினியன்களைத் தவிர, மற்றக் காலனிகளையும் பிரிட்டனின் பாதுகாப்பிலுள்ள பல பகுதிகளையும் பார்க்கும் பொழுது, அங்கெல்லாம் பிரிட்டன் ஒரே மாதிரியான கொள்கையைப் பின்பற்ற முடியவில்லை. தவிர, அப் பகுதிகளின் எதிர்காலத்தையும் சரியாக நிர்ணயம் செய்யமுடியாது. 1919-ல் சர்வதேச சங்கத்தால் அளிக்கப்பட்ட 'மேண்டேட்' நாடுகள், இப்பொழுது பிரிட்டனுடைய ஆதிக்கத்திலிருந்து மறைந்து வருகின்றன. ஈராக்கு இப்பொழுது சுதந்திரம் பெற்று பிரிட்டனுடைய நேசநாடாக இருந்தது. டொமினியன் முறை ஆட்சிக்கு மாறுபட்டதாக மற்றப் பகுதிகளிலும் இருந்ததென்று கூற முடியாது. உதாரணமாக, தென்மேற்கு ஆஃப்பிரிக்காவும், தங்கனிக்காவும், யூனியன் ஆட்சிமுறைக்கு மாறுபட்டிருக்கவில்லை. அதைப்போலத்தான், ஆஸ்திரேலியாவையும், நியூ கினியாவையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தெரியவரும். மத்தியக் கிழக்குப் பிரதேசத்தில் பேரரசின் முடிவைவிட, சர்வதேசிய சூழ்நிலையை அனுசரித்தே இப் பிரச்சினைகளை முடிவுசெய்ய வேண்டியிருந்தது. 1918 முதல் யூதர்களுடைய குடியேற்றங்கள் ஒரு மடங்கு பாலஸ்தீனத்தில் அதிகரித்துவிட்டது. தவிர, பாலஸ்தீனத்தில் அவர்கள் செய்த புரட்சியால், அராபியர்களும் முழு முகமதிய உலகமும் அவர்களுக்கு விரோதமாக மாறிவிட்டன. இப் பிரச்சினைக்குப் பிரிட்டனால்மட்டும் ஒரு முடிவு காண முடியாது என்ற நிலை உண்டாயிற்று. மற்றக் காலனிகளிலும் புவியியல் பொருளாதாரத் தொடபுர்கள் நவீன போக்குவரத்து முறைகள் அவைகளை முற்றிலும் மாற்றி அமைத்துவிட்டன. பேரரசின் பழைய காலனியான மேற்கு இந்தியத் தீவுகள் அமெரிக்க அமைப்பிலும், பிரிட்டிஷ் காமன்வெல்த்திலும் ஒரு பகுதியாக இருக்கின்றது என்றே கூறவேண்டும்.

பழைய அட்லான்டிக் காலனி இன்னும் நீடித்திருப்பதைப் போல, பல கேந்திர முக்கியத்துவத்தாலும் பொருளாதாரத் தேவையாலும், ஆசியாவிலும் ஆஃப்பிரிக்காவிலும் காலனி ஆட்சி முறையில் சில புதிய மாற்றங்களைச் செய்யவேண்டி

யிருந்தது. இந்தியாவைக் கைப்பற்றியவுடன் அதனுடைய பாதுகாப்பிற்காக, இரண்டு கடல் மார்க்கங்களையும் பலப்படுத்த வேண்டியது அவசியமாயிற்று. அதனால் பாரசீக வளைகுடா, ஏடன், எகிப்து, மால்டா, மருஷியஸ், செயின்ட் ஹெலினா, சிமான்ஸ் டவுன் ஆகிய பகுதிகளைப் பலப்படுத்தவேண்டியதாயிற்று. மீண்டும், இந்தியாவிற்கும் பிறகு ஆஸ்திரேலியாவிற்கும் பாதுகாப்பு அளிக்கும்பொருட்டு, சிங்கப்பூர், பினாங், ஹாங் காங், ஃபிஜி (Fiji), மற்றும் பஸிஃபிக்கிலுள்ள தீவுக் கூட்டங்களையும் கவனிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இடையே நிறைய கடல் வெளியும், மற்றும் பல அன்னிய நாடுகளும் இருந்ததால், இப் பகுதிகள் பிரிந்தே இருக்கவேண்டியதாயிற்று. ஹாங் காங் குக்கும், சிங்கப்பூருக்கும் இடையே 1400 மைல் தூரமிருந்தது. சிங்கப்பூருக்கும் போர்ட் டார்வினுக்கும் 2000 மைல் தூர மிருந்தது.

பேரரசு என்ற சொல் பல பொருள்பட காணப்படுகின்றது. அதனுடைய பொருளும் கால மாற்றத்தால் வேறு நோக்கத் துடனும் காணப்படுகின்றது. சில காலனிகளை, அடிமைகளை ஏற்றிச்செல்லும் வியாபாரிகள் கொடுமைப்படுத்தினர். மனிதாபி மான சிந்தனையின் அடிப்படையில் அக் காலனிகளைக் கைப்பற்ற வேண்டியதாயிற்று. மற்றும் பல காலனிகள் போருக்குத் தேவை யான கேந்திரத்தளங்களாக அமைந்தன. இந்தக் காலனிகளால், பேரரசிற்குக் கிடைக்கக்கூடிய செல்வம் மிகவும் குறைவானதே. பிரிட்டனில் உற்பத்தியாகும் பொருள்களை இங்கு விற்பதால் 10 சதவிகிதத்திற்குக் குறைவாகவே இலாபம் பெறவேண்டிய தாயிற்று. பெரும்பான்மையான காலனிகள் வரட்சிமய மானவை; பாலைவனங்கள் நிறைந்துள்ளவை; பல பகுதிகள் இன்னும் பண்படுத்தப்படவில்லை; மற்றும் பல வறுமையானவை. மேற்கு இந்தியத் தீவுகளுடன் நாம் செய்யும் வியாபாரம் முழு வதற்கும் 15 மில்லியன் பவுன்களே மதிப்பிட முடியும். சூடானி லும் ரொடீஷியப் பகுதிகளிலும், ஒரு சதுர மைலுக்குப் பத்துப் பேருக்குக் குறைவாகவே குடியிருக்கின்றனர். தூரக்கிழக்கில், நேரடியான வியாபாரத்தைவிட, அங்கே மூலதனமிட்டும் பல சேவைகளை அளித்தும் வரவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. சீனர்களின் பாதி வர்த்தகப் பொருள்களையும், மலேயாவின் வர்த்தகப் பொருள்களையும் பிரிட்டனின் கப்பல்கள் ஏற்றிச் செல்லுகின்றன. அவைகளின் வெளிநாட்டு வர்த்தகம், நமது எல்லாக் காலனிகளும் ஒன்று சேர்ந்து செய்யும் வர்த்தகத்தை விட அதிகமான தாகும்.

பல இன்னல்களுக்கிடையே, இந்தக் காலனிகளுக்குப் பல நன்மைகளும் செய்யப்பட்டிருக்கின்றன. அடிமை முறையும் அடிமை வர்த்தகமும் ஒழிக்கப்பட்டன. 1873-ல் ஜான் கிர்க் என்பவர் அடிமை வியாபாரம் செய்துகொண்டிருந்த இடத்தில் ஆங்கிலேயக் கோயில் இப்பொழுது நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் 'தெர்ண்ணூறுகளில்', அஷாந்தியிலும் (Ashanti) பெனின் (Benin) என்ற இடத்திலும் கொடுமைகள் நிகழ்வதைத் தடுத்து நிறுத்தினர். 1903-ல் பிரெடெரிக் லுகார்ட் என்பவர், கேனோ (Kano) என்ற பகுதியில் நுழைந்ததற்குப் பிறகு, அங்கே குதிரை வீரர்கள் அடிமைகளைப் பிடிப்பதை விட்டு விட்டு ஓடினர். நாம் எங்கெல்லாம் சென்றோமோ, அங்கெல்லாம் கொடுமைகள் புரிவதும், மனிதர்களை மனிதர்கள் அடித்து உண்பதும், குழந்தைகளைக் கொல்வதும், தலைகளை வேட்டையாடுவதும் போன்ற கொடுமைகளை அடியோடு அழித்தொழித்திருக்கின்றோம். மேற்கு இந்தியத் தீவுகளில் ஸ்டூவர்டுகள் ஆட்சி செய்கின்ற துவக்கக் காலத்திலேயே கோயில்கள் கட்டப்பட்டன. சமீபத்தில் ஆஃப்பிரிக்க ஏரிகளில் சமயப் பிரசாரகர்கள் நீராவிப் படகுகளில் சென்று பணியாற்றுகின்றனர். ஆயிரக்கணக்கான தனிப்பட்ட மக்கள் இவ்விதக் கொடுமைகளை அகற்றுவதற்காகத் தங்களை அர்ப்பணித்திருந்தனர். உண்மையில் இந்தப் பேரரசில் உள்ள காலனிகளுக்கு ஒரு காலத்தில் ரோமானியர்கள் செய்த சேவைகளைவிட, அதிகமாகவே நம்மவர்கள் செய்திருக்கின்றனர்.

ஆனால், அரசியலில் நாம் செய்த சேவைகளுக்குப் பரிசு கிடைத்தது. மேற்கு ஆஃப்பிரிக்காவிலிருந்து 25,000 பேர் 1914-ல் நிகழ்ந்த போரில் கலந்துகொண்டனர். மேற்கு இந்தியத் தீவுகளிலிருந்து 15,000 பேர் இப் போருக்கு அனுப்பப்பட்டனர். 30 மில்லியன் பவுன் மதிப்புள்ள நைஜீரிய வர்த்தகம் செய்யப்பட்டது. பார்படோஸிலிருந்து, பசுட்டோலண்டு வரையிலும் பகைவர்களை எதிர்த்துப் போராடியிருக்கின்றனர். அதனால், அவர்களுக்குப் பல அபாயங்களும் நேர்ந்தன. பல நாட்டு மக்களுக்கு, அவர்கள் எதிர்காலம் செழிப்புற்று இருப்பதற்காக மிக நல்ல காரியங்களைச் செய்திருக்கின்றனர். நமது பொறியியல் வல்லுநர்களால், எகிப்தின் நீர்ப்பாசன வசதிகள் மீண்டும் புதுப்பிக்கப்பட்டன. ஆஃப்பிரிக்காவில் நிலவி வந்த பல கொடிய வியாதிகளை அகற்ற, ராஸ் (Ross), மேன்ஸன் (Manson), மற்றும் பலர் இந்த வெப்பநிலைக்கேற்ற மருந்துகளைத் தயாரித்துத் தந்துள்ளனர், கோல்ட் கோஸ்டில் நிறுவப்பட்ட நமது கல்லூரிகள் ஆஃப்பிரிக்கர்களுக்குப் படிப்பைச் சொல்லிக் கொடுத்து,

அவர்களை ஆசிரியர்களாகவும் நீதிபதிகளாகவும் ஆக்கியிருக்கின்றன. சுதேச மக்களுக்குத் தர்மகர்த்தா நிறுவனத்தைப் போலத் தோற்றுவித்து அவர்களுடைய நலன்களைக் கவனிக்க வேண்டுமென்று பர்க் கூறியதை, இந்தியாவிலும் ஆஃப்பிரிக்காவிலும் அப்படியே பின்பற்றினர். 1919-ல் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கைகளுக்குப் பிறகு, இந்தக் கொள்கையைத்தான் நாம் முதல் கொள்கையாக ஏற்றுக்கொண்டோம்.

இந்தக் கொள்கையை ஒரு சுதந்திரமாக வைத்துக்கொண்டு அப்படியே எல்லாக் காலனிகளிலும் பின்பற்ற முடியாது. ஏனெனில், அங்குள்ள மக்களுடைய வரலாற்றுக்கும் இவ்விதக் கொள்கைகள் முரண்பாடுடையதாகப் போகக் கூடாது. எங்குப் பார்த்தாலும், ஐரோப்பியர்களுக்கும் சுதேச மக்களுக்கும் பெரிய மோதல் ஏற்பட்டது. அடிமை வியாபாரத்திலிருந்து ஐரோப்பியர்களுடைய பொருளாதார விஸ்தரிப்பு இப் பகுதிகளில் எல்லாம் புது வேகத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. இப் பகுதிகளிலிருந்து பல பொருள்களை அவர்கள் வாங்கி வியாபாரம் செய்தனர். தென் ஆஃப்பிரிக்காவிலிருந்து தங்கம் நிறைய ஏற்றுமதியானது. அவர்கள் இப் பகுதிகளில் குடியேறி, கட்டாய வேலைத் திட்டத்தையும் சுதேச மக்கள்மீது திணித்தனர். சில சமயங்களில் கட்டாயமாக வேலை வாங்கும் பழக்கத்தையும் விட்டு விட்டனர். அவர்களுக்கு அப்பொழுது மிகவும் அவசியமாக, அங்கிருந்த பண்படாத விவசாயக் குடிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் அளவில் தொழில் உற்பத்தி ஏற்பட்டால் போதுமென்றுங்கூட இருந்தது. இந்த வளர்ச்சி அப் பகுதிகளில் வாழும் மக்களுடைய சூழ்நிலையைப் பொறுத்தும் இருந்தது. சில சமயங்களில் அவர்கள் ஒரே இடத்தை ஒரு பொருளுக்காக நம்பியிருந்து அழிவைத் தேடிக்கொண்டனர். உதாரணமாக, அவர்கள் ஜமெய்க்காவின் சர்க்கரையை நம்பியிருந்தனர். சில சமயங்களில் பொருளாதார வளர்ச்சி அவர்களுக்கு ஆபத்தைத் தேடித் தந்தது. அதனால் புதிய இனப் பிரச்சினை ஏற்பட்டது. பிரிட்டிஷ் கயானாவிலும், ஃபிஜியிலும் இந்தியக் கூலிகள் வரவழைக்கப்பட்டனர். மலேயாவில் உள்ள தொழிலாளர்களில், நான்கில் ஒரு பாகம் சீனாவிலிருந்து கொண்டுவரப்பட்டவர்களாகும். சில சமயங்களில் தோட்ட முதலாளி முறையை ஏற்படுத்தியதால், அவர்களுக்கு இன்னல் ஏற்பட்டது. உதாரணமாக, பார்படோஸிலும் செயின்ட் வின்சென்டிலும் இதனால் பல தொல்லைகள் ஏற்பட்டன. மேற்கு ஆஃப்பிரிக்காவிலும் ஜமெய்க்காவிலும் விவசாயிகள் குடியேறி, பண்ணைகளை வைத்தனர். ஆனால், இந்தப் பல பகுதிகளிலுள்ள முக்கியமான

பிரச்சினைகள் எல்லாம் ஏறக்குறைய ஒரே மாதிரியாகத் தானிருந்தன.

இயற்கையாலும், சில சமயங்களில் மனிதனாலும் ஏற்படுகின்ற. சாதாரணப் பிரச்சினைகளே இந்த இழிநிலையில் உள்ள மனித இனத்தைத் துன்புறுத்துகின்றன. எங்குப் பார்க்கினும் வரட்சியும், புயலும், நில நடுக்கங்களும் ஏற்படுவதால், அவர்கள் பல தொல்லைகளுக்குள்ளாகின்றனர். தவிர, அவர்களுடைய ஆடு மாடுகளை ஸெட்ஸீ ஈக்கள் (tsetse fly) கொன்றுவிடுகின்றன. அவர்களுக்குப் பயனுள்ள மற்றப் பொதிசுமக்கும் பிராணிகளுக்கும் இந்தக் கதியே ஏற்படுகின்றது. மக்களை மலேரியா, கொக்கிப் புழு வியாதி போன்றவை பீடிக்கின்றன. அவர்களுடைய உணவில் தொழு நோய் பரவுகின்றது. சிபிளிஸ் என்ற வியாதி அப் பகுதிகளில் எங்கும் பரவியுள்ளது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாக பஹாமாஸ் (Bahamas) மீன் பிடிக்கும் பகுதிகளில் வாழ்ந்து வந்த நீக்ரோக்கள் ஆஃப்பிரிக்காவிலிருந்து கொண்டுவரப்பட்ட போதிலும், அவர்கள் இன்னும் வாழ்க்கையில் முன்னேறவில்லை. இன்னும் அந்தப் பழைய ஜல்லிக் கற்களால் கட்டப்பட்ட குடிசைகளிலேயே வசித்து வருகின்றனர். ரோமானியர்கள் ஒரு காலத்தில் நமது டியூடானிய முன்னோர்கள்மீது படையெடுத்தபோது, டாசிடஸ் (Tacitus) என்பவர் விளக்கமாக எழுதிய நாகரிகமில்லாத பண்புகள் இந்தக் காலத்தில் ஆஃப்பிரிக்கர்களுக்கு நன்கு பொருந்துகிறது. அடிக்கடி அவர்கள் விவசாயம் செய்கின்ற நிலங்களிலிருந்து வெளியேறி, வேறு நிலங்களைச் சாகுபடி செய்கின்றனர். அவர்கள் தேர்தெடுக்கும் மனைவிகளுக்கு ஈடாக ஆடு மாடுகளைப் பரிசுப்பொருளாகத் தருகின்றனர். பசும்புல் வெளிகளை அடிக்கடி தீயிட்டுப் பொசுக்குவதால், அவர்களுடைய நிலமும் சாகுபடிக்கு ஒவ்வாததாகின்றது. வறுமையின் காரணமாக இந்தக் காலனிகள் விஸ்தரிக்கப்படாமல் இருந்தன. பின்பு, நிறைய சுதேசி இன மக்கள் அப் பகுதிகளில் வந்து குடியேறினர். ஐரோப்பாவில் சமாதானம் ஏற்பட்ட பிறகு 1930-ல் ஏற்பட்ட பொருளாதார மந்தநிலையின் காரணமாக, ஐரோப்பியர்களின் தேவைகளுக்கேற்ப இங்கும் வளர்ச்சியுறச் செய்தனர். அப் பகுதிகளிலிருந்து நிறைய வருமானத்தை அவர்கள் எதிர்பார்க்க முடியாத காரணத்தாலும், பிரிட்டிஷ் அரசாங்கம் அதனுடைய மக்களின் சமுதாய நலன்களுக்காகவே பல நூற்றுக்கணக்கான மில்லியன் பவுன்களைச் செலவழிக்க வேண்டியிருந்ததால், காலனிகளில் உள்ள மக்களுக்கு, ஆள் ஒன்றுக்கு சில ஷில்லிங்குகள்வீதம்தான் அவர்களுடைய நலன்களுக்காகவும் சுகாதார வசதிகளுக்காகவும் செலவு செய்ய

முடிந்தது. தவிர, நூற்றுக்கணக்கான பொருளாதார மோதல்கள் அங்கே ஏற்பட்டவண்ணமே இருந்தன. வெள்ளை நிறத் தொழிலாளர்களும், சுதேச இனக் கறுப்புத் தொழிலாளர்களும் அங்கே இருந்ததால், சுதேச இனக் கறுப்பு நிறத்தவரை ஒதுக்குப் புறமாக வாழவைக்க முயன்றனர். தவிர, சுதேச இனத்தவரிடையே நிலம் வழங்குதலையும் மிகவும் குறைக்கவேண்டிய நிலையில் இருந்தனர். அப் பகுதிகளில் வாழும் மக்களுக்குத் தேவைப்படும் தானியங்களை முதலில் உற்பத்தி செய்துகொண்டு, பிறகு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதில் பல இடையூறுகள் இருந்தன.

சுதேச இன மக்களின் உரிமைகளைப் பறிக்கின்ற ஆஃப்பிரிக் கண்டர்களின் இன வெறிக் கொள்கையினால், எப்படிப்பட்ட அரசாங்கத்தை அப் பகுதிகளில் நிறுவுவது என்பதில் பல சிக்கல்கள் தோன்றுகின்றன. கலோனியல் அலுவலகம், அப் பகுதிகளில் வசிக்கின்ற ஐரோப்பிய சமுதாயத்திற்குச் சுய ஆட்சிதரும் பொழுது, சுதேச மக்களின் உரிமைகளையும் பாதுகாக்கவேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. அதனால் சுய ஆட்சி பெறுவதற்கு நிபந்தனையாக, சுதேச மக்களின் உரிமையைப் பாதுகாக்கும் கொள்கைகளையும் வகுக்கவேண்டியதாகிறது. உதாரணமாக, கென்யாவில் சுய ஆட்சி கோருகின்ற ஐரோப்பிய சமுதாயத்தினர் சுதேச மக்களின் முன்னேற்றத்திற்காக என்ன உறுதி மொழி தருகின்றனர் என்பதையும் பொறுத்திருக்கிறது. 1900-ல் கம்பெனி ஆட்சியிலிருந்து நைஜீரியாவை (Nigeria) பிரிட்டிஷ் அரசாங்கம் ஆட்சி செய்யும் பொறுப்பை ஏற்றுக் கொண்டது. அதனுடன் லாகோஸ் (Lagos) என்ற பகுதியையும் இணைத்துக்கொண்டது. இந்தப் புதிய அரசு ஏறக்குறைய இந்தியாவிலுள்ள மூன்றில் ஒரு பாகம் நிலப்பரப்பை உடையது. 20 மில்லியன் மக்கள் அங்கே வசிக்கின்றனர். அங்கு ஆட்சிப் பொறுப்பை ஏற்ற லுகார்டும் (Lugard) அவருக்குப் பின் வந்தவர்களும், நேரடியாக ஆட்சி செய்யாமல், அங்குள்ள சுதேச இனத் தலைவர்கள்மூலமாகவும், சில சமயங்களில் அவர்களுடைய இனக் குழுவினர்மூலமாகவும் ஆட்சி செய்தனர். ஏறக்குறைய அந்தச் சுதேச இன மக்களுடைய ஆட்சியே இருந்ததைப் போன்றிருந்தது. அவர்களே அவர்களுக்கு வேண்டிய திட்டங்களை வகுத்துக் கொண்டனர். நிதிப் பொறுப்பில்கூட, அவர்களே அதிகமாக அக்கறைகொள்ள வைத்தனர். அவர்களுடைய சுதேச சட்டங்கள், பிரிட்டிஷ் சட்டத் தொகுப்புடன் இணைக்கப்பட்டன. இந்தச் சட்டங்களை, உயர் நீதிமன்றங்களும் பிரிவி கவுன்சில் உத்திரவுகளும், அம் மக்கள் ஏற்றுக்கொள்ளச் செய்தன. இந்த மறைமுகமான ஆட்சி, கிழக்கு ஆஃப்பிரிக்காவிலுங்கூடக் கொண்டு

வரப்பட்டது. ஆனால், பொறுப்பாட்சியைத் தருவதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் குறிக்கோளாக இருக்கும்பொழுது, இந்த மறை முக ஆட்சியை ஏற்படுத்துவதால், என்ன தொடர்பு இருக்கப் போகின்றது? சென்ற நூற்றாண்டில் மேற்கு இந்தியத் தீவுகளில் தோட்ட முதலாளிகளின் முயற்சியால் சுய ஆட்சி பெற்ற சமுதாயமாக விளங்கியது. இப்பொழுது கிரவுன் காலனியாக் கப்பட்டது. சிறுபான்மையினரான ஐரோப்பிய சமுதாயத்தால் அங்கெல்லாம் ஆட்சி செய்வதைப் பேரரசு அரசாங்கத்தின் மாறு பட்ட மனப்போக்கினால், இப்பொழுது மாற்றி அமைத்து விட்டனர். மேற்கு ஆஃப்பிரிக்காவிலும் கென்யாவிலும் அவர் களுடைய தலையீடு அதிகமாகக் காணப்பட்டதால், நிலப் பிரச் சினை போன்ற சில முக்கியமானவற்றைப் பேரரசு அரசாங்கத் தின் பொறுப்பிலே வைத்துக்கொண்டது. அந்த மக்களின் வாக் குரிமையைப் பொறுத்தோ, அல்லது கவுன்சிலில் தேர்ந்தெடுக் கப்பட்ட அங்கத்தினர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தோ அல்லது அந்தச் சமுதாய அமைப்புகளை அடிப்படையாகக் கொண்டு பெரிய முடிவுகளை எடுக்கவேண்டியுள்ளது.

பேரரசை நம்பியுள்ள இந்தப் பகுதிகளில் பலதரப்பட்ட இனத்தார் வாழ்ந்துவந்த போதிலும், அங்குள்ள இயற்கை வளம், செல்வம் அளவிட முடியாததாகும். அவைகளைச் சரியான முறையில் \ பண்படுத்தவேண்டும். சர்வதேசிய அரசியலில் இன்னும் அதனுடைய எதிர்காலம் தெளிவற்றதாக இருக் கின்றது. எகிப்திற்குச் சுதந்திரம் தந்த பிறகும் பல ஆண்டுகள் அங்கே தகராறு ஏற்பட்டவண்ணம் இருந்தது. 1936-ல் பிரிட் டன் தன்னுடைய படைகளைச் சூயஸ் கால்வாய்ப் பகுதிக்குப் பின்வாங்கிக்கொள்வதாக அறிவித்தது. பஸிஃபிக் பகுதிகளிலிருக் கும் மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்வது, பல டொமினி யன்களின் நல்லுறவைப் பொறுத்திருக்கிறது. இந்தியாவில் புரட்சிகரமான மாறுதல் ஏதாவது ஏற்பட்டால், பல சமுதாயங் கள் மறைந்துவிடும் நிலைமை இருந்தது. அப் பகுதிகளில் எண்ணற்ற இயற்கை வளங்கள் மிகுந்துள்ளன. அங்கே தங்கம், தகரம், டங்ஸ்டன் (tungsten), பருத்தி, கொப்பரை, ரப்பர், சர்க்கரை, எண்ணெய் ஆகிய பொருள்கள் கிடைக்கின்றன. இவை வளம் பெறுவது அங்கு வசிக்கும் 60 மில்லியன் மக்களின் முன்னேற்றத்தைப் பொறுத்திருக்கிறது. அவர்கள் முன்னேற்ற மடைவதற்காக, வைத்திய வசதிகளை அளிக்கவும், நிலங்களைப் பண்படுத்தவும், காடுகள், மற்றும் நீர்ப்பாசன வளர்ச்சி, மக்களின் பல நோய்களை அகற்ற முயற்சிகள், ஆடு மாடுகளைப் பீடிக்கும் தொத்து நோய் அகற்றுதல், கல்வி ஆகிய துறைகளில் முன்னேற்றங் காண முயற்சி செய்துவருகின்றனர்.

இந்தியாவின் பிரச்சினை இன்னும் பெரியதாகவும் அளவிட முடியாததாகவும் இருந்தது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டதால், பேரரசிலுள்ள மற்ற ஆறு முக்கியமான பகுதிகளின் வரலாறும் மாறுதல்களுக்குள்ளாயின. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டு, ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்குள்ளாக இருப்பினும், இந்திய வரலாற்றில் அந்த நிகழ்ச்சி மிகவும் சிறியதுதான் என்று கூறவேண்டும். சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு, இந்தத் துணைக்கண்டத்தின் மக்கள்தொகை 100 மில்லியன் வரையிலும் அதிகரித்துவிட்டது. இப்பொழுது அதன் மக்கள்தொகை ஏறக்குறைய 390 மில்லியன்களைச் கொண்டதாகும். அவர்களில் மூன்றில் இரண்டு பாகம் ஹிந்துக்களும் மூன்றில் ஒரு பாகம் முஸ்லிம்களுமாவர். அவர்களிடையே அடிப்படையான வேற்றுமைகள் காணப்பட்டன. அங்கே 200-க்கும் மேற்பட்ட மொழிகளைப் பேசுகின்றனர். அவர்களின் முக்கியமான மொழிகள் பதினைந்தாகும். மேலும், அங்குள்ள மக்களில் மூன்றில் இரண்டு பாகம் பிரிட்டிஷ்-இந்தியாவிலும், மற்றவர்கள் சுதேச சமஸ்தானங்களிலும் இருக்கின்றனர். பல காலங்களாக அவர்களிடையே போர்கள் நிகழ்ந்திருக்கின்றன. இறுதியில், முகலாயர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, பிரிட்டிஷார் ஆட்சியைக் கைப்பற்றி, பத்தொன்பதாவது நூற்றாண்டில் அந்த நாட்டிற்கு ஒற்றுமையை அளித்துள்ளனர். கம்பெனி ஆட்சியிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கம் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பிறகு, இந்த ஒற்றுமை இன்னும் விரைவு படுத்தப்பட்டது. நாளடைவில் மாகாணங்களிலுள்ள இராணுவம் கலைக்கப்பட்டது. படிப்படியாக, அது மத்திய அரசாங்கத்தைப் பலப்படுத்திக்கொண்டது. பல மத்திய அரசாங்கத் துறைகள் நியமிக்கப்பட்டு, அரசாங்க உரிமைகளும், காடுகளும் நீர்ப்பாசனங்களும், உப்பு, அபினி முதலிவற்றை மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்குள் கொண்டு வந்தனர். அரசாங்கத்தின் ஆதரவில் சுமார் 40,000 மைல்கள் நீளமுள்ள ரெயில்வேக்கள் அமைக்கப்பட்டுத் துறைமுகப்பட்டினங்களை இணைத்தும், மலைகளை ஊடுருவி ரெயில்வேக்களையும் அமைத்தனர். தவிர, கம்பியில்லாமல் செய்திப் போக்குவரத்துகளும், இராணுவச் சாலைகளும் அமைத்தும் பல மில்லியன் மக்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டனர். நாட்டில் பிளேக், பஞ்சம் ஆகிய கொடுமைகள் நிகழாமல் பாது ாத்தனர்.

இந்தியா ஒரு துணைக் கண்டத்தைப் போன்றது. 1500 மைல் நீளமுள்ள வடமேற்கு எல்லையை ஆயுதம் தாங்கிய போர் வீரர்கள் பாதுகாத்து வருகின்றனர். 1886-ல் பர்மாவை டஃபரின்

(Dufferin) இணைத்துக்கொண்டதற்குப் பிறகு, இந்தியப் படைகள் சையாம் (Siam), சீனு வரையிலும் பாதுகாக்கவேண்டி நேரிட்டன. வடக்கே மூடு பனியைக் கடந்து திபெத், மற்றும் உயரமான பாமீர் வரையிலும் பாதுகாக்கவேண்டியிருந்தது. ஆப்கானிஸ்தானத்தைச் சுற்றியிருக்கும் மலைகளிலிருந்து, இந்திய அரசாங்கம் விழிப்புடன் ஆக்ஸஸ் சமவெளியில் (Oxus Valley) என்ன நடக்கிறதென்பதையும், ரஷ்யாவின் பாதுகாப்பிலுள்ள பாரசீகத்திலும், அதன் வளைகுடாவிலும் என்ன நேர்கின்றதென் பதையும் கவனிக்கவேண்டியிருந்தது. மத்திய அரசாங்கத்தின் வரவுசெலவுத் திட்டம்மட்டும் 100 மில்லியன் பவுன்களுக்கும் சென்றது. ஆண்டு ஒன்றுக்கு செய்யப்படும் இந்திய வர்த்தகம் 270 மில்லியன் ஸ்டர்லிங் என்று மதிப்பிடப்படுகின்றது. 1914-ல் நிகழ்ந்த மாபெரும் போரில் ஒரு மில்லியன் இந்தியர்கள் பணி புரிந்தனர்.

சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு, பிரிட்டிஷ் ஆட்சி இரண்டு வேறுபட்ட பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. ஆனால், இந்த இரண்டு வேறுபட்ட பிரச்சினைகளும் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டிருந்தன. இந்தியர்களுடன் பிரிட்டிஷாரின் தொடர்பும், மற்றொன்று இந்தியர்களுக்கிடையே உள்ள தொடர்புந்தான் சுவைகளாகும். 1899-1906 வரையிலும் கர்ஸன் (Curzon) என்ற கடைசி வைசிராய் ஆட்சி செய்திருக்கிறார். அவர் விக்டோரியா இராணியாரால் நியமிக்கப்பட்டவர். பிரிட்டிஷாரின் கடைசியான வைசிராயும், அவர் விருப்பப்படி ஆட்சி செய்தவரும் இவர்தான். 3000 பிரிட்டிஷ் அதிகாரிகளும், 50,000 பிரிட்டிஷ் போர் வீரர்களைக் கொண்டும் அவரால் இந்த நாட்டை ஆட்சிசெய்ய முடிந்தது. அவருடைய ஆட்சிக் காலத்தில் நிறைய சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. ஆட்சியிலுள்ள பல குறைபாடுகளை அவர் களைந்திருக்கிறார். இந்தியக் கலைப் பொருள்களிலும், பழைய புராதனச் சின்னங்களி லும் அதிக ஈடுபாடுடையவர். இந்திய விவசாயிகள் வளர்ச்சியுற, நிறைய சீர்திருத்தங்களைச் செய்திருக்கிறார். அவர் காலத்தில், மக்கள் அரசியல் விழிப்புணர்ச்சியைப் பெற்றனர். அத்துடன் அவர்கள் ஆட்சி செய்கின்ற இனத்தினரையும் வெறுக்க ஆரம் பித்தனர். ஆட்சி செய்கின்றவர்களுக்கும் மக்களுக்கும் நிறையப் பிளவு ஏற்பட்டது. முக்கியமாக இந்தப் பிளவு, சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு நன்றாக வெளிப்பட்டது. ஒவ்வொரு புதிய கண்டுபிடிப்பினாலும் இந்த வெறுப்பு இன்னும் அதிகமாகிக் கொண்டுதான் வந்தது. அதிக ஆங்கிலேயப் பெண்கள் இங்கே இருந்தனர். ஒவ்வொரு ஜில்லாவும் ஜில்லா அதிகாரியின்

ஆட்சியில் இருந்தது. அதிகாரம் அவரிடம் குவிக்கப்பட்டிருந்தது. அதனால் அந்த அலுவல்களைப் பார்க்க அவர் அலுவலகத்திலேயே இருக்கவேண்டி நேரிட்டது. இதனால் மக்களிடையே தொடர்பு ஏற்படவில்லை. இந்த இரண்டு இனத்தவரையும் அதிகமாகப் பிரிக்க இவை காரணமாக இருந்தன. மக்களிடம் நெருங்கிய தொடர்பு வைத்திருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் முதல் ஹென்றி லாரென்ஸ் வரை பதவி வகித்த தலைவர்களைப்போல, இப்பொழுது இவர்கள் நடந்துகொள்ளவில்லை. ஜப்பானுடைய வெற்றியும், அல்லது துருக்கியின் வீழ்ச்சியும் போன்ற நிகழ்ச்சிகளால், இந்திய மக்களிடையே தேசிய உணர்ச்சியைத் தூண்டி விட்டது.

வரலாறு கண்டிராத வகையில் தேசிய உணர்ச்சியும், அதே சமயத்தில் பிரிட்டிஷ் ஆட்சியும் ஒருங்கே நிகழ்ந்து வந்தன. மற்ற நாடுகள் இனவெறி உணர்ச்சிகளுக்கு ஒரு முடிவு கண்டிருந்தபோதிலும், இந்தியாவில் ஏற்பட்டுள்ள இன உணர்ச்சிகள் அதிக ஆழமான வகையில் வேரூன்றிவிட்டன. இந்தியாவிலுள்ள ஆதி குடிமக்களுக்கும், நாட்டைக் கைப்பற்றிய ஆரியர்களுக்கும் வேறுபாடுகள் ஏற்பட்டன; அல்லது வங்காளிகளுக்கும் ஆப்கானியர்களுக்கும் வேறுபாடுகள் ஏற்பட்டன. இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கும் சமய வேறுபாடுகள் தோன்றின. நவீன இந்தியாவில் நாம் பலதரப்பட்ட பண்பாடுகள் கலந்திருப்பதைக் காணலாம். பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட பண்பாடுகளும், நவீன நாகரிகக் காலத்தோடு நீடித்திருப்பதை இங்குக் காண முடிகின்றது.

வடக்கிலிருந்து அடிக்கடி ஏற்பட்ட படையெடுப்புகளால், ஹிந்துக்களின் ஜாதிக் கோட்பாடுகள் மிகவும் இறுகிய தன்மையைப் பெற்றுவிட்டன. பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்திலும் பல ஜாதிகள் காணப்பட்டன. சமுதாயத்தால் ஒதுக்கப்பட்டவர்களென்று, சுமார் 50 மில்லியன் மக்கள் வசிக்கின்றனர். அவர்களை மத அடிப்படையிலும் வெறுத்தனர். இந்து மதகுருமார்களுக்கும் படித்த மக்களுக்கும் அவர்கள் அடிபணிந்து வாழ்கின்றனர். இந்து வேதாந்திகளும் கவிஞர்களும் வசிக்கின்ற பகுதியிலிருந்து, வங்காளத்தில் நூறு மைல் தூரத்திற்கப்பாற் சென்றால், மக்கள் கூட்டத்தினர் களிமண்ணால் செய்யப்பட்ட விக்கிரகங்களைத் தொழுவதும், மற்றும், ஆண் பெண் இன்புற்றிருக்கும் பல சின்னங்களை மதமாகக்கொண்டு போற்றுவதையும் காணலாம். அவர்களுடைய பெண்களை தேவதாசிகளாக அர்ப்பணித்து வருகின்றனர். பில்ஸ் (Bhils), மற்றும் குற்ற பரம்பரை

யினர் பலர், மலை ஜாதியினர் ஆகியோர் தங்களுடைய பெண்களைப் பொதிசுமக்கும் மிருகங்களைப்போல் நடத்துகின்றனர். அவுத்தில் செல்வாக்குப்பெற்ற முகமதியர்களின் ஆதரவால் பலர் காடுகளில் வசிக்கின்றனர். ராஜபுத்திர பரம்பரையினர் இன்னும் கத்திகளை ஏந்தி நடக்கின்றனர். பம்பாயில் பார்ஸி சமுதாயத்தைச் சார்ந்த பணக்கார வியாபாரிகள் வாழ்கின்றனர். இப்படிப்பட்ட பலவகையான மக்கள் இந்தத் துணைக்கண்டத்தில் வசிக்கின்றனர். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வரையிலும் அவர்கள் போரிட்டுக்கொண்டிருந்தனர். பலர் கொள்ளையர்களால் துன்புறுத்தப்பட்டனர். அங்கே அமைதியை ஏற்படுத்திய கிளைவ் ஓர் இராணுவத்தை உருவாக்க, போரிடுகின்ற பரம்பரையினர் வாழுகின்ற பகுதிகளிலிருந்து ஆட்களைச் சேர்த்தார். 1914-ல் ஏற்பட்ட போரில், இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட போர் வீரர்களில் மூன்றில் இரண்டு பாகம் பஞ்சாப், உத்தரப் பிரதேசம் ஆகிய மாகாணங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே யாகும். வங்காளத்திலிருந்து ஒரே ஒரு படைதான் அனுப்பப்பட்டது. இந்துக்களில் சிறப்புப் பெற்ற போர்ப் பரம்பரையினர்களான சீக்கியர்கள், டோக்ராக்கள், மராத்தியர்கள் ஆகியோரைவிட மிகவும் அதிகமான அளவில் பஞ்சாபி முசல்மான்களும், ஜாட்டுகளும், பட்டாணியர்களும் இராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். மக்கள்தொகை, அல்லது அங்குள்ள தொழில்வளம் ஆகியவற்றைவிட, அவுத்திலும் சிந்திலும் உள்ள முகமதியர்களின் இராணுவ பலமே மிகவும் அதிகமாக இருந்தது.

வளம்மிக்க கங்கைச் சமவெளியில் வாழ்கின்றவர்களாக இருப்பினும் அல்லது வரட்சியான மலைப்பாங்கான பிரதேசத்தில் வாழ்கின்றவர்களாக இருப்பினும் அவர்களெல்லாம் படிப்பில்லாத விவசாய மக்களேயாவர். இந்த நாட்டில் வாழ்கின்ற எழுபது சதவிகித மக்கள் விவசாயத்தை நம்பியே வாழ்கின்றனர். மழையை நம்பியே அவர்களுடைய வாழ்க்கையும் இருக்கிறது. ரயிலுக்கும் நல்ல சாலைகளுக்கும் அப்பால் அவர்கள் மண்குடிசையில் வசிக்கின்றவர்களாக இருக்கின்றனர். நிலப்பிரபுக்களின் கொடுமைகளிலிருந்தும் கடன்காரர்களின் கொடுமையிலிருந்தும் தப்புவதற்கு பிரிட்டிஷ் சட்டத்தையே நம்பியுள்ளனர். பிரிட்டனில் உள்ள மக்கள் ஆண்டு ஒன்றுக்கு ஏறக்குறைய ஒவ்வொருவனும் சராசரி 100 பவுன் வருமானம் உள்ளவனாக இருந்தால், அதில் பத்தில் ஒரு பாகங்கூட இந்தியாவில் உள்ளவர்கள் பெறுவதில்லை. இந்திய வரவு செலவில், மூன்றில் இரண்டு பாகம் பாதுகாப்புச் செலவினத்திற்குச் செலவிடப்படுகின்றது. அங்குள்ள மக்கள் பெரும்பான்மையும் வறுமை மிக்கவர்களாக இருப்பதால்

வரி விதிப்பும் அதிகமாக்கப்படுவதில்லை. இந்த 390 மில்லியன் மக்களில் 10 மில்லியன் மக்கள் அவர்களுடைய மொழியில் எழுதப் படும் கடிதங்களைப் படிக்கின்றனர். ஆனால், 2 அல்லது 3 மில்லியன் மக்கள் ஆங்கிலமொழியிலும் படித்தவர்களாக இருக் கின்றனர். பெண்களில் இன்னும் அதிகமான பேர் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாகவே இருந்து வருகின்றனர். சிறு வயதிலேயே இந்துப் பெண்களுக்குக் கல்யாணம் நடந்துவிடுகிறது. இரண்டு சமூகத்தினரிடையேயும் வட இந்தியாவில் உள்ள பெண்கள் பர்தா முறையைப் பின்பற்றுகின்றனர்.

இந்த நாட்டில் பிரிட்டிஷாரின் பழக்கவழக்கங்கள் ஆழமாகப் பதிந்திருக்கின்றன. அவர்களாகவே, அல்லது சமயத்தைப் பொறுத்த அளவில் இந்தப் பழக்கவழக்கங்களை மேற்கொண் டிருக்கமாட்டார்கள். ஆங்கிலோ-இந்தியர் என்ற ஒரு வகுப் பினர் வசிக்கின்றனர். அவர்கள் தொகை சுமார் 100,000 வரை யிலும் இருக்கும். தவிர, ஐந்து மில்லியன் இந்தியக் கிறித்துவர் களும் இருக்கின்றனர். அவர்களில் பெரும்பான்மையினர் சென்னையில் உள்ளவர்களாவர். கிறித்துவச் சமயம் வளர்ந்ததால் ஹிந்து மதத்திலோ, அல்லது முஸ்லிம் மதத்திலோ எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. ஆனால், கிறித்துவச் செல்வாக்கு ஓரளவில் நன்மைகளைச் செய்திருக்கிறது. அந்தச் சமயத்தைப் பிரசாரம் செய்கின்றவர்கள் இதற்குக் காரணமாக இருந்தனர். ஆனால், பிரிட்டிஷாரின் அறிவு வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றால் இன்னும் எண்ணற்ற நன்மைகளை அடைந்தனர். விக்குகளின் ஆட்சிக்காலத்திலிருந்தே பெண்டிங்க், மெக்காலே, சார்லஸ்வுட் ஆகியோர் இந்திய மக்களுக்கு நல்லகல்வி அறிவைத் தரவேண்டுமென்று வற்புறுத்தினர். உண்மையில் ஆங்கிலேயக் கல்வி இந்தியாவில் பரவியதற்குப் பிறகு, நாட்டில் நல்ல மாற்றங் கள் தோன்றின. இந்தக் கல்வி மாற்றங்களும் மேல்வகுப்பினர் களுக்குத்தான் அதிக நன்மைகளைத் தந்தன. அதனால் நிறைய பட்டதாரிகள் வெளிவந்ததுபோன்று தொடக்கப் பள்ளிகளில் அதிக ஆர்வத்துடன் மக்கள் தங்கள் பிள்ளைகளைப் படிக்க அனுப்ப வில்லை. பொருளாதாரத்தைப் பொறுத்தவரையில் இந்தியா உலகத்திலுள்ள வல்லரசுகளில் ஒரு சக்திமிக்க நாடாக விளங்கு கிறது. எல்லா டொமினியன்களிலிருந்தும் விளைகின்ற மொத்தக் கோதுமை உற்பத்தியைவிட, இந்தியாவில் அதிகக் கோதுமை விளைகின்றது. சணல் உற்பத்தியில் இந்தியா தனி இடம் பெறு கின்றது. பருத்தி உற்பத்தியில், இந்தியா அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு அடுத்தபடியாகத்தானிருக்கிறது. பிரிட்டன் போன்ற நிலப்பரப்பை உடைய பகுதியில், நீர்ப்பாசன வசதிகள்

விஸ்தரிக்கப்பட்டுள்ளன. 1834-ல் இந்தியாவின் வெளிநாட்டு வர்த்தகம் 14 மில்லியன் பவுன் மதிப்பிடக்கூடியதாக இருந்தது. 1914-ல் 340 மில்லியன் பவுன்களாக வளர்ந்தது. அப்பொழுது பிரிட்டனுடைய மிகப் பெரிய வாடிக்கை நாடு இந்தியாதான்.

அந்தக் காலம் வரையிலும், இந்தியாவிற்குப் பொறுப்பான ஆட்சியைத் தரும் எண்ணமே இல்லை என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கூறிவந்தது. 1861-ல் தரப்பட்ட கவுன்சில்கள் சட்டம், ரிப்பனுடைய நகராண்மைக் கழகச் சீர்திருத்தங்கள், 1892-ல் இயற்றப்பட்ட டஃபரென் சட்டம், 1909ஆவது ஆண்டின் மார்லி-மின்டோ சீர்திருத்தங்கள் ஆகியவையெல்லாம், இந்தக் கொள்கையின் அடிப்படையில்தான் தரப்பட்டன. அதன்படி முழுப் பொறுப்பும் இந்திய வைசிராய்க்கே கொடுக்கப்பட்டது. கவுன்சிலில் உள்ள வைசிராயின்மூலமாக ஆட்சி செய்யப்பட்டது. பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்குத்தான் அவர் கட்டுப்பட்டவர். அரசியல் அமைப்பின்படி அவருக்கு ஆதிக்கம் செய்கின்ற அதிகாரங்கள் தரப்பட்டன. இவருடைய ஆணைகளை வெளிப்படையாக இந்தியப் பிரதிநிதிகளால் விவாதிக்கமுடியும். ஆனால், அந்த ஆணைகளை மாற்றி அமைக்க அவர்களுக்கு அதிகாரம் கிடையாது. ஆனால், இத்தகைய சட்டத்தை இயற்றியவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொண்டவர்களாவர். சுதந்திரமான பேச்சுரிமையும், சங்கங்கள் அமைத்துக்கொள்ளும் உரிமையும் இந்திய மக்களுக்குத் தரப்பட்டதால், அவர்களுக்கு வேண்டிய குறிக்கோளை அடைய அவர்களை உருவாக்கிக்கொண்டனர். 1909 ஆவது ஆண்டின் சீர்திருத்தங்கள்படி, மாகாணக் கவுன்சில்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பான்மை பிரதிநிதிகள் அங்கம் வகித்தனர். மத்தியச் சட்டசபையிலுங்கூட வரவு செலவுத் திட்டத்தை விவாதிக்கின்ற உரிமை தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குத் தரப்பட்டிருந்ததால் அவர்கள் நிரந்தரமான எதிர்க் கட்சியினராக மாறிவிட்டனர்.

ஆங்கிலேய இலக்கியங்களையும், மற்ற நிகழ்ச்சிகளையும் படித்த இந்துக்களில் சில படித்த கூட்டத்தினர் 1885-ல் காங்கிரஸ் நிறுவனத்தை ஏற்படுத்தினர். 1906-ல் முஸ்லிம் லீக் என்ற மற்றொரு நிறுவனத்தை முகமதியர்கள் தொடங்கினர். கர்ஸனின் பல்கலைக்கழகச் சீர்திருத்தங்களாலும், வங்காளப் பிரிவினையாலும் (1911-ல் இது ரத்து செய்யப்பட்டது) ஹிந்து மிதவாதிகளுங்கூட அதிருப்தியுற்றனர். இன்னும் அதிக முன்னேற்றம் வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தினர். சில தீவிரவாதிகள் சதித் திட்டங்களிலும் கொலைகளிலும் ஈடுபட்டனர். துருக்கி, பார

சீகம், அரேபியா ஆகிய இடங்களில் நிகழ்ந்த நிக்ழ்ச்சிகளால் அகில முகமதிய உணர்ச்சி பரவியது. போர்க்காலத்தில் ஏற்பட்ட விலைவாசி உயர்வுகளும், இராணுவத்தில் அதிகமான ஆட்களைச் சேர்த்துக்கொண்டதும், சுய நிர்ணயக் கோட்பாட்டிற்காக நேச நாடுகள் போரிட்டதும் ஆகிய இவையெல்லாம் சேர்ந்து 1917-ல் வெளியிடப்பட்ட மான்டேகு-செம்ஸ்ஃபோர்ட் அறிக்கையின் அடிப்படையில் 1919-ல் சீர்திருத்தங்கள் தரப்பட்டன. வைசிராய் நிர்வாகக் கவுன்சிலில் இந்தியர்கள் அதிகப்படியாகச் சேர்ந்துக்கொள்ளப்பட்டபோதிலும் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பெரும்பான்மை இருந்தபோதிலும், மத்திய அரசாங்கம் பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்குத்தான் கட்டுப்பட்டிருக்கவேண்டும். இதனைச் சாதிப்பதற்கு, வைசிராய்க்கு நிறைய அதிகாரங்கள் தரப்பட்டன. மாகாணங்களில் ‘இரட்டை ஆட்சி’ முறை கொண்டுவரப்பட்டது. அதன்படி கவுன்சிலிலுள்ள கவர்னருக்கு ஒதுக்கப்பட்ட பொறுப்புகள் தரப்பட்டன. மற்றப் பொறுப்புகளான கல்வித் துறை, சுகாதாரம், தல அரசாங்க ஆட்சி முதலியன இந்திய அமைச்சர்களுக்கு மாற்றப்பட்டது. அவர்கள் மாகாண கவுன்சிலுக்குப் பொறுப்பானவர்களாக இருப்பார்கள் என்று அறிவிக்கப்பட்டது.

பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இந்தச் சட்டத்தை மறு பரிசீலனை செய்வது என்றிருந்ததால், இந்தச் சட்டம் ஏறக்குறைய முடிவடைந்ததென்றே கருதவேண்டும். பல ஒதுக்கப்பட்ட தொகுதிகளும், பல ஜாதியினருக்குத் தனிப்பட்ட பிரதிநிதித்துவமும் கொடுக்கவேண்டியிருந்ததால், நிலப் பிரபுக்கள், தாழ்த்தப்பட்ட ஜாதியினர், முகமதியர்கள், சீக்கியர்கள் ஆகியவர்களை ஒன்றுக இணைத்து, அரசியலை நடத்துகின்ற முறை எந்த மாகாணத்திலும் வெற்றிபெறவில்லை. இரட்டை ஆட்சி முறையில் அமைச்சர்கள் அதிகாரிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியதாயிற்று ; அல்லது அந்த முறை கவர்னரின் குழுவிலேயே பிளவை ஏற்படுத்தியது. தவிர, இந்தச் சீர்திருத்தங்களை அமல் நடத்தும்பொழுது, இந்தியாவில் உள்ள சூழ்நிலை சரியாக இல்லை. இந்தச் சட்டத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். மேலும், யுத்தப் பாதுகாப்பு, பத்திரிகைச் சட்டம், சதித் தடுப்புச் சட்டம், அதிகப்படியாக இராணுவத்திற்கு ஆள் எடுப்பு ஆகியவை சேர்ந்து மக்களிடையே அதிருப்தியை ஏற்படுத்தின. சில இந்துத் தலைவர்கள் ‘சுயராஜ்யா’ அல்லது சுய ஆட்சி என்றக் கொள்கையைப் பிரசாரம் செய்தனர். அவர்கள் இந்தச் சீர்திருத்தங்களை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். இந்தத் தலைவர்களில் காந்தி மிகவும் சிறப்பானவர். அவர்

பம்பாய் மாகாணத்திலுள்ள வழக்கறிஞர்; நல்ல திறமையும் இணங்கிப் போகும் பண்பும் உடையவர். ஏற்கெனவே அவர் தென் ஆப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் உரிமைகளுக்காகப் போராடியிருக்கின்றார். அவர் சில சமயங்களில் தாழ்த்தப் பட்டவர்களின் உரிமைகளுக்காகப் போராடியும், சில சமயங் களில் வடக்கிலுள்ள முஸ்லிம்களுடன் சேர்ந்தும், இன்னும் சில சமயங்களில் பம்பாய் மில் அதிபர்களுடன் சேர்ந்தும் பிரசாரம் செய்தார். பழைய இந்தியாவைக் கொண்டுவரவேண்டு மென்றும், கை இராட்டினத்தின் மதிப்பை மக்களிடம் உணர்த் தியும், மேற்கத்தியத் தொழில் முறையை இங்கு ஒழித்துவிட வேண்டுமென்றும் அவர் கூறினார். அவர் அகிம்சையின்மூலமாகச் சட்ட மறுப்பு இயக்கத்தை இயக்கியபோதிலும், அதன் விளை வாக வேலை நிறுத்தங்களும் பகிஷ்கரிப்பும் ஏற்பட்டு, மில் தொழிலாளர், விவசாயிகள் ஆகியோர் இரத்தம் சிந்தவேண்டிய தாயிற்று. அந்தப் படிக்காத மக்களிடையே மூட நம்பிக்கையும் வெறியுணர்ச்சியும் காணப்பட்டன.

சில ஆண்டுகள் கழித்து, சுயராஜ்யாக் கட்சியினர் தங்களு டைய முறைகளை மாற்றிக்கொண்டு, மாகாண அரசாங்கங்களைக் கைப்பற்றினர். இப்படி, அவர்கள் மாகாண அரசாங்கப் பதவி களை ஏற்பதற்கு முக்கியமான காரணமாக இருந்தது, பிரிட்டிஷ் ஆட்சியின் சீர்திருத்தங்களைச் சீர்குலைப்பதுதான் நோக்கமாக இருந்தது. பலவகைகளில், கவர்னர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த மாற்றப்பட்ட அதிகாரங்களையும், நிர்வாக அதிகாரத்தின் மூலமாக ஆட்சி செய்யும் அவருடைய அதிகாரத்தையும் நிறுத்தி விடும்படி அவர்கள் கோரினர். சென்னை மாகாணத்தைத் தவிர, பிரிட்டிஷார் விரும்பியதைப்போல, கட்சி அரசியல் எங்கேயும் சரியானபடி உருவாக்கப்படவில்லை. அதனால் அவர்களிடையே காணப்பட்ட ஹிந்து-முஸ்லிம் வேறுபாடுகளும், அவர்களுக் கென்று ஒதுக்கிவிட்ட சில தொகுதிகளில் பல இடையூறு களும்தான் அதிகமாகக் காணப்பட்டன. மத்திய சட்டசபையில் பொறுப்புணர்ச்சி வளர்ந்து வந்தது. தேசிய உணர்ச்சியின் வேகமும் அதிகரித்தது. அப்பொழுது இந்தியா டொமினியன் நாடாக இல்லாமல் இருந்தாலும், மற்றச் சமாதான மாநாடு களிலும் பேரரசு மாநாடுகளிலும் கலந்துகொள்ள அனுமதிக்கப் பட்டது. இந்தியா அதனுடைய பொருளாதார நலன்களைப் பாதுகாக்க எடுத்துக்கொண்ட முயற்சிகளில் தடை ஏதும் விதிக் கப்படவில்லை. அதனுடைய தொழில்களைப் பாதுகாத்துக்கொள் வதற்காக, அதிகமான காப்பு வரிகளை விதிக்க அனுமதித்தனர். லங்காஷயரின் நலன்களைக் காக்கும் அளவில் இதுவரை பருத்தி

யின்மீதிருந்த கலால் வரியை ரத்து செய்தனர். 1927-ல் சர் ஜான் சைமன் என்பவரின் தலைமையில் ஒரு ராயல் கமிஷன், இந்தியாவிற்கு வேண்டிய அடுத்த முன்னேற்றத்தைப் பரிசீலனை செய்ய நியமிக்கப்பட்டது. 1929-ல் தொழிற்கட்சி அரசாங்கம் பதவியில் இருந்ததால் இந்தியாவின் முன்னேற்றத்தை அவர்கள் விரைவுபடுத்தினர். அப்பொழுது காந்தி-இர்வின் ஒப்பந்தமும் செய்யப்பட்டது. அதன்படி இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து கொடுக்கலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. அத்துடன் சுதேச சமஸ்தானங்களால் ஏற்பட்ட பிரச்சினைகளையும் பரிசீலனை செய்யும் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது.

சுமார் ஐந்நூறு சமஸ்தானங்கள் இந்தியாவில் அப்பொழுது இருந்தன. மிகச் சிறிய படைமானிய சமஸ்தானங்களிலிருந்து ஹைதராபாத்தைப்போல பெரிய சமஸ்தானங்களும் இருந்தன. சமஸ்தானங்களின் ஆட்சி இந்தியாவில் மூன்றில் ஒரு நிலப் பகுதியில் இருந்தது. அங்கிருந்த மக்கள் தொகுதி ஐந்தில் ஒரு பாகமாகும். ஹைதராபாத்தில்மட்டும் 14 மில்லியன் மக்கள் வாழ்ந்தனர். போரிடும் பரம்பரையினரைக்கொண்ட சீக்கிய பாட்டியாலா, அல்லது ராஜபுத்திர சமஸ்தானங்களும், பரோடா, மைசூர் போன்ற சமஸ்தானங்களும் இருந்தன. பரோடா, மைசூர் சமஸ்தானங்களில், பிரிட்டிஷ் மாகாணத்தில் இருந்த நல்ல ஆட்சியைப்போல அங்கும் இருந்தன. இந்திய அரசியலில் சமஸ்தானங்களின் பங்கு மிகவும் அதிகமானதென்றாலும், அவைகள் பிரிட்டிஷ் இந்தியாவின் ஆட்சியிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தன. அந்தச் சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் தனிப்பட்ட உடன்படிக்கைகளைச் செய்துகொண்டு நிறுவப்பட்டவையாகும். அவைகளின் உரிமைகளைக் காக்கும் உறுதிமொழிகள் பிரிட்டனால் கொடுக்கப்பட்டன. 19‿1-ல் இதே சுதேச மன்னர்களுக்கு ஓர் ஆலோசனைக் கமிட்டி நிறுவப்பட்டபோதிலும், சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துடனோ அல்லது இந்தியச் சட்டசபையுடனோ நேரிடையான தொடர்பற்றிருந்தன. அவைகளின் உள்நாட்டுப் பிரச்சினைகளை ஜனநாயகச் சட்டசபையின்மூலமாகத் தீர்த்துக் கொள்வதென்பது அவ்வளவு எளிதாக நடைபெறவில்லை.

இந்தப் பிரச்சினைகளைத் தீர்க்க பிரிட்டிஷ், இந்தியத் தலைவர்கள் கொண்ட பல மாநாடுகள் கூட்டப்பட்டன. பின்பு, 1935 ஆவது ஆண்டுச் சட்டம் ஒன்றை பிரிட்டிஷ் அரசாங்கம் நிறைவேற்றியது. இந்தச்சட்டம் ஒரு கூட்டரசாங்கத்தை இந்தியாவில் அமைப்பதென்று முடிவு செய்தது. இந்த அரசாங்கம் நடை

முறையில் வருவதற்குப் பாதி சமஸ்தானங்களாவது சம்மதிக்க வேண்டுமென்றிருந்தது. உண்மையில், 1919-ல் மாகாணங்களில் பின்பற்றிய இரட்டை ஆட்சியை, இப்பொழுது மத்திய அரசாங் கத்தில் பின்பற்றினர். ஏனெனில், கவுன்சிலிலுள்ள கவர்னர்-ஜெனரல் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரம், சமஸ்தானங்கள், சிறுபான்மையினர், நாணயம், காப்பு வரிகள் ஆகிய பல அதிகாரங்களை அவரே வைத்துக்கொண்டார். முன்னேற்றத் திற்கான வழிகள் மாகாணங்களில்தான் ஏற்படவேண்டியிருந் தன. ஒரிஸாவும் சிந்துவும் புதிய மாகாணங்களாகச் சேர்க்கப் பட்டதால், மாகாணங்களின் எண்ணிக்கை அப்பொழுது பதினொன்றாக இருந்தன. பர்மா, இந்தியாவிலிருந்து பிரிக்கப் பட்டது. இந்த மாகாணங்களில் எல்லாத் துறைகளையும் உட் கொண்ட பொறுப்பாட்சி கொடுக்கப்பட்டது. அவசரகாலத்தில் மட்டும் கவர்னருக்குச் சிறப்புமிக்க தனி அதிகாரங்கள் தரப் பட்டன. 1937-ல் நடைபெற்ற முதல் தேர்தலில், சில பெண் கள் உட்பட, 35 மில்லியன் வாக்காளர்கள் தங்களுடைய வாக்குரி மைகளை அளித்தனர். பெரும்பான்மையான மாகாணங்களில் காங்கிரஸ் அமைச்சரவைகள் நிறுவப்பட்டன. அந்தச் சமயத்தில் ஆட்சி புரியும் சேவைகளில் மூன்றில் ஒரு பங்கு இந்தியர்கள் பணிபுரிந்தனர். இந்தியக் கடற்படை உருவாக்கப்பட்டது. 1919 முதல், இந்திய இராணுவ அதிகாரிகளுக்குக் 'கிங்க்ஸ் கமிஷன் பதவிகள்' (King's Commissions) கொடுப்பது அதிக மாக்கப்பட்டன. இராணுவத்தின் சில படைகள் முழுவதும் இந்தியமயமாக்கப்பட்டன.

அடுத்த போர் ஏற்படுவதற்குள் இந்தப் புதிய திட்டம் பின்பற்றப்படுவதில் மூன்று பெரிய இடையூறுகள் காணப் பட்டன. இந்துக்களும் முஸ்லிம்களும் மோதிக்கொண்டனர். அவர்களிடையே ஒற்றுமையில்லை. அதனால் சாதி அடிப்படையில் சில தொகுதிகள் ஒதுக்கப்பட்டன. இதிலும் அவர்களிடையே ஒற்றுமை காணப்படாததால், பிரிட்டிஷ் அரசாங்கமே இத் தொகுதிகளை ஒதுக்கவேண்டியதாயிற்று. முஸ்லிம்கள், காங்கிரஸ் பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றியதைக் கண்டு அஞ்சினர். அதனால், அவர்கள் தனிநாடு அல்லது பாகிஸ்தான் வேண்டுமென்று கோரினர். கூட்டரசாங்க முறையை இந்தி யாவில் நிறுவுவதற்குச் சமஸ்தான அரசர்கள் இணங்கவில்லை. பல பெரிய சமஸ்தானங்கள் வேண்டுமென்றே ஒதுங்கி நின்று விட்டன. தவிர, இந்தப் புதிய அரசியல் அமைப்பு, மற்ற டொமினியன் நாடுகளுக்கு அளிக்கப்பட்ட சுய ஆட்சி அதிகாரங் களைப்போல இந்தியாவிற்கு அளிக்காததால், காங்கிரஸ் இந்த

அரசியல் அமைப்பை ஏற்றுக்கொள்ள மறுத்தது. முழுச் சுதந்திரம் வேண்டுமென்று இந்தியா கோரியது. பேரரசின்கீழ் டொமினியன் அந்தஸ்தைப் பெறுவதோ அல்லது ஜனநாயகச் சுய ஆட்சியைப் பெறுவதோ, அல்லது அவர்களுடைய வேரூன்றிய வேறுபாடுகளைக் களைய எடுத்துக்கொள்ளும் முயற்சிகளோ, இந்தியாவின் எதிர்காலத்தை நிர்ணயம் செய்யும் என்று நம்பப்பட்டது. இவைகளை நிர்ணயம் செய்வதும் அவ்வளவு எளிதில் முடிகின்ற காரியமன்று.

இவ்விதமான பிரச்சினைகளெல்லாம் பொதுவாகப் 'பேரரசு' என்று அழைக்கப்படுகின்ற காமன்வெல்த்தில் உள்ள எல்லா நாடுகளிலும் உள்ளதைப் போன்றவையே. ஆனால், பல சமுதாயத்தினருக்குப் பலதரப்பட்ட இடையூறுகள் இருந்தன. ஆனால், பிரிட்டனுடன் பலவகைகளில் தொடர்பை வைத்திருக்கின்றன. விவசாயப் பொருள்கள், அல்லது மூலப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்திசெய்யும் பேரரசின் பல நாடுகளும், போரினாலும் போருக்குப் பிறகு ஏற்பட்ட பொருளாதார மந்த நிலையினாலும் மிகவும் பாதிக்கப்பட்டன. விக்டோரியா காலத்தின் அமைதியான சூழ்நிலை முடிந்த பிறகு, அந்த நாடுகளின் நிலைமையும் முற்றிலும் மாறிவிட்டது. பிரிட்டிஷார் முன்பு போலக் கடல் கடந்த நாடுகளுக்குக் குடியேறச் செல்லுவதில்லை. பேரரசில் உள்ள பல நாடுகளிலும் அவர்கள் குடியேறிவந்தது மிகவும் குறைந்துவிட்டது. 1913-ல் 223,000 பேர் பேரரசின் பல பாகங்களுக்கும் சென்று குடியேறினர். 1929-ல் இந்தத் தொகை 62,000-க்குக் குறைந்துவிட்டது. பத்து ஆண்டுகளுக்குப் பிறகு பலர் இங்கிலாந்திற்குச் சென்றுவிடுவதிலேயே அக்கறை காட்டினர். அவர்களுடைய பழைய முறைகள் மாறிவந்தன. 1914-ல் அவர்களுடைய கப்பல் போக்குவரத்து உலகில் உள்ள நாற்பது சதவிகிதம்வரை அவர்களுடைய ஆதிக்கத்திலேயே இருந்தது. 1937-ல் அவர்களிடம் 26 சதவிகிதம் மட்டுமே இருந்தது. தவிர, கடல் கடந்த அவர்களுடைய வாணிகமும் மிகவும் வீழ்ச்சி அடைந்துவிட்டது.

1930ஆவது ஆண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பார்த்தால், இந்தக் காமன்வெல்த்தைப் பொருளாதார அமைப்பு என்ற அடிப்படையில் அளவிடமுடியாது. ஆனால், 1932-ல் கூட்டப்பட்ட ஒட்டாவா மாநாட்டில் பல காப்புவரிகளை விதிக்கும் திட்டத்தைப் பரிசீலனை செய்தது. இதன் விளைவாக 1910-ல் பிரிட்டன் செய்து வந்த 25 சதவிகித வாணிகத்தைவிட, 1935-ல் 37 சதவிகிதம் அதிகமாகச் செய்யப்பட்டது. தவிர, இந்தியாவிலும் அயர்லாந்திலும் சுதந்திரம் பெறுவதற்கான நிறைய

அறிகுறிகள் இருந்தன. பிரிட்டனுடைய பொருள்களை இதர நாடுகள் மிகவும் குறைவாகவே இறக்குமதி செய்தன. பிரிட்டனில் மீண்டும் விவசாய உற்பத்திக்கு முக்கியத்துவம் கொடுத்தது ஆஸ்திரேலிய உற்பத்தியாளர்களுக்குப் பிடிக்கவில்லை. அதைப்போன்றே கனடாவிற்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் வர்த்தக உடன்படிக்கை ஏற்பட்டது. பேரரசின் வர்த்தகம் இதனால் பாதிக்கப்பட்டது. பின்பு 1938-ல் பிரிட்டனும் அமெரிக்காவும் உடன்படிக்கை செய்துகொண்டன. ஒட்டாவாவில் நிர்ணயம் செய்யப்பட்ட காப்பு வரிகள், திட்டத்தின் படி, அந்த ஆண்டுகளில் பேரரசு நடந்துகொள்ள முடியவில்லை. பேரரசும் பொருளாதார அடிப்படையில் தன்னிறைவு பெற்றதாக இல்லை. பிரிட்டனுக்கு வேண்டிய நான்கில் ஒரு பங்கு இறைச்சி அர்ஜென்டினாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. அதற்கு வேண்டிய நான்கில் ஒருபங்கு காப்பி பிரேஸிலிலிருந்து தருவிக்கப்படுகிறது. அதற்குத் தேவையான எண்ணெயில் ஐந்தில் ஒரு பங்கைமட்டும் பிரிட்டிஷ் பகுதிகளிலிருந்து பெற்றுக் கொள்ளுகிறது. நமது இறக்குமதிகளில் 12 சதவிகிதத்திற்கு மேலாக எந்தப் பெரிய நாடும் நமக்கு அனுப்புவதில்லை. பிரிட்டிஷ் ஆஃப்பிரிக்காவிலிருந்து தயாரிக்கப்படும் பொருள்கள், நமது நாட்டில் அதிகமாக வாங்கப்படுவதில்லை. ஆஸ்திரேலியா, ஜப்பான் ஜவுளிகளை வாங்குவதில் அதிக அக்கறை காட்டியது. ஐரோப்பாவைப் பொறுத்தவரையிலும் போலிங்புரோக் (Bolingbroke) கூறியதைப் போன்று, நல்ல பக்கத்து வீட்டுக் காரனாகவும், அதே சமயத்தில் நாணயமான வியாபாரியாகவும், இருப்பதுதான் பிரிட்டனின் முக்கியமான பொறுப்பாகும்.

இந்தப் பேரரசில், டொமினியன்கள், காலனிகள், இந்தியா என்ற மூன்று அமைப்புகள் இருக்கின்றன. இந்தப் பேரரசின் தொடர்புகள் மிகவும் விரிவாகப் பரந்திருந்தன. அதிலுள்ள நாடுகளுக்கு பிரிட்டனால் தரப்பட்ட கல்வி வளர்ச்சியால் விழிப்பு உணர்ச்சி ஏற்பட்டது. ஒரே தடைகள் சூழ்ந்த பொருளாதார யூனியனோ, அல்லது தனிப்பட்ட படையோ, கடற்படையோ நிறுவப்படவில்லை. பெயரளவில்மட்டும், ஒரே பேரரசுப் பாராளுமன்றமும் ஒரே அரசின் உரிமைகளும் இருந்தனவே தவிர, உண்மையில் இந்தக் காமன்வெல்த்தில் உள்ள இறைமை பொதுவான விருப்பை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததே யாகும். இதனுடைய வளர்ச்சி பல காலங்களின் விளைவாகும். பொதுவான நோக்கங்களும், அதன் சேவைகளும், புதிய பேரரசை உருவாக்குவதற்கல்லாது, நியாயமான உலக சமுதாயத்தை ஏற்படுத்த இது பெரிதும் பயன்படும் என்று கருதப்பட்டது.

# 3. அபாயம், 1929-1938

இந்தக் காலத்தில் உலகம் முழுவதும் இரண்டு துன்ப நிகழ்ச்சிகளால் பாதிக்கப்பட்டது. அதனுல் அக் கால வரலாற்றையும், சரிவர இன்னும் தெரிந்து கொள்வதற்கோ அல்லது மதிப்பிடுவதற்கோ முடியாமல் இருக்கிறது. 1929–32 வரை ஏற்பட்ட பொருளாதார மந்த நிலேயும், 1933-ல் அடால்ஃப் ஹிட்லரின் நாஜி கட்சி ஜெர்மனியைக் கைப்பற்றியதும்தான் அந்த நிகழ்ச்சிகளாகும்.

பொருளாதார மந்த நிலேயைச் சமாளிப்பதற்கு ஒரு பல மிக்க அரசாங்கத்தால்தான் முடியும். ராம்சே மேக்டொனுல்டின் அரசாங்கம் அப்பொழுது அந்தப் பலத்தைப் பெறவில்லே. லிபரல்களுடன் பல சிக்கல்களில் கூட்டு சேர்ந்திருந்தபோதிலும் அவருடைய கட்சியிலேயே பிளவுகள் இருந்தன. அதனுல் இந்தப் பொருளாதார மந்த நிலே அரசாங்கத்தைக் கவிழ்த்துவிட்டது. 1929-ல் வேலேயில்லாதவர்களின் எண்ணிக்கை 1,200,000 பேராக இருந்தன. 1930-ல் 2 மில்லியன்களாகவும், 1931 ஈஸ்டர் காலத்தில் சுமார் 3 மில்லியன்களாகவும் உயர்ந்துவிட்டது. அந்தச் சமயத்தில் வேலேயில்லாதவர்களுக்கான இன்ஷ்யூரன்ஸ் நிதியில் 100 மில்லியன் பவுன்கள் வரையிலும் கடன் ஏற்பட்டது. இன்னும் வரையறையில்லாமல் இந்தக் கடன் அதிகமாகும் நிலேயும் இருந்தது. வரவு செலவு திட்டத்தில் அப்பொழுது நிதி அமைச்சர் ஸ்னேடன் (Snowden) முப்பது மில்லியன் பவுன்களுக்குப் பற்றுக்குறை வருமானத்தைக் காட்டினுர். அவர்சிக்கனத்தைப் பின்பற்றவேண்டுமென்று வற்புறுத்துவதில் பயனில்லாமல் போய்விட்டது. அவருடைய மற்ற சக அமைச்சர்கள் இந்தக் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லே. ஜுலே மாதத்தில் ஒரு தனிப்பட்ட கமிட்டி பரிசீலனே செய்ததில், மூன்றில் ஒன்று தேசிய வருமானம் வரிகளாகவும் கட்டணங்களாகவும் செலவிடப்படுகின்றதென அறிவித்தது. அதனுல், அடுத்த ஆண்டில்

120 மில்லியன் பவுன்கள் வரையிலும் பற்றுக்குறை ஏற்படும் என்று அறிவித்தது.

இந்த அறிக்கை வெளியிட்ட பிறகு ஒரு முக்கியமான முடிவு மட்டும் செய்யப்பட்டது. ராம்சே மேக்டொனல்டும் லாயிட் ஜார்ஜும், இந்த நெருக்கடியான நிலையை எந்த ஒரு தனிப் பட்ட கட்சியும் தனியாகச் சமாளிக்கமுடியாது என்று கருதினர். இந்த நெருக்கடி ஏற்படுவதற்கான காரணங்களை ஏற்கெனவே பார்த்தோம். உலகத்தில் உள்ள பல பகுதிகளில் பிரிட்டிஷ் வளம் வேரூன்றியிருந்தது. போருக்குப் பிறகு ஏற்பட்ட அரசியல் பொருளாதாரக் குழப்பங்களால், பிரிட்டனுடைய பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்டது. பழைய பொருளா தாரச் செழிப்பைக் கொண்டுவர முயற்சி செய்தது பயனளிக்க வில்லை. 1913-ல் இருந்த வர்த்தக நிலைமையையும் கொண்டுவர முடியவில்லை. 1929-ல் ஏற்பட்ட அமெரிக்க வணிகச் சூதாட் டத்தின் சீர்குலைவும், ஜெர்மனிக்குத் தரப்பட்டுவந்த அமெரிக்கக் கடன் உதவி திடீரென்று நிறுத்தப்பட்டதும், ஆஸ்திரேலியாவின் உணவு, மற்றும் மூலப் பொருள்களை உற்பத்தி செய்கின்றவர்கள் உட்பட மற்ற எல்லா நாடுகளிலும் சீர்குலைவு ஏற்பட்டதாலும், பழைய நிலைமையை அடைய முடியவில்லை. பதினேழாவது நூற் றாண்டில், அமெரிக்க வெள்ளி பெறுவது தடைபட்டபொழுது உலக முழுவதும் ஏற்பட்ட நெருக்கடியைப் போன்றும், 1815-ல் இருந்த நிலையைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகமாகவும், நவீன நாணய மாற்றத்தின் வேகமான ஓட்டத்தாலும், இப்பொழுது என்றும் கண்டிராத அளவில் பெரிய பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. மொத்த விலைவாசிகளின் விலை 20 சதவிகிதம் கீழிறங்கிவிட்டது. கோதுமையின் விலை இவ்வளவு கீழாக இந்த நானூறு ஆண்டுகளில் எப்பொழுதுமே நிர்ணயம் செய்யப்பட வில்லை. நமது நாட்டில் இருந்ததைக்காட்டிலும் வேலையின்மை, ஜெர்மனியிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் மிகவும் அதிகமாக இருந்தது. மக்களிடமுள்ள வாங்கும் சக்தி வரட்சி அடைந்துவிட்டது. பல மில்லியன் மக்களுக்குக் குறுகியகாலக் கடன் வசதிகள் கிடைக்காமல் அல்லலுற்றனர். ஒவ்வொரு நாடும் தங்க செலவாணி முறையைக் கைவிட்டன. சில பலவீன மான ஆஸ்திரிய பாங்குகள் முறிந்துவிட்டன. அந்தச் சீர்குலைவு ஜெர்மனிக்கும் பரவியது. பின்பு இங்கிலாந்து பாங்கையும் மிகவும் பாதித்தது. 'பாங்க் ஆப் இங்கிலாந்து' 1931 ஜூலை மாதத்தில்மட்டும் 45 மில்லியன் பவுன் மதிப்புள்ள தங்கத்தை இழந்துவிட்டது. ஃபிரான்சிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் வாங்கிய கடன்கள் இந்த நெருக்கடியைத் தணித்துவிட முடிய

வில்லை. நம்முடைய செலாவணியில் வெளிநாடுகளிலிருந்து வாங்கும் கடன்களைத் திருப்பி அடைக்க வழி செய்தால் நல்லதென்று பாங்கு அதிகாரபூர்வமான அறிக்கை ஒன்றை விடுத்தது. மேக்டொனால்டும், ஸ்னோடனும் தங்களால் இயன்ற வரையிலும், வரவு செலவுத் திட்டத்தைச் சரிசெய்ய முயன்றனர். அதனால், அதிக வரிவிதிப்பும் குறைந்த செலவும் செய்யவேண்டி நேரிட்டது. குறைந்த செலவு செய்யப் பல சிக்கன நடவடிக்கைகள் எல்லாத் துறைகளிலும் எடுக்கப்பட்டன. வேலையில்லாதவர்களுக்கு அளிக்கும் உதவி நிதியிலும் பத்துச் சதவிகிதம் குறைக்கப்பட்டது. அப்பொழுதும் ஸ்னோடன் (Snowden), வாழ்க்கைத்தரம் குறைந்தால் வேலையில்லாதவர்கள் 1924-ல் இருந்ததைக்காட்டிலும் நன்றாக இருப்பர் என்று கூறினார்.

ஆனால், இந்த நடவடிக்கைகளை லேபர் கட்சியோ, அல்லது தொழிற்சங்கக் காங்கிரசோ ஏற்றுக்கொள்ளவில்லை. தவிர, கேபினட்டிலுங்கூட, ஹெண்டர்ஸன், லேன்ஸ்பரி ஆகியோரின் தலைமையில் இருந்த சில கேபினட் அமைச்சர்களுங்கூட இக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். அதனால் ஆகஸ்டு மாதத்தில் எதிர்க்கட்சியினரையும் அழைத்து, அவருடைய மந்திரிசபையின் ராஜிநாமாவை அரசரிடத்தில் கொடுத்தார். ஒரு கூட்டு மந்திரிசபையை அமைத்தால்தான் நிலைமையைச் சமாளிக்க முடியுமென்று அவர் அரசருக்கு ஆலோசனை கூறினார். அதற்கேற்ப அவர் தேசிய அரசாங்கத்தை அமைத்து, அந்த மந்திரிசபையில் அவருடைய கட்சியைச் சேர்ந்த ஸ்னோடன், தாமஸ், லார்ட் சான்சலராக இருந்த ஸேங்கி ஆகியோரை நியமித்தார். அவர் கன்சர்வேடிவ் கட்சியுடனும் கூட்டுச் சேர்த்துக்கொண்டு, அந்தக் கட்சியிலிருந்து பால்டுவின், நெவில் சேம்பர்லேன், மற்றும் லிபரல் குழுவினருக்குத் தலைவராக இருந்த சாமுவெல் (Samuel) ஆகியோரையும் நியமனம் செய்தார். அவர்களுடைய ஒரே நோக்கம், நிதி நிலைமையைச் சீராக்குவதும், பவுண்டின் மதிப்பைக் காப்பதும் என்பதுதான். ஆனால், அவர்களுடைய மற்றத் திட்டங்கள் தெளிவில்லாமல் இருந்தன.

இந்த நிகழ்ச்சிகள் ஏற்படுவதற்கு முக்கியக் காரணமாக இருந்தவர் நெவில் சேம்பர்லேன் என்பவராவார். கட்சியிலும் சரி, கொள்கையிலும் சரி, அவர் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்தார். 1929-ல் கன்சர்வேடிவ் கட்சி தோற்ற பின்பு, அந்தக் கட்சி மிகவும் சீர்குலைந்துவிட்டது. அந்தக் கட்சி சீர்குலைவதற்கு, பால்டுவின் தலைமையில் அக் கட்சியினருக்கு அவ்வளவு நம்பிக்கை

யில்லை. அத்துடன் சர்ச்சிலும் அவருடனிருந்து பிரிந்து விட்டார். சர்ச்சில் இந்தியாவிற்குக் கொண்டுவரப்படவிருந்த சில சீர்திருத்தங்களையும், மற்றும் காப்பு வரித் திட்டத்தையும் பலமாகக் கண்டித்ததே இவர்கள் பிரிந்ததற்குக் காரணமாகும். சேம்பர்லேன் இப்பொழுது கட்சியில் இரண்டாவது முக்கியத் துவம் பெற்றதால், நாட்டின் நலனும், கட்சியின் நலனும் பேரரசின் வர்த்தக வளத்தில் பிணைந்துள்ளதை நன்குணர்ந்து, அதற்கேற்பக் கட்சியின் கொள்கைகளை வகுக்க முற்பட்டார். அவர் விக்டோரியா காலத்து ரேடிகல்கள் பின்பற்றிய கொள்கை களைச் சமுதாயத்துறையில் பின்பற்றவேண்டுமென்று விரும்பினர். அதனுல், சோஷியலிச நிதிக்கொள்கை நாளடைவில் மக்களுக்கு நன்மை பயக்காதென்றும், இது வீணுன இனப் போராட்டத் தைத்தான் வலுக்கிறதென்றும் அவர்கள் கருதினர். லிபரலிசம் இன்னும் நீடித்து இருக்கவேண்டிய அவசியமில்லையென்றும், அதைவிட லாயிட் ஜார்ஜ் போன்ற சந்தர்ப்பவாதிகளுடன் கூட்டுச் சேருவது அவசியமில்லையென்றும் அவர் கூறினர். உண் மையில் அவர் கூறியபடி, நிறைய அளவில் லிபரல் அங்கத்தினர் களும், அமைச்சர்களும், வாக்காளர்களும் கன்சர்வேடிவ் கட்சியில் வந்து சேர்ந்தவண்ணம் இருந்தது அவருடைய கருத்தை உறுதிப்படுத்துகிறது. அதனுல், அவருடைய கட்சிக் கொள்கைகளைத் தேசிய அடிப்படையில் அமைத்துக்கொண்டார். இலையுதிர்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள், அவருக்கு நல்ல வாய்ப்பை அளித்தது.

வரவு செலவுத் திட்டத்தைச் சமமாக்குவதற்காக இந்த அவசரகால மந்திரிசபை புதிய வரிகளையும், மற்றும் பல சிக்கன நடவடிக்கைகளையும் எடுத்துக்கொண்டது. புதிய வரி விதிப்புகள் மூலமாக 75 மில்லியன் பவுன்களை அரசாங்கம் பெற்றது. அதில் 52 மில்லியன் பவுன்கள் நேரடியான வரி விதிப்புகளின்மூல மாகக் கிடைத்தன. சம்பளங்களைக் குறைத்தல், புதிய நியமனங் களைக் குறைத்தல், ஆசிரியர்கள், வேலையில்லாதவர்கள் ஆகி யோரின் சம்பளங்களையும், உதவிப் பணத்தைக் குறைத்தல் ஆகிய சிக்கன நடவடிக்கைகள்மூலமாக 70 மில்லியன் பவுன்களை மிச்சம் பிடித்தனர். இருப்பினும் நாட்டிலிருந்து அதிகமாகத் தங்கம் வெளிநாடுகளுக்குச் சென்றுகொண்டே இருந்தது. செப்டம்பர் மாதத்தில் இரட்டிப்பு மடங்காக வெளியேறியது. சம்பளக் குறைப்பு ஏற்பட்டவுடன், இன்வர்கார்டன் (Invergorden) என்ற இடத்தில் உள்ள வட கடல் கடற்படையினர் ஆர்ப்பாட்டம் செய்தனர். லண்டனிலிருந்து, 21ஆம் தேதி செப் டம்பர் மாதத்தில் 200 மில்லியன் பவுன்களை அரசாங்கம்

பெற்றது. ஜூலை மாத நடுவிலிருந்தே, பிரிட்டன் தங்க நாணயத் திட்டத்தைக் கைவிட்டுவிட்டது.

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகு, பாராளுமன்றத்தைக் கலைக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. ஏனெனில், ஆளும் கட்சியின் பெரும்பான்மை மிகவும் குறுகியதாக இருந்தது மட்டுமன்றி, ஆட்டங் கொடுப்பதாகவும் இருந்தது. அதனால் புதிய தேர்தல்களை நடத்தி, மக்களுடைய ஆதரவைப் பெறவேண்டியதாயிற்று. அக்டோபரில் நிகழ்ந்த தேர்தல்களில், ஆட்சியிலிருந்த அமைச்சர்கள் மக்கள் முன்பு, நாடு மீண்டும் புனரமைப்புப்பெற எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகளையும், அவர்களின் திட்டங்களையும் தீட்டினர். காப்பு வரிகளைச் சீரமைப்புச் செய்யும் திட்டங்களையும் சமர்ப்பித்தனர். ஆனால், நாட்டில் பண வீக்கம் ஏற்பட்டுவிடுமென்பதற்காக மக்கள் பெரிதும் பயந்தனர். தேசிய அரசாங்கத்தின் சார்பாக, மக்கள் பெருவாரியான அளவில் தங்கள் வாக்குகளைப் பதிவு செய்து தீர்ப்பளித்தனர். 14½ மில்லியன் வாக்குகளில், லேபர் கட்சியினர் 6½ மில்லியன் வாக்குகளைத்தான் பெற்றனர். அந்தக் கட்சியில் 58 அங்கத்தினர்களே வெற்றி பெற்றனர். ஆனால், தேசிய அரசாங்கத்திற்கு ஆதரவாக 558 அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களில் 471 பேர் கன்சர்வேடிவ் கட்சியினர். லேன்ஸ்பரியைத் தவிர, மேக்டொனால்டைப் பின்பற்றாத மற்ற லேபர் கட்சி அமைச்சர்களெல்லாம் வெற்றிபெறத் தவறிவிட்டனர்.

கன்சர்வேடிவ்களுக்கு மீண்டும் அதிகாரம் கிடைத்தது, அவருடைய தந்தையைப் போலவே சேம்பர்லேனும் கட்சியின் பலத்தைக்கொண்டு, நாட்டின் வளம் செழிப்புற அரும் முயற்சிகளில் ஈடுபட்டார். இறக்குமதிகள் மதிப்பு 400 மில்லியன் பவுன்கள் வரையிலும் மிகுந்து இருந்தது. நாட்டின் வர்த்தகத்தை இது பாதிப்பதாக இருந்தது. நமது ஏற்றுமதிகளும், கப்பல் போக்குவரத்துகளும் 200 மில்லியன் பவுன்கள் வரையிலும் குறைந்துவிட்டன. அதனால் நிறைய கடன் ஏற்பட்டது. சென்ற ஏழு ஆண்டுகளாக, பொதுநலப் பணிகளுக்காக 700 மில்லியன் பவுன்களைச் செலவு செய்திருக்கிறோம். ஆனால், வேலையில்லாத் திண்டாட்டம்மட்டும் குறைந்தபாடில்லை. இந்த வர்த்தக நிலையில் பயன்பெறவும், பொருளாதார மந்த நிலையிலிருந்து விலைவாசிகளை உயர்த்தவும், அதிக வருமானத்தைப் பெறவும், மற்றும் பவுண்டின் மதிப்புக் குறையாமல் பார்த்துக்கொள்ளவும் போன்ற நடவடிக்கைகளில் எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்டு, இறக்குமதிகளைக் குறைத்துக் கொள்வதில் தீவிரமாக முனைந்தனர்.

1932 பிப்ரவரியில் இறக்குமதிக் கட்டணங்கள் சட்டம் இயற்றும்பொழுது, ஒரு நிரந்தரமான இறக்குமதிக் கொள்கை யைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று விரும்பினர். அதனால் இந்தப் பாதுகாப்பு அளிக்கும் திட்டத்தை, சிறந்த விவாதத்திற் குரிய பிரச்சினையாகக் கேபினட்டில் விவாதிக்கவேண்டுமென்று அவர்கள் விரும்பினர். இதைப்போலவே, முன்பு, கத்தோலிக்க விடுதலைக் கொள்கையைப்பற்றி, 1812, 1829-ல் கேபினட்டில் விவாதிக்கப்பட்டுள்ளது. இந்தச் சட்டத்தின் அடிப்படையான கொள்கை என்னவென்றால், எல்லா இறக்குமதிகளுக்கும் 10 சதவிகிதம் காப்பு வரிகளை விதிக்கவேண்டுமென்று விரும்பினர். மற்றத் தொழில்களைக் காக்கவேண்டியிருந்ததால், காப்பு வரிக் குழுவினர் தனிப்பட்ட முறையில் மேலும் அதிகக் கட்டணங்களை வசூலித்துக்கொள்ளவும் வழி செய்யப்பட்டிருந்தது. அல்லது அதுவரையிலும் காப்பு வரிகள் இல்லாமல் இறக்குமதி செய்யப் பட்டு வரும் இறைச்சி, பருத்தி, கம்பளம் ஆகியவற்றிற்கும் காப்பு வரிக் குழுவினர் விருப்பம்போல் வரி விதிக்கவும் முடியும்.

பிரிட்டனிலும், மற்றுமுள்ள டொமினியன்களிலும் விவசாய உற்பத்தி இந்தப் பொருளாதார மந்தநிலையால் மிகவும் பாதிக்கப் பட்டிருந்தது. அரசியல், பொருளாதாரக் கிளர்ச்சிகளால், உலக வர்த்தகமே சீர்குலைந்துவிடும் நிலையில் இருந்தது. ஜெர்மனி தரவேண்டிய கடன்களையெல்லாம் ஒரு வழியாக ரத்து செய்து விட்டால் நல்லதென்று ஜூன் மாதத்தில் லாஸோன் (Lausanne) என்ற இடத்தில் ஒரு மாநாடு கூட்டி விவாதித்தனர். ஆனால், இறுதி முடிவு, இதைப்போலவே,ஐரோப்பிய நாடுகள் அமெரிக்கா விற்குத் தரவேண்டிய கடன்களை அமெரிக்கா ரத்து செய்வதைப் பொறுத்திருந்தது. இந்தப் பின்னணியில், பிரிட்டிஷ் அமைச் சர்கள் ஒட்டாவாவில் கூட்டப்பட்ட பேரரசின் மாநாட்டில் கலந்துகொள்ளச் சென்றனர்.

ஆகஸ்டில் நடைபெற்ற ஒட்டாவா மாநாட்டில் பல முக்கிய மான உடன்படிக்கைகள் செய்துகொள்ளப்பட்டன. பேரரசின் பகுதிகளிலிருந்து வருகின்ற பொருள்களுக்கு, வரிகளும் கட்ட ணங்களும் இல்லாது இறக்குமதி செய்ய வசதிகளைச் செய்து கொடுக்கும் என்று நமது அரசாங்கம் உறுதிமொழி அளித்தது. பேரரசின் நாடுகளுக்கும் வரிச் சலுகைகள் அளிப்பதாகக் கூறப் பட்டது. உதாரணமாக, வெளிநாடுகளிலிருந்து வருகின்ற கோதுமை, வெண்ணெய், பழங்கள், மரம் ஆகியவற்றிற்குக் கட்டணங்கள் விதிக்கப்படும். ஆனால், டொமினியன் நாடுகளி லிருந்து இறக்குமதி செய்யப்படும் விவசாயப் பொருள்களால், நமது விவசாயம் அழிந்துவிடாமல் பாதுகாத்துக்கொள்ள

டொமினியன்களிலிருந்து வருகின்ற இறக்குமதிகள் மிகவும் கட்டுப்படுத்தப்பட்டன. பிரிட்டிஷ் பொருள்களை டொமினியன் நாடுகள் வாங்கும்பொழுது மிகவும் இலேசாக வரி விதிக்கும் படியும், வியாபாரிகள் போட்டியிடுகின்ற அளவிற்கு வரிகள் விதிக்கப்பட்டால் பயனுள்ளதாக இருக்கும் என்றும் கேட்டுக் கொண்டனர். பிரிட்டனுக்கும் மற்ற டொமினியன்களுக்கும் இடையே ஏற்பட்ட வர்த்தகத்தில், வரிச்சலுகைகள் திட்டப்படி வர்த்தகம் செய்யப்படுவது சாத்தியமானதே என்றாலும், ஒட்டாவா கட்டணங்கள் உடனடியாக, ஸ்னோடன் (Snowden), ஸாமுவெல் (Samuel), ஸின்கிளேர் (Sinclair) ஆகியோரைக் கேபினட்டை விட்டு விரட்டின.

அதற்குப் பிறகு இந்த அரசாங்கம் பெரும்பாலும் கன்சர் வேடிவ் கட்சியினிடத்திலேதான் இருந்ததென்று கூறவேண்டும். 1935-ல் கோடைக்கால நடுவில் ராம்சே மேக்டொனால்டுக்குப் பதிலாக பால்டுவின் (Baldwin) பிரதம அமைச்சராகப் பதவி ஏற்றார். ஆனால், அவருடைய காலத்தில் அரசாங்கத்தின் கொள்கைகளில் மாற்றமில்லை. கூட்டு மந்திரிசபை இருந்த பொழுது காணப்பட்ட சில குறைபாடுகள் இவருடைய மந்திரி சபையிலும் காணப்பட்டன. இந்த அரசாங்கத்தில் ஆட்களின் தகுதியைக் காட்டிலும், கட்சியின் பெரும்பான்மை பலமே மிகவும் அதிகமாக இருந்தது. பாராளுமன்றத்தில் இது மிகவும் பெரிய பெரும்பான்மைக் கட்சியாக அமைந்தது. பல தொகுதிகளில் மிக அதிக அளவில் இக் கட்சியின் பிரதிநிதிகள் வாக்குகளைப் பெற்றிருந்தனர். இந்த அரசாங்கத்தின் தலைமையிலும் முடிவான திட்டங்களைத் தீட்ட முடியவில்லை. மேக்டொனால்ட் மிகவும் களைப்படைந்துவிட்டார். ஆனால், பால்டுவின் விஷயங்களை நன்கு புரிந்து கொள்ளுகின்ற திறமையையும் அனுபவமும் பெற்றிருந்தபோதிலும், அவருடைய செயல் களிலும் திட்டவட்டமான முடிவுகளைக் காணமுடியவில்லை. கட்சியின் அனுகூலமான நிலையைவிட, சில தலைவர்களுக்கிருந்த செல்வாக்கும், அவர்களைப் பின்பற்றுகின்ற முறையாலும், இந்தக் கூட்டு அரசாங்கம் சீர்குலைந்ததென்று கூறலாம். ஆனால், 1930-ல் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பார்க்கும்பொழுது, நாட்டின் மீட்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் ஏற்ப சில காரியங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பது நன்கு புலனாகும். வரலாற்றிலும் இந்த முன்னேற்றம் இடம்பெறும்.

பொருளாதாரச் சீரழிவிலிருந்து வெளியேற இரண்டாவது தொழிற்புரட்சியே அவர்கள் செய்யவேண்டி நேர்ந்தது.

அவ்வளவு கடும் உழைப்பு தேவைப்பட்டது. 1933-ல் நடை பெற்ற உலகப் பொருளாதார மாநாட்டில் முற்றிலும் தோல்வி ஏற்பட்டது. அமெரிக்கக் கடன்களைத் திருப்பித் தருவதில் முதலில் ஐரோப்பாவும், பின்பு பிரிட்டனும் தவறுகளை இழைத்து விட்டன. டாலரின் மதிப்புக் குறைந்துவிட்டது. அதனால், ஜனாதிபதி ரூஸ்வெல்ட் புதிய திட்டத்தின்படி, உள்நாட்டு விலை வாசிகளை உயர்த்தப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டார். இதற்குள் பல புதிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளாலும், இரசாயன வளர்ச்சியாலும், மிகவும் தேவையான பொருள்களான கோதுமை, சர்க்கரை, தகரம், ரப்பர் போன்றவை மிகவும் அதிக அளவில் ஆண்டுதோறும் உற்பத்தி செய்யப்பட்டன. மிகவும் அதிகமான அளவில் உற்பத்தி செய்யப்பட்டதால், அப் பொருள்களின் உற்பத்தியைக் கட்டுப்படுத்தவோ அல்லது அழித்துவிடவோ வேண்டியிருந்தது. அப்பொழுதுதான் அவர்கள் அழிவிலிருந்து காப்பாற்றப்படுகின்ற நிலையும் ஏற்படும். இது அளவிற்கு மீறிய செல்வத்தினால் ஏற்பட்ட அபாயமாகும். அமெரிக்காவிலும், ஜெர்மனியிலும் பேரளவில் உற்பத்தி பெருகியது. பல பெரிய நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இயந்திரங்களின் உதவியால் இவ்வளவு அதிகமான உற்பத்தி ஏற்படுவதால், அந்த இயந்திரங்களுக்கே மக்கள் பலியாகி விடுகின்ற நிலை ஏற்பட்டது. பலர் வேலைகளிலிருந்து நீக்கப் பட்டனர்.

தங்க நாணயத் திட்டமும் செலவாணி முறையும் சீர்குலைந்து விட்டன. ஐரோப்பாவிலிருந்த ஒவ்வொரு தனி நாடும் தன்னிறைவு பெறவேண்டுமென்ற கொள்கையைப் பின்பற்றியதால், பல வழிகளில் காப்பு வரிகளை விதித்தும், மற்றும் பல தடைகளை விதித்தும் அந்த நாடுகளுடைய தொழில்களைக் காப்பாற்றிக் கொள்வதில் முனைந்திருந்தன. இதனால், பிரிட்டனுடைய வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டது. அதற்கேற்ப அதனுடைய பொருளாதார அமைப்பையும் மாற்றிக்கொள்ள நேரிட்டது. பிரிட்டனுடைய வெளிநாட்டு வர்த்தகம் முன்பிருந்ததைவிட 60 சத விகிதம் குறைந்துவிட்டது. அதனுடைய ஏற்றுமதிகள் மிகவும் இறங்கிவிட்டன. வெளிநாடுகளில் இருந்த பிரிட்டனுடைய மூலதனத்திலிருந்து வந்த வருமானம் பாதி அளவிற்குக் குறைந்துவிட்டது. ஆனால், 1933-ல் வேலையில்லாமல் மூன்று மில்லியன் மக்கள் இருந்தனர். அந்தத் தொகை 1937-ல் $1\frac{1}{2}$ மில்லியன்களாகக் குறைந்துவிட்டது. 1929-ல் இருந்ததைக்காட்டிலும் மிகுந்த அளவில் அதாவது 11 மில்லியன் மக்கள் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்திலுள்ள தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்,

20 சதவிகிதம் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்கள் அதிகரித்தன. உண்மையான கூலிகள் 4 சதவிகிதம் உயர்ந்தன. நடுத்தர மக்கள், தொழிலாளர்கள் ஆகியோரின் சேமிப்பு 1924-ல் இருந்ததைக்காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமானது. 1919-ல் ஏற்பட்ட சமாதானத்திற்குப் பின்பு, 2½ மில்லியன் புதிய வீடுகள் கட்டப்பட்டன. 1934–35-ல் கொண்டுவந்த வரவு செலவுத் திட்டத்தில் கணிசமான அளவில் அதிகப்படியான வருமானத்தைக் காட்டினர். நெருக்கடியான காலத்தில் கொண்டுவந்த சம்பளக் குறைப்புகளை ரத்து செய்துவிட்டனர்.

சேம்பர்லேன் நிதி அமைச்சராகப் பணியாற்றியபொழுது, அவர், வர்த்தகக் குழுவினரையும் விவசாயக் குழுவினரையும் கலந்து, மூன்று கொள்கைகளைப் பின்பற்றினர். அதாவது, எளிதான பணம், குறைந்த காப்பு வரிகள், பொருளாதாரத் திட்டங்கள் என்பவையாகும். மற்றும் முதலில் பிரிட்டன், பின்பு டொமினியன்கள், வெளிநாடுகள் ஆகிய வரிசைக் கிரமப்படி அவர் இத் திட்டங்களை மேற்கொண்டார். பின்பு 1932-ல் 2000 மில்லியன் பவுன்களை 5 சதவிகித வட்டியில் பொதுக் கடனுக எழுப்பியிருந்ததை மிகவும் தைரியமாக 3½ சதவிகிதத்திற்குக் குறைத்துவிட்டார். அந்நியநாட்டுச் செலாவணிகளில் அடிக்கடி மாற்றங்கள் ஏற்பட்டு வந்ததால், பிரிட்டனின் கடன் வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்கு, அவர் 350 மில்லியன் பவுன்கள் கொண்ட ஒரு நிதியைத் திரட்டி வைத்துக்கொண்டார். இரும்பு, எஃகு உற்பத்திகளுக்கு 33 சதவிகிதம் காப்பு வரிகள் விதித்ததால், அத் தொழில்களில் மிகவும் கணிசமான அளவில் முன்னேற்றம் ஏற்பட்டது. நமது இறக்குமதிகளின் மூன்றில் ஒரு பாகத்திற்குப் பத்துச் சதவிகித கட்டணங்களே வசூலிக்கப் படுகின்றன. மற்ற நாடுகளுடன் செய்துகொண்ட வர்த்தக ஒப்பந்தங்களில் அதிகக் காப்பு வரிகளில்லாது வர்த்தகம் செழிக்கவேண்டுமென்பதையே கொள்கையாகப் பின்பற்றினர். பேரரசின் பல பாகங்களிலிருந்தும் இறக்குமதி செய்யப்பட்ட பல பொருள்கள் முன்பிருந்த 26 சதவிகிதத்தைவிட 1937-ல் 37 சதவிகிதம் அதிகமாயிருந்தபோதிலும், அந் நாடுகளுக்கு நாம் ஏற்றுமதி செய்கின்ற பொருள்களின் அளவு குறைந்துவிட்டது. ஒட்டாவா உடன்படிக்கைகள் செய்திருந்தபோதிலுங்கூட, பல பேரரசின் முக்கிய நாடுகள் மற்ற வெளிநாடுகளிடம் விருப்பப்படி வர்த்தகம் செய்து வந்தன.

இந்தக் காலத்தில் பிரிட்டிஷ் விவசாயத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது. முன்பெல்லாம் இருந்த விவசாயக் காப்பு வரிப் பிரச்சினை இப்பொழுது மறைந்துவிட்டது. மிக மலிவான விலை

யில் ரொட்டி கிடைக்கவில்லை என்ற கூக்குரல் இப்பொழுது இல்லை. பிரிட்டன், டொமினியன், மற்ற வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகின்ற பொருள்களுக்கேற்ப பிரிட்டிஷ் பொருள்களுக்கும் நல்ல கிராக்கியை ஏற்படுத்தும் நோக்கத்தால், ஒரு திட்டவட்டமான விவசாயக் கொள்கையைப் பின்பற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால், அவர்கள் பல வழிகளை மேற்கொண்டனர். அதிகக் காப்பு வரிகள் கூடாதென்பதைக்காட்டிலும் தடைகளை விதித்துக்கொள்ளுதலும், மற்றபடி தனிப்பட்ட வர்த்தக உடன்படிக்கைகளைச் செய்துகொள்ளுதலும், கோட்டாக்கள், மானியங்கள், நிர்ணயம் செய்யப்பட்ட விலைகள் அல்லது கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்ட மார்க்கட்டுகள் ஆகியவற்றின்மூலமாகத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. இவை தானியங்களுக்கும், பால், முட்டைகள், உருளைக்கிழங்குகள் ஆகியவற்றிற்கும் பொருந்துமாறு செய்யப்பட்டன. இவ்விதமான முயற்சிகளை எடுத்துக்கொண்டதால், 40 சதவிகிதம் கோதுமை ஒவ்வொரு ஏக்கராவிற்கும் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டது. பிரிட்டிஷ் சர்க்கரைக் கிழங்குகள் அந்த நாட்டின் மூன்றின் ஒரு பாகத்தின் தேவைகளுக்கு ஏற்ப உற்பத்தி செய்யப்பட்டது இறைச்சி உற்பத்தியும் இரண்டு மடங்கு அதிகரித்தது.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் சோஷியலிசக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு கன்சர்வேடிவ் ஆட்சி நீடித்தது. 1913-14-ல் கொண்டுவந்த பட்ஜெட்டில் 198 மில்லியன் பவுன்கள்தான் பற்றாக்குறையாக இருந்தன. ஆனால், 1930-ல் 800 மில்லியன் பவுன்களுக்குமேல் வருமானம் இருந்தது. தேசிய வருவாயில் 23 சதவிகிதம் வரையிலும் அரசாங்கம் பெற்றது. சமுதாயச் சேவைகளுக்குமட்டும் 400 முதல் 500 மில்லியன் பவுன்கள் வரையிலும் ஒவ்வோர் ஆண்டிலும் செலவிடப்பட்டது. சென்ற நூற்றாண்டில் இந்தச் சமுதாயச் சேவைகளானவை கல்வி, சுகாதாரம், வீடுகளை நிர்மாணித்தல், பென்ஷன்கள் ஆகியவற்றைத் தனிப்பட்டவர்களுடைய பொறுப்பிலேயே விட்டிருந்தனர். இந்தக் கன்சர்வேடிவ் அரசாங்கம், சாலைகளைச் சீரமைப்பதற்கும் விரிவுபடுத்துவதற்கும், தொலைபேசிகளை அமைப்பதற்கும், ரெயில், கப்பல் போக்குவரத்துகளுக்கும் பல மில்லியன் பவுன்களைச் செலவு செய்தது. தவிர, அரசாங்கம், திருச்சபை வருமானங்களையும், நிலக்கரி விற்பனை உரிமைகளையும் வாங்கிக்கொள்ளவும் தயாராக இருந்தது. இதுவரையிலும் அரசியல் உரிமைகளைமட்டும் பெற்று வந்த மக்களுக்குச் சமுதாய வளர்ச்சியிலும் பல நலன்களைப் பெற வாய்ப்புகள் அளிக்கப்பட்டன. மக்களுடைய சம்பள விகிதங்கள் உயர்த்தப்பட்டன.

தொழிலாளர்களுடைய சேமிப்புகளும், வீடு வாங்குகின்ற சலுகைகளையும் அவர்கள் பெற்றனர். லாபம், மற்றும் வாடகை மட்டும் பெறும் மக்களுடைய வருமானம் குறைந்து வந்தது.

இருப்பினும் சோஷியலிஸ்டுக் கன்சர்வேடிவ்களுக்கும், சோஷியலிஸ்டுக் கட்சிக்கும் இருந்த பிளவுகள் அதிகமாகிக் கொண்டே வந்தன. பல தீமைகள் சென்ற காலத்திலிருந்தே தொடர்ந்து வந்தவையாகும் அவை நகரப்புறங்களிலுள்ள சேரிகளிலிருந்து வந்தவை அல்ல. தவிர, பிரிட்டனின் வர்த்தகம் போருக்குப் பிறகு 20 சதவிகிதம் குறைந்துவிட்டது இதை மீண்டும் சரிசெய்யவே முடியவில்லை. அதனால், நிலக்கரிச் சுரங்கங்கள் இயந்திர உற்பத்திச் சாலைகள், கப்பல் கட்டும் தளங்கள், ஜவுளி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் ஆகிய இடங்களில் பேரளவில் வேலையில்லாத் திண்டாட்டம் இருந்தது. இந்தத் தொழிற்சாலைகள்மூலமாகத்தான் விக்டோரியா காலத்தவர் நல்ல செழிப்பை அடைந்திருந்தனர். பாதிக்கப்பட்ட இந்தத் தொழிற்சாலைகள் இருக்கும் இடங்களில் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்திற்குள் வராத பல தொழிலாளர்களுக்கு நிவாரணம் அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்த நிவாரணம் அளிப்பதில் பல சிக்கல்கள் எற்பட்டதால், சேம்பர்லேன் தனிப்பட்ட வகையில் வேலையில்லாதவர்களுக்கு உதவுகின்ற ஒரு குழுவினரை நியமித்தார்.

ஆனால், இதைப்பற்றிய விவாதங்கள் மீண்டும் மாறுபட்ட கருத்துகளைக் கிளறிவிட்டன. அதனால், அக் கருத்துகளை உடையவர்களிடம் மோதல் ஏற்படும்படியான நிலையும் உருவாகியது. சமுதாயத்தின் எல்லாத் துயரங்களுக்கும் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தின்மூலமாகப் பரிகாரம் காணமுடியும் என்ற கொள்கை அப்பொழுதிருந்தது. இந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தில், அரசாங்கம், மற்றும் வேலை கொடுப்பவர்கள், வேலை செய்கின்றவர்கள் ஆகிய மூன்று பகுதியினரும் கூட்டாளிகளாக இருக்க வேண்டுமென்று விரும்பப்பட்டது. ஆனால், தீவிரமான கொள்கைகளை உடையவர்களும், சமத்துவம் என்ற குறிக்கோளை உடையவர்களும் இந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தைமட்டும் ஒரு பரிகாரமாக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். அவர்கள் சமுதாயத்தின் நிதியையும், மற்ற உற்பத்திச் சாதனங்களையும் கட்டுப்படுத்துவதற்காக, எல்லாத் தொழில்களையும் தேசியமயமாக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனால், தொழில்மயமான இந்தப் பேரரசின் காமன்வெல்த்தின் அமைப்பில் இவ்விதமான மாற்றத்தை எப்படிக் கொண்டுவருவதென்பது ஒரு பெரிய பிரச்சினையாகும். இதனால், பல பழைய உரிமைகளை

விட்டுக்கொடுக்கவேண்டியதாகிறது. அல்லது முதலாளித்துவ பொருளாதாரம் முற்றிலும் சீர்குலைந்து விட்டதா, அல்லது அதை, மாறுகின்ற சமுதாயத்தின் வளர்ச்சிக்கேற்ப மாற்றி அமைத்துக்கொள்ள முடியாததா, அல்லது வேறு இனத்தினர் புதிதாக ஆதிக்கம் செலுத்த முற்படுவது வெற்றி அளிக்குமா என்பன போன்ற பிரச்சினைகள் இந்தப் பத்து ஆண்டுகளில் நிகழும் தேர்தல்களில் மக்கள் அளிக்கும் தீர்ப்பைப் பொறுத்திருக் கின்றன.

விக்டோரியா அரசி காலத்தில் நாட்டில் ஒற்றுமை உணர்ச்சி இருந்தது. அது அக்காலத்தியப் பெரிய சாதனையாகும். அரசியல் அமைப்பின் சின்னமாக இருந்த இந்த மகுடத்தின்கீழ் எல்லா மக்களும் ஒன்றுபட்டிருந்தனர். பல எதிர்ப்புகளையும் கிளர்ச்சி களையும் விக்டோரியா சமாளித்துக்கொண்டார். ஆனால், மாறு பட்ட சூழ்நிலையில், பல இடையூறுகள் ஏற்பட்ட காரணத்தால் அரசும் இப்பொழுது சோதனைக்குள்ளாகியது. அரசுக்கும், பொதுநலப் பணிகளுக்கும் எவ்விதத் தொடர்பு இருக்கிற தென்பதும் இப்பொழுது பிரச்சினையாகிவிட்டது. 1935-ல் நிகழ்ந்த ஐந்தாவது ஜார்ஜ் அரசரின் வெள்ளி விழாவிலும், அவருக்குப் பின்பு பட்டத்திற்கு வந்த அவருடைய மகனை எட்டாவது எட்வர்ட், அவர் விருப்பப்படி திருமணம் செய்ய வேண்டுமென்ற பிரச்சினையில், பிரிட்டிஷ் மக்களின் ஏகோபித்த எதிர்ப்பும் மற்ற டொமினியன் அரசாங்கங்களின் எதிர்ப்பும் இருந்ததால், அவர் பட்டத்தைத் துறந்து சென்றுவிட்டதிலும் அரசனுக்கும் பொதுமக்களுக்கும் இருந்த தொடர்பு எப்படிப் பட்டது என்பது தெரிய வருகின்றது. இந்தப் பிரச்சினையில் பால்டுவின் மிகவும் விசுவாசமாகக் காமன்வெல்த்தின் சார்பாகத் தன் எதிர்ப்பை வெளிக்காட்டினார். அதனால், அரசனுடைய தனிப்பட்ட சிறப்புத் தன்மையைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு அவருடையதாக இருந்தது. மே, 1937-ல் அரசாங் கத்தை அவர் சேம்பர்லேனிடம் ஒப்புவித்தார். ஆனால், இந்த அரசாங்கம் பல பெரிய அபாயங்களைச் சமாளிக்கவேண்டி யிருந்தது. மேக்டொனல்டோ, பால்டுவினோ, அல்லது தொழிற் கட்சியோ, அல்லது கன்சர்வேடிவ் கட்சியோ இந்த அபாயங்களைத் தவிர்ப்பதில் வெற்றிபெறவில்லை.

அந்த நெருக்கடியான கட்டத்தில் நாம் பிரிட்டிஷ் வெளி நாட்டுக் கொள்கையைச் சரியாக மதிப்பிட முடியாத நிலையில் இருந்தோம். நமது மக்களுங்கூட அதைச் சரிவர மதிப்பிட முடியாத நிலை இருந்தது. சில சட்டங்களையும் சில முடிவுகளையும் பற்றி வேண்டுமென்றால் நாம் மதிப்பிட முடியும். வெர்சேல்ஸ்

சமாதான உடன்படிக்கை மோசமானதாக இல்லையென்றாலும், அது ஆபத்தான உடன்படிக்கையாகும். இதை நல்ல உடன் படிக்கையாக்க வேண்டுமென்றால், காலமும், தெளிவான தீர் மானங்களும், ஒற்றுமையும் தேவைப்பட்டன. ஆனால், பழைய வெல்திறன் முறைப்படி பார்த்தோமெனின், இந்த ஐரோப்பிய திட்டத்தில் நிறையக் குறைபாடுகள் இருந்தன. ஏனெனில், ஜெர்மனி, ஆஸ்திரியா ஆகிய பேரரசுகள் அழிந்தன. ரஷ்யா புறக்கணிக்கப்பட்டது. அதனுடைய நிலப் பகுதியும் பறிக்கப் பட்டது. துருக்கி, பல துண்டுகளாகப் பங்குபோடப்பட்டது. அழிந்த இப் பகுதிகளில் எல்லாம் பதின்மூன்று சிறிய நாடுகள் உருவாக்கப்பட்டன. பல நூற்றாண்டுகளாக இந்தப் பகுதிகள் ஆட்சி செய்யும் தகுதியைப் பெறவில்லை. ஆனால், இப்பொழுது அபாயகரமான சிறுபான்மை இனங்களை ஆட்சி செய்ய முன் வந்ததால் பல தொல்லைகள் ஏற்பட்டன. இப் பகுதிகளில் பல சர்வதேசிய ஏற்பாடுகளும் புதிதாகச் செய்யப்பட்டன. இவ்வித மான ஏற்பாடுகள் டேன்ஸிக் (Danzig), ஃபியூம் (Fiume), ஸிரியா (Syria), பாலஸ்தீனம் (Palestine) ஆகிய நாடுகளில் கொண்டுவரப்பட்டன.

இப் பகுதிகளில் எல்லாம் சுய ஆட்சி நிர்ணயம் செய்யப் பட்டதுமல்லாமல், அவைகள் சர்வதேச சங்கத்துடன் தொடர்பு கொண்டிருந்தன. இந்தச் சர்வதேச சங்கம் சில புரட்சிகரமான உறுதிமொழிகளை அந்த நாடுகளுக்கு அளித்தது, ஓரளவிற்குத் தவறான எண்ணத்தை அவைகளிடம் ஏற்படுத்திவிட்டது. அதாவது, எல்லா நாடுகளுக்கும், பெரியவைகளாக இருந்தாலும் சரி, அல்லது சிறியவையாக இருந்தாலும் சரி, ஃபிரான்சிலிருந்து அல்பேனியா வரையிலும், அல்லது ஜெர்மனியிலிருந்து ஆப்கானிஸ்தானம் வரையிலும் உள்ள எல்லா நாடுகளுக்கும் சமத்துவமான உரிமைகளும், பிரதிநிதித்துவமும் தரப்பட்டுள்ளன என்று சர்வதேசிய சங்கம் கூறியது. தவிர, அந்த நாடுகளுக்கு நஷ்ட ஈடுகளும், போர்க் கடன்களும் போன்ற வசதிகளைச் செய்து தருவதாகக் கூறியது. ஆனால், அவைகளெல்லாம் நடை முறையில் சாத்தியமாகவில்லை. சில ஆண்டுகளுக்குள், உலக நாடுகளிடையே இரு பிளவுகள் ஏற்பட்டுவிட்டமை இதனால் ஏற்பட்ட பொதுப்படையான விளைவாகும். திருப்தி அடைந்த நாடுகளென்றும், திருப்தி அடையாத நாடுகளென்றும் இரண்டு ஏற்பட்டன. ஃபிரான்ஸ், பிரிட்டன் ஆகிய நாடுகள் திருப்தி அடைந்தன. ஆனால், தோற்ற நாடுகளும், பிரிவினை ஏற்பட்ட நாடுகளும், உதாரணமாக, ஜெர்மனியும், துருக்கியும் அதிருப்தி அடைந்தன. அல்லது இத்தாலி, ரஷ்யா, ஜப்பான் ஆகிய

நாடுகள் தங்களுக்குரிய பங்கைத் தரவில்லையென்று அதிருப்தி அடைந்து, அதனால் மாற்றம் ஏற்படுத்த முயற்சி செய்தன.

1919-க்குப் பிறகு பொதுவாக பிரிட்டனுடைய கொள்கையில் மூன்று வகையான நோக்கங்கள் இருந்ததைக் காணலாம். ஒரு சாரார் இந்தச் சமாதான உடன்படிக்கைகளை மாற்றி அமைக்கவேண்டுமென்று விரும்பினர். குறிப்பாக, நிதி சம்பந்தப்பட்ட நிபந்தனைகள் மாற்றி அமைக்கப்படவேண்டுமென்று விரும்பினர். பொதுவாகவே சமாதானத்தைப் பின்பற்றுகின்ற தன்மையும், சர்வதேசிய மனப்பான்மையும் பிரிட்டனுக்கு இயல்பாக உள்ளதுதான். அதனால் இரண்டுவிதமான தீவிரக் கொள்கையுடையவர்களை மத்தியஸ்தம் செய்துவைத்து உலக அமைதியைக் காக்கவேண்டுமென்று விரும்பினர். இரண்டாவதாகப் போர் என்றாலே அவர்களுக்கு அருவருக்கத்தக்கதாக இருந்தது. அதனால், இராணுவத் தளவாடங்களைக் குறைக்க வேண்டுமென்று விரும்பினர். உலகத்தில் அமைதியை நிலைநிறுத்த சர்வதேச சங்கம் ஒன்றையே அவர்கள் பெரிதும் நம்பியிருந்தனர். ஆனால், பிரிட்டனிலும் டொமினியன்களிலும், ஏன் முன் கூட்டியே மற்ற நாடுகளின் பாதுகாப்பை முன்னிட்டுப் போராடவேண்டுமென்ற கருத்து நிலவி வந்தது.

1930ஆவது ஆண்டுக்கு முன்பும் பின்பும், பிரிட்டனுடைய கட்டாயத்தினால் ஃபிரான்ஸ் ஜெர்மனியின்மீது சுமத்தப்பட்டிருந்த நஷ்ட ஈட்டுத் தொகையை ரத்து செய்தும், பின்பு ஜெர்மனியைச் சர்வதேச சங்கத்தின் அங்கத்தினராகச் சேர பிரிட்டன் சிபாரிசும் செய்தது. அத்துடன் ஜெர்மனியில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அயல்நாட்டுப் படைகளையும் திரும்பப் பெறச்செய்தது. பிரிட்டனுடைய முயற்சியால், ஆயுதக்குறைப்பு மாநாடும் கூட்டப்பட்டது. அமெரிக்காவின் ஆதரவில் 1928-ல் கொண்டுவரப்பட்ட கெல்லோக் உடன்படிக்கையையும் (Kellogg Pact) ஏற்றுக்கொண்டது. இந்தக் கெல்லோக் உடன்படிக்கையில் போர் இனி நிகழக்கூடாதென்று முடிவுசெய்யப்பட்டது. ஆனால், 1923-ல் ஏற்பட்ட புரோட்டோகோல் ஏற்பாட்டை (Protocol) பிரிட்டன் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. இதன்படி போர் தொடுப்பவர்கள்மீது பொருளாதார முற்றுகை செய்யவேண்டிய அவசியம் ஏற்படும். ஐரோப்பாவில் ஏற்படுகின்ற சச்சரவுகளில் டொமினியன்கள் மீண்டும் பிரவேசிக்க விரும்பவில்லை. 1925-ல் செய்துகொண்ட லொகார்னோ உடன்படிக்கைக்குப்பிறகு (Locarno) மற்ற நாடுகளின் பிரச்சினைகளில் பிரவேசிப்பது, உதாரணமாக ரைன் எல்லைக்கோட்டை நிர்ண

யம் செய்வது மிகவும் குறைக்கப்பட்டுவிட்டது. பிரிட்டன் வாழ்வதற்கு இப்படிப்பட்ட கொள்கையைப் பின்பற்ற வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது.

1930-ல் கொண்டுவரப்பட்ட சர்வ தேசியத் திட்டம் உண்மையான நோக்கம் கொண்டது என்று நிரூபிக்கவேண்டியதாயிற்று. அல்லது இந்தச் சர்வ தேசியத் திட்டம் இனிமேல் தான் பிறக்கப்போகிறதோ என்ற சந்தேகமும் தோன்றியது. இந்தத் திட்டத்தை அமலாக்க பிரிட்டன் தீவிரமாக முனைந்திருந்தது. ஆனால், சர்வதேச சங்கத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும், ரஷ்யாவும் அனுமதிக்கப்படாதது, பாதி அளவில் சங்கத்தின் நோக்கத்தைச் சீர்குலைத்துவிட்டது. சங்கம் ஏற்கெனவே இத்தாலியும் போலந்தும் வலுக்கட்டாயமாக மற்ற நாடுகளின் நிலப்பகுதிகளைக் கைப்பற்றி, சர்வதேச சங்கத்தின் வேண்டுகோளை நிராகரித்திருக்கின்றன. பல வருடங்கள் ஆயுதக் குறைப்பு வேண்டுமென்று வல்லரசுகள் கூட்டம் கூடிப் பேசி பின்பு எந்த வல்லரசும் ஆயுதக் குறைப்பைச் செயற்படுத்த முன்வரவில்லை. முக்கியமாக ஃபிரான்ஸ் ஆயுதக் குறைப்புத் திட்டத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றால், அதனுடைய பாதுகாப்பிற்கு மற்ற நேச நாடுகள் உறுதிமொழி அளிக்க வேண்டுமென்று கோரியது. அதனால் மூன்றே மூன்று வழிகள் தான் இருந்தன. தனித்து நிற்றல் என்ற கொள்கையை பிரிட்டன் ஏற்றுக்கொள்ளாது. ஏனெனில், அப்படிச் செய்வது நியாயமற்றதும் பொறுப்பற்றதுமாகும். பல நாடுகளுடன் கூட்டுச் சேரும் கொள்கை சமீபத்தில் ஒரு பெரிய போரை ஏற்படுத்திவிட்டது. மற்றொரு வழி, சர்வதேச சங்கத்தின்மூலமாகக் கூட்டுப் பாதுகாப்பைச் செய்துகொள்வதுமாகும். உண்மையில் பிரிட்டன் இந்தக் கடைசியில் கூறப்பட்ட வழியைத்தான் ஆதரித்தது. இந்த வழியையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால் பொதுமக்களின் அபிப்பிராயத்திற்கு முற்றிலும் விரோதமாகப் போகவேண்டி நேரிடும் என்று பிரிட்டனுக்குத் தெரியும். இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டதால் ஏற்படும் அபாயம் என்னவென்றால், யுத்த தளவாடங்களை எப்பொழுதும் தயாராக வைத்திருப்பதும், அமைதியைச் சீர்குலைக்கும்பொழுது போர் தொடுப்பதற்குத் தயாராக இருக்கவேண்டி நேரிடும்.

1929-க்குப் பிறகு நிகழ்ந்த நிதிச் சீர்குலைவும், 1931 முதல் சீனாவின்மீது ஜப்பான் தாக்க ஆரம்பித்ததும், ஜெர்மன் குடியரசின் வீழ்ச்சியும், பின்பு 1933-ல் ஹிட்லர் அதிகாரத்தைக் கைப்பற்றியதுமான இந்த மூன்று நிகழ்ச்சிகள் ஐரோப்பாவிலுள்ள சிக்கலான நிலையையும், முரண்பாடுகளையும் வெளிப்படுத்தின,

சமீபத்தில் உருவாக்கப்பட்ட சிறிய நாடுகளில் பொருளாதாரத் தேசிய உணர்ச்சி அதிகமாகிவிட்டதால் இன்னும் அதிக அளவில் இனவெறி அங்கே தாண்டவமாடியது. கூட்டுப் பாதுகாப்பு என்பது அழகான சொற்றொடராகவே இருந்தது. எந்த நாடும் அது பாதிக்கப்படாதவரையிலும், இந்தப் பாதுகாப்புத் திட்டத் திற்கு ஆக்கம் அளிக்க முன்வரவில்லை. அமெரிக்காவும் ரஷ்யாவும் இல்லாத சர்வதேச சங்கம் எப்படிச் சர்வதேச சங்கமாக இருக்க முடியும். அதுவும், 6000 மைல்களுக்கப்பால் உள்ள ஜப்பான் மீது போர் நடவடிக்கை எடுக்க, அருகில் இராணுவத் தளமில் லாத எந்த நாடுதான் முன்வரப்போகின்றது. 1933-ல் ஜெர்மனி சர்வதேச சங்கத்திலிருந்தும், ஆயுதக் குறைப்பு மாநாடுகளி லிருந்தும் விலகிக்கொண்டது. 1934-ல் ஆயுதக்குறைப்பைப் பற்றி மேலும் ஃபிரன்ஸ் விவாதிக்க விரும்பியது. ரஷ்யாவுடன் கூட்டுச் சேர ஆரம்பித்தது.

இந்தக் காலத்திலெல்லாம், மேக்டொனல்டும், பால்டு வினும், வெளி நாட்டுக் காரியதரிசியான ஸைமனும் (Simon) மத்தியஸ்தம் செய்து ஆயுதக் குறைப்பை அமலாக்க முயற்சி செய்தது வீணாகியது. ஒவ்வோர் ஆண்டிலும் நமது பாதுகாப்புச் செலவினம் குறைந்துகொண்டே வந்தது. 1923-ல் திட்டமிட்ட அளவிற்குங்கூட, நமது விமானப்படை விஸ்தரிக்கப்படவில்லை. 1930-ல் அரசாங்கத்தை நிர்வகித்து வந்த தொழில் கட்சியினர் கடற்படையின் வலிமையையும் மிகவும் குறைத்துவிட்டனர். எந்த வகையில் பார்த்தாலும் நமது பொதுமக்கள் ஆயுதக் குறைப்பைப் படிப்படியாக நடைமுறையில் கொண்டு வரு வதை ஆதரித்தனர். 1935-ல் நடந்த தேர்தல்களில் அரசாங்கம் போரை ஆதரிக்கின்றது என்ற குற்றச்சாட்டை தொழிற் கட்சியினர் அரசின்மீது சாற்றிப் பிரசாரம் செய்தனர். ஆனால், அந்தக் காலத்திலிருந்து, நமது பாதுகாப்பை நாமே தான் பார்த்துக்கொள்ளவேண்டுமென்று உணர்ந்து, முதல் தரமான விமானப்படையை உருவாக்க அரசாங்கம் முயன்றது.

1935-6 ஆகிய ஆண்டுகளை நெருங்கும் பொழுதுநான்கு முக் கியமான நிகழ்ச்சிகளையும் நாம் கவனிக்கவேண்டும். சமீபத்தில் நடந்த போரிலேயே புதிய கண்டுபிடிப்புகள் எல்லாம் பின்பற் றப்பட்டன. இனி வரப்போகின்ற போர் இன்னும் மோசமான தாகத்தானிருக்கும் என்று மக்களுக்குத் தெரியும். பல புதிய வழிகளில் இந்தப் போர் நிகழும். பல நாடுகளிலும், விண்வெளி யிலும் தரையிலும் பல தரப்பட்ட ஆயுதங்களைத் தாங்கி இந்தப் போர் ஏற்படும் என்பதில் சந்தேகமேயில்லை, முழுமையான போர் ஏற்படும்பொழுது, தொழில் வளத்தின் முழுச் சக்தியையும்

பயன்படுத்தி வெற்றியை அடைய முயற்சி செய்வர். அரசியலில் ஃபிரான்ஸ் அதனுடைய பக்கத்து நாடுகளின்மீது சந்தேகம் கொண்டது. அந்த நாட்டினுள்ளேயே பல பிளவுகள் ஏற்பட்டன. சுருக்கமாகக் கூறின் அந்த நாடு மிகவும் களைப்படைந்து விட்டது. பிரிட்டனுடைய மிகவும் நெருங்கிய நேசநாடாக இருக்கும் என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. 1934-ல் அந்த நாட்டில் ஏற்பட்ட கிளர்ச்சிகளால் ஓர் உள்நாட்டுப் போர் ஏற்டுகின்ற சூழ்நிலையுங்கூட இருந்தது. கிழக்கு ஐரோப்பிய நாடுகள் இதுவரையிலும் ஃபிரான்சிடமிருந்து உதவி பெற்று வந்தன. ஆனால், ஃபிரான்சின் நிலைமையைக் கண்டு அந்த நாடுகள் மற்ற வல்லரசுகளிடம் உதவியை எதிர்பார்த்தன. நாஜி ஜெர்மனியைப் பொறுத்தவரையிலும், அந்த நாடு ஆயுதக் குறைப்பைப்பற்றிக் கவலையே கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக அதனுடைய ஆயுத தளவாடங்களைப் பன்மடங்கு அதிகரித்துக் கொண்டது. தவிர, போருக்குப் பிறகு ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையின் சில எஞ்சிய சின்னங்களையும் ஒழித்துவிடுவதென்று அது உறுதியாக இருந்தது. ஹிட்லர் அவருடைய வெளிநாட்டுக் கொள்கையில் வெறியுணர்ச்சியூட்டுகின்ற பல கோட்பாடுகளைப்பின்பற்றினார். இவ்விதமான உறுதியான வெளிநாட்டுக் கொள்கையை 1789 முதல் பார்த்திருக்கவே முடியாது. போரைத் தூண்டிவிடுகின்ற எண்ணங்கள் மிகத் துரிதமாக வளர்ந்தன. புரட்சிக்குப் பிறகு ரஷ்யா மிகவும் வளர்ச்சி அடைந்துவிட்டது. 1934 முதல் அது முன்னணி வரிசையில் வந்துவிட்டது. ஜெர்மனிக்கு விரோதமாக ஸ்லாவ் இனத்தவரின் தலைமையைப் பெறவும் மற்றும் தீவிரமான ஜனநாயகக் கொள்கையைப் பரப்பவும் அது மிகவும் தீவிரமாக முனைந்திருந்தது.

இறுதியாக 1935-6-ல் நிகழ்ந்த சில நெருக்கடிகளால், 1919-ல் தோன்றிய நம்பிக்கையும் முற்றிலும் அழிந்துவிட்டது. அபிசினியாவை இத்தாலி ஆக்கிரமித்தது; ரைன்லாந்தை ஜர்மனி மீண்டும் கைப்பற்றியது. ஸ்பெயினில் உள்நாட்டுப் போர் நிகழ்ந்தது. இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் பார்க்கும் பொழுது, பிரிட்டிஷ் வெளிநாட்டுக் கொள்கையில் பல எதிர்ப்புகள் கிளம்பின. பொது மக்களிடையே இந்தக் கொள்கையைப் பற்றிப் பலவிதமான கருத்துகள் ஏற்பட்டன. கூட்டுப் பாதுகாப்புக் கொள்கையைப் பின்பற்றப் போய், தனித்து நிற்க வேண்டிய கொள்கையில் இழுத்துவிட்டது. ஆயுதத் தளவாடங்களை அதிகரித்து, படைகளையும் பெருக்கிக் கொள்வது அவசியமா என்று பிரச்சினையை 1935-ஆவது ஆண்டில் நிகழ்ந்த தேர்த உ.

களில் பால்டுவின் மக்கள் முன்பு வைத்து, அவர்களுடைய ஆதர வைக் கோரவில்லை. அதற்குப் பதிலாக, பிரிட்டன் சர்வதேச சங்கத்தை ஆதரித்து, ஆக்கிரமிப்புச் செய்த இத்தாலியின்மீது பொருளாதார முற்றுகைகளைக் கொண்டுவர சர்வதேச சங்கத் தில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தது. ஆனால், நாம் சர்வ தேச சங்கத்திற்காகப் பரிந்து பேசிக்கொண்டிருக்கையிலும், நமது முழு நம்பிக்கையையும் அந்த நிறுவனத்தின்மீது வைத் திருக்கையிலும், வெளி உலகத்தினரும் பிரிட்டிஷ் அரசாங்கம் உட்பட வல்லரசுகளின் சமநிலையைக் கொண்டுவரவும், போருக் கான கோஷ்டி நாடுகளைச் சேர்த்துக்கொள்ளவும் தீவிரமாக இலங்கியிருந்தன. இத்தாலிமீது பொருளாதார முற்றுகையைக் கொண்டு வந்தால், உண்மையில் இத்தாலியின்மீது போர் தொடுப்பதற் கொப்பாகும். ஆனால், இத்தாலியின்மீது போர் தொடுப்பதை ஃபிரான்ஸ் சிறிதும் விரும்பவில்லை. ஏனெனில் ஜெர்மனி போர் தொடுக்கும்பொழுது ஃபிரான்ஸின் பாதுகாப் பிற்கு இத்தாலியின் உதவி மிகவும் அவசியமாகத் தேவைப்படு கிறது. ஆனால், நாம்மட்டும் தனியாக நின்று இத்தாலியின்மீது போர் தொடுத்தோமென்றால் இந்தப் போர் அத்துடன் முடிந்து விடுகின்ற நிலையில் இல்லை. ஜப்பானும் ஜெர்மனியும், இந்தப் போரில் கலந்துகொள்ளும் சூழ்நிலை இருந்தது. மூன்று வல்லரசு களை எதிர்த்து நாம்மட்டும் அப்பொழுது தனியாகப் போரிடத் தயாராக இல்லை. அதற்கு வேண்டிய தயாரிப்பும் நாம் செய்ய வில்லை என்று இராணுவ ஆலோசகர்கள் ஆலோசனை கூறினர். அந்த அபாயத்தைத் தவிர்க்க ஹோர்-லவால் உடன்படிக்கை (Hoare-Laval Pact) ஒன்றைச் செய்து கொண்டது, உண்மையில் இத்தாலி, அபிசீனியாவை ஆதிக்கம் செலுத்துவதற்கான வசதி யைச் செய்து கொடுத்தது போலாகும். இந்த உடன்படிக்கை யைப் பிரிட்டிஷ் பொதுமக்கள் பலமாகக் கண்டித்தனர், 1935 டிசம்பர் மாதத்தில் ஹோர் ராஜிநாமா செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இது சர்வதேச சங்கத்தின் சார்பாக நாம் கடைசி முறையாக வெளிக்காட்டிய உணர்ச்சியாகும்.

ஜனநாயக நாடுகளிடையே இருந்த இந்தக் குழப்பமான நிலையைப் பயன்படுத்திக்கொண்டு, மார்ச் 1936-ல் ஜெர்மானி யர்கள் ரைன்லாந்தைக் (Rhineland) கைப்பற்றினர். ஜெர் மானியர்களின் இந்தச் செய்கையைத் தடுக்கப் போர் செய்ய வேண்டுமென்ற கருத்தை, ஒருவரும் ஏற்றுக்கொள்ளவில்லை. சமாதான உடன்படிக்கையின் நியாயம் எல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டது. அமைதியான முறையில் மாற்றங்களையும் ஏற்றுக்கொள்ளவேண்டியிருந்தது.

அமெரிக்கா அங்கத்தினராக இல்லாத இந்த சர்வ தேசியச் சங்கம் அமைதியைக் காப்பாற்ற முடியவில்லை. அதற்குள் பிரிட்டன் இராணுவ அதிகரிப்பைப் பெருக்கிக்கொள்ளும் முயற்சி களில் ஈடுபட்டது. அந்தச் சமயத்திலிருந்து நமது கொள்கையில் பெருத்த முரண்பாடு தோன்றியது. ஆனால், இன்னும் சர்வதேச சங்கத்தின் கொள்கையில் நம்பிக்கை வைத்திருந்தது பிரிட்டன். போர் ஏற்படுவதை அவர்கள் வெறுத்தனர். ஆயுதக் குறைப்பை யுங்கூட அவர்கள் தவிர்த்திருப்பர். ஆனால், பிரிட்டிஷ் அரசியல் கட்சியின் இடதுசாரியினர், அம் மக்களுடைய வாழ்க்கைக்கும் அவர்களுடைய சுதந்திரத்திற்கும் அபாயம் நெருங்குவதை உணர்ந்து எச்சரிக்கை விடுத்தனர். நாஜி, பாசிஸ்டு கோட் பாடுகள் எல்லாவிதமான உரிமைகளையும் தடைசெய்து வருவதை அவர்கள் கருதினர். ஸ்பெயின் நாட்டில், ஜெர்மன், இத்தாலியப் படைகளின் துணையால், தேர்தல்மூலமாக நிறுவப்பட்ட குடியரசு அரசாங்கத்தை எதிர்த்து ஒரு சாரார் கிளர்ச்சி செய்து உள்நாட்டுப் போரையும் உருவாக்கினர். அந்த நிகழ்ச்சி ஒரு அபாய அறிவிப்பாக இருந்தது. ஸ்லாவ்-டியூடன் (Slav-Teuton ஆகியோரின் பூசல்களையும் எல்லாம் தவிர்த்துவிட்டு அப்பொழுது ஜனநாயகத்தைப் பாதுகாக்க ரஷ்யா முன்வந்தால் அதற்காக என்ன விலை கொடுப்பதென்ற பிரச்சினையில் முனைந்திருந்தனர். மாஸ்கோவின் உதவியை மேலும், மேலும் எதிர்பார்த்தனர்.

1937 வரையில் பால்டுவின் தலைமையிலும், பின்பு சேம்பர் லேன் தலைமையிலும் பிரிட்டிஷ் அரசாங்கம் இராணுவத்தைப் பலப்படுத்துவதில் சிறிது காலதாமதம் செய்து வந்தது. ஃபிரான் சிடமிருந்து உண்மையில் ஆதரவு கிடைக்குமா என்ற சந்தேகமும் இருந்தது. அப்பொழுது சர்வதேச சங்கத்தின்மீதிருந்த நம்பிக் கையும் மிகவும் குறைந்துவிட்டது. உண்மையில், ஸாலிஸ்பரி அல்லது கிரே ஆகியோர் பின்பற்றிய வெளிநாட்டுக் கொள்கை யைப் பின்பற்றவுங்கூட ஆலோசனை செய்தனர். சமாதான உடன்படிக்கைகளில் ஜெர்மனியும் இத்தாலியும் மிகவும் அதிருப்தி அடைந்தன. அவர்களுடைய குறைகளைப் போக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இந்த அதிருப்தி அடைந்த நாடு களைச் சாந்தப்படுத்தவேண்டுமென்று 1931 முதல் பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் பேசிக்கொண்டிருந்தனர். ஜெர்மானியச் சிறு பான்மை இனத்தினரை நடத்திய விதத்திலும் அல்லது இத் தாலியின் காலனிகள் வேண்டுமென்ற கோரிக்கையிலும் இந்த உடன்படிக்கைகள் நியாயமான முறையில் செய்யப்பட்டிருக்கின் றன்வா என்று பார்க்கவேண்டும். கேனிங் அல்லது பிட் ஆகியோர் பின்பற்றிய கொள்கைகளைப் போன்று மற்ற நாடு

களில் எவ்வளவு கொடிய ஆட்சி நடைபெற்றுவந்தாலும் அதைப் பற்றி பிரிட்டன் கவலைப்படுவதற்கில்லை காமன்வெல்த்தின் நலன்களும், அவர்களுடைய வாழ்க்கையும் பாதிக்கப் பட்டாலன்றி, பிரிட்டன் டொமினியன்களைப் போர் செய்யும்படி கேட்டுக்கொள்ளாது என்று கருதினர். அப்பொழுது சமாதான உடன்படிக்கைகளில் காணப்பட்ட பல குறைபாடுகளை நீக்க பிரிட்டன் முயற்சி செய்துவந்தது. இதனால் காலதாமதம் ஏற்பட்டாலும், அதனைப் பலப்படுத்திக்கொள்ளவும் முடிந்தது.

இந்தச் சூழ்நிலையில், குழப்பமும், அபாயமும், சிக்கலும் ஏற்பட்டபோதிலும், அவர்களிடம் நல்லெண்ணம் குடிகொண்டிருந்தது. சமகாலத்துக் காமன்வெல்த்தின் வரலாறும் இத்துடன் நிறுத்திக்கொள்ள வேண்டியதாகிறது. மிக எளிமையாக ஆரம்பிக்கப்பட்ட இந்தப் பேரரசு இப்பொழுது மிகப்பெரிய உலக அமைப்பாகிவிட்டது. பிழைப்பைத் தேடி வந்தவர்களும், ஐரோப்பாவிலிருந்து புகலிடம் பெற வந்தவர்களும் இந்தப் பேரரசை உருவாக்கியவர்களாவர். மற்றவர்களுக்குப் பயன் அளிக்கக்கூடிய அளவில், இந்தப் பேரரசில் எண்ணற்ற இயற்கை வளங்களும் புதையல்களும் பொதிந்துள்ளன. கேனிங் புகழ்ந்து கூறியதைப் போன்று, 'இந்தச்சிறிய உடலில் பெரிய இதயம்' இடம் பெற்றிருக்கிறது. அது உலக அமைப்பாக விரிவடைந்திருக்கிறது.

# கலைச் சொல்லகராதி

## (தமிழ்—ஆங்கிலம்)

| | | |
|---|---|---|
| அனுமதி வழங்கும் சட்டம் | — | Licencing Act |
| அரச நீதிமன்றம் | — | King's Bench |
| இரவலர் சட்டம் | — | Poor Law |
| இராணுவச் சட்டம் | — | Martial Law |
| உணவு, மருந்துச் சட்டம் | — | Food and Drugs Act |
| கட்டுப்பாடற்ற வாணிகம் | — | Laissez-Faire |
| கடற்படைச் சட்டம் | — | Navigation Act |
| கலோனியச் சட்டங்களின் அதிகார வரம்புச் சட்டம் | — | Colonial Laws Validity Act |
| காப்புத் தீர்வைகள் | — | Protective Duties |
| சர்வதேச சங்கம் | — | League of Nations |
| சிப்பாய்க் கலகம் | — | Sepoy Mutiny |
| சுய ஆட்சியைக் கோருகிறவர்கள் | — | Home Rulers |
| சுய ஆட்சி மசோதா | — | Home Rule Bill |
| தேசியப் படை | — | National Militia |
| நிலச் சங்கம் | — | Land League |
| பாராளுமன்றச் சீர்திருத்த மசோதா | — | Parliamentary Reform Bill |
| பிரதேசப் படை | — | Territorial Army |
| பெண்கள் வாக்குரிமை | — | Women Franchise |
| பேரரசு மாநாடு | — | Imperial Conference |
| பொதுமக்கள் முறையீட்டு நீதிமன்றங்கள் | — | Court of Common Pleas |
| மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் | — | People's Representation Act |
| முக்கூட்டு உடன்படிக்கை | — | Triple Alliance |
| முக்கூட்டு நேச உடன்படிக்கை | — | Triple Entente |
| வாரிசு, விவாகரத்து நீதிமன்றம் | — | Court of Probate and Divorce |
| வெல்திறம் | — | Diplomacy |

## கலைச் சொல்லகராதி

(ஆங்கிலம்—தமிழ்)

| English | | Tamil |
|---|---|---|
| Colonial Laws Validity Act | — | கலோனியச் சட்டங்களின் அதிகார வரம்புச் சட்டம் |
| Court of Common Pleas | — | பொதுமக்கள் முறையீட்டு நீதிமன்றம் |
| Court of Probate and Divorce | — | வாரிசு, விவாகரத்து நீதி மன்றம் |
| Diplomacy | — | வெல்திறம் |
| Food and Drugs Act | — | உணவு, மருந்துச் சட்டம் |
| Home Rulers | — | சுய ஆட்சியைக் கோருகின்ற வர்கள் |
| Home Rule Bill | — | சுய ஆட்சி மசோதா |
| Imperial Conference | — | பேரரசு மாநாடு |
| King's Bench | — | அரச நீதிமன்றம் |
| Laissez-Faire | — | கட்டுப்பாடற்ற வாணிகம் |
| Land League | — | நிலச் சங்கம் |
| League of Nations | — | சர்வதேச சங்கம் |
| Licencing Act | — | அனுமதி வழங்கும் சட்டம் |
| Martial Law | — | இராணுவச் சட்டம் |
| National Militia | — | தேசியப் படை |
| Protective Duties | — | காப்புத் தீர்வைகள் |
| Parliamentary Reform Bill | — | பாராளுமன்றச் சீர்திருத்த மசோதா |
| People's Representation Act | — | மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் |
| Poor Law | — | இரவலர் சட்டம் |
| Sepoy Mutiny | — | சிப்பாய்க் கலகம் |
| Triple Alliance | — | முக்கூட்டு உடன்படிக்கை |
| Triple Entente | — | முக்கூட்டு நேச உடன் படிக்கை |
| Territorial Army | — | பிரதேசப் படை |
| Women Franchise | — | பெண்கள் வாக்குரிமை |

# பொருள் அகர வரிசை.

## இ

பு



பூ



பெ

### பே



### பொ



### போ

லி



லீ

ஜா



ஜு



ஜெ



ஜே



ஜோ

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## 1965 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

பொருளாதாரம்

| | நூல் | | ஆசிரியர் | | விலை |
|---|---|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II | ... | சி. வேலாயுதம் | ... | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | ... | திருமதி ஆர். தாமரஜாட்சி | ... | 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I | ... | தி. சி. மோகன் | ... | 12—00 |
| 4. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-II | ... | எம். ஏ. அபூர்வசாமி<br>பி. வி. ஸ்ரீநிவாசன் | ... | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | ... | க. முத்தையன் | ... | 7—00 |
| *6. | டணவியலும் பாங்கியலும்-II | ... | சி. வேலாயுதம் | ... | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் | ... | க. வெற்றிவேல் | ... | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | ... | பி. வி. ஸ்ரீநிவாசன் | ... | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | ... | அர. சேஷாசலம் | ... | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I | ... | எம். பாலசுப்பிரமணியன் | ... | 10—00 |
| 11. | இந்தியப் பொருளியல்-II | ... | எம். லூர்துநாதன் | ... | 4—25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை-I | ... | சி. சுந்தரராஜன் | ... | 10—75 |
| 13. | நமது பொருளாதாரப் பிரச்சினை-II | ... | எஸ். குழந்தைநாதன் | ... | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | ... | கீ. சீ. இராமசாமி | ... | 6—00 |
| 15. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-II | ... | ,, | ... | 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | ... | தி. சி. மோகன் | ... | 5—00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு-I | ... | மு. க. சுப்பிரமணியம் | ... | 11—00 |

* மூல நூல் (Original Book)

**பொருளாதாரம்—தொடர்ச்சி**

| எண் | நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| 18. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I | மா. குமாரசாமி | 10—00 |
| 19. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I | தே. வேலப்பன் | 10—00 |
| 20. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10—00 |
| *21. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9—50 |
| 22. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | கு. ரா. கறுப்பண்ணன் | 11—00 |

**வரலாறு**

| எண் | நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| *23. | பிரிட்டன் வரலாறு-I | கி. ர. அனுமந்தன் | 10—00 |
| *24. | பிரிட்டன் வரலாறு-II | ,, | 9—75 |
| *25. | ஐரோப்பிய வரலாறு-I | டி. வி. சொக்கப்பா | 4—50 |
| 26. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டுகாலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15—00 |
| 27. | இங்கிலாந்து வரலாறு-I | இரா. அண்ணுமலை | 13—00 |
| 28. | இங்கிலாந்து வரலாறு-II | பா. மாணிக்கவேலு | 13—00 |
| 29. | இங்கிலாந்தின் வரலாறு-I | க. த. திருநாவுக்கரசு | 15—00 |
| 30. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி. வெ. குப்புசாமி | 7—50 |

**அரசியல்**

| எண் | நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| *31. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 32. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 33. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 34. | பன்னுட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16—00 |
| 35. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9—00 |
| 36. | பொதுத்துறை ஆட்சி இயல்-II | அ. ஜெகதீசன் | 7—25 |

| | | | |
|---|---|---|---|
| **உளவியல்** | | | |
| 37. குழந்தை உளவியல்–I | ... ... | கி. ர. அப்புள்ளாச்சாரி | ... 8—00 |
| 38. குழந்தை உளவியல்–II | ... ... | ,, | ... 7—00 |
| 39. உட்கவர் மனம் | ... ... | சி. ந. வைத்தீஸ்வரன் | ... 7—00 |
| 40. இளையோர் உளவியல்–I | ... ... | தி. இரா. அரங்கராசன் | ... 12—00 |
| 41. இளையோர் உளவியல்–II | ... ... | ,, | ... 9—00 |
| 42. சமூக உளவியல் | ... ... | என். வேதமணி மானுவேல் | ... 9—00 |
| 43. பிறழ்நிலை உளவியல் | ... ... | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | ... 11—00 |
| 44. பித்தரின் உள்ளம் | ... ... | ,, | ... 3—00 |
| **தத்துவம்** | | | |
| 45. இந்து சமயத் தத்துவம் | ... ... | ஞா. ராஜாபகதூர் | ... 5—50 |
| **அறவியல்** | | | |
| 46. அறவியல்—ஓர் அறிமுகம் | ... ... | கோ. மோ. காந்தி | ... 8—50 |
| **அளவையியல்** | | | |
| 47. அளவை இயல்—தொடக்க நூல் | ... — | கி. ர. அப்புள்ளாச்சாரி | ... 2—50 |
| **மானிடவியல்** | | | |
| *48. மானிடவியல் | ... ... | ம. சு. கோபாலகிருஷ்ணன் | ... 4—75 |
| 49. பண்பாட்டுக் கோலங்கள் | ... ... | கி. பூ. சுப்பிரமணியன் | ... 5—50 |
| **சமூகவியல்** | | | |
| 50. சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ... | ஜெ. நாராயணன் | ... 10—05 |
| **புவியியல்** | | | |
| 51. ஆசியா–I | ... ... | கொ. சேஷ. நரசிம்மன் | ... 9—50 |
| 52. ஆசியா–II | ... — | ,, | ... 8—75 |
| 53. ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ... | ஏ. எஸ். நாராயணன் | ... 8—50 |

**புவியியல்—தொடர்ச்சி**

| | | | |
|---|---|---|---|
| *54. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| *55. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *56. | புவிப்புறவியல்-II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *57. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *58. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *59. | சமுத்திரவியல் | கோ. இராமசுவாமி | 6—50 |
| 60. | காலநிலை இயல்-I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 61. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *62. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |

**புள்ளியியல்**

| | | | |
|---|---|---|---|
| *63. | புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |
| 64. | புள்ளியியல் முறைகள்-I | கோ. சண்முகசுந்தரம் | 10—00 |
| 65. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6—50 |

**விலங்கியல்**

| | | | |
|---|---|---|---|
| 66. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை<br>இரா. முருகேசன் | 12—00 |

**பௌதிகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 67. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10—00 |

**பொது நூல்கள்**

| | | | |
|---|---|---|---|
| 68. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 69. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |
| 70. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| 71. | சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியன் | 2—50 |
| *72. | நீரிழிவு-க்ஷயரோகம் | ஜி. வேங்கடசாமி, ஏ. கதிரேசன் | 2—50 |

* மூல நூல் (Original Book)

